கழக வெளியீடு: கசகo

# திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின்

# பொன்விழா மலர்



20—12—1970 அன்று
மயிலை, இராசேசுவரி திருமணமண்டபத்தில்
பேராசிரியர், டாக்டர் மு வரதராசனர் அவர்கள் தலைமையில்
நடைபெற்ற விழாவில்
தமிழக உயர்நீதிமன்ற நீதிபதி
மாண்பமை பு ரா கோகுல கிருட்டிணன் அவர்களால்
வெளியிடப்பெற்றது



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
சென்னை-1.
திருநெல்வேலி-6. மதுரை-1. கோயமுத்தூர்-1.

Ed 1 December 1970

2
N70

THIRUNELVELI THENNINDHIA
SAIVA SIDDHANTA NOORPATHIPPUK
KAZHAGAP PONVIZHA MALAR

(Golden Jubilee Souvenir of the South India Saiva Siddhanta Works Publishing Society)

Appar Achakam, Madras-1. (I/2)

# பதிப்புரை

திருநெறிய சைவசித்தாந்தத்தையும் செந்தமிழையும் வளர்ப்பதையே முதன்மையான நோக்கமாகக் கொண்டு தில்லையம்பலவாணர் திருவருளை முற்றிலும் நம்பித் திருவரங்கம் பிள்ளையவர்களால் 21-9-1920இல் தோற்றுவிக்கப்பட்ட திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 21-9-1970இல் ஐம்பதாண்டின் நிறைவை யடைந்தது. அந்நிறைநாளில், சேரமான் பெருமாள் நாயனுரால் திருத்தில்லையிற் பாடப்பெற்ற 'பொன்வண்ணத் தந்தாதி' என்னும் நூல் குறிப்புரையுடனும் பொன்னூர் முகப்புடனும் அச்சிட்டு வெளியிடப்பட்டுத் திருக்கோயில் வழிபாடுஞ் சிறப்பாக நடத்தப்பட்டது.

இருபத்தைந்தாவதாண்டின் இறுதியில் நிகழற்பாலதாகிய வெள்ளி விழா அஞ்ஞான்று நிகழாமற்போனதன் காரணத்தையும், பின்னர் முப்பத்தாருவதாண்டில் கொண்டாட வெண்ணிய விழாக் கொண்டாட முடியாமற்போனதன் காரணத்தையும், பின் ஆயிரத்தெட்டாவது நூல் வெளியீட்டு விழா மிகு சிறப்புடன் நடைபெற்ற காரணத்தையும் 1961ஆம் ஆண்டு ஆகஃச்டுத் திங்கள் 21ஆம் நாள் ஆயிரத்தெட்டாவது நூல் வெளியீட்டு விழா மலரின் பதிப்புரையில் விளக்கியுள்ளோம்.

ஆயிரத்தெட்டாவது நூல் வெளியீட்டு விழாக் கொண்டாடப்பட்ட ஒன்பதாண்டுகட்குப் பிறகு இப்பொழுது பொன்விழா சிறப்புடன் கொண்டாடப்படுகிறது. ஒவ்வொரு விழாவிலும் மலர் வெளியிடுவதென்பது இப்பொழுது பொதுவான வழக்கமாகி விட்டது. அவ்வழக்கத்தை ஒட்டிப் பொன்விழா மலர் ஒன்று வெளியிடுவதென்றும் அம்மலரை ஆயிரத்தெட்டாவது நூல் வெளியீட்டு விழா மலரைப்போற் சிறந்த முறையில் வெளியிடுவதென்றும் முடிவு செய்து இப்பொழுது இப்பொன்விழா மலரைக் கழகம் வெளியிடுகிறது.

இம்மலரின் அட்டையை அம்மை அம்பலவாணரின் அழகிய திருவுருவப் படம் அழகு செய்கிறது. நமது கழகம் நெல்லையில் தோன்றியபடியால் ஆயிரத்தெட்டாவது நூல் வெளியீட்டு விழா மலரின் அட்டையை நெல்லை நெல்லையப்பர் கோவிலைப் பற்றிய படம் அழகு செய்தது. கழகம் எஞ்ஞான்றும் கூத்தப்பிரானையே தன்னுடைய பற்றுக்கோடாகக் கொண்டிருத்தலின் இம்மலரின் அட்டையை அம்மை அம்பலவாணரின் திருவுருவம் அழகு செய்யலாகியது.

இம்மலரின் முதற்பகுதிக்கண் பலநாட்டு அறிஞர் பெருமக்கள், ஆட்சித்துறைப் பெருமக்கள், புலவர்கள் முதலியோருடைய வாழ்த்துரைகளும் கழக வரலாறும் கழகத்திற்கு நூல்கள் எழுதிய புலவர் பெருமக்கள் இலக்கியச் சொற்பொழிவு மாநாடுகளிற் பேசிய புலவர்கள் முதலியோர் படங்களும் அழகு செய்கின்றன.

## பதிப்புரை

இரண்டாவது பகுதியாகிய கட்டுரைப் பகுதிக்கண் புலத்துறை முற்றிய புலவர் பெருமக்கள் பலருடைய சீரிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் அழகு செய்கின்றன. கட்டுரைகள் யாவும் பொன்விழா மலருக்கேற்ற வகையில் சீரிய கருத்துக்களையும் சொல்லோவியங்களையுஞ் சிறப்பாகக் கொண்டு திகழ்கின்றன. கோலார் பொன் வயலைப் பற்றிய சிறந்த கட்டுரை யொன்றும் இம் மலரில் வெளியாகியுள்ளது. பொன் விழா மலரில் பொன்னையும் பொன் வயலையும் பற்றிய இக்கட்டுரை வெளியானது வியக்கத் தக்கதே. கோலார் தங்க வயலைப் பற்றிய பல செய்திகளை உணர்ந்துகொள்வதற்கு இக்கட்டுரை பெரிதும் பயன் படும். தில்லைத் திருக்கோயில் வரலாறும் கழக நிலையங்கள் அமைந்துள்ள சென்னை (மயிலை), மதுரை, நெல்லை, கோவை, (பேரூர்) முதலிய திருக்கோவில் களைப் பற்றிய வரலாற்றுக் கட்டுரைகளும் இம் மலருக்குத் திருவருட் பொலிவு தருகின்றன.

மூன்றாவதாகிய வாழ்த்துப்பாப் பகுதியில் பாவன்மை மிக்க பாவாணர்கள் பலர் கழகத்தின் வெளியீடுகளைப் பற்றியுங் கழகத்தின் அரிய சீரிய தொண்டைப் பற்றியும் கழகஞ் செய்துள்ள செயற்கருஞ் செயல்களைப் பற்றியும் கழகத்தை வாழ்த்து முகத்தான் பல பாவினங்களில்இயற்றியபாடல்கள் புகழ் மலர்மாலையாக அணிசெய்கின்றன. ஒவ்வொருவர் பாடலும் ஒவ்வொரு வகை நூலைப்பற்றிய தாக அமைந்துள்ளன. கழகத்தின் விருப்பத்திற் கிணங்க மிகச் சுருங்கிய காலப் பகுதிக்குள் கட்டுரைகளையும் வாழ்த்துப் பாடல்களையும் அனுப்பிப் பொன் விழா மலர் பொலிவு பெறுமாறு செய்த அனைவருக்குங் கழகம் தன்னுடைய நன்றி யறிதலைத் தெரியப்படுத்திக் கொள்ளுகிறது. பொன்விழா மலருக்கு விளம்பரங் கள் தந்துதவிய அன்பர்கட்குங் கழகம் நன்றி செலுத்துகிறது. இப்பொன்விழா மலர் பலவகையானுஞ் சிறப்புறச் செய்த அனைவருக்குங் கழகம் நன்றி பாராட்டுங் கடப்பாடுடையதாகும்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# நன்றியுரை

கழகத்தின் ஐம்பதாண்டு நூற்பதிப்புப் பணியினைப் பாராட்டிச் செய்யும் இப் பொன்விழா மலர் சிறப்பாக அமைவதற்கு ஆக்கமும் ஊக்கமும் உழைப்பும் நல்கியோர் பலர்.

கழகப் பணியினைப் பாராட்டி வாழ்த்துரைகளும், பாக்களும் நல்கிய அறிஞர் பெருமக்கட்கும், மலர் மாண்புறும் வண்ணம் சீரிய கட்டுரைகளை வழங்கி உதவிய நுண்மாண் நுழைபுல மிக்க பேராசிரியப் பெருந்தகைகட்கும், எமது உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இம் மலரைக் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தளிக்கும் வகையில் உருவாக்க உதவிய விழாக் குழுவினர்க்கும், ஓவியப் புலவர்களான திரு. மா. முத்து, திரு. அரசு, பட அச்சாளர் எம்.சி. அப்பாசாமி செட்டி கம்பெனியார், மலருக்கு விளம்பரங்கள் தந்துதவிய வணிகப் பெருமக்கள், மற்றும் பல வழிகளில் உதவிய திரு. தி. சண்முகம் அவர்கள், அன்பர்கள் ஆகியோருக்கும் கழகத்தின் அன்பு கலந்த நன்றி என்றும் உரித்தாகும்.

அறிவு மணங் கமழும் இம் மலரைக் காண்போர் கண்கவர் மலராகச் செய்யும் வண்ணம் வண்ண மேலுறையினை அச்சிட்டுதவிய ஞானோதயம் அச்சகத்தார்க்குக் கழகத்தின் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

மற்றும் 'பொன் மலர் நாற்ற முடைத்து' எனச் சொல்லத் தக்கவகையில் இதனை அறிவு மணமும், அழகொளியும் நிறைந்ததாய் உருப்படுத்த உதவிய அனைவர்க்கும் கழகம் தனது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறது.

சென்னை<br>15—12—1970

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

## வாழ்த்துப் பாக்கள்

---

## கட்டுரைகள்

# ACKNOWLEDGEMENT

Our thanks are due to the following Personages who have Congratulated the Society by their messages on this auspicious occasion of

## THE CELEBRATION OF 'GOLDEN JUBILEE'

## விளம்பரதாரர்களின் அகரவரிசை

(தமிழ் விளம்பரங்கட்கு மட்டும்)

# INDEX TO ADVERTISERS

(For Advertisements in English)



**



திருவள்ளுவர்

# கழகப் பொன்விழா
## (18, 19, 20 திசம்பர் 1970)



மாண்பமை
சர்தார் உச்சல்சிங்
ஆளுநர்
தொடக்குபவர்



திரு. நா. மகாலிங்கம்
விழாக்குழுத் தலைவர்



மாண்புமிகு
நாவலர் இரா. நெடுஞ்செழியன்
தொடக்கவிழாத் தலைவர்



தவத்திரு
குன்றக்குடி அடிகளார்
பொன்விழா வெளியீட்டை
வெளியிடுபவர்

# கழகப் பொன்விழாக் குழுவினர்

**புரவலர்கள் :**

மாண்புமிகு கலைஞர் மு. கருணாநிதி
,, நாவலர் நெடுஞ்செழியன், எம்.ஏ.
,, செ. மாதவன், பி. காம்., பி. எல்.
,, என். வி. நடராசன்
,, கே. வி. சுப்பையா, பி. ஏ.
,, புலவர் கா. கோவிந்தன், எம். ஏ.

**சமயப் புரவலர்கள் :**

மதுரை ஆதீனம்
தவத்திரு சோமசுந்தர ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்
தவத்திரு குன்றக்குடி அடிகளார். எம். எல். சி.

**தலைவர் :**

நா. மகாலிங்கம், பி. எஸ்ஸி., எம். ஐ. இ.

**துணைத் தலைவர்கள் :**

திரு. எம். பக்தவத்சலம், பி. ஏ., பி. எல்.
திரு. சி. சுப்பிரமணியம், பி. ஏ., பி. எல்.
திரு. மா. அனந்தநாராயணன், ஐ. சி. எஸ். (ஓய்வு)
பத்மஸ்ரீ நெ. து. சுந்தரவடிவேலு, எம். ஏ., எல். டி.
டாக்டர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், எம். ஏ., பி. எல்., டி. லிட்.
நீதிபதி ஆர். சதாசிவம், பி.ஏ., பி.எல்.
நீதிபதி. பு. ரா. கோகுலகிருட்டிணன், எம். ஏ., பி. எல்.
தமிழவேள் பி. டி. ராசன், பார்-அட்-லா.

**உறுப்பினர்கள் :**

டாக்டர் மு. வரதராசனார், எம். ஏ., எம். ஓ. எல்., பி. எச். டி.
டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம், எம்.ஏ., பி.எச். டி.
டாக்டர் வ. சுப. மாணிக்கம், எம்.ஏ., பி.எச்.டி.
திரு. ஆ. சுப்பையா, எம். ஏ.
டாக்டர் பா. நடராசன், எம். ஏ., பி. எச். டி.
திரு. ஆர். சனார்த்தனம் நாயுடு, பி. ஏ., எல். டி., எம். எல். ஏ., டி. இ (ஆக்சன்).
திரு. க. அன்பழகன், எம். ஏ., எம். பி.
திரு. செ. கந்தப்பன், எம். ஏ., எம். பி.
சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம், எம்.எல்.ஏ.
முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம்
மகாவித்துவான் மே. வீ. வேணுகோபால் பிள்ளை
திரு. ஞா. தேவநேயனார், எம். ஏ.
திரு. தி. சி. இராமலிங்கம் பிள்ளை, எம்.ஏ., பி.எல்
இராவ்சாகிப் எஸ். ஆர். வி. அரசு, பி. ஏ.
சரவண ஆறுமுக முதலியார், எம். ஏ., எல். டி.
திரு. அ. மு. பரமசிவானந்தம், எம்.ஏ., எம். லிட்.
பேராசிரியர் அன்பு கணபதி
திரு. மா. சண்முகசுப்பிரமணியம், பி.ஏ., பி.எல்.
பத்மஸ்ரீ ம. ப. பெரியசாமித்தூரன், எம்.ஏ., பி.எல்.
டாக்டர் ந. சஞ்சீவி, எம். ஏ., பி.எச்.டி.
டாக்டர் மெ. சுந்தரம், எம். ஏ., பி. எச். டி.
அவ்வை தி. க. சண்முகம், எம்.எல். சி.
திரு. இராம. அரங்கண்ணல், எம். எல். ஏ.
திரு. ஏ. எல். சுப்பிரமணியம், பி. எஸ்ஸி., பி. எல்., எம். எல். ஏ.
திரு. காஞ்சி மணிமொழியார்.
திருமதி. சௌந்தரா கைலாசம்.
திரு. ஏ. கே. செட்டியார்.
திரு. சா. கணேசன், தலைவர், மாநகர் மன்றம்.
திரு. மு. காசிவிசுவநாதன் செட்டியார், தலைவர், சை. சி. நூ. கழகம்.

**செயலாளர் :**

பத்மஸ்ரீ வ. சுப்பையா, கழக ஆட்சியாளர்.

**துணைச் செயலாளர்கள் :**

கவிஞர் புத்தனேரி ரா. சுப்பிரமணியம்
திரு. இரா. கலியாணசுந்தரம், பி. எஸ்ஸி.
திரு. பி. ஏ. சண்முகம், பி. எஸ்ஸி.
திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி.லிப்

---

# MESSAGES

—:o:—

**V. V. GIRI,**
President of India,
Camp: Kottakkal,



*December* 8,1970.

I am glad to send my greetings and good wishes to the South India Saiva Siddhanta Works Publishing Society on the occasion of its Golden Jubilee.

During the last fifty years, the Society has played a notable role in the renaissance of Tamil. Its numerous publications of authoritative and rare works have been welcomed by Tamil lovers all over the world. Its English translations of Tamil literary master pieces have enabled a wider audience to appreciate the beauty and grandeur of this language.

I wish the Golden Jubilee celebrations all success,

**Dr. S. RADHAKRISHNAN**
Ex. President of India
Through
C. Ramasubban.
Private Secretary



"GIRIJA"
30, EDWARD ELLIOTS ROAD,
MYLAPORE, MADRAS–4.
*19th November*, 1970

Dr. S. Radhakrishnan sends his best wishes to the Tirunelveli Then India Saiva Siddhanta Noorpathippu Kazhagam on the occasion of its Golden Jubilee Celebrations to be held in December, 1970.

**V. PHADKE,**
Vice-President of India
Through Secretary

NEW DELHI
*19th November, 1970*

The Vice-President is glad to know that the South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly will celebrate its Golden Jubilee on the 18th December, 1970. He sends his best wishes for the success of the Golden Jubilee Celebrations.

**Dr. V. K. R. V. RAO,**
Education Minister,
Government of India

NEW DELHI-1.
December-1.

I am very glad to know that the South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly will be celebrating its Golden Jubilee on 18-20th December, 1970. In South India, which is a cradle of the rich Dravidian culture and religious schools of thought, Saiva Siddhanta has had a tremendous influence on the masses. It is creditable that the Society has played an important role in bringing out several publications on this subject and enriching the Tamil Literature. I hope the Society will continue to make further progress in this direction and build up a very rich library of books in Tamil.

I wish the function every success.

**K. S. RAMASWAMY**
Deputy Minister for Home Affairs
Government of India

NEW DELHI
*November 25, 1970*

I am glad to learn that the South India Saiva Siddhanta Works Publishing Society Ltd., is celebrating its Golden Jubilee in December, 1970. The Society has been doing yeoman service to the development and propagation of Tamil Language and Tamil literature. Apart from publishing old manuscripts and rare books, the Society has been running valuable libraries stocked .with numerous reference books. More than anything else, this is perhaps the only Publishing Society run as a Public Limited Company without the usual profit motive.

The entire management, and particularly the energetic Managing Director Shri Subbiah Pillai, deserve to be congratulated on this occasion for the magnificent job they are doing.

My good wishes to the success of the Golden Jubilee Celebrations.

**H E. SARDAR UJJAL SINGH**
Governor of Tamil Nadu,



RAJ BHAVAN
MADRAS-22
*November 26, 1970*

I am glad to know that the South India Saiva Siddhanta works Publishing Society, Tinnevelly, Ltd., will celebrate its Golden Jubilee in December this year. I wish the celebrations success.

**B. D. JATTI**
Lieutenant Governor
Pondichery

RAJ NIVAS
PONDICHERY
*28th November 1970*

It gives me great pleasure to learn that the Golden Jubilee Celebration of the South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly will be held at Madras on 18th December 1970.

That the Society has undertaken the task of bringing out Tamil classics and ancient religious literature is indeed commendable. It is a matter of gratification the Society will highlight and propagate the glories of 'Peria Puranam' on the eve of Golden Jubilee.

I am sure the Society will continue to play an important role in the develpoment of Tamil language and literature.

I wish the Golden Jubilee celebrations every success.

RAJ BHAVAN,

**H. E. SHRI. K. C. REDDY**

Governor of Madhya Pradesh

BHOPAL-3

*17th November, 1970.*

It augurs well that the Golden Jubilee celebrations of the South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, will be inaugurated by our revered President of India, Shri V. V. Giri. The Society has rendered valuable service for the renaissance of Tamil language and literature in modern times. It is appropriate that as part of the celebrations, an exhibition of literature, conference on "Peria Puranam" and the publication of a Souvenir to commemorate the occasion have been arranged.

I have great pleasure in sending my best wishes for the success of the Golden Jubilee celebrations.

**Dharma Vira**

Governor of Mysore

RAJ BHAVAN,
BANGALORE,
*8th December,* 1970

I am happy to learn that the South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, is celebrating its Golden Jubilee shortly.

For fifty years this Society has been working for the propagation of Tamil language and literature among the people. Its efforts to bring home to men's minds the richness of Tamil culture through the centuries by republishing the ancient classics and distributing the books in a manner which is within financial reach of all is really commendable. A composite effort on the part of similar organisations all over the country will undoubtedly help in revealing the greatness of our Indian culture of which Tamil culture forms an important part.

I convey my best wishes for the continued success in the work of the Society in the years to come.

மாண்புமிகு
**கலைஞர். மு. கருணாநிதி**
தமிழக முதலமைச்சர்



அரசு தலைமைச் செயலகம்,
தமிழ்நாடு,
சென்னை-9.
6 - 12 - 1970

தமிழ் நூல் வெளியீட்டுப் பணியில் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் ஆற்றிவரும் பணி நாடறிந்த உண்மையாகும்.

தொன்மை மிகுந்த இலக்கியங்கள் — ஆராய்ச்சி — அறிவியல் நூல்கள் முதலியவற்றை வெளியிட்டு இக்கழகம் தமிழுக்குச் சிறப்பான சேவை செய்துள்ளது. கழகத்தின் தமிழ்ப் பணி ஐம்பது ஆண்டு நிறைவு பெறுவது அறிந்து பெருமகிழ்ச்சியடைகின்றேன்.

இப்பணிமேலும்தொடரவும், பொன்விழா இனிது நடை பெறவும் என் நல்வாழ்த்துக்கள்.

மாண்புமிகு
**இரா. நெடுஞ்செழியன்,**
*கல்வி, நலத்துறை அமைச்சர்.*



தமிழக அரசு
தலைமைச் செயலகம்
சென்னை-9
டிசம்பர் 12, 1970.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் பொன் விழா வரும் 18, 19, 20-ஆம் நாட்களில் சென்னையில் சிறப்புடன் நடைபெற விருப்பதை அறிய மிக்க மகிழ்ச்சி.

கழகம் தனித் தமிழ் நூல்களை வெளியிடுவதில் தன்னை ஈடுபடுத்தி வருவதை நாட்டினர் அறிவர்.

பொன்விழா சீருடனும் சிறப்புடனும் நடந்தேற விழைவதுடன் சிறப்புமலர் முயற்சி கள் வெற்றி பெறவும் என் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மாண்புமிகு
**செ. மாதவன் அவர்கள்,**
*தொழில் அமைச்சர்*



தலைமைச் செயலகம்,
சென்னை-9

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகம் பொன்விழாக் கொண்டாடுவது அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு இக்கழகம் ஆற்றிவரும் தொண்டினை தமிழ்நாடு நன்கு அறியும். சமயத்துறை மட்டும் அன்றி அறிவியல், சட்டம் சிறுவர் இலக்கியம் முதலிய பல்வேறு துறைகளிலும் நல்ல நூல்களைக் கழகம் வெளியிட்டு வருகிறது. ஊதியத்தை மட்டுமே கருதி நூல்கள் வெளியிடும் பிறவெளியீட்டு நிறுவனங்கள் போல் அல்லாமல் தமிழுக்குத் தொண்டாற்ற வேண்டும் என்ற சீரிய நோக்குடன் இக்கழகம் ஆற்றும் பணி போற்றுதலுக்குரியது.

இக்கழகத்தின் உயிர்நாடியாக விளங்கி ஓயாது உழைத்து வருபவர் திருவாளர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள். அன்னாரது சலியாத உழைப்பும் தமிழ்மொழிப் பற்றும் தமிழ்நாட்டின் பாராட்டிற்கு உரியது.

இக்கழகத்தின் பணி என்றும் சிறந்தோங்குவதாக.

டாக்டர்
**சத்தியவாணி முத்து**
வேளாண்மை, அரிசனநல
அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை-9.
7-12-70.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் பொன்விழாக் கொண்டாட இருப்பது அறிந்து மிக்க மகிழ்ச்சி. இந்த நூற்பதிப்புக் கழகம் சிறந்த தமிழ் நூல்கள் வெளியிட்டுத் தமிழ் இலக்கியப் பணியைச் சிறப்பாக ஆற்றி வருவது யாவரும் அறிந்ததே. பொன்விழாக் கொண்டாடும் இச்சமயத்தில் கழகம் மேலும் வளர்ந்து தமிழுக்கும் தமிழர் சமுதாயத்திற்கும் தொண்டாற்றி வரவேண்டும் என வாழ்த்துகிறேன்.

மாண்புமிகு
**கே. வி. சுப்பையா,** பி.ஏ.
அறநிலைய அமைச்சர்
தமிழக அரசு,

அரசு தலைமைச் செயலகம்,
சென்னை-9.
27—10—70

நாட்டிற்கு வேண்டிய நற்பணிகள் பலவற்றை 'நூல் வழியில்' செய்வது திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். பெரிய புராணச் சொற்பொழிவு மூலம் கேள்விச் சுவை உணரும் செவிக்கு ஓர் நல் உணவும், 'சிந்தனை செய்க - சிந்தனை செய்க - எந்தப் பொருளையும் சிந்தனை செய்க' என்ற திரு. வி. க. வின் வாசகத்தை மெய்ப்பிக்கும் ஆராய்ச்சி நிலையமும் ஏற்படுத்த முயற்சி செய்வது பாராட்டுக்குரியது. தமிழ்கூறும் நல்லுலகம் புகழும் வண்ணம் பொன்விழா பொலிவு பெற என் இதய பூர்வமான வாழ்த்துக்கள்.

மாண்புமிகு
**ஓ. பி. இராமன்**,பி.ஏ.,பி.எல்.
மின்துறை அமைச்சர்,
தமிழக அரசு

தலைமைச் செயலகம்,
சென்னை-9.
25—11—70

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தமிழ் இலக்கிய அறிவைப் பரப்பித் தமிழகத்தின் கல்விக் கண்ணைத் திறந்த ஓர் சிறந்த அமைப்பாகும்.

சங்க இலக்கியங்களை விழுமிய உரைகளோடு அச்சிட்டு வெளியிட்ட மாண்பினால் இக்கழகம் போற்றுதற்குரிய நிலையினைப் பெற்றது.

இத்தகு கழகம் பொன்விழாக் காண்பதைப் போற்றி வரவேற்கிறேன். கழகப் பணிகள் மேலும் தொடர என் வாழ்த்துக்கள்.

புலவர்
**கா. கோவிந்தன்,** எம்.ஏ.,
*தலைவர்,*
*தமிழ் நாட்டுச் சட்டப் பேரவை*

தலைமைச் செயலகம்,
சென்னை-9.
8-12-1970

ஐம்பதுஆண்டு காலமாகத் தமிழ்ப்பணி ஆற்றிவரும் கழகம் பொன்விழாக் கொண்டாடுவது கண்டு மகிழ்ச்சி. மக்கள் சிந்தையிலிருந்தே மறைந்துவிட்ட செந் தமிழ் இலக்கிய இலக்கணங்களைச் சிறப்புற வெளியிட்டுத் தமிழிலக்கிய உலகில் புதிய மறுமலர்ச்சியை உருவாக்கிய பெருமை கழகத்தையே சாரும். கழகம் அத்தகைய விழுமிய பணியாற்றியது என்றால் அதற்கு நிலைக்களனாக நிற்பவர், ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் ஆவார்கள். கழகத்தைத் தோற்றுவித்த தம் தமையனார் திரு. திருவரங்கம் பிள்ளை அவர்களின் கனவு நினைவாகும் வண்ணம் அயராது பணிபுரிந்து ஆசிரியர்களை ஊக்கி, அழகிய இலக்கிய வெளியீடுகளை உருவாக்கியவர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள். கழகப் பணி வளர்க!

கழக ஆட்சியாளர் வாழ்க பல்லாண்டு!!

**Shri Veerendra Patil**
**Chief Minister**

VIDHANA SOUDHA
BANGALORE-1
*December* 9, 1970

I send my greetings and best wishes to the South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly Ltd., on the occasion of its Golden Jubilee Celebrations. I am aware of the excellent work done by this Publishing House in propagating the ideals of Saiva Siddhanta and the Metaphysical value of the great tenets of Advaitam. South India is proud to possess an institution of this kind presided over by Shri N. Mahalingam. It is gratifying, indeed, that the society has organised a great drive in popularising Tamil books so as to keep it within the reach of the ordinary public. The Publishing Society has already put out six lakhs of "KURAL".

I wish the society all success in the years to come.

**C. ACHUTHA MENON**
**Chief Minister, Kerala State**

TRIVANDRUM
*20-11-70*

I am happy to learn that the Golden Jubilee of the South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, Ltd. is proposed to be celebrated in December, 1970 and that a Souvenir will be published to mark the occasion.

I send my best wishes.

**Shri M. D. Chaudhari**
Education Minister, Maharashtra

SACHIVALAYA,
BOMBAY-32

Unity in diversity is the spectacular feature of India. This is powerfully reflected in our common culture though the people in different states speak different languages. In this context I am happy to know that the South India Saiva Siddanta Works Publishing Society of Tinnevelly has been rendering commendable service by bringing out the 'Grand Epic of Saivism' in the Tamil language and is now celebrating its Golden Jubilee on 18th December. It is befitting that a Souvenir is being brought out on the occasion.

I wish the Golden Jubilee celebrations a grand success.

**HON. SHRI M. HIDAYATULLAH**
Chief Justice
Supreme Court of India

NEW DELHI,
*November 20, 1970.*

The South India Saiva Siddhanta Works Publishing Society deserves to be congratulated on its achievements in the cause of Tamil language and literature. By bringing out ancient and rare works, and translating Tamil works into English and **vice versa,** it has created a wider interest. I send my good wishes for continued prosperity.

**Thiru V. Siva Subramaniam,**
Retired Judge of the Supreme Court,
Ceylon.
President,
All Ceylon Hindu Congress.

4, HORTON TERRACE
COLOMBO-7
8*th December* 1970

It gives me much pleasure to convey my warmest congratulations to the South India Saiva Siddhanta Works Publishing Society on its completion of fifty years of dedicated service to the Saiva religion and to the Tamil language and literature. Towards the development of these, its contribution has been unique and thereby the "Kazhagam" is well known in this country. The emphasis laid on the study and propagation of Peria Puranam and the proposal to establish a research institute for it will be warmly welcomed by every lover of Saivaism and Tamil. This divinely inspired work of Sekkizhar will continue for everto be a source of inspiration to mankind. The importance of the 'Kazhagam's work in this connection cannot therefore be over-emphasized.

May the Lord bestow His Infinite Grace on the "Kazhagam" and help it to grow from strength to strength !

நீதிபதி

**எஸ். மகராஜன்**

நடுவர், உயர்நீதிமன்றம்,

சென்னை.

சென்னை,

26—11—70

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தை நினைக்கும் போதெல்லாம் தங்கள் தமையனார் திருவரங்கம் பிள்ளையவர்களுடைய உருவம் கண்ணுக்கு முன் வந்து நிற்கிறது. அவர்களை நான் முதன்முதலாக சந்தித்தது முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்; பாளையங்கோட்டையில் நான் வழக்கறிஞனாக இருந்த காலம் அது.

அழுத்தம் திருத்தமான தமிழ்ப் பேச்சு; உதாரமான, ஆனால் நகைச்சுவையும் கிண்டலும் பொதிந்த உரையாடல்; என்ன இடையூறு வந்தாலும், அதைத் தகர்த்தெறிந்துவிட்டு, நினைத்த திட்டத்தை நிறைவேற்றித் தீர்க்கும் ஆற்றல்; ஊர் வாய்க்கு அஞ்சாது, தான் கொண்ட குறிக்கோளில் நிலைத்து நிற்கும் ஆண்மை.

இத்தனை அரிய குணங்களையும் பயன்படுத்தி, தமிழுக்கும் சைவத்துக்கும் ஏற்பட்ட இன்னல்களைத் துடைப்பதிலும் முழு வெற்றி கண்டார்கள்; தங்கள் தமையனார். அவர்களுடைய முயற்சியின் மகுடமாகவும், வெற்றியின் சின்னமாகவும் இருப்பது கழகம்.

அவர்கள் வகுத்த நெறியிலே கழகத்தைத் தொடர்ந்து நடத்தி, வெற்றிமேல் வெற்றி கண்டுவரும் கழகத்துக்கு என் வாழ்த்துக்கள்.

நீதிபதி, மாண்பமை

**பு. ரா. கோகுல கிருட்டிணன்,எம்.ஏ.,பி.எல்.,**

உயர்நீதிமன்றம்,

சென்னை.



சென்னை

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் ஐம்பது ஆண்டுகள் பணியாற்றி அறிஞர் சமுதாயத்தில் தனக்கென ஓர் இடத்தைப் பெற்றுள்ளது. பல இடங்களில் சிதறிக் கிடந்த தமிழ் இலக்கியங்களைத் தொகுத்து இவ்வையம் பயனுற ஆக்கித்தந்த பெருமை கழகத்திற்கே உரியது. தமிழையும் தமிழ் பயின்ற புலவர்களையும் தாங்கி வளர்த்த கழகங்களில் தலையானது சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். தாம் வாழ்ந்தால் போதுமென்று நல்ல தரத்தைப் பற்றிக் கவலை கொள்ளா நூற்பதிப்புக் கழகங்கள் மலிந்துள்ள இந்நாட்களில் தானும் வாழ்ந்து நல்ல தமிழையும் வாழவைத்து ஐம்பது ஆண்டுகள் பணியில் வெற்றிமுரசம் கொட்டும் கழகம் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். தமிழுக்கும், தமிழ் நாட்டிற்கும் இந்நாள்வரை இக் கழகம் செய்துள்ள பணியும் அதன் வெற்றிக்கு அயராது உழைக்கும் திரு. வ. சுப்பையா பிள்ளை உழைப்பும் தமிழைத் தழைத்தோங்கச் செய்துள்ளது என்பது மிகையாகாது. வெற்றிப் புன்னகையுடன் பொன்விழாக் கொண்டாடும் கழகம் இவ்வையகம் போற்றும் அறிவுலகப் பெட்டகமாக, அறிஞர்கள் பாசறையாக, அன்னை தமிழ் தழைக்கும் இன்பச் சோலையாக எஞ்ஞான்றும் வாழ வளர என் நல்வாழ்த்துக்கள்.

மா. அனந்தநாராயணன்,
மன்னாள் தலைமை நீதிபதி,
30—11—1970

23, நவரோஜி சாலை,
சென்னை-31.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் 'பொன்விழா' நடைபெற உள்ளதை அறிந்து நான் மட்டிலா மகிழ்ச்சி எய்துகிறேன். தமிழுக்கும் தமிழ் இலக்கியத்திற்கும் இப்பதிப்புக் கழகம் ஆற்றிவரும் தொண்டின் அருமையை எளிதில் அறியலாகும்; இக்கழகம் இதுவரை வெளியிட்டுள்ள நூல்களின் அட்டவணையை ஆய்தலே அதற்குப் போதியதாம். ஏன், திருக்குறள் என்ற ஒரு தமிழ்ப்பேரிலக்கியத்தின் அறிவை மக்களிடம் பரப்பும் பொருட்டு இக்கழகம் பதிப்பித்த நாட்குறிப்பு, ஆராய்ச்சி நூல்களைச் சிறிது புரட்டினாலும் போதிய சான்றாகும். இக்கழகத்தின் உயிர்நாடிபோல் சலிப்பிலா உழைப்புள்ளவர் ஆட்சியாளர் பத்மஸ்ரீ திரு. வ. சுப்பையா அவர்கள்,

இக்கழகம் நீடூழி வாழ்க! இதன் தமிழ்த்தொண்டு வளங்குன்றாச் சிறப்பு மேன் மேலும் எய்துக! இக்கழகமும் இதன் ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா அவர்களும் எதற்கு உயிர்விளக்கமாவரெனின்

'கலங்காது கண்ட வினைக்கண் துளங்காது
தூக்கம் கடிந்து செயல்' — என்ற தமிழ்மறை நீதிக்காம்.

ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண
பண்டார சந்நிதி அவர்கள்

திருவாவடுதுறை

## வாழ்த்துரை

தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்ற ஐம்பது ஆண்டுகளாக, தமிழ்மொழி வளர்ச்சிக்கும், ஆரியத்தோடு செந்தமிழ்ப் பயன் எனச் சிறப்பிக்கப் பெறும் சிவமெய்ந்நெறியின் விளக்கத்திற்கும் பல அரிய பணிகளைச் செய்து வந்துள்ளது. அதன் பொன்விழா, அறிவும், திருவும், ஒருங்கமைந்த நன்மக்கள் பலர் ஆதரவோடு அண்மையில் நடைபெற இருப்பது தமிழகத்தின் பண்டைய மரபுகளையும், கலை ஞானத்தையும் மெய்ந்நெறிக் கொள்கைகளையும், பல்லாற்றானும்பாதுகாத்துப்போற்றிவரும் சைவத் தெய்வத் தொன்மை அறநிலையமாகிய ஆதீனத்தின் தலைமை பூண்டுள்ள நமக்குக் கழிபேருவகையைத் தருவதாகின்றது.

கழகம் செய்துள்ள நிலையான பணிகளில் இரண்டு குறிப்பிடத் தக்கவை. ஒன்று பொதுமறை வகுத்தருளிய உலகப் பெருங்கவி திருவள்ளுவர் திருப்பெயரால் செந்தமிழ்க் கல்லூரியை நிறுவி நடத்தி வருவது; மற்றொன்று, நமது ஆதீன முனிவர்களுள் ஒருவராய்த் தலைசிறந்து விளங்கிய திராவிட மாபாடியகர்த்தர், தமிழ் மொழிக்கடலும், வடமொழிக் கடலும், நிலைகண்டுணர்ந்தவர் எனத் தலையாய அறிவினரால் போற்றப்பெறும் மாதவச் சிவஞான யோகிகள் திருப்பெயரால் நூல் நிலையமும் அமைத்துள்ளது. இன்று தமிழகத்தே வெளிவந்துள்ள பண்டைத் தமிழ் இலக்கண சங்க, இலக்கியங்களுக்கெல்லாம் மூல காரணமாக இருந்து சிறந்த வித்துவான்களை உருவாக்கி வெளிக்கொணர்ந்ததும், மூல ஏட்டுச் சுவடிகளை வழங்கியதும் ஞானத் தலைநகர் எனப் போற்றப்பெறுவதும் நமது ஆதீனம் என்னும் உண்மை நமக்குப் பெருமிதம் விளைக்கின்றது.

எல்லாவற்றினும் மேலாக, இப் பொன்விழாச் சிறப்பு வெளியீடாகத் தமிழகத்தின் வரலாற்று மூலமாகத் திகழும், திருத்தொண்டர் உண்மை வரலாறு கூறும் செந்தமிழ்த் தனிப்பெருங் காப்பியத்தைத் தமிழிலும், ஆங்கிலத்திலும் வெளியிடுவது பாராட்டத்தகும் செயல் ஆகும். பெரிய புராணத்துட் கூறப்படும் விதிமார்க்க சமய ஆசார மரபுகளுக்கு எடுத்துக்காட்டாக நிலவி வருவது நமது ஆதீனம் அன்றோ!

இங்ஙனம் நயனொடு நன்றி பயக்கும் செயல்களைச் செய்துவரும் கழகத்திற்கு நமது மகிழ்ச்சிப்பாராட்டைத் தெரிவிப்பதோடு, அது மேலும் வலிவும், ஆதரவும் பெற்றுத் திகழவும், பொன்விழா நன்கினிது நடைபெற்றுச் சிறக்கவும், கழகத்தின் உயிர்நாடியாக உள்ள நிருவாக இயக்குநர், தாமரைச் செல்வர், நம் அன்பர் மகாபுருஷச் செல்வ சிரஞ்சீவி வ. சுப்பையா பிள்ளை அவர்களுடைய உயரிய நோக்கங்கள் இனிது முற்றி நலன் பயக்கவும் வேண்டி, தில்லைக் கூத்தப்பிரானது நிரந்தர அதிட்டேயமாய் நமது ஆதீனத்தில் பூசிக்கப் பெற்றுவரும் ஸ்ரீ ஞானமா நடராஜ மூர்த்தியின் பொன்னார் திருவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

தருமையாதீனம் | ஒட | தருமபுரம்,

ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாச்சாரிய சுவாமிகள்

மாயூரம் அஞ்சல்
10—12—1970

" ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும்எம் ஆதியே "

## வாழ்த்துரை

திருச்சிற்றம்பலம்

" மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்
துதிசெயும் நாயன்மார் தூய சொன்மலர்ப்
பொதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே "

— திருச்சிற்றம்பலம்.

மக்களுக்குக் கண்ணெனு விளங்குவது கல்வி. அக்கல்வியும் வாலறிவன் நற்றாளைத் தொழுதற்குரிய அன்பையும், அறிவையும் தருவதாக அமையும் பொழுதே உண்மைக் கல்வியாகின்றது. இத்தகைய சமயக் கல்வியை மக்களிடையே பரவச் செய்தற்கு நூல் வெளியீடு இன்றியமையாத பணியாகும். அதனை நம் சித்தாந்த சைவத்திற்கும், தமிழ் மொழிக்கும் ஆக்கமாகின்ற வகையில் கடந்த ஐம்பது ஆண்டுகளாகச் செவ்வனே செய்து வருவது திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். இதன் பெருந்தலைமை நிலையம் சென்னையில் அப்பர் அச்சகத்துடன் அமைந்து அரிய பணிகளை ஆற்றிவருகிறது. காலம் சென்ற திருவரங்கம் பிள்ளைக்குப் பின்பு இக்கழகத்தின் ஆட்சியாளராக இருந்து சிறந்த வகையில் தொண்டாற்றி வருபவர் அன்பர் திரு. வ. சுப்பையாப் பிள்ளை அவர்கள். இக்கழகத்தின் 1008ஆவது நூல் வெளியீட்டின் விழாச் சில ஆண்டுகட்கு முன் மிகச் சிறப்பாக நடைபெற்ற ஒன்றே இவரது நன்முயற்சிக்குச் சிறந்த சான்றாகும். தமிழ் ஆட்சிமொழியாகவும், வழக்கு மன்ற மொழியாகவும் ஆவதற்குத் துணைபுரியும் நூல்கள் பலவற்றையும் இக்கழகம் பல்லாண்டுகட்கு முன்பிருந்தே வெளியிட்டு வருகின்றது. இதன் பொன்விழா அண்மையில் நடைபெற இருப்பதும், அப்பொழுது விழாமலர் ஒன்றும், பெரியபுராணக் குறிப்புரை நூலும் பெரியபுராணச் சொற்பொழிவு ஒன்றும் வெளியிடுவது மகிழ்ச்சிக்குரிய செய்திகள்.

பொன்னம்பலத்தில் திருநடம்புரியும் பெருமான் உலகெலாம் என்று அடியெடுத்துக் கொடுக்க அவன் அருளால் அவன் அடியார்களது பெருமைகளை விரித்துரைத்த பெரிய புராணத்தைப்பற்றிய சொற்பொழிவு நூல் பொன்விழாவை முன்னிட்டு வெளிவருவது சாலப்பொருந்துவதாம்.

பெரியபுராணம் அடியார் பெருமைகளைக் கூறும் நூல்மட்டும் அன்று. தமிழர் பண்பாட்டின் கருவூலம்; தமிழகத்தின் உண்மை வரலாறு; தேனினும் இனிய செந்தமிழ் இலக்கியம்; சீரிய அரசியல் நூல்; எல்லாவற்றிற்கும் மேலாகப் பக்திச்சுவை நனி சொட்டச் சொட்டத் திகழ்வது; தேவாரத் திருமுறைகளின் விரிவுரை. இதுபற்றிய சொற்பொழிவு நூல் பலதுறை மக்கட்கும் நன்கு பயனளிப்பதாகும்.

இம்முறைகளில் நடைபெற அமைந்த பொன்விழாக் குழுவில் தமிழக முதலமைச்சர் மாண்புமிகு கலைஞர் மு. கருணாநிதி அவர்களும், கல்வி அமைச்சர் மாண்புமிகு நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்களும், தொழிலதிபர் திரு. நா. மகாலிங்கம் அவர்களும் பங்கு பெற்றிருப்பது பாராட்டிற்குரியது.

பொன்விழாப் பலவகையாலும் சிறப்புற்று நிகழவும், விழாமலர் தெய்வத்தமிழ்மணம் கமழும் திருமலராக மலர்ந்து பலர்க்கும் பயன்தரவும் எங்கள் ஆன்மார்த்த மூர்த்தியாய் இலங்கும் செந்தமிழ்ச் சொக்கன் திருவடியினைச் சிந்திக்கின்றோம்.

திருவருள்,

**தவயோக அருட்டிரு**
**சோமசுந்தரஞானசம்பந்த**
**தேசிக பரமாச்சாரிய**
**சுவாமிகள்**



மதுரை ஆதீனம்

தங்களுடைய கழகத்தின் பொன்விழா, சென்னையில் டிசம்பர் 18, 19, 20 ஆம் நாட்களில் திருமயிலை இராசேசுவரி திருமண மண்டபத்தில் நடைபெறத் திருவருள் கூட்டியிருப்பதை யறிந்து மகிழ்கின்றோம்.

இக்கழகத்திற்குப் பங்குகள் சேர்த்து வரையறுக்கப்பெற்ற (லிமிடெட்) நிறுவனமாக உருவாக்க, அதற்கென்றே அவதரித்த நமது மதிப்பிற்குரிய திருவாளர் வ. திருவரங்கம் பிள்ளை அவர்கள் எவ்வளவு பாடுபட்டார்கள் என்பதை நாம் நன்கு அறிவோம். அவர்கள் இலங்கையில் இருந்த காலத்தில் இரவு மூன்று மணிநேரம் மட்டுமே தூங்குவதும், மற்ற 21 மணி நேரமும் அயராது உழைத்து வந்ததும் நாம் நேரில் கண்டு வியப்புற்றிருக்கிறோம். அளவுக்கு மிஞ்சின உழைப்பால் பின்னர் அவர்கள் உடல் சிறிது நலிவுற்றதும் உண்டு. ஆனால் "செயற்கரிய செய்வார் பெரியர். சிறியர், செயற்கரிய செய்கலா தார்" என்ற திருக்குறளையும், "துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி இன்பம் பயக்கும் வினை" என்ற திருக்குறளையும், அவர்கள் நடைமுறையில் கையாண்டு வந்ததன் காரணத்தினாலே தான் இந்தக் கழகத்தை வெற்றிகரமாக அவர்கள் நடத்திவர முடிந்தது.

1920 செப்டம்பர் 21 ஆம் நாள் பதிவு செய்யப்பெற்ற இக்கழகத்தின் வெள்ளிவிழா 1945 இல் நடந்திருக்க வேண்டும். ஆனால் ஆட்சியாளராக இருந்த திரு. திருவரங்கம் பிள்ளையவர்கள் 1944 இல் விண்ணுலகெய்திய காரணத்தாலும் பிற இடர்ப்பாடுகளாலும், இங்ஙனம் நடைபெற முடியாமல் ஆகிவிட்டது.

ஆனுல் தம் தமையனுரின் அடிப்படைக் கொள்கைகளைத் தலைமேற் கொண்டு கழகத்தின் ஆட்சிப்பொறுப்பை ஏற்று, கழகத்தைக் கண்ணிமை போலப் பேணிக்காத்து அதனை இந்த நிலைமைக்கு உயர்த்தி வளர்த்து வந்த பெருமை நம் உழுவலன்பர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களையே சாரும். ஆகவே தமிழுலகம் இவ்விரு சகோதரர்களையும், பெரிதும் பாராட்டக் கடமைப்பட்டுள்ளது. விண்ணுல கெய்திய பின்னரும், ஆட்சியாளரது உள்ளத்திற்கு வேண்டிய உற்சாகத்தையும், அறிவுரைகளையும் அவ்வப்போது அளித்து உதவிவரும் தமையனுரையும் மறைமலையடிகளாரையும் மற்றும் பேரறிவாளர்கள் அனைவரையும், தமிழ் மக்கள் அனைவரும் போற்றி வணங்குவோமாக. இவர்களது அறிவுரைகளெல்லாம் ''செந்தமிழ்ச் செல்வி'' யில் வெளிவந்துள்ளன. விண்ணுலகிலுள்ளவர்களெல்லாம் பொன்விழா எல்லாவகையான சிறப்புகளுடன் நடந்தேற ஆசி கூறி அருள்வார்களாக.

கழகத்தின் பொன்விழாவானது யாதொரு விக்கினமுமின்றி இனிதே நடந்தேறவும், கழகம் இன்னும் அரிய பெரிய பணிகள் பல வெற்றிகரமாக நடத்தி வளர்ந்தோங்கித் திகழவும், அதனுல் வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தக் கொள்கைகள் உலகெலாம் பரவி, நிரந்தரமான உலக சமாதானம் ஏற்படவும், அதற்கு வேண்டிய ஆற்றலையும், பிற வசதிகளையும், நிர்வாகிகளுக்கு அருள் பாலிக்கவும், பொன்னுர் மேனியனை பொன்னம்பலக் கூத்தனைப் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கின்ரும்.

**தவத்திரு**
**குன்றக்குடி அடிகளார்**



குன்றக்குடி

தமிழகம், பகைப்புலத்து அரசர்களைப் போர்க் களத்தில் அதிகம் சந்தித்ததில்லை. அசோகனுடைய இந்தியப் பேரரசுகூடத் தமிழகத்திற்கு விலகியே இருந்தது. ஆதலால், தொன்மைக் காலத்தில் பகைப்புலத்து அரசுகளால் இந்த நாட்டின் மரபுகளுக்குப் பெருங்கேடு எதுவும் வந்ததில்லை. ஆனுல், கடற்கோள்கள் பலவற்றைத் தமிழகம் சந்தித்திருக்கிறது. கடற்கோள்களால் வந்த இழப்புகள், ஈடுசெய்யமுடியாதவையே! ஆயினும் கடற்கோள்களால் வந்த இழப்புகள், ஒரோவழிவந்த இழப்புக்களேயாம். ஆதலால், ஏற்பட்ட அழிவை மறந்து புதியன படைக்க முடிந்தது. ஆனுல், தமிழகத்தில் தமிழரல்லாத பிற மரபினரின் நுழைவாலும் ஊடுருவலாலும் ஏற்பட்ட—ஏற்பட்டுக் கொண்டிருக்கிற இழப்புகள் ஏராளம், ஏராளம்! அதனுலன்ரே, உலகம் தழீஇய பேருள்ளம் பெற்ற சேக்கிழார் பெருமான், ''செழுந்தமிழ் வழக்கு அயல்வழக்கை வென்றேற'' என்றருளிச் செய்தார். அயல் வழக்கு, நம்முடைய கன்னல்மொழியில் கல்லனைய சொற்களைச் சேர்த்துச் செய்த கொடுமையை நினைந்தாலும் நெஞ்சம் நடுங்குகிறது. இந்த மொழிக் கலப்பைத் தடுத்து நிறுத்தித் தனித்தமிழை வளர்த்த பெருமை கழகத்திற்கு உண்டு.

மொழியில் தூய்மையைக் காப்பது கருத்தின் தூய்மைக்குக் கால்கோலச் செய்யும். கருத்தின் தூய்மை தெளிவுக்குத் துணை நிற்கும். தெளிவு, திறனுக்குக் கருவியாகும். திறன் திக்கெட்டும் புகழ் பரப்பும் புதிய வரலாறு படைக்கும். இந்த இனிய நற்பணியைச் செய்த—பல தலைமுறை பயனுறத்தக்க பணியைச் செய்த கழகத்திற்கு **நன்றி**; வாழ்த்துக்கள்!

பிறபுலத்தினர், மொழியில் மட்டும் ஊடாடவில்லை. உயிரினும் இனியதாகிய உயர் சமய நெறியில் நுழைந்து ஊடாடி ஆதிக்கம்பெற முயன்றனர். அதன் விளைவாகத் தமிழர்களுக்குத் தனியே சமயநெறி உண்டு. அந்தநெறி அவர்களுடைய சொந்த அறிவில் பூத்துச் செழித்து வளர்ந்த நெறி. மயக்கங்களிலிருந்தும் மாறுபாடுகளிலிருந்தும் நீங்கி வளர்ந்த நன்னெறி,சிந்தனையிலும் செவ்விய வாழ்க்கையிலும் செழித்துக் கிடைத்த முடிந்த முடிவு. அதுவே சிவநெறி; சித்தாந்தச் சிவநெறி. ஆயினும், ஊடுருவலின் காரணமாக இன்று இந்துமதம் வாழ்கிறதே தவிரச் சிவநெறி விளங்கவில்லை. எவ்வளவு வலிய, செழித்து வளர்ந்த பசு மரமாயினும் புல்லுருவி கெடுக்கவே செய்யும். இந்த ஊடுருவலால் தமிழகத்தில் ஏதோ இனந்தெரியாத கடவுட் பற்று விளங்குகிறதே தவிரச் சிந்தையில் தெளிவும், தெளிவில் சிவமும் காண்கின்ற பேறு இல்லை. இல்லையென்ருல், எண்ணிக்கையில் அதிகமில்லை என்றே பொருள். ஒரு சிலர் இருக்கின்றனர். அவர்களை உருவாக்கிய பெருமை கழகத்திற்கு உண்டு. சித்தாந்த சைவநெறியைப் பரப்பிய மறைமலையடிகள், கா. சு. பிள்ளை போன்ற பேரறிஞர்களுக்கு உறுதுணையாக அமைந்து பணிசெய்த பெருமை கழகத்திற்கு உண்டு. சித்தாந்த சிவநெறியின் நூல்களைப் பதிப்பித்து வழங்கிய கழகத்தின் தொண்டு, காலத்திற்குச் செய்த நன்றியாகும்.

கழகம் ஐம்பது ஆண்டுகளைக் கடந்து வரவில்லை, வென்று விளக்க முற்றிருக்கிறது! காலம், எதற்கும் கடக்கத்தான் செய்கிறது. ஆண்டுகள் கணக்கில் கழகம் பொன்விழா எடுக்கவில்லை. காலம் என்ற களத்தில் அது நிகழ்த்திய பொன்னிகர் சாதனைகளை வைத்துப் பொன்விழாக் கொண்டாடுகிறது. இந்தச் சாதனைக்கு உரிய சிற்பியாக விளங்கும் கழகத்தின் ஆட்சித் தலைவர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் ஆர்வத்தோடு ஆள்வினையில் ஈடுபடுபவர் ; திறனறிந்து செய்ய வல்லவர். கழகத்தின் வரலாறு அவரின்றி இல்லை. தமிழகத்தின் வரலாறு கழகமின்றியில்லை. கழகத்தின் பொன்விழா, தனித் தமிழின் விழாவாகும் ; தமிழ் மரபுகளுக்கு எடுக்கும் விழாவாகும். உலகுயர் நெறியாம் சிவநெறிக்கு எடுக்கும் விழாவாகும். தமிழினத்தின் தனிவிழாவாகும். விழாவிற் கலந்து கழகத்தினை வாழ்த்துவோம். இது நமது கடமை.

---

**தொண்டை மண்டலாதீனம்** காஞ்சிபுரம்

**தவத்திரு**
**ஞானப்பிரகாச தேசிக**
**பரமாச்சாரிய சுவாமிகள்**

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தோன்றி ஐம்பது யாண்டாயினும், ஆயிரத்து நானூறு பனுவல்களை வெளியிட்டு மாபெருந் தொண்டு ஆற்றிய மாண்பு நிறைந்தது. அவை தொன்றும் இன்றும் இடையும் தோன்று தமிழ் நூல்கள் ஆகும். நல்ல நூல்கள் அழகிய சீரிய தூய பதிப்பாகக் கிடைக்கும் இடம் கழகம் ஒன்றே என்னும் தமிழகம் பழகிய உண்மை நிகழ்ச்சி (பிரசித்தம்) எல்லாரும் அறிந்ததே.

தன் பெயர்ப் பொருளை நிறுவிக் கொண்டு தமிழையும் சைவத்தையும் வளர்த்து வரும் முறைமையில், அவற்றைத் தன்னிருகண்ணுகப் போற்றித் தமிழ் நூல்களையும் சிவ நூல்களையும் தான் பிறந்த நாள் முதற்கொண்டே வெளியிட்டுவரும் மெய்ப்பணியை இந் நாடும் அன்றி மற்றெருநாடும் அறியும். இதன் வெளியீடுகளை வெளிநாடுகளும் மிகுமளவில் வாங்கி வருகின்றன. முதலமைச்சர் அறிஞர் அண்ணுவும் அமெரிக்கர்க்குக் கொண்டு சென்று வழங்கிய வாய்மையை உலகறியும்.

கல்வி நிலையம் முதலியவற்றில் பரிசில் அளிக்கத் தக்கவாறு கண்கவர் வனப்புமிக்க எழில் வெளியீடு இங்கு அன்றி வேறு எங்கு எப்பொழுது கிடைத்தது? கிடைக்கும்?

திருக்குறள் இக்கழகத்திலன்றி மற்றெங்கும் இதுவரையும் பெறலரிய சீரிய பொற்பு வாய்ந்த பதிப்புக்களாகக் கிடைத்தல் இல்லை.

செந்தமிழ்ச் செல்வி தோன்றிய காலம் முதல் அரிய பெரிய நுண்ணிய ஆராய்ச்சிக கட்டுரைகளைத் தாங்கி நுண்மாண் நுழைபுலமையைக் கற்போர்க்கு விளைத்து வருகின்றது. 'செந்தமிழ்ச் செல்வி' அளவிலும் தொடர்பாலும் தொண்டாலும் பெரிதேயாகும்.

புலவர் வரலாறுகளைத் தொகுத்து வரும் பெருநலமும் இக்கழகத் தொண்டுகள் எண்ணில்லாதனவற்றுள் ஒன்றாய்த் திகழ்கின்றது. இது பலராலும் எதிர்காலத்தில் மிகப் போற்றிப்பாராட்டும் பான்மைத் தொண்டு. நம் சைவ சித்தாந்தக் கழகத்துப் பொன்விழா அண்மையில் மாபெரும் விழாவாக நடக்க இருக்கின்றது. அவ்விழாவிலும் தன் பெயருக்குத் தக்க சைவத் திருமுறைகளும் கழக வெளியீடாக உள்ளன என்று கூறிச் சைவர் எல்லாரும் உளங்கனித்து உரை இனித்து உடல் குளிர்ந்து வாழும் பேறு எய்தும் வண்ணம், என்றும் இன்பம் பெருகும் இயல்பிற் குன்றாது உலகெலாம் உணர்ந்த திருத்தொண்டர் (பெரிய) புராணம் குறிப்புரை, விளக்கம் முதலியவற்றோடு இக்கழகம் வெளியிட்டு விளக்கம் மிக இயன்று வருகின்றது. பெரியபுராணம் இதுவரையில் எத்தனையோ பதிப்புக்களாகவும் வெளியீடுகளாகவும் உலவுகின்றது எனினும், இப்பதிப்பு வெளியிடும் பொன்விழா நாளில் அவை எல்லாவற்றினும் ஈதொன்றே சாலச் சிறந்ததென்று யாவரும் வியந்து புகழ் பெறும் என்பது திண்ணம்.

இதனை நினைப்பித்தது நம் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். இக்கழகத்தைத் தோற்றிய காலம் முதல் செவ்விதின் போற்றி வளர்த்து வந்தோர் இருவர். அவருள் ஒருவர் திருவரங்கம் பிள்ளை. அவர் புகழ் உடலாக இக்கழகம் பொலிவுற்று விளங்கி வாழ்ந்து வளர்கின்றது. அவ்வளர்ச்சியைத் தளர்ச்சியின்றிப் பெருக்கிவரும் மற்றையவர் நம் சைவத் திருவாளர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள். இவர்கள் புலவர் பற்பலர் உற வாலும் பனுவல்களைப் பிழைபார்த்துத் திருத்திய பயிற்சியாலும் கல்வி கேள்விகளாலும் பெரிய புலவராய் விளங்குகின்றார். சில வேளைகளில் புலவர்களையும் திண்டாட வைக்கிறார். நுண்ணுணர்வு வாய்ந்தவர்கள். அதன் பயனே இப் பெரியபுராண வெளியீடும் ஆகும். ஆழ்ந்த சைவப் பற்றே இப்போது இப்பொன்விழாப் புதுவெளியீடாகப் பொய்யடிமை யில்லாத மெய்யடியார் புராணம் வெளிவரக் காரணமாயிருப்பது. முன்னர் ஆயிரத் தெட்டாவது நூல் வெளியிட்டதன் பெருவிழாவிலும் அதன் மலராக வெளியிடப்பெற்றது எந்நூல்? அந்நூலை நினைப்போர்க்குச் சைவத்தில் இப்பிள்ளையவர்க்கு உள்ள அளவிலாத ஆழிய பற்றின் சிறப்பு நன்கு புலப்படும்.

வாழ்க வ. சுப்பையா பிள்ளை அவர்கள்
வாழ்க அவர்களுக்குத் துணையாவர் அனைவரும்
வாழ்க சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
வளர்க அதன் வெளியீட்டுப்பணி.

ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய
சுவாமிகள்
மகாசந்நிதானம்

மயிலம்
பொம்மபுர ஆதீனம்

## ஆசியுரை

அம்பலத்தாடும் எம்பிரான் திருவுருவத்தைச் சின்னமாகக் கொண்டு அரிய பல நூற்பணிகளைச் செய்துவரும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் பொன்விழாக் கொண்டாட இருப்பது அறிந்து பெருமகிழ்ச்சி அடைந்தோம்.

சைவப் பெருஞ் செல்வர் திரு. வ. திருவரங்கம் பிள்ளை அவர்கள் சீரிய உளத்தே முகிழ்த்துத் தாமரைச் செல்வராம் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் நன்முயற்சியால் மலர்ந்து மணம் வீசிச் சைவ உலகிற்கும் தமிழுலகிற்கும் குன்றாத வளம் கொழிக்கும் பல பணிகளைக் கழகம் இவ்வைம்பது ஆண்டுகளில் செய்து வந்துள்ளது.

பெயரைக் கண்ட அளவில் சைவ சித்தாந்த நூல்கள் தாம் பதிப்பிக்கப்பட்டனவோ என்று எண்ணும்படி செய்து பல்வேறு சமய நூல்களையும் இலக்கண நூல்களையும் கலைத் துறை நூல்களையும் கண்கவர் வனப்புடனும் உருவாக்கி வந்துளது இக்கழகம்.

மாத இதழாகிய செந்தமிழ்ச் செல்வி மூலம் அரிய பல கட்டுரைகள் வெளிவந்து நூல் பல பயில்வார்தம் ஐயம் தீர்க்கும் அருமருந்தாகி யுள்ளன. கழகத்தின் நன் முயற்சியால் உருவாக்கப்பட்ட தமிழ்ப்புலவர் பெருமக்கள், தமிழறிஞர்கள் பற்பலராவர். பெயரும், ஊரும் விளங்கப் புகழ்பெற்ற பெருமக்களாகத் தக்கார் நடுவண் தங்கும் பெரியாராகப் பலரைக் கழகம் தன் முயற்சியால் தமிழுலகத்துக்குத் தந்து பணி புரிந்துள்ளது எனல் மிகையாகாது. கழகத்தால் புத்துரை கண்டு வளம் பல பெற்ற தமிழ் நூல் உலகு நாளும் அம்முயற்சியில் சிந்தனை யூன்றிய திருவருட் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் நீடு வாழ்க என வாழ்த்துதும்.

மேனாடுகளை யொப்பக் கண்கவர் வனப்புடன் தமிழ் நூல்களை ஆயிரத்திற்கு மேலும் வெளியிட்டு அத்துறையில் தாம் கண்ட முன்னேற்றத்திற்குச் சான்றாகப் பரிசுகளும் பெற்றுள்ளது கழகம். மேலும் குறிப்பிடத்தக்க வகையில் தொல்காப்பிய உரைகள், எட்டுத் தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், காப்பியங்கள் ஆகியவற்றை உரையுடன் வெளியிட்டு அழகிய பேழையில் வைத்து வழங்கித் தமிழ்கூறும் நல்லுலகெங் கணும் தமிழ்மணம் கமழச் செய்துள்ளது.

மறைமலையடிகள் தம் காப்பீடாகிய நூல்கள் அனைத்தையும் பெருநூல் நிலையமாக்கி அன்னார்தம் தொண்டும் பெருமையும் தமிழ்நாடு அறியச் செய்த சிறப்பும் கழக முதல்வர் திரு. சுப்பையா பிள்ளை அவர்களையே சாரும்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகமும், அதன் ஆட்சிப் பொறுப்பினராகிய பெருமகனார் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களும், ஆதி ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் திருவருளும், மயிலம் முருகப் பெருமான் திருவருளும் பெருகித் தமிழ்கூறு நல்லுலகிற்குப் பணிபல புரிந்து நீடுவாழ்க.

**வாழ்க வையம்**

**இரா. அருளப்பா**
**சென்னை ஆர்ச் பிஷப்.**

**ஆர்ச்பிஷப் இல்லம்**
**சென்தோம், சென்னை-4.**
**11-12-1970**

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் கடந்த 50 ஆண்டுகளாகத் தமிழ் நூல் வெளியீட்டுப் பணியில் அரியபல சேவைகள் புரிந்து வந்துள்ளதை இந்தப் 'பொன்விழா'வில் அறிஞர் பலர் பலபடப் பாராட்டிப் பேசுவர். அவர்களுடைய பாராட்டுதல்களுடன் எனது வாழ்த்துதல்களையும் ஏற்குமாறு அன்பர்களை வேண்டுகிறேன். விழா என்றும் சிறப்புற நடைபெற வேண்டுமென்றும் கழகப்பணிகள் மேலும் ஓங்கி வளரவேண்டும் என்றும் இறைவனை இறைஞ்சுகின்றேன். வணக்கம்,

**Dr. K. M. MUNSHI**
Bharatiya Vidya Bhavan,

BOMBAY-7
*November 30, 1970.*

I am very happy to learn that the South India Saiva Siddhanta Works Publishing Society, will be celebrating its Golden Jubilee in December.

To have successfully published over 1400 titles mostly in Tamil on religion, literature and to have sold six lakhs of "Kural" speak volumes for the sense of dedication on the part of the Tamil public.

Working for the Bharatiya Vidya Bhavan which is engaged in similar activity, I can well imagine the vision needed for a venture of this kind and the trials and tribulations that must have overcome during the early years of the Society and eventually, the present sense of fulfilment which is its own mead.

The service which the society has rendered to Tamil Culture and to the country, and the world of Letters cannot be measured in terms of money; nor indeed, by any measure for that matter.

How I wish there were similar Societies in every part of the country, so that our country may shine in all her colours!

I pray to the Almigty that the Society may continue to serve the country and her people with renewed vigour and vitality for ever.

தெ. பொ. மீனாட்சிசுந்தரன்
துணைவேந்தர்,
மதுரைப் பல்கலைக் கழகம்.



பல்கலைக் கழகக் கட்டிடம்,
மதுரை-2,
2-12-1970

தமிழோடு தானும் வளர்ந்து தனிச்சிறப்புடைய நிறுவனமாக இன்று விளங்குகிறது திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். இன்று 'கழகம்' என்று பலராலும் அழைக்கப்பெறும் நிலைக்கு ஓங்கிச் சிறந்துள்ளது. பொன் விழாக் கொண்டாடும் இக்கழகம் மேலும் சிறந்து மணி விழாவும் வைர விழாவும் என்று பல விழாக்களும் கொண்டாடத் தக்க அளவில் தரமுள்ள நூல்களைத் தரமாக அச்சிட்டுத் தமிழர்க்குதவுமாக. தமிழர் வாழ்ந்தாலே தமிழ் வாழும்.

வாழ்க தமிழர்! வளர்க தமிழ்!! வாழ்க உலகெலாம்!!!

**நா. மகாலிங்கம்,**
*பி. எஸ்ஸி, எம். ஐ. இ.*



*பொள்ளாட்சி*

திருநெல்வேலி சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்துக்குப் பொன்விழா நடைபெறுகிறது.

சாதாரணமாக நாடகம், சினிமா, முதலியவைகளுக்குத்தான் வெள்ளி விழா, பொன்விழா என்று நடைபெறுவது வழக்கம்.

ஆனால் சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்துக்கு நடைபெறும் பொன்விழா அத்தகையதுஅல்ல. கழகம் ஆற்றியுள்ள தமிழ்த் தொண்டுக்குத்தான் பொன்விழா நடைபெறுகிறது.

அப்படிப் பொன்விழாக் கொண்டாடும்படி சைவசித்தாந்தக் கழகம் என்ன சாதித்து விட்டது என்று கேட்கத் தோன்றலாம்.

1920 ஆம் ஆண்டு ஆரம்பித்த கழகம் கடந்த 50 ஆண்டுகளில் கிட்டத்தட்ட 1500, நல்ல தமிழ் நூல்களை வெளியிட்டிருக்கிறது. 2,000 ஆண்டுகட்கு முற்பட்ட தமிழ் இலக்கண இலக்கிய நூல்களிலிருந்து இன்றைய வளரும் தமிழ் இலக்கியம் வரையில் எண்ணற்ற தமிழ் நூல்களை இடைவிடாமல் வெளியிட்டு வருகிறது.

தமிழ் நூல்கள் மட்டுமா? தமிழின் சிறப்பை எடுத்துக் காட்டுவதற்கும், தமிழுக்கு மேலும் சிறப்பூட்டுவதற்கும் உதவும்படி பல ஆங்கில நூல்களையும் வெளியிட்டிருக்கிறது.

தமிழ்மொழி, தமிழ் இனம், தமிழ் நாகரிகம், தமிழ்ப்பண்புதமிழ்க் கலை ஆகியவற்றின் வளர்ச்சிக்காகக் கழகம் ஆற்றியுள்ள பணியும் ஆற்றிவரும் தொண்டும் மகத்தானது.

'செந்தமிழ்ச்செல்வி' என்ற இலக்கிய மாத இதழை சென்ற 45 ஆண்டுகளாகத் தொடர்ந்து வெளியிட்டு இலக்கியப்பணி புரிந்து வருகிறது.

இந்த மகத்தான பணியை ஆரம்பித்து வைத்தவர் திரு. வ. திருவரங்கம் பிள்ளை அவர்கள். 1920 ஆம் ஆண்டிலிருந்து 1944 ஆம் ஆண்டு வரை 24 ஆண்டுகள் கழக வளர்ச்சிக்கு அவர் ஆற்றிய பணியைத் தமிழ்நாடு நன்றியுடன் போற்றும்.

அவருக்குப் பின் அவரின் சகோதரர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் சென்ற 26 ஆண்டுகளாக மிகச் சிறப்புடன் கழகத்தின் வளர்ச்சியில் ஈடுபட்டு உழைத்து வருகிறார்.

திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களின் கழகத்தொண்டின் வெள்ளி விழாவுடன் சைவ சித்தாந்தக் கழகத்தின் பொன்விழாவும் சேர்ந்து இருக்கிறது.

திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களும், அவருக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ்ப் புலவர்களும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் மூலம் தமிழ் மக்களுக்கு ஆற்றிவரும் பணி குன்றிலிட்ட விளக்காக என்றென்றும் ஒளிவிட்டுக் கொண்டிருக்கும்.

தமிழும் தமிழகமும் சைவ சமயமும் உள்ள வரையில் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் மகத்தான தமிழ்த்தொண்டு சுடர் விட்டுப் பிரகாசிக்கும்.

வாழ்க சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்!
வளர்க, அதன் தமிழ்த் தொண்டு!!

**டாக்டர். ராஜா சர்**
**முத்தைய செட்டியார்**
செட்டிநாடு

செட்டிநாடு இல்லம்
அடையாறு
ராஜா அண்ணாமலைபுரம்
சென்னை-28
4-12-1970

தமிழ் நெறிக்கும் சிவநெறிக்கும் நிலையாகத் தொண்டாற்றிவரும் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் பொன்விழாக் காண்கிறது என்ப தறிந்து பெருமகிழ்வு எய்துகிறேன். சைவ சித்தாந்தக் கழகத்தின் தமிழ்ப்பணி தமிழ் மக்கள் அனைவரும் நன்கறிந்த து. பழைய தமிழ் இலக்கியங்களைக் காப்பாற்றிச் செம்மை யாக நல்வடிவில் கற்கின்றவர்களுக்கும், கற்றோர்களுக்கும், பொதுமக்களுக்கும், பரப்பிவரும் தமிழ்த் தொண்டிற்குத் தமிழ் மக்கள் என்றும் நன்றிக் கடமைப்பாடுடையவர்கள். இத் தகைய அரும்பணிக்குப் பெரும் காரணமானவர் கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள். திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் எளிமை, அடக்கம், பண்பு, தந்நல மற்ற தொண்டு ஆகியவைகள்தாம் கழகத்தின் இத்தகைய வியக்கத்தக்க வளர்ச்சிக்கும் காரணமெனலாம். அவர்கள் எப்பொழுதும் தமிழைப் பரப்புதல், காப்பாற்றுதல், வளர்த்தல் முதலிய எண்ணங்களுடனே செயல்பட்டுக் கொண்டிருப்பவர்கள். இத்தகைய தமிழ்ப் பெரியோர் தலைமையில் செயல்படவிருக்கும் கழகத்தின் பொன்விழா எல்லா வகையிலும் சிறப்புடன் நடைபெறப் பிரார்த்திப்பதுடன் என் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்ளு கிறேன்.

**எம். ஏ. மாணிக்கவேலு,**
முன்னாள் தமிழக மேலவைத்
தலைவர், சென்னை



சென்னை-17.
26-11-70

கழகத்தின் 'பொன்விழா' டிசம்பர் மாதத்தில் மூன்று நாட்கள் நடைபெறும் என்பது தெரிந்து மிக்க மகிழ்ச்சி. கழகத்தின் பணிகள் மிக்க சிறப்பானதும் போற்றத்தக்கதும். விழா வெற்றிகரமாக நடக்கப் பிரார்த்திக்கிறேன்.

**கே. எஸ். நரசிம்மன்,**
பி.ஏ., பி.எல்., ஐ.ஏ.எஸ்.,
ஆணையர், அறநிலைய ஆட்சித்துறை,
தமிழ்நாடு அரசு.



சென்னை,
**26-11-1970**

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் பொன்விழா, வரும் திசம்பர்த் திங்களில் சிறப்புற நடைபெறவிருப்பது அறிந்து, மிகவும் மகிழ்ச்சியடைகின்றேன். கடந்த ஐம்பது ஆண்டுகளாகச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், தமிழுக்கும் சமயத்திற்கும் ஆற்றிவரும் அரும் பெரும் தொண்டுகள் அளவிடற் பாலன அல்ல.

சிறப்பாகத் 'தாமரைச் செல்வர்' திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள், தாமே ஒரு பெரும் நிறுவனமும் இயக்கமுமாக இருந்து, தமிழுக்கும் சமயத்திற்கும் அளப்பரும் தொண்டுகள் ஆற்றி வருகின்றார்கள்.

சுருங்கக் கூறின், இன்றைய தமிழக வளர்ச்சிக்கும், தமிழின் மறு மலர்ச்சிக்கும், இந்நூற் பதிப்புக் கழகம், எத்தனையோ பல வகைகளில் இணையற்ற தொண்டாற்றி உள்ளது.

பொன்விழா மிகவும் சிறப்புற நடைபெற விரும்பி, எனது மனமார்ந்த நல்வாழ்த் துக்களைத் தெரிவித்துக் கொள்வதுடன், கழகம் மேன்மேலும் வளர்ந்து ஓங்கி, நம் தமிழ் நாட்டிற்குப் பல்லாற்றானும் தொண்டாற்றி வருதல் வேண்டும் என்று, எல்லாம் வல்ல அம்பலவாணரின் திருவடிகளை இறைஞ்சுகின்றேன்.

தமிழவேள்
**சர் பி. டி. இராசன்**

'பாளையம் இல்லம்'
தல்லாக்குளம்,
மதுரை-2.

கடந்த ஐம்பது ஆண்டுகளாகக் கழகம் நூல் வெளியீட்டுத் துறையில் செய்து வரும் பணிகளுக்குப் பொன்முடி வைப்பது போன்று இம்மலர் அமையும் என்பதில் ஐயமில்லை. வணிக நோக்கத்துடன் மட்டும் கழகம் நடைபெறவில்லை என்பதை நாம் அறிவோம். தமிழ்மொழி, தமிழ் மக்கள், தமிழர் சமயம், இவைகளையே அடிப்படையாகக் கொண்டு எல்லாத்துறைகளிலும் முன்னேற்றத்திற்கு உகந்த பயனுள்ள நூல்களைக் கழகம் வெளியிட்டு வருவது மிகவும் பாராட்டுக்குரியதாகும். மேலும் சாதாரணமாகத் தமிழ் நூல்கள் என்றால் பிழை மலிந்திருக்கும் எனும் ஓர் அவச்சொல்லைக் கழகப் பதிப்பு நீக்கி வருகின்றது என்று கூறலாம். ஆகவே இக்கழகப் பொன்விழா சிறப்புடன் நடைபெறுவதில் தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் பெருமையடைவர் என்பதில் ஐயமில்லை. இக்கழகம் மேலும் சீரும் சிறப்பும் பெற்றுப் பல்லாண்டு தொண்டு செய்ய அருளுமாறு அங்கயற்கண்ணம்மை யுடன் அமர்ந்த ஆலவாயண்ணலை வேண்டுகிறேன்.

திரு. அவிநாசிலிங்கம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன்
வித்தியாலயம்,

கோயமுத்தூர்
2-12-70

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தமிழுக்கும் சைவத்திற்கும் செய்திருக்கும் சேவை மிகப் பெரிது.

தாம் மாணவராக இருந்தபோது அவர்கள் உயர்ந்த முறையில் வெளியிட்ட தேவாரம் திருவாசகம் முதலியனவும் திருக்குறளும் தமிழ்ப் பிரசுரங்களுக்கே அந்நாளில் உயர்வு கொடுத்தன. அதில் திரு. வ. சுப்பையா பிள்ளைக்குப் பெரிய பங்கு உண்டு.

அவர்கள் சேவை தமிழுக்கும் சைவத்திற்கும் எதிர்காலத்திலும் சிறப்பாக அமையுமாக.

கி. ஆ. பெ. விசுவநாதம்
புரவலர்
தமிழகப் புலவர்க் குழு



தி. வ. 2001, கார்த், 15.
திருச்சிராப்பள்ளி-8.

தமிழ்நூல்களை அச்சிடுவதில் ஒரு பெரும்புரட்சி செய்த கழகம் நெல்லை சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். மேலை நாட்டு நூல்களைப்போல மிக அழகாக அச்சிட்டு வழங்கித் தமிழ்த்தொண்டு செய்த பெருமை அதற்குண்டு.

அதிலும் தமிழ் நூல்களை ஆயிரத்துக்கு மேற்பட்டு அச்சிட்டு உதவித் தமிழகத்தில் தனிப்பெருமை பெற்றதும் இக்கழகம் ஒன்றே யாகும். தமிழ்நலன் கருதி நெல்லையிலும், சென்னையிலும், பல்லாவரத்திலும் மூன்று நூலகங்களைச் சிறந்த முறையில் அமைத்துப் படிப்பகமாகவும் நடத்தி வருவது இதன் நற்பணிகளில் ஒன்று.

இதன் மற்றோர் அரும்பணி சங்க கால நூல்கள் அனைத்தையும் வகைப்படுத்தி, தொகைப்படுத்தி, முறைப்படுத்தி அழகுற அச்சிட்டு அவற்றை ஒரு நிலைப்பேழையிலும் வைத்துத் தமிழ் மக்களுக்கு வழங்கி வருவது. தமிழ்ப்புலவர் பெருமக்களின், தமிழறிஞர் பெருமக்களின் திருவுருவப் படங்களையெல்லாம் திரட்டி வைத்து உதவி வருவதும் இதன் சிறந்த பணிகளில் ஒன்று.

தொடக்கத்தில் இக்கழகத்திற்குக் கால் ஊன்றிய செல்வர். திரு. வ. திருவரங்கம் பிள்ளை அவர்களால் கால்நூற்றாண்டும், அவரின் இளவல் இன்றைய செல்வர். திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களால் கால்நூற்றாண்டுமாகக் கழகம் நடத்தப்பெற்று வந்து இன்று அதன் 50ஆம் ஆண்டு பொன்விழா நடைபெறவிருக்கும் செய்தி நம்மை மகிழவைக்கிறது. அதைவிட மகிழ்ச்சியளிக்கும் செய்தி அவ்விழாவைச் சிறப்புற நடத்த, தமிழகமக்கள் அடங்கிய ஒரு பெருங்குழு முன் வந்திருப்பது.

விழா இனிது நடைபெற வேண்டுமென வாழ்த்துவதோடு, கழகம் என்றும் நின்று நிலவி இன்னும்பல அருந்தமிழ்ப் பணிகளைச் செய்து சிறப்படைய வேண்டுமெனவும் வாழ்த்துகிறேன்.

ஆ. சுப்பையா,
பொருளாளர்,
உலகத் தமிழ் ஆராய்ச்சிக் கழகம்

தமிழகம்,
சென்னை
28-11-1970.

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் பொன் விழா மார்கழித் திங்களில் சிறப்பாக நடைபெற இருப்பதை அறிந்து மிக்க மகிழ்ச்சியுற்றேன். இக்கழகத்தை நிறுவிய திரு. திருவரங்கம் பிள்ளையை எனக்கு ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னரே தெரியுமாதலால் கழகத்துடன் ஆரம்பமுதல் தொடர்பு கொண்டிருக்கிறேன். அவருக்குப் பின் அவருடைய தம்பி திரு. சுப்பையா பிள்ளை கழக ஆட்சியாளராகப் பொறுப்பேற்றுத் தமிழுக்கு அரும்பெரும் தொண்டு செய்து வருகிறார்கள். வருங் காலத்தும் இடையறாது தமிழுக்கு இக்கழகம் மேலும் மேலும் பல துறைகளிலும் தொண்டு செய்யும் என்பதில் ஐயமில்லை.

வி. ஐ. சுப்பிரமணியம்,
மொழியியற்றுறைப் பேராசிரியர்,
கேரளப் பல்கலைக் கழகம்,



திருவனந்தபுரம்
2-12-70

சைவ சித்தாந்தக் கழகம் இன்று ஒரு வெளியீட்டு நிறுவன மட்டுமன்று; தமிழ் வளர்ச்சிக்கும் சைவசித்தாந்த தத்துவ வளர்ச்சிக்கும் பெரிதும் உதவி செய்துவரும் ஒன்றாகும். பல்கலைக் கழகங்களும் ஏனைய நிலையங்களில் செய்யாத பலதமிழ் வளர்ச்சிப் பணிகளை இந்நிலையம் மேற்கொண்டு நிறைவேற்றியிருக்கிறது. எங்கெல்லாம் புலமை இருக்கிறதோ அங்கெல்லாம் அதன் செயலாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை சென்று வளர்த்தார். இளம் புலவர்கள் பலரை ஊக்குவித்தார். தமிழகத்தில் சைவசித்தாந்தக் கழகம் ஒரு பெரும் சக்தியாக இயங்குகின்றது என்றால் அது மிகையன்று; அத்தகைய நிறுவனம் எல்லாச் செல்வச் செழிப்பும் பெற்றுப் பொலிய விளங்கும்.



**அ. உத்தண்டராமன்**
ஐ.ஏ.ஸ். (ஓய்வு)
முன்னுள் இந்துமத அறநிலைய ஆணையர்

சென்னை

கழகம் என்பது ஒரு மாபெருங்கடல். நாள் திங்கள் ஆண்டு எல்லாம் அதில் எழும் ஓயாத அலைகள். அவற்றின் தொடக்கமும் முடிவும் அறிவுக் கெட்டாதவை. ஆயினும் மனித வாழ்வில் அரை நூற்றாண்டு என்பது குறிப்பிடத்தக்க ஓர் அளவேயாகும். தமிழ் வெளியீட்டுப்பணியில் 21-9-1920 லிருந்து ஐம்பது ஆண்டுகளுக்குமேல் சிறப்புடன் அருந் தொண்டாற்றிவரும் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்தத்தின் பொன்விழா உண்மையிலேயே தமிழ்த்தொண்டின் நினைவுவிழாவாகக் கருதப்படவேண்டும்.

கழகத்தைத் தோற்றுவித்து அரும்பாடு பட்டு உருவாக்கிய திருவரங்கனாருக்கும் அவருக்குத் துணையாக இருந்த மறைமலையடிகள், பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை முதலிய பெரியோர்க்கும் அருந்தொண்டாற்றிவரும் ஆட்சியாளர் பத்மஸ்ரீ சுப்பையா பிள்ளை யவர்களுக்கும் திருமுறைஒளிநெறி நூல்கள் போன்ற அரிய நூல்களை எழுதிவரும் டாக்டர் செங்கல்வராய பிள்ளை போன்ற அறிஞர்களுக்கும் தமிழுலகம்பெரிதும் கடமைப்பட்டுள்ளது.

கழகம் மக்கள் ஆதரவுடன் சிறப்புற ஓங்கி வளர்ந்து தன் நற்பணிகளைத் தொடர்ந்து செய்யவும் பல அறநிலையங்கள் வளர்ந்து பெருகிப் பெரும்புகழ் பெற்று விளங்கவும் எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிய அவன் இணையடிகளை இறைஞ்சி ஏத்துவோமாக!



**மா. காசிவிசுவநாத பிள்ளை**
ஓய்வு பெற்ற
வருமானவரி ஆணையர்

திருச்சி,
4-12-70

பழையன கழிதல் ஒருதலையாகப் பரவும் இந்நாளில், நூற்றுக் கணக்கான ஆண்டு களுக்குமுன் ஆன்றோர்கள் ஆக்கிய சாத்திர, தோத்திர, இலக்கண, இலக்கிய நூல்களைப் பிழை இன்றி அச்சேற்றி அழகிய முறையில் வெளியிட்டு வரும் திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாருக்குத் தமிழ் உலகு மிகவும் ...ப்பட்டுள்ளது.

சைவசமயம் ஏனைச் சமயங்களை அவைகளுக்கு உரித்தான இடங்களில் அமையச் செய்து, தான் அவைகளுக்கெல்லாம் மேனின்று, உச்சியிற் பழுத்த கனியாக அமைந்து சாரவரும் சகத்தாருக்கு அமுதத்தை வாரி அளிக்கும் சமயம். இத்துணைப் பெருமை பொருந்திய சைவசமயத்தைப் பரப்புவது கழகத்தின் கொள்கைகளில் ஒன்று. இக் கொள்கையைக் கழகம் நடைமுறையில் திறைவேற்றி இருக்கிறது. இனியும் நிறை வேற்ற இடையூறு ஒன்றும் நேராவண்ணம் இறைவன் அருளுவான் என்பது திண்ணம்.

கழகத்தின் மற்றொரு கொள்கை தமிழைப் பரப்புவது. தமிழ்நாட்டில் தமிழைப் பரப்ப அவசியம் நேர்ந்தது ஓர் இறும்பூதாகத் தோன்றலாம். கழகத் துவக்க காலத்திலும் பின்பும் இருந்த சூழ்நிலையை உணரின் அந்த அவசியத்தின் உண்மை விளங்கும். இத் துறையிலும் போற்றற்குரிய வெற்றியைக் கழகம் அடைந்தது கண்கூடு.

கழகப் பொன்விழாச் சிறப்பாக நடைபெற வேண்டும் எனவும், கழகப் பணி மேலும் மேலும் பெருக வேண்டும் எனவும், கழகத் தலைவர் திருவாளர் பத்மஸ்ரீ வ. சுப்பையா பிள்ளை அவர்களுக்கு நீண்ட ஆயுளும் உடல்நலனும் அளிக்க வேண்டும் எனவும் வேண்டுவார்க்கு வேண்டுவது ஈபவனும் பொன்னம்பலவாணனை வேண்டுகிறேன்.

**Dr. R. E. ASHER,**
Reader in Linguistics
University of Edinburgh

EDINBURGH
*17 November, 1970.*

One measure of the importance of the Society is that no scholar seriously interested in Tamil literature who pays a visit to Madras will fail to call at 140 Broadway. Another indication of the scope and importance of the Society's endeavours is contained in the fact that the bibliography of any scholarly work on Tamil literature will tend to be predominantly made up of "Kazhakam" publications.

Realising fully the interest that this literature excites among non-Tamil readers, the Society has also done extremely valuable work in reprinting important nineteenth century English translations of Tamil classics and in commissioning new ones.

It is good to know that during the celebrations next month emphasis is to be laid on பெரிய புராணம். Apart from the appropriateness of this in relation to the Society's principal objectives over the last fifty years, it will result in further worthwhile publications and will make even better known a work whose merits and importance are till not always fully appreciated.

All who are acquainted with the work of the Society will hope that its efforts will be continued. May the second half-century be even more glorious !



விருதளிப்பு விழாவில்
குடியரசுத் தலைவரிடம்
ஆட்சியாளர்
அழைத்துச் செல்லப்பெறல்



குடியரசுத் தலைவர்
சான்றிதழ் வழங்கிப்
பாராட்டுதல்



குடியரசுத் தலைவர்
குழந்தைகள் நூல்
வெளியீட்டுக்காகக்
கழகத்தைப் பாராட்டிக்
குழந்தை எழுத்தாளர்
சங்கத்தின் சார்பில்
பாராட்டிதழ் அளித்தல்

கழக ஆட்சியாளர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கட்கு
இந்திய அரசு 'பத்மஸ்ரீ' (தாமரைத்திரு) விருது வழங்கல்
10-4-1969



குடியரசுத் தலைவர் டாக்டர் சாகிர் உசேன் விருது வழங்குதல்



விருதுப் பதக்கம்



वैरमुत्तु पिल्लै
सुब्बैया पिल्लै

मैं भारत का राष्ट्रपति,
ज़ाकिर हुसैन, व्यक्तिगत गुणों
के लिए आपके सम्मानार्थ,
पद्म श्री प्रदान करता हूं।

राष्ट्रपति

नई दिल्ली
दिनांक 20 चैत्र 1891
10 अप्रैल 1969

'பத்மஸ்ரீ'
விருதுச் சான்றிதழ்

## Prof. C. Rabin's Message

*(Original Text in Hebrew)*



# האוניברסיטה העברית בירושלים

**THE HEBREW UNIVERSITY OF JERUSALEM**

**THE FACULTY OF HUMANITIES** | **הפקולטה למדעי הרוח**

26.11.1970

למנהליה ולעובדיה של שיבה סידהאנטא קאז'אגאם הנני שולח, בשמי ובשם
רבים בישראל המתפעלים מתקומת העם הטאמילי, את ברכותיי הנאמנות ליובלה
ה-50. כמו העם הטאמילי, כן העם היהודי במולדתו ישראל עתה בעיצומו של
תהליך החייאת תרבותו עתיקת היומין. על כן אנו, אולי יותר מרבים, יכולים
להבין את הערך הרב שבפעולתכם להדפסת נכסי הספרות שלכם בצורה נאה, עם
פירושים ותרגומים, כדי שכל בני עמכם יוכלו לשוב ולשתות מן המעיין
האיתן של יצירה לאומית מקורית, המנחילה את ערכיה המוסריות והאסתטיות
הסגוליות של תרבותכם. באתי מאוחר בחיי להכרת התרבות הטאמילית, ואני
עומד כל פעם מחדש משתאה בפני גודל הישגי ספרות זו, אחת הספרויות האצילות
של האנושות. ברכתי לכם שגם ביובל השנים הבא תזכו להפיץ ולהעמיק בעמכם
את ידיעת מורשתו. בשעת שמחתכם, זכרו נא, כי את המלה ירכל נתנה לעולם
שפתנו העברית,

ח״ים רבין

חיים רבין

פרופסור ללשון העברית, האוניברסיטה העברית

**C. RABIN,**

**Professor of the Hebrew Language,**
**Hebrew University of Jerusalem.**

**ISRAEL**

*26-10-1970*

To the Directors and employees of the Saiva Siddhanta Kazhagm, I herewith send in my own name and in the name of the many admirers of the renaissance of the Tamil people in our country Israel, my sincerest wishes on the occasion of your Jubilee Just like the Tamil people, so the Jewish people is at present engaged in the revival of its ancient culture in its homeland, Israel. This is why we, perhaps better than others. can understand the immense importance of your activities in publishing the great works of your national literature in pleasing editions, with commentaries and translations, so that all sons of your nation can again refresh themselves from the everflowing well of their own genuine national creativeness, which hands on from generation to generation and implants in all those moral and aesthetic values of your culture, which distinguish it from all others,

**Daroga Prasad Roy**
Chief Minister
Bihar

PATNA
*9th December 1970.*

I am glad to know that the President of India is inaugurating the Golden Jubilee Celebration of the South India Saiva Siddhanta Works publishing Society on December 18, 1970 at Kazhagam, Madras.

The efforts of the Society in publishing nearly 1,400 books on ethics, religion, culture, civilization and modern subjects are commendable. I am confident that the Society will maintain its tradition in years to come.

I wish every success to the celebration.

**R. Janardhanam Naidu,**
B.A.. L.T., D E. (Oxon), D.L.S. (Lond)., F.L.A., Librarian, Govt Connemara Public Libraries & Special Officer for Libraries (Retd.) Ex. Librarian, Madras University Library & Head of University Lib. Sc. Teaching Dept.

3, SIVAGANGA ROAD,
NUNGAMBAKKAM, MADRARS-34
*3-12-1970.*

I am one of the great many who have had the chance of watching the career of the 'Kazhagam' from its inception. It is a miracle how it has been able to survive the trying time due to the poor regard shown to the Tamil language during the long alien rule in India. In spite of trials and tribulations this 'Society' has not only outlived its adverse long period but also, even in that dark period it rendered yeoman service by printing and publishing the most valuable and inimitable classic Tamil literature of South India, particularly on religion, thus placing the past, present and future citizens of this country under a deep debt of gratitude to it.

The 'Kazhagam' has to its credit publications numbering over 1400. One unique feature of it is the unconditional selflessness, as most of its annual profit is ungrudgingly utilised for charitable purpose, according to as it is laid down in its constitution.

The 'Kazhagam' cannot be adequately praised for its high patriotic service by not only keeping alive the ancient love of India but also adding to it in no small measure modern literature, proving that the present literature owes ever so much to that of the past, kept gloriously alive by this Society. The past classic literature is an unfailing source for inspiration and guidance to the present, and thus the two together for the future.

In conclusion, I join with the countless scholars devoted to the 'Kazhagam' in prayer to Providence, to kindly bestow on it, His most Choice Blessings for its continued meritorious service incomparably more distinguished than what it has been very deservedly able to achieve so far ending with its Golden Jubilee celebration in December 1970, not only with its publications, to inspire the present generation, but also the unending generations to be born!

**Dr. R. Subramaniam,**
M. D., F.R.C.P. (L) Hony. Physician to H.E. The President to India.

MADRAS-10
**28-11-1970.**

The Tirunelveli South India Saiva Siddhanta Works Publishers, have done yeoman service to the Tamil language and Tamil Nadu by bringing out excellent books in Tamil. They are all very well brought out and printed neatly. They can be

compared with many of the foreign books. I have purchased for my personal use books from them on several occasions and I am satisfied with the excellent service rendered by them. Unlike others who pay lip service to Tamil language, they have done real good service by constantly publishing books in Tamil on all aspects of life and also trying to improve on their own publications. I pray to Lord Almighty for their continued success and prosperity so that Tamil lovers will be benefited.

**G. D. NAIDU,**
Industrialist

COIMBATORE–18.
**27-11-1970**

I have great pleasure in wishing the function a grand success.

**PENTTI AALTO**
FINNISH SCHOLAR

Hollantilaisentiel
Helsinki 33 Finland
EUROPE.
*December 8th, '70*

Dear Sirs,

I appreciate very much the message you addressed to me regarding the Golden Jubilee of Society.

The great Tamil classics are on essential part of the common cultural heritage of mankind. The Work you are doing is thus most important and valuable indeed. I am therefore very glad of the opportunity of presenting my blessing and best wishes to the labours of your Society.

I hope that you will in the future send me notes about your activities and important publications.

**பொன். கோதண்டராமன்,**
எம்.ஏ., பி.ஓ. எல்.,பி. எச்.டி.
(பொற்கோ)
ஆப்பிரிக்கப் படிப்புப் பள்ளி,
இலண்டன் பல்கலைக் கழகம்

*இலண்டன்,*
*18-11-70*

கடந்த ஐம்பதாண்டுகளாக அயராத தமிழ்த்தொண்டாற்றிவரும் சைவசித்தாந்த ...ற்பதிப்புக் கழகம் மேலும் மேலும் வளர்ச்சி பெற்றுத் தமிழ்ப்பணி புரியவேண்டுமென்று ...ைவதோடு நீங்கள் ஏற்பாடு செய்துள்ள பொன்விழா மிக இனிது சிறப்பாக நிகழ ...ாக்டர் திரு. மார் அவர்கள் வாழ்த்து தெரிவிக்கிருர். நன்றி. வணக்கம்.

வழக்கறிஞர்
**வே. நாகலிங்கம்,**
ஜே. பி., யூ எம்.,

வட்டுக்கோட்டை,
*யாழ்ப்பாணம்.*
3-12-70

கழகம் இத்தனை ஆண்டுகளாக நம் தெய்வச் செந்தமிழ் மொழிக்கு இலக்கியத் துறையிலும், சமயத்துறையிலும் அரும்பெருந் தொண்டாற்றி வருவது தமிழ் மக்கள் நன்கு அறிவர்.

சென்ற நூற்றாண்டில் திரு. ஆறுமுக நாவலர் அவர்கள் சிறந்த தமிழ் நூல்களுள் சிலவற்றைப் பரிசோதித்துப் பிழையற முதன்முதல் அச்சிட்டுத் தமிழையும் சைவத்தையும் நன்கு வளர்த்து வந்தனர். பின்பு திரு. சி. வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் தொல்காப்பியம், கலித்தொகை, இறையனார் களவியல் உரை முதலிய சிலவற்றை வெளியிட்டுதவினார்கள். அதன் பின் திரு. சாமிநாத ஐயர் அவர்கள் தமிழ் நூல்களில் சங்க நூல்களைப் பெரிதும் முயன்று பரிசோதித்து வெளியிட்டனர். இவர்களின் தொண்டுக்குத் தமிழ் உலகம் பெரிதும் கடமைப்பட்டிருக்கின்றது.

**தி. பு. சந்தான கிருஷ்ண நாயுடு,**
*முன்னாள் மாநிலக் கல்வித்துணை இயக்குநர்.*



*1, கிருஷ்ண நாயுடுதெரு,*
*குரோம்பேட்டை, சென்னை-44.*
நவம்பர் 27, 1970.

சென்ற ஐம்பதாண்டுகளில் கழகத்தின் தொடர்பினால் பற்பல பேரறிஞர்களின் நட்பையும் ஊக்கமளிப்பையும் பெற்றேன். அவர்களின் பெயர்களையும் பேருதவிகளையும் விளக்கமாகக் கூறி நன்றி செலுத்த இவ்வேட்டில் இடம் போதாதெனினும், முதன் முதலாகக் கழகத் தொடர்பமைந்தளித்த புலவர் அ. நடராச பிள்ளையவர்களையும் ஆசிரியர் க. ப. சந்தோஷம் (மகிழ்நன்) அவர்களையும் என்றும் மறவேன். இவ்வரை நூற்றாண்டுக் காலமாகக் கழகத்தின் தனிச் சிறப்புக்கும் பெரும் புகழுக்கும் அயராப் பணியாற்றியும், எனக்கும் என்னைப்போன்ற பலருக்கும் ஊக்கமளித்தும் வரும் அன்பர் தாமரைச் செல்வர் வ. சுப்பையா அவர்களுக்கு இன்றும் என்றும் என் நன்றியையும் நல்வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

**முருகு சுப்பிரமணியம்**
ஆசிரியர்

தமிழ்நேசன்
கோலாலம்பூர்

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் பொன்விழாக் கொண்டாட்டங்களைத் தமிழக ஆளுநர் மாண்பமை சர்தார் உச்சல் சிங் தொடங்கி வைப்பதும் இவ்விழா மூன்று நாட்களுக்கு விரிவான ஏற்பாடுகளுடன் நடத்தவிருப்பதுந் தமிழ் கூறு நல்லுலகத்திற்குப் பூரிப்பூட்டும் செய்தியாகும்.

சைவமும் தமிழும் தழைத்தினிது ஓங்குவதற்குக் கழகம் செய்து வருகிற அரிய பணிகளைச் சமயத்தின் பாலும் தமிழின்பாலும் ஈடுபாடு கொண்ட அனைவரும் நன்குணர்வர். இதுவரை 1400 நூல்களை அழகுறக் கழகம் வெளியிட்டிருக்கிறது. கழகப் பதிப்பு என்றாலே பிழையற்ற நம்பகமான பதிப்பு என்னும் மதிப்பினைத் தமிழறிந்த அனைவரும் கொண்டிருப்பதில் வியப்பில்லை.

பழந் தமிழ் நூல்களைப் பதிப்பிப்பது முதல் மறுமலர்ச்சித் தமிழிலக்கியங்களை வெளியிடுவது வரை தமிழோடு தொடர்பு கொண்ட எல்லாப் பணிகளிலும் கழகம் கருத்தைச் செலுத்தி வருவது வரவேற்கத் தக்கது. பொன்விழாவை முன்னிட்டுப் பெரிய புராணத்தின் ஆங்கில ஆக்கத்தையும் கழகம் வெளியிடவிருப்பது மாபெரும் தொண்டாகும். ஆங்கிலம் முதலான பிற உலக மொழிகளில் தமிழ் இலக்கியம், பண்பாடு முதலியவற்றை எடுத்துச் சொல்கின்ற தேவை இப்பொழுது மிகுந்திருக்கிறது. பெரும்பாலும் ஆங்கிலத்தில் எழுதுகின்றவர்களுக்கு ஆழ்ந்த தமிழ்ப் புலமை இல்லாத குறையும் உண்டு. ஆழ்ந்த தமிழ்ப் புலமையோடு பிறமொழிப் புலமையும் படைத்தவர்களைத் தேர்ந்தெடுத்துத் தகுதியான மொழி ஆக்கங்கள் வருவதற்குக் கழகம் தொடர்ந்து பெருமுயற்சிகளை மேற்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

என் தமிழ்ப் பயிற்சிக்கும் 'தமிழுணர்ச்சிக்கும் 'செந்தமிழ்ச் செல்வி' திங்களிதழும் கழக வெளியீடுகளும் உறுதுணையாக இருந்திருப்பதை இச் சமயத்தில் நன்றியோடு நினைவு கூர்கிறேன்.

பொன்விழா எடுக்கிற கழகம் மணிவிழா, நூற்றாண்டு விழா முதலான விழாக்களையும் கொண்டாடி ஞாலமெங்கும் தமிழ் வளர்க்கும் திருப்பணியை நாளும் செய்து புகழ் குவிக்க வாழ்த்துகிறேன்.

**ஔவை. டி. கே. சண்முகம்**

சென்னை.

கழகத்தின் பணி வியக்கத்தக்கது. போற்றற்குரியது.

கலைக்காட்சியினையும், நூற்காட்சியினையும் அழகுபெற அமைப்பதில் தாங்கள் சிறப்பு வாய்ந்தவர்கள் என்பதைத் தமிழுலகம் நன்கு அறியும். தங்கள் அரிய பணிகள் மேன்மேலும் சிறப்புற்று விளங்கவும், கழகம் வளர்ந்தோங்கி வாழவும் எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகின்றேன். என் உளம் நிறைந்த நல்வாழ்த்துக்கள்.

M. Singgara Velu
*President*,
S. Chandra Segaran
*General Secretary*.

The Indonesian Hindu Youth Organisation
(Registered as Indonesian Ministry of Religion) Djakarta.
Dated 8th December 1970.

The South India Saiva Siddhanta Works Publishing Society, Tinnevelly, Ltd., was founded on the 21st September 1920, and has attained half a century on the 21st September 1970. By celebrating this 50th golden jubilee may we acquire pride and self-satisfaction.

No one can deny the fact that in these 50 years the kazhagam has issued forth 1400 rare, outstanding issues which have proved to be the most inspiring, instructive and fascinating. This is undoubtedly an immense yeoman service.

The credit for broadcasting to the outer world that the Dravidian Culture is the most ancient, for introducing to the world the strength and beauty of the oldest, sweetest, and most adorable Tamil Language, and for presenting to the world the essence of Tirukkural (the Sacred Voice) that is over 2000 years old, goes to the said kazhagam. No other service ever done to mankind is as holy as this.

It is impossible not to appreciate the services rendered by this Kazhagam. For the Dravidian tribes and their admirable language Tamil, the services rendered by this kazhagam are beyond limit.

As this kazhagam has struck root these 50 years so also it is our sincere hope that for innumerable years to come this kazhagam will firmly flourish and shed glistening light to the world at large concerning the healthy growth of our immortal Tamil language, the pride of the Dravidian tribe, the excellence of the Hindu Religion, the best of the Saiva Siddhantam, and through these publications the work of par excellency acquire name and fame.

May the Almighty bestow long life, intelligence, sound health, prosperity and unending happiness on the profound scholars, Saiva siddhantis, Tamil pulavars, and eminent scholars in Hindu Philosophy on account of whose unwearied strife and zeal this kazhagam has attained such great heights and issued forth 1400 brilliant publications through which mankind has greatly benefited.

Long live this Golden Jubilee !

ஓ. வி. அளகேசன்
இந்தியத் தூதுவர்

இந்தியத் தூதரகம்,
அடிஸ்அபாபா,
எதியோபியா
3, டிசம்பர் 1970.

சைவத்தையும் தமிழையும் இரு கண்களாகக் கொண்டு அவற்றின் பார்வை நன்கு விளங்கும் பொருட்டுக் கடந்த ஐம்பதாண்டுகளாகக் கழகம் ஆற்றி வந்துள்ள அரும்பணி நாடும் நகரமும் நன்கு அறிந்ததே. பொன்விழாவின்போது அறிஞர் பலர் அதன் புகழைக் கூறுவார்கள். அவர் கூற்றுக்குள் அதன் புகழ் அடங்குவதாகுமோ?

கழகத்தின் கடந்த காலப் பணியைவிட அதன் வருங்காலப் பணி மேலும் சிறந்து விளங்க சேண்டாமா? இதுவரை பெரும்பாலும் தமிழ் மக்கள் பெற்றுவந்துள்ள நலன்களை ஏனைய மொழியினரும் பெற வேண்டாமா? 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' ஏன்பது என்றுமுள்ள ஒரு குறிக்கோளல்லவா?

--

சைவசித்தாந்தத்தின் அருமை பெருமைகளையும் தமிழின் தொன்மைச் சிறப்பினையும் நம் நாட்டிலுள்ள ஏனைய மொழியினரும், உலகின் பல பகுதிகளிலும் உள்ள ஆங்கிலம் அறிந்தோரும் கற்று இன்புறும் பொருட்டு, அம்மொழிகளையும் ஆங்கிலத்தையும் ஊர்தி யாகக் கொண்டு சைவமும் தமிழும் உலாப் போந்தால் அது கண்ணுக்கும் கருத்துக்கும் எத்துணை இனிய காட்சியாக இருக்கும்! இக்கவின்மிகு உலாவுக்குக் கழகத்தைத் தவிர வேறு யார் ஏற்பாடு செய்ய முடியும்! கழகம் பல்லாண்டு வளர்ந்தோங்குவதாக.

**டாக்டர் பா. நடராசன்**
எம்.ஏ., டி.லிட்.

சென்னை-31
26-11-70

கழகம் செய்துள்ள தொண்டை வெளியீட்டுப்பணி என்று மட்டும் சொன்னாற் போதாது. தமிழ் மறுமலர்ச்சியின் முன்னோடி இயக்கமென்றே கழகத்தைச்சொல்லவேண்டும். தமிழின் தனி இயல்பை உலகுணரக் கழகம் வெகு முயன்றுள்ளது. எதிர்பாராத வெற்றியுமடைந்துள்ளது. இந்த ஐம்பதாண்டு அரும் பணியைத் தமிழ் மக்கள் போற்றக் கடமைப்பட்டுள்ளார்கள். ஆகவே கழகத்தைப் பாராட்டுவோம். நல்வாழ்த்துக் கூறுவோம்

**திரு செம்பியன் (ரூதியன்)**

லெனின் கிராட் பல்கலைக் கழகம்

ஐம்பது ஆண்டுகளாகத் தமிழ்ப் பண்பாட்டிற்கும் இலக்கியத்திற்கும் ஈடும் இணையும் அற்ற அரும்பெரும் பணியைத் தொடர்ந்து புரிந்து கொண்டு வரும் நமது கழகத்தின் பொன்விழாவானது தமிழர், தமிழர் அல்லாத தமிழன்பர்கள் அனைவரும் உவந்து கொண்டாடுதற்குரிய நிகழ்ச்சியாகும்.

கழகம் மேன்மேலும் செழிப்புற்றுத் தமிழ் இலக்கியத்தின் பூங்காவினையும் மேன் மேலும் செழிக்கச் செய்து நீடூழி வாழ வேண்டும் என்பது என் உளமார்ந்த வாழ்த்து!

பேராசிரியர்
**திரு. அ. மு. பரமசிவானந்தம்**
எம்.ஏ., எம்.லிட்.

தமிழ்க்கலை இல்லம்
சென்னை-30
26-11-70

கடந்த ஐம்பது ஆண்டுகளில் தமிழ் நாட்டில் எத்தனையோ மாற்றங்கள் நடை பெற்றுள்ளன. தனித்தமிழ் இயக்கம் வளர்ந்து வாழ்வோடு பொருந்திய காலமும் இதுவே. அந்நியமொழி ஆதிக்கம் - வடநாட்டு இந்தியின் படையெடுப்பு - இவற்றை ஒழிக்கப் போராடி வெற்றி கண்ட காலமும் இதுவே. நல்ல பழந்தமிழ் நூல்களை வண்ணப் பொலிவோடு வற்றுத கருத்தோடு மக்கள் கண்டு - உளத்திற் கொண்டு மகிழ வழிகண்ட காலமும் இதுவே. தமிழ் உலகமொழிகளுள் உயர்ந்தது, என்ற உயர்வு உண்மையேயன்றிப் பிறிதில்லை என நிலை நாட்டிய காலமும் இதுவே. தமிழர் தலை நிமிர ஆக்கநெறிகள் கண்ட காலமும் இதுவே.

தமிழுக்கும் தமிழருக்கும் தாழ்வு வரும் நேரங்களிலெல்லாம் நேரடியாகவும் பிற வகைகளிலும் கழகத்தார் அத்தாழ்வுநிலைகளை மாற்றவும் வாழ்வின் நலத்தை வழங்கவும் மேற்கொண்ட பணிகள் அளப்பில.

**சைவத் திரு.**
**சா. சச்சிதானந்தம் பிள்ளை**

சென்னை 14

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தமிழ் நெறிக்கும் சிவநெறிக்கும் 50 ஆண்டு களாக அருந்தொண்டாற்றி வருவதைத் தொடக்க காலமுதல் யான் அறிவேன். கழகத்தை நிறுவிய திரு. திருவரங்கம் பிள்ளை அவர்களோடு எனக்கு நெருங்கிய தொடர்பு இருந்தது. மறைத்திரு மறைமலையடிகளாரும் பேராசிரியர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்களும் வகுத்துக்காட்டிய கொள்கைகளை இக்கழகம் தொடர்ந்து பரப்பி வருவதை அறிந்து பெரு மகிழ்ச்சியடைகிறேன். விஞ்ஞானத்தால் ஒரு பக்கம் நன்மையும் மற்றொருபக்கம் பெருங் கேடும் விளைந்து வரும் இக்காலத்தில் அக்கேடுகள் விளையாமல் நன்மையே விளைவதற்கு இப்பொன்விழா பெருந்துணை புரியுமென்று நம்புகிறேன்.

ஆர். எம். மகாதேவன், ஐ.பி., •

சென்னை.
14-12-1970

'மொழி வளர்ச்சியே நாட்டின் வளர்ச்சி' என்ற அடிப்படைக் கருத்தினை மனதிற் கொண்டு, பாரதியார்—

"தேமதுரத் தமிழோசை உலகமெலாம்
பரவும்வகை செய்தல் வேண்டும்"

என்று கூறினர். அமிழ்தனைய இத்தமிழின் வளர்ச்சியிலே சிறந்ததொரு பங்கேற்கும் 'திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார், இவ்வாண்டு தமது ஐம்பதாண்டு சேவையை நாம் எண்ணி வியக்குமாறு பொன்விழாவை நிகழ்த்துகின்றனர் ; வைர மாலையில் ஒரு நல்முத்தைப் பதித்துத் திருமணத்தன்று மணமகளுக்குப் பரிசாகக் கொடுப்பதுபோல், தாம் பதிப்பித்துள்ள பல்வேறு நூல்களுடன் பெரியபுராணத்தைத் தமிழிலும், ஆங்கிலத்திலும் பதிப்பித்து, அதனைப் பொன்விழா நிகழ்ச்சியில் வெளியிடுகின்றனர். பெரியபுராண காவியத்தை ஆங்கிலத்தில் யோகி சுத்தானந்த பாரதியார் மொழி பெயர்த்துள்ளார் என்பது தேனுடன் பாலையும் கலந்து உண்பதற்கு ஈடாகும்.

தமிழகத்திற்கும், தமிழுக்கும் அரும்சேவை புரிந்து வரும் இக் கழகத்தார் பணி என்றென்றும் சிறந்து விளங்க "எல்லாம் வல்லானை" யான் பணிந்து வேண்டுகிறேன்.

நெல்லை,
1—12—70

அன்பர் திரு வ.சு. அவர்கட்கு,

அம்மை அம்பலவாணரருளால் எல்லா நிறைவு மெய்துக. தம் கழகப் பொன்விழா பற்றிய கடிதம் கிடைத்தது. மட்டிலா மகிழ்வெய்தினம்.

தம் விருப்பின்படி வாழ்த்துரை வழங்கற்கு இயக்குநரின் உணர்வின் ஒருமைப்பாடு இன்றியமையாததொன்றாம். அவ்வொருமை யுணர்வு இயக்குநர்க்கு நீடித்து நிற்க இயலுகையில்லாமையினால் எம்போன்றோரால் இயக்கற்கு இயலாததாகின்றது.

தம் பணியெலாஞ் சிறக்க நீடிய வாழ்நாள் அருட்செல்வத்துட னியைத்து அருள அம்மை அம்பலவாணர் பொன்னடி நாடொறும் பற்றுவோம்.

அன்பன்,
மறைமலையடிகள்.

குறிப்பு :—" ஆவியுலகுவாழ் மறைத்திரு மறைமலையடிகளார் தம் இயக்குநர் திரு இரா. ந. குற்ருலலிங்கம் பிள்ளை அவர்கள்வழித் தொடர்புகொண்டு முன்பெல்லாம் கட்டுரைகளும், வாழ்த்துரைகளும் அனுப்பி யருளியமை செந்தமிழ்ச் செல்வி வாயிலாகத் தெரிவிக்கப்பட்டு வந்தது. இப்போது கழகப் பொன் விழாவுக்கு வாழ்த்துரை வழங்கியருளுமாறு வேண்டுகோள் கடிதம் அனுப்பியதற்குக் கிடைக்கப்பெற்ற வாழ்த்துரையே மேலே காண்பது.



கழகத்தை நிறுவிய அமைச்சர்
வ. திருவரங்கம் பிள்ளை



தனித்தமிழ்த் திருவாட்டி
திருவரங்க நீலாம்பிகை அம்மையார்

கழகத் தலைவர்



திரு. மா. வே. நெல்லையப்ப பிள்ளை. பி. ஏ.
1920 - 1938



திரு. ப. சிதம்பரம் பிள்ளை. பி. ஏ., பி. எல்.,
1938 - 1948

## கழகச் செயற்குழுவினர் (1970)



இருப்பவர் : சி. ந. சுப்பிரமணியம், வித்துவான் வே. மாணிக்கவாசகம், மு. காசிவிசுவநாதன், வ. சுப்பையா, கா. வ. முத்தையா.
(தலைவர்) (ஆட்சியாளர்)

நிற்பவர் : சொ. சுப்பிரமணியம், இ. க. சேதுராமலிங்கம், சு. நடராசன், பி. ஏ. எல். டி., மு. முத்துராமலிங்கம்.

இப்போதைய

கழக ஆட்சியாளர்



திரு. வ. சுப்பையா பிள்ளை

கழகத் தலைவர்



திரு. மு. காசிவிசுவநாதன் செட்டியார்

# கழக நூலாசிரியர்கள்



சுத்தானந்த பாரதியார்



கலைஞர்
மு. கருணாநிதி



டாக்டர்
எஸ். ஆர். ரங்கநாதன்



மா. சண்முகசுப்பிரமணி
பி.ஏ., பி.எல்.



வீரமாமுனிவர்



கச்சியப்பர்



சுப்பிரமணியபாரதியார்



பம்மல் சம்பந்த முதலியா



வி. கலியாணசுந்தரனார்



பா. வே. மாணிக்க நாயகர்
பி.இ.



வா. மகாதேவ முதலியார்



திருவரங்க
நீலாம்பிகை அம்மை

# கழக நூலாசிரியர்கள்



டாக்டர் வ. சுப. மாணிக்கம்
எம்.ஏ., பி.எச்.டி.



டாக்டர் பா. நடராசன்
எம்.ஏ., டி.லிட்.



திரு. சொ. சிங்காரவேலன்
எம்.ஏ., டிப்.லிங்.



டாக்டர் ந. சுப்புரெட்டியார்
எம்.ஏ., எல்.டி., பி.எச்.டி.



நுண்கலைச் செல்வர்
திரு. அ. இராகவன்



திரு. க. வ. முத்தையா
எம். ஏ.



திரு. சோ. லட்சுமிரதன்பாரதி
எம்.ஏ., பி.எல்.



டாக்டர் தா. ஏ. சண்முகம்
எம்.ஏ., பி.எச்.டி.



திரு. பி. எல். சாமி
பி.எஸ்.சி.



திரு. ந. பார்த்தசாரதி
எம்.ஏ., எல்.டி.



வித்துவான்
இரா. இளங்குமரன்



பேராசிரியர்
கு. சுந்தரமூர்த்தி,

# கழக நூலாசிரியர்கள்


திரு. அப்துல் ரகுமான் எம். ஏ.


திரு. மு. சதாசிவம் எம்.ஏ.


பண்டித. ச. சாம்பசிவம்


திரு. சிவ. சிவராமலிங்கம் எம்


திரு. ரகுநாதன்
திருச்சிற்றம்பலக் கவிராயர்)


திரு தி. முருகுசுந்தரம் எம்.ஏ.


புலவர் இளஞ்செழியன்


திரு. தி. கு. நடராசன்
எம்.ஏ., பி. டி


திரு. டி. டி. பெலிக்சு
.ஏ., (பொரு) எம்.ஏ., (அர)


திரு. மோ. கிளாரன்சு
எம்.ஏ., (வர) எம்.ஏ., (அர)
எம்.ஏ., (பொரு)


பண்டித ஆ. பொன்னுசாமிப்
பிள்ளை


திரு. செ. அன்னகாமு
பி.ஏ., எல்.டி.

# கழக நூலாசிரியர்கள்



தண்டபாணி சுவாமிகள்



நாகை சொ. தண்டபாணி



டாக்டர் கே. கே. பிள்ளை
எம்.ஏ., டி.லிட்.



ஜே. வி. செல்லையா



ஜேம்ஸ் ஆலன்



ஏ வி. சுப்பிரமணியம்
பி.ஏ. எல்.டி.



சு. நடராச பிள்ளை
பி.ஏ. எல்.டி.



பேராசிரியர்
மா. இராசமாணிக்கம் எம். ஏ.



யோகி என். இராசன்



என். வி. அனந்தராமன்



இரா. முத்துக்குமாரசாமி
எம்.ஏ., பி.லிட்.



எஸ். மீனாட்சிசுந்தரம்
பி.ஏ., பிடி.

**A Brief History of**

# The South India Saiva Siddhantha Works publishing Society, Tinnevelly, Ltd.,

[1920 — 1970]

[THIRU. R. KALYANA SUNDARAM, B.Sc.]

### Origin and Object

In the attempt to give a brief account of the 'South India Saiva Siddhantha Works Publishing Society Tinnevelly, Ltd., for a period of 50 years ending 1970, the Management is convinced that at the outset it is their unconditional duty to express their indebtedness and gratitude to Providence and to an ever increasing Patrons and Lovers of Tamil literature, but for whose unending help through the past long days the Institution could not have survived the crisis it had to face time and again.

After having bravely survived the long period with no small success to its credit, thanks to the kind, willing and deserving help bestowed upon it, it now feels bold to carry on its well begun sacred venture with added vigour and momentum to serve the main holy object namely the propagation and promotion of the Saivite religion and the advancement of Tamil language and literature.

As the past events invariably reveal a clue to the present and the future the Society feels very optimistic that it will continue to receive the support from the Patrons and the Public in an ever-increasing measure.

The Society started on 21st September 1920 at Tirunelvely, a Temple city, in the southern part of Tamil Nadu, at the instance of Thiru. T. S. Viswanatha Pillai, B.A., by the Founder-Secretaries the late Thiru. V. Thiruva rangam Pillai, and Thiru M. Diraviyam Pillai. Its main object is the propagation and promotion of the Saivite religion and the advancement of Tamil Language and Literature. The original inspirer of this proposal however, was Maraimalai Adigal, the eminent Tamil Scholar and well-known philanthropist and also a close associate of V. Thiruvarangam Pillai.

### Management

When Thiru M. Diraviyam Pillai passed away in 1923, Thiru V. Thiruvarangam Pillai took sole charge of the affairs of the Society and after his death in 1944, Thiru V. Subbiah Pillai, the present Managing Director, has been conducting the affairs of the Society, first as acting Secretary till September 1945 and then as the Managing Director of the concern. He is assisted by the Board of Directors of whichThiru M. Kasiviswanathan Chettiar is the President.

### Branches

The Madras Branch of the Society was opened in February 1921. But later on in 1967 it was made the Head Office while the office at Tirunelvely continues to be the Registered Office. The Branches at Madurai and Coimbatore were opened in the years 1967 and 1970 respectively.

### Constitution

This is the only Public Limited Company in existence, in the whole of South India, for the purpose of publication of books, with the unique stipulation in its Memorandum that half of the annual net profits of the Society should be set apart for charitable purposes

and that the dividend to the share-holders should in no case exceed 6% per annum. It has also been laid down that, in case of liquidation, the entire assets of the Society will be transferred to the charitable institutions maintained by it and that the shareholders will have no claim even to the share amount contributed by them.

**Capital**

The initial capital of the Society was Rs. 50,000 divided into 5000 shares of Rs. 10/- each. It took nearly 25 years to get the share capital fully paid up. This amount was raised to Rs. 1,00,000 in 1952 when a sum of Rs. 50,000/- was taken from the reserve fund and converted into 5000 bonus shares. Again in the year 1963 the capital was raised to Rs. 2,00,000 by converting the reserve fund into the bonus shares.

**Dependent Institutions**

From the amount set apart for the charitable purposes, the society manages two dependent institutions. They are "The South India Saiva Siddhantha Sangam" and "The South India Tamil Sangam". The two charitable institutions were founded by the Society with the aim of achieving its main objects and registered under the Societies Registration Act XXI of 1860.

**Publications**

During the short span of Fifty years, the Society has been able to bring out with the help of eminent authors, 1400valuable publications in various fields viz., literature, religion, history, philosophy, philology, literary criticism, law, fiction, children's literature etc., the most notable among them being critical commentaries for Tolkappiam the ancient Tamil grammar, Sangam Works, Major and Minor Epics, religious and philosophical works and works of historical importance, together with Tamil translations of English classical works and English translations of Tamil classics.

**Ancient Grammar and Literary Works**

The most significant service rendered by the Society is the bringing out of all the existing old commentaries of the three parts of the famous Tamil grammar, Tolkappiam, the commentaries for the eight works belonging to the Eight Anthologies, popularly known as Ettuthokai, and Ten Tamil Idylls, and critical commentaries for the five Major and five Minor Epics along with the Eighteen Works of the Pathinen Kilkkanakku. All these works are well got up and are supplied with a wooden shelf.

**Tiruvalluvar's Kural**

Tirukkural, the Bible of the Tamils, has been published in various formats with different commentaries by the Society. It has taken all the possible steps to popularise it throughout the country. The most popular among these is the very attractive Lilliput Edition of the text in 2" x 2½" size, and this has won the appreciation of Dr. S. Radhakrishnan, former President of India who was pleased to award a certificate of merit to the Society for this attractive production in the year 1956.

Another popular edition of Tirukkural is the commentary to it by Dr. M. Varadarajan M.A., Ph.D., Professor of Tamil, University of Madras, entitled 'Tirukkural Thelivurai'. Nearly seven lakhs of copies of this book have been sold out over a period of two decades. No other Tamil book has been hitherto sold like this. The Tamil Nadu Deivika Peravai purchases these copies and presents them to graduates during convocation in Madras, Annamalai and Madurai Universities. Every school going student feels proud of possessing a copy of it.

Three different editions of the English translation of Tirukkural have been published by the Society. The translations of Dr. G. U. Pope, Rev. Drew, Lazarus and Ellis have been brought out in a single volume. Yogi Suddhanandha Bharatiyar's translation in verse has been published along with the Tamil Text.

Another edition of his translation has come out with clear prose rendering in English.

**Religious Works**

The important works of the Saiva Religion are the Twelve Tirumurais. The Society has published almost all of them except the Eleventh Tirumurai. The Periya Puranam, the twelfth and last of the Tirumurai series, will be published as the Golden Jubilee Publication. The basic works of the Saiva Siddhantha Philosophy are the Fourteen Sastras. All of them have been printed with explanatory commentaries.

The important Puranams like Tiru vilaiyadal, Tanikaip-puranam have also been brought out by the Society.

**Minor Literature**

The minor literature otherwise known as Siru Pirabandams are Pillai Tamil, Ula, Kalambakam, Andadi, Tootu, Kovai etc. Innumerable works have appeared in these forms of literature. The Society has chosen the best works in each of these forms and have published them with notes.

**Children's Books**

The Society paid much attention, even in its early stages to bring out children's books, originals as well as adaptation . In recognition of this service Dr. Zakir Hussain, the then President of India presented a certificate of merit on behalf of the Children's Writers' Association, Madras.

**Classics in Tamil**

Popular English works of the famous authors like Dickens, Scott, Dumas, Defoe, Mark Twain have been rendered into Tamil and published with the help of scholars well-versed both in English and Tamil. So far about 45 classics have been published in this series.

**Books in English**

Likewise an attempt has been made to popularise the literature and culture of the Tamils through English. The Golden Anthology of ancient Tamil literature, Sips from the Sangam Cup, Pathuppattu, The Treatment of Nature in Sangam literature and 'The Tamil Concept of Love' 'Tamils 1800 years ago' help others to understand the richness of the Ancient Tamil Literature and culture.

**Books on Law and Administration**

After Independence the importance of the regional language is much sought after and the need of books on modern lines is keenly felt. Books in Tamil on Jurisprudence, Law of Torts on the Local Administration, Registration of Documents, Parlimentary Procedure etc. have been ventured and they are well received by the Tamil readers.

**Biographies**

Among the series 'Lives of Great men', the Society has published books of eternal value, such as, on Gandhi, Nehru, Annadurai, Martin Luther King, Albert Schwitzer and so on. A series of 28 books of 'Tamil Men of letters' have covered the biographies of all the outstanding Tamil Scholars. Apart from this, separate volumes have been published to cover the Biographies of the Sangam Poets and Kings written by Hon'ble Pulavar Govindan, Speaker of the Madras Legislative Assembly.

**Reference Books**

The Society has not failed to bring out valuable Reference Books such as Tamil-Tamil Dictionary, English-Tamil Dictionary, Classified English-Tamil Dictionary, Rhetoric, Thesaurus, Dictionary of Quotations and Proverbs, Sirappu-Peyar Akarathi etc. The most noteworthy among the Reference books are the concordances for the Thevarams of Sambandar, Appar, Sundarar and the concordance to Tiruvacakam and Tirukkovaiyar; all these concordances were compiled by Dr. Thanigaimani, V. S. Chengalvaraya Pillai. A few anthologies like 'Pannul Padal Tirattu, 'Siva Neri Seyyul Tirattu', 'Tanippadal Tirattu' have been published by the Society

for ready reference of the best poems of the best poets.

**Maraimalai Adigal's Works**

The Society has done a great service in bringing out all the works of Maraimalai Adigal, the great Tamil scholar. He has written more than forty books on different subjects like Literature, Religion, Philosophy, Essays etc.

**Works of James Allen**

The Society has done well in reprinting all the works of James Allen, a British Philosopher and great thinker, of recent years. His books are really great spiritual and moral treasures. Some of his works have been translated into Tamil and published by the Society.

**Souvenirs**

In the year 1961 to celebrate the release of the 1008th pubilcation. the Society brought out a Souvenir full of readable and learned articles with the portaits of more than One hundred Tamil Scholars. In connection with the Tiruvalluvar Day Celebrations in 1968 a Souvenir was released which serves as a major Reference book on Tirukkural.

**Sentamil Selvi**

"Sentamil Selvi", a Tamil Monthly published under the auspices of the Society, has been doing, for the last 45 years, yeoman service to the cause of Tamil language and literature. These 44 volumes in number, when put together will give us an insight into the history of the Tamils and Tamil Nadu during the past 45 years.

**Almanac and Diary**

As annual feature, the Society is bringing out 'the Saivite Almanac' and the 'Thirukkural Diary'. The latter is published ever since 1932 in which a Kural couplet is given for each day.

**Awards and Prizes**

Many were the prizes, in the shapes of cups, medals and shields that have been awarded to the Society at the All India Printers Conferences. The Government of India twice gave awards to the Society in appreciation of the best binding of the Society's publications.

**Charitable Institutions**

The Society with the help of the funds set apart for charitable purposes, runs a Research Library in the name of Maraimalai Adigal at Madras, and Sivagnana Munivar Library at Tirunelvely. It has also acquired the house of Maraimalai Adigal at Pallavaram and converted into a Memorial in his name. Tiru valluvar Tamil College and St. Kumarakuruparar Nursery School are the two educational institutions maintained by the Society at Tirunelvely.

**Endowment Lectures**

Two endowment lectures are being conducted every year by the Society i.e. Dr. Thanigaimani V. S. Chengalvaraya Pillai Tirumurai Endowment Lectures and Dr. M. Varadarajan, Tirukkural Endowment Lectures. For each Endowment lecture Rs. 500 is being presented to the Lecturer and those lectures are also published in book form.

**Our Managing Director**

The success of the various activities of the Society is mainly due to the untiring efforts of its Managing Director Thiru V. Subbiah Pillai who has been connected with its functioning almost since its inception. In recognition of his services to Tamil language and literature through the Publishing Society and its allied institutions, the title of "Padma Shri" was conferred on him in 1969. It can be well said that all the above said activities were planned and executed by the single person, Thiru V. Subbiah Pillai. It is because of him the ancient Tamil literatures are still in continuous print, and the Tamil books are neatly printed without any printing errors and presented attractively bound.

With the kind and hearty cooperation of the Tamil loving public the Society hopes to extend its activities to an evenwider sphere.



கழக ஆட்சியாளர் உயர்திரு வ. சுப்பையா பிள்ளை அவர்களும்
அவர்தம் துணைவியார் திருவாட்டி சு. மங்கையர்க்கரசி அம்மையாரும்.



திரு. இரா. கலியாணசுந்தரம் பி.எஸ்ஸி.
கழகப் பொது மேலாளர்.



திரு. இரா. முத்துக்குமாரசாமி எம்.ஏ., பி.லிப்.
நூலகர், மறைமலையடிகள் நூல்நிலையம்.

# கழக, அச்சக, மேலாளர்களும் பணியாளர்களும்


சித்தாந்த பண்டிதர்
ப. இராமநாத பிள்ளை


மேலாளர்
ஆ. சுப்பையா பிள்ளை


நெல்லை மேலாளர்
தி து பிச்சுதாயப்பன்


மதுரை மேலாளர்
இரா. முத்தப்பன்


கோவை மேலாளர்
மே. மீனுட்சிசுந்தரம்


அப்பர் அச்சக மேலாளர்
க ச. சுப்பையா


விற்பனைப் பகுதி
எஸ் டி செல்வராசு


கட்டடப் பகுதி
ஜி பார்த்தசாரதி


கணக்குப் பகுதி
தே. பொன்னுசாமி


நூற்பதிப்புப் பகுதி
த. சிங்காரவேலன்


கட்டடப் பகுதி
டி. ராம்சிங்


கட்டடப் பகுதி
சு. பரமசிவம்பிள்ளை

கழகப்

புலவர்



சித்தாந்த

பண்டிதர்

ஆயிரம் பிறை கண்ட அருந்தமிழ்வாணரும், சித்தாந்தச் செம்மலும், சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகப் புலவருமான உயர்திருவாளர் ப. இராமநாத பிள்ளை அவர்கள் தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள், தேவார திருவாசகம், சிவஞானபோதம் முதலிய பதினான்கு சித்தாந்த சாத்திரங்கள், திருமந்திரம், ஆகியவைகளை ஐயந்திரிபறக் கற்று அழகாக விளக்கங்கூறும் ஆற்றல் படைத்தவர்கள். விளக்க நூல்கள் பல எழுதியவர்கள்.

'என் கடன் பணி செய்து கிடப்பதே' எனப் பயன் கருதாது உழைப்பவர்கள் வள்ளுவர் போன்ற தோற்றமும், வள்ளலார் போன்ற சமயத்தொண்டும் இயல்பாகக் கொண்ட இரும்பொறையாளர். ஆழ்ந்த சமயப் பற்றுளர். நல்ல பண்பாளர்.

தமிழ், தமிழர் சமயம், தமிழர் நாகரிகம், உலகெங்கும் பரவி உயர்புகழ் எய்த வேண்டும் என்று உள்ளங்கொண்டு ஆரவாரமின்றி ஆழ்ந்த தொண்டாற்றும் அருங்குண அண்ணல். அன்பின் திருவுருவமாய்த் திகழும் இப்பெரியாரின் தொண்டினை இவர்தம் முத்து விழா ஆண்டில் கழகம் பாராட்டுகிறது.

## புலவரவர்கள் எழுதிய உரைநூல்களும் பிறவும்

*சிவஞானசித்தியார் பரபக்கம்*
*சங்கற்ப நிராகரணம்*
*சிவப்பிரகாசம்*
*திருவருட்பயன்*
*வினாவெண்பா*
*போற்றிப்பஃறொடை*
*கொடிக்கவி*
*நெஞ்சுவிடுதூது*
*உண்மைநெறி விளக்கம்*
*திருவுந்தியார்*
*திருக்களிற்றுப்படியார்*
*சிவஞான போதம்*
*சிவநெறிச் செய்யுட்டிரட்டு*

*தேவாரதிருப்பதிகத்திரட்டு (சம்பந்தர்)*
*,, (அப்பர்)*
*,, (சுந்தரர்)*
*உமாபதிசிவம் அருள்முறைத்திரட்டு*
*பெரியபுராணம் (இளையாங்குடிமாற நாயனார் சருக்கம்)*
*,, (திருநாவுக்கரசர்)*
*,, (சுந்தரர்)*
*தாயுமான வடிகள் திருப்பாடல்கள்*
*திருவாசகத் தெளிவுரை*
*பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாடல்கள்*
*திருவாசக விரிவுரை*
*பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு*

# திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் வரலாறு

## (1920—1970)

[திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.]

### தோற்றம்

திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் கோயில் நகரான திருநெல்வேலியில் 1920 செப்டம்பர் 21ஆம் நாளில் தொடங்கப் பெற்றது. இதைத் தொடங்குவதற்குக் காரணமா யிருந்தவர்கள் காலஞ்சென்ற திரு. வ. திருவரங்கம் பிள்ளை, திரு. எம். திரவியம் பிள்ளை ஆகியோர். சைவசமயத்தைப் பரப்புவதற்கும் தமிழ் மொழி இலக்கிய நூல்களை வெளியிடுவதற்கும் இக்கழகம் நிறுவப் பெற்றது. இக்கழகத்தை நிறுவுவதற்குப் பெருந்துணையா யிருந்தவர்கள் தமிழ்ப் பெரியாரான மறைத்திரு மறைமலையடிகளார் ஆவார்கள்.

### செயற்குழு

1923இல் திரு. திரவியம் பிள்ளை காலமானபின் திரு. வ. திருவரங்கம் பிள்ளையே கழகத்தை நடத்தும் முழுப் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டார்கள். கழகத்தொடக்கத்திலிருந்தே அவர்களுக்கு உறுதுணையாக இருந்து சென்னை முகவராகப் பணியாற்றிக் கொண்டிருந்த திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள், திரு.திருவரங்கம் பிள்ளை 1944இல் மறைவுற்றபின் கழகத்தை ஆட்சி செய்ய வேண்டிய நிலை ஏற்பட்டது. திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் 1945 வரை இக்கழகத்தின் செயலாளராக இருந்து, அதன்பின் இக்கழக ஆட்சியாள (மேனேஜிங் டைரக்டர்) ராக இந்நாள்வரை அரும்பணி ஆற்றி வருகின்றார்கள். அவர்களுக்கு உதவி செய்யப் பாகனேரி, திரு. மு. காசிவிசுவநாதன் செட்டியார் அவர்களைத் தலைவராகக் கொண்ட எண்மர் அமைந்த செயற்குழு அமைக்கப் பெற்றுள்ளது.

### கிளைகள்

இக்கழகத்தின் சென்னைக் கிளை 1921, பிப்ரவரித் திங்களில் தொடங்கப் பெற்றது. 1967இல் சென்னைக் கிளை தலைமை அலுவலகமாக மாற்றப்பெற்றது. திருநெல்வேலியிலுள்ள அலுவலகம் பதிவு அலுவலகமாகப் பணியாற்றி வருகிறது. இக்கழகத்தின் கிளைகள் 1967இல் மதுரையிலும், 1970இல் கோயமுத்தூரிலும் திறக்கப் பெற்றுள்ளன.

### அமைப்பு

புத்தக வெளியீட்டுக்கெனத் தென்னிந்தியா முழுவதிலும் அமைக்கப்பட்டுள்ள ஒரே பொது நிறுவனம் (பப்ளிக் லிமிடெட் கம்பெனி) இச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகந்தான். அதிலும் இக்கழகம் ஆண்டு தோறும் தனக்குக் கிடைக்கும் நிகர வருவாயிற் பாதியை அறநிலையங்களை நடத்துவதற்கென்றே தொடக்க முதலே ஒதுக்கி வந்துள்ளது. பங்காளிகளுக்கும் ஆண்டுதோறும் நூற்றுக்கு 6 விழுக்காடுதான் ஈவுத்தொகையாக (டிவிடென்ட்) கொடுக்கப் பெறுகின்றது. மேலும் இக்கழகம் செயலாற்ற முடியாது போகும் நிலை ஏற்படின் இதன் உடைமை அத்தனையுமே அறச் செயல்களுக்காகத்தான் ஒதுக்கப் பெற வேண்டும் என்று கழகச் சட்டவிதிகள் கூறுகின்றன.

### முதலீடு

பங்குக்கு ரூபாய் பத்து வீதம் ஐயாயிரம் பங்குகளோடு தொடங்கப் பெற்ற இக்கழகம்

(போனஸ் ஷேர்ஸ்) கொடுக்கப்பெற்று, தற்பொழுது இருபதினாயிரம் பங்குகள் கொண்ட மூல தனத்தோடு பணியாற்றி வருகின்றது.

### அறப்பணி

அறப்பணிகளுக்காக ஒதுக்கப்பட்ட தொகையை முறையான பணிகளில் செல வழிப்பதற்காகத் தென்னிந்திய சைவ சித்தாந்த சங்கம் என்றும் தென்னிந்திய தமிழ்ச் சங்கம் என்றும் இரண்டு சங்கங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. இவை இரண்டும் பதிவுச் சட்டத்தின்படி பதிவு செய்யப் பெற்றவை.

### கழக வெளியீடுகள்

கடந்த ஐம்பது ஆண்டுகளில் கழகம் பேராசிரியப் பெருமக்கள் பலர் எழுதிய 1400க்கு மேற்பட்ட நூல்களை வெளியிட்டுள்ளது. இலக்கியம், சமயம், வரலாறு, தத்துவம், மொழியியல், இலக்கியத் திறனாய்வு, சட்டம், கதை, சிறுவர் இலக்கியம் போன்ற பல துறைகளிலும் கழகம் நூல்களை வெளியிட்டுள்ளது. குறிப்பாகப் பழந்தமிழ் இலக்கணமான தொல்காப்பியத்திற்குள்ள பழைய உரைகள் அத்தனையும் கழகம் ஒரே அளவில் வெளியிட்டுள்ளது. அத்துடன் சங்க இலக்கியம், ஐம்பெரு, ஐஞ்சிறு காப்பியங்கள் ஆகியவற்றையும் வெளியிட்டு அழகிய மரப் பேழையில் அமைத்துத் தொகுதியாக விற்பனை செய்து வருகின்றது. இவ் அரிய பணியை இதுவரை வேறு எந்தப் பதிப்பகமும் செய்யவில்லை எனலாம்.

### திருக்குறள் பணி

திருக்குறள் தமிழர் திருமறையாகும். இதனைப் பரப்ப வேண்டிக் கழகம் பலமுயற்சிகளை மேற்கொண்டுள்ளது. உள்ளங் கைக்குள் அடங்கக் கூடிய சிறு அளவு முதல் விரிவான பரிமேலழகர் உரை வரை பல அளவுகளில் பல பதிப்புக்களைக் கழகம் வெளியிட்டுள்ளது. டாக்டர் மு. வரதராசனார் எழுதிக் கழக வழி வெளிவந்துள்ள திருக்குறள் தெளிவுரை இதுவரை ஏழு நூறாயிரம் படிகள் விற்பனை யாகியுள்ளன. இதுவரை வேறு எந்தத் தமிழ் இலக்கிய நூலும் இத்தனை படிகள் விற்றதில்லை என்று துணிந்து கூறலாம். குறளை மேனாட்டார் படித்துப் போற்றும் வகையில் டாக்டர் ஜி. யூ. போப், துரு, லாசரஸ், எல்லிஸ் ஆகியோரின் ஆங்கில மொழி பெயர்ப்புக ளடங்கிய நூலையும் யோகி சுத்தானந்த பாரதியாரின் ஆங்கில மொழி பெயர்ப்பையும் கழகம் வெளியிட்டுளது. இப்பதிப்புகளை மேனாட்டார் அனைவரும் போற்றுகின்றனர்.

### சமய நூல்கள்

சைவ நூல்களைப் பரப்ப வேண்டுமென்ற நோக்கத்தோடு பன்னிரு திருமுறைகளில் பதினொராந் திருமுறையைத் தவிரப் பிற திருமுறைகளைக் கழகம் வெளியிட்டுள்ளது. பதினொராந் திருமுறையும் விளக்கக் குறிப்புரையுடன் அச்சிடப் பெறுகின்றது. சேக்கிழார் இயற்றிய பெரியபுராணம் என்னும் 'திருத்தொண்டர் மாக்கதை' அரிய குறிப்புரையோடு கழகத்தின் பொன்விழாச் சிறப்புவெளியீடாக வெளிவந்துள்ளது. சைவ சித்தாந்த தத்துவத்தின் அடிப்படை நூல்களான பதினன்கு சாத்திரங்களையும் கழகம் பழைய உரையோடும் புதிய விளக்கங்களோடும் சீரிய முறையில் வெளியிட்டுள்ளது.

புராண நூல்களுள் சிறந்த திருவிளையாடல், தணிகைப் புராணம் போன்ற நூல்களையும் கழகம் உரையோடு வெளியிட்டுள்ளது.

### சிற்றிலக்கியங்கள்

சிற்றிலக்கிய நூல்களில் சிறந்தபிள்ளைத் தமிழ், அந்தாதி, உலா, கலம்பகம், பரணி போன்ற துறைகளில் இதுவரை சிறந்த நூல்களைத் தேர்ந்தெடுத்து அவற்றை விளக்க வுரையோடு கழகம் வெளியிட்டுள்ளது.

### சிறுவர் இலக்கியம்

சிறுவர்களுக்கேற்ற நூல்களைக் கழகம் தொடக்க காலத்திலிருந்தே வெளியிட்டு வந்துள்ளது. இதுவரை 300 க்கு மேற்பட்ட நூல்களைக் கழகம் வெளியிட்டுள்ளதால் குழந்தை எழுத்தாளர் சங்கம் முன்னாள் குடியரசுத் தலைவரான ஜாகிர் உசேன் அவர்கள் வழி சான்றிதழ் ஒன்றை வழங்கிப் பாராட்டியது. மேனாட்டு இலக்கியப் பேரறிஞர்களான ஸ்காட், டூமாஸ், டிக்கன்ஸ், மார்க்டுவைன் போன்றவர்களின் சிறந்த படைப்புக்களைத் தமிழ், ஆங்கிலம், இரு மொழியிலும் வல்ல அறிஞர்களைக் கொண்டு தமிழாக்கம்செய்து கழகம் வெளியிட்டுள்ளது. இந்நூல்களின் துணைகொண்டு மாணவர்கள் ஆங்கில நூல்களைக் கற்றுப் பயன்பெறலாம்.

### ஆங்கில நூல்கள்

தமிழ் இலக்கியத்தின் பெருமையையும் தமிழர் பண்பாடு, வரலாறு, சமயம், ஆகிய வற்றின் சிறப்பையும் மேனாட்டார் அறிந்து கொள்ளும் வகையில் கழகம் பல ஆங்கில நூல்களை வெளியிட்டுள்ளது.

"The Golden Anthology of ancient Tamil literature, Ten Tamil Ethics, Dr. G. U. Pope's Naladiyar, Sips from the Sangam Cup, Pathuppattu, The Treatment of Nature in Sangam literature and The Tamil Concept of Love" Tamils 1800 years ago' The Grand Epic of Saivism". போன்ற நூல்களைக் கழகம் வெளியிட்டுள்ளது.

### ஆட்சித்துறை, சட்ட நூல்கள்

நாடு விடுதலை பெற்றபின் அந்தந்த வட்டார மொழிகளே ஆட்சி மொழியாக மாநில அளவில் இருக்கவேண்டுமென்பது பல அரசியல் தலைவர்களின் கருத்தாகும். இதனை முன்னமே உணர்ந்து கழகம் 1941 இல் ஆட்சிச்சொல் அகரவரிசையை வெளியிட்டது. பின்னர் 'நகராட்சி முறை' 'ஆட்சித்துறைத் தமிழ்' போன்ற அரிய நூல்களையும் கழகம் வெளியிட்டுள்ளது. சட்டத்துறையில் சட்டவியல், தீங்கியல் சட்டம், சட்டத்தமிழ் போன்ற நூல்களையும் பதிவுத்துறைக்கு பயன்படக்கூடிய 'ஆவணங்களும் பதிவு முறையும்' என்ற நூலையும் கழகம் பதிப்பித்துள்ளது.

### வாழ்க்கை வரலாற்று நூல்கள்

பேரறிஞர் பெருமக்களின் வாழ்க்கை வரலாற்று நூல்களும் கழக வழி வெளிவந்துள்ளன. அண்ணல் காந்தியைப் பற்றிய 'உரிமையின் பரிசு' நேருவைப் பற்றிய 'உலகப் பேரொளி', அறிஞர் அண்ணாவைப் பற்றிய 'தமிழ்ப்பேரொளி' போன்றவை சிறந்த முறையில் தொகுக்கப்பட்ட நூல்களாகும். இவை போன்ற நூல்கள் இதுகாறும் யாரும் வெளியிட்டதில்லை என்று அறிஞர்கள் பாராட்டுகின்றனர். இந்நூல்களின் வழி உலகப் பெருமக்கள், தமிழகப் பெருமக்கள், அறிஞர்கள் ஆகியோரின் படங்களைக் கண்டு மகிழலாம். மேலும் மார்ட்டின் லூதர்கிங், ஆல்பர்ட் சுவைட்சர், ஸர். சி.வி. இராமன் போன்ற அறிஞர்களைப் பற்றிய வரலாற்று நூல்களும் கழக வழி வெளிவந்துள்ளன. தமிழ்ப் புலவர்கள் வரலாற்றைத்தொகுத்துக் கொடுக்கும் வகையில் தமிழ்ப் புலவர் வரிசை என்ற தொடர் நூல் இதுவரை இருபத்தெட்டுப் பகுதிகளாக வெளிவந்துள்ளது. சங்கத் தமிழ்ப் புலவர்களைப் பற்றிய வரலாறுகளும் சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை என்ற தலைப்பில் வெளிவந்துள்ளன.

### குறிப்பு நூல்கள்

சிறந்த தமிழ், ஆங்கில அகராதிகளும், தமிழ்-தமிழ் அகராதியும், சிலேடை அகரவரிசை, சிறப்புப் பெயர் அகராதி, கழகப் பழமொழி அகரவரிசை, தொகை அகராதி போன்ற அகராதிகளும் கழகவழி வெளிவந்துள்ளன. தேவாரம், திருவாசகம், திருக்கோவையார் போன்ற திருமுறை நூல்

களுக்கு டாக்டர் தணிகைமணி வ. சு. செங் கல்வராய பிள்ளை அவர்கள் அரும்பாடுபட்டுத் தொகுத்த சொல்லடைவு பொருளடைவு நூல்களான தேவார ஒளிநெறி, திருவாசக ஒளிநெறி, திருக்கோவையார் ஒளிநெறி போன்ற நூல்களைக் கழகம் வெளியிட்டுள்ளது.

**மறைமலை அடிகளார் நூல்கள்**

மறைத்திரு மறைமலையடிகளாரின் நூல்கள் அனைத்தையும் ஒரே அளவில் அழகிய முறையில் கழகம் பதிப்பித்துள்ளது. ஆங்கிலத் தத்துவ அறிஞரான ஜேம்ஸ் ஆலன் என்பாருடைய நூல்களும் ஆங்கிலத் திலும் தமிழிலும் கழகவழி வெளிவந்துள்ளன.

**சிறப்பு மலர்கள்**

கழகத்தின் ஆயிரத்தெட்டாவது வெளியீட்டு விழாவை ஒட்டிச் சிறந்தமலர் ஒன்றும் திருவள்ளுவர் நினைவு மலர் ஒன்றும் அழகிய முறையில் கழகத்தால் வெளியிடப்பட்டுள்ளன. இவை தனிச் சிறப்புடையவை என்று அறிஞர்கள் போற்றுகின்றனர்.

**செந்தமிழ்ச் செல்வி நாட்குறிப்பு**

இலக்கியத் திங்கள் இதழான 'செந் தமிழ்ச் செல்வியைக் கடந்த நாற்பத்தைந்து ஆண்டுகளாகத் தொடர்ந்து நடத்தி வருகிறது. இதுவரை வெளியாகியுள்ள நாற்பத்து நான்கு தொகுதிகளில் பல்வேறு காலத்தில் வாழ்ந்த தமிழறிஞர்கள் பலர், பல்வேறுபட்ட துறைகளில் ஆராய்ச்சிசெய்து எழுதியகட்டுரைகள் அடங்கியுள்ளன. தமிழ், தமிழ்நாடு ஆகியவற்றின் வரலாற்றை அறிந்து கொள்வதற்குச் செந்தமிழ்ச் செல்வித் தொகுதிகள் பெரிதும் பயன்படும். ஆண்டுதோறும் கழக வழி வெளியாகும் திருக்குறள் நாட்குறிப்பு 1932 இலிருந்து இதுவரை விடாது வெளிவருகின்றது.

**நூற்கட்டடப் பரிசு**

கழகத்தின் நூற்கட்டடச் சிறப்பு நல் லோருடைய பாராட்டுதல்களையும் பெற்றுள்ளது. அனைத்திந்திய அச்சக மாநாடுகள் தொடர்ந்து நான்கு ஆண்டுகள் கழகத்தின் கட்டடச் சிறப்பைப் பாராட்டிக் கோப்பைகளும் பதக்கங்களும் சான்றிதழ்களும் வழங்கியுள்ளன. இந்திய அரசாங்கமும் கழகத்தின் நூற் கட்டடச்சிறப்பைப் பாராட்டிப் பட்டயம் வழங்கியுள்ளது.

**அறநிலையங்கள், பணிகள்**

கழகத்தின் அறப்பணி நிலையங்கள் குறிப்பிடத்தக்கவை: சென்னையில் நடைபெறும் 'மறைமலையடிகள் நூல் நிலையம்', பல்லாவரத்தில் உள்ள 'மறைமலையடிகள் கலை மன்றம்' நெல்லையில் நடைபெறும் 'சிவஞான முனிவர் நூல் நிலையம்', 'திருவள்ளுவர் செந்தமிழ்ப் புலவர் கல்லூரி' குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளி ஆகியவைகளாகும். டாக்டர் மு. வ. அவர்கள் பெயரில் திருக்குறள் பரிசுச் சொற் பொழிவும், தணிகை மணி செங்கல்வராய பிள்ளை அவர்கள் பெயரில் திருமுறைப் பரிசுச் சொற்பொழிவும் ஆண்டுதோறும் கழக வழி நடத்தப் பெறுகின்றன.

**கழக ஆட்சியாளர்**

இவ்வளவு அரும்பணிகளையும் அயராது ஆற்றிவரும் தாமரைச் செல்வர் திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களின் தொண்டுள்ளம் எல்லோராலும் போற்றத் தக்கதாகும். அவர்தம் தமிழ்த் தொண்டினைப் பாராட்டித் தமிழக அரசு பரிந்துரைக்க இந்திய அரசின் சார்பில் 1968 இல் அந்நாள் குடியரசுத் தலைவர் டாக்டர் சாகிர் உசேன் அவர்கள் ('தாமரைச் செல்வர்' (பத்மஸ்ரீ) என்ற விருதை வழங்கினார்கள். அவர்கள் பணி மேலும் தொடர்ந்து சிறக்க, தென்னாடுடைய சிவனும் எந்நாட்டவர்க்கும் இறைவனுமான அம்மை யம்பலவாணன் அருள் புரிவானாக. •

## சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பணிமனைகள்



*கழக விற்பனை நிலையம்*
*1/140, பிராடவே, சென்னை-1.*



*அப்பர் அச்சகம்*
*2/140, பிராட்வே, சென்னை-1.*



கழகக் கட்டடப் பகுதி
6, பவழக்காரத் தெரு, சென்னை-1.



மறைமலையடிகள் நூல்நிலையம்,
105, இலிங்கிச் செட்டித் தெரு, சென்னை-1.



திருவரங்கனார் நிலையம்
(கழகப் பதிவு அலுவலகம்)
91, கீழைத் தேர்த் தெரு, திருநெல்வேலி-6.



சிவஞான முனிவர் நூல்நிலையமும்
திருவள்ளுவர் செந்தமிழ்ப் புலவர் கல்லூரியும்
100. கீழைத் தேர்த் தெரு, திருநெல்வேலி-6.




குமரகுருபரர் குழந்தைப் பள்ளி
98, கீழைத் தேர்த் தெரு, திருநெல்வேலி-6.



திருவரங்கனார் அச்சகமும், கழக நூலிருப்பகமும்
34, அரத்தூன் ரோடு, இராயபுரம், சென்னை-13.



**கழக மதுரைக் கிளை நிலையம்**

50/51 மேலமாசி வீதி, மதுரை-1.




**கழகக் கோவைக் கிளை நிலையம்**

22/819 ரங்கே கவுடர் வீதி, கோவை-1.




**மறைமலையடிகள் கலைமன்றம்**

சாவடித்தெரு, பல்லாவரம், சென்னை.

## கழக மாநாட்டுத் தலைவர்கள்



டாக்டர். திரு. வ. சுப. மாணிக்கம்
எம்.ஏ., எம்.ஓ எல்., பி எச்.டி.



பேராசிரியர் சரவண ஆறுமுக முதலியார்
எம்.ஏ., பி.ஓ.எல்., எல்.டி.



வித்துவான் கே. எம். வேங்கடராமையா
எம்.ஏ., பி.ஓ.எல்.

# கழக மாநாட்டுச் சொற்பொழிவாளர்கள்



வவர்மணி, வித்துவான்
ந. தி. கி. சுந்தரமூர்த்தி



வித்துவான்
சிவ. திருநாவுக்கரசு



திரு. அ. சங்கரநாராயணன்
எம்.ஏ., எம்.லிட்., பி.டி.



திரு. ஏ. ஆர். பொன்னையா
எம். ஏ.



வித்துவான்
. கொன்றையாண்டி



திருவாட்டி
பா. உமாமகேசுவரி எம்.ஏ.



திரு. பொ. முத்தரசு
எம்.ஏ., பி.டி.



வித்துவான்
சி. இராகவன்



வித்துவான்
த. பாலம்மாள்



வித்துவான்
திரு. மு. சுந்தரேசம் பிள்ளை



ஔவை, துரை. நடராசன்
எம்.ஏ., எம்.லிட்.;



திருமதி. தி. சுந்தராம்பாள்
எம். ஏ.

# இலக்கிய மாநாடுகள்

**நான்காவது சிற்றிலக்கிய மாநாடு** *தலைவர் :* **டாக்டர் வ. சுப. மாணிக்கம்,** M.A., M.O L.P.H.D.

| நாள் | இடம் | | பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|---|
| 30-4-61 | திருநெல்வேலி | | தலைமையுரை | |
| | | க. | திருச்சிற்றம்பலக் கோவையார் | பாலகவி வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியார் |
| | | உ. | பாண்டிக்கோவை | வித்துவான் சொ. சிங்காரவேலன் M.A. |
| | | ந. | திருவாரூர்க் கோவை | ,, தி. கி. சுந்தரமூர்த்தி |
| | | ச. | திருவெங்கைக் கோவை | ,, சிவ. திருநாவுக்கரசு |
| | | ரு. | மாறன் கோவை | பண்டித வித்துவான் தி. இராமாநுச ஐயங்கார் |
| | | சு. | குளத்தூர்க் கோவை | வித்துவான் மறை. திருநாவுக்கரசு |
| | | எ. | குலோத்துங்க சோழன் கோவை | கு. பரமசிவம், M.A. |
| | | அ. | ஒருதுறைக் கோவை | அ. கி. பரந்தாமனுர், M.A. |
| | | கூ. | தஞ்சைவாணன் கோவை | வித்துவான் அ. இராசகோட்டியப்பன் |
| | | க0. | அம்பிகாபதி கோவை | அ. ரா. பொன்னையா, M.A. |

**ஐந்தாவது சிற்றிலக்கிய மாநாடு** *தலைவர் :* **சரவண ஆறுமுக முதலியார்** M.A, B.O.L.L.T.

| நாள் | இடம் | | பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|---|
| 6-5-62 | திருநெல்வேலி | க. | பொன்வண்ணத்தந்தாதியும், கயிலைபாதி காளத்திபாதி அந்தாதியும் | வித்துவான் மறை. திருநாவுக்கரசு |
| | | உ. | அற்புதத் திருவந்தாதியும், கந்தரந்தாதியும் | வித்துவான் க. கொன்றையாண்டி |
| | | ந. | அபிராமி அந்தாதியும், உலகம்மை அந்தாதியும் | பா. உமாமகேசுவரி, M.A. |
| | | ச. | திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதியும், திருக்கருவைக் கலித்துறை அந்தாதியும் | பண்டித வித்துவான் ச. சாம்பசிவன் |
| | | ரு. | அழகரந்தாதியும், நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியும் | பண்டித வித்துவான் தி. இராமாநுசன் |
| | | சு. | கபிலதேவ நாயனர் சிவபெருமான் திருவந்தாதியும், பரணதேவ நாயனர் சிவபெருமான் திருவந்தாதியும் | அ. கி. பரந்தாமனுர், M.A. |

| | |
|---|---|
| ௭. ஆளுடைபிள்ளையார் திருவந்தாதியும், திருத்தொண்டர் திருவந்தாதியும் | கு. பரமசிவன், M.A. |
| ௮. குளத்தூர்ப்பதிற்றுப் பத்தந்தாதியும், கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதியும் | பொ. முத்தரசு, M.A. B.T. |
| ௯. திருவேங்கடத் தந்தாதியும், திருவரங்கத் தந்தாதியும் | வித்துவான் சீ. இராகவன் |
| ௧௦. சரசுவதியந்தாதியும், சடகோபரந்தாதியும் | ,, ந. பாலம்மாள் |
| ௧௧. மதுரைப் பதிற்றுப் பத்தந்தாதியும், பழமலையந்தாதியும் | பண்டித மீ. கந்தசாமிப் புலவர் |

## ஆறுவது சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் தலைவர் : வித்துவான் கே. எம். வேங்கடராமையா M.A., B.O.L.

| நாள் | இடம் | பொருள் | விரிவுரையாற்றியவர் |
|---|---|---|---|
| 12,13-4-64 | திருநெல்வேலி | ௧. சிவசிவ வெண்பாவும், முருகேசர் முதுநெறி வெண்பாவும் | வித்துவான் தி. கி. சுந்தரமூர்த்தி |
| | | ௨. நெல்லைச் சிலேடை வெண்பாவும், மதுரைச் சிலேடை வெண்பாவும் | ,, மு. சுந்தரேசம் பிள்ளை |
| | | ௩. சிங்கைச்சிலேடைவெண்பாவும்.கலைசைச்சிலேடை வெண்பாவும் | ,, சொ. சிங்காரவேலன், M.A. |
| | | ௪. பாரத வெண்பா | அ. சங்கரநாராயணன், MA.,M.Litt.,B.T. |
| | | ௫. நளவெண்பா | வித்துவான் வி. குஞ்சிதபாதம் |
| | | ௬. கந்தர் கலிவெண்பாவும், சோமேசர் முதுமொழி வெண்பாவும் | பண்டித வித்துவான் கு. சுந்தரமூர்த்தி |
| | | ௭. அரிச்சந்திர வெண்பா | ஔவை. துரை. நடராசன், M.A. |
| | | ௮. அகலிகை வெண்பா | தி. சுந்தராம்பாள், M.A. |
| | | ௯. சிவபோகசார வெண்பாவும், சொக்கநாத வெண்பாவும் | வித்துவான் வே. மாணிக்கவாசகம் பிள்ளை |
| | | ௧௦. திருக்குறட் குமரேச வெண்பா (அறத்துப் பாலும்காமத்துப்பாலும்) | பண்டித வித்துவான் ச. சாம்பசிவன் |
| | | ௧௧. திருக்குறட் குமரேச வெண்பா (பொருட் பால்) | கு. பரமசிவன், M.A. |
| | | ௧௨. கந்தபுராண வெண்பா | வித்துவான் அ. க. நவநீதகிருட்டிணன் |

# கழக விழாக்கள்

**கழக 1008ஆவது வெளியீட்டு விழா** — *தலைவர் :* **மாண்புமிகு விட்ணுராம் மேதி,** *தமிழக ஆளுநர்*

| நாள் | இடம் | | கலந்துகொண்டோர் |
|---|---|---|---|
| 20-8-61 | இராசாசி மண்டபம், சென்னை. | வரவேற்புரை : | அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் வி. சுப்பிரமணியம் |
| | | 1008வது நூல் வெளியீடு : பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு | எம். பக்தவத்சலம்<br>டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார் |

**,, மொழி மாநாடு** — *தலைவர் :* **டாக்டர் மு. வரதராசன்**

பாராட்டுவிழா நூற்பட்டி

நூல் வெளியீடு : நெ. து. சுந்தர வடிவேலு, M.A., L.T.

சொற்பொழிவு : டாக்டர் எஸ். ஆர். ரங்கநாதன்
அ. மு. பரமசிவானந்தம், M.A., M.Litt.
எம். ஆர். பெருமாள் முதலியார்

**21-8-61 இலக்கிய மாநாடு** — *தலைவர் :* **தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், எம்.ஏ.,பி.எல்.**

விழா மலர் வெளியீடு : சி. சுப்பிரமணியம்

சொற்பொழிவு : டாக்டர் மா. இராசமாணிக்கனார்
கீ. இராமலிங்கனார், M.A.
கா. அப்பாத்துரையார், M.A.
சௌந்தரம் கைலாசம்
அ. க. நவநீத கிருட்டிணன்

**22-8-61 சமய மாநாடு** — *தலைவர் :* **தவத்திரு குன்றக்குடி அடிகள்**

சொற்பொழிவு : எம். எஸ். சாரங்கபாணி முதலியார்,
மயிலை. சிவமுத்து
சி. டி. ஜானகிராம், I.A S.
வித்துவான் சி. குழந்தையம்மாள்

**'சட்டவியல்' வெளியீட்டு விழா** — *தலைவர் :* **நடுவர் ஆர். சதாசிவம் B.A.,B.L.,**

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 7-2-62 | உட்லண்சு விடுதி, மயிலை | நூல் வெளியீடு : | நடுவர் மா. அனந்த நாராயணன், I.C S. |
| | | சொற்பொழிவு : | அ. மு. பரமசிவானந்தம், M.A., M.Litt<br>டி. செங்கல்வராயன் |

**தொல்காப்பியம் — துளாமணி உரை வெளியீட்டு விழா**

*தலைவர் :* **எம். பக்தவத்சலம் B.A.,B.L.**

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 30-3-62 | உட்லண்சு விடுதி, மயிலை | நூல் வெளியீடு : | நடுவர் சு. கணபதியா பிள்ளை |
| | | சொற்பொழிவு : | எம். ஆர். பெருமாள் முதலியார்<br>சரவண ஆறுமுக முதலியார் M.A., B.O L.<br>நாவலர் இரா. நெடுஞ்செழியன் |

**மறைமலையடிகள் கலைமன்றத் திறப்பு விழா** — *தலைவர் :* **தவத்திரு ஞானசம்பந்த அடிகள்**

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 12-7-62 | பல்லாவரம் | திறப்புரை : | எம். பக்தவத்சலம், B.A., B.L., |
| | | சொற்பொழிவு : | டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார்<br>ச. சிவகுமரன், M.A. |

மறைமலையடிகள் 12ஆம் ஆண்டு நினைவு விழா *தலைவர் :* நடுவர் பி. எஸ். கைலாசம்
அ. மு. பரமசிவானந்தம், M.A., M.Litt.

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 18-11-62 | கோகலே மண்டபம், சென்னை | பரிசளிப்பு : | டாக்டர் மா. இராசமாணிக்கனார் M.A., P.H.D., |
| | | சொற்பொழிவு : | அன்பு கணபதி<br>மா. இளஞ்செழியன் M.A.; |

பெருங்கதை' வெளியீட்டு விழா *தலைவர் :* சௌந்தரம் கைலாசம் அம்மையார்

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 17-3-63 | இராசாசி மண்டபம், சென்னை | நூல் வெளியீடு : | ஆர். வெங்கடராமன் |
| | | சொற்பொழிவு : | ம பொ. சிவஞானம்<br>பாகீரதி அம்மையார் M.A.,<br>அ மு. பரமசிவானந்தம் M.A., M.Litt.<br>கு. சுந்தரமூர்த்தி<br>நாவலர் இரா. நெடுஞ்செழியன் M.A. |

'சட்டமன்ற நடைமுறை' வெளியீட்டு விழா *தலைவர் :* எஸ். செல்லப் பாண்டியன் B.A.,B.L.

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 17-3-63 | இராசாசி மண்டபம், சென்னை | நூல் வெளியீடு : | எம். பக்தவத்சலம், B.A., B.L. |
| | | சொற்பொழிவு : | நீதிபதி ஆர் சதாசிவம்<br>டி. என். அனந்தநாயகி, M.A., B.L.<br>டாக்டர் பி. வி. செரியன்<br>க. அன்பழகன், M.A., M.L.C. |

'திருவாசக விளக்கவுரை,' 'தீங்கியல் சட்டம்' வெளியீட்டு விழா
*தலைவர் :* நீதிபதி மா. அனந்தநாராயணன் I.C.S.

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 21-1-64 | உட்லண்சு விடுதி, மயிலை | நூல் வெளியீடு : | எம். பக்தவத்சலம் |
| | | சொற்பொழிவு : | கிருபானந்தவாரியார்<br>அய்யாசாமி செட்டியார் B.A., B.L.,<br>சௌந்தரம் கைலாசம் அம்மையார்<br>எஸ். செல்லப் பாண்டியன் |

மறைமலையடிகள் 13ஆம் ஆண்டு விழா *தலைவர் :* ஒ. வி. அளகேசன்

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 28-6-64 | மறைமலையடிகள் கலைமன்றம், பல்லாவரம் | பரிசளிப்பு : | அழகரடிகள் |
| | | சொற்பொழிவு : | கீ. இராமலிங்கனார்<br>கா. அப்பாத்துரையார் |

'உலகப் பேரொளி' 'அண்ணல் நேருவின் அமுத மொழிகள்' வெளியீட்டு விழா
*தலைவர் :* செல்லப் பாண்டியன்

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 16-8-64 | சிறுவர் அரங்கம், சென்னை | நூல் வெளியீடு : | எம். பக்தவத்சலம் (முதலமைச்சர்)<br>கோ. பூவராகன் (அமைச்சர்)<br>டாக்டர் அ. சிதம்பரநாதன் செட்டியார்<br>மீ. ப. சோமு., சௌந்தரா கைலாசம்<br>டி. செங்கல்வராயன் |

மறைமலையடிகள் கலைமன்றம்



மதுரை ஆதீனம்
திருவருட்டிரு சோமசுந்தர பரமாசாரிய சுவாமிகள்

கழக ஆட்சியாளர்
திரு. வ. சுப்பையா பிள்ளை

அந்நாள் முதலமைச்சர்
திரு. எம். பக்தவத்சலம்

திறப்பு விழா
12-7 62

## மறைமலையடிகள் கலைமன்றம்
## பல்லாவரம்



முகப்புத் தோற்றம்



பின்பக்கத் தோற்றம்



மறைமலையடிகள்
12 ஆம் நினைவு விழா

புகழுரை : டாக்டர்.
மா. இராசமாணிக்கனார்



மறைமலையடிகள்
13 ஆம் ஆண்டு விழா

தலைவர் :
முன்னாள் மைய அமைச்சர்
திரு. ஓ. வி. அளகேசன்



மறைமலையடிகள்
15 ஆம் நினைவு விழா

தலைவர் :
சைதைக் கல்லூரி முதல்வர்
தமிழ்ப் பெரும்புலவர்
திரு. மு. ரா. பெருமாள்
முதலியார்



மறைமலையடிகள்
16 ஆம் நினைவு விழா

புகழுரை :
மொழிப் பேரறிஞர்
பண்டித ஞா. தேவநேயன்



மறைமலையடிகள்
18 ஆம் நினைவு விழா

தலைவர் :
சட்ட அமைச்சர்
மாண்புமிகு செ. மாதவன்



மறைமலையடிகள்
19 ஆம் நினைவு விழா

தலைவர் :
கல்வி அமைச்சர்
மாண்புமிகு
இரா. நெடுஞ்செழியனார்

**காப்பிய நிறைவு விழாவும் நீலகேசி உரை வெளியீட்டு விழாவும்**

*தலைவர்:* **ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை**

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 25-12-64 | கோகலே மண்டபம், சென்னை | நூல் வெளியீடு : | நீதிபதி ஆர். சதாசிவம் |
| | | சொற்பொழிவு : | ம. பொ. சிவஞானம்<br>கா. அப்பாத்துரையார்<br>மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை<br>இராதா தியாகராசன் அம்மையார் |

**மறைமலையடிகளார் 15ஆம் நினைவு விழா** *தலைவர்:* **மு. ரா. பெருமாள் முதலியார்** M.A.,L.T.

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 26-9-65 | மறைமலையடிகள் கலைமன்றம் பல்லாவரம் | சொற்பொழிவு : | யோகி சுத்தானந்த பாரதியார்<br>அ. மு. பரமசிவானந்தம் M.A., M.Litt.<br>கா. வேழவேந்தன் B.A , B.L.,<br>புத்தனேரி ரா. சுப்பிரமணியம் |

**திருநெல்வேலித் தென்னிந்திய தமிழ்ச் சங்கக் கட்டிடத் திறப்பு விழா**

*தலைவர்:* **தவத்திரு குன்றக்குடியடிகளார்**

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 11-2-66 | திருநெல்வேலி | திறப்பு : | சி. செல்லப் பாண்டியன், சட்டப் பேரவைத் தலைவர் |
| | | சொற்பொழிவு : | ஐ. ஏ. சிதம்பரம் பிள்ளை, M A.<br>அ. இராகவன் |

**மறைமலையடிகள் 16ஆம் நினைவு விழாவும் 'மழை வேண்டல்' நூல் வெளியீட்டு விழாவும்**

*தலைவர்:* **க. வச்சிரவேலு முதலியார்** B.A., L.T.

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 27-11-66 | மாவட்ட மத்திய நூலகம், சென்னை | நூல் வெளியீடு : | வி. கார்த்திகேயன் I.A S. |
| | | சொற்பொழிவு : | ஞா தேவநேயன்<br>அகிலன்<br>சு. நடராச பிள்ளை<br>கவிஞர் சுரதா |

**பேராசிரியர் கா. சு. பிள்ளை ஆராய்ச்சிமன்றத் துவக்க விழா**

*தலைவர்:* **மாண்புமிகு இரா நெடுஞ்செழியன்,** M.A.

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 31-7-67 | கோகலே மண்டபம் சென்னை | சொற்பொழிவு: | டாக்டர் சர். முத்தையா செட்டியார்<br>நா. மகாலிங்கம்<br>டாக்டர் கே. கே. பிள்ளை<br>மு. இராசாக்கண்ணனார்<br>அ. மு. பரமசிவானந்தம்<br>சுத்தானந்த பாரதியார்<br>இரா. பாலகிருட்டிண முதலியார் |

**திருவரங்க நிலையத் திறப்பு விழா** — *தலைவர் :* **தவத்திரு குன்றக்குடி அடிகள்**

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 14-9-67 | திருநெல்வேலி | திறப்பு : | மாண்புமிகு இரா. நெடுஞ்செழியன் M.A. |
| | | சொற்பொழிவு : | சு. இரத்தினவேல் பாண்டியன் B.A.,B.L.<br>அ. லெ. சுப்பிரமணியம் B.SC., B.L.<br>ஔவை சு. துரைசாமிப் பிள்ளை<br>ஏ. பி. சி. வீரபாகு<br>அ. இராகவன் |

**குறள் கூறும் சட்டநெறி 'சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம்' வெளியீட்டு விழா**

*தலைவர் :* **எம். பக்தவத்சலம்** B.A.,B.L,

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 31-12-67 | உட்லண்சு விடுதி,<br>மயிலை | நூல் வெளியீடு : | மாண்புமிகு இரா. நெடுஞ்செழியன் M.A. |
| | | 'தலைவர் : | நீதிபதி பி, எஸ். கைலாசம் |
| | | சொற்பொழிவு : | கு. கோதண்டபாணி பிள்ளை<br>மீ. ப. சோமு<br>ந. சஞ்சீவி M.A.<br>அலமேலு இராமகிருட்டிணன் அம்மையார் |

**மறைமலையடிகள் 17ஆம் நினைவு விழாவும் 'திருவாசக ஒளிநெறி'**
**'ஆட்சித்துறைத் தமிழ்' வெளியீட்டு விழாவும்**

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| | | தலைவர் : | **மா. முத்துசாமி** B.A.,B.T. (*அமைச்சர்*) |
| 10-5-68 | கோகலே மண்டபம்,<br>சென்னை | நூல் வெளியீடு : | மு. ரா. பெருமாள் முதலியார் |
| | | சொற்பொழிவு : | யோகி சுத்தானந்த பாரதியார்<br>ப. இராமநாத பிள்ளை<br>கீ. இராமலிங்க முதலியார்<br>ஔவை து. நடராசன் |

**திருவள்ளுவர் திருவிழா**

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| | | தலைவர் : | **மாண்புமிகு செ. மாதவன்** B.Com., B.L., |
| 14-10-68 | இராசேசுவரி<br>திருமண மண்டபம்<br>மயிலை | தொடக்கவுரை : | ஆளுநர் சர்தார் உச்சல்சிங் |
| | | நூல் வெளியீடு : | சி. சுப்பிரமணியம் B.A., B.L. |
| | | காட்சித் திறப்பு : | மாண்புமிகு மு. கருணாநிதி<br>கி. வா. செகந்நாதன், M.A. |
| | | சொற்பொழிவு : | சௌந்தரம் கைலாசம் அம்மையார்<br>அருட்டிரு அழகரடிகள் |

| நாள் | | | |
|---|---|---|---|
| 15-10-68 | | தலைவர் : | **மாண்புமிகு இரா. நெடுஞ்செழியன்** M. A. |
| | | மலர் வெளியீடு : | எம் பக்தவத்சலம், பி.ஏ., பி.எல். |
| | | சொற்பொழிவு : | ம. பொ. சிவஞானம்<br>சுத்தானந்த பாரதியார்<br>கா. அப்பாத்துரையார்<br>அ. மு. பரமசிவானந்தம் |

## 'பட்டத்தமிழ்' வெளியீட்டு விழா

தலைவர் : நீதிபதி மா. அனந்தநாராயணன்

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 22-3-69 | இராசாசி மண்டபம் சென்னை | நூல் வெளியீடு : | மாண்புமிகு செ. மாதவன் |
| | | சொற்பொழிவு : | டாக்டர் மு. வரதராசனர் |
| | | | மாண்புமிகு மு. கருணாநிதி |

## மறைமலையடிகளார் 18ஆம் நினைவு விழா

தலைவர் : மாண்புமிகு செ. மாதவன் B.Com., B.L.,

| நாள் | இடம் | |
|---|---|---|
| 25-8-69 | மறைமலையடிகள் கலைமன்றம், பல்லாவரம் | தவத்திரு குன்றக்குடி அடிகளார் |
| | | ஆர். சனார்த்தனம் நாயுடு B.A,D.E.,FL.A. |
| | | மாண்புமிகு என். வி. நடராசன் (அமைச்சர்) |

## டாக்டர் தணிகைமணி திருமுறைப் பரிசளிப்பு விழா

தலைவர் : ஞானப்பிரகாச அடிகள்

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 21,22-11-69 | மாவட்ட மத்திய நூலகம், சென்னை | நூல் வெளியீடு: | கே. எஸ். நரசிம்மன் I.A.S. |
| | | பரிசளிப்பு : | மாண்புமிகு கே வி சுப்பையா B.A. |
| | | சொற்பொழிவு : | சொ. சிங்காரவேலன் M.A , |

## 'தமிழ்ப் பேரொளி' வெளியீட்டு விழாவும் 'பழந்தமிழ் இலக்கிய இலக்கண நூற்றொகுதிப் பேழை' அறிமுக விழாவும்

தலைவர் : க. அன்பழகன் M.A.,M.P.

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 8-2-70 | கோகலே மண்டபம், சென்னை | நூல் வெளியீடு : | மாண்புமிகு இரா. நெடுஞ்செழியன் M.A. |
| | | பேழை அறிமுகம் : | சை. வே. சிட்டிபாபு M A., L.T. |
| | | சொற்பொழிவு : | அ. கா. அ. அப்துல்சமது |
| | | | நா. பாண்டுரங்கம் M.A. |
| 15-2-70 | தருமபுர மடம், திருநெல்வேலி | தலைவர் : | ஆர். குப்புசாமி B.A., |
| | | சொற்பொழிவு : | பா. வளனரசு M.A. |
| | | | சுப்பிரமணியம் B.SC., B.L., M.L.A |
| | | | எம். ஏ. கே. பக்கீர் மைதீன் |
| | | | சி. சு. மணி |
| | | | பொ. முத்தரசு, M.A., B.T. |
| | | | சி. ஜெகன்னாதன், M.A. |
| | | | மானேந்தியப்ப பிள்ளை, B.A., L.T. |
| | | | மாயாண்டி பாரதி, M.A. |
| 17-2-70 | திருவள்ளுவர் கழகம் மதுரை | தலைவர் : | தமிழவேள் பி. டி. இராசன் |
| | | சொற்பொழிவு: | இராதா. தியாகராசன் அம்மையார் |
| | | | ஔவை சு. துரைசாமிப் பிள்ளை |
| | | | உ. பில்லப்பன் M.A., B.L. |
| | | | டாக்டர் லலிதா காமேசுவரன் |
| | | | ஏ. பி. முகமது சுல்தான் M A.B.L. |

| | | |
|---|---|---|
| 8-3-70 | திருச்செங்கோடு | தலைவர் : மாண்புமிகு மா. முத்துசாமி B.A., B.T., |
| | | சொற் பொழிவு கெ. கந்தப்பன் M.A.,M.P. |
| 9-3-70 | சேலம் | தலைவர் : டாக்டர் கா. மீனுட்சிசுந்தரனர் M.A., P.HD., |
| | | சொற் பொழிவு : முருகு சுந்தரம் M.A.<br>கா. செயராமன், M L.A.<br>சிலம்பொலி செல்லப்பன் M.A.B.T.<br>புலவர் மி. மு. சின்னுண்டார்<br>பரிபூரணம் கேசவன், M.A.<br>ஈ. ஆர். கிருஷ்ணன் M.L.A.<br>சி. பழனியப்பன் (நகரவைத் தலைவர்) |

டாக்டர் மு. வ. திருக்குறள் பரிசுச் சொற்பொழிவு
தலைவர் : சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம்

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 8,9-8-70 | மாவட்ட மத்திய நூலகம், சென்னை | நூல் வெளியீடு :<br>பரிசளிப்பு : | ஆணையர் கே. எஸ். நரசிம்மன் I.A.S.<br>நீதிபதி பு. ரா. கோகுலகிருட்டிணன்<br>தவத்திரு அழகரடிகள் |

மறைமலையடிகள் 19ஆம் நினைவு விழாவும், 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்' நூல் வெளியீட்டு விழாவும்

| நாள் | இடம் | | |
|---|---|---|---|
| 9-8-70 | மாவட்ட மத்திய நூலகம் சென்னை | தலைவர் :<br>நூல் வெளியீடு: | மாண்புமிகு இரா. நெடுஞ்செழியன் M.A. |
| | | சொற்பொழிவு : | டாக்டர் ந. சஞ்சீவி<br>காஞ்சி மணிமொழியார் |

# விழாக்களில் குறிக்கப்பெற்ற கழக வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| நான்காவது சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் | 6 | 50 |
| ஐந்தாவது சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் | 7 | 00 |
| ஆருவது சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள் | 7 | 50 |
| பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு | 7 | 50 |
| 1008-வது வெளியீட்டு விழா மலர் | 12 | 50 |
| பாராட்டு விழா நாற்பட்டி | 5 | 00 |
| சூளாமணி உரை (2 பகுதிகள்) | 24 | 00 |
| பெருங்கதை உரை (4 பகுதிகள்) | 28 | 00 |
| சட்டமன்ற நடைமுறை | (அச்சில்) | |
| திருவாசக விளக்கவுரை | 8 | 75 |
| தீங்கியல் சட்டம் | 8 | 75 |
| உலகப் பேரொளி | 8 | 75 |
| அண்ணல் நேருவின் அமுத மொழிகள் | 3 | 00 |
| நீலகேசி உரை | 12 | 00 |
| மழை வேண்டல் | 3 | 00 |
| குறள் கூறும் சட்டநெறி | 6 | 75 |
| சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம் | 8 | 75 |
| திருவாசக ஒளிநெறி | 10 | 00 |
| ஆட்சித்துறைத் தமிழ் | 5 | 00 |
| திருவள்ளுவர் விழா மலர் | 8 | 75 |
| சட்டத்தமிழ் | 4 | 50 |
| திருஞானசம்பந்தர்............ தேவாரத்திறுவும் | 6 | 00 |
| தமிழ்ப் பேரொளி | 6 | 75 |
| பழந்தமிழ் இலக்கண, இலக்கியப் பேழை | 390 | 00 |
| திருக்குறள் அறம் | 8 | |
| சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம் | 8 | |

# சென்னை, மறைமலையடிகள் நூல்நிலையத்திற்குப் பெருமக்கள் வருகை



தமிழக முதல்வர் மாண்புமிகு கலைஞர் மு. கருணாநிதி,
கல்வியமைச்சர் மாண்புமிகு நாவலர் இரா. நெடுஞ்செழியன்



சட்ட அமைச்சர் மாண்புமிகு செ. மாதவன்







அந்நாள் தலைமை நீதிபதி திரு. மா. அனந்தநாராயணன்,
நீதிபதி திரு. ஆர். சதாசிவம்



அந்நாள் தமிழக மேலவைத் தலைவர்
திரு எம். ஏ. மாணிக்கவேலு நாயக்கர்



திருமுருக கிருபானந்தவாரியார்



சென்னை அருள்தந்தை அருளப்பா



டாக்டர், தணிகைமணி
வ. சு. செங்கல்வராய பிள்ளை
திருமுறைப் பரிசுச்
சொற்பொழிவு
முதல் விழா

சொற்பொழிவாளர் :

திரு. சொ. சிங்காரவேலனுர்
எம். ஏ., டிப். லிங்.



திருமுறைப்
பரிசுத்தொகை வழங்குபவர்
அறநிலைய அமைச்சர்

மாண்புமிகு
கே. வி. சுப்பையா, பி. ஏ.



டாக்டர் மு. வரதராசனுர்
திருக்குறள் பரிசுச்
சொற்பொழிவு
முதல் விழா

தலைவர் :

சிலம்புச் செல்வர்
ம. பொ. சிவஞானம்,
எம். எல். ஏ.



திருக்குறள்
பரிசுச் சொற்பொழிவு
ஆற்றுபவர்
தவத்திரு அழகரடிகள்
8-8-1970



14-1-1968
கழக நூல்கட்குத்
தமிழக அரசு பாராட்டு
வழங்குபவர் :
மாண்புமிகு
இரா. நெடுஞ்செழியன்
பரிசு பெறுபவர் :
திரு. மா. சண்முகசுப்பிர
மணியம், பி.ஏ., பி.எல்.



பதிப்பகத்திற்குரிய
பாராட்டிதழ் பெறுபவர் :
கழக ஆட்சியாளர்
திரு. வ. சுப்பையா பிள்ளை



கழக 1008 ஆவது
வெளியீட்டு விழா
(இராசாசி மண்டபம்)
20-8-61

அந்நாள் தமிழக ஆளுநர்
திரு. விட்ணுராம் மேதி
தலைமையுரை நிகழ்த்துதல்

20-8-61

டாக்டர் மு. வரதராசனர்
மொழி மாநாட்டுத் தலைமையுரை
ஆற்றுதல்





அவ்
விழாவையொட்டி நடைபெற்ற
அரிய
நூற்காட்சியில் ஒரு பகுதி

(அரிய நூல்கள், கருத்து
விளக்கப்படங்கள் முதலியன)




திருவள்ளுவர்
திருநாள் விழா
(இராசேசுவரி
திருமண மண்டபம்)
14-10-68
தொடக்கவுரை :
தமிழக ஆளுநர்
மாண்பமை சர்தார் உச்சல் சிங்

திருவள்ளுவர் திருநாள் விழா
14-10-68
திருக்குறள் ஆங்கில ஆக்கம்
வெளியீடு :
திரு. சி. சுப்பிரமணியம்





திருவள்ளுவர் திருநாள் விழா
திருக்குறள் நூல்காட்சி
பார்வையிடுபவர் :
தாமரைத்திரு
நெ. து. சுந்தரவடிவேலு



திருநெல்வேலித் தென்னிந்திய
தமிழ்ச்சங்கக் கட்டிடத்
திறப்புவிழாவில்
கலந்து கொண்டோர்
11-2-66



திருநெல்வேலி
'திருவரங்க நிலைய'த் திறப்பு:
விழாவில் கலந்து கொண்டோர்
14-9-67



கட்டிடத் திறப்புவிழாக்
காட்சியைக் காண்பவர்
அந்நாள் திருநெல்வேலி
மாவட்டத் தலைவர்
திரு. எம். எம். இராசேந்திரன்
ஐ. ஏ. எஸ்.



பேராசிரியர்
கா. சுப்பிரமணிய பிள்ளை
தமிழ் ஆராய்ச்சி மன்றத்
தொடக்க விழா
(கோகலே மண்டபம்)
கடவுள் வாழ்த்து:
அவ்வை. தி. க. சண்முகம்,
எம்.எல்.சி.
31-7-67



கா. சு. பிள்ளை படத்திறப்பு:
செட்டி நாட்டரசர்
திரு.மு.அ.முத்தைய செட்டியார்



மன்றக் கொள்கைப்
பலகை திறப்பு:
கோவை வள்ளல்
திரு. நா. மகாலிங்கம்



'சட்டவியல்'
வெளியீட்டு விழா
7-2-62

வெளியிடுபவர் :
நீதிபதி மா. அனந்தநாராயணன்
ஐ. சி. எஸ்.

பெறுபவர் :
நீதிபதி ஆர். சதாசிவம்



'சூளாமணி'
வெளியீட்டு விழா
30-3-62

தலைமையுரை :
அமைச்சர்
திரு. எம். பக்தவத்சலம்
பி.ஏ., பி.எல்.



'எது இன்ப வாழ்வு'
வெளியீட்டு விழா
18-11-62

வரவேற்புரை :
கழக ஆட்சியாளர்
திரு. வ. சுப்பையா பிள்ளை



பெருங்கதை
வெளியீட்டு விழா
17-3-63

வெளியிடுபவர் :
அமைச்சர்
திரு. ஆர். வெங்கடராமன்

பெறுபவர் :
திருவாட்டி சௌந்தரா
கைலாசம்



'சட்டமன்ற நடைமுறை'
வெளியீட்டு விழா
17-3-63

வெளியீட்டுரை :
முதலமைச்சர்
திரு. எம். பக்தவத்சலம்



'திருவாசக விளக்கவுரை'
வெளியீட்டு விழா
21-1-64

வெளியிடுபவர் :
சட்டமன்றத் தலைவர்
திரு. சி. செல்லப்பாண்டியன்

பெறுபவர் :
திருமுருக. கிருபானந்த
வாரியார்



டம்'
வெளியீட்டு விழா
21-1-64

வெளியிடுபவர் :
முதலமைச்சர்
திரு. எம். பக்தவத்சலம்

பெறுபவர் :
மாநிலத் தலைமைக் குற்ற நடுவர்
திரு. எஸ். ஏ. அய்யாசாமி
செட்டியார்

'உலகப் பேரொளி'
வெளியீட்டு விழா
16-8-64

வெளியிடுபவர் :
அமைச்சர்
திரு. கோ. பூவராகன்

பெறுபவர் :
டாக்டர். அ. சிதம்பரநாதன்
செட்டியார்





காப்பிய நிறைவு விழா
25-12-64

தலைமையுரை :
உரைவேந்தர்
திரு. ஔவை. சு. துரைசாமிப்
பிள்ளை



'குறள் கூறும் சட்டநெறி'
வெளியீட்டு விழா
31-12-67

தலைமையுரை :
முதலமைச்சர்
திரு. எம். பக்தவத்சலம்

'சட்டத் தமிழ்'
வெளியீட்டு விழா
22-3-69

வெளியிடுபவர் :
தலைமை நீதிபதி
மாண்பமை கே. வீராசாமி

பெறுபவர் :
சட்ட அமைச்சர்
மாண்புமிகு செ. மாதவன்





'சங்க இலக்கியத்தில்
விலங்கின விளக்கம்'
வெளியீட்டு விழா
9-8-70

நூலாசிரியர்
திரு. பி. எல். சாமிக்குப்
பொன்னாடை போர்த்துபவர்
கல்வி அமைச்சர்
மாண்புமிகு
நாவலர் இரா. நெடுஞ்செழிய



திருச்செங்கோடு
8-3-70
அறிமுகம் செய்பவர் :
அந்நாள் அமைச்சர்
மாண்புமிகு மா. முத்துசாமி
பி. ஏ., பி. டி.
பேழையினைப் பெறுபவர் :
திரு. செ. கந்தப்பன்
*எம். ஏ., எம். பி.*



சேலம்
9-3-70
அறிமுக விழாவில்
கலந்துகொண்டோர்



காஞ்சிபுரம்
8-4-70
அறிமுகம் செய்பவர் :
மாண்பமை நீதிபதி
பு. ரா. கோகுலகிருட்டிணன்



'தமிழ்ப் பேரொளி'
பழந்தமிழ்
இலக்கிய இலக்கண
நூல்பேழை
அறிமுக விழாக்கள்

சென்னை
8-2-70

தலைமையுரை :
பேராசிரியர் கா. அன்பழகன்
எம்.ஏ., எம்.பி.

திருநெல்வேலி
15-2-70

அறிமுகம் செய்பவர் :
திரு. ஏ. எல். சுப்பிரமணியம்
பி. எஸ். ஸி, எம். எல். ஏ.
நூலைப் பெறுபவர் :
திரு. பொ. முத்தரசு
எம். ஏ., பி. டி.





மதுரை
17-2-70

அறிமுகம் செய்பவர் :
தமிழவேள் சர். பி. டி. ராசன்

பேழைகளைப் பெறுபவர்
செந்தமிழ்த் திருவாட்டி
இராதா தியாகராசன், எம். ஏ.

# கழகம் தந்த குறள்

கவியரசு திரு. கு. நடேசகவுண்டர் அவர்கள்
முன்னாள் முதல்வர், பேரூர் சாந்தலிங்க அடிகளார் கல்லூரி

## திருக்குறட் சிறப்பு

நேரிசை யாசிரியப்பா

அகர வுயிரா யறிவு மயமாய்க்
கூடி முயங்கப் பெறின்மெய் யின்பாய்
இருக்கு மிறைவன் இயல்பிற் ருகி
உள்ளத் திருத்தின் அள்ளூ றுவதாய்
உணருந் தொறுந்தொறும் ஓங்குயர் தகைத்தாய்
இலகுவ தொருநூ லெதுவென வினவின்
மாதானு பங்கி வள்ளுவப் பெருமான்
போதார் நாவாற் புகல்திருக் குறளே;—அதுவே
ஓரடி நீண்டுமற் றோரடி குறுகிக்
கருத்துட் கலந்து திருத்தக விருந்து
மங்கை பங்கன் மலரடி யிணைபோல்
இன்னிசை யீரடிப் பாவின் இயன்றதாம்;
ஞால மளந்த மாலின் மலரடிக்
கிணையா மென்ன மொழியவும் படுமே;
எச்சம யத்தரும் தத்தமக் குரிமை
கொண்டு போற்றக் குலவி
நின்ற மேம்படு நிலைத்தா கும்மே! 1

## கழகத்தின் பணி

கட்டளைக் கலித்துறை

நிலையான தொண்டு திருக்குற ளுக்கு நிகழ்த்தியவர்
பலராவர் ஞாலத் தெனினும் பரவு புகழ்க்கழகம்
உலவாது செய்த பணிகட் கிணையிலை உன்னிடுங்கால்
சலியாது மேன்மேலும் இன்னமும் செய்யும் தகையுடைத்தே! 2

## பதிப்புச் சிறப்பு

வெண்பா

வள்ளுவர் நூலே நூல் மன்னுபரி மேலழகர்
தெள்ளும் உரையே சிறந்தவுரை - உள்ளி
மதித்தறிஞர் போற்றிடவே மாண்பார் கழகம்
பதித்த பதிப்பே பதிப்பு.

## தெளிவுரை

தரவு கொச்சகம்

இலகுமியல் உணர்ந்தோர்க்கே இனியவமு தாமியல்பிற்
குலவுபரி மேலழகர் கூறுமுரை எல்லார்க்கும்
நலமளிக்க வேண்டுமென நாடியெவ ருங்கொள்ள
இலகுதமிழ்த் தெளிவுரையும் ஈந்ததுநற் கழகமே. 4

## திருநாள் விழா மலர்

ஆசிரிய விருத்தம்

நாற்பொருளும் முப்பாலால் நல்குதிரு வள்ளுவனார் நல்கு நூலின்
பாற்பொருளை யுலகறியப் பரப்புவதற் கெனத்திருநாள் பலகொண் டாடி
ஏற்புடைய கட்டுரைகள் எனுந்தாது நறுந்தேனாற் றெடுக்கு மாறு
தோற்றிமலர் வள்ளுவர்வி ழாமலருக் கிணையெமலர் சொல்லு வீரே! 5

## நாட்குறிப்பு

வெண்பா

வைகலு மொன்றேனும் வள்ளுவர் பாவோதி
உய்க மெனவுள்ளத் துன்னுதியேல் - செய்வகை கேள்
வாட்குறிக்குங் கண்ணாய்! வளர்கழகந் தந்தகுறள்
நாட்குறிப்பைக் கைக்கொள்க நன்கு. 6

## ஆங்கில மொழி பெயர்ப்பு

கட்டளைக் கலிப்பா

ஈங்கு செந்தமிழ் மக்களில் லந்தொறும்
இலங்கு வள்ளுவர் நூலிருந் தாலுமே
தூங்கு நெஞ்சிருள் நீங்கி யகலவே
துகளில் மாந்தர் குலங்கள் விளங்கவே
ஓங்கி யிவ்வுல கெங்கனு மேபரந்
துள்ள வாங்கில நன்மொழி யாற் பெயர்த்
தாங்கு மீங்கும் அறிவொளி வீசுமா
அளித்த தேநங் கழகம் அருளினல். 7

## வாழ்த்து

எண்சீர் ஆசிரிய விருத்தம்

திருவோங்கு நெல்வேலி நன்னகரிற் றேன்றிச்
சென்னையினில் யாண்டைம்ப தாகவளர்ந் தோங்கிச்
சுருணீங்கி மலர்மனத்துச் சுப்பையா பிள்ளை
துணையாக இணையில்லாத் திருத்தொண்டு செய்து
தெருளோங்கு சைவசித் தாந்தநூற் பதிப்புச்
செய்கழகம் செந்தமிழ்த்தாய்க் கணிபணிகள் சிலவோ
மருணீங்க நற்பணிகள் பலவின்னும் புரிந்தே
வாழிய வாழிய நன்கு வாழியபல் லாண்டே.

# நற்கலையின் வெள்விழா

திரு. பண்டித ஞா. தேவநேயன், எம்.ஏ, அவர்கள்
*மொழியியற் பேரறிஞர், காட்டுப்பாடி நகர்விரிவு*

வீட்டுரிமைக் காவணம் வேண்டும் வரலாறு
நாட்டுரிமைக் காகும் நவையின்றேல் - ஏட்டுரிமை
பெற்றூர் திருவரங்கம் பின்னிளவல் சுப்பையா
உற்றூர் வெளியிட வோர்ந்து. 1

சிவநெறிக் கொண்முடிபுஞ் செந்தமிழும் போற்றும்
உவமனிலா நூற்பதிப்பி லூன்றி - நிவந்தோங்கிப்
பொன்விழா பைந்தமிழ்ப் பொத்தகஞ் செய் நற்கலையின்
வெள்விழா வென்றே விளம்பு. 2

நாடும் மொழியும் நலஞ்செய்பல் வேறறிஞர்
பாடும் அரசும் பகிர்நூல்கள் - கேடின்றிச்
செந்தமிழ் ஆங்கிலஞ் சேரவிலை கொள்ளுமிடம்
அந்தமிழ் அப்பரச்ச கம். 3

ஆயிரத்தெண் ணூறாண்டின் முன்னைத் தமிழரெனும்
தேயமிக்க நூற்கறு நூறுருபா - சேயொருத்தர் 3

பெய்தார்வே றெங்கும் பெறலின் றெனமயங்கி
நொய்தாங் கழகவிலை நோக்கு.

பாட்டும் உரையும் பதவிதரு நற்சான்றும்
காட்டும் படங்கடிதங் கையெழுத்தும் - கூட்டிப்
புலவர் வரலாற்றைப் போற்றுங் கலையில்
வலவன்யார் சுப்பையாவல் லால். 5

வெண்டாளில் முத்துப்போல் வேண்டும் பலவடிவில்
பண்டார் தமிழ்நூல் பதிப்பித்தார் - கண்டாரின்
கண்ணைக் கவருங் கவின்கட் டடஞ்செய்தார்
எண்ணில் பிறர்வே றெவர். 6

சைவசித் தாந்தநூல் சார்பதிப்ப கம்வாழி
தெய்வத் தமிழ்ச்செந் திறம்வாழி - கைவந்த
ஆட்சிமே லாளன் அருந்திறலோன் சுப்பையா
மாட்சியின் வாழி மழை. 7

# கழகத் தமிழ்ப்பயிர்

திரு. ஔவை சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள்
*தமிழ்ப் பேராசிரியர், தியாகராசர் கல்லூரி, மதுரை.*

பொன்விழாக் கொண்டு புகழ்மிக் கியங்கும்
தென்னிந் தியசைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் மேலும்பன் மணிவிழாக் காண
வாழ்த்துவம் வம்மின் வண்டமிழ் வாணரீர் !
வேற்றவர் அரசும் வேற்றுமொழி மயக்கும்
புதிதுபடர் பண்பும் போக்கொடு புணர்ந்த
கலைபயில் நெறியும் கைகலந் தியங்குபு
எம்நாட் டியல்பிது எம்மொழி மாண்பிது
எம்கலைச் செல்வம் ஈதெனத் தெரிந்து
பேணுநர் அருகிய மாணுக் காலத்துக்
கல்விக்கு வேலிநல் திருநெல் வேலியெனக்
கால வரலாற்றின் கவின்நெறி கண்டோர்
சால நினைந்துளம் தழைத்துப் புகல
நெல்லையில் தோன்றினர் மல்லல் உள்ளத்து]
அரம்போற் கூரியர் ஆய்தமிழ் பரவுதிரு
அரங்க ரைவர் அரும்புகழ் மன்னுக ;
தமிழர் இயல்பும் தமிழ்நூல் நிலைமையும்
விரும்புநர் விருப்புமிகச் சிறப்புடன் அறிதர
நூல்வெளி யிடப்பெறும் நொய்மையும் காண்பவர்
பிழைவகை யின்றி அழகுற அமைத்தே
அச்சிடும் திறமையும் ஆற்றலும் அமைதியும்
நச்சிச் செயல்படும் நற்றமிழ்ச் செல்வர்
சிலர்காண் தமிழ்கூறும் உலகத்துள் இந்நாள்
எனநமைப் பழிப்பர் இதுதகாதெ ழுமின்
என்ற கருத்து நின்றுளத் தியக்க
பொன்விழாக் காணுமிந் நன்பெருங் கழகத்தைத்
திருநெல் வேலியில் செல்வர்சிலர் துணை செயத்
திருநெல் வேலித் தென்னிந் தியசைவ

சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் என்றுசீர்
வித்தக வாணிக நிலையமிது நிறுவினர்
அரம்போற் கூரியர் ஆய்தமிழ் பரவுதிரு
அரங்கனர் அவர்புகழ் மன்னுக நெடிதே !
தங்கடன் முடித்துத் தம்மிசை நிறுவி
முன்னோர்க் குரிய முதுபணி முடித்துத்
திருவ ரங்கனர் சிவனருட் சேவடி
சேர்ந்தன ராகச் செந்தமிழ்ப் பணிக்கு
முந்துறு தூணென முன்னி வளர்த்தெனச்
சிந்தை யுரமும் செயல்படு சீர்மையும்
நந்தா உள்ளமும் நன்னூற் புலமையும்
தமிழ்ப்பெருந் தெய்வப் பற்றெனும் இவற்றுள்
தமக்கிணை யாத இளவல் தகவே
ஒப்ப வுடையர் சுப்பையா எனத்தேர்ந்து
கழகத்து வளர்ச்சியை அவரிடத் தளிப்ப
ஆட்சி வேலியால் அன்பு நீரால்
கழகத் தமிழ்ப்பயிர் கால முறையில்
செவ்விதின் வளரச் சிறந்தனர் பரவுதிரு
அரங்கனர் இளவல் அரும்புகழ் மன்னுகம்
செப்பருந் திறமைச் செய்வினை யூக்கத்துச்
சுப்பையா அவர்களின் தூய நற்பணி
பாரத நாட்டின் பண்புகொள் அரசு
தாமரைச் செல்வரெனத் தகைமைசால் பட்டம்
தந்து சிறப்பிக்கும் சால்பு பெற்றதுவே.
அவரது ஆட்சியில் கழகம் வெளியிட்ட
ஆராய்ச்சி நூல்கள் அரியன அவைதாம்
திருமுறை சித்தாந்தச் செம்பொருள் நூலென
வருமுறை சங்க இலக்கியப் புலவரென

நிலவிய சான்ருேர் கால ஆராய்ச்சியும்
இடமும் கருத்தும் இன்னன பலவும்
ஆய்தருபு தந்த ஆராய்ச்சி வகையும்
கல்லிலும் செம்பிலும் கவின்கொளப் பொறித்த
ஏட்டிற் கண்ட எழுத்தியல் வகையும்
சான்ருேர் வியப்புறத் தக்கோர் விழைதர
ஏந்துமா ராய்ச்சி நூல் எவ்வெவ் வகையும்
ஆதலின் தமிழ்க்கென அமைந்த நெல்வேலித்
தென்னிந் தியசைவ சித்தாந்த நூல்களின்
பதிப்புக் கழகத்தின் பண்புளி நிகழும்
பொன்விழா நன்கனம் நிறைந்து
மன்புகழ் மாண்பெலாம் மருவி வாழியே.

# அமிழ்தென வாழ்க

திரு. புலவர் அரசு அவர்கள்
*ஓய்வுபெற்ற கலைக் களஞ்சியத் துணை ஆசிரியர், இராமவர்மாபுரம், நாகர்கோவில்.*

நேரிசை ஆசிரியப்பா

வான்மழை பொழிக வளமெலாம் பெருகுக
தேன்மழை பொழியுஞ் செந்தமிழ் செழிக்க
அம்பல வாணர் அருட்டுணை யதனல்
இம்பரிற் செந்தமி ழியல்நெறி வளரவும்
உய்வகை யருளுஞ் சைவநன் னெறியின்
ஒளிவளர்ந் துலகெலாம் அளிநிலை பெறவும்
நற்பணி புரிந்து நலம்பல வளர்க்கும்
பொற்பியல் சைவசித் தாந்தநூற் பதிப்புக்
கழகத் தமிழின் அழகிலே வளர்ந்து
பொன்விழாப் பேறுகொள் நன்மையெய் தியதால்
தனித்தமி ழொளியியல் இனித்தநன் மலையாம்
மறைமலை யடிகளார் துறைபெறு நூல்களும்
தொல்காப் பியமும் பல்காப் பியங்களாம்
புலத்துறைக் கினிய இலக்கிய நூல்களும்
வரலாற்று நூல்களும் பிறமொழியாளர்
பரவுறக் கலைபல விரவிய நூல்களும்
சமய நூல்களும் சட்ட நூல்களும்
அமர ஆராய்ச்சி யணிதரு நூல்களும்
குழந்தை நூல்களும் வழங்குறு துறைபல
கெழுமிய நூல்களும் விழுமிதின் ஓங்க
அணிபெற வெளியிடும் பணியினிற் சிறந்து
மருவுநன் மாண்புறுந் திருவரங் கப்பெயர்
மெய்ப்புக ழண்ணலுஞ் சுப்பையாவெனுஞ்
சிந்தைக் கினிய செந்தமிழ்ச் செல்வருந்
தளரா முயற்சியால் வளவிய உழைப்பால்
அழகுற வளர்த்த கழகப் பணிகளை
எத்துறை நோக்கினுஞ் சித்தம் இனிக்குமே
நூல்வெளி யீட்டின் சால்புடன் மேலுஞ்
செந்தமிழ்ச் செல்வியாந் திங்க ளிதழைச்
சிந்தைக் கினிய பொருள்பல செறிய
நன்று நடாத்தும் வென்றியும் உளதால்
புலத்துறை யிலக்கிய மாநா டுகள்பல
நலத்துடன் இயற்றி நற்புகழ் பெற்றது
நூனிலை யம்பல மேனிலை யுடனே
ஆங்காங் கியங்கும் பாங்கும் பெற்றது
புலவர் பலரை வலமுற ஊக்கி
நலமுறுஞ் சைவசித் தாந்தநூற் பதிப்புக்
கழகம் நற்பணி அழகுற வியற்றிப்
பல்லாண்டு பல்லாண்டு வாழிய
எல்லாம் வல்ல இறையருளாலே.

நேரிசை வெண்பா

அழகுறு சைவசித் தாந்தநூற் பதிப்புக்
கழகம் பணியில் கண்டு - பழகுந்
தமிழை வளர்த்துநற் சைவந் தழைக்க
அமிழ்தென வாழ்க அணிந்து.

# கழகஞ்செய் தனிச் சிறப்பு

**தவத்திரு சுந்தர சுவாமிகள் அவர்கள்**
*ஆதீனகர்த்தர், கௌமார மடாலயம், சிரவணபுரம், கோயம்புத்தூர் மாவட்டம்*

கட்டளைக் கலித்துறை

சைவசித் தாந்தத் தமிழ்நூற் பதிப்புத் தனிக்கழகம்
கைவைத்த நெல்லிக் கனிபோல மக்கள்கொள் கண்ணியமாய்
உய்வைத் தருமா றுயர்பதிப் பாக்கி உதவுபுகழ்
வையத் தினிற்சொலும் பொன்விழா மாண்புற மன்னுகவே 1

திருவரங் கப்பெயர்ச் சீரியன் தோற்றுவித் திட்டவதை
மருவவர் பிற்றேன்ற லாஞ்சுப்பை யாபிள்ளை மாண்புபெறத்
தருவள மாவளர்த் துச்சம யத்தொடு தண்டமிழும்
திருவரு ளின்துணை கொண்டாட்சி செய்யும் திறம்பெரிதே 2

சம்பந்தர் அப்பர் மணிவா சகர்சுந் தரரருட்பா
வெம்பந்த மாற்றுயர் சைவசித் தாந்தநற் சாத்திரங்கள்
அம்பந்த நீள்விழி தோயுமை கேள்வன் அடியவர் சீர்
செம்பண்பு தோயப் பதித்தகழகச் செயலுயர்வே. 3

திருமுறை பன்னிரண் டின்தொகுப் புஞ்செய் தெளிவமையும்
மருவுமொ ராயிரத் தெட்டாய் வயங்கி வரப்பதித்திட்
டருமறை யாம்திரு மந்திரம் வாசக மாமதற்குத்
தருதெளி வாமுரை யுங்கழ கஞ்செய் தனிச்சிறப்பே. 4

மெய்கண்ட சாத்திர மோர்பதி ஞன்குடன் வீறுபெறப்
பொய்கண்ட வாழ்வினர் தேருச் சிவஞான போதநன் னூல்
கைவந்த சித்திச் சுபக்கம் பரபக்கம் கண்கவரச்
செய்வன் பதிப்புக் கழகத்தின் மேன்மை தெரிவிக்குமே. 5

தணிகைப் புராணம் ஆற்றுப் படையும் தலச்சிறப்பும்
அணிதுன் றிடுபதிற் றுப்பத்தந் தாதியும் ஆதியநற்
பணிதமி ழுக்கும் சமயத் தினுக்குமாம் பான்மையெலாம்
விணிலுற் றிடுமழு துண்போரும் வேட்கும் வியப்பினதே. 6



ஓதுதே வாரம் திருவா சகத்தின் ஒளிநெறிநூல்
தீது தவிரும் தணிகை மணிசெய் திருப்பணியை
மாதுபங் கன்தொண்டர் கொளவச் சிட்டு வழங்கியது
மீதுயர் சைவசித் தாந்தக் கழகத்தின் மேன்மையதே. 7

சைவத் திருமுறை பன்னிரண் டான தகையதுபோல்
கைவைத்த வேல்முரு கோன்மீதில் அப்பேர் கவின்முறையில்
மெய்வற் றிடாத திருப்புகழ் சேர்த்து விளங்கும்வணம்
செய்நற் பதிப்புக் கழகத்தி லுற்ற திருப்பணியே. 8

அந்தாதி பிள்ளைத் தமிழ்பல் சதகம் அவிர்தூதுடன்
நந்தாப் புகழ்தோய் கலம்பகம் இன்பம் நணுகுமுலா
செந்தா துகுசுவைத் தேன்போல அன்பர் திருத்தியுறத்
தந்தார்வம் நல்கும் சமயத்துக் கான தமிழ்ப்பணியே. 9

கந்த புராணம் திருவிளை யாடல்கள் பன்கவிச் சீர்
வந்தரா மாயணம் பாரதம் ஆதிய வண்பெருநூல்
சிந்தனைக் கின்பம் திகழப் பதித்துச் செயும்கட்டிடம்
எந்தக் கழகமும் செய்திலதென்ன இயம்புதுமே. 10

# பல்லாண்டு பொலிக

**திரு. டாக்டர், தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை அவர்கள்**
*ஓய்வுபெற்ற மாவட்டப் பதிவாளரின் தனி அலுவர், சென்னை.*

புற்புதம் போலழி யாதுநற் பொன்விழாப் பூண்டிலகும்
பொற்பம ரிச்சைவ சித்தாந்த நூற்பதிப் புக்கழகம்
கற்பகம் நேர்தணி காசலர் தண்ணருட் காப்பதனல்
நற்பெய ரோடுபல் லாண்டு பொலிகவிந் நானிலத்தே.

# வாழ்க்கைத் துணை

**பாலகவி திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்**

*தருமபுர ஆதீன வித்துவான் திருவண்ணுமலை ஆதீன விரிவுரையரசு தேவகோட்டை.*

சைவம் சிவத்துடனே சம்பந்த மாவதனுற்
சைவம் சிறந்ததெனச் சாற்றினுர் - கைவந்த
மெய்யுணர்வாற் பேரறிவு மேவினேர் யாமுலகில்
உய்யும் வகைதெரிக்க வோர்ந்து. 1

வேதா கமமாதி மெய்ந்நூல்கள் சைவநெறிக்
காதார மாகி யனைவரையும் - நாதாந்தத்
தப்பாற் பரம னடியிணையிற் சேர்வித்தல்
இப்பாரில் உண்மையா மே. 2

என்றும் மலச்சேர்க்கை இல்லாத வாலறிவன்
அன்றே மலஞ்சேர்ந்த ஆன்மாக்கள் - வென்றேறத்
தந்த அருள்நூல்கள் சார்வழி யேபுடையாய்ச்
சொந்தநிதி வாழ்க்கைத் துணை. 3

இம்மைக்கும் பின்னர் இயலும் மறுமைக்கும்
அம்மைக்கும் உய்தி அளிக்கின்ற - செம்மைச்
சிவசமய நூல்தேடிச் செம்மை யுறவச்சிட்
டவமகற்றல் மெய்த்தவமா மால். 4

செய்தக்க ஓர்ந்து செயல்புரியும் பேராண்மைச்
செய்தக்கோன் நெல்லைத் திருவரங்கம் - துய்தக்க
நன்னூல் களைத்தேர்ந்து நாடியெழு தாவெழுத்தால்
பன்னூ லாச் செய்யப் பரிந்து. 5

தென்னிந் தியசைவ சித்தாந்த நூற்பதிப்பு
நன்னர்க் கழகம் நயந்துகண்டான் - அன்னதுதான்
பூதலத்தோர் பாராட்டப் பொன்விழாக் கொள்ளுவதை
ஓதி மகிழ்வோம் உவந்து. 6

நெல்லைத் திருவரங்க நேயன் மனம்போல
நல்ல முறையில் நனிவளர்ந்து - பல்கலை நூல்
ஈந்து வருங்கழகம் ஏற்ற முறநிலையான்
ஆந்துணைவன் சுப்பையா அச்சு. 7

வேத சிவாகமத்தின் மெய்ப்பொருளை யாமறிய
ஓதும் தமிழில் உளங்குளிர்ந்தே - போதமிகும்
ஆளுடைய பிள்ளையார் ஆதி அருளாளர்
மூளுங் கருணையினுல் முன். 8

ஓதுதற்குத் தோத்திரமாய் உன்னுதற்குச் சாத்திரமாய்
மேதகையோர் தந்தவந்த மெய்ச்சமயப் - போதநன்னூல்
தம்மை அழகுமிகத் தந்த கழகத்தின்
செம்மைப் பணிக்கிணையே தே. 9

நல்லதாள் நல்லச்சு நல்ல புறவமைப்பாச்
சொல்லுகின்ற கட்டிடத் தோற்றமிவை - எல்லையிலா
நூலகங்க ளிங்கிருந்தும் நூற்பதிப் புக்கழகம்
போலநூற் கேது புகல். 10

தென்னிந் தியசைவ சித்தாந்த நூற்பதிப்பு
மன்னுங் கழகம் வளமுடனே - பொன்விழாக்
கொண்டு வளர்ந்து குளிர்சமய நூல்களின்னும்
கண்டினிது வாழ்க களித்து. 11

# இசைப் பாடல்கள்

குடந்தை திரு ப. சுந்தரேசன் அவர்கள்

தென்னிந்திய உயர்தனிச் செவ்விசைப் புலவர், பண்ணாராய்ச்சி வித்தகர், கும்பகோணம்

(க)

பண் - காந்தாரம் (மோகனராகம்) தாளம் - ஒன்பதொத்து

முதனிலை

சேக்கிழார் குரிசில் செந்தமிழத் தொடை துணையே
சிந்தித் தறிவார்க்கு அதுவலால் இல்லை புணையே
(சேக்கிழார்)

இடைநிலை

பாக்கிழார் அவரே பயில்வார் வினை தாழ்வே
பரமனருட்சொல் பண்டுமின்றும் பெரு வாழ்வே
(சேக்கிழார்)

இறுதிநிலை

அண்டவாணரலா ஆய்வுரை யாவும் அகழ்ந்தார்
மீண்டு மனத்தவர் மிகையாம் பொய்யுரை இகழ்ந்தார்
கண்டுகொள் தெய்வக் கவிநலங்காட்டி மகிழ்ந்தார்
தொண்டர் சீர்பரவித் திருவாதிரை நாள்திகழ்ந்தார்

(முடுகு) தண்ணளியாம் அமுதாம் துதைந்து தேற்றும்
புண்ணியமாம் பொருளாம் பொதிந்து சாற்றும்
பண்ணையவான் பசுவும் பணிந்து போற்றும்
(சேக்கிழார்)

(உ)

பண் - மேற்செம்பாலை (கல்யாணி ராகம்) தாளம் - ஏழொத்து

முதனிலை

பொன்விழாக் கண்டு, கொண்டுகொண்டாடியதே!
பொற்புடைச் சைவசித்தாந்த நூற்
பதிப்புக் கழகந்தான் புகழ்மிகு
தென்னுடாம் பொன்னுடாம் இத்தமிழகத்திலே.
(பொன் விழா)

இடைநிலை

பன்விழாக் கொண்டு பண்டிருந்தேயுயர்தனிப்
பழந்தமிழ் நீர்மைபுவியோரறி
பெற்றிமை யாற்பெருமை பொலிந்திடச்
சொன்னுட்டம் பொருணுட்டமே செறிந்திலங்கவே.
(பொன் விழா)

இறுதிநிலை

முன்னுளிற் கற்பார்பலர் முறைமையால் தேடித்தேடி
முயன்ற பெரு முந்நூல்களுஞ் சிறந்திடவே,
பன்னுளும் பயில் வேண்டித் தொல்காப்பிய முதற்
பல்வேறு வேருய் தொன்னூல்களுஞ் சிறந்திடவே,
நன்னுளிற் புலவோர்கைத் திகழ்ந்திடுதல் நல்லனவாம்
நலஞ்சிறக்கப் பன்னூல்களுஞ் சிறந்திடவே,
இந்நாளில் எங்ஙனுமே எளிதிற் கொள்ள எழிலுருவில்
ஏற்றமிகு நன்னூல்களுஞ் சிறந்திடவே,

(முடுகு) தண்ணர் தமிழ் நலமே,
பண்ணையவான் பசுவும்
உண்ணுடியுணருமே, (பொன் விழா)

# ஐம்பதுகண்ட அருங்கழகம்

குருகுலக்கவிஞர் திரு. சி. து. கன்னிசாமி அவர்கள்

கண்டரச்சேரி.

கட்டளைக் கலித்துறை

நெல்லைச் சிவபுரி நேர்படத் தோன்றியெம் நெஞ்சுவப்பக்
கல்விச் செழும்பணி காசினிக் கீந்திடும் காமருசீர்ச்
செல்வக் கழகத்தின் சீர்த்திகள் செந்தமிழ்த் தேன்மலியும்
நல்லிசைப் பாக்களில் நாட்டுவம் வம்மின் நலம்பெறவே. ௧

அந்நாள் அரங்கர்தம் அன்பினில் தோன்றி அலர்கதிர்போல்
தென்னு டுயர்ந்திடும் சைவசித் தாந்தச் செழுங்கழகம்
பன்னூறு பாவலர் நாவலர் தோற்றிப் பசுந்தமிழ்தான்
முன்னேற நாளும் முயன்றிடு மாட்சி மொழிகுதுமே. ௨

எத்துணை நூலகம் எத்துணை நூல்கள் இளமழலைச்
சித்தம் உருக்கிடும் செல்வக் குழவிகள் சேர்ந்துபயில்
புத்தெழிற் பள்ளிகள் எத்துணை எத்துணை பொற்கழகம்
இத்தரை கண்டதென் றெண்ணிடின் நெஞ்சம் இனித்திடுமே. ௩

எல்லாப் பொருளும் இதன்பால் உளவெண்ணின் மற்றிதன்பால்
இல்லாத தில்லையென் றெண்ணிட நூலகம் இன்றமிழர்
எல்லார் தமக்குமோர் எய்ப்பினில் வைப்பென இன்புதவி
நில்லா உலகினில் நின்று நிலாவிடு நீர்மையதே. ௪

நிறைமதி நாவலர் நெஞ்சத் தடமலர் நிற்கும்பிரான்
மறைமலை யாரருள் மல்கிடு முத்தமிழ் மற்றுளசீர்
உறைமதி யாருரை ஓங்கிய நூல்களும் தாங்கியுயர்
துறைமலி நூலகம் தோற்றிக் கழகம் சுடர்ந்ததுவே. ௫

திருவள் ளுவர்தமிழ்க் கல்லூரி கண்டு செழுந்தமிழும்
பொருவும் சிறப்பிற் புலமையும் சைவப் புகழ்ப்பயிரும்
மருவிச் செழித்திட மாநிலம் போற்ற வளர்த்ததுவும்
திருவந்த செய்கைக் கழகப் பணியெனச் செப்புவரே. ௬

நூலகம் பள்ளிகள் நுண்கலைக் கூடம் நுவன்றிடுசீர்
ஞாலம் புகழ நடத்திச் செலுமிந்த நற்கழகம்
ஏலும் திருவரு ளாலின்று பொன்விழ வெய்துசெயல்
மேலும் தமிழ்க்கொரு வெற்றியென் றேத்திடு மேதினியே. ௭

திருவரங் கர்விட்டுச் சென்றபின் அந்தச் செழும்பணிகள்
பொருவுதல் இல்லாப் பொறுப்புடன் தாங்கிப் புகழ்மலியப்
பெருமையிற் காத்திடும் சுப்பையா பிள்ளை பெரிதுழைத்தார்
திருமலி திட்டங்கள் தீட்டிக் கழகம் செழிப்புறவே. ௮

எண்ணுதல் செய்கை இயம்புதல் யாவும் இயன்றிடுசீர்க்
கண்ணெனும் இந்தக் கழகப் பணியாக் கருதியதன்
தண்ணருள் மாட்சியில் தாமும் உயர்ந்திடும் சால்புடையார்
மண்ணினிற் பிள்ளையின் மாட்சிமை என்றும் மலர்ந்திடுமே. ௯

ஐயன் அருளுடன் ஐம்பது கண்ட அருங்கழகம்
வையம் வளர்த்தருள் மாட்சியில் தானும் வளர்ந்திடுக!
செய்வன ஒன்றுபல் லாயிர மாகச் சிறப்புறுக!
தெய்வச் சிவநெறி செந்தமிழ் ஞாலம் செழித்திடவே. ௧௦

# வரலாற்று நூல் தொண்டு

**கவிஞர் திரு. ச. பாலசுந்தரம் அவர்கள்**
*பேராசிரியர் கரந்தைப் புலவர் கல்லூரி, தஞ்சாவூர்.*

எண்சீர் ஆசிரிய விருத்தம்

கண்ணென்ப கலையறிவை அதனை நல்கும்
கருவூலம் கலைமிளிரும் நூல்க ளென்ப
திண்ணங்கூர் நூல் சுவடி உருவில் தோன்றிச்
சிந்தனைக்கு விருந்தளிக்கும் அதனைத் தூய
வண்ணத்தோ டமைத்தளிப்பார் தம்மைக் கற்றோர்
வாழ்த்திப் பாராட்டியவர் தொண்டைப் போற்றி
எண்ணத்தில் வைப்பாரப் பணியைச் செவ்வே
இனிதியற்றி உலகெங்கும் தமிழ்ப ரப்பும். 1

கமழ்சைவ சித்தாந்த நூற்ப திப்புக்
கழகத்தார் திருப்பணிக்குக் கைம்மா றுண்டோ ?
தமிழ்நூல்கள் அத்துணையும் சால்போ டாய்ந்து
தக்கோரால் பதிப்பாக்கி அறிஞர் உண்ணும்
அமிழ்தாக வழங்கியிற்றைக் கைம்பான் ஆண்டை
அணுகுமிதன் வரலாற்றை எண்ணின் உள்ளம்
இமிழ்கடலாய்ப் பொங்கும்வாய் ஏத்தி சைக்கும்
இலக்கியம் தொல் இலக்கணம்பல் கலைநூல் மற்றும். 2

தத்துவநூல் தோத்திரநூல் பள்ளி நூல்கள்
சாத்திரநூல் எத்துறைகள் தோறும் செய்யும்
வித்தகத்தை உலகறியும் அவற்றிற் கெல்லாம்
வேந்தான வரலாற்று நூல்கள் தம்மைப்
புத்தகமா அளித்துள்ள புரட்சி நோக்கின்
புகழ்ந்துரைக்க மொழியேது? **பொன்வி ழாநல்**
**முத்துவிழா வாய்முற்றி நூற்றாண் டேற்று**
**முத்தமிழ்போல் பல்லூழி வாழ்க! ஈங்கே** 3

வரலாற்று நூற்பதிப்பின் சிறப்புப் பற்றி
வரலாற்று முறையாலே வரைந்து நோக்கின்
வரலாறு தெரியாதார் வளரார் வாழ்வில்
வளர்ந்தேறுர் வையத்தார் இடை நிமிர்ந்து

வரலாறு மேவார்தம் மாண்பு காணுர்
வழிமுறைக்கும் செயும்பணிக்கும் வாழ்வு நல்கார்
வரலாறே மதிப்பரிய செல்வம் என்பார்
வரலாறே கல்விகலைக் கெல்லாம் மூலம். 4

மலரின்றேல் தேனில்லை வானம் இன்றேல்
மழையில்லை தாயின்றேல் மக்கள் இல்லை
நிலமின்றேல் இருதிணையும் இல்லை ஆங்கே
நினைவூட்டும் வரலாறே றினத்திற் கின்றேல்
நலமில்லை நாகரிகப் பண்பா டில்லை
நானிலத்தே உரிமையில்லை குடிப்பி றப்பின்
வலமில்லை மக்களுக்குத் தொன்மை சான்ற
வரலாற்றுச் செல்வமொன்றே வாடாச் செல்வம் 5

ஒளிவளர்தொல் இலக்கியத்தால் ஓரி னத்தின்
உயிர்ப்புள்ள பண்பாட்டை உணர்வர் நாட்டின்
அளிவளர ஆண்டவர்தம் வரலாற் றாலே
அவ்வினத்தின் அரசியல்வீ றுண்மை தேர்வர்
களிவளரும் கவின்கலையின் வரலாற் றாலே
காதல்முறை உறவுணர்வைக் கணித்துக் காண்பர்
தெளிவுகமழ் சமயநெறி வரலாற் றாலே
சீர்த்திமிகு கல்வியறி வாண்மைப் பண்பை. 6

ஐயமற உணர்வர்மற் றறிஞர் சான்றோர்
அருள்ஞானச் செல்வரரும் புலவோர் வாழ்ந்த
மெய்யமைநல் வரலாற்றால் வெற்றி நல்கும்
விஞ்ஞானம் வணிகநிலை வீறு காண்பர்
உய்யுமொழி வரலாற்றால் அவ்வி னத்திற்
குரியஇடம் கண்டுவப்பர் அதனால் அன்றோ
வையத்துள் வரலாற்றை அறிஞர் போற்றி
வழங்குதலைக் காண்கின்றோம் அதனை ஓர்ந்தே. 7

அறிவுறுதொண் டாற்றிவரும் கழகம் பன்னூ
றரியவர லாறுகளை ஆய்ந்து தேர்ந்து
முறைதிகழப் பதிப்பித்துத் தமிழி னத்தின்
முதன்மையினை மூதறிவை மொய்ம்மை சால்பை
நிறைவுபெறக் காட்டிநமை நிமிரச் செய்து
நெடும்புகழால் வாழ்கிறது வாழி ஊழி!
செறிவுடைய தமிழகத்தின் தொன்மை யோடு
தீந்தமிழின் செம்மைநல மாண்பை எல்லாம். 8

சிந்துவெளி நாகரிகம் குமரிக் கண்டம்
சிறந்ததமி ழகம்நமது மொழிநா டாண்ட
விந்தைமிகு சேரர்வர லாறு சோழ
வேந்தர் குலோத் துங்கர்மகேந் திரவர் மன்பின்
முந்துபுகழ் நரசிம்ம வர்மன் மற்றை
முடியுடைப் பல் லவர்வரலாற் றரிய நூல்கள்
சிந்தைவளர் சிவசமய குரவர் நால்வர்
தெய்வவர லாற்றுடனே சைவச் சான்றோர். 9

பலர்வரலா றுய்வுடனே பசுந்த மிழ்ப்பாப்
பகராழ்வார் வழிக்குரவர் வரலா றெல்லாம்
நலம்வளர வெளியிட்டுச் சங்க கால
நாவலர் செம் பாவலர்தம் வரிசை முற்றும்
புலங்கமழ வழங்கிப்பின் பொலிவு பெற்ற
புலவர்வர லாற் றுடனே இக்கா லத்தே
வலமுறச்செந் தமிழ்வளர்த்த அறிஞர் சான்றோர்
வள்ளல்களின் வரலாறும் வழங்கித் தொன்மை. 10

அரசர்களின் வரலாறே யன்றி இந்நாள்
அரசியற்பே ரறிஞர்பெரு மக்கள் பற்றி
அரியவர லாறுகளும் அறிவி யற்பேர்
அறிஞர்வர லாறுகளும் அடுக்க டுக்காப்
பெருமைமிகத் தரும்கழகப் பணியை முற்றும்
பேசரிதாம் இதன்தொண்டு பெருகி வாழ்க!
புரிசடையோன் அருளாற்பொன் விழாக்காண் கின்ற
பொருவரிய கழகம்பல் லாண்டு வாழ்க! 11

# உத்தமர் சேக்கிழார்

**சங்கீத வித்துவான் இன்னிசை அரசு கீவளூர் திரு. மீனுட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள் சென்னை.**

ராகம்: மாயா மாளவ கௌளா     தாளம் ஆதி ஒருகளைச் சவுக்கம்

எடுப்பு

உலகெலாம் போற்றும் தெய்வப் பெரிய புராணம் செய்த
உத்தமன் சேக்கிழான் மலரடி தொழுவோம் நாம் (உல)

தொடுப்பு

பலவகை நூல்களும் பக்திக் கதைகளும்
பாரினில் இருந்தும் இதுபோல் பக்திக் கதைகளுண்டோ (உல)

முடிப்பு

நிலவுலகினில் சைவ நெறிதனைப் பரப்ப
நிர்மல மனதுடை நால்வர்கள் தோன்றினர்
பலவகை நாயன்மார்கள் தோன்றிய கதையைச் சொன்ன
பண்பமர் சேக்கிழான் பொன்னடி போற்றிவாழ்வோம் (உல)

முதன்முதல் பரப்பிய சிவஞான முனிவரும்
முற்றும் உணர்ந்த குமர குருபர அடிகளும்
தவஞான யோகியாம் சைவ சித்தாந்தக் கழகத்
தலைவர் தாமரைச்செல்வர் சுப்பையா பிள்ளை வாழ்க. (உல)

# கழக ஆற்றுப்படை

திரு. பெருஞ்சித்திரனுர் அவர்கள்
*ஆசிரியர், தென்மொழி, தமிழ்ச்சிட்டு, கடலூர்.*

பெண்ணியல் போவியம் எண்ணியாங் கெழுதி
வண்ணம் பதித்த வழவழப் புத்தாள்
மின்னும் முகப்பொடு மிளிர்ந்திட உள்ளுரை
புன்மைக் கருத்தொடு பொலிவுறும் பொத்தகக்
கடைதொறும் புகுந்து கடாவித் திரியும்
நடைமெலி மாணவ நல்லோய் கேளாய் !
புத்துல கம்புகு புதுமைக் காலத்து
நித்தலும் படித்திட நீவிரும் புவது
கலைநிறை முத்தமிழ்க் கழகநூ லாயினும்
நிலைபெற் றுயர்ந்த நெறிநூ லாயினும்
அறிவியல் தெரிக்கும் ஆய்வுநூ லென்னினும்
செறிவுறும் வாழ்வில் சிறக்குநூல் என்னினும்
பெருநூல் வாணிகப் பெயர்பெற் றோங்கிய
திருநெல் வேலிச் சைவசித் தாந்த
நூற்பதிப் பகத்து நுழைதல் நின்கடனே !
ஏற்புடை அதன்சிறப் பியம்பவும் அரிதே !
தீந்தமிழ் புரக்கத் திருவ ரங்கனுர்
ஈந்தநற் பயனால் எழுந்தவக் கழகம்
மறைமலை யடிகளார் மாண்பினில் வளர்ந்தே
அரைநூற் ருண்டாய் ஆற்றிய தொண்டோ
தமிழ்வர லாற்றினும் தமிழகச் சிறப்பினும்
அமிழாப் பெயர்கொண் டகங்கமழ் வதுவே !
சுப்பையா வெனுமோ ரொப்பிலா மாமணி
முப்பொழு துந்தமிழ் முன்னேற் றத்தினை
விழைந்து நாடி வியத்தகு துறைபல
நுழைந்து புதுப்புது நூற்களாய்ப் பதித்தலை
எண்ணிய நெஞ்சம் இறும்பூ தெய்தும் !
பண்ணிலும் பாவிலும் பராவிக் களித்திடும் !
நுண்ணிய வினைத்திறம் நூலறி வுறுதிறம்
திண்ணிய மனவுரந் தேங்கியோ னவனே !
தொன்மைப் பெரும்புகழ்த் தொல்காப் பியமுதல்
நன்னூல் நம்பி யகப்பொருள் புறப்பொருள்
இறையனுர் தண்டி காரிகை ஈருய்
மறையா விலக்கண மாண்புறு நூல்களும்
பழகு தண்டமிழ்ப் பயனெலாங் கொளுவும்
கழக இலக்கியக் கவின்பே ராக்கமும்
யாப்பொடும் உரையொடும் யாத்தநூல் பலவும்
காப்பியம் உரைநடை கதைச்சுருக் கங்களும்
அகர முதலிகள் நிகண்டுகள் தம்மொடு
பகுபடப் பதித்த திருக்குறள் வகைகளும்
தூதுலாக் கலம்பகம் கோவையந் தாதி
ஓதரும் பரணியொடு பள்ளுகுற வஞ்சி
வெண்பா சதகம் பிள்ளைத் தமிழெனும்
ஒண்பா விலக்கிய உயர்நூல் தொகுதியும்
மெய்யறி வோங்கி மிளிருநூல் பலவும்
செய்முறை அறிவியல் சமயத் திருமுறை
தொல்வர லாறுகள் தொன்மை ஆய்வுகள்
மல்குசீர்ப் புலவர் மாக்கதை வரிசை
அறிவியல் அறிஞர்கள் அரசியல் தலைவர்கள்
நெறிமுறைப் படுத்திய மெய்வர லாறுகள்
கட்டுரை வரிசை கவினுறு நாடகம்
மட்டிலா வின்பம் மல்கிசை நூல்கள்
ஆங்கிலப் பெயர்ப்புகள் அறிவியல் கதைகள்
ஓங்கிய சிறப்பின் உள்ளுணர் வெழுப்பும்
தீங்கறு பனுவல்கள் சிறுவர் பாடல்கள்
பழமொழித் தொகுப்பொடு பல்துறை நூல்களும்
அழகுறு வடிவொடும் ஆய்வொடும் சிறப்புற
மூலமும் பெயர்ப்பும் முறைப்பட நோக்கி
ஆழமும் அகற்சியும் அருமையும் புலப்பட
உளியிட் டெழுதிய உருவமை எழுத்தினில்

வெளியிட் டுதவிய விணத்திறம் பெரிதே !
பொருள்பெற லொன்றே குறிக்கோ ளாகி
இருள்நிறை நூல்பல எழுதுவித் தவற்றைத்
தப்புந் தவறுமாய்த் தாழ்மையும் கீழ்மையும்
எப்புடை நோக்கினும் இழிந்த நடையுமாய்
அச்சிட்டு விற்கு ம்அழிசினர் புலத்திடை
மெச்சும் படியமை மேலாண் மையின்கீழ்
நூலறி வோடு நுண்ணறி வெய்திய
சால்புறும் பல்துறை அறிஞரைச் சார்ந்தே
பன்னூன்கு நூற்றுப் பைந்தமிழ் நூல்கள்
இந்நாள் பதித்தவிவ் வியன்கழ கத்தை
நண்ணினை யாயின் நலம்பெறும்
எண்ணறு நூல்களை எய்துவை நீயே !

# முத்தமிழ் நூல் நற்கழகம்

பேராசிரியர் திரு க. பெருமாள், எம். ஏ. அவர்கள்

முதல்வர் அறிஞர் அண்ணு கலைக் கல்லூரி, செய்யாறு, வ. ஆ. மாவட்டம்.

சத்தியத்தின் வித்தனைய சைவத்திரு நூல்களையும்
சத்தகோத்தின் வித்தனைய சங்கத்தமிழ் நூல்களையும்
எத்திசையும் புகழ்மணக்க எழில்மணக்க வெளியிடுமோர்
சித்தர்திரு சுப்பையா சிறந்ததொண்டு வாழியவே. 1

உள்ளுணர்வால் நல்லறிவால் உலகனைத்தும் உயர்ந்தோங்க
வள்ளுவர்செய் திருக்குறளை வகைவகையாய் வெளியிட்டுத்
தெள்ளுதமிழ் மொழிவளர்க்கும் தெய்வமெனத் திகழ்ந்தோங்கும்
வள்ளல்திருச் சுப்பையா வண்புகழ்சீர் வாழியவே. 2

தன்னிகரே அறியாத தமிழ்மொழியில் அமிழ்தனைய
பன்னூல்கள் வெளியிட்டுப் பல்லாண்டு தொண்டாற்றும்
தென்னுட்டுத் தனிச்சைவ சித்தாந்தக் கழகந்தன்
பொன்விழாக் கொண்டாடிப் பொலிவெய்தி வாழியவே 3

பல்லுயிரும் மகிழ்ந்துயரப் பகுத்தறிவை மிகத்தெளிவாய்ச்
சொல்லுங்கீழ் மேற்கணக்கும் சொற்பொழிவும் காப்பியமும்
நல்லதிரு முறைமறையும் நற்றமிழில் வெளியிட்டு
நல்லுலகை உருவாக்கும் நற்கழகம் வாழியவே. 4

புல்விதைபோல் நூல்கள்வரும் புத்துலகில் சத்தான
நெல்விதைபோல் நூல்கள்வர நேர்ந்துழைத்த நற்கழகம்
சொல்லரிய புகழெய்தித் தொல்லுலகம் உள்ளளவும்
நல்லபல தொண்டாற்றி நலமுற்று வாழியவே. 5

வானத்தின் ஒளிவிளக்காய் வந்திலங்கும் செங்கதிர்போல்
ஞானத்தின் பெருவாழும் நறுந்தமிழில் அரும்புலவர்
மோனத்தின் முளைத்தெழுந்த முத்தமிழ்நூல் நற்கழகத்
தானத்தின் வெளிவந்த் தகவுரைத்து வாழ்த்துதுமே. 6

# பைந்தமிழ்க்கே தாய்க்கழகம்

வித்துவான் திரு. கோ. வே. பெருமாள், *எம். ஏ. பி. டி.,* அவர்கள்
*தமிழ் விரிவுரையாளர், ம. தி. தா. இந்துக்கல்லூரி, திருநெல்வேலி*

நேரிசை வெண்பா

ஆயிரத்துத் தொள்ளா யிரத்திருபஃ தாமாண்டே
பாயிரமாய்த் தாய்க்கழகம் பைந்தமிழ்க்கே - ஞாயிறென
நீங்கவிருள் பேரொளியாய் நெல்லையிலே சென்னையிலே
பாங்குறவே தோன்றியதே பார். ௧

செந்தமிழும் சீர்சால் சிவநெறியும் சேர்ந்திலங்கத்
தொந்தமுறும் தென்கழகம் தோற்றுவித்தார் - செந்தமிழ்ச்
செல்வியிதழ் கண்டார் திருவரங்கர் தாமரைச்
செல்வர்வ சுப்பையா சேர்ந்து. ௨

அண்ணபின் தம்பிபணி ஆர்ந்திலங்கக் காண்கின்றோம்!
வண்ணவண்ண நூற்குவைகள் வாங்கிவாங்கி - எண்ணமுறக்
கற்பதற்கே தூண்டிநின்றார் கண்ணியத்தைக் காத்துநின்றார்
பொற்புறவே ஐம்பதாண்டு பூத்து. ௩

கண்கவரும் நூல்கள் கழகவெளி யீடேயாம்
பண்ணுரையே அன்றிதுமெய்ப் பாராட்டே - எண்ணிடிலோ
இந்தியரில் நூற்பதிப் பீடுபாட்டு வல்லுநரில்
முந்துபுகழ் உற்றார்யார் முன்? ௪

நெல்வேலித் தென்னிந் தியசைவ சித்தாந்தப்
பல்கலைசேர் நூற்பதிப்புப் பார்கழகம் - இல்லெனிலோ
தன்மானம் எங்குறுமோ? தாய்த்தமிழின் பாங்கென்னே?
பன்னூல்கள் என்னுமோ? பார். ௫

பொன்விழாப் பெற்றிடும் பூங்கழகம் செந்தமிழ்க்
கன்னிமகிழ் கல்விக் கருவூலம் - பன்னூறு
மக்கட்கும் ஆண்டுக்கும் மாவொளி வீசிடும்
மிக்கதுறள் தந்த விளக்கு. ௬

புதையல் எடுத்தவர் பூரிப்பர்! மண்ணில்
புதைபொருளை ஆய்வோர் புகழோர் - எதைப்புகல்வேன்?
தொல்காப் பியமுமதன் தோயுமுரை பற்பலவும்
பல்காலுந் துய்க்கின்றார் பார்! ௭

விருத்தம்

வறட்சி யுற்ற நிலத்தவரின்
  வாட்டம் போக்கும் மாமழைபோல்
உறழ்ச்சி யுற்ற அறிவார்வர்
  ஊன்றிக் கற்கும் உரைநூல்கள்
பிறழ்ச்சி யில்லா எண்ணரிய
  பீடார் இலக்கிய இலக்கண நூல்
புரட்சிப் பதிப்பாய்த் தந்துதவும்
  புதுமைக் கழகம் பொன்னுமே. ௮

கலிவிருத்தம்

மதிப்புற்ற மலர்களிலே மல்லிகையே மகிழ்வூட்டும்
திதிப்புற்ற உணவினிலே தேன்பாகே தித்திக்கும்
கதிப்புற்ற பண்களிலே தமிழிசையே களிப்பூட்டும்
பதிப்புற்ற அச்சேட்டில் பான்மைமிகும் கழகமே ௯

பேழையைப் பார்க்கின்றோம் பெற்றியினை வியக்கின்றோம்
ஏழைமை தமிழ்க்கில்லை எனப்பகரும் இலக்கியங்கள்
தோழைமை தோற்றுவிப்பர் தொல்காப் பியர்முதலோர்
ஊழையே வென்றுநிற்கும் உழைப்பினையே நுகர்கின்றோம்! ௧௦

பத்துப்பாட் டெட்டுத்தொகை பதினெண்கீழ்க் கணக்குகள்
எத்திசையும் புகழ்மணக்க இருந்தமிழில் ஆங்கிலத்தில்
சித்தாந்தச் செல்வர்திரு சுப்பையா செய்பணிகள்
அத்தனையும் எம்மனோரால் அளந்துரைக்க இயலுவதோ? ௧௧

எல்லையிலாக் கலைநூல்கள் எழிற்றெண்டு வெளியீடே
நெல்லைமுதல் கோவைவரை நீள்சென்னைக் கிளைபெருகிக்
கல்விவளர் பணிபுரியும் கழகப்பொன் விழாவாழி
மல்குபுகழ் மாத்தமிழே மாநிலமே வாழியவே. ௧௨

# ஒப்பில்லாத தொண்டு

வித்துவான் திரு. பா. செ. லிங்கம் அவர்கள்

*துணை ஆசிரியர், 'தமிழரசு' செய்தி விளம்பரத் துறை, தமிழக அரசு*

தொல்காப் பியமுதலாத் தொன்னூல் இலக்கணமும்
பல்காப் பியமும் பதிப்பித்தே—ஒல்காத
செந்தமிழ்த் தொண்டு சிறப்புடனே செய்கழகம்
சந்ததமும் வாழ்க தழைத்து. 1

ஆயிரத்து நானூ றரியதமிழ் நூல்களெல்லாம்
பாயிரத்தி னோடு பதிப்பித்தே—தாயகத்தில்
தூய தமிழ்கமழத் தொண்டாற்றும் இக்கழகம்
நேயமுடன் வாழ்க நிலைத்து. 2

முத்தமிழ் நூல்கள் முறையாப் பதிப்பித்து
மத்தியநல் லாட்சி மதித்திடவே—இத்தரையில்
அச்சுச் சிறப்பில் அனைத்திந் தியப்பரிசை
மெச்சிடவே உற்றதிது வே. 3

அஞ்ஞானம் நீக்கும் அரியசைவ சித்தாந்த
மெய்ஞ்ஞான நூல்களெல்லாம் மேன்மையுற—இஞ்ஞாலம்
நன்னெறியில் செல்ல நமக்கீந்த இக்கழகம்
எந்நாளும் வாழ்க இனிது. 4

சங்க இலக்கியமும் சார்சிற் றிலக்கிய மும்
எங்கும் பரப்பவழி எண்ணியே—அங்கங்கே
மாநாடு கண்டிட்ட மாண்பார் கழகத்தை
நாம்நாவால் வாழ்த்துவமே நன்கு. 5

தேவ ருலகில் திருவரங்க னார்சென்று
நாவார நற்றமிழை நாட்டினர்—பூவுலகில்
சொல்லரிய தொண்டுதிரு சுப்பையா செய்கின்றார்
வல்லவராய் வாழ்க மகிழ்ந்து. 6

உலகப் பொதுமறையாய் ஓதுங் குறளை
அலகில் புலவருடன் ஆய்ந்தே—நிலவுலகில்
ஆங்கிலத்தி னோடிங் கழகாய்ப் பதிப்பித்தீர்
ஈங்கென்றும் வாழ்வீர் இனிது 7

மறையாத் தமிழ்மலையாய் மக்கள் மனத்தே
இறையாய் நிலவுகின்ற எங்கள்—மறைமலையின்
நூல்நிலையம் கண்டே நல்நூல்கள் தருங்கழகம்
சால்புடனே வாழ்க தழைத்து. 8

நெல்லைச் சிவஞான நேர்முனிவர் நூல்நிலையம்
நல்லதமிழ்க் கல்லூரி நாட்டியே—பல்லோர்க்கும்
ஒப்பிலாத் தொண்டால் உயர்ந்திருக்கும் இக்கழகம்
எப்போதும் வாழ்க இனிது. 9

தென்னிந் தியசைவ சித்தாந்த நூற்பதிப்பு
என்னும் தமிழ்க்கழகம் எந்நாளும்—மன்னுகின்ற
நெல்லைப் பொதியம்போல் நின்றிங்கே வாழியவே
எல்லையிலாப் பல்லாண் டினிது. 10

கல்லைக் கனியாக்கும் கண்கண்ட என்னிறைவன்
தில்லை நடராசன் திருவருளால்—எல்லையிலா
ஊழி பலவாய் ஓங்கியென்றும் இக்கழகம்
வாழியவே மேலும் வளர்ந்து. 11

# குழந்தை நூல்கள்

புலவர் திரு. தி. மு. சங்கரலிங்கம் அவர்கள்

*கௌமார மடாலயம், திருவாமாத்தூர்*

**கலிவெண்பா**

*சீரார் திருநெல்லை சேர்சைவ சித்தாந்தப்*
பேரார் கழகம் பெருமையுடன்—பாரார்
அறிந்து மிகப்போற்றி ஆதரிக்கு மாறு
சிறந்த திருவரங்கச் செம்மல்—திறந்துவைத்தார்
சென்னையிலும் அக்கழகம் சீர்த்தி பெறநாட்டி
அன்னையைப்போற் சுப்பையப்பேர் அண்ணலார்-நன்னலமாப்
பல்லாற் றினும்சிறக்கப் பண்புடனே ஆட்சிசெயும்
நல்லாரா யன்னூர் நணுகலால்—வல்லவவர்
சோதரனு வுற்ற தொடர்பினு லக்கழகம்
மேதகைய சீராய் விளங்குமால்—பூதலத்தில்
நூல்கள் பலவாக நுண்ணறிஞர் தங்களாற்
சால்பமையத் தற்காலச் சார்பறிந்து—மேல்விளங்கும்
ஊதியத்தை நாடாமல் ஊக்க முடனெவரும்
மேதினியி னிற்றமிழ்ச்சீர் மேன்மையுறக்—கோதில்
கழகம் செயும்பணியைக் கண்டறியார் யாரே?
அழகுப்பதிப் புகட்ட டச்சீர்—வழவழப்பாம்
காகிதத்தி னிற்பிழைகள் காணும லச்சிடல்நிர்
வாகியாம் சுப்பையனுர் மாண்பன்றே?—பாகினையாந்
தூய தமிழ்நடையிற் றேயுமெதை யும்புரிதல்
மேய வவர்பழக்கம் மேன்மையுமாம்—சேயதமிழ்க்
கல்வியிலே ஆர்வம் கருத்தூன்ற வேண்டியிளஞ்
செல்வர்களுக் கேற்ற சிறுகதைகள்—பல்விதத்தில்
உள்ளத்தை யீர்க்கும் உறுதியுடன் மேனாட்டார்
விள்ளவரும் நூற்கருத்தை மேற்கொண்டு—கள்ளத்தை
நீக்கும் அறிவியல்நூல் நீதிநூல் தீயறிவைப்
போக்கும் இலக்கியநூல் போற்பலவுண்—டாக்கிப்
பகுதிபல வாகப் பதித்துப் பிரித்தும்
தொகுதிபல வாகத் தொகுத்தும்—தகுதிபெறக்
கற்றுப் புதுவாழ்வு காணக் குழந்தையெலாம்
பெற்றுப் படித்துப் பெருமைகொள—உற்றநூல்
பூங்கா விருந்துசெல்வம் போற்றும் புதையலெனப்
பாங்காம் கதைத்தொகுதி பாலிக்கும்—நீங்காச்சீர்
மார்கோனி தந்ததொரு வானெலியை ராக்கெட்டைச்
சீர்தோய் நல் மின்சாரம் செய்பணியை—ஏர்பெறுநல்
விண்ணிலவைச் சுற்றிவரல் மேதினியி னுட்செல்லல்
உண்ணிலவும் ஆறுகடல் உப்புமலை—தண்ணிலவுள்
துன்னுகதை நல்லுயிர்கொள் தோய்காட்சிச் சாலைமுதல்
மன்னறிவின் நற்கதையின் மாண்புபல—அன்னவைகள்
கற்பனையில் லாமற் கவினிலக்கி யச்சான்றுய்ச்
சொற்பயனுல் நம்சிறுர் தோய்வுபெற—நற்பணிசெய்
வல்ல கழகத்தின் மாண்பு பலவாகும்
நல்லகுழந் தைப்பள்ளி நண்ணவே—புல்லுமால்
இன்ன விதங்குழந்தைக் கேற்றநூல் பள்ளிமுதல்
மன்னப் புரிசைவ மாண்கழக—நன்னலந்தேர்
மைய அரசும் மருவுதமிழ் நாட்டரசும்
செய்ய பரிசுபல சேரநல்கிற்—றையமிலை
ஆதலாற் சைவம் அரிய தமிழிவையிப்
பூதலத்தில் மேன்மை பொருந்தவே—காதலுடன்
நற்ற மறைச் செல்வர் நாடுணரும் சுப்பையனுர்
வற்றுப்பே ரின்ப வளமுடனே—கற்றுரும்
மற்றுரும் போற்ற வளர்கழகம் போற்றினுர்
முற்று மதிய முடிப்பரமன்—பொற்றுள்
பரவுதிருத் தொண்டரிசை பாடுபுரா ணத்தைத்
தரமமைய வேபதித்துச் சாரும்—வரமெனவே

பொன்விழா வைக்கழகம் பூணுமிந்த நாள்நினைவாய்
நன்முறையிற் றந்த நலத்தினர்—இன்கழக
ஆட்சியினர் உற்றசெய லாற்று மவரெல்லாம்
மாட்சியுற வாழ்க! மகிழ்ந்தெனவே —நீட்சியுறும்
வேலோன் அடித்துணையை வேண்டிப் பணிகின்றேன்
சாலோகை யாற்சந் ததம்.

# மணிவிழாப் பல பெருக

கவிஞர் திரு. எஸ். டி. சுந்தரம் அவர்கள்

*தமிழ்நாடு நாடக சங்கீத சங்க முன்னாள் செயலர்*

காலத்தால் மறையாத காவியங்கள் பலவீன்ற
கன்னித் தமிழருமை காணரிய ஏடெல்லாம்
ஏலத்தால் மறையாமல் என்றும் புதுமையுடன்
ஈடில்லா நூல்வடிவில் எழிலாய் வழங்குகிற
கோலத் திருப்பணியில் கொடியேற்றுங் கழகமதன்
குன்றாத வெற்றிக்குக் கூறுகிறோம் நல்வாழ்த்து
ஞாலத் தவநூல்கள் நாளுக்கு ஆயிரமாய்
நன்றே குவிக்கின்ற நற்பணியை வாழ்த்துகிறோம். 1

சோர்வில்லாச் சொல்லழகர் சுப்பையாப் பிள்ளையவர்
சுடர்கின்ற நுண்ணறிவைச் சொலற்கரிய செயலறிவை
ஆர்வத்தை அடக்கத்தை அழகான வெளியீட்டை
ஆறாத் தமிழ்க்காதல் அயராத ஆக்கத்தைக்
கூர்த்த மதியதனில் குன்றாத ஊக்கத்தைக்
குன்றத்தைச் சிலையாக்கும் குறையாத கலைநெஞ்சை
பார்த்த பெருஞ்செல்வர் பண்டிதர்கள் பலருடனும்
பழகுவதில் வெற்றிபெறும் பண்பாட்டை வாழ்த்துகிறோம். 2

பொன்னூற்றுச் சுரங்கமெனும் புகழூற்றுக் கழகமிதன்
பொன்விழாக் கொண்டாடிப் போற்றுகிற நன்னாளில்
நன்னூற் கழகமிதை நானிலத்தில் கண்டுநிலை
நாட்டிநலங் காட்டியவர் நம்சேதுப் பிள்ளையவர்
நன்னுமம் போற்றுகிறோம் நற்றிருவ ரங்கத்தார்
தென்மலையும் தேனருவி எனவாழ்ந்த இவ்விருவர்
மன்னுபுகழ் மறைமலையாம் **மாண்பான கழகமிதன்**
**மணிவிழாப் பலபெருக மனமார வாழ்த்துகிறோம்.** 3

# சங்கத்து முத்தமிழ்

*கணித சோதிட கலாநிதி, சித்திர கவிச் சரபம்*

**புலவர் திரு. ப. வெ. அப்துல் கபூர் சாஹிப் அவர்கள்**

*திருவையாறு*

*ரூபகதாளம்* 1 *இராகம்-நாட்டை*

எடுப்பு

சங்கத்து முத்தமிழ் நாட்டு வரலாறு
சாற்றிடக் கேட்டுணர்வீர் - மூன்று

தொடுப்பு

சங்கம் நடத்தித் தமிழை வளர்த்தது
தாரணி போற்றமூ வேந்தர்க ளாண்டது
இங்கிதக் குமரி சிந்து நதிவரை
இருபுறமுங் கடல் எல்லையைக் கொண்ட (சங்)

முடிப்பு

குறிஞ்சி மிளகு ஏலந்தேன் யானைமான்
கொம்பகில் சந்தனம் தேக்கு மயில்மந்தி
சிறந்த கப்பலில் ஏற்றித் தமிழர்கள்
திக்கெங்கும் வாணிபம் செய்து புகழ்பெற்ற (சங்)

தென்கடற் பிறந்த முத்துப்புவி மன்னர்
திருமுடி மீது திகழவே செய்ததும்
மன்னு திருக்குறள் செங்கதிர் போலவே
மாந்தர்கள் வாழ்வை வளம்பெற வைத்த (சங்)

வல்ல தமிழர்கள் சின்னங்கல் வெட்டிந்த
மாநில மெங்கும் மலிந்து கிடக்குது
நல்ல மொகஞ்சோ தராஹரப் பாஇன்று
நாடெல்லா மறிய நற்சாட்சி கூறுது (சங்)

ரோமர் கிரேக்கர் அராபியர் ஆரியர்
நுட்பக் கலைகாணு முன்பே தமிழர்கள்
வாம மிகுந்தமிழ் நூல்க ளியற்றியே
வான்புகழ் கொண்ட புலவர்கள் வாழ்ந்த (சங்)

சிற்பம் மருத்துவம் வானம் புவிநூல்
சித்தர்கள் செய்தர சாயனம் தத்துவம்
கற்ப காலம்வாழக் காயகற்பம் செய்தும்
ககன வழியேகும் பொறிகளைச் செய்த (சங்)

காதலும் வீரமும் கற்புடன் கல்வியும்
கைக்கொண்டு வாழ்ந்திட்ட நந்தமிழ் மக்கள்
வாதனை வந்தாலும் வீரப்போர் செய்தே
வாகையைச் சூடி யரசதைச் செய்த (சங்)

களப்பிரர் ஆரியர் வந்து கலந்தபின்
கணக்கி லடங்காத நூல்க ளழிந்தது
வளத்தமிழ் நாட்டிலே வல்லிருட் காலம்
வந்தது மூவேந்தர் ஆட்சியும் கெட்டது (சங்)

நீங்கா இருட்காலம் பற்பல நாட்டினர்
இங்குவந் தேதமிழ் தன்னைக் கெடுத்தனர்
ஆங்கிலம் வந்தபின் காந்தி மறைமலை
அண்ணு துரைவரை அரும்பாடு பட்டவர் (சங்)

பாடு பட்டதெல் லாம்வீண் போகவில்லை
பயனிலா இந்தியால் இன்னமுந் தொல்லை
நாடு வாழ்ந்திட நம்தமி ழோங்கிட
நற்பணி செய்தவர் பற்பல வித்தகர் (சங்)

செந்தமி ழன்னையின் கால்விலங் ககற்றிச்
சிங்கா சனத்திலே திருமுடி சூட
விந்தையாச் செய்த பெரியோரைப் போற்றியே
மேலுந் தமிழை வளர்ப்பது நம்கடன் (சங்)

# செந்தமிழ் செழித்துயர் நாடு

ஆதிதாளம் 2 இராகம் - தேசிகதோடி

எடுப்பு

செந்தமிழ் செழித்துயர் நாடு—நம்
தென்னகத் திருநாடு-இனிய-செந்தமிழ் செழித்துயர்நாடு

தொடுப்பு

முந்தி யுலகில் மாந்தர் பிறந்திட்ட நாடு
முதலிலே ஒலியெழுத் தாக்கிய நாடு
சிந்தை மகிழ்ந்திட வேமுச் சங்கம் வளர்த்த
தென்னவர் சேரசோழ ராண்ட நன்னாடு (செந்தமிழ்)

(சரண) ஓரடிக் கண்ணிகள்

தொல்காப் பியமுதற் பல்காப் பியங்களைத்
தொகுத்துக் கொடுத்த நாடு
ஒல்காப் புகழ்பெற்ற திருக்குற ளிரவி
ஒளி பரப்பிய நாடு (செந்தமிழ்)

பத்துப்பாட் டெட்டுத்தொகை பதினெட்டுக்
கீழ்க்கணக்கும் பாருக்களித்த நாடு
இத்தரை யோர்புகழ ஐம்பெருங் காப்பியத்தை
இயற்றிய ளித்தநாடு (செந்தமிழ்)

தோள்துளை கஞ்சம் நரம்பு மிடற்றில்வரும்
தொனிக்குப்பண் வகுத்திட்ட நாடு
பால்மொழி ஔவை முதற்காக்கை
பாடினிவரை பாவையர் பாடிய நாடு (செந்தமிழ்)

ஏழிசை பதினெட்டுக் கூத்தையும் படைத்தே
இன்பத்தைக் கண்ட நாடு
வாழவே உணவுடை வந்தவர்க் களித்த
வள்ளல்கள் வாழ்ந்த நாடு (செந்தமிழ்)

கண்ணகி யும்மணி மேகலை தோன்றியே
கற்பறம் கற்பித்த நன்னாடு
எண்ணெய்பூசியே சீவிப் போருக்குப் பாலகனை
ஏகென்று சொன்ன வீரநாடு (செந்தமிழ்)

என்கணவனை யன்றித் தெய்வந் தொழேனென்ற
ஏந்திழை பிறந்திட் டநாடு
அன்பு மகன்முதுகில் புண்பட்டிறந்தால் மார்பை
அறுத்தெறி வேனென்ற நாடு (செந்தமிழ்)

விண்ணுயர் இமயத்தில் விற்புலி
மீன்வரைந்தே வேந்தர்க ளாண்டநாடு
கண்ணகி சிலைக்குக்கல் கனக விசயர்தலை
கனக்கக் கொணர்ந்த நாடு-நம்நாடு
செந்தமிழ் செழித்துயர்நாடு

# பண்ணோடு சாற்றிடுவோம்

ரூபகதாளம் 3

எடுப்பு

தென்னிந் தியத்திரு நெல்வேலிச்சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
செய்தபணி தாமே—ஆதி சேடனுந்தன்னிரண்
டாயிர நாவினால் செப்பவரி தாமே

தொடுப்பு

முன்னே சங்கக் காலந் தன்னிற் புலவர்கள்
முக்கியமாய்ப் பாடி—வைத்த
கன்னித் தமிழ்நூல் கெட்டது போகக்
கைக்குக் கிடைத்த வெல்லாம்—பசும்
பொன்னெனப் போற்றியே அச்சினி லேற்றிப்
பூவுலகிற் களித்தார்—அதை
உன்னித் தமிழர்கள் சுப்பையாவை வாழ்த்தி
உள்ள மிகக் களித்தார்—அந்தப்

பூமலி தோள்நல் லவரைத் தாமரையின் செல்வமெனப்
பொற்பட்டம் தந்தனரே—அரசினர் அற்புத மென்றனரே
—தென்னிந்திய

முடிப்பு

ஆரியம் ஆங்கிலம் மற்றும் பன்மொழியில்
ஆக்கிய நூல்களெல்லாம்—இந்தப்
பாரினிலுள்ளவர் கற்றுத் தெளிந்தே
பயனுறச் செய்த வல்லார்—இவர்

மறைந்த மலையான இமயம் உயர்ந்துபின்
வானம ளாவியதே—அதுபோல்
மறைந்த மறைமலை செய்திட்ட நூல்கள்
வான்புகழ் பெற்றிடவே—அடிகள்

சிறந்த கலைஞானம் ஆய்ந்தவரெல்லாம்
செகப்புக ழுற்றிடவே—தெய்வ
அறந்திகழ் நெஞ்சத்தில் ஆய்ந்துபல் லாயிரம்
அச்சிட்ட நூல் களையே—தந்த

அண்ணலைப் போற்றிடுவோம்
வாழ்த்துப்—பண்ணொடு சாற்றிடுவோம்.
ஐம்பது வருடம் கழகம் செய்தபணி
அகில மறிந்ததுவே—இதை

அன்பர்கள் கூடிப் பொன்விழா நடத்தி
அணிபெறச் செய்வதிலே—இந்த
அம்புவி போற்றும் குன்றக் குடிதிரு
அடிகள் தலைமை யிலே—நல்ல

ஆதிச் சைவப்பொருள் ஆறிரு பேர்கள்
அளிப்பவர் தம்முடனே—மற்றும்
மூன்றுநாள் பற்பல மூதறிவாளர்கள்
முன்னின்று சொற்பொழிவே—நல்ல

முறையிற் பொழிகுவர் அன்னவ ரெல்லாம்
முக்கண்ணன் தன்னருளால்—அவர்கள்
மன்னும் வளம்பெற்று வாழ்கென
வாழ்த்தி மனது மகிழ்ந்திடுவோம் —தென்னிந்திய

1

# செந்தமிழ்ச் செல்வி

ஆதிதாளம் 4 இராகம் தேசிகதோடி

எடுப்பு

செந்தமிழ்ச் செல்வி—செந்தமிழ்ச் செல்வி

**தொடுப்பு**

சிந்தை மகிழவே நாற்பத்தைந் தாண்டு
செய்த பணிகளைச் சொல்லரி தீண்டு
ஐந்துபத் தாண்டுக் கழகப் பொன்விழா
அத்துடன் கலந்து சிறப்புப் பெற்றனள்
—செந்தமிழ்ச் செல்வி

முடிப்பு

முந்திய சங்கநூல் கற்றபு லவர்கள்
தந்த கவிகளும் கட்டுரை பலவும்
வந்து குவிந்திட அச்சினி லேற்றி
வையகத் தோர்கள் மகிழ்ந்திடச் செய்தனள்
—செந்தமிழ்ச் செல்வி

நெஞ்சிருள் நீங்கிடச் செங்கதிர் போலவே
நீதிச் சமய நூல் பற்பல சாலவே
வஞ்ச மின்றிமத பேதமொன் றின்றியே
மாந்தர்க ளொத்து வாழவே செய்தனள்
—செந்தமிழ்ச் செல்வி

தன்னல மொன்றுங் கருதாமல் மெய்யாய்ச்
சைவ முடலுயிர் தமிழ்ச் சுப்பையா
உன்னி யணிகலன் கற்றவர் தந்திட
உவந்த ளித்திட வளர்ந்து வந்தவள்
—செந்தமிழ்ச் செல்வி

பற்பல ஆயிரம் கட்டுரை கதைகள்
பாவலர் பாடிய பண்களனந்தம்
அற்புத மாகவே அச்சினி லேற்றி
அளித்துப் பெரியோர் வாழ்த்துரை பெற்றனள்
—செந்தமிழ்ச் செல்வி

# கலையிற் சிறந்த தமிழ்நாடு

ஆதிதாளம் — இராகம் காம்போதி — 5

**எடுப்பு**

கலையிற் சிறந்ததமிழ் நாடு-இந்தக்
காசினி புகழ்ந்திடக் கண்டவர் மகிழ்ந்திடக் (கலையிற்)

**தொடுப்பு**

மலையிலே பொன்வெள்ளி மரத்திலேவெண் கலத்திலே
மண்ணிலே செம்பிலே வகைவகை யாக நல்ல
சிலைசெய்து விளங்கிடச் செய்திட்ட தெய்வச்
சிற்பிக ளற்புதக் கற்பனை மேவிய
நற்புக ழைப்பெறு பற்பல ஓவியக் (கலையிற்)

**முடிப்பு**

சித்தன்ன வாசல் சுசீந்திரம் தஞ்சைநகர்
சீரங்கம் தாடிக்கொம்பு திருமகா பலிபுரம்
முத்தமிழ் மாமதுரை முதற்பல கோயிலிலே
மூர்த்தி யெனப்பல பூர்த்தி பெருஞ்சிலை
நேர்த்தி மிகுந்த கீர்த்தி நிறைந்த (கலையிற்)

பல்காப் பியங்களும் பத்துப்பாட் டெட்டுத்தொகை
பஞ்சவி லக்கணஞ்சேர் பன்னிரு பாட்டியலும்
தொல்காப் பியம்நன்னூல் தொன்னூல் காரிகையும்
சுத்தமனத்தவர் பத்தி மிகுத்தவர்
முத்தமிழ் வித்தகர் நித்தமி யற்றிடும் (கலையிற்)

குண நூல் பரதம் கூத்தநூல் சயந்தம்
குருகொடு முறுவல் வான நூல் சிற்பம்
கணிதநூல் புவிநூல் உளநூல் யாழ்நூல்
கற்பகமாவரும் விற்பனர் நாவினில்
உற்பவமாகிய பற்பலகாவியக் (கலையிற்)

# வாழ்த்தாரம்

புலவர் திரு, பெ. சுப்பையா அவர்கள்
*நகர்மன்ற உயர்நிலைப்பள்ளி, பேட்டை, திருநெல்வேலி*

1

பொன்விழாக் காணும் நல்ல
புகழ்சைவ சித்தாந் தப்பேர்
நன்மைசேர் கழகம் ஆற்றும்
நற்பணி யெல்லாம் கூறின்
மின்னவிர் வேலை ஏந்தும்
வேள்சங்கம் வீற்றி ருந்து
இன்றமிழ் காத்த தன்ன
இனியசுப் பையா காப்பார்.

தாமரைச் செல்வர் என்ற
தகவுடைப் பட்டம் பெற்றுத்
தூமறை இனிது ஓதித்
தூயவெண் ணீறு பூசிக்
காமனைக் கடிந்த அண்ணல்
கழலினை பராவி ஏத்தும்
பாமண சுப்பை யாவின்
பணியினைப் பகரற் பாற்றே!

பிழை யொன்றும் இல்லா தாகிப்
பிறங்கொளிக் கவினும் பூண்டு
கழையென இனிக்க நூல்கள்
கவினுறப் பதிப்பைச் செய்து
மழையினை யொப்ப நல்கும்
மாசைவ சித்தாந் தப்பேர்க்
கழகத்தார் செய்யும் தொண்டு
கவிதைக்குள் அடங்கா தம்மா!

# சமய நூற்பணிக்குப் பணிகின்றேன்

பேராசிரியர் திரு கா. ம. வேங்கடராமையா எம்.ஏ., அவர்கள்
முதல்வர், திருப்பனந்தாள் தமிழ்க்கல்லூரி

வண்ணக வொத்தாழிசைக் கலிப்பா

சமயங்கள் செந்தமிழாற் செறிந்துவளர் தமிழகத்தில்
அமைந்தசிவ சமயத்தி னரியசாத் திரங்களொடு
துதிசெய்தோத் திரம்பலவுந் துருவுமுறை தழைத்தோங்கப்
பதிப்பிக்கும் பணிபணியாப் பரிந்தேற்று விரைந்தாற்றும்
உயர்சைவ சித்தாந்தக் கழகமே! யுனையுணர்ந்து
செயல்புரிவேங் கடராமன் சிரந்தாழ்த்திப் பணிகின்றேன்

இஃது ஆறடித்தரவு

திருமுறைகள் பெருந்திரட்டும் திருக்கோயில் வழிவிளக்கம்
திருவாச கத்தேனுக் கருவிளக்கம் தெளிவுரைகள்
திருக்கோவை திருமூலர் திருப்பதிகத் திரட்டுரைகள்
அருமையுடன் பதிப்பித்தல் அதுவேநின் சிறப்பாமே!

தணிகைமணி யொளிநெறிகள் சிவஞான பாடியமேற்
றணியா நன் மகிழ்வளிக்கும் சிவஞானத் திருவுரைகள்
சிவஞான பரபக்கம் சுபக்கமெனும் பகுதியெலாம்
உவகையுடன் பதிப்பித்தல் அதுவேநின் உயர்வாமே!

திருவுந்தி திருக்களிறும் அருட்பயன்நல் வினவெண்பா
இருபாவோ டிருபதுமுன் மைசிவப் பிரகாசம்
உயர்போற்றிப் பஃறொடையும் ஒளிர்நெஞ்சு விடுதூதும்
நயமுடனே பதிப்பித்தல் அதுவேநின் நயப்பாமே!

இவை ஒருபொருள் மேல் மூன்றடுக்கிய நான்கடித்தாழிசைகள்

அழகுறு தமிழெழி லதுவுணர் வகைசெயு
மமைவுறு முனதரும் இதழ்!
பழகிடு மினிமையைப் பதமுணர் திறமுறப்
பகிர்வதிங் குனதிருப் பணி!

கருதரு மெழினல மெழுதரு வகைதனில்
கனிவுறு நலமதுன் கலை!
தெருளுற மருளறத் திருவுற வருளுறத்
தெளிவொடு திகழ்வதுன் நிலை!

இவை நான்கும் அராகம்

கொடிக்கவிசங் கருப்பநிரா கரணமதும் சிவஞானத்
துடிப்புணர உயர்சித்தி யாராய்வும் தொடுத்தனைகாண்!
அருண்முறையின் திரட்டுரையும் அகத்தியர்தே வாரமதும்
மரபுவழிப் பொருள்சொலற்கு மன்னருளால் வகுத்தனைகாண்!
இவையிரண்டும் இரண்டடிப் பேரெண் அம்போதரங்கம்.
திருத்தொண்டர் புராணத்தின் தெளிவுகளை நயந்தளித்தாய்!
கருத்தூன்ற மறைமலையார் கட்டுரைகள் கனிந்தளித்தாய்!
பிறசமயக் கவிகளையும் பெரிதுவந்து பதித்தளித்தாய்!
புறத்தெவையு மொதுக்காமை புதுப்புகழ்கள் புரிந்தளித்தாய்!

இவை நான்கும் அளவெண் அம்போதரங்கம்

சமயத்தின் துணைவ னுகுவை
சாத்திரத்தின் தொண்ட னுகுவை
தமிழ்க்கினிய செயல னுகுவை
தரமார்ந்த தலைவ னுகுவை
பலதுறைக்கும் பொதுவ னுகுவை
படித்துணர்வார்க் கணிய னுகுவை
நலவழியிற் சேர்ப்ப னுகுவை
நற்பதிப்புக் கரச னுகுவை

இவையெட்டும் இடையெண் அம்போதரங்கம்

நுண்ணுரை தந்தனை
நூல்களைத் தந்தனை
புத்துரை தந்தனை
புதுமையைத் தந்தனை

பண்ணயந் தந்தனை     பத்தியைத் தந்தனை
பசுந்தமிழ் தந்தனை     படிப்பினைத் தந்தனை
செல்வியைத் தந்தனை     பாவளந் தந்தனை
சிறப்புரை தந்தனை     பலவளந் தந்தனை
கல்வியைத் தந்தனை     நாவளந் தந்தனை
கருத்துரை தந்தனை     நலமெலாந் தந்தனை

*இவை பதினாறும் சிற்றெண் அம்போதரங்கம்*

என வாங்கு,

*இது தனிச்சொல்.*

கழகமே ! உன்னரிய கண்சமயத் தொண்டு
பழகுந் தமிழதனைப் பாடி—அழகுறவென்
செங்கை குவித்தேன் ! சிறப்புறவுன் தொண்டுநலம்
செங்கை பனசையுடன் சேர்ந்து.

*இது வெண்பாச் சுரிதகம்.*

# வெளிநாட்டிற் கொளியூட்ட வெளியிட்டார்

**கவிஞர் திரு. கோவை இளஞ்சேரன் அவர்கள்**

*நாகைத் தமிழ்ச் சங்கம், நாகை.*

## தரவு கோச்சகக் கலிப்பா

கழகமெனிற் கவருடுங் களமெனவே இருந்தமைபோய்க்
கழகமெனிற் கலைதெரியுங் குழுமமெனக் கனிந்திந்நாள்
கழகமெனிற் பதிப்பளவிற் கனிதமிழ் நூல் பலதுறையில்
அழகொளிர வழங்குநிறு வனமெனவே விளங்கியதே. க

இலையெழுத்துத் தடந்தாழை மடலெழுத்தாய்ப் பனையெழுத்தாய்ச்
சிலையெழுத்தாய் வளர்ந்தின்றே சிறந்தவச்சுச் செழுமெழுத்தே
தலையெழுத்தாய் அமைந்ததனைத் தகுமெழுத்தாய்த் தமிழெழுத்துக்
கலையெழுத்தாய்ப் பதிப்பித்தார் கழகத்தார் கவினுறவே. உ

திருக்குறள் நூல் முதலாகத் திரு.மு. க. வரையுள்ள
மருக்கொழுந்து தமிழர்க்கே மணந்திட்டால் நிறைவாமோ?
கருக்குள்ளே திருவுண்டு கலைத்தாயின் வயிற்றுள்ளே
இருக்கின்ற திருக்கட்டும் எனல்தாய்க்கும் இழுக்கன்றோ? ௩

நூற்பதிப்பிற் சிறந்தொளிருங் கழகத்தார் உலகமதன்
மேற்படியிற் தமிழர்சீர் மிடுக்குறவே உலகுபுகழ்க்
கேற்புடைய தமிழ்ப்பெருநூல் எழிலுடனுங் கிலமதனில்
நாற்பதுநூல் பதிப்பித்தே நலம்பதித்தார் நனிவாழ்க! ச

போப்பையர் மொழிபெயர்த்தார் பொதுமறைநா லடியெனவே
மாப்பெருமை கொடுநின்றேம் மருவிய நூ லவையிந்நாள்
காப்படையப் பிறமொழியார் களிப்படைய நூல்பழுக்குந்
தோப்பெனுநங் கழகத்தார் தொகுத்தளித்தார் துலங்குகவே! ரு

திறமான புலமையெனில் வெளிநாட்டா ரதைப்போற்றும்
முறைமான விரவிடுமாங் கிலமதனிற் றமிழ்கூறும்
அறவுரை நூல் அறிவுரை நூல் அருங்கலைநா கரிகமிவை
திறமாக வெளியிட்டுத் திகழ்வித்தார் கழகத்தார். சு

ஒளிகாட்டி வழிகாட்டுங் கொழிபாட்டோ டுரையேட்டின்
துளிகாட்டும் நிலையோட்டித் துளைகாட்டும் படிதேட்டக்
களிகூட்டுந் தமிழூட்டக் கவின்கூட்டுங் கழகத்தார்
வெளிநாட்டிற் கொளியூட்ட வெளியிட்டார் பழிவிட்டார். எ

உலகமெங்குந் தமிழ்க்கருத்தை உணர்வதற்கே பலநாட்டின்
பலகலைகொள் கழகத்தார் பரிவுறுங்கால் தமிழுடையார்
மலைமலையாய்த் தமிழுறு நூல் மலிவித்தல் கடனன்றோ?
தலையெடுத்தார் பணியிதனில் கழகத்தார் தழைத்திடுக! அ

பொன்விழவிற் கழகத்தார் பொலிகின்ருர் அவர்பணியைப்
பொன்னெழுத்திற் பொறித்திடுதல் பொலிதமிழர் கடனன்ருே?
என்னெழுத்தைப் பொலனெழுத்தாய் இணைத்திட்டேன் அவர்பதிக்கும்
பின்னெழுத்துந் தலையெழுத்தாய்ப் பிறங்கிடுக தமிழ்மொழிக்கே! கூ

மறைமலையார் வழிவளர்த்தார் மகிழ்மலையில் இசைநடுக!
துறைபலவுந் துலங்கிடுக! துணைநிற்போர் வளம்பெறுக!
முறைமுறையாய்த் தமிழ் வளர்த்தே முழுநினைவுந் தமிழேயாய்
நிறைதமிழ்போல் வனப்புறுக! நெடுவாழுள் நிலவிடுக! கO

# கழக ஆற்றுப்படை

## புலவர் திரு. தணிகை உலகநாதன் அவர்கள்

*துணைத்தலைவர், குழந்தை எழுத்தாளர் சங்கம், சென்னை.*

### தாயும் சேயும் உரையாடல்

*அகவற்பா*

சேய் : அன்னையே! என்றன் அருமைத் தெய்வமே!
இந்நாள் எனக்குப் பள்ளி விடுமுறை
இன்பமாய்க் கழிக்க என்னை அழைத்தே
வெளியில் செல்ல விரைவாய் தாயே!

தாய் : கண்ணே! மணியே! கட்டிக் கரும்பே!
பொன்னே! பூவே! புறப்படு நின்னைப்
புத்தகச் சோலையில் புகுந்து மகிழ்ந்திட
அழைத்துச் செல்வேன் அன்பே! வருக!

சேய் : புத்தகச் சோலையா? புரிய வில்லையே!
அப்படி யும்மோர் அழகிய சோலை
உளதோ தாயே? உரைப்பாய் அங்கே
தண்டேன் நறுமணம் சார்வது உண்டோ?

தாய் : உண்டு தமிழ்மணம் உணரும் செல்வமே!
வண்டாய் என்னுடன் வருக சென்னையில்
அறிவுத் தேனை அள்ளிப் பருகலாம்
பொலிவுறு பொன்விழா நடத்தும் பதிப்பகம்

சேய் : பதிப்புக் கழகப் பணியில் உயர்ந்தது
சைவசித் தாந்தநூற் பதிப்புக் கழகமே
என்பதை யானும் என்றும் அறிவேன்
அங்கே செல்லவும் ஆசை கொண்டேன்

தாய் : ஆமாம்! வருக! அங்கே போவோம்
கருத்துக் கினிய கதையும் பாட்டும்
கண்ணைக் கவரும் வண்ண மலர்களாம்
அறிவியல் நூல்களும் அங்குநீ காண்பாய்

[இருவரும் சென்னை 1/140 பிராட்வேயிலுள்ள திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் செல்கின்றனர்; குழந்தைகள் நூற்பகுதியை அடைகின்றனர்.]

சேய் : ஆகா! இந்நூல் அழகு மிக்கது!
'குழந்தைப் பாக்கள்' கோடி இன்பமே,
'சிறுவர் பாட்டுநூற் கோவை'யும் சிறந்ததே!
சொல்லுக் குச்சொல் வெல்லமாய் இனிக்கும்

தாய் : அறிவியல் நூல்களும் அங்கே பாராய்!
'நிலவைச் சுற்றிய கதையும்' நேரிய
'பூமிப் பயணம்' புத்தகத் துடனே
'மண்ணும் விண்ணும்' என்னும் நூலும்....

சேய் : பார்த்தேன் தாயே! பரவசப் படுகின்றேன்
ஆற்றின் கதையும் கடலின் கதையும்

மலையின் கதையும் நிலவின் கதையும்
உப்பின் கதையும் உலப்பிலா இன்பமே.

தாய் : இன்னும் பலப்பல எழிலார் கதைகள்
பொன்னொளி வீசும் புதுமை பாராய்!
'தமிழ் வளர்ச் சிக்கதை' 'சங்க நூற் கதைகள்'
அமிழ்தினும் இனிதாய் அமைவதைக் காணாய்?

சேய் : பார்த்தேன் பார்த்தேன் தேன்தேன் தேனே!
தித்திக் கின்ற தின்பண் டங்கள்
கொட்டிவைத் திட்ட மிட்டாய்க் கடையிது!
பாங்காய் அமைந்த பழக்கடை எனலுமாம்

தாய் : இத்தனை அழகாய் எண்ணிலா நூல்கள்
இனிய அமைப்பிலே எளிய நடையிலே
எழுதிய புலவரை ஏற்றிப் போற்றுவோம்
கழகப் பணியைக் கனிவுடன் வாழ்த்துவோம்
விலையிலா நூல்களை விலைகொடுத் துன்றன்
கலைவளம் பெருகவும் மொழிவளம் சிறக்கவும்
வாங்கித் தருவேன் வண்டமிழ்க் கிளியே!
இன்றைய அரும்பே நாளைய மலராம்
இன்றைய செடியே நாளைய மரமாம்
என்பதை உணர்ந்தே இன்றுன் போலும்
மழலையர் படிக்க மாவிருந் தளிக்கும்
தமிழ்நூற் காவலன்; தண்டமி ழன்னையின்
கண்மணி சுப்பை யாவிந் நாளில்
பதிப்பகப் பொன்விழாப் பாரெலாம் மகிழக்
கண்டனன் அந்தக் கழகம் வாழ்க!

சேய் : எண்டிசை புகழ இனிது வாழ்கவே!
வெல்க! விளங்குக! வளர்க! வாழ்கவே!

# கடவுள் கண்ட தமிழ்

பேராசிரியர். திரு. அ. சீநிவாசராகவன் அவர்கள்
*முன்னாள் முதல்வர், வ. உ. சி. கல்லூரி, தூத்துக்குடி.*

வானத்தை வையத்தை வனைந்து காக்கும்
வற்றாத அருட்பெருக்கை மனத்துக் கெட்டா
ஞானத்தின் முழுவடிவை நவையில் லாத
நல்லறத்தின் தனியரணை எண்ணி எண்ணி
மோனத்திற் கண்டுணர்ந்த முதலோர் கண்ட
முதலுரைக்கச் சொல்தேடி நின்ற போது
நானுள்ளேன் என்றெழுந்து கைகொ டுத்து
நாதாந்த போதமெனத் தமிழ்பே சிற்று. 1

வடமொழியில் உபநிடதம் சீனன் கண்ட
வரிமொழியில் கன்பூசன் என்ற ஞானி
தொடுமறிவு சிரியமொழிச் சிறப்பில் ஏசு
தொடுத்தநெறி அரபிச்சொல் இடைவில் நேரே
கடுகிவந்து நபிபெருமான் காதில் அல்லா
கட்டுரைத்த செய்தியெனப் பலவா ருகத்
தடமுணர்த்தி அருளியவோர் இறைவன் எங்கள்
தமிழ்மொழியைத் தானென்றே நேர்ந்த தாலே. 2

மந்திரத்தைத் திருமூலர் தமிழிற் கண்டார்
மறைத்தமிழை வள்ளுவனார் வகுத்துத் தந்தார்
முந்தியிதோ தோடுடைய செவியன் என்று
முறைத்தமிழில் சுட்டிநின்றார் ஞானப் பிள்ளை
சிந்தையெலாம் சிவத்திற்கே தந்த அப்பர்
தேன்தமிழில் அறியானை அறிய வைத்தார்
விந்தையன்புச் சுந்தரர்தம் மறவா நெஞ்சை
விளம்பித்தண் தமிழினிலே வீடு கண்டார். 3

மாணிக்க வாசகர்வான் தமிழில் வைய
மயக்கறுக்குங் கண்ணீரை வடித்தார் எங்கோ
சேனுக்குட் கரந்துறையும் செவ்வேள் தன்னைத்
திருப்புகழில் அருணகிரி சிறைப்பி டித்தார்
காணக்கண் படைத்தவர்கள் காண லாகும்
கடலருகே நிற்கின்ற கரும்பை என்று
சானுக்குள் விசும்பையெலாஞ் சமைக்கும் செய்ய
தமிழாலே பட்டினத்தார் சிவத்தைத் தொட்டார். 4

பேயாக மாறிக்கை லாயம் ஏறிப்
பிறபுவிக்கும் அன்னையென்ற பேறு பெற்ற
தாய்காரைக் காலம்மை தமிழைத் தன்னுள்
தழைத்திட்ட அற்புதத்தில் தழைய விட்டார்
வாயாரத் திருத்தொண்டர் மகிமை பாடி
வாழ்விக்கும் சிவனருளே நாடி அன்பு
தோயுமுளச் சேக்கிழார்பொன் னம்பலத்துச்
சோதியினைச் செந்தமிழில் தோன்ற வைத்தார். 5

காலத்தைக் கடந்தமுதற் கார ணற்கும்
கண்ணெச்சில் படுமோஎன் றயிர்த்து மாற்ருய்க்
கோலச்செந் தமிழ்ப்பல்லாண் டெடுத்தி றைக்கும்
குறைதவிர்த்தார் பெரியாழ்வார் குறைகள் விஞ்சும்
ஞாலத்தின் நிறைவாக மங்கை மன்னன்
நாரணனும் பூரணத்தைத் தமிழிற் கண்டார்
மூலமுணர் தமிழ்ச்சொல்லில் பாணர் மூவா
முதல்வனையே கண்டார்மற் றெதுவுங் காணர். 6

யாழினிசை எனமலர்ந்த தமிழில் மாறன்
யாவையுமே வென்றநலம் இசைத்தார் அன்பின்
ஆழநெடும் அழகுதமிழ்ப் பாவால் ஆரா
அழகனைத்தன் நாயகனுய் ஆண்டாள் ஆண்டாள்
சூழுகின்ற பொருளிலெல்லாம் சுடரு கின்ற
தொல்பொருளைச் சுட்டிஅந்தக் கருணை வாரி
ஆழுகின்ற ஆழ்வார்கள் தமிழில் ஆழ்ந்தார்
ஆதியங்கே அமுதாக அமையக் கண்டார். 7

மூலமில்லா முதலிங்கே மனித ஞக
முகிழ்த்திட்ட எளிமையினை முழுதுங் கண்டு
கோலவொளிக் காவியமாய்த் தத்து வங்கள்
கொஞ்சு தமி ழாயதனைக் கம்பர் தந்தார்
நீலநிற நெடியவனே நேரில் நின்று
நீண்டநெடும் போர்நேர்ந்து தருமங் காத்த
காலநெடுங் கணக்கையெல்லாம் கணித்துச் செஞ்சொற்
கவிதைவளத் தமிழ்ப்பாவில் வில்லி கண்டார். 8

இணையில்லான் அல்லாவின் தூத ஞக
இசைந்தநபி நாயகத்தின் புகழைச் செஞ்சொல்
அணையாலே தேக்கிசீருப் புராணம் என்ற
அருந்தமிழை உமறென்னும் புலவர் யாத்தார்
குணமனைத்தும் ஒருவடிவாய் ஏசு முன்னே
குறித்தபடி உயிர்க்குறையைத் தானே ஏற்ற
மண நிறைந்த வரலாற்றை மாண்பை வீர
மாமுனிவர் தமிழ்த்தேம்பா வணியாய்க் கண்டார். 9

அக்காலம் பொற்காலம் சங்க காலம்
அன்றேயிப் பாரையெல்லாம் கடவு ளுக்கே
தக்கதெனத் திணைவகுத்துக் கூறு கூருந்
தலத்தினிலே தனித்தனியாய்க் கடவுள் கண்டு
எக்கடவுள் என்ருலும் கடவுள் ஒன்றே
எனுங்கருத்தை உயிராகப் போற்றி எல்லா
மக்களுக்கும் சமய உண்மை எதுவானுலும்
வழங்குமொழி தமிழன்றி வேறென் றுண்டோ? 10

முத்தாந்த வீதிபல காட்டுந் தெய்வ
மொழியாகத் தமிழுளதென் றுணர்ந்து நூல்கள்
எத்தகைய சமயச்சார் புடைய என்ற
இடர்ப்பாட்டில் இடருமல் இறைவன் என்னும்
தத்துவத்தை ஒன்றென்னத் தழுவிச் செம்மைத்
தமிழையெலாம் பதிப்பிக்கும் நெல்லைச் சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் என்றும்
செழித்தோங்கி வாழ்க! தமிழ் வாழ்க வாழ்க! 11

# இலக்கிய மாநாடுகள்

வித்துவான் திரு. சொ. சிங்காரவேலன், எம்.ஏ., டிப்.லிங்.,
*தமிழ் விரிவுரையாளர், அ. வ. அ. கல்லூரி, மாயூரம்.*

எண்சீராசிரிய விருத்தம்

நூலாக வெளியிட்டு விட்டால் மட்டும்
நுண்ணறிவுப் பணிமுடிந்து விட்ட தென்று
நாலாறு பேர்நினைத்து வந்த போதில்
நலமாரும் கழகத்தார் மாநா டென்ற
வேலாலும் தமிழதனைக் காக்க வந்த
விழுப்பத்தை என்னென்பேன் முப்ப தாண்டின்
மேலாக இம்முறையைப் பெரிதும் பற்றி
மிக்கபெரும் பனுவல்பல வெளியிட் டுள்ளார்! 1

புலியனைய செழுந்தமிழன் பண்பாட் டாலும்
பூவனைய நெஞ்சுடனே பழைய நாட்டில்
பொலிந்திட்ட திருக்காட்சி தொகைநூல் தம்மிற்
புகழ்பரப்பும் அதனுள்ளே கற்றோர் ஏத்தும்
**கலித்தொகையின்** மாநாட்டைச் **சென்னை** தன்னில்
களிப்புறவே நிகழ்த்திமகிழ் தொடக்கம் செய்தார்
எலித்தொகையாய்த் தமிழ்ப் பகைவர் தலைம றைந்தார்
எழுச்சியுள்ள புலவரெலாம் தலையெ டுத்தார். 2

மாநாடென் றுல்சமயப் பேச்சே என்று
மனங்கொண்ட தமிழர்க்குச் சங்கப் பாட்டாம்
பாநாட வைத்ததமிழ் விருந்தாய் நெஞ்சிற்
பனிநீரைச் சுரப்பிக்கும் மகிழ்ச்சி ஊற்றாய்
நாநாட மனநாட இலக்கி யத்தை
நவிலுதற்கு வழிகாட்டும் கரைவி ளக்காய்
பூநாட விரைகின்ற வண்டு போலப்
புதிதுபுதி தாவெழுந்த நூல்கள் தாமே 3

**நாட்டாரின்** தலைமையினிற் **கலித்தொ** கையின்
நலம்விரித்துக் **கதிரேசர்** தலைமை தன்னில்
பாட்டாருங் **குறுந்தொகையின்** சீர்மை கண்டு
பயிலுநெடுந் **தொகைக்கினிய** தலைவ ராக
நாட்டிற்சீர்க் **கவியரசர்** தமைய மைத்து
**நற்றிணைக்கென்** பேராசான் **தெபொ மீயாம்**
வாட்டமிலாப் பேரறிஞன் தலைவ னாக
வண்டமிழின் சீர்வகுத்த கழகம் வாழ்க! 4

**சொல்லினருஞ் செல்வர்க்குப் புறநா னூற்றுத்**
**துகளற்ற** தலைமையினைக் கொடுத்தா ராய்ந்தே
எல்லியென விளங்கிடுசெந் தமிழ்ப்பே ராசான்
இயற்கைநலம் ஆழ்ந்திடுசீர் **வரத ராசர்**
தொல்லருமைப் **பத்துப்பாட்** டினிய சீர்மை
துலக்கிடவே அமைத்துப்பின் **பரிபா டற்கு**
நல்லஅருண சலமும் கார்மே கத்தார்
நவின்றிடுமைங் **குறுநூற்றிற்** கமைத்தார் வாழ்க! 5

**செந்தமிழின் காவலனுர் பதிற்றுப் பத்துச்**
செழும்புகழார் உரைவேந்தர் **இந்நூற் றுண்டின்**
முந்துநச்சி னார்க்கினியர் **ஔவை** யார்க்கு
மூவாரும் **கீழ்க்கணக்குக் கற்கண் டாக**
உந்துசுவைச் **சிறுநூற்கோ இராம நாதர்**
உயர் **பரம சிவானந்தர்** தமிழன் னைக்கு
நந்தலிலாப் பேராணும் **இலக்கு வப்பேர்**
நல்லாசான் எனவிவரைக் கண்டார் பின்னே. 6

தமிழ்க்காதல் விரித்துரைக்கத் தகுதி சான்ற
தண்ணிலவாம் **மாணிக்கர்**; குறளின் பத்தை
அமிழ்தாக எடுத்துரைக்கும் வாய்மை மிக்க
**ஆறுமுகர்**; சீர்ப்பனசைத் திரும டத்தே
தமிழ்க்கல்வி நிலயத்தே முதல்வ ராகும்
தண்மையுடை **வேங்கடராமையா** என்றே
இமிழ்திரைசூழ் வையகத்தே இருமூன் ருக
இன்பச்சிற் றிலக்கியத்தின் விழாக்கள் செய்தார்! 7

நுட்பமுற இலக்கியத்தை ஆராய்ந் தன்னுர்
நுவல்தலைமை உரைகள்தமை நுவலு கேனே?
திட்பமுற விரிவுரைகள் வகுத்துக் கொண்டு
திறனய்ந்தோர் செழும்புலமை செப்பு கேனே?
ஒட்பமுறக் குறைந்தவிலை தனைய மைத்தே
உலவவிட்ட கழகச்சீர் உணர்த்து கேனே?
நட்பிதெனச் சொற்பொழிவு நூல்கள் ஏற்று
நலங்கொண்ட தமிழகத்தை நவிலு கேனே? 8

ஆழ்ந்தகடல் முத்தாக அமைந்திருக்கும்
அறிஞர்தமைத் தேர்ந்தெடுத்தே அன்னோர் நெஞ்சுள்
ஆழ்ந்திருக்கும் சீர்க்கருத்தைப் பனுவ லாக்க
அருந்துணையா நிற்கின்ற கழகத் தொண்டர்
சூழ்ந்திருக்கும் துயரெல்லாம் மறந்து விட்டுத்
தொண்டொன்றே குறிக்கோளாய் முனைந்தி ருப்பார்!
வீழ்ந்திருக்கும் தமிழகத்தின் மெலிவு போக்கி
வீறுகொளச் செய்கின்றார் செழித்து வாழ்க! 9

வரிவடிவில் அமைந்திருக்கும் இலக்கியத்தை
வனப்புள்ள ஒலிவடிவம் ஆக்கிப் பின்னர்த்
தெரிவடிவில் திறனய்வாய்த் தருதற் கென்றே
திகழவிட்ட இலக்கியமா நாட்டில் எல்லாம்
அரிவடிவாய் அறிஞரெலாம் முழங்க வைத்த
அருங்கழகப் பொன்விழா அமையம் ஈதில்
சுரிவடிவிற் குழலம்மை பங்கன் தாள்கள்
தூமனத்தால் இறைஞ்சிநனி வாழ்த்து வோமே. 10

# திருவாரூங் குழந்தை நூல்கள்

**திரு. வே. மு. கந்தசாமி அவர்கள்**
*தமிழாசிரியர், தூய சவேரியர் உயர்நிலைப்பள்ளி, பாளையங்கோட்டை*

கலிவெண்பா

இந்தியநாட் டில்விளங்கும் ஏற்றமுள நாடுகளில்
செந்தமிழ்நா டேசிறந்த தாகுமிதில்—கந்தமிகும்
தென்னிந் தியச்சைவ சித்தாந்த நூற்கழகம்
மன்னியரை நூற்றுண்டு மாபெரிய—நன்னயமார்
சைவம் தழைத்திடநற் றண்டமிழும் தான்சிறக்க
மெய்வத்த தொண்டுமிக மேன்மைபெறச்—செய்துவந்து
பொன்விழாக் கண்டு புகழால் உலகின்கண்
நன்னர் விளங்கிநல முற்றதுவே—பன்னரிய
நன்னூற் கழகத் தமைச்சான நல்லவராம்
பன்னூல் பயின்ற திருவரங்கர்—அன்னரின்
பின்றோன்றி யென்றும் பெருமை மிகப்பெற்றேன்
மன்றாடும் ஈசன் மகன்பேரான்—தென்றமிழின்
சுப்பையா வென்னும் சுவைசால் பெயர்க்குரியோன்
முப்போதும் நற்றமிழ்க்கு வேண்டுவன—தப்பாது
செய்வதற்குத் தான்வேண்டிச் சிந்தையுளே யெண்ணித்
துய்யபல நற்கருத்தைச் சொல்கின்ற—கைவந்த
எத்துணையோ நூல்களினை ஏற்றமிகு கட்டுடனே
மெத்தவுமே அச்சியற்றி வேண்டுவன—சத்தாய்
வெளிப்படுத்தி நல்லபல மேலான சேவை
யளித்தனன்காண் சுப்பையா ஆன்றோர்—களிப்புடனே

தன்னலமில் லாதுழைத்துத் தானிருந்து வாழ்கின்ருன்
இன்னிலத்தி லேகழகம் ஏற்றமுறப்—பொன்விழா
வாய்த்திடக்கொண் டாடி மகிழ்வதற்கன் ஞெரொருவர்
தாய்த்தன்மை யுற்றுச் சலியாது—காய்த்துக்
கனிந்தவற்றுள் நல்ல கனியெடுத்துத் தான்கொண்
டினிமையுற வெல்லோர்க்கு மீந்தே—நனிமகிழும்
சான்ருேர்போல் நல்ல தமிழ்க்கலையில் வல்லார்பால்
தேன்றமிழ் நூல் பெற்றுச் சிறப்பாகத் தான்பதிப்பித்
திக்காலம் நல்ல எழில்விளங்கும் ஈடாக்கித்
தக்கவா றெல்லாம் தனித்தனியே—மக்கள்
உளங்கவரும் வண்ணம் ஒளிபெறவே வைத்தார்
இளைஞர் முதற்பெரியோர் ஈருய்—விளங்குமுயர்
நல்லறிவு பெற்றிந்த நாட்டில் விளங்குதற்குத்
தொல்காப் பியமுதலாச் சொல்லலுறும்—நல்ல
இலக்கணங்கள் யாவும் எழிலறிஞ ரான
கலக்கமிலா வள்ளுவர் நூல் கன்னல்—குலச்சுவையை
தந்ததிருத் தொண்டர் புராணம் முதலாக
இந்தநாள் நுண்மாண் எழிற்புலத்தார்—தந்துள்ள
மேலான நூல்கள் விளங்கிச் சிறக்கவைத்தார்
சால விளங்கிய நூல் தம்முள்ளே—ஏலம்
கமழும் திருவாருங் காண்குழந்தை நூலாய்
அமையும் அவற்றின் பெயர்தாம்—கமையாகக்
காணத் தகுகுழந்தைப் பாக்களது மையமா
மாணரசு நற்பரிசை வாங்கியதே—தோணும்
பூணனிசி ருர்பாட்டு நூற்கோவை பொற்புமிக
வேணளவும் நல்விருப்பம் மிக்குளதாய்—காணும்
நிலாச்சுற்று நற்காதை நீணிலத்தி னுள்ளே
உலாப்போய தொன்றுமணும் விண்ணும்—குலாவும்
இயற்கைசெயற் கைத்தன்மை ஈடிலுயிர்க் காட்சி
வியத்தகுமின் சாரத்தின் விந்தை—நயத்தக்க
நந்தமிழாட் சிச்செல்வர் நல்குபரி சேற்றதே
இந்தநூல் தம்மோ டெழிற்றன்மை—வந்துள்ள
ஆறுகடல் நல்ல அணிமலையி னேடுநிலா
பேறுமிகப் பெற்றிடுமுப் பின்கதையே—கூறும்

இளைஞர்தொலைக் காட்சி எழில்வா னெலியோ
டிளைமைவியக் கும்மின் னணுவே—விளைவாகப்
பாயுமிராக் கட்டும்நம் பைந்தமிழாட் சிப்பரிசு
ஏயும் படிகொடுக்க ஏய்ந்ததுவும்—ஆயதுடன்
விஞ்ஞான நூற்கொத்து மேலாநாம் பாராட்டி
மெய்ஞ்ஞான மாராயும் நம்முடம்பு—நைஞ்ஞா
தறிவுவளர் நூற்கொத்து மாகுமவற் ருேடும்
அறிவியற்க தைக்கொத்து மாகும்—செறிநூல்கள்
தென்னுட்டு முன்னேர் செப்புப ழங்கதைகள்
நன்னரெழு தப்பட்ட நற்கதைகள்—பொன்னேரும்
சீரார் அகர வரிசையினில் மேற்கோள்கள்
பேராம் பிரதாபன் நற்சரிதம்—சீரார்
கதையின்பம் மாலை கதைக்கொத் ததனேடு
புதைபொருள்பெற் ருர்போலப் போற்றும்—மதியால்
படியா தவர்படும்பா டாகுமிவற் ருேடும்
முடியணிந்தா ளப்பிறந்த மூத்தோன்—குடிப்பிறந்தார்
கற்றற் குரியகதா மஞ்சரி காணுபுகழ்
பெற்றகுமா ரச்சம் பவத்தினெடும்—உற்ற
ரகுவம்ச மேகசந் தேசநற் கூத்துத்
தகுமிலக்கி யச்சிறுக தைக்கொத்—தகமேவு
கதைக்கொத் ததனேடும் சங்க விலக்கியக்
காப்பியக்க தைக்கொத்து நீதிக்க தைக்கொத்து
காப்புடைய நீதி நெறிவிளக்கம்—மாப்பெரிய
நீதிவெண் பாவிளக்கம் தேரறநெ றிச்சாரம்
ஆதிவிளக் கக்கதைக ளாகுமிவை—தீதில்
செகப்பிரியர் செப்புகதை சீராய் வியப்பு
மிகத்தருசின் னக்கதைக ளின்னும்—தகவுடைய
சிங்கார மான சிறுகதைகள் மேனுட்டு
மங்காத விந்தை மணிக்கதைகள்—தங்காநல்
மன்பதைக்க தைபிறநாட் டார்கதைக ளின்னுமெழில்
இன்பக் கழகம் கதைக்கொத்து—மன்பெரிய
நாடுகண்ட நன்மக்கள் நல்லோனுல் பட்சுவைச்சர்
பீடமரிக் 'கக்காந்திப் பேரறிஞன்—தேடரிய
பெர்னுட்சா வின்னுமிகப் பேருலக மக்களொடு

கர்வமி லாதுல கப்புகழை—மர்மமின்றிப்
பெற்றபெரு மக்கள்பெருங்காந்தி பள்ளியினில்
கற்றபரு வந்நிகழ்ச்சி காணிலிவை—இற்றைய நாள்
பிற்காலப் பேரறிஞ ராகிப் பெருமையுறு
நற்றவக்கு ழந்தைகளை நன்ருக—முற்றுமே
ஆக்குதற்குத் தக்க அழகான நூல்களென
ஊக்கமுடன் சொல்வே னுவந்து.

நேரிசை வெண்பா

காண வழகுடைத்தாய்க் கற்கப் பயனுடைத்தாய்
மாண மிகப்பலநூல் வைத்துள தால்—வேணளவும்
சைவசித் தாந்தத் தனிக்கழகந் தன்னிலே
உய்வதற்குப் பெற்றிடலாம் உற்று.

# தண்டமிழ்க்குத் தொண்டு செய்வோர் வாழ்க!


நெல்லை திரு. க. சுப்பிரமணியன் எம். ஏ., அவர்கள்
தூயயோவான் கல்லூரி, பாளையங்கோட்டை.


எண் சீர் விருத்தம்

கன்னிமுதல் வேங்கடஞ்சூழ் நாட்டில் யாண்டும்
கட்கினிய களைகளென முளைத்து நின்று
முன்னிவளர் வடமொழியின் ஆதிக் கத்தை
முதலோடும் அரிந்தெறிந்தால் அன்ருே நாளும்
நன்னர்நலஞ் சான்றதமிழ்ச் சமயம் ஊன்றும்
நானிலத்தில் மேனிமிர்ந்து பரவும் ஓங்கும்
இன்னமொரு கணமேனும் துஞ்சோம் என்றே
ஏற்றெழுந்தார் அந்நாளில் ஆற்றல் வீரர். 1

தருவரங்கம் தமிழ்க்கேதம் வந்தால் என்னும்
தகவுடையார் திருநெல்லைப் பதியின் வந்தார்
திருவரங்கம் எனும்பெயர்கொள் சீல ரோடு
திரவியமுஞ் சேர்ந்துகிளர்ந் தெழுச்சி பெற்ருர்
இருவரங்கம் பகமெனவே பாங்கர் ஆனுர்
இனியமறை மலையடிக ளோடு சேர்ந்தார்
வெருவரங்கம் துணிப்பதென வேற்ருர் கொள்கை
வீழ்த்துகின்ற கழகத்தைக் கண்டார் மாதோ. 2

கழகமெனின் சூதாடு களமென்கின்ற
கசடர்களின் கல்வியினை என்ன சொல்கேம்?
பழகுதமிழ்ச் சொல்லழகைப் பாரோர் போற்றப்
பற்பலவாஞ் சொற்பொழிவில் நாட்டில் ஏட்டில்
முழவுறழுந் தோளுடையார் முழக்கிக் காட்டி
முணுமுணுக்கும் மாற்ருரின் முதுகு காண்பார்
எழுகின்ருர் முன்னேற்றக் கழகத் தோழர்!
எஞ்சைவ சித்தாந்தக் கழகத் தீரர்!!

தித்திக்கும் தமிழென்னும் மலையின் மீது
திரிகின்ற களிறனைய கழகம் ஆ! ஆ!
சித்தாந்தம் இலக்கணத்தோ டிலக்கி யங்கள்
சீர்த்திமிகும் அறிவியலோ டினைஞர் நூல்கள்
அத்தனையும் எத்திசையும் கடாம்போற் பெற்றே
ஆரியமாம் பாரியதோர் மரத்தைச் சாடி
வித்தகர்செய் வரலாற்றங் கரையின் பாங்கர்
விளையாடி மகிழ்ந்துலவும் பெற்றி காண்போம்!

எற்றைக்கும் வரலாறு வாழ்வி னூடே
இனியமணங் கமழ்ந்தவணம் இருக்கும் அன்ருே?
அற்றையர சியல்நிகழ்ச்சி வெற்றி தோல்வி
அறிஞர்க்கு வழிகாட்டி நிற்கும் அன்ருே?
இற்றைநிகழ் செய்தியெலாம் எதிர்கா லத்தில்
ஏற்றமிகு வரலாற்று நூல்கள் ஆகும்
உற்றுணரின் தமிழகத்தின் வரலா றென்னும்
ஓதரிய மூதுலகின் தோற்றஞ் சாற்றும்.

சங்கமெனும் பொங்கெழில்சேர் தடத்திற் பூத்த
சால்புடையார் யாத்தளித்த நூல்க ளோடு
தங்கைவளர் சடைக்கரந்தார்க் குகப்பாய் நின்ற
கழிபெருஞ்சீர் சித்தாந்த சமய நூல்கள்
துங்கமிகும் அறிவியலின் பனுவல் எல்லாம்
துறைதோறும் பதிப்பிட்டுப் பரவச் செய்யும்
எங்கெங்கே புதுப்புது நூல் தோன்றி னாலும்
இன்றமிழால் யாவர்க்கும் ஈயும் அன்றோ ? 6

வெல்லம்நிகர் தமிழுக்கு வாழ்வை ஈந்த
வேந்தர்குலப் பல்லவரின் ஆதித் தோற்றம்
வில்லில்வல சேரர்களின் தாயச் சீர்த்தி
வேளிரொடு கோசர்குடி மோரி யர்கள்
மல்லமரில் வல்லவராஞ் சோழ வேந்தர்
மாத்தமிழின் பாத்திறஞ்சேர் பாண்டி மன்னர்
நல்லியற்கை வரலாற்றைத் தொகுத்தே ஆய்ந்து
நஞ்சைவ நூற்பதிப்புக் கழகம் நல்கும். 7

அறைகடலுக் காளான குமரிக் கண்டம்
ஆழ்நிலத்திற் புதைபட்ட சிந்து நாடு
மறைவுற்றுத் திரிவுற்ற மொழியின் சொற்கள்
மயலற்ற அயல்நாட்டார் பயண ஏடு
குறைமலிந்த இந்திமொழித் திணிப்பின் நோக்கம்
கோயிற்கல் வெட்டுக்கள் காட்டும் வாழ்வு
நிறைதமிழின் தனித்தியங்கும் தன்மை வன்மை
நீள்வரலாற் றின்விருந்தைக் கழகம் ஊட்டும். 8

மெத்தவட மொழிகலந்த நடையைக் காய்ந்து
மென்மெலவே வழக்கொழியச் செய்து சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் ஒன்றே
சிந்துநடைச் செந்தமிழைப் பரப்பி நிற்கும்

வித்தகர்செய் காப்பியங்கள் புதின நூல்கள்
வியனுலகில் விரவிவரும் செய்தித் தாள்கள்
அத்தனையும் தனித்தமிழ்ச் சொல் ஆட்சி ஓச்சும்
அந்நாளே நன்னாள்பொன் விழாநா ளாகும். 9

மனநலநன் குடைமையினுல் வடநாட் டாரும்
மதிகருண நிதிமுதல்வன் வாழ்க / வாழ்க !!
இனமோங்கிச் செந்தமிழ்நற் செல்வி வாழ்க !
எள்ளறுசீர் சுப்பையா பிள்ளை வாழ்க /
தனவணிகர் தமைப்போலத் தகுதி யோடு
தண்டமிழ்க்குத் தொண்டுசெய்வோர் வாழ்க / வாழ்க !!
சினமீன்பாய் பொருநைமண வினும்பல் லாண்டு
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் வாழ்க ! 10

---

இரண்டாம் பாடல் :

*திரிபு என்னுஞ் சொல்லணி அமைந்தது.*

அடி 1 *தருவர் அங்கம் தமிழ்க்கு ஏதம் வந்தால்,*
*அங்கம் — உடம்பு;*

*"செந்தமிழ்க்குத் தீமை வந்தபின்னும்—இந்தத்*
*தேகமிருந்தொரு லாப முண்டோ"* —*பாரதிதாசன்*

2 *திருவரங்கம் (பிள்ளை)*
*இருவர் அங்கு அம்பகம் எனவே;*
*அம்பகம் — கண்;*

4 *வெருவ அரம் கம் துணிப்பது என*
*கம் — தலை;*

# ஆங்கில ஆக்க நூல்கள்

**திரு. கவிஞர் முருகுசுந்தரம்** எம். ஏ. அவர்கள்

*கன்னிமாடவீதி, சேலம்.*

கட்டளைக்கலித்துறை

பாட்டுச் சுவைத்தமிழ்ப் பாவலர்
　　சங்கப் பயிர்வளர்த்த
ஏட்டுப் பழந்தமிழ் இன்றைப்
　　புதுத்தமிழ் என்பவற்றை
நாட்டிற் பரப்பியிந் நானிலத்
　　தாரகக் கண்ணெதிரில்
காட்டிக் களிப்பது சைவசித்
　　தாந்தக் கழகமொன்றே! 1

நாலடி யாரும் நமக்கன்
　　றளித்த திருமுறையும்
நாலடி யாரும் திருக்குறள்
　　தேனும் நனைத்ததமிழ்
நூலடி யாரிப் புதுப்புதுக்
　　கோலத்தில் நல்கவல்லார்
நூலடி யாரிக் கழகத்
　　தடியார்போல் ஆங்கிலத்தே? 2

சங்கத் தமிழ்க்கனிச் சாற்றையும்
　　வாசத் தமுதத்தையும்
பொங்கித் ததும்பிடும் காப்பியத்
　　தேனையும் மொண்டெடுத்தே
தங்கப் பணியில் தரளத்தை
　　வைத்துத் தருவதைப்போல்
இங்குத் தருவதும் ஆங்கிலத்
　　தேவிக் கழகமொன்றே.

பாரினி லேவுயர் பைந்தமிழ்
　　நாட்டுப்பண் பாட்டையெல்லாம்
சீரணி சற்றும் சிதைவு
　　படாமல் மொழிபெயர்த்துத்
தாரணி மீதில் தழைத்துப்
　　படர்ந்தநல் லாங்கிலமாம்
தேரினில் ஏற்றிச் செலுத்துவ
　　திந்தக் கழகமொன்றே!

அடிதொடை மோனை அசைபிழை
　　யாத்தமிழ் ஆரணங்கை
முடியர சாக்கியிம் மூதுல
　　காள முனைப்புடனே
கொடியெடுத் தார்தெற்குக் கோநகர்
　　நெல்லைக் கழகத்தவர்
தொடிவளைத் தோழி! இவர்புகழ்
　　நாவால் சொலப்பெரிதே!

# காழ்வரைபோல் ஓங்கி வாழ்க !

தவத்திரு. சுவாமி சாதுராம் அவர்கள்
வைணவி கோயில், திருமுல்லைவாயில்.

கலிவெண்பா

வெல்வே லிறைவன் விநாயகன் முத்தலையாங்
கொல்வே லிறைவனருள் கூடுதிரு - நெல்வேலித்
தென்னிந் தியசைவ சித்தாந்த நூற்பதிப்பு
மன்னுங் கழக வழிவெளியாம் - பன்னிரு
சைவத் திருமுறைத் தைவப் பெருந்திரட்டுத்

தெய்வத் திருக்கோயில் செல்வழி நூல் - உய்வைத்
தருவா சகமாம் மணிவா சகர்சொல்
திருவா சகத்தின் தெளிவு - திருவா
சகவிளக்கம் சாற்றுரைகள் தண்ணார் திருவா
சகஅகவல் சார்தெளிவு ரைப்புத் - தகமெய்த்

திருமந் திரவிளக்கஞ் செப்புரைதே வாரத்
தருமந்த நூற்றிரட் டைத்தும் - தருமந்த
நல்லுரைகள் கோவையார் நன்னூல் விளக்கவுரை
ஒல்லுந்தே வார ஒளிநெறி நூல் - சொல்லுதிரு
வாசகநூ லுக்கோர் ஒளிநெறிதே வாரதிரு

வாசக மாநெறிக் கட்டுரைகள் - ஈசனருள்
மெய்கண்ட சாத்திர நூல் ஈரேழு மேதினியிற்
கைகண்ட தோத்திர நூல் கட்டுரைகள் - வைகும்
சிவஞான பாடியம் சிற்றுரையாச் செய்த
சிவஞான போதமுயர் சித்திச் - சிவஞானத்

தீருரைகள் ஏத்துஞ்சு பக்கம் பரபக்கச்
சீருரைகள் உந்தி திருக்களிறு - சாரும்
திருவருட்ப யன்வினு வெண்பா சிறந்த
இருபா இருப∴தோ டுண்மைப் - பெருவிளக்கம்
ஊற்றத் திருவரு ளுற்ற பயனுரை

போற்றிப் ப∴றொடை போதனையாச் - சாற்றவரு
நெஞ்சுவிடு தூது கொடிக்கவியுண் மைவிளக்கம்
நெஞ்சுணர்சங் கற்ப நிராகரணம் - செஞ்ச
சிவஞான சித்தியார் ஆராய்ச்சி செம்மைத்
தவமார் தமிழர் சமயம் - யுவக்கழகத்

தெய்வப் பனுவற் றிரட்டு திருத்தணிகைத்
தைவப் பதிற்றுப்பந் தந்தாதி - மெய்வை
திருத்தணிகை யாற்றுப் படைவிருத்தி செல்வத்
திருத்தணிகைத் திவ்ய சரித்ரச் - சுருக்கமருள்
சேர்திருக்க தைகள் சிவநெறிச்செய் யுட்டிரட்டு

பேர்திகழுஞ் செங்கல்வ ராயபிள்ளை - நேர்முருக
வேள்பன் னிரண்டு திருமுறைகள் வேற்றிடக்கை
வேள்தணிகை மெய்ம்மைப் புராணவுரை - நீள்சீர்த்
திருவிளை யாடற் புராணவுரை செப்புந்
திருவாத வூரர் புராணத்-துரைபெரிய

தொண்டர் புராணவுரை சொல்தாயு மானவள்ளல்
விண்டபாட் டுக்குரைமெய்ஞ் ஞானமிகு - தொண்டராம்
பட்டினத்துப் பிள்ளையார் பாட்டுக் குரைமேலும்
மட்டில் புராண வசனமுடன் - பட்டியலில்
விட்டுப்போய் விட்ட சமய விரிநூலும்

எட்டுத் திசையும் இசைபரப்பி - நெட்டுரைசேர்
மொய்ம்பார் சுப்பையா முயற்சியால் பொன்விழா
ஐம்பானண் டிற்கொண்டா ராட்சிபெற்றுத் - தெம்பாகக்
காழ்வரைபோ லோங்கிக் கடவுளருளா லென்றும்
வாழ்வ ளிக்கச் செய்தவழி வாழ்ந்து!

# பலர்புகழ் கழகம் பாங்குடன் வாழ்க!

பேராசிரியர் திரு. கு. சுந்தர மூர்த்தி, பி. ஏ. அவர்கள்

திருப்பனந்தாள், தஞ்சை மாவட்டம்.

வெண்மதி பாதி சூடி
விரிசடைக் கங்கை தாங்கித்
திண்ணிய அடியார்க் கென்றும்
திகழ்பதம் அளித்துக் காக்கும்
பெண்ணொரு பாகம் வைத்த
பெரியனுல் ஆயப் பெற்ற
பண்ணுறு தமிழின் மேன்மை
பாரினில் நிலைக்க மாதோ! 1

நெல்மலி திருநெல் வேலி
நகரினில் கழகம் தோற்றி
நல்லரும் தொண்டு செய்தார்
நந்திரு வரங்கப் பிள்ளை
பல்புகழ் பெற்ற அன்னார்
பற்றிய வழியே சென்று
தொல்லுறு தமிழ்வ ளர்ப்பார்
சுப்பையா பிள்ளை இன்னும். 2

பலர்புகழ் கழகம் செய்த
பாங்குறு பணிகள் தம்முள்
இலகிலக் கியல்மா நாட்டை
இயம்பிடல் சிறப்பே யாகும்
சொலல்வலார் நாட்டார் ஐயா
சொற்றிறம் புணர்ந்து நின்று
வலமிகு தலைமை ஏற்க
மலர்ந்தது முதன்மா நாடு. 3

கற்றறி புலவர் ஏத்தும்
கலியினை முதலி லாய்ந்தார்
முற்றிய தேற லன்ன
முதிர்சுவைக் குறுந்தொ கையைக்
கற்றறி புலவர் சூடக்
கதிர்மணி தலைமை ஏற்கத்
தெற்றென ஆய்ந்தார் பின்னர்த்
தென்னகம் புகழ மாதோ!

அகமொடு புறமு மங்கே
ஆய்ந்திடப் பெற்ற வன்றே!
அகத்திணை பகர்ந்து நிற்கும்
அருமைசால் நற்றி ணையைச்
செகமொழி பலவும் ஆய்ந்த
தெ. பொ. மீ. தலைமை ஏற்க
உகப்பொடு புலவர் பல்லோர்
ஊன்றியே ஆய்ந்தா ரன்றே!

திருமிகு மதுரை தன்னில்
தோந்திடு அமுத வாயன்
அருமைசால் ஆசான் ஆய
நச்சினர்க் கினியன் செய்து
தருமொரு பத்துப் பாட்டின்
தகும்உரை முற்றும் ஆய்ந்தார்
மருவிலா வரத ராச
மாண்பினர் தலைமை ஏற்றே.

மேற்கணக் காய்ந்த பின்பு
விளங்குகீழ்க் கணக்கை யாய்ந்தார்
சேல்விழிப் பெண்சீர் போற்றும்
திருவுலாச் சிறப்பும் ஆய்ந்தார்
பால்வழி குதலைப் பிள்ளைப்
பருவமாய் உயர்ந்தோர்ப் போற்றி
மால்கொளும் திறமும் ஆய்ந்தார்
மாசிலாப் புலவர் பல்லோர். 7

முப்பெரும் பாலி னுள்ளே
மூவுல கடக்கி நிற்கும்
செப்பரும் வள்ளு வற்குச்
சீர்விழாப் பூண்டார் நன்றே!
தெப்பமாய்த் தமிழ்க்க டற்குத்
திகழ்ந்தவோர் மறைம லைக்குச்
செப்பரும் விழவு பூண்ட
சீர்மிகு கழகம் வாழி! 8

எதுபல புலவர்க் கிங்கே
இன்விழா எடுத்து நிற்கும்
எதுபல நூல்கள் தம்மை
ஏற்றமாய்ப் பதிப்புச் செய்யும்
எதுபல இலக்கியந் தோய்
இலங்குமா நாடு கூட்டும்
அதுபல புகழ்சூழ் சைவ
**சித்தாந்தக் கழக** மன்றே.

எவன்பல நூல்ப தித்தே
ஏற்றமாய் வெளிக்கொ ணர்ந்தோன்
எவன்மிகு செல்வம் பெற்றும்
எளிமையாய்ப் பணிந்து வாழ்வோன்
எவன்மலி புகழ்கொண் டுற்றுன்
சுப்பையா என்னும் பேரான்
அவனிவண் நீடு வாழ்க!
அவன்புகழ் வாழ்க!! வாழ்க!

# தன்னிகரில்லாத் தமிழ்ப்பணி வெல்க!

**திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அவர்கள்**
*கருப்பக்கிளர், தஞ்சை மாவட்டம்.*

நேரிசை யாசிரியப்பா

திருமிகும் பரதச் சீர்மிகு கண்டத்
தொருதனி நாடாய் உயர்ந்து விளங்கிடும்
தென்னிந் தியாவாம் தென்றமிழ் நாடே
இந்தநன் னாட்டிடை இனிதுவாழ் வோர்பலர்
பிறநாட் டினர்போல் பின்செல லின்றித்
தன்னிக ரில்லாச் சைவம் போற்றுவர்
தன்னிக ரில்லாத் தமிழுஞ் சிறந்திடும்
இங்ஙனம் இரண்டும் இயைந்து சிறத்தலால்
சைவமுந் தமிழுந் தழைத்தினி தோங்குக
என்றுநல் லறிஞர்கள் இனிது வாழ்த்துவர்
இந்தநன் னாட்டிடை இருபத்தைந் திரட்டி
ஆண்டுக்கு முன்னர் அரிது தோன்றிய
திருநெல் வேலித் தென்னிந் தியசைவ
சித்தாந்த நூற்பதிப்புச் சிறந்திடு கழகம்
தன்னிக ரின்றித் தமிழ்த்தொண்டு செய்து
இந்நாட் டிடையே இயங்கு கின்றது
பிறபதிப் பகங்கள் பெறும்பொரு ளொன்றையே
குறிக்கோ ளாகக் குறித்துக் கொண்டு
வேலைகள் செய்வன வேலைசூழ் உலகில்
இந்தநற் கழகம் அந்தநற் றுறையில்
இன்றிப் புகழ்சால் எழின்மிகு தமிழ்ப்பணி
ஒன்றையே தனது உயர்கொள்கை யாக்கி

இயற்றுநற் பணிகள் எண்ணில வவற்றினுள்
தக்கதென் றென்றைத் தகவுடன் குறிப்பின்
வரலாற்று நூல்களை வளர்த்திட வேண்டிக்
கருதுமத் துறையிற்.கருத்தைச் செலுத்திச்
சிந்துவெளி நாகரிகச் சீர்வர லாறும்
குமரிக் கண்டக் குணவர லாறும்
தமிழகம் தமிழகத் தனிவர லாறும்
ஆயிரத் தெண்ணூ றாண்டு களுக்கு
முற்பட்ட தமிழக மொழிவர லாறும்
பாண்டியர் தங்கள் பழவர லாறும்
சேரரைப் பற்றிய சீர்வர லாறும்
குலோத்துங்க சோழர் கொளுவர லாறும்
பல்லவர் பற்றிப் பகர்வர லாறும்
அரசியல் தலைவர்கள் அறிவியற் புலவர்கள்
விடுதலை வீரர்கள் மேதகு வள்ளல்கள்
சமய குரவர்கள் சந்தான குரவர்கள்
வைணவ சமய வழியாழ் வார்கள்
மகேந்திர வர்மன் நரசிம்ம வர்மன்
சங்க காலத் தனிப்பெரு மன்னர்கள்
சங்க காலத் தமிழறி புலவர்கள்
ஆகிய இவர்தம் அருவர லாற்றொடு
அந்நாள் முதலா இந்நாள் வரையிலும்
தண்டமிழ் நாட்டில் தகவுடன் தோன்றிய
ஔவை முதலா இவ்வை யகத்துச்
செவ்வைசேர் புலவர் சீர்வர லாறும்
செந்தமிழ் உலகினிற் சிறந்து விளங்கிட
எவ்வெவர்க் கொண்டு அவ்வர லாற்றினைச்
செவ்வையி லெழுதிற் சீர்பெறு மென்றே
அவ்வத் துறையின் அறிஞரைக் கொண்டு
இவ்வர லாறெலாம் இயற்றச் செய்தும்
ஞாலத்து மக்கள் காலத்திற் கேற்பக்
கொள்ளும் நூல்களும் குணமுடன் பதித்தல்
எப்பதிப் பகமும் எந்நாள் தன்னிலும்
இயற்றிய தில்லை இயற்றவும் அரிது
இயற்றிடற் கரிய இப்பணி தம்மைச்
சுப்பைய வேளின் துணையைக் கொண்டு
இப்பதிப் பகந்தான் இயற்றிய தம்ம !
தமிழறி புலவர் தம்வர லாற்று
வரிசை நூல் களிலே வாய்ந்தநற் புலவர்கள்
நூற்றுக் கணக்கில் ஏற்றம் பெற்றிட
இருபத் தொன்ப தெழின்மிகு பகுதிகள்
இத்தமிழ் ஞாலத் தினிது பரவின
அறிஞர்கள் இதனை ஆர்வமாய்க் கண்டு
அம்மவோ இத்தனை ஆஆ வியப்பென
நின்று புகழ்ந்து என்றும் மகிழ்ந்து
வறிஞன் பெற்ற மாநிதி என்ன
உள்ளம் மகிழ்ந்து உவகை எய்தினர்
இன்னும் பலரின் எழில்வர லாற்றையும்
இந்தநல் உலகில் இலங்கிடச் செய்ய
வேண்டு மென்னும் விருப்பே வடிவாய்
வாய்ந்துறு சுப்பைய வண்டமிழ் வள்ளல்
ஏய்ந்துறு முலகில் இனும்பல வாண்டு
பலவகை யாகப் பகர்வர லாறு
வெளியிட் டென்றும் ஒளிபெறச் செய்து
பொன்விழாக் கொள்ளும் பொற்புறு கழகமொ
டிந்நா னிலத்தில் இனிது விளங்கி
வச்சிர யாக்கை வாய்ந்திடப் பெற்று
வாணாள் நீளு ளாகி வயங்கிடத்
தன்னிக ரில்லாத் தமிழ்ப்பணி செய்து
மன்னிய புகழ்சேர் சென்னிவெண் பிறையோன்
தன்னரு ளாலே தழைத்து
வாழ்க மாதோ வளமுடன் சிறந்தே.

# நாளெல்லாம் போற்றலாமே !

திரு. அ. செகதீசன், எம். ஏ., அவர்கள்
வ. உ. சி. கல்லூரி, தூத்துக்குடி.

### சிந்தனைத் திருமுன்

முத்தமிழ் மணிமகுடம் முப்பாலின் நிறைகுடம்
முமமைக்கும் ஆன பாடம்
முன்னேற்ற வாய்ப்பிடம் முந்தையின் வார்ப்படம்
முழுமையின் ஆட்சி பீடம்!
இத்தரை வாழ்வுக்கு மிகுதியுங் காப்பிடம்
இறப்புடன் பிறப்பு மாற்றும்
இன்பியல் சேர்ப்பிடம் இருமைக்கும் வாழ்விடம்
இதயமாம் ஆழி பூத்த
சொத்தினை நிரலாக வைத்திட்ட முத்தாரம்
சூழ்ந்தூசல் ஆடு முலகைச்
சுவையாக்கும் கலைக்கூடம் தொண்டுக்குப் படிப்பகம்
சொல்வண்ணப் பொன்னை முத்தின்
சித்திரத் தொழிலகம் முத்திரை அறிவகம்
திருநெல்லை தந்த ஞானச்
**சைவசித் தாந்தநூற் பதிப்பருட் கழகமே**
சிந்தனைத் திருவின் முன்னர் !

1

### பதிப்பாராய்ச்சிப் பணி

பத்தாயி ரத்தாண்டும் பார்த்திட்ட முச்சங்கம்
பத்துப்பாட் டோடு நெஞ்சப்
படைஎட்டுத் தொகைமட்டும் படைத்ததாய்க் காலத்தின்
பகைக்கடல் பசிநெ ருப்புக்
கத்தாமல் கரை(க்)கின்ற கறையானும் கொள்ளவே
காப்பாற்ற முடிய வில்லை!
கழகமே இல்லையேல் காலாகா லத்துக்கும்
கழுத்திலே நஞ்சு கண்ட

சத்திய உருப்போன்ற வரலாற்று வாழ்நூல்கள்
சார்ந்தின்று காண்ப தெங்கே?
சல்லடைக் கண்ணாக ஆயிரத்து நானூறு
சலிக்காமல் ஆயி ரத்தை
வைத்துமேல் தொள்ளாயி ரத்தெழு பதுகாணும்
வரைக்குமுன் பதித்த ளித்த
வண்மையை நன்மையை வாய்த்தசெய லாண்மையை
வாய்மையை என்ன சொல்வாம்!

### கழகத்தின் தனிஆட்சி

புற்றீசல் சிறகாகப் புடம்வைத்த புண்ணைகப்
புலபுலெனும் புழுக்க ளாகப்
புறம்போக்குக் கூட்டாகப் பொதிவிலாப் பூட்டாகப்
போர்வையின் புதுக்க வர்ச்சி
விற்றேடும் விளைவாக வேகாத கல்லாக
வேண்டாத வியர்வை யாக
விளங்காத வுறுப்பாக வீசிடும் சரக்காக
விரைந்திடும் நூல்க ளெல்லாம்
தொற்றுநோய்த் தொடரூசிப் போனபல் வடைநூலாய்த்
தோய்ந்தின்று படர்ந்தி ருக்கத்
தொண்டாகத் தொன்மைக்கும் தொடர்பாகத் தற்காலத்
துணிபுக்கும் விளக்க மாகக்
கற்றுளோர் திறனைகக் கண்ணான ஆராய்ச்சிக்
கண்ஆன கருத்து நூல்கள்
கடையேறித் தடைவென்று படையாக வருமென்றால்
கழகத்தின் ஆட்சி யன்றோ!

## மூல நூல்களின் மூலம் ஆராய்ச்சி

மூலமும் உரையுமே சாலுமென் றில்லாமல்
மூலத்தின் மூலம் கண்டு
மூலிகை போலவே முயன்றுமே லாராய்ந்து
மூலையில் உள்ள வற்றின்
மூலமே காட்டிமேற் கோள்காட்டி முந்தையின்
மூலமே மரபு கூட்டி
மூண்டெழும் குறிப்புக்கு வேண்டிய விளக்கத்தின்
மூலமே இலக்கி யத்தின்
மூலமாந் திறங்காட்டி முற்றிய வளந்தீட்டி
முத்தான அடிக்கு றிப்பு
மூலமே முருகியல் முறைநாட்டி ஆராய்ச்சி
முதல்கான முந்து வார்க்கும்
மூலமே ஆகும்நன் னூலெலாம் கழகத்தின்
மூலமே! இத்த னைக்கும்
மூலம்யார்? ஆமவர் மூலமந் திரந்தந்த
மூலரோ திருமூ லரோ?!

## ஆராய்ச்சி நூல்கள்

தொல்காப்பி யப்பொருள் அதிகாரத் துரைத்தனத்
தொல்லாணை நற்கருத்துத்
தொழுந்தமிழ் எழுத்துக்கள் நுண்மைதோய் விளக்கத்தின்
தொடுப்புமேல் உயிர்வ ளர்ச்சி
எல்லையினில் கண்டசீர் இறைவடிவச் சேர்ப்பு
இயற்றமிழர் இன்ப வாழ்க்கை
ஏற்பாடு பொருளியற் கோட்பாடு தாய்ச்சங்கம்
ஏந்திய இலக்கி யத்தின்
பல்லியற் செடிகொடிப் பூக்காடு ஞானசம்
பந்தரைப் பற்றி யான
பண்ணியல் வரலாறு தேவாரத் திறனாய்வு
பாராளும் வள்ளு வத்தின்

4

நல்லியல் அறம்வேதம் நந்தமிழில் ஆக்கிய
நனிபெரிய புராண ஆய்வு
நாடும்பௌத் தம்சமணம் கிறித்துவம் நறுந்தமிழில்
நடத்திய தொண்டு வாழ்வு!

## மொழியியல் ஆராய்ச்சி முதலாயின

மொழியியல் ஆராய்ச்சி முதலாக உலகாளும்
முப்பாலின் விளக்க மாக
முறையான முயற்சியின் நிறைவாக விளங்கும்நம்
**மு.வரத ராச னரின்**
மொழிவர லாறுமொழி நூல்தாயின் முறைமையில்
முந்துதமிழ்ப் பாலை யூட்டும்
முதுபுலவர் **ஞா.தேவ நேயப்பா வாணரே**
மொழிந்திட்ட முதல்தாய் மொழி
வழியினில் திரவிடத் தாய் வாழும்இலக்கிய
வான்தொட்ட அ.ச. **ஞான**
**சம்பந்தம்** வடித்திட்ட இலக்கியக் கலைவந்த
வளர்ச்சியின் முதன்மை யான
தொழிலென இலக்கிய வரலாற்றுத் தொடர்கண்ட
**தூயவர் கா.சு. பிள்ளை**
தொட்டுண்மை ஆராய்ச்சித் துறைபோய கழகத்தின்
தொண்டுக்கும் நன்றி யுண்டோ?!

## திருமுறை யாராய்ச்சி

வருமுறையை அறியாமல் திரைமறைவில் வாழ்ந்துசெலும்
வரைமுறைக ளற்ற உயிர்கள்
வையத்தில் வாழ்வாங்கு வாழ்முறைமை காட்டிநேர்
வான்புதுமை ஈட்டி நல்கும்
திருமுறைகள் தெளிவித்த சித்தாந்த பண்டிதர்
திரு. **ராம நாத பிள்ளை**
திருமுறையா ராய்ச்சியில் தேவார ஒளிநெறி
வித்து முருக வேளின்

பெருமுறைக் கும்திருப் புகழ்செய்த தணிகைமணி
**செங்கல்வ ராய பிள்ளை**
பெய்தளித் திட்டபெருஞ் சிந்தனைப் பிழிவுருப்
பெறுமுறைமை பெருமை யாகத்
தருமுறைமை செய்தொருமைச் சமயவுல கில்தக்க
சமயத்தில் மிக்க தொண்டும்
தனிமுறையில் ஆற்றிவரும் கழகமே சைவத்தின்
தாய்வீடு தமிழின் வீடு. 7

மறைமலை அடிகளார் ஆராய்ச்சி

மறைந்திடும் மாத்தமிழ் மரபென்னும் நிலையினில்
மலையாகத் தடுத்து நின்று
மறையாத மாண்பிட்ட **மறைமலை யடிகளார்**
மலையாத மொழிக்க லப்புக்
கறையினைக் கழுவிய **தனித்தமிழ்த் தந்தையார்**
கலையியற் கடல்க டந்து
காலமெல் லாமுறை யாராய்ச்சி மலையேறிக்
கண்டபன் மூலி கையால்
நிறைவான மக்கள்நூ ருண்டுயிர் வாழ்க்கையும்
பொருந்துபொருந் தாத உணவும்
நித்திரை யோகமும் அறிதுயில் வேகமும்
நெடுந்தொலைவி லுணர்த லோடு
குறைவிலா வாழ்வியல் கூத்தியல் இறைவியல்
கொண்டுவந் தருளி வெல்லும்
கொள்கையால் கழகத்தைப் பல்கலைக் கழகமாய்க்
கூட்டினர் குடும்ப மானர். 8

சொற்பொழிவு ஆராய்ச்சி நூல்கள்

கோடைமழைப் பொழிவாகப் போகாமல் கொள்கையிற்
கோடாமல் பருவ மாரிக்
கொடையினைக் கொண்டுபயிர் புடைசூழ விளைவித்துக்
கூடுநிறை யேற்ற லேபோல்
மேடைமழைச் சொற்பொழிவு மேல்காற்றே ஆகாமல்
மின்னலாய்க் கருத்தி ழைத்த
மேதக்க ஆராய்ச்சி மிதொக்கப் பெருநூல்கள்
மெருகிட்ட பதிப்பி னோங்க
ஏடுபெற ஓர்புதுமை ஏற்பாட்டில் மாநாட்டின்
எழிற்சங்க இலக்கி யங்கள்
இடைக்காலப் பிரபந்தத் தொடைநூல்கள் மாநோன்பு
எடுக்கின்ற கந்தர் சட்டி
நாடுமொரு சிவஞான போதம்நேர் அரசியல்
நல்லவறி வத்த னைக்கும்
நடைபெற்ற உரைகட்குப் படிவைத்த **கழகத்தை**
**நாளெலாம் போற்ற லாமே!**

நற்றாய்; செவிலி; பொன்விழா வாழ்த்து:

திருவரங் கங்கண்டு செயலிலங் கங்கொண்டு
செழிப்பரங் கங்கூட் டிடும்
திருநெல்லை யரங்கத்தில் **திருவரங் கம்பிள்ளை**
செய்தவப் பயன ரங்கில்
ஒருவரங் கண்டிந்தக் கழகத்தை ஈன்றுயிர்
ஒத்தநற் றாயாயி னார்!
ஊட்டுந்தாய் போற்றிச்சீர் ஆட்டுந்தாய் புகழினில்
ஊக்குந்தாய் செவிலித் தாயாய்
வருவரங் கொருவரே **தாமரைச் செல்வரே**
**வ.சுப் பையா பிள்ளையே**
வளர்த்திடவும் கழகமகள் வளமாக ஐம்பது
வயதளவும் வாழ்ந்து **பொன்னைத்**
தருவரங் காட்டுமோர் **தவவிழாக்** கண்டுளாள்!
தாயாக நூல்கள் கோடி
தருகுவாள் பெருவிழாப் பெறுகுவாள் ஒருதனித்
தமிழாக வாழ்வள் மன்னோ!

# பொன்போன்றுயரும் புகழுடன் வாழ்க!

புலவர் திரு. ஆ. பொன்னுசாமிப் பிள்ளை அவர்கள்
தொப்பப்பட்டி, சேலம் மாவட்டம்.

நேரிசை யாசிரியப்பா

பொன்விழாக் கொள்ளும் புகழ்ச்சைவ நூற்கழகம்
செந்தமி ழோங்கச் செய்துவருஞ் செயலை
என்னு லியன்றவா றியம்பி யதனை
வாழ்த்துவ லன்பீர் மகிழ்ந்தினிது கேண்மின்
அமிழ்தினு மினிய தமிழ்மொழிக் காணு
ஒல்காப் பியமே முதலாப் பல்வகை
இலக்கண நூலும் கலக்கறுத் தெனையாள்
முக்கணன் முருகன் முழுதுல கீன்ற
எம்பெரு மாட்டி என்றிவர் தாமும்
சுவைத்திடு மொன்பான் சுவைசே ரிலக்கியக்
கடலும் துன்பக் கடல்நின் றேற்றி
உலகிடை யன்பர்க் குறுதி பயக்குஞ்
சைவ சமயந் தனைப்பகர் நூலும்
கற்போர் தமக்குக் கண்போன் றினிய
வாழ்க்கை நெறியினை வகுத்துக் காட்டும்
திருக்குற ளதனைத் தேர்ந்துல குய்ய
நாட்குறிப் பொடுபல் வகைப்படு நல்ல
பதிப்பும் பயில்வார்க் கிதஞ்செயும் பண்பார்
வரலாற்று நூலும் வரம்பில் நிறுத்தி
மாந்தரைக் காக்கும் மாண்பமை சட்ட
நூலும் இந்த ஞாலந் தனையினி
தாட்சி புரிவதற் காகு நூலும்
பொருளி னியல்பைப் புலங்கொளத் தேற்றும்
அறிவியல் நூலும் ஆன்றோர் நூலின்
உண்மையை யுணர்ந்துளத் துரம்பெற வுதவும்
அரும்பெற லினிய வாராய்ச்சி நூலும்
ஈன்றோர் தமைப்பே ரின்பத் தாழ்த்தும்
மழலை மொழிபகர் குழவிகட் காகும்
இனிமைமிக் கோங்கு மெழில்கூர் நூலும்
திங்கள் தோறும் வெளிவந் தெங்கும்
சென்றறி வூட்டுஞ் செந்தமிழ்ச் செல்வியும்
பிறமொழி யாளரும் தமிழிற் பிறங்கும்
நயத்தினை யறிந்து பயன்பெறு மாறுபல்
இலக்கியத் தொடுகலை வரலா றிவற்றை
ஆங்கிலந் தனிற்பெயர்த் தாக்கிய நூலும்
என்றிவை தாமும் இன்னவை பிறவும்
அழியா வகைநன் கச்சிற் பிழையறப்
பதிப்பித் தளித்தும் பாருளோர் தண்டமிழ்
இலக்கியத் தமைந்த இனிமைகூர் நயத்தைக்
கேள்வி வாயி லாகவும் கேட்டு
மகிழ்ந்திடு மாறுபல் மாநாடு நடத்தியும்
பன்னல முந்திகழ் சென்னையம் பதியில்
மறைமலை யடிகள் நூல்நிலை யத்தை
நிறுவியும் பல்லா வரத்தி லுறுஞ்சீர்க்
கலைமன்றந் தன்னைக் கவின்பெற வமைத்தும்
எல்லையில் வளஞ்சேர் நெல்லையம் பதியில்
சிவஞான முனிவர் எனுந்திருப் பெயர்சேர்
நூல்நிலை யத்தொடு நுவல்கா சில்லாப்
படிப்பக மொன்று பாங்குற வமைத்தும்
திருநெல் வேலியில் திருவள் ளுவனர்
தமிழ்க்கல் லூரி தன்னொடு சீர்சால்
குழந்தை வளர்ப்புப் பள்ளி யமைத்தும்
தமிழுஞ் சைவமும் தழைத்தினி தோங்கச்
செய்திடுஞ் சைவ சித்தாந்த மெய்ந்நூற்
பதிப்புக் கழகம் பரம னருளால்
இன்றுபோல் தமிழை என்றும் வளர்த்து
நூற்பய னுகும் நாற்பய னும்பெறீஇ
உலகம் முழுவதும் நலம்பெறப் பரப்பிப்
பொன்போன் றுயரும் புகழுடன்
அன்போ டவனி வாழ்த்த வாழியவே.

# கழகம் வாழ்க

புலவர் மாமணி, திருஞானசம்பந்த முதலியார் அவர்கள்
காஞ்சி மெய்கண்டார் கழகச் செயலர், ஆளுடைய பிள்ளையார் பாளையம், காஞ்சிபுரம்

நிலைமண்டில ஆசிரியப்பா

**திருமலி பாண்டிச் செந்தமிழ் நாட்டுப்**
பொருனை வளந்தரும் புண்ணிய மண்ணில்
செருந்தி செம்பொன் மலரினைச் சிந்தும்
திருநெல் வேலிச் சிவனுறை தலத்துத்
தொன்மைச் சான்றோர் தோற்று வித்த
**சைவசித் தாந்தநூற் பதிப்புக் கழகம்**
தனித்தமிழ் மொழிக்கும் சிவநெறி தனக்கும்
தனித்தொண் டாற்றித் தலைநகர் சென்னையில்
ஆற்றுஞ் செயல்கள் அளப்பில வாகும்
ஏற்ற சொற்கள் இயம்புதற் கிலவே
திட்ட மாகச் செயல்புரி **கழகம்**
**பொன்விழாக்** கொள்ளும் புனிதநன் னாளில்
பன்மொழி மாந்தரும் பல்வே றிடத்தரும்
நன்மனச் சொல்லால் நவில்வது நலமே
உலக நூலாய் உயர்திருக் குறளாம்
**தெய்வத் திருமறை** திக்கெலா மேற்கச்
செய்கடப் பாட்டின் திறனெலாம் பொருந்தப்
பல்வேறு வகையிற் படிகளை அமைத்து
நல்கிய நன்மனம் நாளும் வாழ்க
அடக்க வடிவில் அமையத் **திருக்குறள்**
நாட்குறிப் புப்படி நலம்பெற நல்கும்
அன்பின் அருட்கொடை அவனியில் வாழ்க
இணையில் சங்கநூல் இலக்கி யங்களும்
இலக்கண நூல்களில் எண்ணுந் தலைமைத்
தொல்காப் பியமுதல் சொல்லும் நூல்களும்
எளிதில் எழிலுடன் ஏற்கத் தரும்நல்
அளிமனம் வாழ்க ஆட்சித் துறைத்தமிழ்
பேசிடு நூல்கள் பீடுடன் வாழ்க
திங்க ளிதழாஞ் **செந்தமிழ்ச் செல்வி**
மங்கள மாக வளர்ந்து வாழ்க
உய்வகை அளிக்குஞ் சைவசித் தாந்தத்
தெய்வ நூல்களைச் செம்மையி லளித்தும்
**மாதவச்சிவ ஞானமா முனிவர்**
ஓதி மக்கள் உய்ய அளித்த
தமிழ்ச்சிவ ஞான மாபா டியத்தைக்
கண்கவர் வனப்பிற் கட்டிக் கொடுத்தும்
தெய்வச் செந்தமிழ்ச் சேக்கிழார் பெருமான்
அருளிய **பெரிய புராண அருள்நூல்**
அளித்தும் ஆற்றும் அருஞ்செயல் வாழ்க
திருக்கோ யில்களில் தெய்வத் தமிழ்மொழி
**மலர்வழி பாட்டிற்** குகந்த வகையில்
ஆக்கிய நூல்களின் அருணலம் வாழ்க
பல்லவ புரத்துப் பரனென வாழ்ந்து
நல்லவர் நால்வர் தங்களை நல்கி
அருங்குணச் செல்வியர் தங்களை அளித்துப்
பாவலர் நாவலர் பன்மொழிப் புலவர்கள்
மேலை நாட்டு வித்தகர் பலரும்
யாவரும் மதிக்க இலங்கிய முனிவர்
மறைமலை அடிகளின் மாமுதல் மருகர்
கருஞூ லம்மெனுங் கழகச் செயலர்
**திருவ ரங்கச் செம்மல்** ஆற்றிய
பொருவருந் தொண்டுகள் புகழுடன் வாழ்க
அன்னோன் பின்வரும் அருங்குணத் தம்பி
சொன்னலச் செல்வன் தூயவுள் ளத்தன்
தமிழர் நலம்பெறத் தண்ணளி யுடனே

அமிழ்தத் தமிழ்நூல் அளிக்கும் அண்ணல்
பொதுநலத் தொண்டே புரியும் புண்ணியன்
யாவ ரிடத்தும் இன்முகத் துடனே
ஆவன பேசும் அருஞ்சொற் செல்வன்
புலவர் தங்களைப் போற்றி வாழ்பவன்
கழக ஆட்சிப் பொறுப்பன் கண்ணியன்
அழகின் நூல்களை அச்சிட வல்லோன்
தொண்டாற் சிறந்த தொல்லோன் **பாரத**
**மக்கட் டலைவர்** மகிழ்ந்து வழங்கிய
தக்க வெகுமதித் **தாமரைச் செல்வன்**
**சுப்பை யா**வெனச் சொல்லும் நல்லோன்
இப்புவி வாழ இன்றமிழ் நூல்கள்
இருக்குங் காலம் வரையும் வாழ்க
நிலவும் பாம்பும் நீருங் கொன்றையும்
நிலவச் சூடிய நீள்சடை நின்மலன்
**காந்தி மதியமை** ஏந்திய இடத்தன்
**நெல்லை யப்பர்** எல்லையில் கருணையால்
கழகம் வாழ்க! கழகக் குழுவினர்
உறுப்பினர் மற்றும் உள்ளவர் புலவர்கள்
பொறுப்பினர் யாவரும் புரியும் **பொன்விழாச்**
சிறப்புடன் வாழ்க தெய்வப் பொருளை
ஆற்று மணலினும் பன்னுள் வாழ்க
வாழ்க நூல்களின் வளம்பெறு மாணவர்
**அப்பர் அச்சகத்** தொழிலினர் வாழ்க
ஆதர வாளர் அறிஞர்கள் வாழ்க
**வாழ்க வாழ்க வளமலி நிலத்தே.**

# வாழ்க நன்றே

**நெல்லை திரு. ந. சொக்கலிங்கம்,** எம். ஏ., **அவர்கள்**

*தமிழ் விரிவுரையாளர், குமர குருபர சுவாமிகள் கலைக் கல்லூரி, திருவைகுண்டம்.*

எண்சீராசிரிய விருத்தம்

தக்கபல கலைகளையே தமிழிற் சொல்லித்
    தகுதிபல பெற்றிருந்த கால மன்றே!
அக்கலைகள் சொல்லிடலாம் ஆனல் இந்த
    அறிவியலின் கலையைத்தான் சொல்ல லுண்டோ?
திக்கெட்டும் புகழ்ந்திடுமுத் தமிழில் என்பார்
    தீமைக்குத் துணைபோகும் தீய ரிங்கே!
வக்கற்ற அன்னோரின் வாய டைக்க
    வந்தனவே கழகத்தின் நூல்கள் தாமே! 1

சட்டத்தை எப்படிநீர் தமிழில் ஆக்கிச்
    சட்டத்தை நாட்டிடுவீர் என்று கேட்பார்
கொட்டத்தைக் குறும்புகளை அடக்குதற்காய்க்
    கூறுமொரு நூற்பதிப்புக் கழகம் தோன்றி
இட்டதொரு வாய்ப்பூட்டும் அன்ன வர்க்கே!
    ஏற்றபல அறிவியல்நூல் தமிழில் தந்த
கெட்டிப்பொன் சித்தாந்தக் கழகம் இன்றேல்
    கெடுத்திருப்பார் நமையெல்லாம் கேடு சூழ்ந்தே! 2

ஆட்சிக்குத் துணையான அரிய நூலை
    ஆவணத்தைப் பாதுகாக்க அமைத்துத் தந்த
மாட்சிமிகு மணித்தமிழின் நூலும் ஆல
    மரமெனவே படர்ந்துள்ள ஆட்சிப் பண்பைக்
காட்டிடவே வேண்டுமெனப் புலமை மிக்கார்
    கருத்துடனே படைத்துவந்த நன்னூல் பன்னூல்
காட்சிக்கும் கருத்துக்கும் இனிமை நல்கும்
    கழகத்தார் பதிப்புக்கள் பலவே காண்பீர்! 3

ஆன்றதமிழ்ப் பற்றுலே மிக்க நல்ல
அரும்புலவர் தமைக்கூட்டிக் கோடி காட்டித
தோன்றுகின்ற பல்கலைக்கும் நூல்க ளாக்கத்
துணை நிற்கும் தூயதமிழ்த் தொண்டர் நல்ல
சான்ருேராம் சுப்பையாப் பேரர் வாழ்க!
தரணி மன்றில் தமிழ்மொழியின் சிறப்புத் தன்னை
ஊன்றிடவே செய்கின்ற கழகம் வெல்க!
உயர்பொன்னின் விழாவெடுக்கும் கழகம் வாழ்க! 4

இனிக்கின்ற தனித்தமிழின் ஏற்றங் கொண்டே
எடுக்கின்ற பணியெல்லாம் சிறந்து நிற்கத்
தனிக்கின்ற தமிழ்ச்சுவடி அச்ச டித்துத்
தக்கபடி தந்துபடி எனவ மைக்கும்
பணிக்கின்று முந்திநிற்கும் கழகத் தொண்டால்
பைந்தமிழ்தான் சீர்பெற்றுச் சிறக்கு மன்ருே!
கணிக்கின்ற அருந்தமிழைப் பாது காக்கும்
கழகமுயர் சிறப்புடனே வாழ்க நன்றே!

# தமிழ்த்தாய் தங்கவிழா

**பேராசிரியர் திரு. எஸ். அப்துல் ரகுமான், எம். ஏ., அவர்கள்**

*தமிழ்த்துறைத் தலைவர், இசுலாமியா கல்லூரி, வாணியம்பாடி*

நேரிசை ஆசிரியப்பா

போற்றுவோம் வாரீர்! புகழுவோம் வாரீர்!
கீற்று நிலாவெனக் கெழுமிய கழகமின்
ருற்றிய பணிகளால் அரும்புகழ் அடைந்ததைப்
போற்றுவோம் வாரீர்! புகழுவோம் வாரீர்!
மறைமலை எனுமொரு மறையாத் தமிழ்மலைக்
குவட்டில் நின்று குளிரொளி தந்தவர்
முத்து முத்தமிழ் மொழிவய லுக்கொரு
வித்தும் நீரும் வேலியு மானவர்
முக்கழ கத்துமுன் முதிர்ந்த தாய்த்தமிழ்
இக்கழ கத்தினி திருக்கப் "புத்தகம்"
கட்டிப் பணிசெயும் கட்டடக் கலைஞர்
அச்சிடும் நூல்களால் அணிபெருந் தமிழ்த்தேர்க்
கச்சிடும் ஆற்றலர் அசைவிலாத் தொண்டினர்
தச்சிட்ட பாவைநேர் தையலர் தம்தனம்
கச்சிட்டு மறைக்கும் கற்பு நாட்டிலே
மெச்சிட்ட தமிழில் மிகுந்துள பெருந்தனம்
அச்சிட்டுக் கைகளில் அறிந்திடும் வள்ளல்கள்
நுண்தமிழ்ப் புலவோர் நூற்ற நூலினுல்
அறிவாடை நெய்யும் அழகிய நெசவினர்
பதிப்பித்துக் கொண்டதோர் பத்தினி அவளுடல்
புதுப்பித்துக் கொணர்ந்த புதுமைபோல் நூல்கள்
பதிப்பித்துத் தந்து பழந்தமிழ் மகள்நலம்
புதுப்பித்துத் தந்த புண்ணியப் பணியினர்
தேனுெலித் தமிழைத் திக்கெலாம் பரப்ப
வானுெலி யாவது வளஞ்சேர் ஆங்கிலம்
என்ப துணர்ந்தே இயற்றமிழ் வளமெலாம்
ஆங்கிலத் தாக்கி ஆங்கிலா ஆக்கம்
ஆங்கிலம் அடைந்திட அரும்பணி செய்தவர்
வரகத் தனையும் வண்டமிழ் அறியாப்
பிரகத் தனையும் பிணித்தகப் பொருளின்
கனிச்சுவை காட்டிய கபிலன் போலவும்
மன்னவர் வடக்கு மண்ணினை ஆளுவோர்
தென்னவர் தமிழின் திருநெறி அறிந்திடக்
கூறிய குமர குருபரர் போலவும்
ஒளிநாட் டறிவினை வெளிநாட் டவரும்

ஏற்று மதித்திட எழில்மதித் தமிழ்வளம்
ஏற்று மதிசெய்த இணையிலாப் புகழினர்
சுங்க வரிகளால் சுணங்கிடா தழகிய
சங்க வரிகளின் தங்கம் கடத்தும்
கண்ணிய மான கடத்தல் காரர்
பாற்பொடி அளிக்கும் பால்மனத் தவர்க்குமுப்
பாற்படி அளிக்கும் பண்புடை நெஞ்சினர்
மாலடி அளக்கமுன் மண்ணளித் தன்னவன்
காலடிக் கடங்கிய காவலன் போலன்றி
ஆலடி நிழலென அகிலம் மகிழ
நாலடி நல்கிய மாவலி யோர்கள்
கழகத் தமர்ந்து கனித்தமி ழாய்ந்த
கண்ணுதற் கடவுளைக் கழகத் தாய்ந்தவர்
தென்னு! டுடைய சிவனையிவ் வுலகின்
எந்நாட் டவர்க்கும் இனிதறி வித்தவர்
தலைநிமிர்ந் திருக்கும் தமிழ்நாட் டவரின்
இலக்கண வளமும் இலக்கிய நலமும்
பொய்யறி விலாத மெய்யறி வொளியும்
வெளிநாட் டிடத்தும் ஒளிநாட்டச் செய்தவர்
பொன்விழாக் காணும் புகழ்நிலை அடைந்தார்
என்விழா இதுவென இனித்தனள் தமிழ்த்தாய்
தங்க விழாவோ? தமிழ்வர லாற்றில்
தங்க விழாவோ? தமிழே வாழ்த்துக!
உச்சிப் புகழ்ப்பணி ஒய்விலா தாற்றி
மெச்சிட வாழ்க! விளங்குக!
அச்சிட்ட எழுத்தினும் ஆண்டு பலவே!

# பல்லாண்டு விளங்கி வாழ்க

புலவர் திரு. சி. இராமசாமி அவர்கள்
*முதல்நிலைத் தமிழாசிரியர், அரசினர் உயர்பள்ளி, ஒற்றைக்கடை.*

அறுசீராசிரிய விருத்தம்

உலகினிலே மக்களெனப் பிறந்தவர்கள் அனைவருமே
உயர்ந்த வாழ்வை
நலமுறவே நாடாமல் மாக்களெனப் பலர்திரியும்
நலிவை நோக்கிப்
புலமருவு சான்றோர்கள் அவரகத்தே இறையுணர்வைப்
புகுத்த வேண்டித்
தலமருவு சமயமெனுந் தருவொழுக்க நெறியொன்றைச்
சமைத்தா ரன்றோ? 1

இவ்வகையிற் பலவேறு சமயநெறி யுலகிடையே
எழுந்த தேனும்
அவ்வகையில் மிகச்சிறந்த **"அன்பே"** எம் **"சிவமெ"**ன்றும்
அதனிற் பூத்த
செவ்வியநன் னெறியொன்றே திகழ்'சைவ சமய'மென்றும்
தெளிந்தார் முன்னோர்
ஒவ்வுமதன் கருத்துலவா வொருசமயம் உலகமிதில்
உளதோ சொல்வீர். 2

சைவமெனும் இச்சமய சத்தான முடிவுகளைச்
சாற்றும் பாங்கே
கைவருநற் **சித்தாந்த** மெனவுரைப்பர் சமயநெறிக்
கரைகண் டோர்கள்
தெய்வநெறி யிதுபரவத் திருவுள்ளங் கொண்டவர்கள்
செய்து தந்த
உய்வதனுக் குரியனவாம் உயர்நூல்கள் இந்நாளில்
உலவல் யாரால்? 3

இனித்திடுசெந் தமிழ்நடையில் எம்மொழியும் கலவாமல்
எழுதிப் பேசித்
தனித்தமிழென் ரேரியக்கந் தோற்றுவித்த **மறைமலையார்**
தகைமை யோர்ந்து
குனித்திடுதொண் டினிற்சிறந்து பின்னரவர் மருகரெனக்
குலவி வாழ்ந்த
மனித்தருக்குள் மிகச்சிறந்த **திருவரங்க னூர்**மனத்தின்
வளர்த்தா லன்றோ ? 4

வித்தகரும் வெளிநாட்டு மேதைகளும் மிகப்போற்ற
விளங்குஞ் சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகமிதைத் தோற்றுவித்துச்
சிறந்த நூல்கள்
சத்தான தனித்தமிழிற் பிழையெதுவுஞ் சாராமல்
தரத்தால் ஓங்கி
மெத்தநலம் பயக்கின்ற விதத்தினிலே நாடெங்கும்
மேவச் செய்தார். 5

பெருந்தகையாம் அரங்கர்தமைப் பின்பற்றி அவரிளவல்
பேரன் புள்ள
அருந்தகையார் சுப்பையா பிள்ளையெனும் ஆன்ரோர்தம்
அரிய தொண்டால்
திருந்துமெழிற் சமய நூல் பல நூற்றுக் கணக்கினிலே
சிறக்கும் வண்ணம்
விருந்தென்னும் புதுமைநலம் மிளிர்கின்ற வகைபதித்து
விதைக்கின் றூரால். 6

செந்தமிழை மிகவிரும்பித் தென்றிசைக்கண் திரும்பிநடஞ்
செய்யுந் தில்லைச்
**சுந்தரனும் நடராசன் திருவுருவே கழகத்தின்
தூய சின்னம்**
நந்தமிழும் சைவமும்வெவ் வேறென்னும் நனவின்றி
நானி லத்தோர்
சிந்தையிலே சிவம்பெருக்கும் செல்வரவர் பணியருமை
செப்பற் பாற்றோ ? 7

தவஞான நருமேன்மைச் சமயகுர வர்பலரும்
சமைத்த நூல்கள்
சிவஞானம் அருள்கின்ற சித்தியார் போதமுதற்
சிறந்த நூல்கள்
பவமான வழியகற்றும் பன்னிரண்டு திருமுறைகள்
பதித்து மாந்தர்
உவமானஞ் சொலவொண்ணு உயரட்டைக் கட்டுடனே
உலவச் செய்வோர்.

சமயநெறி வளர்த்திட்ட சான்றோர்தம் வரலாறும்
அவர்தம் பாவில்
அமையுமருங் கருத்துக்கள் விளக்குமுரை நடைநூல்கள்
ஆய்வின் மூலம்
நமையிறையின் வழிப்படுத்தும் நாட்டமுறும் ஆராய்ச்சி
நவிலும் நூல்கள்
தமையளிக்கும் நூற்பதிப்புக் கழகம்போல் ஒன்றேனும்
தமிழ்நாட் டுண்டோ ?

தமிழ்மொழியின் தனித்தன்மை சைவசித் தாந்தத்தின்
தகைமை எல்லாம்
இமிழ்கடலுக் கப்பாலும் இருக்கின்ற பிறநாட்டார்
ஏற்கும் வண்ணம்
அமைவான ஆங்கிலத்தும் மொழிபெயர்த்திங் கச்சேற்றி
அழகு நூலாய்
சமைத்துதவும் சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்போல்
தமிழ்நாட் டுண்டோ ?

திருத்தொண்டர் வரலாருய்த் திகழ்பெரியர் புராணமிதன்
சிறப்பை யோர்ந்து
கருத்தொன்றி ஆர்வமுடன் வெளிநாட்டு மாந்தர்களும்
கற்கும் வண்ணம்
பெருத்தவரு வாயெதுவுங் கருதாமல் பெருந்தமிழோ
டாங்கி லத்தும்
அருத்தமுடன் பதித்ததியாண் டைம்பதுற்ற பொன்விழவ்
அமைப்பே யன்றோ ?

சைவநெறிச் சித்தாந்த நூற்பதிப்புக் கழகமிது
தமிழர் வாழ்வின்
தெய்வநெறி தமிழாக்கஞ் சிறந்தோங்க மேன்மேலுஞ்
செழித்து யர்ந்து

வையகத்தோர் பாராட்ட வைரவிழாக் காண்பதற்கும்
வளர்தொண் டாற்றி
மெய்நிறைந்த புகழாலே மேதினியிற் பல்லாண்டு
விளங்கி வாழ்க!

# அருங்கழகம் வாழ்கமிளிர்ந்து

**தவத்திரு. அழகரடிகள் அவர்கள்**

*திருக்குறள் பீடம், குருகுலம், மாம்பாக்கம்.*

நேரிசை வெண்பா

கல்வி பரப்புங் கழகமென் றெங்கெங்கும்
பல்வகையும் ஆய்வார் பரிந்துரைக்கச்—'செல்வி'யொடு
செந்தமிழை ஓம்பிச் சிவநெறியில் காத்தளிக்கும்
எந்தமிழர் செய்தவமிங் கீது. 1

காலத்திற் கேற்பக் கவினுறு நன்னூல்கள்
சாலப் படைத்துத் தமிழ்வளர்த்து—மேலுநனி
காத்தளிக்குங் கல்விக் கழகம் கலையுலகு
பாத்தொடுக்க வாழி பணைத்து. 2

இந்தியை நீக்கி இனிய தனித்தமிழ்
உந்திச் செழிக்க ஓங்குவித்து—எந்தத்
திசையினுந் தென்றிசையே சென்றுபுகழ் ஏற
விசையூட்டும் நற்கழகம் வென்று. 3

எந்தஞ் செழுங்குறளை ஏருலகச் செல்வத்தை
வந்தெவருங் காணுத மாட்சிமையில்—முந்துபல
மாநாடு சொற்பொழிவு மல்குவெளி யீடுகளால்
வானேங்க வைத்ததே வாழ்த்து! 4

எத்துணையோ செம்புலவர், எத்துணையோ நன்னூல்கள்
எத்துணையோ சொற்பொழிவின் ஏற்றங்கள்—எத்துணையோ
கல்விச் செழும்பணிகள் கண்ட கழகமிது
பல்லிடத்தும் ஓங்குகவிப் பார். 5

நெல்லைத் திருவரங்கர் நேயமிக அன்றளித்த
செல்வக் கழகச் செழும் பணிகள்—நல்வகையில்
மும்முரமா வோங்க முயல்வார் அவரிளவல்
செம்மைநன் றிக்குரிய சீர்.

தாமரைச் செல்வன் தனிப்புகழைத் தாழ்த்தியிவர்
காமருசீர் வாழ்விற் கலைகவர்ந்த—சேமமுறத்
தண்டமிழால் நூல்படைத்தார் தாமரைச் செல்வராய்ப்
பண்டறியா இன்பம் பயின்று.

எண்ணுவதும் ஏவல் இயம்புவதும் தொண்டுபல
நண்ணுவதும் எல்லாம் நறுந்தமிழ்க்கே—மண்ணவிரு
வாழ்வுமற் றில்லையென மன்னுதிருச் சுப்பையா
வாழ்வுயர்க ஆட்சி மலர்ந்து.

ஐம்பது வேனில் அலர்ந்து மறைமலைசேர்
உம்பர்களும் போற்றும் உயர்கழகம்—செம்பதுமச்
செல்வரால் மேலுமிதன் சீருயரப் பாருயரும்
தொல்லைகெடும் மேவும் சுவை.

தித்திக்குந் தேனமிழ்தச் செந்தமிழ்நூல் பற்பலவும்
எத்திசையும் போற்றும் எழின்மரபில்—ஒத்தவகை
அச்சியற்றி நல்கும் அருங்கழகம் தேர்ந்தபலர்
மெச்சிவர வாழ்க மிளிர்ந்து.

# நற்கழகப் பணிவாழ்க

**தவத்திரு சாந்தலிங்க இராமசாமியடிகள் அவர்கள்**

பேரூராதீனம், பேரூர்; கோயமுத்தூர்.

கோச்சகக்கலிப்பா

தெய்வத் தமிழ் பரவிச் சிவநெறியில் மக்களினம்
உய்வைப் பெறப்பலநூல் உலகிற்குப் பதிப்பித்து
மெய்ம்மைப் பணிபுரிந்து விளங்குசைவ சித்தாந்தம்
எய்தும் நூற்பதிப்பில் இயல்கழகம் தமிழ்நாட்டில். 1

சங்கத் தமிழ்நூல்கள் சமயப்பெரு நூல்கள்
துங்கம் மிகுமறிவுச் சுடர்நூல்கள் இன்புருவச்
சிங்கத் தமிழ்ச்சிறூர் தின்ம்பயிலும் நன்னூல்கள்
எங்கும் பரவ இனிதுபதிப் பித்துதவி. 2

புலமைவளர் உள்ளங்கள் பொலிவடையப் பிறநாட்டார்
நலம்நிறையும் பதிப்புயர்வு நாடுபுகழ்ந் தேத்திடவே
பலநூலும் வெளியிட்ட பண்பினை நா மறிந்துவக்க
உலவுமைம்ப தாண்டாக உயர்கழகம் ஓங்குகவே. 3

சிவநெறியைத் தமிழ்நெறியைச் சேர்ந்திலங்கு சான்றோரை
எவருமுணர்ந் திடவரலா றெழுதுவித்து மாநாட்டில்
அவரவர்க்கூ றிடுசொற்கள் அழகியநூல் ஆக்குவித்து
நலம்பொலிய வெளியிட்ட நற்கழகப் பணிவாழ்க. 4

வரலாற்றை இலக்கியத்தை வளர்புலமைப் பெரியோர்கள்
அரனடிபோற் றிடுமன்பர் அகங்குளிர உரையுடனே
உரனறிந்தன் புணர்வோடு வெளியிடுசுப் பையபிள்ளை
பரவுதமிழ் போல்வாழ்க பயனுடைய நூல்கள்பல. 5

பதிப்பிக்கும் பணியதனால் பண்ணூர்செந் தமிழ்வளர்த்துத்
துதிப்போர்க்குத் திருமுறையாய்ச் சூழ்ந்தாய்வோர்க் கிலக்கண
விதிமுறைகள் சிறந்தோங்க விளங்குசைவ சித்தாந்தம்
பொதிப்திப்பு நூற்கழகம் புவிபோற்ற வளர்ந்திடுக.

மெய்கண்டார் மற்றும் விரவு சிவநெறியில்
உய்வுற்ற மேலோர் உரைக்கும் பலநூல்கள்
சைவத்தின் திறத்தோடு தமிழர் நெறிதழைக்கச்
செய்முறையும் பாங்கும் சிறக்கப் பதிப்பித்தல்.

திருக்கோயில் நம்தமிழர் திறன்காட்டும் கருவூலம்
உருக்கோலும் நம்பெருமான் உவந்துற்ற தினியதமிழ்
விருப்போடு மலர்தூவி வியன்தமிழால் போற்றிடவும்
திருத்தமுறு நூலியற்றல் ஆதியநற் பணிகண்டோம்.

திருவரங் கம்பிள்ளை செம்மனச்சான் றோர்துணையால்
திருசைவ சித்தாந்த நூற்பதிப்புச் சார்கழகம்
இருமைநலம் பெறச்சமயத் திலங்குபல நூல்பதிப்பித்
தருமையிவை யெனவுலகம் பாராட்ட அளித்துயர்ந்து.

நற்கழகப் பணிபுரியும் நந்திருசுப் பையபிள்ளை
சொற்படிநூற் பாங்குபெறச் சூழ்ந்துபணி யாற்றிடுவோர்
பொற்பொடுநற் சமயநெறி பூண்டோர்தம் திறம்வாழி
கற்பவர்போற் றிடத்திகழும் கழகத்தின் பணிவாழி.

# கசடறக்கற்கக் கழகநூல்

திரு. கி. பழனியப்பன் அவர்கள்
*தலைவர், திருவள்ளுவர் கழகம், மதுரை*

நேரிசை வெண்பா

கற்றிடும் நூலோ கணக்கில காண்கினும்
கற்றோர்கள் தேடிக் கழகநூல் - பெற்றதேன்
கற்கக் **கசடறக் கற்பவை** கற்றபின்
நிற்க அதற்குத் தக. 1

தெளிவுரை தந்த திருமுவ வைத்தான்
வழிவழி வாழ்த்துவதேன் மக்கள் - பழியோ
அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல். 2

வள்ளுவர் காட்டிய வாய்மை நெறிதனை
உள்ளிடப் பல்லோர் உரைகளேன் - உள்ளுக.
தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். 3

சின்னஞ் சிறிதாய்த் திருக்குறளை அச்சிடல்
பொன்னெனப் பெட்டகத்தில் போற்றிடவோ - நன்றன்றே
ஒல்லும் வகையான் அறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல்.

நாள்தோறும் ஓர்குறளை நாட்குறிப்பில் காண்பதனால்
வாழ்வுபெற ஏதும் வகையுண்டோ - சூழ்ந்திடுக
தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு.

திருக்குறட் பேரொலி திக்கெல்லாம் கேட்டல்
பெருக்கழகத் தொண்டாம் பெரியீர் - ஒருக்காலும்
நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று.

# பேருடனே வாழி

முதுபெரும் புலவர், பேராசிரியர்,
**வித்துவான் திரு. பாலூர் கண்ணப்ப முதலியார்** *எம்.ஏ., பி.ஓ.எல்.*, **அவர்கள்**

நேரிசைவெண்பா

அச்சுப்பிழை யில்லா அருமைநூல் வேண்டிடில்
மெச்சும் கழகப் பதிப்பென்றே—எச்சகத்
தாரும் புகழ்ந்துபா ராட்டும் கழகமிப்
பேருடனே வாழிவா ழி.

பொன்விழாக் காணும் பொலிவார் கழகமினி
நன்மணி முத்துநூற் றாண்டெனும்—இன்விழாக்
கண்டுபல் லாண்டு பொலிக பொலிகவே
கண்ணுத லானரு ளால்.

# எல்லார் கழகமோடும் என்றென்றும் வாழ்க!

வித்துவான் திரு. தி. சு. ஆறுமுகம் (கவிஞர் சிவதாசன்) அவர்கள்
திருநெல்வேலி.

கலிவெண்பா

கார்பூத்த மெய்யன் கணபதியின் தாள்பணிந்து
சீர்பூத்த நெல்லைத் திருப்பதிக்கண்—பேர்பூத்த
தென்னிந் தியசைவ சித்தாந்த நூற்பதிப்பு
மன்னுபுகழ் சேர்கழக மாண்புதனைப்—பன்னுவனே
பத்தொன் பதுநூறும் பத்தி னிருமடங்கும்
தொத்தியநல் லாண்டில் துளிர்த்ததரு—மெத்தவும்
பேணி வளர்த்ததனல் பெட்புட னேபரந்து
மாணிய வாறிந்த மாநிலத்தே—ஆணியிட்டு
நன்ருய்க் கிளைத்து நறுமலர்பல் லாயிரமாய்க்
குன்ரு வகையளித்துக் கோப்புடனே—பொன்ரு
மணம் பரப்பி யென்றென்றும் மன்னுகின்ற வெல்லாம்
குணமிகுநற் சுப்பையா கொண்டல்—கணமேனும்
ஓயாது பெய்த உழைப்பினு லன்ருேவச்
சேயார்ந்த நல்லிசைச் செம்மலவன்—சாயாத
ஊக்கமுடன் சைவமும் ஒண்டமிழு மிங்குயர
ஆக்கமுடன் செய்த அரும்பணியை—நோக்கியன்ருே
தாமரைச் செல்வனெனச் சாற்றிநம் பேரரசும்
ஆமதற் குற்றவிரு தன்றளித்தார்—தேமதுரச்
செந்தமிழ் தன்னிலும் சீரடர் ஆங்கிலத்தும்
தந்தபன் னூல்வகைகள் சாற்றரிதாம்—சந்தமுறு
முப்பாலைப் பல்வகையாய் மூதுலகி லேபரப்பும்
ஒப்பறு நற்பணியை ஓதுகின்றேன்—துப்பார்
பரிமே லழகர் பரிந்தளித் திட்ட
உரைசேர் பதிப்போ டுயர்ந்த—திரமார்
குறள்வெண்பா நூற்கோவை கூறுமிரு பாகம்
செறிவாக வேசெய்த செம்மை—அறமாரும்
சீர்க்குறளின் பல்வகை தேருஞ் சிறப்போடு
சேர்க்குமிசை கையடக்கச் செம்பதிப்பும்—பார்க்குள்ளே
ஆருமோ ராறுநூ ருயிரம் விற்றநல
சீர்வரத ராசன் தெளிவுரையும்—பேருயர்
யோகியார் பாரதிசெய் ஆங்கிலவி ளக்கத்தோ
டாகிய பீடா ரணிபதிப்பும்—யூகமுடன்
பேசிடுங் காசுப் பிரமணிய பிள்ளைசெய்
மாசில் பொழிப்புரைசேர் மாண்பதிப்பும்—தேசுறு
முப்பா லறத்திற்கு முன்தண்ட பாணிசெய்த
ஒப்பில் விருத்தியுரை யொண்பதிப்பும்—செப்பும்
அறத்தைக் குறித்தே அழக ரடிகள்
திறத்தோ டுரைநூற்ப திப்பும்—புறத்தேயர்
போப்பையர் செய்த புகழாங் கிலப்பதிப்பும்
கோப்படரும் வள்ளுவர்வி ழாமலரும்—பாப்புலவன்
சுத்தானந் தம்செய் தூயகுற ளின்பமும்நம்
சொத்தான வள்ளுவர் சொல்லமுதும்—சத்தான
தண்ணார் குறள் கூறும் சட்டநெறி யின்பதிப்பும்
பண்ணார்ந்த கோதண்ட பாணிபிள்ளை—எண்ணார்ந்த
ஆராய்ச்சி செய்தமைத்த ஆதி முதற்குறளில்
சேருவமைச் சீர்விளக்கும் செந்நூலும்—பேருயர்ந்த
செல்லூர்க் கிழார்செய் பொருள்விளக்க மோடெங்கும்
சொல்லார்ந்த நற்பரி சுப்பதிப்பும்—எல்லார்
அகர வரிசையெனும் ஆன்றவொரு நூல்ும்
பகர வரிதாய பாங்கிற்—சிகரமெனச்
செய்தாங்கு மாந்தர்தம் செங்கரத்தும் சிந்தையிலும்
பெய்தாங் கியற்றும் பெரும்பணியும்—எய்துமோர்
நாற்பத்தெட் டாண்டுகளாய் நாட்குறிப்புத் தம்முள்ளே
சீர்பரப்புந் தெய்வத் திருக்குறளைப்—பார்பரவப்

1. 1920.

பக்கமொரு பாவாய்ப் பதித்து வரிசையுடன்
தக்கமுறை யிற்பொருளு ந் தந்தமைத்து—மிக்கபயன்
மன்பதை தாமடைய மாண்புடன் செய்தபணி
என்பகர்வ தென்னுல் இயலுமோ—அன்பரீர்
இங்ஙனம் நற்பணிகள் என்றும் புரிந்துவரும்
புங்க மிகுகழகப் பொன்விழவில்—துங்கன து
பேரருள் பெற்றுப் பிறங்கிட வாழ்த்தலன் றி
வேறுயாம் செய்யும் வினைவென்னே—சீரிய

பண்பும் முயற்சியும் பாங்கான நல்லுழைப்பும்
வண்புகழுங் கொண்டு வளர் தூயன்—தண்படரும்
இன்மொழியன் சுப்பையா ஏந்தலான் அண்ணுத்த
பொன்மலையன் சங்கரன் பொன்னருளால்—நன்மகிழ்வும்
பொங்குங் கருணை நிதிப் பொற்பும் நெடுஞ்செழிப்பும்
பங்கமில் வாணுளும் பண்ணிசையும்—இங்கெய்தி
**எல்லார் கழகமோ டென்றென்றும் வாழ்கவெனச்**
**சொல்லா விசைத்தேன் துதித்து.**

# என்றும் நன்ருக வாழ்க!

**சித்தாந்த பண்டிதர் திரு. ப. இராமநாத பிள்ளை அவர்கள்**

நேரிசை வெண்பா

செல்வமுயர் நெல்வேலித் தென்னிந் தியசைவ
நல்லசித்தாந் தக்கழகம் நாடெல்லாம்—தில்லையம்மை
அம்பல வாணரரு ளாலேம்பான் ஆண்டின்முன்
செம்மனத்தார் தோற்றுவித்தார் சேர்ந்து. க

சேர்ந்தார் திருவரங்கர் செம்மைத் திரவியனர்
ஆர்ந்த மறைமலையின் அன்பரிவர்—கூர்ந்த
அடிகடிரு ஆணையால் அந்நாள் கழகம்
வடிவுகொள முன்னுழைத்தார் வந்து. உ

வந்த விசுவநத பிள்ளை வரவழைத்த
முந்தூக்கத் தால்நூல் முதற்பங்கு—தந்ததனல்
நாட்டம் பெரிதாகி நம்மரங்கர் பேருழைப்பால்
ஈட்டப்பங் கேற்ருர் பலர். ௩

பங்குமோர் ஐயா யிரம்வெண் பொன் பப்பத்தாம்
இங்குமுதல் மூவா யிரஞ் சேர்ந்த—தெங்குமாய்
நன்னெறியும் நற்றமிழும் நால்வர் திருமுறையும்
மன்னுலகில் ஓங்கவுழைத் தார். ௪

ஓங்குநெல் வேலி உயர்சென்னை ஈரிடத்தும்
தாங்கு தலைமையொடு சார்கிளைமை—பாங்காய்
அமைந்தனசுப் பையபிள்ளை ஆள்முகவர் அந்நாள்
இமையிளவல் நம்மரங்கர்க் கெண்.

எண்ண மிகவுடைய இவ்விருவர் பேருழைப்பால்
வண்ணமலர் வீசும் மணம் போன்றே—நண்ணுமன்பர்
பல்லோர் துணையாளுர் பங்கும் பெருகினதாற்
சொல்லரிய நூல்வந்த தொக்கு.

தொக்க அரங்கர்தொல் லோன்துணைத்தாள் சேர்ந்தார்பின்
மிக்கநல் லாட்சிப் பொறுப்பராய்த்— தக்கதம்பி
சுப்பையபிள் ளைத்தொழில் பூண்டார்நற் சூழ்ச்சிவல்லார்
வைப்பறிஞர் நாட்டமும்வல் லார்.

வல்லமூ வேந்தர் வளர்செல்வர் முன்னுளில்
நல்ல திருமுறைகள் நான்மூன்றும்—சொல்லரிய
மெய்கண்ட நூல்களையும் மேன்மேல் வளர்த்துவந்தார்
செய்யசிவன் தண்ணளியால் சேர்ந்து.

சேர்ந்துவளர்ப் பாரின்றிச் செல்லிடமுங் காணுமல்
சோர்ந்தவிடை நாள்துணையாய்ச் சொல்லரிய—ஏர்கழகம்

வந்துநனி தோள்கொடுத்து வண்டமிழ் நூல் எல்லாமும்
முந்துறச்செய் தாருழைப்பால் முன். ௧

முன்னுமோ ராயிரத்து நானூற்றின் மேலாகத்
தன்னிகரில் கட்டடம் தாளச்சுப்—பொன்போன்றிங்
கெல்லாருங் கொள்ள இசைவித்தார் ஊதியமும்
பல்லாருப் பல்கினபார் மீது. ௧௦

மீதாம் தமிழ்க்கோர் ஆங்கிலமும் அன்னதற்கிங்
கீதாம் தமிழும் இயையுமென—ஓதாநிற்
பாருவக்க யாத்தார் பலநூல்கள் பன்மொழியின்
சீர்மிக்க பல்புலவர் தேர்ந்து. ௧௧

தேர்வினுக் காம்பல நூலும் வெளியிட்டார்
ஆர்வமிகு நூல்நிலேயம் அச்சகங்கள்—சீர்புலமைப்
பள்ளி குழந்தை பயில்பள்ளி யாக்குவித்தார்
உள்ளியுயர் வாத்தமிழ் ஓர்ந்து. ௧௨

ஓர்ந்துணர மாநாடுங் கண்டுமிக ஓங்குவித்தார்
நேர்ந்தமுன் போன்றே கிளேயிரண்டு—ஆர்ந்ததமிழ்க்
கூடல் மதுரையொடு கோயமுத்தூர் சார்ந்தனகாண்
நாடுதமிழ் ஓங்க நயந்து. ௧௩

நயஞ்சார் தமிழும் நடுவளவைக் கொத்த
பயன்சார்சித் தாந்தவுயர் பண்பும்—வியனுலகில்
நின்றுபயன் ஆக்க நிரம்புநற் கோப்பாக
என்றுநன் ருய்வாழ்க ஈது. ௧௪

ஈதலிற் சீர்த்தநூல் ஈயும் கழகமிதும்
ஓதுமைம் பாளுன் டுயர்விழவும்—காதனலம்
வாய்த்துநனி வாழ்கபல் லூழியிவண் வாழ்கசிவன்
தூய்தமிழ் வாழ்கசெல் வத்து. ௧௫

# வயிர விழாவும் வயங்கிட வருமே!

திரு. நா. குருசாமி அவர்கள்
*மொழிபெயர்ப்புத் தனிஅலுவலர் தமிழ் வளர்ச்சித்துறை*
*தமிழக அரசு*

நேரிசையாசிரியப்பா

சந்தனப் பொதியம் சார்ந்திடு முனிவன்
முந்துற இலக்கணம் மொழிந்த நற்றமிழ்
மணந்தரு தென்றல் மல்கிடும் பொருநை
அணங்கினள் தவழ்ந்து அணிசெயும் நன்னகர்
திருநெல் வேலி சேர்ந்தநற் குரிசில்
திருவ ரங்கம் எனும்பெயர் சிறந்தோன்
செந்தமிழ் நூல்கள் சிறப்புற அச்சில்
தந்திடும் ஆர்வம் தழைத்திட அதனல்
பெருகிய நலங்கள் பிறங்கிட அந்நாள்
திருநெல் வேலித் தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்ப திப்புக் கழகம்
வைத்து நிறுவிய வளமது போற்றியும்
தனித்தமிழ் இயக்கம் தழைத்திடச் செய்து
இனித்த பன்னூல் இயற்றிய அண்ணல்
மறைமலை அடிகள் மாண்புறு குரிசில்
உறுதுணை கொண்டு உற்றநம் மொழியின்
மாண்பொடு தூய்மை மதித்துப் பலரும்
காண்குறு மாறு கவின்பெற ஆற்றியும்
அறம்பொருள் இன்பம் வீடென நான்கின்
திறம்பெறு மறையெலாம் தீந்தமிழ் நூலே
எனவரும் உண்மையும் இன்ன பலவும்
வனப்புறு செந்தமிழ்ச் செல்வியில் வரைந்திடக்

கலைவல் மதியோன் கா. சு. பிள்ளை
நிலைபெறும் நற்பணி நேர்ந்திடப் பெற்றும்
திங்கள் தோறும் செந்தமிழ்ச் செல்வி
எங்கணும் பரவி இன்புறச் செய்தும்
இலக்கிய நலங்கள் ஈரெட் டென்னும்
துலங்குமா நாடு தொடர்ந்து நடத்தியும்
இந்தி பொதுமொழி இலையெனக் காட்டி
வந்ததன் திணிப்பை வன்மையோ டெதிர்த்தும்
சங்க நூற் றொகைமுதல் சமய நூல்கள்
தங்கும் இலக்கணம் இலக்கிய நாடகம்
அறிவியல் புலவர் அரசர் சரிதம்
சிறுவர்க் கான சிறப்புறு நூல்கள்
இன்ன பலவகை இனிய நூல்களும்
பன்னும் ஆயிரத் தெட்டினும் பலவென
முன்னும் புலவரால் மொய்ம்புற ஆய்ந்து
கண்கவர் வனப்பில் கண்டோர் களிப்புறப்
பண்புற அச்சிற் பதித்துப் பரப்பியும்
சைவமுந் தமிழும் தகையுறப் பேணி
மெய்ப்பணி ஆற்றும் மேதகு குணத்தோன்
கழக ஆட்சி கருத்துறு செம்மல்
வழுவறு சுப்பையா பிள்ளை வளமொடு
ஏற்றம் பெற்றிடும் இன்றமிழ் அரசு
போற்றும் வகையால் ஏற்றதா மரைத்திரு
உற்ற நல்விருது உவந்திடப் பெற்றேன்
அன்னவன் ஏற்று ஆற்றிடுங் கழகப்
பொன்விழா இனிது பொலிந்திட இன்னும்
செயிரறு பணிகள் சிறந்திட
வயிர விழாவும் வயங்கிட வருமே.

# மாட்சிதனக் கீடுண்டோ!

அருட்கவி திரு. அரங்க சீனிவாசன் அவர்கள்
கோவிலூர், திண்டுக்கல்

நேரிசை வெண்பா

சைவம் ஒருகண் தமிழ்மறுகண் என்றெண்ணித்
தெய்வத் தமிழின் திருநூல்கள்—வையகத்தே
எல்லாரும் கற்க எழிலுடனச் சிட்டுதவும்
நல்லாரை வாழ்த்திடும்என் நா. 1

திருந்தப் பதிப்பித்துச் செல்வமெனத் தந்த
அருந்தமிழ்த் தொன்னூல் அவையோ—விருந்துக்
கதையோ கவிதையோ கட்டுரையோ மற்றும்
எதையோ புகழ்ந்திடுவேன் யான். 2

பத்துப்பாட் டாதி பழந்தமிழ்நூல் அத்தனைக்கும்
வித்தகரைக் கொண்டு விளக்கமுறப்—புத்துரைகள்
கண்டுவெளி யிட்ட கழகத் திருப்பணியால்
ஒண்தமிழ் பெற்ற தொளி. 3

தேர்வதெங்கே ஆன்றோர்கள் சிந்தனையைச் செந்தமிழ்த்தேன்
ஆர்வதெங்கே இன்பத்தில் ஆழ்வதெங்கே—பாரினிலே
மிக்கழகுப் பொக்கிசமாம் மெய்த்தமிழிற் பன்னூல்கள்
இக்கழகம் தாரா தெனின். 4

ஆங்கிலத்தி லேபயிலும் ஆட்சிமுறைச் சொற்களெலாம்
ஈங்குத் தமிழாக்கி ஈந்ததனல்—பாங்குநிறை

ஆட்சிமொழி நம்தமிழே ஆவதற்குப் பாடுபட்ட
மாட்சிதனைக் கீண்டோ மற்று? 5

நம்தமிழர் காப்பியங்கள் நாகரிகம் நற்கலைகள்
முந்தைவர லாறு முழுவதுமே—செந்தமிழர்
அல்லாரும் கற்றுணர ஆங்கிலத்தில் தந்தபணி
எல்லாரும் போற்றுகின்ருர் இங்கு. 6

ஆங்கிலத்தின் உள்ள அறிவுநூல் தேர்ந்தெடுத்துத்
தேங்கொள் தமிழர்களும் தேர்ந்திடவே—ஈங்கு
மொழிபெயர்த்து நல்கும் முதன்மைக் கழகம்
வழிவழியே வாழ்க வளர்ந்து! 7

நந்தாத ஆயிரத்து நானூறு நூல்தந்த
சிந்தா மணியாம் திருக்கழகம்—செந்தமிழின்
பற்ருும் ஒளிவிளக்காம் பல்கலைக்கும் தாயகமாம்
கற்ருர் தமக்கிரண்டு கண். 8

தெய்வமென வந்த திருவரங்க ஞர்கண்ட
சைவசித் தாந்தத் தமிழ்க்கழகம்—வையகத்தில்
சுப்பையா பிள்ளைதிருத் தொண்டால் வளர்ந்தோங்கி
எப்பொழுதும் வாழ்க இனிது. 9

வாக்குப் பெருவளமும் வாலறிவும் வாய்ந்துயர்ந்த
சேக்கிழார் செய்த திருத்தொண்டர்—மாக்கதையைப்
பொன்னின் விழாப்பரிசாய்ப் போற்றித் தருங்கழகம
மன்னிப் பெறுக வளம்! 10

# சளைப்பின்றிப் பணிசெய்யும் கழகம்

கவியோகி தவத்திரு சுத்தானந்த பாரதியார் அவர்கள்
சென்னை.

சைவசித் தாந்தக் கழகம்—அது
தனிச்சிவத் தமிழிலே பழகும்
உய்வருள் செந்தமிழ் உலகம்—அதன்
உள்ளத்திலே குறள் இலகும். 1

அறிவினை வளர்கரு வூலம்—எங்கும்
அன்பை வளர்திரு மூலம்சிவ
நெறியினை முறைமுறை விளக்கும்—நல்ல
நிமிர்சுடர் பேரின்ப விளக்கே. 2

வானுயர் மணிஅணி யாக—அதன்
வன்னமணித் திரள் பொலியும்
தேனுயர் தீந்தமி ழுடனே—எங்கும்
சிறப்புறும் ஆங்கிலந் திகழும். 3

சங்கப் புலவரின் சுவடி—இன்று
தமிழ்வளர் புலவரின் சுவடி
தங்குல கறிஞரின் சுவடி—எல்லாந்
தாங்கி ஓங்கிவளர் கழகம். 4

மலைமலையாக் குவிநூல்கள் தமிழ்
மாண்பினைத் தாங்கிடும் கால்கள்
கலைகலையாக் கவின்பெருகும்—அதைக்
காணக் காணமனம் உருகும். 5

தித்திக்கும் செந்தமிழ்ச் செல்வி—அதைத்
திறந்து பார்ப்பதொரு கல்வி
எத்தனை எத்தனைப் புலவர்—இங்கே
இணைந் திலகும்புது வுலகம். 6

ஈரடி யாங்கிலக் குறளும்—சைவம்
ஈந்த தொண்டர் வரலாறும்
சீரியமூல மந்திரமும்—எங்கும்
செழித்திடச் செய்புரி கழகம். 7

தமிழர்க்குத் தமிழா சிலக—இங்கே
தமிழ்படும் சிறுமைகள் விலக
தமிழர் கலைத்திரு பொலிய—நாளும்
சளைப்பின்றிப் பணிசெயும் கழகம். 8

மறைமலை யடிகளின் மாண்பை—இன்று
மாண்பெறு கலைஞரின் காண்பை
நிறைபெற நிலவிடச் செய்யும்—இது
நிகரிலாக் கலைகளின் மையம்.

வாழிய வான்புகழ் ஓங்கி—சைவம்
வளர்தமிழ்ச் சித்தாந்தக் கழகம்
ஆழியும் கதிரவ னும்போல்—என்றும்
அறிவு மழைபொழிய வாழ்க—எங்கும்
அன்பரு ளின்பமே சூழ்க!

# கருத்தைத் தூண்டும் கழகத்தின் தொண்டு


பேராசிரியர் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள்
சென்னை.


தென்னிந் தியசைவ சித்தாந்த நூற்கழகம்
முன்னின்று மேற்கொண்ட முத்தமிழின்—நன்பணிக்குப்
பொன்னுள் விழாக்கண்டு போற்றினேம் இக்கழகம்
எந்நாளும் வாழ்க இனிது 1

ஆய்வதெங்கே முன்னையவர் ஆய்ந்துரைத்த நுண்பொருளில்
தோய்வதெங்கே இன்பங்கள் துய்ப்பதெங்கே—வாய்மை
அழகுத் தமிழ்வளத்தைப் பார்ப்பதெங்கே நூல்கள்
கழகம் தொடர்ந்துதவாக் கால். 2

கழகப் பதிப்பென்றால் கண்ணைக் கவரும்
அழ்கியமே லட்டையுடன் அச்சுப்—பிழையின்றித்
தொட்டுப் படிக்கமனம் தூண்டுமே நீண்டநாள்
கட்டுக் குலையாது காண். 3

ஐந்தொன்பான் ஆண்டாய் அயராது லாவிவரும்
செந்தமிழ்ச் செல்வியிதழ் செப்பாதோ—முந்தையநம்
ஆரா அமுதாம் அருந்தமிழ்க்குத் தொண்டுசெய்யும்
சீரார் கழகச் சிறப்பு 4

ஆலயத்துள் ஆண்டவனுக் காற்றும் வழிபாடும்
சால்புடைய ஆட்சித் தகுதியும்—ஞாலத்துப்
பைந்தமிழ் ஏற்கப் பலநூல் முதன்முதலில்
தந்தது நம்கழகம் தான். 5

நாட்டும் இலக்கியமா நாடுகளிங் கெத்தனையோ
கூட்டிப் புலவருரைக் கோவைகளை—ஈட்டி
வெளியிட்ட நூலெல்லாம் மெய்த்தமிழ்க்குப் பூணாய்
ஒளிவிட்டுத் தோன்றும் உயர்ந்து.

என்தலைமை யிற்சிற் றிலக்கியமா நாடொன்று
முன்முதலிற் கூட்டி முதுதமிழ்க்குத்—தன்பணியைச்
செய்யும் கழகத்தின் சீர்மையென் நெஞ்சத்தே
வைகுமெந் நாளும் வளர்ந்து.

மனத்துக்கண் மாசில் மறைமலையார் கண்ட
தனித்தமிழுக் காக்கங்கள் தந்து—கனித்தமிழில்
மீண்டும் புதுமலர்ச்சி மேவுதற்கு நம்கருத்தைத்
தூண்டும் கழகத்தின் தொண்டு.

புலவர்களை யன்புடனே போற்றுதமிழ்த் தானைத்
தலைவராம் தாமரைச் செல்வர்—கலைவளர
உள்ளுவ வெல்லாம் உயர்வுள்ளும் சுப்பையா
பிள்ளையிங்கு வாழ்க பெரிது.

ஒண்கழகத் தொண்டே உயிரென்னும் சுப்பையனுர்
கண்ணை இமைபோலக் காத்திடவே—அண்ணல்
திருவரங்க ஞர்கண்ட சீரார் கழகத்
தருவளர்ந்து வாழ்க தழைத்து.

# கழகநூற் பண்ணை வாழ்க

திரு. தெ. ஞானசுந்தரம் எம். ஏ. அவர்கள்

சென்னை.

அறுசீராசிரிய விருத்தம்

அருள்நெறி கலத்தல் இல்லா
    அறிவியல் வாழ்க்கை முற்றும்
இருள்நிறை வாழ்க்கை துன்பம்
    இருந்திடும் வாழ்க்கை என்ற
தெருள்நிறை மாந்தர் கூற்றுச்
    செவியினில் ஏற்றூர் மெய்ம்மைப்
பொருள்நிறை நூல்கள் தந்தார்
    புகழ்மலைச் சிகரம் சேர்ந்தார்.

மலைமகள் முலைப்பால் உண்ட
    மழலையின் முத்துப் பாடல்
உலைவிலாத் தொண்டர் அப்பர்
    உரைத்தநல் அமுத வாக்குத்
தலைவனைத் தூது விட்ட
    தம்பிரான் தோழர் பாட்டுப்
புலைமனம் மாற்றும் வாத
    வூரனர் புகன்ற தீஞ்சொல்.

சேந்தனர் வாழ்த்துப் பாடல்
    சேர்ந்தநற் பனுவல் மூலர்
தீந்தமிழ் மணக்கும் செய்யுள்
    திருவளர் குன்ற வள்ளி
காந்தனர் உறையுள் காட்டும்
    கவின்மிகு பாடல் பெற்ற
ஏந்தெழில் திரட்டுத் தொண்டர்
    இசையுரை சரித நூலும்.

புண்ணியன் பொன்னர் பாதப்
    போதினை ஏற்றிப் போற்றும்
பண்ணிறை அருள்நூல் என்றும்
    பசுந்தமிழ்ச் சுரங்கம் என்றும்
உண்ணிறை ஆர்வம் பொங்க
    உரையொடு கூட்டித் தந்து
விண்ணுறு கீர்த்தி பெற்றூர்
    வெற்பென உயர்ந்து நின்றூர்.

தோத்திர மாக நின்றுன்
    துளக்கறு தெய்வ ஞானச்
சாத்திர மாக நின்றுன்
    சங்கரன் என்பர் சான்றேர்
தோத்திரம் தந்தார் செய்ய
    சுடர்மிகு சாத்திரங்கள்
கோத்தருள் செய்தார் சைவக்
    குலத்தவர் உள்ளம் கொண்ட

கடம்பமர் செல்வன் மேன்மை
    கலகலத் தமிழில் கூட்டும்
அடல்மிகு அருணை வாழ்ந்த
    அருந்தமிழ் நாதர் பாடல்
மடம்படு நெஞ்சின் மாயை
    மறைந்திட விளக்கம் சேர்த்து
திடப்படத் தந்தார் தெய்வத்
    திருப்பணி நடத்தி உய்ந்தார்

இத்தகு நூல்கள் தந்தே
இன்றமிழ்த் தொண்டும் சைவ
நித்தியத் தொண்டும் ஆற்றும்
நிறைபுகழ்க் கழகம் வெற்றுப்

புத்தகக் கழகம் அன்று
புண்ணியப் பயிராம் பக்தி
நித்தமும் வளரும் பண்ணை
நிமலனின் கோயில் வாழ்க!

# கழகநூற் கட்டடச் சிறப்பு

## திரு க. இனியன் அவர்கள்

அறுசீராசிரிய விருத்தம்

திருநெல்லைப் பதியில் தோன்றிச் சிறந்திடு கழகந் தானும்
அருநெறி நூல்க டம்மை அழகினொ டச்சி லிட்டுத்
திருமிகக் கட்டுச் செய்யுஞ் சிறப்பினைப் புகழ்ந்து நாளும்
பெருமையாய்ப் போற்றிப் பல்லோர் பீடுற வாழ்த்து வாரால் க

கைக்குளே அடங்கும் நல்ல கவின்மிகும் அளவி னோடு
மிக்கபல் வகைய தாக மேதகு நூல்ப தித்துத்
தக்கவா றந்த நூலைத் தனிச்சிறப் புடனே கட்டித்
திக்கெலாம் போற்றச் செய்யுந் திறலினை என்னென் பேமால். உ

கழகத்தார் தங்கள் நூலைக் கட்டிடுங் கட்ட டத்தை
அழகிதென் றுலகோர் நாளும் அருமையாய்ப் போற்றி நின்று
கழகத்தை இனிது வாழ்த்திக் கனமுடன் புகழு கின்றார்
பழகிய கட்டிற் கிந்தப் பதிப்பகம் போலும் உண்டோ? ங

சண்முகஞ் செட்டி யாரும் சாற்றுமண் ணவு மற்றும்
தண்முகச் சுப்ர மண்யம் தனிப்புகழ் இராதா கிருட்ணன்
விண்முகத் தவரும் போற்ற விளங்குபல் பெரியார் தாமும்
எண்முகக் கட்டை நோக்கி இனிதுளங் களிகொள் வாரால்.

சித்தாந்தக் கழகங் கட்டுஞ் சிறந்தநற் கட்டைப் போல
இத்தார ணிக்குள் யாரும் இதுவரை கட்ட வில்லை
மெத்தவிக் கழகஞ் செய்த மேதகு கட்டைக் கண்டோர்
அத்தாவிங் கெனக்கீ தென்று அந்நூலைக் கைக்கொள் வாரால்.

இந்திய அச்ச கத்து இயைபுறு சங்கந் தானும்
இந்தநற் கழகக் கட்டின் எழிலினை மிகவும் போற்றித்
தந்தது பரிசே என்றால் தனிப்புகழ்க் கழகக் கட்டிற்
கிந்தமா ஞாலந் தன்னில் ஈடுதான் உண்டோ பாராய்.

அண்ணவுங் கழகக் குறளை அமெரிக்கா கொண்டு சென்று
கண்ணுருங் கட்டைக் காட்டிக் கற்பித்து மகிழ்ந்தா ரென்றால்
தண்ணருங் கழக நூலின் தனிக்கட்டுச் சிறப்பைத் தானும்
பண்ணரும் மொழியி னால்நாம் பகரவும் வேண்டு மோதான்.

# எப்பொழுதும் வாழ்க இனிது

## இராவ்சாகிப் திரு கு. கோதண்டபாணி பிள்ளை அவர்கள்

சென்னை.

ஆடுகின்றாள் செந்தமிழ்த்தாய் ஆர்க்கின்றார் நல்லவர்கள்
பாடுகின்றார் பன்மொழி பாவலர்கள்—நாடி
அழகும் திருத்தமுமாய் அச்சிட்டு நூல்கள்
கழகம் தரும்பணியைக் கண்டு

தெய்வத் தமிழும் திருநெறிய சைவமதும்
எய்தும் சிறப்பெல்லாம் நூற்பதித்து எய்துவிக்கும்
சுப்பையா தம்முடனே தூய அவர்கழகம்
**எப்பொழுதும் வாழ்க இனிது.**

# உலகெலாம் அறிந்த மேன்மை

திருவாட்டி சௌந்திரா கைலாசம் அம்மையாரவர்கள்

முருகனடி

அறுசீராசிரிய விருத்தம்

விழியினை இமைகாத் தல்போல்
விரும்பியே நாளுந் தாயின்
மொழியினைக் காத்தீ ராறு
முறையினைச் சைவ மென்னும்
வழியினைப் பரப்பி ஞால
மக்களுக் குழைக்கும் ஞானத்
தொழிலினைப் புரிய வென்றே
தோன்றிய கழகம் வாழ்க! 1

தனித்தமிழ் எழுதிப் பேசித்
தாய்த்திருத் தொண்டில் மூழ்கி
மனத்துரம் கொண்டு வாழ்ந்த
மறைமலை யடிக ளாரின்
வினைத்திறம் விதைத்த வித்தில்
விளைந்தநற் கழகம் இன்றிங்
கனைத்துல கறிய ஓங்கி
ஐம்பதை விஞ்சு தம்மா! 2

ஈன்றிடும் தாயின் மேலாய்
இருந்திடும் ஒன்றை எண்ணில்
மூன்றெனும் தமிழாம் இன்ப
மொழியினை வளர்க்க வந்து
தோன்றிநன் னெறியில் மக்கள்
தோய்ந்திடப் புரிந்து நெஞ்சில்
ஊன்றிய கழக மேன்மை
உலகெலாம் அறிந்த ஒன்றே! 3

காசினைக் குவிக்க எண்ணிக்
கவர்ச்சியை மைய மாக்கி
மாசினை மனத்து ளேற்றும்
மலிவுடை நூலாக் காமல்
தேசினை நெஞ்சு தோறும்
தெளிகதிர் மிக்கு வாரி
வீசிடு மாறு நூல்கள்
விளைத்தது கழகம் நன்றே!

பார்த்திடும் திசையில் எல்லாம்
பைந்தமி ழன்னை யின்று
பூத்திடு கின்றாள் வெற்றிப்
புன்னகை பாடி இன்பக்
கூத்திடு கின்றாள் என்றால்
குறைவிலா தன்று தொட்டுக்
காத்திடுந் திருநெல் வேலிக்
கழகத்துப் பணியா லன்றோ?

பொன்னினைக் கழகம் கண்டு
பூரித்தல் போது மாமோ?
மின்னிடும் வயிரங் கண்ட
வெற்றியி லேதி ளைத்து
நின்றிடத் துடிக்கு மெங்கள்
கனவினை நினைவ தாக்க
வென்றிடும் கழகம் மேலும்
மேலுமென் றுரைப்போம் நாமே!

கரங்குறை யாது நீளும்
கருணையில் மலர்ந்து நெஞ்சில்
உரங்குறை யாது நாளும்
உழைத்துழைத் துயர்ந்து மெச்சும்
தரங்குறை யாத நூலைத்
தருவத ளுலே தெய்வ
வரங்குறை யாது வந்து
வாய்க்குமிக் கழகம் வாழ்க! 7

மாலினை மாம ளுகப்
பெற்றெரு மயில்மீ தேறி
வேலினைக் கரங்கொண் டானின்
விழிச்சுடர் அருளி ளுலே
நூலினைப் பதிப்பிக் கின்ற
நோன்பினை மதித்துப் போற்றி
ஆலினைப் போல்த ழைத்தே
அழகுறும் கழகம் வாழ்க. 8

பங்குபல் லோர்க்கும் உள்ள
பழம்பெரும் நிலைய மேனும்
மங்கிடல் இல்லா தேறும்
மணிப்புகழ் பெற்று வையம்
எங்கணும் பரவ வைத்த
இணையிலாப் பெருமை சென்று
தங்குதல் சுப்பை யாவின்
ஒருதனித் தலையில் தானே. 9

இருளிடம் கிடந்து தூங்கும்
இழிவினை நீக்கு கின்ற
அருளிய லோடு நில்லா
தறிவியல் நூலும் வாழ்வில்
பெருகிடத் தந்து நம்மைப்
பேணிடும் சுப்பை யாவைக்
கருதிட நெஞ்சில் நன்றி
கனிந்திடல் இயற்கை யாமே!

புண்ணுறு மாறு சென்று
பொன்றுவார் தாமும் கல்விக்
கண்ணுறு மாறும் கேட்கும்
காதினி லெல்லாம் சைவப்
பண்ணுறு மாறும் நல்ல
பணிபுரிந் திடுஞ்சுப் பைய
அண்ணலை வாழ்த்தி வாழ்த்தி
அகங்குழைந் துருகு வேனே!

## நல்ல தமிழ் ஆலமரம்

**திரு. கவிஞர் புத்தனேரி ரா. சுப்பிரமணியம் அவர்கள்**

வெண்பா

தூய தமிழியக்கத் தோன்றல் மறைமலையார்
ஓயா உழைப்பின் ஒருபயனைத்—தாயகத்தின்
நாற்புறத்தும் ஊட்டுவதே நம்சைவ சித்தாந்த
நூற்பதிப்பு நற்கழக நோன்பு. க

தேவர் குறளின் தெளிவுரையோ தேனமுதம்
*மூவா மொழியழகு முத்தாரம்—மேவுபுகழ்
இக்கழக ஏற்றத்தால் நூறு யிரக்கணக்கில்
மக்களிடம் விற்குமிதன் மாண்பு

இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி எழுச்சியுற
முந்தி முனைந்த முதுகழகம்—செந்தமிழில்
ஆர்ப்பாட்ட நூல்களுடன் ஆதாரச் சான்றுகளின்
ஏற்பாட்டுக் குண்டோ இணை?

தெள்ளு தமிழ்ப்புலவோர் சிந்தனையைக் கூராக்கி
எள்ளளவும் சோம்பல் இராவண்ணம்—வெள்ளமென
ஒப்பற்ற நூலியற்ற ஊக்குவிக்கும் ஓர்பெருமை
**சுப்பையா** பிள்ளையவர் தொண்டு.

எத்தனையோ சங்க இலக்கியங்கள் அத்தனைக்கும்
தித்திக்கும் புத்துரைகள் செய்வித்துச்—**சித்திரப்பூம்**
**பேழை**யுடன் விற்பதனுல் பீடுபெற வீடுதொறும்
வாழவைக்கும் நற்பணிக்கென் வாழ்த்து.

நெல்லைப் பதிமுளைத்துச் சென்னைப் பதிதழைத்து
வெல்லும் பதிப்பு விழுதுவிடும்—**நல்லதமிழ்**
**ஆலமரம் இக்கழகம்** ஆக்கப் பணிநிழலைக்
காலமெலாம் நல்கும் கனிந்து.

* மூவா = (1) மு. வ. (2) மூவாத.

# வாழ்க தழைத்து

**திரு. சு. நடராசன் அவர்கள்**

கோவை.

பாரதத்தின் பால்முகமாம் தெக்கணத்தில் தீந்தமிழின்
ஆரமுதத் தேன்சிந்தும் நூற்கழகம்—தாரணியில்
புத்தம் புதுநூல்கள் பூத்துக் குலுங்கிடவே
நித்தம் உழைக்குமாம் நின்று.

நெல்லையிலே சைவம் தழைத்திடவே வேண்டுமென்று
ஒல்லும் வகையெல்லாம் நூற்பதித்து—அல்லுபகல்
சித்தாந்தப் பேரொளியைச் சிந்தையிலே தந்திடவே
முத்தானுர் கண்டா ரவை.

அன்னைக்கு வாழ்வில்லை; ஆங்கிலத்தின் மோகத்தில்
தன்னை மறந்தே மயக்கமுற்ருர்—தென்னகத்தில்
இன்பத் தமிழுக்கு இந்நிலையா? ஐயையோ!
என்பரால் ஏற்றிய தீபம்.

தீபத்தின் நல்லொளிதான் செந்தமிழர் வாழ்வினுக்கு
ஆபத்தைப் போக்கவந்த இக்கழகம்—தீபந்தான்
முத்தமிழாய், முக்கனியாய், மூவேந்தர் முத்திரையாய்
எத்திசையும் ஏற்றும் ஒளி.

சங்கத்தமிழ் வளர்க்கும் சான்ருேர்கள் இவ்வுலகில்
எங்குறைவார் என்றுமிகத் தேடிவரும்—எம்மண்ண
சுப்பையா என்னும் திருமகனும் செம்மலுக்கு
ஒப்பாரும் உண்டோ உரை.

காலத்தால் மூத்தத் தமிழுக்கு என்றென்றும்
ஞாலத்தில் நல்லிசைய நாட்டினுர்—கோலத்தால்
துங்கத் தமிழ்வளர்க்கும் தூயவரைத் தூமணியை
சிங்கத் தமிழேறென் பேன்.

எனக்கென்று வாழ்வில்லை செந்தமிழ்த்தாய் தன்வ
தனக்கென்று கூறும் தமிழ்மகனுர்—குணக்குன்று
செந்தில் வடிவேலன் சுப்பையா நற்பெயரான்
சந்ததமும் வாழ்க தழைத்து.

பொன்னின் விழாவெடுக்கும் பொற்புடைய நன்ன
தென்னிந்திய சைவ சித்தாந்த—அன்னையே
பல்லாண்டு வாழ்ந்து பணிகள் பல ஆற்றி
எல்லாந் தமிழாக்கு நீ.

# சிறப்புற்று நீடுவாழியவே!

திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள்
ஆசிரியர், 'கலைமகள்' சென்னை.

கழகமென் றாலே சைவசித் தாந்தக்
கழகமென் றெவருமே நினைக்க
அழகிய நூல்கள் பலபதித் தெவரும்
ஆவலோ டேற்றுநன் குறவே
விழுமிய தொண்டு செய்திடும் நுந்தம்
மேம்படும் நிறுவனம் இன்று
கெழுமிய தங்க விழாக்கொளல் கேட்டேன்;
கிளர்ந்ததென் உளத்தினில் மகிழ்வே.

சங்ககா லத்து நூல்களும் பண்டைத்
தமிழிலக் கணமுரைப் பனவும்
மங்குறுச் சைவப் பனுவலும் இற்றை
மாட்சிசால் பனுவலும் பிறங்கப்
பொங்கிய அன்பில் உரைகளும் ஆய்வும்
பொற்புற அமையுநூல் பலவும்
இங்கெவர் தாமும் பெறமலர் வித்த
இச்செயல் போற்றுதும் யாமே.

நூறுநூ றாக வெளியிட்ட நூல்கள்
நுண்ணறி வினருழைப் பாலே
வேறுவே றாகும் சிறப்பெலாம் பெற்று
விளங்குறக் கண்டனம்; இனியும்
ஏறுமீ தேறும் சிவபிரான் அருளால்
இப்பெருங் கழகம்மேல் ஓங்கித்
தேறுநூல் பலவும் மலரச்செய் தினிது
சிறப்புற்று நீடுவா ழியவே!

வெண்பா

அழகுப் பதிப்புக் கனைவருமே போற்றும்
கழகம்தன் பொன்விழாக் காணல்—கழிமகிழ்ச்சி
தந்ததுவால இக்கழகம் தண்ணந் தமிழ்வளர்த்துச்
சந்ததமும் வாழி தழைத்து.

# பொன்விழா வாழ்த்து

திரு. புலவர் மி. மு. சின்னாண்டார் (அரிமாப்புலவர்) அவர்கள்
அம்மாப்பேட்டை, சேலம்-3.

மலர்மணம் மாட்சிகொள் மாண்பமை திருநாள்!
இலகிடும் பல்வகை இருமையின் திருநாள்!
அலகிலா பல்துறை அறிவுகொள் திருநாள்!
பலர்புகழ் பண்புகொள் பாடறி திருநாள்!

சைவசித் தாந்த தன்னிகர் கழகம்
நவமணி மிக்க நற்பல நூற்களை
அமைவுறப் பதிக்கும் அமைப்புவே றுண்டோ?

இமையவர் வியந்தே இனிதுறு பரிசில்
கொடுத்தனர் நன்றே! கொற்கை வளவன்
ஆட்சிக் கிழவர் அருமைப் பெரியார்
தாமரைச் செல்வர் தகுசுப் பையா
நூற்பதிப் புக்கழகம் நோற்றிடும் பொன்விழா
ஏற்றம் பெறவே இசைத்தனர் மேலோர்
வாழ்த்துவம் சிறக்க வாழிபல் லாண்டே!

# சுடச்சுடரும் பொன்

[பெருமழைப்புலவர் திரு. பொ. வே. சோமசுந்தரனார்]

*பழந்தமிழ் இலக்கிய நூல்களுக்கு உரைகண்ட இருபதாம் நூற்றாண்டு உரையாசிரியரான பொன்னுச்சாமி வேலுத்தேவர் சோமசுந்தரனார் தஞ்சை மாவட்டத்திலுள்ள மேலப்பெருமழை யென்னும் சிற்றூரில் வாழ்பவர். இவர் பிறந்தது 1909ஆம் ஆண்டிலாகும். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் புலவர் தேர்வில் தேர்ச்சி பெற்றவர். நூல்பல கற்றும் தம் வேளாண்மைத் தொழிலை வெறுக்காது அப்பணியில் ஈடுபட்டுள்ளவர். பண்டிதமணி மு கதிரேசன் செட்டியார் கௌடில்யரின் பொருள் நூலை மொழிபெயர்த்தற்கு உதவியாக இருந்தவர். கடந்த இருபது ஆண்டுகளாகக் கழகவழி எட்டுத்தொகை நூல்களில் புறம், பதிற்றுப்பத்து நீங்கலாக ஆறு நூல்கட்கும் பத்துப் பாட்டுக்கும் காப்பிய நூல்கட்கும் சொற்பொருள் நயம் விளக்கும் வகையில் விரிவான உரையெழுதியுள்ளார் இவையன்றிப் பட்டினத்தார் பாடலுக்கும், கல்லாடத்துக்கும் உரையெழுதியுள்ளதோடு சிறந்த உரைநடை, நாடக நூல்களையும் எழுதியுள்ளவர் இவர்.*



**தோற்றுவாய் :**

திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் பொன் விழா நினைவு மலருக்கு ஒரு கட்டுரை தருக என்று அக்கழக முகவர் எமக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார்கள். கட்டுரை வரைவதில் அருஞ் செயலாகத் தோன்றுவது அதற்குத் தகுதியான தலைப்பு ஒன்றனைக் கண்டுபிடிப்பதேயாகும். ஆகவே இக் கட்டுரைக்கு ஒரு தலைப்புக் காண்டற்கு யாம் நெடிது நினைவில் ஆழ்ந்திருந்த பொழுது பழைய கதையொன்று எம்முள்ளத்தில் முகிழ்த்தது; அஃதாவது—திருவள்ளுவர் நூல் எழுதிக் கொண்டிருக்கின்ற பொழுது அங்கு வந்த ஒரு சிறுவன் 'தாத்தா என்ன எழுதுகிறீர்கள்?' என்று வினவினானாம். அதற்கவர் 'திருக்குறள் எழுதுகிறேனடா' என்று கூற, அச் சிறுவன் 'அதில் என்ன இருக்கின்றது தாத்தா?' என்று மீண்டும் வினவினானாம். அது கேட்ட தெய்வப் புலவர் இதனுள் எல்லாப் பொருளும் உள; இதன்கண் இல்லாத எப்பொருளும் இல்லையடா! என்று புன்முறுவலுடன் மறுமொழி கொடுத்தாராம். அதுகேட்ட குறும்புக் குணமுடைய அச் சிறுவன் தன் பக்கத்திலே கிடந்ததொரு கல்லைக் கையிலெடுத்துக் காட்டி, தாத்தா அப்படியானால் இந்தக் கல் உங்கள் திருக்குறளில் இருக்கிறதா? இருந்தால் எனக்குக் காட்டுங்கள்! என, அது கேட்ட தெய்வப் புலவர் கலகலவென நகைத்து, இருக்கிறதடா இதோ பார், இந்தக் குறளைப் படித்துப் பார்! என்று அடுக்கிலிருந்து ஓர் ஓலையை உருவிக் கொடுத்தாராக, அவன் அதனை,

> "வீழ்நாள் படாஅமை நன்றாற்றின் அஃதொருவன்
> வாழ்நாள் வழியடைக்கும் கல்"

என்று ஓதி முடித்து இருக்கிறது தாத்தா! இதன்கண் கல் இருக்கிறது! கண்டு கொண்டேன் என்று கல் என்று சிரிக்கத் தெய்வப் புலவரும் அச் சிறுவனோடே சேர்ந்து சிரித்தார் என்பதுவே அக்கதை. பொன் விழாவின் பொருட்டுக் கழகத்தில் பொன்வண்ணத் தந்தாதி புதிய பொன் வண்ணத்தோடு வெளியிட்டார்கள் அன்றோ. நமது கட்டுரைக்குத் தகுதியான பொன்னோடு கூடிய தலைப்பு ஒன்று இத் திருக்குறளில் நமக்குக் கிடைக்காமலா போகும்? கிடைக்கும் என்னும் நம்பிக்கையோடு எமது சிந்தனையைத் திருக்குறளினூடு புகுத்தித் தேடிய பொழுது மேலே பொறித்துள்ள "சுடச்சுடரும் பொன்" என்னும் அருமையான சொற்றொடர்,—தெய்வப் புலவரின் பொன் மொழி—பளீர் என எமதுள்ளத்தில் ஒளிவிட்டுத் திகழ்வதாயிற்று, பொன் பெற்றார் என் பெறார்?

எமது கட்டுரைக்கு வேண்டும் பொருளனைத்தும் அப் பொன் மொழியே வழங்கிவிட்டது. அவற்றையே ஒரு கட்டுரையாகக் கீழே வடித்துள்ளோம். இதனை ஓதுவோர் பெரிதும் இன்புற்று மகிழ்வர் என்பது எமது திடமான நம்பிக்கை.

குலம் தரும் வான் பொருட் குன்றம் :

தாமரைச் செல்வர் உயர்திரு. வ. சு. பிள்ளையவர்கள் விடாப்பிடியாக ஐம்பது ஆண்டுகள் இடுக்கணழியாது நின்று, இடையருது முயன்ற முயற்சியின் பயனுகவே இற்றைநாள் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பு தோன்றிய தொல்காப்பியமே முதலிய இயல் நூல்களும், பத்துப் பாட்டும், எட்டுத் தொகையும், பதினெண் கீழ்க்கணக்கும் ஆகிய சங்கப் பனுவல்களும்; சங்க காலத் திற்குப் பின் ருேன்றிய சிந்தாமணி முதலிய காப்பியங்களும் இக் காப்பிய காலத்திற்குப் பின் பிறந்த தேவாரமே, திருவாசகமே முதலிய திருநெறிய தெய்வ நூல்களும் பிறவு மாகிய அறிவுச் செல்வங்களெல்லாம் இக் கழகத்தில் ஒரு சேரக் குன்றெனக் குவிந்து கிடக்கின்றன. இக் குன்றம் மண்ணுலும் கல்லாலும் இயன்ற வறுங்குன்றம் அன்று. இது நங்குலம் தரும் வான்பொருட் குன்றம். இவை படைப்புக் காலந்தொட்டு வழிவழியாக மேம்பட்டு வருகின்ற நம் பழந்தமிழ்ச் சான்ருேர் அறிவாலியன்ற குணப் பெருங் குன்றம்.

உருக்குத் தட்டார் மறைமலையடிகளார்:

பொன்னில் பேரவாவுடைய பணித்தட்டார் சிலர் செம்பு முதலிய கீழ்த்தரமான உலோகங்களைச் சேர்த்து அணிகலன்களைச் செய்து விடுவதுண்டு. அவை சின்னுளிலேயே ஒளி மழுங்கிச் செம்போ, பொன்னே என்று ஐயுறும் நிலைக்கு வந்து விடும். அங்ஙனம் கலப்புமிக்க பொன்னைத் தீயிலிட்டு உருக்கித் தூய்மை செய்பவர் உருக்குத் தட்டாராவார். தமிழ்மொழி யாகிய தூய பொன்னில் வடமொழி யாகிய செம்பைப் பெரிதும் பிற்காலத்தே விரவி அதன் பேரெழிலைப் பெரிதும் மழுங்கச் செய்துவிட்டனர், பேதைப் புலவர்களாகிய பணித்தட்டார்கள். இதுகண்டு பொருது 'சுவாமி வேதாசலம்' என்று தம் பெயரே முழுதும் செம்பாகிய வடமொழியாலேயே இயன்றிருத்தற்கு நாணி முதலில் தம் பெயரையே தமது அறிவுத் தீயிலிட்டுச் சுட்டு 'மறைமலையடிகளார்' எனச் சுடச் சுடரும் பொன்போல் ஒளிவிடும் தூய தமிழாக்கிக்கொண்டவர் மறைமலையடிகளார் ஆவார். அவர் தமக்கென வாழாது பிறர்க்கென வாழ்ந்த பெருந்தகையாளராதலின் தம் தாய்மொழியாகிய தமிழ்மொழி முழுவதுமே தூய்மை செய்யத் துணிந்து இம் மாபெரு மொழித்தொண்டிலேயும் மொழிக் குயிராகிய சமய நெறியிலே பேதையராற் புகுத்தப்பட்ட பொருந்தாக் கொள்கைகளை அஞ்சாது எடுத்துக் காட்டி அகற்றி அந் நெறியைத் தூய்தாக்கிப் புதுக்கித் தருகின்ற சமயத் தொண்டிலேயும் தமது எஞ்சிய வாழ்நாள் முழுவதும் வீழ்நாள் படாமல் முயன்றனர். ஆதலால் இவரை யாம் உருக்குத் தட்டார் என்று அடைபுணர்த்தோதினேம். இவ்வரும் பெருஞ் செயலுக்குப் பரிசிலாக அப் பெரியார்க்கு அவர் வாழ்நாளிலே கிடைத்தவை நல்குரவும் இகழ்வுரையுமே யாம். பொருளும் புகழும் அல்ல.

உலகிலுள்ள மாந்தர் கூட்டம் தம்முள் தோன்றுகின்ற தெய்வத்தன்மையுடைய சான்ருேர் தன்மையையாதல் அவர்தம் ஆற்றலை யாதல் அவர்தம் முயற்சியாலுண்டாகும் நற்பயனை யாதல் அறிந்து கொள்ளும் ஆற்றலுடைய தன்று, (இதுபற்றி யாம் திருக்கோவையார் அணிந்துரையில் விளக்கமாக எழுதியிருக்கின்ருேம்). அவர் வாழ்நாளின் பின்பே மாந்தர் அச்சான்ருேர் அருமை பெருமைகளை உணர்வர்; புகழ்வர்; கோயிலும் எடுப்பர் ; விழுந்தும் கும்பிடுவர்!; இம்மாயிரும் ஞாலம் இங்ஙனமொரு "ஏழைமை உடைத்துமாதோ"

வழியடியார்கள் :

மறைமலையடிகளாரின் மொழித் தொண்டும் சமயத்தொண்டுமாகிய இவ்வரும் பெரும் முயற்சிகளின் அருமை பெருமைகளை அவர் வாழ்நாளிலேயே முதன் முதலாக உணர்ந்தவரும் அவர் முயற்சிக்குப் பொருள் முதலியன ஈட்டிக் கொள்ள வழிகாட்டியவரும் ஒருவர் உளராயினர். அவர் யார்?—அவரே சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்குக் கால்கோள் செய்த வ. திருவரங்கம் பிள்ளை ஆவார். இவரே முதன் முதலாக மறைமலை

யடிகளார்க்கு வாய்த்த வழியடியாராவார். மறைமலை யடிகளார் தொடங்கிய திருத் தொண்டுகளை இடையருது செய்வதற் கியன்றதொரு நிலையமாகவே சைவசித் தாந்த நூற்பதிப்புக் கழகத்தைத் திருவரங் கம் பிள்ளையவர்கள் நிறுவினர்.

**தெய்வம் மடிதற்றுத் தான் முந்துறும் :**

மொழியைத் தூயதாக்க வேண்டும்! சமயத்தைத் தூயதாக்க வேண்டும் என மறைமலையடிகளார் ஆர்வத்துடன் நினைந்த நினைப்பினுடு தெய்வமும் கலந்திருத்தல் வேண்டும். என்னை? ''யாதொன்று மனம் நினைக்கும் அந்த நினைவுக்கும் நினைவாகி நிற்பது தெய்வம்'' என்பது சைவசமயத்துச் சான்றோர் கண்ட மெய்க் காட்சியாம். மக்கள் தம் நலம் கருதி நினைக்கும்பொழுது அந் நினை வுக்கும் நினைவாகி நிற்பதும் தெய்வந்தான். இந்தத் தெய்வத்தையே 'ஊழ்வினை' என்பர். மக்களிற் சான்றோர் மட்டுமே பிறர் நலம் பேணல் வேண்டும் என நினைப்பர். இத் தகைய நினைவுக்கு நினைவாகி நிற்பது ஊழ் வினையாகிய தெய்வம் அன்று. பொன்னம் பலவாணனுகிய அம் முழுமுதற் றெய்வமே முன்னின்றது என்றுணர்தல் வேண்டும். இருந்தவாற்ருல் அத் தெய்வம் மறைமலை யடிகளார்க்கு வழியடியாராக அத்தகு ஆற்ற லமைந்த திருவரங்கம் பிள்ளையை அவர்க்குக் காட்டித் தந்ததோடமையாது அவரை அடி களார் அன்பிற்குரிய அருமை மருகனுகவும் அகலொண்ணுத உறவும் பூட்டி விட்டது. அம் மட்டோ! நிலையாமையையே தனக்குரிய பெருமையாகக் கொண்டிருக்கின்ற இந்நில வுலகத்திலே அத்திருத் தொண்டுகள் நிகழ்ந்து முற்றுப்பெறுக என்னும் திருவுள் ளக் குறிப்பினேடு அம்பலத்திலாடுகின்ற அம் முழுமுதல் தெய்வமே மடிதற்றுத்தான் முந்துற்று நிற்கின்றது என்பதற்கு அறிகுறி யாவது, மறைந்த தெய்வமாகிய திருவரங்கத் திற்கு இப்படி ஆள்வினைத் திறம் அனைத்தும் திரண்டு ஓருருக் கொண்டாற் போலச் 'சுப்பையா' என்று ஒரு தம்பியார் உளரா யிருப்பதேயாம்.

திரு. வ. சுப்பையாப்பிள்ளையவர்கள் தம்முடைய அகவைக்காலத்திலேயே ஐம்பது ஆண்டுகள் விடாமுயற்சியோடு மறைமலை யடிகளார் கருத்துக்களையே குறிக்கோளாகக் கொண்டு தம் தமையனுராற் ருேற்றுவிக்கப் பட்ட இச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழ கழத்தின் வாயிலாக அடிகளார் குறிக்கோ ளைச் செய்து முடித்துவிட்டார். அடிகளார் மொழி தூயதாக வேண்டும் என்று நினைத்த நினைப்புத் தமிழக முழுவதும் பரவி மிக விரை விலேயே பயன்தரத் தொடங்கிவிட்ட மையை நாடெங்கும் முழங்குகின்ற அரசிய லாளர் சொற்பொழிவு முழக்கங்களினும், பொதுமக்கள் முன்னிலையிலே முழங்குகின்ற கருத்தரங்குகளிலேயும், புலவர் பெருமக்கள் இலக்கியம் பற்றி நிகழ்த்துகின்ற பட்டி மண்டபத்து வீரஞ்செறிந்த சொற்போரார வாரங்களிலும், இவற்றை ஒலிபரப்புகின்ற வானெலி முழக்கங்களிலும் செவியாரக்கேட்டு மகிழும்பொழு துணர்கின்ருே மல்லமோ! இத்தகு பெருநலத்தை விளைவித்தது திரு. வ. சு. பிள்ளையவர்களின் தனிப்பெருமுயற் சியேயாம் என்பதில் ஐயமில்லை.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தால் விளைந்த நலத்தை மட்டுமே யாமறி வோம். அப்பெரு முயற்சியினூடே ஐம்பது ஆண்டுகளுக்கிடையே எண்ணிறந்த இடுக் கண்களையும் அவற்ருலாய துன்பங்களையும் திரு. பிள்ளையவர்கள் மட்டுமே அறிவார். அத்துன்பங்களை அவர் எல்லையற்ற தமது பொறுமையாலே நோற்றுமிருப்பர். இங்ங னம் துன்பம் சுடச்சுட நோற்கிற்பது செயற் கரியதொரு தவமுயற்சியே ஆகும் அன்ருே? அத்தகு முயற்சியின் பயனுகவே சைவசித் தாந்த நூற்பதிப்புக் கழகம் இற்றைநாள் சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிட்டுத் திகழ் கின்றது. இக்காரணத்தால் யாம் திருக் குறளினின்றும் அகழ்ந்தெடுத்துக் கொண்ட பொன் பொதிந்த அத்தலைப்பு, இக்கட்டு ரைக்குப் பெரிதும் பொருத்தமுடையதாக வருகின்றது.

**உரையாணி :**

திரு. பிள்ளையவர்கள் தாம் பதிப்பிக்கத் தொடங்கும் நூலின்கண் தமிழ் தூய்மையாக இருக்கின்றதா! என்றுணர்ந்துகோடற்கு ஆசிரியர் மறைமலையடிகளாருடைய உரை நடையையும் கருத்துக்களையுமே உரையாணி யாகக் கைக்கொள்கின்றனர். அப்பொன் போன்ற தமிழின் மாற்றுச் சிறிது குறைந் தாலும் அத்தகைய நூலை அச்சேற்றுதற்கு

அவர் உடம்படுவதில்லை. இஃது அவர்க்கு ஒரு நோன்பு.

**தூய தமிழ் என்றால் என்னை ?**

தூய தமிழ் என்கின்றீர்களே என்னை? என்று வினவுவார் யாரேனும் உளராயின் அவர்க்குக் கூறுகின்றோம். இதோ பாருங்கள்-தில்லைச் சிற்றம்பலம், திருமறைக்காடு, திருவெண்காடு, திருமயிலாடுதுறை, திருக்குரங்காடுதுறை எனவரும் இன்னோரன்ன இடப்பெயர்கள் செந்தமிழ் மணக்கும் கேட்டற்கினிய அழகிய தூய தமிழ்ச் சொல் என்போம். இவற்றை இறையன்பு கெழுமிய நெஞ்சத்தோடு பாடிப் பரவிய நாயன்மார்கள் தாமும் தூய தமிழ்க் குடிப்பிறப்புடையோராதலின் இப்பெயர்களைக்கூறியே அத்திருக்கோயில்களைப் பாடிப் பரவியுமிருக்கின்றனர். இவற்றையெல்லாம் பொருள் விளக்கமில்லாத வடசொற்களாக மாற்றப்பட்டிருத்தல் எற்றிற்கு? திருமயிலாடுதுறை என்பது எத்தனை அழகான இனிய பெயர்! மாயூரம் என்று இதனை மாற்றியது எத்தனை மடமை. தமிழ் மொழிக்கு என்று தனித்ததோர் ஓசையுண்டு. தனித்ததோர் அழகுமுண்டு. அதன் ஓசைக்கும் அழகிற்கும் பேரின்பம் பயக்கும் தனித்திறமையும் உண்டு. இவற்றை ஒவ்வொரு தமிழ் மகனும் குறிக்கொண்டு பேணிக்கொள்ளல் வேண்டும் என்று முதன் முதலாகக் கருதியவர் ஆசிரியர் மறைமலையடிகளார் மட்டும் அல்லர். வரலாறு அறியாத பழங்காலத்திலேயே இங்ஙனம் கருதிய சான்றோர் இருந்தனர். அவர் யார்?

**தொல்காப்பியனார் :**

இற்றை நாள், பண்டை நாள் தமிழ்க் குலம் உழந்து பெற்ற அறிவுச் செல்வமெல்லாம் ஒருங்கே தொகுத்து வைக்கப்பட்ட அறிவுக் கருவூலமாக நின்று நிலவுவது ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியம் என்னும் இயல் நூலேயாகும். ஆசிரியர் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே இத்தமிழகத்திலே ஆரியர் அவர்தம் எழுதாக் கிளவியோடு குடியேறி நிலை பெற்றுவிட்டனர். அவர்தம் ஆரிய மொழியும் அவர்தம் உயிர்ப்பலி வேள்விகளாகிய அறநெறிக் கொவ்வாத போலிக் கொள்கைகளும் தமிழ் மொழியினொடும் — தமிழர்க்கே சிறந்துரிமையுடைய பொருணெறி மரபாகிய வாழ்க்கைப் பண்பாட்டினொடும் - வரையறையின்றி விரவிவிட்டன. தம் மொழிக்கும் தம் வாழ்க்கைப் பண்பாட்டிற்கும் ஏற்பட்டுள்ள இவ்விழுக்கினை அகற்றி அவற்றைத் தூய்மை செய்தற் பொருட்டே அம்முதுபெரும் புலவர் தொல்காப்பியம் என்னும் இயல் நூலைத் தமக்கு முந்துநூல் கண்டு முறைப்படஎண்ணி,"தொல்காப்பியன் என" தம் பெயர் தோற்றி அப்பெரு நூலை யாத்தருளினர். வடமொழியாதல் திசை மொழியாதல் இன்றியமையாத விடத்தே அவற்றைத் தமிழோசைப்படுத்து இயைத்துக் கொள்க என்பது தொல்காப்பியரின் அறிவுரை.

அறிவுக்கு வழிவிடும் சால்பு :

நல்லறிவு எத்திசையிலிருந்து வந்தாலும் ஏற்றுக் கொள்ள உன் நெஞ்சத்துச் சாளரங்களை நன்றாகத் திறந்து வைத்துக் கொள்! என்பதே ஆசிரியர் தொல்காப்பியனாரும் அவர் அடிச்சுவடு பற்றி வந்த தெய்வப் புலமைத் திருவள்ளுவனாரும் நம் மனோர்க்குச் செவியறிவுறுத்திய அறிவுரைகளாகும். "எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்பது வள்ளுவர் வழங்கும் அறிவுரை.

ஆழியும் அச்சும் :

"தமிழ் மகனே! உன்னுடைய மொழி மிகவும் தொன்மையானது. அதுபோலவே உன் வாழ்க்கைப் பண்பாடுதானும் கல் தோன்றி மண் தோன்றாத மிகப் பழங்காலத்திலேயே தொடங்கி வழிவழிச் சிறந்து வரும் பெருஞ் சிறப்புடையதாகும். உன் வாழ்க்கை 'அக வாழ்க்கை' என்றும் 'புற வாழ்க்கை' என்றும் இருவகைப்பட்டதாகும். நீ இவ்வுலக வாழ்க்கையில் இன்புறுதற்கும் இவ்வுலக வாழ்க்கையில் வாழ்வாங்கு வாழ்ந்து காமஞ் சான்ற கடைக்கோள் காலை உணர்ச்சி மிகவினாலே பெரும் பேரின்பமாகிய பேராவியற்கையிற் புகுவதற்கும் ஏற்புடையதாகும் பொருட்டே அங்ஙனம் அகம் புறம் என்னும் இருவகையாக உன் வாழ்க்கை நெறி கூறுபடுத்தப்பட்டிருக்கிறது."

"உன் புற வாழ்க்கை இடையறாது மாறிக்கொண்டேயிருக்கும் காலத்தின் மாற்

றத்திற்கிணங்க நின் புறவாழ்க்கையை மட்டும் நீயும் மாற்றிக்கொண்டே செல்வாயாக! உன்னுடைய புறப்பொருள்கள் தேரின் ஆழிகளைப் போன்றவை. அவை இடையருது சுழன்று கொண்டே போகட்டும். உன் அகப்பொருள் வாழ்க்கை மட்டும் ஒருநாளும் மாற்றம் அடைதல் கூடாது. அது வாழ்க்கைத்தேரின் அச்சுப் போன்றது. அஃது அன்பை அடிப்படையாகக் கொண்டது. அன்பே இன்பம், அன்பே கடவுள் ஆதலால் அன்பு நிலைபிறழ்தல் கூடாது. இடையருது சுழன்று கொண்டிருக்கும் உன் புறப்பொருள்களோ அரசியலையே அடிப்படையாகக் கொண்டுள்ளன. அரசியலோ இடையருது மாறுமியல்புடையது. ஆதலால் புறப்பொருளைப் பொறுத்த மட்டில் நீ உன் காலத்தரசியலுக்கிணங்க,

''எவ்வ துறைவ துலகம் உலகத்தோடு
அவ்வ துறைவது அறிவு''

என்னும் அறிவுரையின் படியே நடந்து கொள்க.''

''இனி, வாழ்க்கைக்கு இன்றியமையாத பொருள்கள் உனக்கு உனது தமிழகத்திலே மட்டும் கிடைத்துவிட மாட்டா. அவற்றை நீயே மொழி வேறுபட்ட நாட்டினும், காலினும் கலத்தினும் சென்று ஈட்டி வருதலும் வேண்டும். கலத்திற் செல்ல நேரின் உன் மனைவியோடு செல்ல வேண்டா! ஏன்? மகளிரே ஒழுக்கத்திற்குத் தலைவரம்பாகவும் அறத்தின் திருவுருவங்களாகவும் திகழ்கின்றனர். ஆசாரங்கள் நாடுகள் தோறும் வேறுபட்டிருக்கின்றன. நாம் தெய்வத் தன்மையுடையதாகக் கருதுகின்ற கற்பொழுக்கத்தைத் திண்ணியதாகப் போற்றிக் கொள்ளாத நாடுகள் கடலுக்கு அப்பால் பல இருக்கின்றன. ஆதலாற்றான் 'முந்நீர் வழக்கம் மகடூஉவோ டில்லை' என்று உனக்குப் பழந்தமிழர் பண்பாடு ஒன்றனையும் உணர்த்தல் வேண்டிற்று.'' என்னுமிவை பொதுவாக நம் முன்னோரின் அறிவுரைகளிற் சிலவாம்.

**வள்ளுவர் காலத்திலேயே புறவாழ்க்கையில் மாற்றம் :**

காலந்தோறும் புறப்பொருளில் மாற்றம் நிகழ்தல் இன்றியமையாததேயாகும். இம் மாற்றத்தாலே நாள்தோறும் புதுமைகள் தோன்றுகின்றன. இப்புதுமையைத் தோற்றுவித்தற் பொருட்டே இம்மாயிரு ஞாலம் தன்னைத்தானே உருட்டிக் கொள்கின்றது. அறுபது நாழிகைக்கொரு முறையாகப் புத்தம் புதிய நாளையும் தோற்றுவிக்கின்றது. அந்த நாள்கள்தாமும் தம்மோடு ஏதேனும் புதிய செய்திகளோடேயே வந்து பிறக்கின்றன. இப்புதுமைகள் பிறக்கவில்லையாயின் மக்கள் வாழ்க்கை பெரிதும் புளித்துப் போம். வள்ளுவர் காலத்திலேயே தொல்காப்பியர் காலத்து வழக்கம் புறப்பொருள் வகையிலே பெரிதும் பழையனவாய்க் கழிந்து பெயரும் காணப்படாமல் மறைந்தே போயின. அவற்றிற்கு எடுத்துக் காட்டாகப் பண்டைக் காலத்து அரசியல் வழக்காகிய வெட்சி வஞ்சி உழிஞை முதலிய திணைகள் திருக்குறளிற் சிறிதும் காணப்படாமல் முழுதும் மறைந்தமையைக் காட்டலாம்.

**முடிவுரை :**

மக்கட் குலம் ஒவ்வொன்றும் தமது வாழ்க்கைப் பண்பாட்டினாலும் இலக்கியச் சிறப்பாலுமே பிறநாட்டு மக்களால் நன்கு மதிக்கப்படுகின்றது. நமது தெய்வத் திருக்குறளாலே தமிழர் இனம் உலகத்துப் பிற நாட்டு மக்களாலே இற்றை நாள் பெரிதும் பாராட்டப்படுவதனை அறியாதார் யாருமிலர். அத்தகைய இலக்கியத்தையும் அதற்கு முதலாயமைந்த சங்க விலக்கியங்களையும் இக்காலத்திற்கேற்பக் கண்டார் காமுறும் வண்ணம் ஒரு சேர நூல் வடிவத்திலே தந்திருக்கின்ற இச் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகமும் அதன்கண் இத்திருத் தொண்டினை இடையருது நிகழ்த்துகின்ற கழகத் தொண்டர்களும் நீடூழி வாழ்க என்று யாம் நெஞ்சார வாழ்த்துகின்றோம்.

———

சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பஞ்
சுடச்சுட நோக்கிற் பவர்க்கு (குறள் உசுஎ)

———

# பொன்விழா எடுப்பிக்கும் பொற்புறு கழகம்

[நுண்கலைச் செல்வர் திரு. அ. இராகவன்]

*அருங்கலைகள் பலவற்றில் வல்லவரான இவர் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த சாத்தன் குளத்தில் தோன்றியவர். 22-4-1902 ஆம் நாளில் இவர் தோன்றினார். இளமையிலேயே சீர்திருத்த மனப்பான்மை கொண்டு விளங்கியதால் பள்ளிப்படிப்பிற்குப் பின் சீர்திருத்தச் செம்மல் ஈரோட்டுப் பெரியாரின் பாசறையில் சிறிது காலம் உறைந்தவர். இவர் இலங்கையில் அச்சுக்கூடம் ஒன்று நடத்தினார். ஓவியக்கலை சிற்பக் கலை, காசுகள் பற்றிய கலையறிவு முதலிய பல கலைகளிலும் பேரீடு*



*பாடு கொண்டு இவற்றைப் பற்றி ஆராய்ந்து பல ஆராய்ச்சிக் கட்டுரைகளைச் சிங்கப்பூரிலிருந்து வெளியாகும் 'தமிழ் முரசு' இதழில் மாதக்கணக்கில் தொடர்ந்து எழுதியவர். 'தமிழ் நாட்டுத் திருவிளக்குகள்' 'தமிழக சாவகக் கலைத் தொடர்புகள்', 'நம் நாட்டுக் கப்பல் கலை' போன்ற சிறந்த நூல்களை வெளியிட்டவர். இவர்தம் கலையறிவைப் பாராட்டிக் கழகம் நுண்கலைச் செல்வர்' என்ற பட்டத்தைத் தவத்திரு. குன்றக்குடி அடிகளார் வழி இவருக்கு வழங்கியது.*

பாளையங்கோட்டை பெருமாள் வடக்குத்தேர்த் தெருவில் எனது இல்லம் "கலைக்கூடம்" என்னும் பெயருடன் இன்று இருந்து வருகிறது. "கலைக்கூடத்தின்" எதிர்ப்புறத்தில் கழக நிறுவிய அண்ணல் உயர்திரு. திருவரங்கனார் இல்லம் இருக்கிறது. அங்கு ஐம்பது ஆண்டுகளுக்குமுன் "திருசங்கர் கம்பெனி" என்ற ஒரு நூல் வெளியீட்டுக் கழகம் அரும்பியது. அதுவே "திருநெல்வேலித் தென் இந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிட்டெட்" ஆக 1920 ஆம் ஆண்டில் மலர்ந்தது.

நமது கழகம் பாளையங்கோட்டையில் கருவுற்று நெல்லையிற் பிறந்து சென்னையில் வளர்ந்து சிறப்புற்று விளங்குகிறது. கழகம் கருவுற்ற காலம்முதல் இன்றுவரை அதனோடு தொடர்பு கொண்டவன் என்று நான் இன்று பெருமையோடு பேசமுடியும்.

## எனது கழகத் தொடர்பு

1922ஆம் ஆண்டு சூன் மாதம் நெல்லையில் உள்ள கழகத்தின் உட்புகுந்தேன். எம் அன்பிற்கும் மதிப்பிற்கும் உரிய அண்ணன் திருவரங்கம்பிள்ளை அவர்கள், அவர்களுக்கு இயற்கையாய் அமைந்த புன்முறுவல் திகழும் முகத்துடனும் இனிய மொழியோடும் என்னை வரவேற்றார்கள். அன்று அவர்கள் கையால் மூன்று புத்தகங்களை வாங்கிக்கொண்டு திரும்பினேன். அவைகளாவன : திருவாளர்கள் (1) பரிதிமால் கலைஞன் எழுதிய "மதிவாணன்" என்னும் நூல் (2) மறைமலை அடிகள் எழுதிய பட்டினப்பாலை என்னும் ஆராய்ச்சி நூல் (3) திரு. கா. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் எழுதிய இந்து சமயங்களின் சுருக்க வரலாறும் சிவாலயங்களில் சுமார்த்த மதக் கலப்பும்" ஆகும்.

அந்நூல்களை நன்கு பயில முற்பட்டேன். அஃது என் வாழ்க்கையில் ஒரு திருப்பத்தை உண்டாக்கிவிட்டது. எனக்கு நாடகத் தமிழ் மீதும் சங்க இலக்கியங்கள் மீதும் சைவ சமயத்தின் மீதும் மிகுந்த பற்றையும் மதிப்பையும் உண்டு பண்ணிவிட்டது. அப்பால் அண்ணல் திருவரங்கனார் தூண்டுதலால் சிவதீக்கையும் பெற்றேன் ; திருவாளர் கா. சுப்பிரமணியபிள்ளை, வாலையானந்த சுவாமிகள், திரு. வி. கலியாணசுந்தரமுதலியார், தாசில்தார் நெல்லையப்பபிள்ளை, மணம் பூண்டி குமாரசுவாமிப்பிள்ளை, நாகர்கோயில்

பி. சிதம்பரம் பிள்ளை, ஈ. வே. இராமசாமிப் பெரியார் போன்ற அறிஞர்களுக்கு அறிமுகமும் செய்து வைக்கப்பெற்று அவர்களின் அன்பிற்கும் நட்பிற்கும் மதிப்பிற்கும் உரியவனுனேன்.

1923 ஆம் ஆண்டு நெல்லையில் சுயமரியாதைச் சங்கம் தோற்றுவிக்கப்பட்டது. அச்சங்கத் தொடக்க விழாவைத் திருவரங்கனர் அவர்களே முன்னின்று நடத்திவைத்தார். அவ்வியக்கப் பத்திரிகையைத் திருவாரூர் ஞானியார் சுவாமிகள் தொடங்கி வைத்தார். அடுத்த ஆண்டு சுயமரியாதை இயக்கம் சைவசமயத்தைத் தாக்கியது. திருவரங்கனர் அவர்கள் அவ்வியக்கத் தொடர்பை அறுத்துக்கொண்டார். சைவ அன்பர்கள் பலரையும் அதில் பங்கு கொள்ளாது தடுத்தார். ஆனல் நானும் நாகர்கோயில் சிதம்பரம்பிள்ளை, கடையம் பெருமாள் ராயர் போன்றவர்கள் அண்ணல் திருவரங்கனர் அவர்களின் சொல்லைக் கேளாது சுயமரியாதை இயக்கத்தில் முழுப் பங்குகொண்டோம். நான் அவ்வியக்கப் பத்திரிகையில் கட்டுரைகள் எழுதியும் அவ்வியக்கக்கூட்டங்களில் பேசியும், நூல்கள் எழுதியும் அவ்வியக்க நூற்பதிப்புக் கழக அமைச்சராயும் தொண்டாற்றும் பணியில் முழுமூச்சாக ஈடுபட்டு வந்தேன்.

திருவரங்கனர் அவர்கள் 1935 ஆம் ஆண்டு நாகர்கோயில் பி. சிதம்பரம்பிள்ளை அவர்களைக் கண்டுபேசி சுயமரியாதை இயக்கத்தினின்று மீட்டுக் கழகத்தின் தலைவராக ஆக்கிக்கொண்டார்கள். 1966 ஆம் ஆண்டு இன்றைய கழக ஆட்சிப்பொறுப்பாளரும் திருவரங்கனரின் இளவலுமாகிய உயர் திரு. தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்கள் என் இல்லத்திற்கு வந்து என்னை அழைத்துக் கழகத்தொண்டனுகவும் ''செந்தமிழ்ச்செல்வியின்'' கட்டுரையாளனுகவும் கழக நூலாசிரியனுகவும் திகழுமாறு கழகத்தின் பக்கம் என்னை ஈர்த்துக் கொண்டார்கள்.

நான் முன்னர், கழகத்தின் தொடர்பால் 1932ஆம் ஆண்டில் ஈரோடு பகுத்தறிவு நூற்பதிப்புக் கழகம் லிமிட்டெட் என்ற நூல் வெளியீட்டுக் கழகத்தின் அமைச்சரானேன். ''பகுத்தறிவு'' என்ற திங்கள் இதழின் வெளியீட்டாளராகவும் "அறிவு'' என்ற திங்கள் இதழின் ஆசிரியராகவும் உயர்த்தப் பெற்றேன். அப்பால் 1966 ஆம் ஆண்டில் கழகத்தின் ஆதரவில் நடைபெறும் தென்னிந்திய தமிழச்சங்கத்தால் பொன்னுடை போர்த்தப் பெற்று ''நுண்கலைச்செல்வர்" என்ற பட்டமும் பெற்றேன். கழக ஆட்சிப் பொறுப்பாளர் திரு. வ. சு. அவர்கள் எனது கலை ஆய்விற்கு ஆக்கமும் ஊக்கமும் ஊட்டித் ''தமிழகச் சாவகக் கலைத் தொடர்புகள்'' என்ற நூலை வெளியிட்டுக் கழகத்தின் நூலாசிரியர்களில் ஒருவராக ஆக்கினர்கள். நான் பலகலை நூல்களை எழுதவும் வெளியிடவும் கலைப்பொருள்களைத் தொகுக்கவும் ஊக்கம் அளித்து வந்தார்கள். கழகத்தோடுள்ள எனது நட்பு மிக நெருக்கமானதாகச் செய்துள்ளார்கள்.

**கழகம்**

கழகம் என்ற பெயரை 19 ஆம் நூற்றுண்டுத் தமிழர்களிற் பலர் கேட்டும் படித்தும் அறியார்கள். சங்கம் என்ற பதம் வடமொழி என்று கூறியபொழுது அதற்கு ஈடான தமிழ்ச்சொல், கழகம் என்று கூறத் தமிழ் அறிஞரில் பலர் அறியாது விழித்ததுண்டு. ஆனல் இன்று ''கழகம்'' என்ற பெயர் தமிழ்மக்கள் அனைவரும் பயன்படுத்தும் ஒரு சீரிய சொல்லாகத் திகழ்கிறது. தமிழ் ஒரு சக்திவாய்ந்த மொழியாகத் தமிழகமெங்கும் ஏன் ? -இந்தியாவிலும், பிறநாடுகளிலும் எண்ணப்படுகிறது. தமிழர்களின் அறிவை வளர்க்கும் கருவூலமாகவும் அரசியல் மேம்பாட்டை வளர்க்கும் படைக்கலனுகவும் அரனுகவும் மிளிர்கிறது.

இக்கழகம் என்ற சொல்லை 62 ஆண்டுகளுக்கு முன் நெல்லை இந்துக்கல்லூரியில் பேராசிரியராயிருந்த மனேன்மணீயம் ஆசிரியர் நெல்லையில் ஒலிக்கச் செய்தார். மனேன்மணீயத்தில் ''கண்ணுதல் பெரும் கடவுளும் கழகமோடமர்ந்து'' என்று குறிப்பிட்டார். 1908ஆம் ஆண்டில் விருதை சிவஞானயோகிகள் நெல்லை மாவட்டத்தில் உள்ள கோயில்பட்டியில் ''திருவிடர்க் கழகம்'' கண்டார். 1920ஆம் ஆண்டு திருநெல்வேலித் தென் இந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தை நிறுவிப் பலவகை நூல்களை வெளியிட்டு இந்தியா

விலும், இலங்கையிலும், மலேசியாவிலும், போர்னியோவிலும், மொரேசியசிலும் பிற இடங்களிலும்-ஏன் ? தமிழர்களின் வீடுகளில் எல்லாம் கழகம் என்னும் சொல் ஒலிக்குமாறு செய்யப்பட்டது. இத்தமிழ் உணர்வு தமிழும் சைவமும் எங்கும் பரவத் துணையாய் இருந்தது. 1932ஆம் ஆண்டு ஈரோட்டில் எனது முயற்சியால் பகுத்தறிவு நூற் பதிப்புக் கழகம் லிமிட்டெட் உருப்பெற்றது. அப்பால் திராவிடக் கழகமும், திராவிட முன்னேற்றக்கழகமும் தோன்றின.

ஆனால், தென் இந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகமே தமிழ் அறிஞர்களிடமும் பள்ளி மாணவர்களிடமும் செல்வாக்குப் பெற்றுத் தமிழன் என்ற உணர்ச்சியையும் தமிழ்ப்பற்றையும் வளர்த்தது. 1400 நூல் களையும் பத்து நூறாயிரத்திற்கு மேற்பட்ட படிகளையும் அச்சிட்டுத் தமிழர்களுக்கு, தாங்கள் தமிழர்கள் என்னும் உணர்ச்சி உந்தியெழும்படி செய்தது. விளக்கமாகச் சொன்னால் தமிழகத்தில் தமிழர் ஆட்சி நிலவ அடிப்படையிட்டது என்றுகூடத் உறுதியாகக் கூறலாம்.

கழகம் ஐம்பது ஆண்டுகள் ஆற்றிய அளப்பரிய அருந் தொண்டினால் தமிழ் மக்கள், நமது நாடு, நமது இனம், நமது மொழி, நமது பண்பாடு என்னும் உணர் வைப் பெற்றனர். பிறமொழி கலவாது தனித்தமிழில் பேச முன்வந்தனர். தமிழகத் தில், தமிழ் ஆட்சி மொழியாகவும், போதன மொழியாகவும் விளங்க மாணவர்கள் விழைந் தனர். தமிழகம் தமிழர்களின் தாயகம்; அங்குத் தமிழர்தாம் ஆட்சி பீடத்தில் அமர வேண்டும் என்று மக்களிடையே ஒரு சீரிய எண்ணம் பரவியது. 1967இல் தமிழகத்தில் தமிழினை வளர்க்கும் நல்லவர்களை, வல்லவர் களை அரச கட்டிலில் அமர்த்தியது.

கழகம் ஆதியில் சைவநெறியைப் பேணு வதற்கு என்றே தோற்றுவிக்கப்பட்டது. அப்பால் சைவமும் தமிழும் பிரிக்க முடியாத வாறு பின்னிப் பிணைந்து கிடப்பதை அறிந்து சைவசமய நூல்களனைத்தையும் சங்க மருவிய நூல்கள் எல்லாவற்றையும் பிழையின்றிக் கண்கவர் வனப்புடன் வெளியிட்டுப் பீடும் பெருமையும் பெற்றது. இன்று இந்தி யாவிலே ஏற்றம் பெற்ற வெளியீட்டுக் கழக மாய் ஒளிர்கிறது. இந்திய அரசிடமிருந்தும் அனைத்திந்திய அச்சகக் கழகத்திடமிருந்தும் நமது கழகம் ஒப்பற்றது என்று பரிசும் பாராட் டும் பெற்றது.

கழகம் கவிஞர்களுக்கு ஒரு கருவூலம்; அறிஞர்களுக்கு ஓர் அரிய அரண்; மாணவர் களுக்கு வற்றாத சுனை; மக்களுக்கு ஒரு பெரிய ஆயுதம். 1936 ஆம் ஆண்டிலே கழகம் இந்தி எதிர்ப்பிற்குக் கால் கோலியது. நமது மாநிலத்தில் தமிழக அரசு அரும்பத் தோன்றத் துணையாக இருந்தது என்பவை ஒரு சிறிதும் மிகையாகா.

நமது கழகம் பல்வேறு இன்னல்களுக்கு இடையே பெரியார் வ. சு. அவர்களின் தளர்வுறு முயற்சியால், அரிய உழைப்பால் வளர்ச்சியுற்று 1400 உயரிய நூல்களை வெளியிட்டுள்ளது. கழகம் ஐம்பது வயதைப் பெற்றுப் பொன் விழாக் கொண்டாடும் பேற்றைப் பெற்றுள்ளது. 44 ஆண்டுக ளாகச் செந்தமிழ்ச் செல்வி என்னும் அரிய திங்கள் வெளியீட்டை வெளியிட்டுப் பெருமை பெற்றுள்ளது. சென்னையில் தலைமை நிலைய மும் நெல்லை, மதுரை, கோவை ஆகியவிடங் களில் கிளை நிலையங்களும் நெல்லை, சென்னை, பல்லாவரம் ஆகியவிடங்களில் சிறந்த நூலகங்களையும் அமைத்துள்ளது. பாட நூல்களை வெளியிட்டு மாணவர்களையும் ஆசிரியர்களையும் கவர்ந்து அவர்களிடம் தமிழ் மணங் கமழச் செய்துள்ளது.

கழகம் ஆற்றிவரும் தொண்டு ஒப் புவமையற்றது; சீரியது; சிறப்பு மிக்கது. இது வரை எங்கும் எவரும் ஆற்றியிராத தமிழ்ப் பெரும் பணியை, சைவ சமயத்தொண்டைத் தமிழர்கள் என்றும் மறுக்கவோ, மறைக்க வோ முடியாததாகும். இன்று கழகத்தின் நோக்கம் வெற்றியீட்டிவருகிறது.

கழகத்தை நிறுவிய அண்ணல் திருவரங்கனார் அதைக் கன்மலைமீது அடிப் படையிட்டது போல் உறுதியாக அமைத்துச் சிறப்புற்று வளரும்படி செய்தார். அது குன்றின் மேலிட்ட பொன்று விளக்கென ஒளி விட்டோங்கியது. பிழைகளின்றிக் கண்ணைக் கவரும் கட்டோடு நூல்கள் சில வெளியிடச் செய்தார்கள். அவர்களுக்குப் பின் ஆட்சிப் பீடத்தில் அமர்ந்த தமிழ்ச் செம்மல் சிவநெறிச் செல்வர் உயர்திரு

வ. சுப்பையாபிள்ளை அவர்கள் ஆயிரத்திற்கு மேற்பட்ட வெளியீடுகளையும் நூறாயிரக்கணக்கான ஏடுகளையும் (சுமார் 2,00,000க்கு மேற்பட்ட படிகளையும்) பதிப்பித்துத் தமிழ் கூறும் நல்லுலகம் அனைத்திலும் பரப்பிக் கழகம் வளமுற்றுப் பொருளாதாரச் செழிப்புற்றோங்குமாறு செய்தமைக்குத் தமிழர்கள் அவர்களின் அரிய பணியைத் தெய்வத் திருப்பணியாக எண்ணிப் பொன்னெழுத்தால் பொறித்துப் போற்றத்தக்கது என்று இந்தப் பொன் விழாவில் தமிழர்களின் பிரதிநிதியாக எண்ணிக் கூறிக் கொள்கின்றேன்.

கழகம் ஆற்றிய பணிகள் பல ; இன்னும் ஆற்றவேண்டிய தொண்டுகள் சில. அவைகளைக் கழகத்தார்க்கும் தமிழ் மக்களுக்கும் இந்த விழாவின்போது சொல்லிக் கொள்ள விரும்புகின்றேன். அவை அடியில் வருவன வாகும் :

i. கழகம் தமிழ்க் கலைகளை வளர்க்கவும் கலை நூல்களை அதிகம் வெளியிடவும் முன்வரவேண்டும்.

ii. சமய நூல்கள் இலக்கியங்கள் இலக்கணங்கள் கலை நூல்கள் போன்றவைகளை ஆங்கிலம், இந்தி, பிரஞ்சு முதலிய பிற மொழிகளில் வெளியிடவேண்டும். செந்தமிழ்ச் செல்வி போன்று ஆங்கிலத்தில் ஒரு திங்கள் வெளியீடோ, அல்லது, முத்திங்கள் வெளியீடோ வெளிவரச் செய்யவேண்டும்.

iii. கழகத்தின் கிளைகளும் பொருளக மேலாள்களும் (Agents) தில்லி, பம்பாய், கல்கத்தா, திருவனந்தபுரம், மைசூர், இலங்கை, சிங்கப்பூர், மலேசியா, இலண்டன், நியூயார்க் போன்ற இடங்களில் ஏற்பட வேண்டும்.

iv. கழகத்தின் அறநிதியினின்று நமது பல்கலைக் கழகத்தில் முதல் தரமாகத் தேர்ச்சி பெறும் பட்டதாரி மாணவர்களுக்குப் பரிசும், பண உதவியும் அளிக்கவேண்டும். அவர்கள் மேனாடுகளுக்குச் சென்று ஆய்வு நடத்த உறுதுணையாக இருக்கவேண்டும்.

v. கழகத்தின் அறநிதியிலிருந்து கல்வி நிலையங்களிலும் கல்லூரிகளிலும் பயிலும் மாணவர் மாணவியர்களுக்கு இயன்ற அளவு உணவு, உடை, சம்பளம், நூல்கள் அளித்து உதவ வேண்டும்.

vi. கல்லூரிகளிலும், பல்கலைக் கழகங்களிலும் சைவசமயம், சைவசமய தத்துவம், இசை, நாட்டியம், முதலியவைகளைப் பயிற்றுவிக்கக் கழகச் செலவில் தனியாக ஆசிரியர்கள் நியமிக்கவேண்டும்.

vii. கழகம் ஆரம்பப் பாடசாலைகள், கல்லூரிகள், மட்டுமின்றித் தமிழ்ப் பல்கலைக் கழகமும் நிறுவ முன்வரவேண்டும். தமிழ்ப் பல்கலைக்கழகம் உருவாக வேண்டும் என்பது கழகத்தின் தொடக்க கால எண்ணமாகும்.

viii. கழகத்தின் அறநிதியினின்று தமிழ் நாட்டில் உள்ள ஒவ்வொரு மாவட்டத்தின் தலை நகரிலும், நம் இளைஞர்களும் மாணவர்களும் தங்குவதற்கும் உண்பதற்கும் ஏற்ற ஒய். எம். சி.எ (Y.M.C.A.) ஒய். டபள்யூ. சி. ஏ. (Y.W.C.A.) போன்ற சைவ இளைஞர் தங்கும் நிலையங்கள் நிறுவ வேண்டும். இவைகளுக்கு அரசினர் உதவியும் பெறலாம்.

இத்தகைய பணிகளால் கழகம் வளரும். அதன் நோக்கம் ஈடேறும். தமிழகத்தில் தமிழர் ஆட்சி நிலைத்து நிற்கும்.

பொன் விழா எடுப்பிக்கும் நமது கழகம் அதன் வலுவும், வாழ்வும், எழிலும், ஏற்றமும் வாணாளும் பெருகி உலகிற்கொரு பேரொளி நல்கும் ஞாயிறே போன்று அறிவொளியூட்டிப் பல்லாண்டு வாழ்க! வாழ்க!! என வாழ்த்துகின்றேன். கழகத்தின் உயிர் நாடியாய்த் திகழும் அதன் ஆட்சிப் பொறுப்பாளர் உயர்திரு வ. சுப்பையாபிள்ளை அவர்கள் கழகத்தின் பொன்விழா எடுப்பித்தது மட்டுமன்றி அதன் வைர விழாவும் பிற விழாவும் நடத்துவதற்கு ஏற்ற அறிவும், ஆண்மையும், நீண்ட வாணாளும், நோயற்ற யாக்கையும் பெறுமாறு இறைஞ்சுகின்றேன். கழகத்தைக் கண்போற் காத்துவரும் பொது மேலாளர் திரு. இரா. கலியாணசுந்தரம் அவர்களும், கழகப் புலவர்களும் பிற ஊழியர்களும் வாழ்க! வாழ்க!! என வாழ்த்துகின்றேன்.

———

# கலைக்கண் கண்ட கடவுள்நெறி

[திரு. செ. வைத்தியலிங்கன் எம்.ஏ., எம்.லிட்.]

தென்னார்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த பரங்கிப்பேட்டையில் தோன்றியவர் இவர். பிறந்த நாள் 20-9-1926. தந்தை செல்லமுத்து ஆச்சாரியார் தாயார்: கோவிந்தம்மாள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துச் சிறப்பு மாணவராய்ப் பரிசுபெற்ற இவர் 1952 ஆம் ஆண்டில் பி. ஏ ஆனர்சுத் தேர்வில் பல்கலைக் கழக முதல் மாணவராய் முதல் வகுப்பில் தேறினார். டாக்டர் தெ. பொ. மீ. டாக்டர் ஏ. சி. செட்டியார் போன்ற பேரறிஞர்களிடம் பயின்றவர். அவ்வாண்டிலிருந்து



அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த் துறையில் ஆசிரியப்பணி ஆற்றி வருகின்றார். 1956இல் தமிழாராய்ச்சிப் பட்டமாகிய எம். லிட். பெற்றார். தமிழக இலங்கை இதழ்களிலும் மலர்களிலும் அவ்வப்பொழுது அரிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதியுள்ளார். இவற்றில் சிறந்தனவற்றைத் தொகுத்து 'அழகுக் கலைத்திறன்' என்று நூல் வடிவில் வெளியிட்டுள்ளார். பல இலக்கிய, நுண்கலை ஆராய்ச்சிக் கட்டுரைகளைச் 'செந்தமிழ்ச் செல்வி'யில் தொடர்ந்து எழுதி வருகின்றார்.

உலகியலை நன்குணர்ந்தவர் சேக்கிழார்; கலைக்கண்ணாளராக—அமைச்சராகப்—பணியாற்றியதால் அவருக்கு நிலவுலகாட்சியின் நிறைகுறைகளும் வன்மை மென்மைகளும் நன்கு புலனாயின. குறைவிலா நிறைவினைக்—கோதிலா வமுதினை—நிலவுலாவிய நீர்மலி வேணியனை—நாடி யெய்தும் நன்னெறி காண நாளும் ஆர்வம் அவரிடம் தழைக்கிறது; அஃதாவது, அவருடைய அடிமனம் ஒரு பக்கம் ஆன்மீகத்தை அழுத்தமாகச் சிந்திக்கத் தொடங்குகிறது. அவருக்கேற்ப இறையருளால் நல்வாய்ப்பும் இனிது கிட்டுகிறது; அதனை ஈடுபாட்டுடன் பயன்படுத்திக் கொள்கிறார். ஆன்மீகக் கலைப் படைப்பாகிய திருத்தொண்டர் புராணமும் மலர்கிறது; மலர்ந்து தெய்வமணம் பரப்பிச் சைவத் திருநெறியை உலகெலாம் அறியச் செய்கிறது.

கலை யென்றால் பொதுவாக வேதம் ஞானம் திறன் ஆடை முதலிய பரந்த பொருண்மையைக் குறிக்கும். ஈண்டுச் சிறப்பாகத் திறனும் ஞானமும் திரண்டெழுந்த பொருண்மையை (கலைமாட்சியை)ச் சிறிது காண்போம்.

## சேக்கிழாரின் கலைத்திறன்

சைவசமய நுட்பங்களை யெல்லாம் நேரிடையாக மக்களுக்கு எடுத்துச் செப்பினால், பலர் செவியில் நுழைந்து பயன்மிக விளைக்குமோ எனச் சிந்திக்கிறார் சேக்கிழார்; எவ்வாறேனும் கடவுள்நெறி தழைக்கச்—சைவப் பெருநெறி பரந்தோங்கிப் பொலிவெய்தத்—தம்மாலியன்றதைப் புரிய முனைகிறார். 'அலகில் கலையின் பொருட்கு எல்லை ஆடுங்கழலே' என வுணர்ந்த அவ்வருளாளர், கடவுள் நெறியைக் கலைக்கண்ணால் கண்டு, கலைவாயிலாகவே மக்களுக்குணர்த்தக் காவியக் கலையைக் கைக்கொள்கிறார். சாத்திரமும் தோத்திரமும் உள்ளுறுத்திய அருளாளர் சரித்திரமானது கவிஞர் கலைக்கூடமாகவே அமைந்து விடுகிறது.

நாட்டில் கலைகள் தழைக்கவே அருளாளர்கள் தோன்றினதாகவும் கூற முற்படுகிறார் சேக்கிழார். திருத் தொண்டர்களுள் தேவார ஒளிநெறி காட்டிய சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவரும் சிறப்பு மிக்கோர். இவர்களைக் குறிப்பிடுகையில் சேக்கிழாரின் கலைத்திறன் நன்கு ஒளிர்தலைக் காணலாம்.

## திருஞான சம்பந்தரைப் பற்றி........

ஆளுடைய பிள்ளையார் உலகிற் பிறந்ததன் காரணமாகப் பல கலைகளும் செழிக்க நல்வாய்ப் பேற்படுகிறது; கலைமகளும் திருமகளும் களிகொண்டு பொலிவெய்தி நிற்கின்றனராம். இதனைச் சேக்கிழார்,

'நாவாண்ட பலகலையும்
நாமகளும் நலஞ்சிறப்பப்
பூவாண்ட திருமகளும்
புண்ணியமும் பொலிவெய்தச்
சேவாண்ட கொடியவர்தஞ்
சிரபுரத்துச் சிறுவருக்கு
மூவாண்டி னுலகுய்ய
நிகழ்ந்ததனை மொழிகின்றேன்'

எனச் செப்பிச் சிறப்பிக்கிறார். குழந்தைப் பருவத்திலேயே கலைகளை ஓதாதுணர்ந்தவர் அருள் ஞானியாகிய சம்பந்தர் என்பதை,

'உவமையிலாக் கலைஞானம்
உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர்
தாமுணர்ந்தார் அந்நிலையில்'

என வருதலால் உணரலாம். கலையால் எவ்வுலகையும் வாழவைக்கப் பிறந்த கவுணியர் குலதிலகத்தை,

'ஏழிசையும் பலகலையும்
எவ்வுலகுந் தனித்தனியே
வாழவரு மவர்தம்மை
வருகவரு கெனவழைப்ப'

என வருகைப் பருவத்துள் வைத்துப் பாராட்டுகிறார் தெய்வப் புலவர். ஆக, இவ்வாறே, 'கலைபயிலும் கவுணியர்கோன்' என்றும் 'கலைவளர் மதியே' என்றும், 'கலை ஞானத் தாழிய கடலே' என்றும் பலபடப் போற்றும் சேக்கிழார், இறைவனாலேயே அவரை 'அருங் கலைக்கோன்' எனச் சுட்ட வைக்கிறார்; இத்தகைய அரும்பெறற் பேற்றினை,

'ஞான சம்பந்தன் நம்பா லணைகின்றான்
மான முத்தின் சிவிகை மணிக்குடை
யான சின்னநம் பாற்கொண் டருங்கலைக்
கோன வன்பா லணைந்து கொடுமென'

என்று வரும் பகுதியால் உணரலாம்.

கண்ணுக்குப் புலனாகும் நிலையில், அழகுணர்வு தரும் பொருள் எல்லாவற்றையும் கலையாகக் கொண்டு விடுதல் கூடாது. அழகானது உண்மையையும் நன்மையையும் இயைத்துக் கொண்டு உணரப்படும்போது தான், அது சிறந்த கலைவடிவங் கொண்டு புலனாகும். மேலும், பொருளின் ஒரு சிறு பகுதியைக் காணுகையிலும் பொருளின் முழு வடிவத்தையும் கலைக் கற்பனை (Asthatic imagination) யால் கூர்ந்து நோக்கும் திறனே கலை நோக்காக அமையும். இத்தகைய நுட்பங்களையெல்லாம் அருட் சார்பில் நுனித்துணருமாறு பெரிய புராணத்துள் ஒரு நிகழ்ச்சியை நோக்குவோம்.

புகலி வேந்தருக்காகவே சிவநேசரால் வளர்க்கப் பெற்ற பூம்பாவை மடிந்து எலும் புருவில் குடத்துள் வைத்துக் காப்பாற்றப் படுகிறாள். அன்பின் உண்மைத் திறத்தை நன்குணர்ந்த ஆளுடைய பிள்ளையார், என் புருவிலுள்ள பூம்பாவையை எழிலார் நங்கையாகவே நோக்குகிறார்; அந்த அருட்கலை நோக்கமானது சொக்கும் பேரழகியாகவே பூம் பாவையை உயிர்ப்பித்து நலஞ் சிறக்கிறது. இந் நிலையில் சேக்கிழாரும் ஈடுபாட்டுடன் 14 செய்யுட்களில் பூம்பாவையை முடிமுதல் அடி வரைக்கும் வருணித்துச் சித்திரிக்கிறார்.

வேதம் தமிழ் செய்த வித்தகராகிய சம்பந்தர் அருள்வாக் கெல்லாம் கலைவெளிப் பாடாகவே உள்ள குறிப்பினைச்,

'சுருதியா யிரமோதி யங்க மான
தொல்கலைக ளெடுத்தியம்புந் தோன்றலாரை'

எனவும்,

'பெருங்காத லாற்பணிந்து
பேணியவின் னிசைபெருக
அருங்கலைநூற் றிருப்பதிகம்
அருள் செய்து பரவினார்'

எனவும் வருதலில் காண்க.

சம்பந்தரைக் கலைஞராகவே மதித்ததால் இறைவனும் தாளம், முத்துச் சிவிகை, மணிக்குடை, எக்காளம், திருச்சின்னம், தாரை முதலியவற்றைக் கொடுத்துச் சிறப்பிக்கிறான்; இறைவனே அவருடைய கலைத் திறனைத்-திருநெறிய தீந்தமிழ்ப் பாடலைக்—கேட்பதற்கு அவாவியும் அவர்பின் செல்கிறான். இத்தகைய கலைஞான சம்பந்தரை மதுரைப் பெருமக்கள் ஆவலுடன் கண்டு களிக்கிறார்களாம். இதனைச் சேக்கிழார்,

'பெருகொளி முத்தின் பைம்பொற்
சிவிகைமேற் பிள்ளை யார்தாம்
வருமழ கென்னே யென்பார்
வாழ்ந்தன கண்க ளென்பார்'

எனச் சுட்டிக் காட்டுகிறார்; மேலும்,

'மண்ணெலா முய்ய வந்த
வள்ளலார் தம்மைக் கண்டு
கண்ணினுற் பயன்கொண் டார்கள்
கன்னிநாட் டவர்க ளெல்லாம்'

எனக் கூறிக் களிக்கிருர்.

**திருநாவுக்கரசரைப் பற்றி........**

ஆளுடைய அரசின் பிறப்பினைச் சிறப்பிக்கும் சேக்கிழார், கலைத்துறைகள் தழைக்கவே தோன்றியருளிய தாகக் குறிப்பிடுகிருர்:

'அலகில்கலைத் துறைதழைப்ப
அருந்தவத்தோர் நெறிவாழ
உலகில்வரு மிருணீக்கி
யொளிவிளங்கு கதிர்போற்பின்
மலருமரு ணீக்கியார்
வந்தவதா ரஞ்செய்தார்'

என வருதல் காண்க. 'தொல்கலையின் பெருவேந்தரா'கிய அப்பர், திருக்கயிலைக் காட்சியைக் காண உயிர் வேட்கை கொள்ளுதலைச் சேக்கிழார்,

'பேணுதிருக் கயிலைமலை
வீற்றிருந்த பெருங்கோலங்
காணுமது காதலித்தார்
கலைவாய்மைக் காவலனுர்'

என இயம்பிடும் உட்கிடை யோர்க.

**திருநாவலூரரைப் பற்றி.......**

ஆளுடைய நம்பியைச் சிறந்த கலைக் காவலராகவே சித்திரிக்கிருர் சேக்கிழார். ஆடலும் பாடலும் அழகும் நிறை உருத்திர கணிகையர் குலத்திலே, அருளுருவாய்ப் பிறந்த பரவை நாச்சியாரைச் சுந்தரர் கற்பகத்தின் பூங்கொம்பாகவும் காமன்தன் பெருவாழ்வாகவுமே காண்கிருர்; கலைப் பாவையாகிய பரவையாரைக் கண்டு காதலித்து மணந்து உரிமையாக்கிக் கொள்கிருர். அவ்வழியே கலையின் கட்டளைக்குப் பணிந்தும் வாழ்கிருர்!

ஒன்றிய உணர்வுடன் சிவபூசை முடிவிலே சிவனுடைய சிலம்பொலி கேட்கும் அருட் பழக்கம் வாய்த்தவர் சேரமான் பெருமாள். அவர் சுந்தரரைக் கண்டு பணிகிருர்; சுந்தரரும் அவரை நோக்கித் தொழுகிருர். இருவர் உளமும் உணர்வும் உயிரும் பிணைகின்றன. அப்பொழுது சுந்தரரைக் குறிப்பிடும் சேக்கிழார்,

'மலைநாட் டெல்லையுட் புகுத
வந்த வன்தொண்டரை வரையில்
சிலைநாட் டியவெல் கொடித்தானைச்
சேரர் பெருமான் எதிர்சென்று
தலைநாட் கமலப் போதனைய
சரணம் பணியத் தாவில்பல
கலைநாட் டமுத ஆரூரர்
தாமுந் தொழுது கலந்தனரால்'

எனக் குறிப்பிடுதல் காண்க.

**கலைக்கண் காணும் பேரொளி:**

கலைமலி சீர்நம்பி கண்ணப்பரது நாட்டத்தைப் பெறும் திருக்காளத்தி மலையினைச் சேக்கிழார் சிறப்புறச் சித்திரிக்கிருர். கடந்த காலத்தை ஊடுருவி நோக்கும் அவரின் கண்களுக்குத் திருக்காளத்தியானது ஒளிவெள்ளம் பரவியதாகக் காணப்படுகிறது; இருளற்ற—இரவற்ற—பகலாகவே அங்கெங்கும் ஒளிமாட்சி; இதனைச்,

'செந்தழல் ஒளியிற் பொங்கும்
தீபமா மரங்க ளாலும்
மந்திகள் முழையில் வைத்த
மணிவிளக் கொளிக ளாலும்
ஐந்தும்ஆ றடக்கி யுள்ளார்
அரும்பெருஞ் சோதி யாலும்
எந்தையார் திருக்கா ளத்தி
மலையினில் இரவொன் றில்லை'

எனவரும் செய்யுளில் காணலாம்.

திருத்தொண்டர் புராணம் பாடத் தொடங்கிய சேக்கிழார், சுந்தரரையும் திருவாரூரையும் தனி நாட்டங்கொண்டுநோக்குகிருர் என்பது வெள்ளிடைமலை. சுந்தரர் காரணமாகப் பரவையாரிடம் தூதுசென்ற பரமனைக் குறிப்பிடுகையில் திருவாரூரே ஒளிமாட்சி கொண்டு விளங்குகிறதாம்; இரவும் பகலாகத் தோன்றுகிறதாம் (அஞ்ஞானம் விலகி மெய்ஞ்ஞானம் ஒளிர்கிறது என்பது குறிப்பு). திருவருட் சார்பின் இத்தகைய மாட்சியினைப்,

'பரவையார் தம்பா னம்பி
தூதராம் பாங்கிற் போன

*அரவணி சடையார் மீண்டே*
*யறியுமா றணையும் போதில்*
*இரவுதான் பகலாய்த் தோன்ற*
*எதிரெழுந் தணையை விட்ட*
*உரவுநீர் வெள்ளம் போல*
*வோங்கிய களிப்பிற் சென்றார்'*

என வருதலில் காண்க. ஆக, இவ்வா றெல்லாம் அருளால் தோன்றும் ஒளிமாட்சியினை அலகில் சோதியனின் அரும்பெருந் திருவிளையாடலாகக் கலைக் கற்பனையால் கண்டு காட்டுகிறார் சேக்கிழார்.

இத்தகைய ஒளிநெறிக் காட்சிகளை யெல்லாம் காணுதலால் மக்களாகப் பிறந்தவர்கள் சிந்திக்க வேண்டிய தொன்று உள்ளது. அஃதாவது, சேக்கிழாருள்ளம் எவ்வாறு கடந்த காலத்தை எதிர் நீச்சலடித்து அருள் மாட்சியைக் காணுகிறதோ, அவ்வாறே நம்முள்ளமும் திருத்தொண்டர் காலத்திற்கு எதிர் நீச்சலடித்துச் சென்று அருள் மாட்சியின் நுட்பம் காண அவாவுதல் வேண்டும். கலைக் கண்ணால் கண்டு காட்டிய சேக்கிழாரின் கடவுள் நெறிக்குத் தமிழர் புரியும் கைம்மாறு இதுதான்! வாழிய உலகெலாம் !!

*'மறவாமை யானமைத்த*
*மனக்கோயில் உள்ளிருத்தி*
*உறவாதி தனையுணரும்*
*ஒளிவிளக்குச் சுடரேற்றி*
*இறவாத ஆனந்தம்*
*எனுந்திருமஞ் சனமாட்டி*
*அறவாணர்க் கன்பென்னும்*
*அமுதமைத்தர்ச் சனைசெய்வார்'*

—வாயிலார் நாயனார் புராணம்.

---

## திருவுருவ வழிபாடு

அறிவிலுருவமாகக் காணப்படும் இப் பருப்பொருளுலகம் போற் காணப் படுவது மன்றாய், அறிவிலருவப் பொருள்களாகிய வளியும் வானும்போ லுணர்ந் துரைக்கப் படுவது மன்றாய், அறிவுள்ள உயிர்ப்பொருள்போ லறிந்துணரப் படுவது மன்றாய்க், காண்பதற்கெல்லாம் அப்பாலாய்க் கேட்பதற் கெல்லாம் அப்புறமாய், உரையளவு சென்று முடிவிடங் கடந்ததாய், மனவுணர்வு சென்று பற்றுதற்கு ஏலாதாய், அறிவினுளறிவாய், உயிரினுள் உள்ளுயிராய், எல்லா ஆற்றலும் உடைய தாய்ப் பேரின்பம் நிரம்பித் ததும்பும் பெருங்கடலாய்ப், பேரருட் களஞ்சியமாய் விளங்கும் முழுமுதற் கடவுளைச் சிறுகிய அறிவுஞ் சிறுகிய தொழிலும் சிறுகியறிந்த தனையும் மறந்து மறந்தறிதலும் மயங்கியறிதலுமுடைய சிற்றுயிர்கள் உணர்ந்து வழிபடுதல் கூடாமையால், அருட்பெருங் கடலாகிய அவ்விறைவன் தன்னை யவ்வுயிர்க ளுணர்ந்து வழிபட்டு உய்யும் பொருட்டுச் சிற்றறிவுத் தன்மை விட்டுச் சிவவறிவுத் தன்மை பெற்று நலமுறுதற்கு வாயிலான நன்முறைதான் திருவுருவ வழிபாடாகும்.

**மறைமலையடிகள்**

—சைவசித்தாந்த ஞானபோதம். பக். கo௮.

---

# வழி பிறக்குமா ?

[திரு. சொ. சிங்காரவேலன், எம்.ஏ., டிப்.லிங்.]

நல்ல தமிழ்க் குடியில் தோன்றியவர் சிங்காரவேலர். தஞ்சை மாவட்டத்தில் மாயூரத்தை அடுத்த திருச்சிற்றம்பலத்தில் 25-11-1933இல் இவர்பிறந்தார். தருமையாதீனத் தமிழ்க் கல்லூரியில் பயின்று மாநிலத்தில் முதல்வராகத் தேறி ஆயிரம் வெண்பொற்காசுகளைப் பெற்றவர். தாம் பயின்ற கல்லூரியிலேயே ஆசிரியப் பணியையேற்ற இவர் தொடர்ந்து பி.ஏ., எம்.ஏ., பட்டங்கள் பெற்று அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சியும் செய்தவர். மாயூரம் அ. வ. அ. கல்லூரியில் பணியாற்றி



வருகின்ருர். இனிமையாகப் பேசுவதிலும் திறைமையாக எழுதுவதிலும் வல்லவர். இவர் நூற்றுக் கணக்கான சமய, இலக்கியமேடைகளில் பேசியுள்ளார். இவர்தம் ஆராய்ச்சிக் கட்டுரைகள் பல இதழ்களில் வெளிவருகின்றன. கழகம் நிறுவியுள்ள டாக்டர். தணிகைமணி வ. சு. செங்கல்வராய பிள்ளை திருமுறைப் பரிசுச் சொற்பொழிவில் முதல் சொற்பொழிவைத் 'திருஞானசம்பந்தர் வரலாற்ருராய்ச்சியும் தேவாரத் திறனுய்வும்' என்ற தலைப்பில் நிகழ்த்தியவர்.

### மூலமும் உரையும் :

மூலநூல் ஆசிரியனின் எழுத்துக்கு விளக்கம் சொல்லும்போது அதில் மூலநூல் ஆசிரியனின் கருத்துமட்டும் வெளிவரும் என்பதில்லை ; விளக்கம் சொல்லுவோனுடைய உணர்வும் அந்த விளக்கத்திற் கலந்துவிடும் ; இது மாருத இயல்பாக உள்ளது. இதனல் மூலநூலும் உரை விளக்கமும் வெவ்வேறு போக்கிற் போக வேண்டும் என்றும் முடிவு செய்து விடலாகாது. கூடுமானவரை மூலத்திற் காணப் பெறும் ஆசிரியனின் உள்ளத்தை ஒட்டியே விளக்குவோன் உரையும் செல்லுதல் வேண்டும். தமிழகத்தில் இந்தப் போக்கு மிகுபழங்கால முதலே காணப்பெறுகின்றது. பெரும்பாலும் உரையாசிரியர்கள் ஆசிரியனின் கருத்திற்கு அரணகவே அமைகின்ருர்கள். எங்கேனும் தவறுபட அமையும் குறிப்புத் தென்பட்டாற் கூட அதனைப் பூசிமெழுகி அமைதி கூறுவதும் நம் உரையாசிரியர்களின் இயல்பாக அமைந்துள்ளது. 'வழுஅமைதி' என்ற ஒன்று காட்டும் இலக்கியமரபும் இஃது என்று கூறுவதில் தவறில்லை. மூலநூலும் அதை ஒட்டிய உரை விளக்கமும் பற்றிய இந்த மரபினை எண்ணும்போது, இக்கால இயல்பொன்றைச் சுட்டிக் காட்டத்தான் வேண்டியுள்ளது.

### துணைநூல் தோற்றம் :

தொடக்கக்கல்வி, உயர்நிலைக் கல்வி, கல்லூரிக் கல்வி (கலைக்கல்லூரி, புலவர் கல்லூரி) ஆகிய அனைத்து நிலைகளிலும் தமிழகத்தில் நாம் இன்று மொழிநிலையில் காணப்பெறுவது யாது? மூன்றும் வகுப்பு மொழிப்பாடம் தொடங்கிக் கல்லூரி வகுப்புக்கள் வரை மொழிப்பாட மூலநூல்களுக்கு, உரை விளக்கம் என்று ஒருவகையில் ஒப்புக் கொள்ளத் தக்க துணைநூல்கள் (guides-notes) தோன்றிவிட்டன. மாணவர்கள் மனநிலையில் இவற்றைப் பற்றிய மதிப்பீடு பற்றி எண்ணும்போது அறிஞர் நெஞ்சத்து வருத்தம் தோன்ருதிருத்தல் இல்லை. இதனை மூடி மறைத்திடும் போக்கு நாட்டிற்கு நலம் தாராது ஆதலின் இங்கு வெளிப்படையாகவே இதுபற்றிப் பேசுதல் இன்றியமையாததாகின்றது.

### துணைநூல்களின் விளைவுகள் :

இன்று வகுப்புக்களில் ஆசிரியர் மாணவர் உறவை இந்தத் துணைநூல்கள் கெடுத்துவிடுகின்ற கொடுமையைப் பல ஆண்டுகள் ஆசிரியர் அநுபவம் உள்ளவர்கள் நன்கு அறிந்துணர முடிகின்றது. ஆசிரியர் கற்பித்தலில் மாணவர்க்கு ஓர்

**'அலட்சியப்'** போக்கு உண்டாவதற்கு இது சரியான அடிப்படையாகி விடுகின்றது ; மூல நூலை அறிந்து கொள்ளுவதிலும், புரிந்து கொள்ளுவதிலும், உணர்ந்து கொள்ளுவதிலும், ஆழ்ந்து இனிய பகுதிகளில் நிலைத்திருப்பதிலும் மாணவர்களைத் தடைப்படுத்தி விடுகின்ற அருஞ்செயலையும் இத்துணை நூல்கள் புரிந்து நிற்கின்றன. இயல்பாகவே அரசியல் முதலிய நிலைகளால் மாணவர் பலரின் அறிவு ஒருமைப்பாடு சிதறுண்டு போகும் நிலைவேறு ; இதில் எதற்கும், எந்நிலையிலும், எவ்விலையிலும் கிடைக்கும் துணை நூல்கள் தரும் போலி நம்பிக்கை வேறு. இவற்றால் இளைய உள்ளங்களில் ஒழுங்கான போக்குத் தடமாறுகின்றது. பேரநுபவமும், ஆழமான அறிவும் உடையவராய் மூலநூல் வழி நின்று சிந்தனைகளை எடுத்து மழையெனப் பொழியும் பேராசிரியர்களின் அறிவுழைப்பு விழலுக்கிறைத்த நீராகிப் பயனற்றுப் போகிறது. இந்த நிலை நாட்டிற்கு நன்றா? இது நாட்டை விட்டு நலிந்தோடிடப் பேரறிவுச் செல்வர்கள் குரல் கொடுக்க வேண்டாவா? தக்க வழிகாட்டிச் செந்நெறிப்படுத்திட வேண்டாவா?

## பிஞ்சு நெஞ்சங்களுக்குப் பிணியா?

பல்வேறு மாநிலங்களிலும் குறைந்த வெண்பொற்காசுகளுக்குப் பெறும் சீட்டைக் கைகளில் ஏந்தி, அரும்பெரும் பரிசுகள் வரும் வரும் என்று, உழைப்பை மறந்து, சோம்பியிருக்கும் மக்களைக் காண்கின்றோமே. அவர்கள் போக்கிற்கும் இத்தகு மாணவர் போக்கிற்கும் பெரிதும் வேற்றுமை இல்லை என்றே கூறலாம். அங்கே உழைப்புப் பறிபோயிற்று ; 'தம்முடைய உரிமை நிலத்திலும் பாடுபட்டு உழைத்து விளைவைப் பெருக்கி வருமானம் காணலாம்' என்ற நல்லமனம் நோய்ப்பட்டுவிட்டது. இங்கே உழைத்துப் படித்து, உய்த்துணர்வு பெருக்கிக் கைவருந்தக் குறிப்புக்கள் எடுத்து எழுதி நலம்பெறும் இனிய மனம் பாழ்பட்டுப் போகின்றது. அங்கு வளர்ந்த உள்ளங்களுக்கு நோய்; இங்கு பிஞ்சு நெஞ்சங்களுக்குப் பிணி; இவ்வளவே வேற்றுமை. சென்ற நூற்றாண்டின் இறுதியில் நம் நாட்டில் கல்வி கற்ற மாணவர்களுக்கும், கற்பித்த ஆசிரியப் பெருமக்களுக்கும், இந்த நூற்றாண்டின் இடைப் பகுதியில் கல்விகற்று வரும் மாணவர்களுக்கும், கற்பித்து வரும் ஆசிரியப் பெருமக்களுக்கும் இடையே உள்ள வேற்றுமை தினையும் பனையுமாக உள்ளமை தெளிவு. இந்த வேற்றுமை பெருகுதல் நாட்டிற்கு நன்மை தருமா? கல்வித்துறையில் பரவிவரும் இந்த அரிப்பு நோய் நாட்டின் எல்லாத்துறைக்கு மன்றோ துயரம் கூட்டித் தொற்றுநோயாய்ப் பரவிடும்?

## வாணிக நோக்கம்-துணை நூல் மலிவு

புத்தக வெளியீட்டாளர்கள் தங்கள் பொருள் வருமானம் கருதி இத்தகு துணை நூல்களை வெளியிடலாம். இந்த வாணிக நோக்கம் இளைய சமுதாயத்திற்கு இதய நோயாக வளர்வதைக் கருதுதல் வேண்டாவா? சீரிய இலக்கியங்களையும், அரிய ஆராய்ச்சி நூல்களையும், பேரறிஞர்களின் கருத்துக் களஞ்சியங்களையும், எந்நாடும் போற்றும் அறிவியற் செல்வங்களையும், மொழிபெயர்ப்புக் கருவூலங்களையும் அயராமல் வெளியிட்டு வரும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் ஆயிரக்கணக்கான அரும் பொருட் பனுவல்கள் வாணிக நோக்கம் கருதியா எழுகின்றன? அவ்வாறு எழுமாயின் இன்று, **'கருத்திற்குக் கழக வெளியீடு'** என்ற பெரும்புகழைத் தமிழ் உலகில் கழகம் பெற்றிருக்க முடியுமா? 'பொன் விழாக் கொண்டாடுகின்ற அளவிற்குப் பூத்துக் கனிந்து செயற்பட முடியுமா? சிந்தித்துப் பார்த்தால் புத்தக வெளியீட்டாளர்க்குள்ள பொறுப்புணர்ச்சி விளங்கும்; 'மாணவர்களே! தேர்வைப் பற்றிக் கவலைப்படாதீர்கள் ; எம்முடைய துணை நூல்களையே வாங்கிப் படியுங்கள் ; இவையே வெற்றி தரும்' என்று விளம்பரப்படுத்தும் ஒரு வெளியீட்டகம். பாடநூல்களைவிட இவற்றை வாங்குங்கள் ; இவற்றைத் துணைக்கொண்டவர்கள் நூற்றிற்குத் தொண்ணூறு விழுக்காடு வெற்றிபெற்று நாட்டிற்குப் பெருமை கூட்டியுள்ளார்கள்' என்று முழங்குகின்றது மற்றொரு வெளியீட்டகம். 'பல்லாண்டுகளாகத் துணை நூல்களை வெளியிட்டு வரும் பழுத்த அநுபவம் உடையவர்கள் நாங்களே, ஆசிரியப் பெருமக்களும் மாணவ மணிகளும் எங்களையே விரும்புகின்றார்கள் ; காரணம் எங்களுடைய தந்நலமற்ற சேவையே' என்று 'அநுபவ' மொழியை முரசறைகிறது பிறிதொரு விற்பனையகம். தன்னலமற்ற

சேவையா இது? மாணவர்களது அறிவு மாணிக்கத்தின் மீது புழுதி தோயச்செய்து ஒளியைக் குறைக்கும் உயர்வுத் திருப் பணியை அல்லவா இவர்கள் செய்து வருகிறார்கள்! விளைவு இவர்கட்குச் செல்வம் திரளுகின்றது; அறியாமை நோய் நாட்டிற் கால் கொள்கின்றது; ஆழ்ந்த படிப்பு எள்ளப்பட்டுப் புறக்கணிக்கப் படுகின்றது; 'கல்வித்தரம் குறைந்து விட்டது; குறைந்து விட்டது' என்று கல்வியாளர் கூடிக் குரலெழுப்பும் நிலை வந்து பரவுகின்றது.

**கழக வெளியீட்டுப் பணியின் எதிர்காலம்:**

சங்க இலக்கியங்கள், காப்பியங்கள் அனைத்திற்கும் அரும்பெரும் உரைகளை எழுதச் செய்து அழகுற வெளியிடுகின்றது கழகம்; அழகிய பேழையில் அமைத்துத் தமிழறிந்த செல்வர்களின் மனைகள் தோறும் திட்டமாக இருக்கவேண்டிய அமைப்பில் பணி புரிகின்றது கழகம்; நச்சினார்க்கினியர், தெய்வச் சிலையார், சேனாவரையர், இளம் பூரணர், பேராசிரியர் ஆகியோர் உரைகளுடன் தொல்காப்பியப் பெருநூல் விளங்கிட அரும்பணி ஆற்றி வருகின்றது கழகம். ஆனால் புலவர் கல்வி மாணவர்களும், தனி நிலையில் (Private) பயின்று தமிழ்ப் புலவர் பட்டம் பெற விழைவோரும் எவற்றை விழைந்து பயில்கின்றார்கள் என்று கணித்தறியும்போது நெஞ்சில் வலியெடுக்கின்றது. 'வித்துவான்-புலவர் தேர்வு வினாவிடை' என்ற தொகுப்பிலும், பல்வேறு நிலைகளிலும் வெளியிடப் பெற்றுக் குறைந்த விலையில் கிடைக்கின்ற துணை நூல்களையே இங்கெல்லாம் பெருகக் காண்கின்றோம். இந்த வினா விடைகளை மனப்பாடம் செய்து தேர்வெழுதி வெற்றியும் பெற்றுவரும் நிலை இருப்பதால், கழகத் தொல்காப்பிய நூல் வெளியீடுகளின் நிலை என்ன? ஆயிரம் படிகள் விற்பனையாகிட எத்துணை ஆண்டுகள் தேவைப்படுகின்றன? பெரும்பொருட் செலவில் வெளியிடப்பெறும் அரிய நூல்களின் நிலை இவ்வாறு, மேலோட்ட அறிவினராற் புறக்கணிக்கப்பட்டால் மூலநூல் அறிவு எங்கே செழிக்கும்? இன்னும் 'சில ஆண்டுகள் சென்றால், தொல்காப்பிய எழுத்ததிகாரம் பயிலாத, தொல்காப்பியச் சொல்லதிகாரம் இன்னதென்றே அறியாத 'தமிழ்ப் புலவர் கால்வழி' ஒன்று உருவாகிடும்; "பல்காற் பழகினும் தெரியா உளவேல், தொல்காப்பியம் திருவள்ளுவர் கோவையார் மூன்றினும் முழங்கும்" என்ற சான்றோர் வாக்குக்கு எங்கே இடம்?

**மூலநூல் அறியாத கால்வழியா?**

அண்மையில், புலவர் பட்டம் பெற்ற ஒருவர் ஒரு திருமண வாழ்த்து வேண்டிப் பிறிதொரு புலவரை நாடிய நிகழ்ச்சி நினைவிற்கு வருகின்றது. இதன் காரணத்தினை வினவியபோது, தாம் 'யாப்பருங்கலக்காரிகையைப் பார்த்ததே இல்லை' என்றும், 'அதிற் சில வினாக்களையும் விடைகளையும் மனப்பாடம் செய்தமையே தாம் பயிலுங்காற் செய்த'தென்றும், 'அதனாற் செய்யுளிலக்கணம் தெரியாது போயிற்'றென்றும் அவர் கூறக்கேட்டதும் அழுவதா சிரிப்பதா என்னும் நிலை வந்தது என்று கூறுவதும் மிகை. இப்படி மூலநூலையே அறியாத 'பரம்பரை' ஒன்றை அடக்கமான தம் திருப்பணியால் உருவாக்கிக் கொண்டிருக்கும் துணை நூல்களின் நிலையினை அறிவுலகம் எடுத்துக் காட்ட வேண்டாவா? காட்டிய பின்னரேனும் தெளிவு பிறந்து, மூல நூல்களையே விழைந்து கற்கும் பழக்கமும், வகுப்புக்களில் கூர்ந்து நோக்கும் உணர்வும், 'முயற்சி தன் மெய்வருத்தக் கூலிதரும்' என்ற குறள் நெறிப்படி தாமே எழுதி நலம்பெற வேண்டும் என்ற நாட்டமும் மாணவச் செல்வர்களிடையே தழைக்கும் என்ற நம்பிக்கையிலேயே இச்சிந்தனை இங்கு உருப்பெறுகின்றது.

**உரைகளின் தோற்றமும் இன்றியமையாமையும்:**

இங்குக் கூறியவற்றால் மூல நூலுக்கு விளக்க உரை எழுதல் வேண்டா என்பதும், அவற்றைக் கற்றலும் கற்பித்தலும் வேண்டா என்பதும் கட்டுரை ஆசிரியன் கருத்தென்று தவறாக முடிவு போக்கலாகாது. உரை வேண்டும். உரை தோன்றிய வண்ணமும், அதன் அரிய பங்கு இன்னதென் றுணர்த்தும் திறமும் இங்குத் தேவையாகின்றன. தமிழ் இலக்கண இலக்கியப் பெரும்பனுவல்கள் அனைத்தும் முதற்கண் 'மூலமும் உரையும்' கூடியனவாக இருந்தன வல்ல என்பது அனைவரும் அறிந்ததே. ஓர் இலக்கியம் அல்லது நூல் எழுங்கால் ஆசிரியனின் அக நோக்கின் வெளியீடாகவே எழும். அதனை அடுத்தவர்க்கு எடுத்து விளக்கும்போது, விளக்கம் கூறுவோனின் 'உரை' யாகவே—

ஒலிவடிவாகவே முதற்கண் அஃது அமைந் திருந்தது; நாளடைவில் வரிவடிவமாகவே அந்தப் பகுதிகள் அமைக்கப்பட்டன. விளக்கம் கூறுவோனுடைய கருத்தின் ஒழுங்கினுலும், ஒழுங்கின்மையாலும் மூல நூலின் பெரும்பகுதிகள் பொருள்சிறந்தும், பொருள் இழந்தும் மற்றவர் மனத்தை எய்துவதுண்டு. இதனை நன்கு விளக்கிட இதன்படி நிலைகள் சிலவற்றை இங்குக் காட்டல் தகும்.

**உரைநிலைகள்; உறுப்புக்கள்:**

ஓர் இலக்கியம் அல்லது கவிதையினைப் பழைய காலத்தில் பிறர்க்குக் கற்பித்த ஆசிரியப் பெருமக்கள் கையாண்ட முறைகள் மிக அழகானவை. தாம் சொல்ல வேண்டிய பொருளை நன்ருக உள்ளத்தே அமைத்துக் கொண்டு, காலம் இடம் முதலியவற்றை இனிதே கருதுவார்கள். சிந்தனையில் தம் வழிபடு தெய்வத்தை முதற்கண் தொழுது ஒருமைப்பட்ட மனத்துடன் தொடங்குவார்கள். மிக வேகமாகக் கூறமாட்டார்கள். அமைதி கலந்த உணர்வோடு கவிதையை அல்லது நூலைக் கூறுவார்கள்; விரும்பிக் கூறுவார்கள். முகம் மலர்ந்து மொழிவார்கள். ஏற்றுக் கொள்பவன் இனிது உணர்ந்து கொள்ளுமாறு அவனுடைய உள்ளத்துக்கேற்ப உரைப்பார்கள். அங்கே இன்னர், இனியார் என்ற வேறு பாட்டுணர்வு இருக்காது. அவ்வாறு கூறும் போது கவிதையை ஒரு முறை பிரித்துப் படித்தாலே பொருளை உணரக்கூடிய ஒரு காலம் இருந்திருக்க வேண்டும். இதற்குப் 'பாட உரை' என்றே பெயர். இதற்கு அடுத்த நிலையில் இன்னும் சிறிது விளக்கம் தேவைப்பட்ட பொழுது 'கருத்து' உரைக்கும் நிலை வந்திருத்தல் வேண்டும். இதற்குமேல் இன்னும் விளக்கம் தேவைப்பட்ட இடத்துச் 'சொல்வகை', 'சொற்பொருள்' ஆகிய நிலைகளில் விளக்குதல் எழுந்தது எனலாம்.

கூறப்பட்ட பொருளைத் 'தொகுத்துரை'த் தலும் ஒரு நிலையே; எடுத்துக் காட்டுக்களும் இணைத்து விளக்குவது அதனினும் சிறிது விளக்க நிலை. இதன் பிறகு வினவுகின்ற முறையினும், அதற்கு விடையளிக்கின்ற பாங்கினும் வரும் விளக்க நிலை, சொல்லுக்குள் ஆழ்ந்து சிறப்புப் பொருளாழம் கண்டு தெரிவிக்கும் 'விசேடம்' அடுத்தது. மிக விரிவாக அமைதலும், எடுத்துக் கொண்ட பொருளுக்கு ஏற்பக் கூறும் 'அதிகார'மாக அமைதலும், ஐயுறவு வந்த விடத்து இதுவே பொருள் எனத் துணிந்துரைத்தலும், இறுதியாக இதனுன் ஆகிய பயன் இஃது எனக் கிளந்துரைத்தலும் ஆகப் பல நிலைகள் ஒரு மூல நூலுக்கு விளக்கம் கூற எழுந்த பல்வேறு உரைப்பகுதிகளாக வளர்ந்தன. ஆம்; இவ்வாறே உரை நிலைகளில் ஒன்றன்பின் ஒன்ருகப் பல வகைகள் கிளைத்திருக்க வேண்டும் என்று கொள்ளலாம். பவணந்தியார் நன்னூலில் இதனைச் சிந்தித்துப் பின் வருமாறு விளக்குகின்ருர்:

> "பாடம் கருத்தே சொல்வகை சொற்பொருள்
> தொகுத்துரை உதாரணம் வினுவிடை விசேடம்
> விரிவு அதிகாரம் துணிவு பயனேடு
> ஆசிரிய வசனம் என்று ஈரேழ் உரையே"
> (நூற்பா-21)

இவ்வனைத்தையும் உரை நிலைகளாகக் கொள்ளுவதும், பதினுன்கு உரை உறுப்புக்களாகக் கொள்ளுவதும் ஆகிய இரு கொள்கைகளும் பொருந்துவனவே. இதனுல் மூலப் பொருளைச் சிந்தித்து உள்ளத்து அடைக்க உரைப் பகுதிகள் தேவையே என்று தமிழ்ச்சான்ரோர் கொண்டமை இனிது விளங்குவதாகும்.

**தமிழ் இலக்கண இலக்கிய உரைநலம்:**

தொல்காப்பியம், சங்க நூல்கள், திருக்குறள், காப்பியங்கள் ஆகிய நூல்கள் தோன்றிப் பல நூருண்டுகள் கழிந்த பிறகு, இவற்றிற்கு உரை எழுதும் போக்கைத் தமிழகம் கண்டது. சற்றேறக் குறைய கி. பி. பதினுன்காம் நூற்ருண்டு தொடங்கியே உரைகள் பெருகலாயின என்பர். ஒரு நூலுக்கு ஒருவர் உரை என்ற மரபு சிறிது மாறி ஒரு நூலுக்கே பலரும் பல்வேறு நிலைகளில் உரை காணும் நிலை வளர்ந்தது. அவ்வுரைகள் அனைத்தும் ஒவ்வொரு வகையில் இனிய ஆசிரியர்கள் விரும்பிச் செய்த திறனுய் வாகவே கொள்ளத் தகுவன. ஆனுல் சிற்சில இடங்களைத் தவிரப் பெரும்பாலும் பாராட்டு முறைத் திறனுய்வாகவே (Appreciative Criticism) இவை அமைந்துவிட்டன. ஆனுல் உரைகாரரின் விளக்கத்தால் மூல நூல்புதுப்புது விளக்கங்களைக் காலந்தோறும் எய்தலாயிற்று என்பது உண்மை. ஆழ்வார்கள் உரைக்கெழுந்த பேருரைகள் இவ்வுண்மையை விளக்குகின்றன என்று கூறலாம். இந்த வரலாற்றுப் போக்கிலமைந்த

சிந்தனையின் பின்னர் நாம் ஒன்றை மறவாமல் இருப்பதற்கில்லை. எத்துணைவிளக்கங்கள் எத்துணை உரைகள் தோன்றினும் மூல நூலின் பெருமையைத் தமிழ்மாந்தர் மறந்தாரிலர். மூலமும் உரையுமாக—'முதலும் ஊதியமும்' ஆகவே இவை போற்றப்பட்டு வருதல் கண்கூடு. உரை விளக்கங்கள் தோன்றத் தோன்ற மூலத்தின் மாண்பும் குன்றின்மீது இட்ட விளக்கொளியாகச் சுடர்விட்டு ஒளிர்தல் புலனாயிற்று. இன்று உரைகள் இல்லையேல் மூலத்தின் எல்லா நலங்களையும் அறிய இயலாது என்ற உண்மை அனைவர் உள்ளத்தும் உறுதிப்பட்டு விட்டது. அதனால் பொருள் உணர்ச்சியோடு பக்தி நூல்களையும் அணுகும்போக்குத் தமிழ் மண்ணில் எழுந்துள்ளது. விரிந்த உள்ளம் கொண்ட தமிழ் மாந்தர் இவ்வாறு அனைத்தையும் பொருள் நோக்க அடிப்படையில் அணுகி நலம் பெருக்கி வரும் திறத்தை ஒப்பீட்டு முறையில் இலக்கிய ஆராய்ச்சியும், மொழியியல் இலக்கண ஆராய்ச்சியும் தலைப்படும் அறிஞர் பாராட்டி வருதலும் தமிழ் உலகம் அறிந்ததே ஆகும்.

**மூலநூலை மறவா வழி பிறக்குமா ?**

இத்தகு மரபு தழைத்திட அறிவுலகம் மேலும் துணை நிற்கவேண்டும். அடிப்படையில் அதற்கு உறுதி வேண்டும். இலக்கிய இலக்கண மூல நூல் அறிவு எங்கும் பரவுதல் வேண்டும். உரைகள் தோன்றி வளர்ந்த வண்ணத்தைக் கூர்ந்து நோக்கினால் அவை செந்நெறிப்பட்டு மதிநுட்பத்தை விளக்கின்ற தன்மையை அறியலாம். தொடக்கக் கல்வி முதல் கல்லூரிக் கல்வி வரை வெறும் துணை நூல்களை மட்டுமே கற்று மூலநூலறிவைப் புறக்கணிக்கும் ஒரு வகைத் 'தீண்டாமை' இளைய உலகினின்றும் இனியேனும் விடைபெற வேண்டும் தாமே சிந்தித்து, தாமே எழுதித் தாமே உயரும் போக்கு மாணவச் செல்வரிடையே பரவினால் தான் துணை நூல்களை மட்டும் துணைக் கொள்ளும் மேலோட்டப் பார்வை குறைந்து 'ஆழங்காற்பட்டு' உணரும் ஆழ்பார்வை அவர்பால் செழிக்கும். இதற்குப் புத்தக வெளியீட்டாளர்களது 'வாணிக மனம்' விரிந்து இடம் கொடுத்தலும் வேண்டும். அறிவுச் செல்வம் பெருக்கும் அடிப்படையில் நூல்களைக் கற்கும்முறை இளைஞரிடையே பரவவும் இது துணை புரியும். 'மூல நூலா துணை நூலா' என்ற வினாவிற்குத் 'துணை நூலே' என்ற விடை எழாது, 'மூல நூல்தான் ; துணை நூலும் ஆம்' என்ற விடை வர இதுவே வழி. கல்வியுலகில் இந்த வழி இனியேனும் பிறக்குமா ?

---

## நாயன்மார் இசை

*அப்பர், 'ஈசன் எந்தை இணையடி நீழல்—மாசில்லாத வீணை ஒலி போன்றது' என்று கூறுவதிலிருந்து, அவரது இசைப் புலமையையும் இசை இன்பத்தில் ஆழ்ந்து கிடந்த அவரது நுட்ப உணர்வினையும் நாம் நன்குணரலாம். சுந்தரரும் இசையிற் சிறந்தவர். இம்மூவர் தேன் பாடல்களும் தெவிட்டாத பேரின்பம் பயப்பனவாகும்; கேட்போர் செவி வழியாப் புகுந்து உள்ளத்தைப் பேரின்பமயம் ஆக்கிக் கருவி கரணங்களை ஓயச் செய்து இசை உலகமாகிய பேரின்பப் பெருவாழ்வில் உய்ப்பனவாகும் சைவசமயம் அக்காலத்தில் மிகுதியாகப் பரவியதற்குற்ற சிறந்த காரணங்கள் சிலவற்றுள் இசைப்பாட்டு ஒன்றாகும். இந்த இசையை வளர்த்தவருள் முதல்வன் மகேந்திரவர்மன். அவன் காலத்தில் பல்லவப் பெருநாட்டில் இருந்த பெருங்கோவில்களில் எல்லாம் இசை வெள்ளம் கரை புரண்டு ஓடியது என்பதை அப்பர்—சம்பந்தர் பாக்களால் பாங்குற உணரலாம்.*

—டாக்டர் மா. இராசமாணிக்கம் பிள்ளை

*பல்லவர் வரலாறு பக். 283*

---

# பழந்தமிழிசை

[இராவ்சாகேப் திரு. கு. கோதண்டபாணி பிள்ளை பி.ஏ.]

*தமிழிசை அறிஞரான இவர் 29-10-1896இல் தோன்றினர். தாம் மேற்கொண்ட பணி அரசுப் பணியாக இருந்தும்கூட ஓய்வு கிடைத்த பொழுதெல்லாம் தமிழ் இலக்கிய ஆராய்ச்சியிலும் தமிழிசை ஆராய்ச்சியிலும் இவர் ஈடுபட்டார். இதன் பயனாக எழுந்த நூல்களும் கட்டுரைகளும் பலவாகும். எழுபத்தைந்து வயதான இம் முதிய நிலையிலும் தமிழிசை ஆராய்ச்சியில் ஆழ்ந்து ஈடுபட்டுள்ளார். ஆண்டுதோறும் 'தமிழிசைச் சங்கம்' நடத்திவரும் பண் ஆராய்ச்சிக் கூட்டத்தில்*



*இவர் தவறாது கலந்து கொள்கிறார். இவர்தம் இலக்கிய நுண்மாண் நுழை புலனை வெளிப்படுத்தும் நூல்கள் 'முதற்குறள் உவமை' 'நெடுநல் வாடைப் பாநலன்' 'நெடுநல்வாடைப் பொருள் நலன்' 'ஈரடி இருநூறு' போன்றன. இவர்தம் நீண்ட கால இசைத் துறையறிவினை வெளியிடும் வகையில் இவரியற்றிய 'பழந் தமிழ் இசை' என்னும் நூல் அமைந்துள்ளது. திருக்குறள் காமத்துப் பாலைப் பற்றிச் சென்னைப் பல்கலைக் கழகத்தில் அறக் கட்டளைச் சொற்பொழிவாற்றியுள்ளார்.*

ஆரியர்கள் இந்தியப் பெருநாட்டிற்குள் புகு முன்னரே தமிழ் நாட்டில் ஒழுங்குபட்ட இசை முறைகளும், பண்களும் தமிழ்ப் பெயரோடு வழங்கி வந்தன. ஆரியர்கள் தமிழரோடு கலந்த பின்னர், இவ்விசை முறைகளைத் தமதாக்கிக் கொண்டனர். இம் மட்டோ! தமிழிசைக்கும் இந்தியப் பெருநாட்டில் வழங்கும் பல இசை முறைக்கும் வேதகானமே அடிப்படையானது என்ற கருத்தே நாடெங்கும் பரவச் செய்தனர். இதை மறுத்துப் பழந்தமிழிசையே வேத காலத்திற்கும் ஏனைய இந்திய இசை முறைகளுக்கும் அடிப்படையானது என்பதைத் தக்க காரணங் காட்டி நிறுவுவது இக் கட்டுரை யாகும்.

வேதகாலத்து ஆரியர்கள் பெற்றிருந்த இசைப் பண்பாட்டைப் பற்றியும், இசை அறிவைப் பற்றியும் ஆராய்ந்த 'கோஸ்வாமி' என்னும் இசை அறிஞர் 'இந்திய இசையின் காதை' என்னும் அவர் நூலில் இவற்றை மிகவும் கீழ்த்தரமாகக் கருதுகின்றார். இருக்கு வேதம் VIII-10-3, 5 மனு சம்கிதை VI-24 முதலிய ஆதாரங்களைக் கொண்டு ஆரியருடைய இழிந்த இசைநிலையை விளக்குகிறார். அவர் நூலின் பக்கங்கள் 12 முதல் 23 வரையில் இவற்றைக் காணலாம். இருக்குவேத இருடிகளில் ஒருவரே வேத கானத்தைத் தவளைகளின் ஒலிக்கு ஒப்பிடுகின்றார். மற்றொருவர் அதை நரிகள் ஊளையிடுவதற்கு ஒப்பிடுகிறார். இருக்கு வேதம் VIII-10-3, 5 பார்க்க.

இந்திய இசைக்கு அடிப்படையாகக் கருதும் சாமகானத்தின் இசை அமைப்பைப் பற்றி முதலில் ஆராய்வோம். சாமகானம் அதன் உயர்ந்த நிலையில் ஆறு சுரங்களே பெற்றிருந்தன என்பர் இசை ஆய்வாளர். ஓர் இசை முறையை உண்டாக்கத் தக்க ஏழு சுரங்களை அஃது எப்போதாவது பெற்றிருந்ததா என்பது ஐயத்திற்கு உரியது. சாம கானத்தில் பயிலும் சுரங்களைப் பற்றி ஆராய்ந்தவர் டாக்டர் ஏ. சி பர்னல் என்பவர் (Dr. A. C. Burnell Ph. d,). அவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த அர்ஷேய பிராமணத்தின் உடன் சேர்க்கையாகச் சாம கானத்தைப் பற்றிய விவரமான ஆராய்ச்சியை எழுதிச் சேர்த்துள்ளார். அவர் கூறுவதாவது:- ''சாமகானத்தைப் பாடுவதற்குரிய சட்ட திட்டங்களை வகுப்பது சாம விதானப் பிராமணம் ஒன்றே. அஃது ஆறு சுரங்களை மட்டுமே கூறுகின்றது. அவை, பிரதமா, துவிதியா, திரிதியா, சதுர்த்தா, பஞ்சமா, சஷ்டா அல்லது அந்தயா என்பவையாகும்.'' சாமகானத்திற்கு இப் பிராமண நூல் ஆறாவது சுரத்தை அந்தயா

அஃதாவது கடைசி சுரம் என்று கூறுகின்ற போது ஆறு சுரத்திற்குமேல் ஏழுசுரம் சாம கானத்திற்கு உண்டு என்று கருதற்கிட மில்லை. ஆயினும், இப்பிராமணத்தில் குருஷ்டா என்ற ஒரு பெயர் காணப்படுகிறது. இப் பெயரைத் திரித்து அஃது ஏழாவது சுரத்தை உணர்த்தும் என்று சிலர் கொள் கின்றனர். ஆனல் பர்னல் தந்துள்ள அடிக் குறிப்பில் இதைப் பற்றி விளக்கம் தரு கின்றார். சாயனர் என்னும் புகழ் பெற்ற பழைய உரையாசிரியர் குருஷ்டா என்பதற்கு விளக்கம் தரும்போதெல்லாம், அடிக்கடி, அது முதல் சுரம் என்றும் அஃது இசை எழுப்பும் எல்லையின் குறிப்பு என்றும் அதுவே பொதுவாகப் 'பிரதமா' என்னும் பெயர் பெறுவது என்றும் விளக்கம் தருகின்றார். ஆதலின் குருஷ்டா என்பது ஒரு சுரத்தின் தன்மையைக் குறிப்பதே தவிரத் தனிசுரம் ஒன்றைக் குறிப்பதன்று என்பது தெளி வாகும். சாம விதானப் பிராமணம் ஆறு சுரங்களையும் அவற்றின் எண்ணிக்கையின் பெயரால் பிரதமா, துவிதியா முதலியன வாகக் கூறும்போது ஒரு சுரத்தை மாத்திரம் வேறு பெயரால் கூறக் காரணம் இல்லை. அது வேறு ஒரு சுரமானல் அதை 'சப்தா' என்றோ அல்லது மற்றோர் எண்ணிக்கையின் பெயராலோ குறிப்பிட்டிருத்தல் வேண்டும். ஆறாவது சுரத்தை அந்தயா அல்லது கடைசி சுரம் என்று அது கூறும்போது, அதற்கு மேலும் ஒரு சுரம் முன்னே பின்னே இருந்தது என்று எண்ணச் சிறிதும் இட மில்லையே. அப்படி இருந்தும் ஒரு சுரத்தை முன்னே பின்னே சேர்த்தல் எவ்வாறு பொருந்தும்? இசைமுறை அற்றதே ஆகும்.

குருஷ்டா என்பதை ஒரு சுரம் என்று கொள்ளும் இசை அறிஞர்களுக்குள்ளே இஃது எந்தச் சுரத்தைக் குறிக்கும் என் பதைப் பற்றிக் கருத்து வேற்றுமையும் காணப்படுகின்றது. இதை ஆராய்ந்த சுவாமி பிரக்ஞானந்தா என்னும் இசை அறிஞர் 'இந்திய இசை வளர்ச்சியின் வரலாறு' என்னும் அவர் நூலில் பின் வருமாறு கூறுகின்றார். 'சாமகானத்தில் பிரதமா, துவிதியா, திரிதியா, சதுர்த்தா, மந்தரா என்ற ஐந்து சுரங்களும் தோன்றிய பிறகு ஆறாவது சுரமாகிய அதிசுரையா என்ற சுரமும், அதற்கு மேல் ஏழாவது சுரமாகிய குருஷ்டா என்பதையும் சேர்த்துச் சாமகான சப்தகம் என்னும் இசைமுறை பூர்த்தியா யிற்று. (பக்கம் 407) சென்னைப் பல்கலைக் கழக இசைத் துறைத் தலைவராயிருந்த சாம்பமூர்த்தி அவர்கள் 'சாமகானம் முதலில் கா, ரி, ச, நி, தா என்னும் ஐந்திசை முறை யாகத் தோன்றிப் பின்னர் மத்திமத்தையும் சேர்த்து ஏழிசை முறையாக மாறிற்று' என்பர். ஆனல் பலரும் சாமகானம் எப் போதும் மத்திமத்திலேயே தோன்றியது என்று கூறுவதற்கு இவர் கூறுவது மாறாக அமைந்துள்ளது. மேலும் அவர் கூறுவ தாவது, 'காந்தாரம் அதன் உயர்ந்த சுருதி யில் ஒலிக்கும்போது அதற்கடுத்த சுரம் சுத்த மத்திமம் தானே தோன்றுகிறது. இந்தச் சுரமே குருஷ்டா அல்லது உத்ரிஷ்டா எனச் சாமவேதிகள் உணர்ந்தனர். ('தென் னிந்திய இசைநூல்' நான்காவது புத்தகம் 1941ஆம் ஆண்டின் பதிப்பு. பக்-120) சமஸ் கிருத வித்துவான்கள் குருஷ்டா என்னும் பதமும் உத்கிரிஷ்டாவிலுள்ள கிரிஷ்டா என்னும் பதமும் வெவ்வேறு பொருளன என்பர்.

இக் கருத்து வேற்றுமை குருஷ்டா என்பதை ஒரு சுரமாக்கும் முயற்சியின் தோல்வியை உணர்த்தும். தத்துவ ஞானி யும் இசை அறிஞருமான தாகூர் ஜெய்தேவ் சிங் என்பவர் சாமவேதத்தின் பல்வேறு கீதங்களில் காணப்படும் இசை முறைகளை ஆராய்ந்து பின்வருமாறு கூறியுள்ளார்: 'சாம கானத்தில் பயிலும் சுரங்களைப் பகுத்து ஆராய்ந்தால் அவை பெரும்பாலும் மூன்று முதல் நான்கு சுரங்களையே கையாளு கின்றன. சில ஐந்து சுரங்களைக் கையாளு கின்றன. மிகச் சிலவற்றில் ஆறு சுரங்கள் பயன்படுகின்றன. ஏழு சுரங்களைப் பயன் படுத்தும் சாமகீதம் மிகமிக அரிது' (சுவாமி பிரக்ஞானந்தா எழுதிய இந்திய இசையின் வளர்ச்சி வரலாறு-பக்கம் 413).

பூனவிலுள்ள தெக்காணக் கல்லூரி ஆராய்ச்சி நிலையம் (Deccan College Research Institute) வேதகால இசையை இக்கால விஞ்ஞான முறைப்படி ஆராய்ந்து உண்மை காண முற்பட்டது. இவ்வாராய்ச்சியால் ஸ்வரிதத்தைப் பற்றிக் கண்ட உண்மை நாம் கவனிக்கத் தக்கது. பாணினி இயற்றிய சிட்சையின்படி ஸ்வரிதத்தில் ஷட்ஜம், மத்திமம், பஞ்சமம் என்ற மூன்று சுரங்களு

பேச வேண்டும். (''ஸ்வரிதப் பிரபவா ஹேயதே ஷட்ஜ மத்யம பஞ்சமா'') என்பது பாணினி சிட்சை. ஆனால், ஆராய்ச்சி யாளரோ ஸ்வரிதம் அதன் வடிவில் ஒருவரை யறைக்குட் படாததாகவும், ஷட்ஜம் முன் னும் பின்னுமாக அசைவுற்றுத் தெளிவற்ற தாகவும் காணப்படுகிறது என்றும் ஆராய்ச்சி யால் கண்டதைக் கூறுகின்றனர் (தெக் காணக் கல்லூரி ஆராய்ச்சி நிலைய வெளியீடு. பகுதி பதினெட்டு. பக்கம் 202, 203).

இருக்குவேதப் பாடல்களே திருத்தம் பெற்றுச் சாமவேத கானத்திற்குப் பயன் படுத்தப்பட்டன என்பர். இருக்வேத கானத் தில் மூன்று சுரங்களே பயின்றன. எனினும் சாம கானத்தில் ஆறு சுரங்களே பயின்றன என முன்னரே கண்டோம். விடுபட்ட ஏழாவது சுரம் எது என்பது நம் ஆராய்ச்சிக் குரியது. ஷட்ஜம் என்ற பெயரே, அப் பெயரின் பொருளே, சாம வேதத்தில் பயிலாத சுரம் எது என்பதைக் காட்டிவிடும். ஷட்ஜம் என்பதற்கு ஆறிலிருந்து பிறந்தது என்பது பொருள். 'ஷட்பிய ஜாயதேஷட்ஜம்' என்பது அதன் இலக்கணம் என்பர் சமஸ் கிருத வித்துவான்கள். அண்டஜம் முட்டை யிலிருந்து பிறந்தது. அம்புஜம் நீரிலிருந்து பிறந்தது என்ற சொற்களின் அமைப்பைப் போல அமைந்தது ஷட்ஜம். ஆதலின் வேத இசையில் ஷட்ஜம் என்பது இல்லாம லிருந்து பின்னர் அவ்விசையில் உள்ள ஆறு சுரங்களிலிருந்து பிறந்தது விடுபட்ட ஷட்ஜம் என்பது தெளியப்படும். ஷட்ஜமே இசைக்கு ஆதார சுரம். அதன் அளவைக் கொண்டே மற்ற சுரங்களின் அளவுகள் நிர்ணயிக்கப் படுவன. இந்த ஆதார சுரம் இல்லாத சாமகானம் எவ்வாறு ஓர் இசை முறையாகும். மற்றுமோர் இசை முறைக்கு வழி காட்டி யாக அமைந்திருக்க முடியும்? 'சங்கீத ரத்ன கரம்' எழுதிய சாரங்க தேவர் இக்குறை பாட்டைக் கண்டார். ஷட்ஜம் என்பதற்கு ஆறிலிருந்து பிறந்தது என்று பொருள் கொண்டால் சாமகானமே ஓர் இசைமுறை யாகாது; இசைக்கு வழிகாட்டி என்னும் கொள்கை அடியோடு மாயுமே என்று திடுக் கிட்டார் போலும்! சமஸ்கிருத இலக்கணத் திற்கு மாருக அச்சொல் பிறந்த முறையையே தலைகீழாக மாற்றினர். ஆறுக்கும் பிறப்பிட மானது என்று அதற்குப் பொருள் கூறினர்.

இசை அறிவு முதிர்ந்த தமிழ் மக்க ளோடு தமிழ் இசை முறையோடு பயின்று பழகியபிறகே ஆரியர்கள் தங்கள் சாமகானத் தில் உள்ள குறைபாட்டை அறிந்தனர். குறைந்த சுரத்தைச் சேர்த்து நிறைவெய்தச் செய்தனர். இவ்வாறு நிறைவெய்திய சாம கான இசை எந்த இராகத்தில் அமைந் துள்ளது, அல்லது எந்த இராகத்தில் ஒப்பது என்பது பற்றியும் இசை அறிஞர்களிடையே கருத்து வேறுபாடு நிலவுகின்றது. இசைப் பேராசிரியர் சாம்பமூர்த்தி, 'சாமகானம், ஹரகரப்பிரியா என்னும் இராகத்தைப் பெரிதும் ஒத்திருக்கிறது' என்று கூறுவதை அவர் 'தென்னிந்திய இசை நூல்' நான்கா வது புத்தகத்தில் காணலாம். வடநாட்டு இசைப் பேரறிஞர் கோசுவாமி இது கர்நாடக சங்கீதத்தில் கானகாங்கி என்னும் இராகத் தோடு ஒத்துள்ளது என்பர். கர்நாடக இசைக் கல்லூரி முதல்வர் சங்கீத கலாநிதி, முடிகொண்டான் வேங்கடராமய்யர் அவர்கள் வேறு கருத்தை உணர்த்துகின்ருர். 'மகா பாரத சூடாமணி சங்கீதாதி ராக லட்சணம்' என்ற நூலுக்கு அவர் எழுதிய முன்னுரை யில் (XXVIII) பின் வருமாறு கூறுகின்ருர்: ''நல்ல சாரீரத்தோடும், இசை ஞானத் தோடும், எந்த வாத்தியங்கள் இன்றியும் சாமகானம் செய்யும்போது அதில் ஷட்ஜ கிராமத்தின் சுரங்கள் அமைந்திருப்பதைத் தெளிவாக நான் காண்கின்றேன். ஆனல் என் அறிவுக்கு எட்டிய வரையில், அதில் ஹரகரப் பிரியா அல்லது நடபைரவி ஆகிய இராகங்களின் சுரங்கள் உள்ளன என்று நான் சொல்ல முடியாது.'' சிலர் கருத்து சாமகானம் நடபைரவி என்பதையும், சங்கீத கலாநிதி சுட்டிக்காட்டி மறுப்பதையும் இங்குக் காணலாம்.

முன்னுராய்ச்சியில் கண்டபடி, ஷட்ஜம் அற்ற சாமகான இசை, எவ்வாறு ஷட்ஜ கிராமத்திற்கு அடிப்படையாக முடியும்? தமிழ்நாடு அடைந்த பின்னரே ஷட்ஜம் சாமகானத்தில் சேர்க்கப்பட்டது என்று உய்த்துணர இடம் உண்டு. ஏழு சுரங்களும் பொருந்தச் சாமகானம் செய்பவர் இசை வளம் பெற்ற தமிழ் நாட்டில்தான் உள்ளனர். இன்றும் வடநாட்டில் ஓதப்பெறும் சாம கானத்தில் ஆறு சுரங்களுக்குமேல் பயில்வ தில்லை என்பர். அதைக் கேட்டு ஆராய்ந்த

இசை அறிஞர் பலர், வடநாட்டு தாகூர் ஜெயதேவ் சிங் மேலே கூறிய சான்றே இதற்குப் போதியதாகும்.

தமிழ்நாடே இசைமுறையற்ற சாம கானத்திற்கு ஆதாரசுரம் அளித்து வளப்பம் தந்தது என்பதை விளக்க மற்ருெரு மறுக்க முடியாத சான்றும் உள்ளது. குலோத்துங்க சோழனால் வரையப்பட்ட செப்பேடு ஒன்று, சமஸ்கிருதத்தில் வரையப் பெற்றது. பம்பாய் நிர்ணய சாகர அச்சகத்தாரால் அவர் வெளியிட்ட காவியமாலா வரிசையில் 'ப்ராசீன லேகமாலை' என்ற தலைப்பில் வெளியிடப் பட்டுள்ளது. குலோத்துங்க சோழன் 'அம்பலத்து ஆடுவான் பட்டன், திருவரங்க முடையான் பட்டன் முதலிய 500 தமிழ் நாட்டுப் பட்டர்களை அவர்கள் குடும்பத்தோடு வேதகானம் சொல்லிக் கொடுக்கவும், ரூபாவதாரம் என்ற சமஸ்கிருத இலக்கணத்தைப் போதிக்கவும் வேங்கி நாட்டுக்கனுப்பி வைத்தான் என்று அச் செப்பேடு கூறுகின்றது. காஞ்சி காமகோடி பீடாதிபதி தவத்திரு சங்கராச்சாரிய சுவாமிகளின் சொற்பொழிவுகளைத் திரட்டி 'ஜகத்குருவின் உபதேசங்கள்' என்ற பெயருடன் வெளியிடப்பட்ட நூலில் (பக்கம்-133-187) இவ் விவரங்களைக் காணலாம். இந்நூலின் இரண்டாவது பதிப்புக் காமகோடி கோசஸ்தானத்தால் (4, பிரான்சிஸ் ஜோசப் தெரு, சென்னை-1) வெளியிடப்பட்டது: இதன் பின்னரும் இக் கருத்துகள் 'நமது வேதங்களும், இதிகாசங்களும்' என்ற நூலிலும் வெளியிடப் பட்டுள்ளன.

குலோத்துங்க சோழனால் அனுப்பப் பட்ட பட்டர்கள்-தமிழர்கள். அவர்கள் பெயர்களும் செந்தமிழ்ப் பெயர்களே. தமிழ் நாட்டில் பட்டர்கள் என்பவர்கள் சிவாச்சாரியார் என்று அழைக்கப் பெறுவர். சங்க காலத்தே இவர்கள் அந்தணர்கள் என்று அழைக்கப் பெற்றனர். இவர்கள் வட ஆரியர்கள், ஸ்மார்த்தர்கள் அல்லர்; தமிழ் நாட்டின் திருக்கோயில்களில் பூசை செய்து குரு எனக் கருதும் தகுதியுடையவர்கள். ஆரியப் பார்ப்பனரை ஒத்த வழக்க ஒழுக்கம் உடையவர்கள். ஆனால் ஆரியப் பார்ப்பனர்களுக்கும், இவர்களுக்கும் கொள்வினை கொடுப்புவினை இல்லை; இவர்கள் சந்ததியார் இன்றும் ஆந்திரப் பிரதேசத்தில் திராவிடலு என அழைக்கப் பெறுகின்றனர் என்று ஆச்சாரிய சுவாமிகளே குறிப்பிடுகின்ருர்கள். ஆதலின் குலோத்துங்க சோழனால் அனுப்பப்பட்ட பட்டர்கள் தமிழர்கள் என்பதற்கு வேறு சான்று தேவையில்லை.

வேதகானம் கற்றுக் கொடுக்கக் குலோத்துங்க சோழன் தமிழ் மக்களை அனுப்பக் காரணம் யாது? அவர்களே இசையில் வல்லவர்கள், சாமகானத்தை ஏழு சுரங்களோடு பாடவல்லவர்கள் என்பது அன்றி வேறு காரணம் இருக்க இயலுமா?

தமிழிசையே வேத இசைக்கு மட்டுமன்றி இந்திய நாட்டின் இசை முறைகளுக்கும் தாயகமாக அமைந்தது என்பதற்கு வேறு சான்றுகளும் உள. சமஸ்கிருதத்தில் இப்போது உள்ள இசை நூல்களில் முந்தியது, பழைமையானது பரதமுனி இயற்றிய நாட்டிய சாஸ்திரத்தின் சங்கீதப் பகுதியே யாகும். 'சங்கீத இரத்தினகரம்' எழுதிய சாரங்கதேவர் கருத்தின்படி இப் பரத முனியும், மற்ற சமஸ்கிருத இசைநூல் ஆசிரியர்களும், பிரம்ம தேவனால் அறிமுகப் படுத்தப் பெற்ற மார்க்க சங்கீத இசையை அடிப்படையாகக் கொண்டு இசை நூல் எழுதினர் என்பதாகும். மார்க்க இசை என்பது யாது என்பதை நாம் இப்போது ஆராய வேண்டும்.

கல்லிநாதர் என்ற புகழ்பெற்ற இசை நிபுணர், பிரம்மாவும் மற்ருேரும் தேடியதால் (மார்க்கிதா—தேடியது) இது மார்க்க இசை எனப் பெயர் பெற்றது எனக் கூறுகின்றனர். மிர்க் (Mrg) என்ற வேர்ச் சொல்லிலிருந்து மார்க்கிதா என்ற சொல் பிறந்து மார்கா என மாறிற்று என்பர். தேடியது அல்லது கண்ணால் கண்டது ஆதலின் திரிஷ்டா என்றும் இதை இவ் வுரையாசிரியர் காட்டுகிருர். கண்ணால் கண்டது என்ருல் அதற்கு முன்னிருந்த ஒன்றைத்தானே கண்டிருத்தல் வேண்டும் என்ற வினவை எழுப்புவர் கோசுவாமி என்பவர். அதற்கு முன் இருந்த இசை எது? அது வேதங்களிலிருந்து பிரம்மா பிழிந்து எடுத்த இசை என்று கூறுவர் கல்லிநாதர். வேதத்திலிருந்த இசை யாது, அஃது எத்தகையது என்பதை, முன்னமே நாம் கண்டோம். அங்கு நாம்

கண்டது இசையா? இசையின் பெருங் குழப்பமா? பிறரிடமிருந்து கடன் வாங்கியதை ஒப்புக் கொள்ளாது, தேவலோகத்திலிருந்து பிரம்மாவையும், இந்திரனையும், பிரகஸ்பதியையும் வரவழைத்து அவர்கள் கொடுத்ததாகச் சொல்வது சமஸ்கிருத நூல்களில் காணும் ஒரு மரபாகும். பிரம்மா இசையை வேதத்திலிருந்து பிழிந்து எடுத்தது என்பது இம் மரபின் வழியே யாகும்.

தமிழ் இலக்கியங்களும் இசை நூல்களும் இம் மார்க்க இசை எது என்பதைத் துணிய வழி காட்டுகின்றன. மானியர் வில்லியம்ஸ் என்ற அறிஞர் எழுதிய சமஸ்கிருத அகராதியின் படியும், மெக்டானல்டு எழுதிய சமஸ்கிருத அகராதியின் படியும் மார்க்கா என்பது செவ்வழி (Correct Path) எனப் பொருள்படும். செவ்வழி என்பது தமிழ் நாட்டில் மலிந்து கிடந்த முதல் முதல் தோன்றிய இசை முறையாகும். அகநானூறு, புறநானூறு, மதுரைக்காஞ்சி, சிலப்பதிகாரம் இதற்குச் சான்று பகர்வன. திருஞான சம்பந்தர் செவ்வழிப் பண்ணில் 10 பதிகங்கள் அல்லது 110 தேவாரப் பாடல்கள் பாடியுள்ளார். ஏழு சுரங்கள் கொண்டது செவ்வழிப்பாலை யாகும். இஃது எதுகுல காம்போதியாக இப்போது பாடப் பெறுவது.

செவ்வழி என்ற இசையின் பழைய பெயர் முல்லைப்பண் என்பதாகும். செவ்வழி யாழ்ப் பெயர் முல்லையாகும் என்று திவாகரம் கூறுகின்றது. இதே கருத்தைப் பிங்கலந்தையும் உணர்த்துகின்றது.

செவ்வழி என்ற பெயர் வந்ததற்கு ஒருவாறு காரணமும் காணலாம். முல்லைப் பண் என்பது மிகப் பழைய இசை. இஃது இக்காலத்துப் பாடப்பெறும் மோகன இராகம் என்பர் சங்கீத பூஷணம் எஸ். இராமநாதன் அவர்கள். அவர் கருத்துச் சரியானது என்பது எனது 'பழந்தமிழிசை' என்னும் நூலில் ஆராய்ந்து நிறுவப் பெற்றது. இராமநாதன் அவர்கள் எழுதிய 'சிலப்பதிகாரத்து இசை நுணுக்க விளக்கம்' என்னும் நூலுக்கு இசைப் பேராசிரியர் சாம்பமூர்த்தி அவர்கள் அளித்த பாரா' டுரையில் இக் கருத்து ஒப்புக் கொள்ளப் பெறுகிறது. இந்த முல்லைப் பண் ச, ப, ரி, த, கா என்ற ஐந்து சுரங்களைக் கொண்டதாகும். இதை அடிப்படையாகக் கொண்டே மாறுதல் அல்லது கிரகபேதம் செய்து இசைகளைப் பெருக்க முதல் முதலில் வழி செய்தனர் தமிழர். இவ்வைந்து சுரங்களில் ஒவ்வொரு சுரத்தையும் ஷட்ஜமாகக் கொண்டு கிரக பேதம் செய்து பாடும்போது வெவ்வேறு இராகங்கள் தோன்றுகின்றன. இளி அல்லது பஞ்சமத்தை ஷட்ஜமாகக் கொண்டு கிரகபேதம் செய்து பாடும்போது சுத்த சாவேரி இராகம் எழுகின்றது. இவ்வாறே மற்ற சுரங்களையும் ஷட்ஜமாகக் கொண்டு பாடும்போது வேறு வேறு இராகங்கள் தோன்றுவன. இராகங்களைப் பெருக்க முதன் முதல் இது சரியான வழிகாட்டியதால் இது செவ்வழி, செம்மையான வழி, (Correct Path) எனப் பெயர் பெற்றது. இதுவே வட நாட்டில் பரவி, வேதத்திற்குப் பிரம்மாவால் தேடிக்கொண்டு வரப்பட்ட மார்க்க இசை யாயிற்று. இதனுள் ஷட்ஜத்தை ஆதாரமாகக் கொண்டு அதைச் சூழ்ந்து மற்ற சுரங்கள் நிலைபெறுவதால் இதுவே ஷட்ஜ கிராமமாயிற்று. பரத முனிக்கும் மற்ற சமஸ்கிருத இசை ஆசிரியர்களுக்கும் இதுவே அடிப்படை யாயிற்று.

கோசுவாமி என்பவர் அவரெழுதிய இந்திய இசையின் காதை என்னும் நூலில் ஆரியர்கள் எவ்வாறு பிறர் கலையைத் தம்மதாக்கிக் கொள்ள வல்லவர்கள் என்பதைத் தெளிவாக விளக்கிச் சொல்கிறார். பழந் தமிழிசையைப் பற்றி அவர் அறிந்திருந்தால் அஃது அவர் ஆராய்ச்சிக்குப் பெருந்துணையாக அமைந்திருக்கும். ஆங்கிலத்தில் எழுதிய அவர் நூல், இக் கருத்தைப் பலவகை மக்களிடத்தும், பல நாடுகளிலும் பரவச் செய்திருக்கும். வேதகானத்திற்கும், இவ்விந்தியப் பெருநாட்டின் பல இசை முறைக்கும் பழந்தமிழிசையே அடிப்படையாக அமைந்தது என்பதை நிறுவ மேலே காட்டிய மறுக்க முடியாத ஆதாரங்களைவிட வேறு சான்றும் வேண்டுமோ?

வாழ்க தமிழிசை!

———

# பொற்கொல்லன்

[திரு. தி. வ. காந்திமதிநாதன் பி.ஏ.]

*திக்கெலாம் புகழும் திருநெல்வேலிச் சீமைச் சிந்துபூந்துறையில் 16—1—1931இல் வள்ளிநாயகம் பிள்ளைக்கும் பொன்னம்மையாருக்கும் புதல்வராய்த் தோன்றியவர் இவர். பள்ளிப் படிப்பையும் கல்லூரிப் படிப்பையும் திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் முடித்தபின் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அருந்தமிழ் பயின்று எம்.ஏ. பட்டம் பெற்றார். மாணவராயிருந்தபோதே பேச்சுப் போட்டிகளில் ஈடுபட்டவர் திருநெல்வேலி இந்துக் கல்லூரியில் நான்கு ஆண்டுகள்*



*பணியாற்றியுள்ளார். மாயூரம் அ. வ. அ. கல்லூரியில் தமிழ்த் துறைத் தலைவராகப் பணியாற்றி வருகின்றார். கழகம் நடத்திய இலக்கிய மாநாடுகளில் கலந்து கொண்டு அரிய சொற்பொழிவுகளை நிகழ்த்தியுள்ளார். தஞ்சைத் தரணியில் நடைபெறும் பல பட்டிமன்றங்களுக்குத் தலைவராக அமர்ந்து சொற்பெருக்காற்றி வருகின்றார். அவ்வப்பொழுது இலக்கிய ஏடுகளில் ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதி வருகிறார். 'தண்டபாணி தமிழ்ப் பாமாலை' என்னும் கவிதை நூலின் ஆசிரியர்.*

சிலப்பதிகாரத்தில் காட்டப்படும் மாந்தர்களில் யார் மீதும் நமக்கு வெறுப்போ அன்றி வெகுளியோ ஏற்படுவதில்லை. எல்லோரும் நம் நெஞ்சை அள்ளிக்கொள்ளும் இயல்பினராகவே உள்ளனர். இதற்கு விதிவிலக்காக ஒருவன்—ஒரே ஒரு மனிதன் மட்டும் இந்த நூலில் தலைகாட்டுகிறான். அவன்தான் பொற்கொல்லன். ஒரே காதையில் தோன்றி அதே காதையில் கருமென மறைந்துவிடும் அவன்தான் சிலப்பதிகாரக் கதையின் திருப்புமையத்தின் உயிர்நாடியாகத் திகழ்கிறான். கதையில் வரும் எவரையும் கடிந்தோ இகழ்ந்தோ பேசாத அடிகளாரே இவனைப் பல இடங்களில் பழித்துப் பேசுகிறார்.

இவன் மதுரை நகரப் பொற்கொல்லரில் மிகுந்த செல்வாக்குப் பெற்றவன். அரண்மனைத் தொடர்பும், அரசாங்கப் பொற்கொல்லன் என்ற பெருமையும் ("தென்னவன் பெயரொடு சிறப்புப் பெற்ற பொன் வினைக் கொல்லன்"—கொலைக்: 109—110) பெற்றவன். அரசனின் நம்பிக்கைக்கு உரியவனாக இருந்த இவன் உண்ட வீட்டிற்கே இரண்டகம் செய்தான். அரசியின் காற்சிலம்பைப் பிறரறியாமல் கவர்ந்து கொண்டான். "கரந்து யான் கொண்ட காலணி" என்று அவனே அதை ஒத்துக் கொள்கிறான். அரசனுக்கு இவன்மீது ஐயம் ஏற்பட்டு இவனிடம் சிலம்பைப் பற்றிப் பேசியிருக்கிறான். அரசன் அளவில்தான் இந்த ஐயப்பாடு நின்றதே தவிர அரண்மனை எல்லையில் கூடப் பரவவில்லை.

இந்த நேரத்தில் தான் கோவலன்-பொற் கொல்லன் அறிமுகம் நடைபெறுகிறது. கோவலன் கையில் சிலம்பைக் கண்டதுமே கொல்லன் நெஞ்சில் வஞ்சனை கருக்கொண்டது. வலிய வந்து வலையில் சிக்கிக் கொண்ட கோவலனைத் தன் வீட்டருகே இருக்கச்செய்து வேந்தனிடம் சென்று திரித்துக் கூறி, கொலை ஆணை பெற்றுக் காவலருடன் வந்து கோவலனைக் கொலை செய்கிறான் (செய்விக்கிறான்).

'கல்லாக் களிமகன்' கொலை செய்தான் என்று கருதக் கூடாது. காவலன் பாண்டியன் கொலை செய்ததாகச் சொல்லக்கூடாது. பொற்கொல்லன்தான் கொலை செய்ததாகக் கொள்ள வேண்டும். இளங்கோ அடிகளே இன்னொருவர் வாயிலாக இதை வெளிப்படுத்துகிறார். வாழ்த்துக் காதையில் காவற்பெண்டரற்றும்போது, "கோவலன் தன்னைக் குறுமகன் கோள் இழைப்ப" என்றே குறிப்பிடுவதைக் காணலாம். (கோள்—கொலை)

குறுமகன் என்ற தொடர் பொற்கொல்லனைத்தான் குறிப்பதாக எப்படிக்கொள்வது என்ற ஐயம் ஏற்படலாம். இளங்கோவடிகள் கொலைக்களக் காதையில் அவனை அத்தொடராலே குறிப்பிடுவதும், ("கோவலன் சென்று அக் குறுமகன் இருக்கையோர்—தேவகோட்டச் சிறையகம் புக்கபின்"—கொலைக்: 125---126) கோவலன் கண்ட கனவில் தனக்குத் தீங்கிழைக்கப் போகும் பொற்கொல்லனைக் குறுமகன் என்றே குறிப்பதாக இளங்கோ அமைப்பதும், ("கோவலன் கூறும் ஓர் குறுமகன் தன்னால்....காவல் வேந்தன் கடிநகர் தன்னில்....பிணிப்பறுத்தோர் தம் பெற்றி எய்தவும்"---அடைக்கலக்: 95---100) ஐயப்பாட்டை நீக்கும் சான்றுகளாகும்.

கொல்லன் வலையிற் கோவலன் எப்படி அகப்பட்டான்? மாதரி மனையிலிருந்து கண்ணகியிடம் விடைபெற்று வரும் கோவலன் என்ன சொல்லிவிட்டு வந்தான்? சிலம்பை விற்று வருவேன் என்றான். அந்தச் சிலம்பைக்கொல்லனிடமா விற்கமுடியும்? அரசர்கள், அவர் போன்றோர்தாம் வாங்க முடியும். கோவலனும் கொல்லனிடம் விலை மதித்துச் சொல்ல முடியுமா? என்றுதான் கேட்கிறான். இது தற்செயலாக நடந்தது. கோவலன் பொற்கொல்லனைத் தேடிப்போய் இந்தக் கேள்வியைக் கேட்கப் போவதில்லை. மன்றத்தைக் கடந்து மாதர் வீதி மறுகிடை நடந்து பீடிகைத் தெருவில் திரும்பிய உடனேயே கொல்லன் கண்ணில் பட்டு விட்டான். கொல்லனா வந்தான்? விதி வந்தது. பொற்கொல்லன் உருவில்வந்தது. வந்த அதுதான் கோவலனுக்கும் காவலனுக்கும் ஊடே ஊஞ்சற் பலகைபோல் ஆடி இருவரையும் வீழ்த்தியது.

கொல்லனின் வஞ்சக உள்ளத்தைக் கோவலனால் அறிய முடியவில்லை. அதைவிட அவன் அறிய முயலவில்லை என்று கூறலாம். முயன்றால் வெற்றி அடைந்திருப்பான். வயந்த மாலை வடிவில் வந்த வனதேவதையைக் கொற்றவை மந்திரத்தால் கண்டு கொண்டவன் அல்லனோ? அங்கே வியத்தகு மறையோன் விடுத்த எச்சரிக்கைபோல் இங்கும் அவனுக்குக் கனவு எச்சரிக்கையாக அமைந்தது. இருந்தாலும் அவனால் தெரிந்து கொள்ள முடியவில்லை, மக்களே போல்வர் எனினும் கயவரைக் கண்டு பிடிக்கும் திறனுடைய அவனுக்கு அந்த எண்ணமே தோன்றாதபடி செய்தது விதி (பொற்கொல்லன்) அது மயக்கும் தெய்வத்தைவிட ஆற்றல் வாய்ந்தது. ஊழிற் பெருவலி யாஉள?

இப்படிக் கொல்லன் வலையிற் சிக்கியதை அடிகளார் "தீவினை முதிர்வலைச் சென்று பட்டிருந்த கோவலன்" என்றே பேசுகிறார். இல்லையென்றால் எங்கோ போக வேண்டும் என்று நினைத்த கோவலனை ("மதுரை நகரில் மன்னர் பின்னோர்க்குத் தன்னிலை உணர்த்தி வர நினைத்து வறிதே மீண்டு வந்தவனை"---ஊர்காண்: 21---22) இங்கே கொண்டு வந்து நிறுத்துமா? மற்றொன்று சூழினும் தான் முந்துறும் என்பதுபோல் நூற்றுவரினின்றும் முந்தி வந்தது விதி. ("பொய்த்தொழிற் கொல்லன் புரிந்துடன் நோக்கிக் கோப்பெருந்தேவிக் கல்லதை இச்சிலம்பு யாப்புற வில்லையென முன்போந்து"---கொலைக்: 120---122)

கோவலன் முன் வந்து நின்றதும் விதியே. அங்கே சில்லைச் சிறுகுடிலின் அருகே அவனை நிறுத்தியதும் விதியே. கோவலனை ஏன் அங்கு இருக்கச் செய்ய வேண்டும்? கொல்லன் அவனிடம் சிலம்பை வாங்கிக் கொண்டுபோய்ப் பாண்டியனிடம் காட்டினால் என்ன? புலம்பெயர் புதுவனாகிய கோவலன் கொல்லனை நம்பி அணியைக் கொடுக்க மாட்டான். இன்னொன்று செய்திருக்கலாம். கோவலனையும் அழைத்துக் கொண்டு மன்னனிடம் போயிருக்கலாம். அப்படிச் செய்திருந்தால் கண்ணகி பாண்டியனிடம் அறிவுறுத்தியதுபோல் மணியுடை அரியெனக் காட்டிக்கோவலன் உண்மையை விளக்கியிருப்பான். ஆகவேதான் கொல்லன் கோவலனை இருக்கச் செய்து விட்டுத் தான் மட்டும் போனான்.

பொய்த் தொழிற் கொல்லன் மன்னனையும் மயக்குகிறான். மன்னனிடம் செய்தியைச் சொல்லி அவன் சிந்தித்து ஒரு முடிவுக்கு வந்து விட்டால் தீதாகும் என்று கருதி முன் கூட்டியே திருடன் எப்படி அரண்மனையுள் வந்து திருடினான் என்பதை விளக்கமாகச் சொல்லுகிறான். "கன்னக்கோல் வைத்து வரவில்லை, கொடிற்றுக்கோல் கொண்டு

வரவில்லை, தூக்கத்தை உண்டுபண்ணும் மந்திரத்தை மனதில் நினைந்து அதன் விளைவாக வாயிற் காவலரைத் தூங்கச் செய்து, அரண்மனையுள் புகுந்து சிலம்பைத் திருடி, ஊர்க்காவலர் கண்ணில் படாமல் கரந்து வந்து என் குடிலில் இருக்கின்றான்.''

கூட இருந்து பார்த்ததுபோல் இவ்வளவு தெளிவாகச் சொல்லியதைக் கேட்ட மன்னன் ஒருவேளை திருடன் தன்செய்தியை இவனிடம் சொல்லியிருப்பான் போலும் என்று நினைத்திருக்கலாம். ஆனால் மன்னன் அப்படியெல்லாம் நினைந்து ஒரு முடிவுக்கு வரக் கூடாது. என்ன செய்வது! ''வினை விளை காலமாதலின் சினையலர் வேம்பன் தேரானாகின்றான்'' தேரான் தெளிவு தீரா இடும்பை தந்தது. கோப்பெருந்தேவியின் ஊடலைத் தீர்க்கப் போகும் வேளையில்---விரைவில்---மன்னன் மதி சோர்ந்து போனான். நெஞ்சின் உணர்விற்கு அடிமையாகி நேர்மை தவறி விட்டான். இதையே பின்னர்க் கண்ணகி குறிப்பிடுகின்றாள். (''அறிவு அறைபோகிய பொறியறு நெஞ்சம்'')

கோவலன் மதியை மயக்கியதுபோலவே இங்குப் பாண்டியன் மதியை மயக்கியதும் பொற் கொல்லனே!---பொற் கொல்லன் உருவில் வந்த விதியே!

இப்படி இருவரையும் நிழல்போல் தொடர்ந்து வரும் விதியைப் பற்றி நாம் நினைத்துப் பார்க்க வேண்டும். இஃது எப்படி ஏற்பட்டது ?

சென்ற பிறவியில் கோவலன் 'பரதன்' என்னும் பெயரில் அரசரின் பணியாளனாக இருந்தான். ஒரு நாள் 'சங்கமன்' என்னும் வாணிகனை ஒற்றன் என்று பொய்க் குற்றம் சாட்டி அரசனைக் கொண்டு கொல்வித்தான். (கட்டுரை : 147---170) அந்த வினைதான் இந்தப் பிறவியில் இவனை வணிகனாக வந்து வீண்பழி யேற்று மனம் நொந்து சாகும்படி செய்தது. அந்தச் சங்கமன்தான் பொற்கொல்லனாக வந்திருக்கவேண்டும். தன்னைக் கடைத் தெருவில் கைப்பற்றிய அவனை (பரதனை) இந்தப் பிறவியில் கடைத் தெருவில் கைப் பற்றுகிறான். சென்ற பிறவியில் சங்கமன் ''அரும்பொருள் வேட்கையிற் பெருங்கலன் சுமந்து காதலி தன்னொடு'' (கட்டுரை: 147---148) வந்தது போலக் கோவலனும் (முன்னாள் பரதனும்) உலந்த பொருளீட்டும் வேட்கையுடன் ஏடலர் கோதை கண்ணகியுடன் மாடமதுரை வந்து சேர்கிறான். இதை இளங்கோவடிகள் ''வினைகடை கூட்ட வியங்கொண்டான்'' (கனாத்திறம் : 78) என்றே நினைப்பூட்டுகிறார்.

சென்ற பிறவியில் குற்றமற்ற சங்கமன் உள்ளம் எப்படிக் கொதித்ததோ அப்படிக் கோவலன் உள்ளமும் கொதிக்க வேண்டும் என்பதே விதி. ஆகவேதான் கொலைக் களத்தில் கோவலனை நிற்க வைத்து அவன் முன்னிலையில் அவன்தான் கள்வன் என்று வலியுறுத்தப் பொற் கொல்லன் நீண்ட உரையாற்றும்படியாக அடிகளார் படைத்துள்ளார். மின்னல்போல் தோன்றி மறையும் பொற்கொல்லனுக்கு அந்த வகையில் அவ்வளவு இடம் ஒதுக்க வேண்டிய காரணத்தை இப்போது நம்மால் புரிந்து கொள்ள முடிகிறது.

இம்மையில் நல்லவனாக இருந்த கோவலனுக்குத் தீங்குவர வேண்டிய அவசியமில்லையே என்ற ஐயத்தை மாடலன் வாயிலாக, (''இம்மைச் செய்தனயானறி நல்வினை---உம்மைப் பயன்கொல்....'' அடைக்கலம் : 91---92) உண்டு பண்ணிய அடிகள் பின்னர் மதுராபதித் தெய்வத்தின் வாயிலாக ''உம்மை வினை வந்து உருத்த''தாக (கட்டுரை : 171) விடை விளக்கம் செய்கிறார்

இவ்வளவையும் பார்க்கும் போது சென்ற பிறவியில் சங்கமனைக் கொன்ற மன்னனே இந்தப் பிறவியில் பாண்டியனாக வந்து தன்னைத் தானே மாய்த்துக் கொள்கிறானே என்றும் எண்ண இடம் இருக்கிறது. ஏனென்றால் சங்கமன் மனைவி ''எங்களுடைய துயரத்திற்குக் காரணமானவர்கள் எங்களைப் போலவே துன்பத்தை அனுபவிக்க வேண்டும்'' என்று சாபமிடுகிறாள். அவள் குறிப்பிடுவது கணவன்---மனைவி பிரிவுத் துன்பத்தையே! அத்தகைய துன்பத்தை அவர்கள் (சங்கமன்--நீலி) அடையக் காரணமாக இருந்தவர்கள் இருவர். ஒருவன் பரதன். மற்றொருவன் மன்னன். ஒருவன் கொல்லத் தூண்டினான். மற்றொருவன் கொல்வித்தான். அப்படி நோக்கினால் கோவலனும் துணைபிரிந்து துன்பமடைகிறான். பாண்டிய

மன்னனும் துணைபிரிந்து துன்பமடைகிருன். பாண்டியன் --- கொப்பெருந்தேவி இருவர் அன்பை, இல்லறத்தை இளங்கோவடிகள் குறிப்பிட்டுக் காட்டுவதும் இங்கு நினைக்கத் தக்கது.

கோவலன் தனக்குத் தீமை வரும் என்பதைக் கனவின் மூலம் உறுதியாக உணர்ந்திருந்ததால் பேசத் தெரிந்த ஊமையாக நிற்கிருன். ஆனல் அவன்கூட அந்தத் தீமைக்குக் காரணம் தான் இம்மையில் செய்த குற்றமே என்று எண்ணியிருக்க வேண்டும். (''நச்சுக் கொன்றேற்கு நன்னெறியுண்டோ''--கொலைக் : 66) இளங்கோ வடிகள் கோவலன் நிலைக்கு முன் வினைதான் காரணம் என்பதை விளக்கவே மதுராபுரித் தெய்வத்தின் கட்டுரையை அமைக்கிருர்.

ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்ற கருத்தை இளங்கோ காப்பியமெங்கும் கோடி காட்டிச்சென்ருலும் பொற்கொல்லன் மூலமாகக் கோடிட்டுக் காட்டுகிருர் என்றே கொள்ள வேண்டும். கொலைக்களக் காதையை இளங்கோ தம் கருத்தோடு முடிக்கிருர் :

'கோவலன் பண்டை ஊழ்வினை உருத்து என்.''

இவை நம் நெஞ்சில் நிற்கும் நெருப்பெழுத்துக்கள்.

— — —

## உற்று நோக்கல்

உலகத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகள் சிறியவாயிருப்பினும் பெரியவாய் இருப்பினும், அவை தம்மை உற்றுநோக்கி யாராய்ந்தவர்களே அறிவிற் பெரியராகிப், பல அரும்பெரும் புதுமைகளைக் கண்டறிந்து, நம்மனேர்க்கெல்லாம் அளப்பிலா நன்மைகளைச் செய்திருக்கின்ருர்கள். எதனையும் உற்று நோக்கி ஆராய்தலின்றி, ஆடு, மாடுகளைப்போற் பொது நோக்காய்ச் சென்றவர்கள் தாமும் அறிவு விளங்கப் பெற்றதில்லை, பிறர்க்கும் நன்மையாவன செய்ததில்லை. சோற்றுக்குக் கேடும் மண்ணுக்குப் பொறையுமாய் இருந்து அவர்கள் தம் வாழ்நாளை உண்டு உடுத்து உறங்கிக் கழித்தவர்களேயாவர். இலந்தை மரத்திலிருந்து நன்ருய்ப் பழுத்த பழங்கள் உதிர்ந்து கீழ் விழுதலை எத்தனை கோடி மக்கள் முற்காலத்தும் பிற்காலத்தும் பார்த்திருக்கின்ருர்கள்! அவர்களுள் எத்தனைபேர் அவைகள் ஏன் அங்ஙனங் கீழ்விழுகின்றன என்று ஆராய்ந்து பார்த்தவர்கள்? நியூட்டன் என்னும் ஒருவரைத் தவிர ஏனைக் கோடி கோடியான மக்கள் எவரும் அதன் உண்மையை அறியவில்லையே! ஏன்? உற்று நோக்கி யாராய்ந்து பார்க்கும் அறிவும் முயற்சியும் அவரைத் தவிர மற்றையோர்க்கு இல்லாது போனமை யாலன்றே?

— மறைமலையடிகள்

'சிறுவர்க்கான செந்தமிழ்' பக். ருசு

———

# சேயொளி பாடிய செவியறிவுறூஉ மருட்பா

[புலவர் திரு. சேயொளி]

புலவர் 'சேயொளி'யின் இயற் பெயர் மாவை இராமலிங்க சிவப் பிரகாசம் ஆகும். வட ஆர்க்காடு மாவட்டத்தைச் சார்ந்த மாவை என்னும் சிற்றூரில் 2-8-1931இல் முத்து இராமலிங்கம் பிள்ளைக்கும் இராசம்மாளுக்கும் தோன்றியவர். பள்ளியிறுதிப் படிப்புக்குப் பின் ஆசிரியப் பயிற்சி பெற்று வட ஆர்க்காடு மாவட்டப் பள்ளிகளில் பணியாற்றியவர். சென்னைப் பல்கலைக்கழகப் புலவர் தேர்வில் வெற்றி பெற்றுத் தற்பொழுது ஆலங்காயம் அரசு உயர்பள்ளியில் முதன்மைத் தமிழாசிரியராய்ப்



பணியாற்றிவருகின்றார். சிறந்த இலக்கணப் புலமை பெற்ற இவர் பழைய இலக்கண நூல்களின் உரைகளிற் காணப்படும் விளங்கா மேற்கோள்களை இடஞ்சுட்டி விளக்கும் ஆற்றல் பெற்றவர். பிற்கால இலக்கண நூல்களுள் சிறந்து விளங்கும் 'இலக்கண விளக்கத்தை'க் கழக வழி வெளியிடுதற்கு ஏற்றவாறு செப்பஞ் செய்து வரும் சிறந்த பதிப்பாசிரியர். இலக்கண நெறிபிறழாது பாடல் இயற்றவல்லவர். பழந்தமிழ் நூல்களை நுணுகி ஆராயும் திறன் படைத்தவர்.

*திருக்குறள் 1*
*திருத்தொண்டர் தில்லை வாழந்தணர் 1*

*அகர முதல வெழுத்தெல்லா மாதி*
*பகவன் முதற்றே யுலகுட்—பகரின்*
*தகவுடை தில்லைவா ழந்தணர் தம்மு*
*ளகரமு மான வொருவன்—மிகமிக*
*மிக்குங் குறைந்தும் பிறழ்ந்து முறழ்ந்து*
*மொக்கு முவமை போலத்*
*தொக்கத் தோன்றல் கற்றதன் பயனே.* 1

இது தொகையடியாராகிய தில்லை வாழந்தணர் மூவாயிரவருள் மூத்தவர் சிவ பெருமானே என்கின்றது.

*திருக்குறள் 2*
*திருத்தொண்டர் பொய்யடிமையில்லாப் புலவர் 40*

*கற்றதனு லாய பயனென்கொல் வாலறிவன்*
*நற்று டொழா அ ரெனினெனிற் —சொற்றமிழ்ப்*
*பொய்யடிமை யில்லாப் பெரும்புலவ ரேழெழுவர்*
*மெய்யடிய ராகிச் சிவன்கழற்கே—மெய்த்*
*[தொண்டின்*
*றூய நெறிப் பாப்புனைந்து தூயவனைப் போற்றிசைத்*
*தேய விருந்தன ரென்ன*
*வாயவாய் வயங்குமோ மண்மிசை மலர்மிசையே.* 2

இது தொகையடியாராகிய பொய்யடிமையில்லாப் புலவர் பெருமக்கள் சிவ பெருமானைப் போற்றிப் பாடி வீடுற்றனர் என்கிறது.

*திருக்குறள் 3*
*திருத்தொண்டர் பூசலார் 65*

*மலர்மிசை யேகினுன் மாணடி சேர்ந்தார்*
*நிலமிசை நீடுவாழ் வாரே—லலகி*
*லொளியா யனைத்தினு மொன்றி யுறையு*
*நளியருள் நம்பனின் மூவாத்—தளிரடிக்*
*கோயின் மனத்தின் குறிக்கோள் குறிக்கோ*
*ளாயிற் பூசலா ரகம்விழை*
*கோயில் வேண்டுதிர் குரைகழல் வேட்டென்.* 3

இது தனியடியாராகிய பூசலார் தமது மனத்துள் சிவபெருமானுக்குக் கோயில் எடுத்து வழிபட்டனர் என்கின்றது.

*திருக்குறள் 4*
*திருத்தொண்டர் ஆளுடையரசர் 21*

*வேண்டுதல் வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்*
*கியாண்டு மிடும்பை யிலவாமான்— மாண்புறு*
*சொற்றுணை வானவன்பாற் சொன்மாலைச் செந்த*
*[மிழாற்*
*பொற்றுணைச் சீரடியைப் போற்றுவான்-கற்றுணைப்*
*பூட்டினுல் கடலமண் பாய்ச்சினு நற்றுணைப்*
*பாட்டஞ் செழுத்தெனு மப்பரின்*
*பாட்டால் விடுமி னிடும்பையா மிருளே.* 4

இஃது ஆளுடை யரசர்தம் திருப்பாடலது பெருமை கூறுகின்றது.

திருக்குறள் 5
திருத்தொண்டர்

1. திருவள்ளுவர்
2. சண்டேசர் 20
3. கோட் புலியார் 57
4. பரமனையே பாடுவார் 59

இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டென்-றிருவளர்
வள்ளுவர் தந்தைதாள் வாங்கிய சண்டேசர்
கொள்ளைகொண் மாக்களைக் கொன்றிடு கோட்புலி
பாடும் பணியாய்ப் பரமனைப் பாடுவார்
நாடும் பொருட்புகழ் நந்த
வீடும் பெறுமதி வினைப்பொறி வீட்டே 5

இஃது இறைவனைப் புகழும் பேறுற்ற திருவள்ளுவர், சண்டேசர், கோட்புலியார், பரமனையே பாடுவார் ஆகியோரின் திறன் கூறுகின்றது.

திருக்குறள் 6
திருத்தொண்டர் :—

1. சாக்கியனார் 34
2. முப்போதுந் திருமேனி தீண்டுவார் 62

பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வாரேல்—குறிக்கொண்டு
தாடொழாஅச் சீருரையாச் சாக்கியனார் கல்லெறிந் [தார்
நாடொறும் வாடாதே வீடுற்று—ரேடலர்சீர்ப்
பூக்கொண்டு முப்போதும் பொன்வண்ணர் திரு [மேனி
யாக்கமாத் தீண்டுவா ராறுதே
ராக்க மடைந்திசி னறிகடன் றனக்கே. 6

இது தனியடியாராகிய சாக்கியனாரும், தொகையடியாராகிய முப்போதுந் திருமேனி தீண்டுவாரும் ஆக்கமடைந்தமை கூறுகின்றது.

திருக்குறள் 7
திருத்தொண்டர் கூற்றுவனார் 39

தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல் [லான்
மனக்கவலை மாற்ற லரிதாற் —சினங்கொண்டு
மாற்றுரை மண்டியிட மாற்றுகிற நூழிலாற்
கூற்றுவரே முன்னோன் றிருமுடி —யேற்றிடத்
தில்லைவா ழந்தணர் தீத்திறஞ் சொலவொப்
பில்லான் றாள்பெறா உங் கூற்றுவர்
புல்லப் பெறுமின் புகழ்பெறு மறனே. 7

இது கூற்றுவனார் வீடுற்றமை கூறுகின்றது.

திருக்குறள் 8
திருத்தொண்டர் ஆளுடைப் பிள்ளையார் 28

அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிதா—லறவன்
றிருவடி யெண்ணித் தமிழ்கெழு தீம்பா
லொருவாய் பருகிய வோராண்—டிருமணக்
கோலங் கொண்டிறை குளிர்தாள் குறுகிய
நூலறி யாளுடைப் பிள்ளை நேர்
ஞாலத் தலர்தல் நம்குறிக் கோளே. 8

இஃது ஆளுடைப்பிள்ளையார் திருமணக் கோலத்துடன் அறவாழி யந்தணன் தாள் சேர்ந்தமை கூறுகின்றது.

திருக்குறள் 9
திருத்தொண்டர்

1. திருவள்ளுவர்
2. ஆளுடை யடிகள்
3. ஆளுடை யரசர் 21
4. ஆளுடைப் பிள்ளையார் 28
5. கழறிற்றறிவார் 37
6. ஆளுடை நம்பி 72
7. மெய்கண்டார்
8. ஆளுடை வள்ளலார்

கோளிற் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலையென்ப—வாளிய
லாளுடைப் பேரடிகள் நாவரையர் பிள்ளையா
ராளுங் கழறிற் றறிவாரே - யாளுடை
நம்பிமெய் கண்டார் நல்லருள் வள்ளலார்
நம்பனை வணங்கினர் நளியத்
தம்பொறி கொண்மியா தவத்திருப் பிறவியே. 9

இஃது எண்குண இறைவன் திருவடிப் பேறுற்ற எண்மர் வரலாற்றைத் தொகுத்து உரைக்கின்றது.

திருக்குறள் 10
திருத்தொண்டர் :—

1. திருவள்ளுவர்
2. கண்ணப்பர் 10
3. ஆளுடையரசர் 21
4. திருத்தொண்டர் அனைவரும்.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தா
ரிறைவ னடிசேரா தாரென்—றறைகுறளார்
திண்ணமா வெம்பிறவி தீர்ந்தார் ; நிறையன்பாற்
றிண்ணர் கடற்பிறவி தீர்ந்ததனற்—கண்ணப்ப
ரென்றுபேர் கொண்டார் ; மெய்யுண ரரச
ரன்னவ ரண்ணின ரடியென
முன்னி மன்னுமின் முறைமுறை விசும்பே.

இது திருவள்ளுவர், கண்ணப்பர், ஆளுடையரசர் உள்ளிட்ட எல்லாத் திருத்தொண்டர் திறமும் கூறுகின்றது.

# சங்க இலக்கியத்தில் அறிவியற்கலை

[திரு. பி. எல். சாமி பி. எஸ்ஸி.]

*பழந்தமி ழிலக்கியத்தை அறி வியற்கண் கொண்டு நோக்கும் ஆற்றல் படைத்த ஆராய்ச்சி யறிஞர் திரு. பி. எல். சாமி கோயம்புத்தூரில் 2-10-1925இல் ஆ. பெரியநாயகம், மதயனம்மாள் ஆகியோருக்குத் தோன்றிய அருமைந்தர். அறிவியல் துறை யில் இளநிலைப் பட்டம் பெற் றுள்ள இவர் கல்லூரியில் படித் துக்கொண்டிருந்த போதே அறி வியலையும் தமிழிலக்கியத்தையும் ஒப்பு நோக்கிக் கட்டுரைகள் வரையத் தொடங்கினர். 'செந் தமிழ்ச்' செல்வியில் இவர் எழுதி*



*வந்த சங்க இலக்கிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் 'சங்க இலக்கியத்தில் செடிகொடி விளக்கம்' 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக் கம்' என்ற தலைப்புக்களில் நூல் வடிவில் கழகவழி வெளிவந்து அறிஞர்களின் பாராட்டுதல்களைப் பெற்றுள்ளன 'தமிழ் கல்ச்சர்' போன்ற ஆங்கில இதழ்களிலும் கட்டுரையெழுதி வருகிறார். புதுவை அரசின் உயர்ந்த பதவியி லுள்ள இவர் ஓய்வு நேரம் முழுவ தையும் தமிழ்ப்பணியிலேயே செல விடுகின்றார். தமிழுக்கும் அறி வியலுக்கும் பாலம் அமைப்பவர்.*

சங்க இலக்கியத்தில் இயற்கையில் காணப்படும் விலங்குகள், பறவைகள், மரஞ் செடிகொடிகள் முதலிய பல்லுயிர்களைப் பற்றியும் பல அரிய பெரிய நுண்ணிய அறிவியற் செய்திகள் காணப்படுகின்றன. இலக்கியத்தில் இச்செய்திகள் ஏன் வரு கின்றன என்ற கேள்வி எழுவது இயல்பே. மற்ற எந்த மொழியின் இலக்கியத்திலும் இத்தகைய அறிவியற் செய்திகள் காணப் படுவதில்லை. டாக்டர் கைலாசபதி அவர்கள் தமிழர் வீரப்பண்பாட்டுப் பாடல்களைப் பற்றி எழுதிய நூலில் (Tamil Heroic Poetry) இக்கேள்விக்கு விடைகூற முயன்றுள்ளார். வாய்மொழியாகப் பாடப்பட்ட பிறநாட்டு வீரப்பாடல்களில் இயற்கையைப் பற்றிய செய்திகள் ஒரே முறையாகத் திரும்பத் திரும் பச் சொல்லப்படுவதாகக் கூறியுள்ளார். இது போன்றே தமிழிலும் தோன்றியிருக்கலாம் என்று கைலாசபதி அவர்கள் கருதுகின்றார். சங்க இலக்கியப்பாடல்கள் வாய்மொழியாகப் பாடப்பட்ட வீரப்பாடல்கள் என்று அவர் கருதுகின்றார். இந்த விளக்கம் புதுமையாக இருப்பினும், ஓரளவு தொன்மைத் தோற்றத் திற்கு விளக்கம் தரினும் சங்கஇலக்கியத்தில் காணும் அறிவியற் செய்திகளின் மிகுதியை யும் விரிவையும் நுட்பத்தையும் நோக்குங் கால் இந்த விளக்கத்தையே போதியதொரு முழுவிளக்கமாகக் கொள்ள முடியவில்லை. சங்க இலக்கியத்தில் காணப்படும் அறிவியற் செய்திகள் மேலெழுந்தவாரியாக மக்கள் கண்டதைக் கூறினவையாகத் தெரியவில்லை. தற்காலம் செடிநூல், விலங்குநூல், பறவை நூல் முதலிய அறிவியல் நூல்களில் கூறப் படும் அரிய செய்திகளைக் கூடச் சங்க இலக் கியத்தில் காணும்போது இது வீரர்வணக்கப் பாட்டில் எழுந்த ஒரு கூறு என்று மட்டும் கருத முடியவில்லை. சங்க இலக்கியத்தில் இந்த அறிவியற் செய்திகள் உவமமாகவும் உள்ளுறையாகவும் நிகழ்ச்சிக்கு நிலைக் களனுக, கருப்பொருளாக வருகின்றன. இச் செய்திகள் ஐந்திணைப் பாகுபாட்டிற்கு உட்பட்டு, ஐந்துவகை நிலங்களிலும் சூழ் நிலைகளிலும் நடைபெறுவதாகக் கூறி யுள்ளனர். இத்தகைய முறையில் அறிவியற் செய்திகளை நுண்ணிய உணர்வினல் பாகு படுத்திக் கூறியதை வேற்றுமொழியில் காணமுடியவில்லை. ஆதலின் பிறமொழி களில் உள்ள வீரர்வணக்கப் பாடல்களில் காண்பது போன்றதே இதுவும் என்று கொள்ள முடியவில்லை. கடைச்சங்க காலத் திலேயே இத்தகைய செய்திகள் பல புலவர் களாலும் போற்றப்பட்டுப் பிறரும் அறிய வேண்டுமென்பதற்காகவே திரும்பத் திரும்பப் பாடல்களில் கையாளப்பட்டன

வாகத் தோன்று கின்றன. இச்செய்திகள் பொருள் செறிந்த அடை மொழிகளிலும் சொற்றொடர்களிலும் சங்க நூல்களில் கூறப் படுவதையும் காணலாம்.

சங்கப்புலவர்கள் காடுகளையும் அரிய சுரங்களையும் கடந்து செல்வதாகப் பாடிய பல பாடல்களைக் குறிஞ்சித் திணையிலும் பாலைத்திணையிலும் காண்கிறோம். செல்லும் போது குறுக்கே நிற்பது என்ற பொருளிலே விலங்கு என்ற சொல் தோன்றியது. விலங்கு என்ற சொல் குறுக்கிடுவது என்ற பொருளில் சங்கநூல்களில் வழங்கியுள்ளது. தற்காலம் மலையாளத்தில் இதே பொருளில் வழங்குவதையும் உணரவேண்டும். ஆதலின் குறுக்கிடும் விலங்கு, பறவை, மரஞ்செடி கொடிகள் முதலிய உயிர்களைக் கண்டு கூறினர் என்று கொள்ள வேண்டி யுள்ளது. தற்காலத்திலும் காட்டில் வாழும் பழங் குடிகள் விலங்குகள், பறவைகள், மரங்கள் பற்றிய பல நுண்ணிய செய்திகளை அனுபவ வாயிலாக அறிந்திருப்பதைக் காண்கிறோம். சங்ககாலத்தில் இத்தகைய செய்திகளை மேலும் நுண்ணிதாக ஆராய்ந்து கண் டறிந்து சங்கப்புலவர்கள் இச் செய்திகளைக் கூறினதாகவே கொள்ளவேண்டும். இவை திணைப் பாகுபாட்டில் கருப்பொருளாக அமை யவே புலவர்கள் இச்செய்திகளைப் போற்றிப் பாடினர். இயற்கையில் எந்த எந்தச் சூழ்நிலை யில் எந்த எந்த மரஞ்செடி கொடிகள், விலங்குகள், பறவைகள் காணப்படுகின்றன என்பதைச் சங்கப் புலவர்கள் பாடல்களில் காட்டுகின்றனர். இதற்கு ஓரளவு நுண்ணிய அறிவும், கல்வியும், இயற்கையில் ஈடுபாட்டு உணர்வும் இன்றியமையாதன வாகும். விலங்குக் கண்காட்சிச் சாலைகளில் (Zoo) ஒவ்வொரு விலங்கையும் பறவையையும் அதற்குரிய சூழ்நிலையில் காட்டவேண்டும் என்ற புதுமுறை வகுக்கப்பட்டு வெளிநாடு களில் கையாளப்படுகின்றதைக் காணலாம். ஆனால் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பே விலங்குகளையும் பறவைகளையும் அவை களின் சூழ்நிலையில் கண்டு ஆராய்ந்து கூறிய அறிவியற் புலமையைச் சங்க நூல் களில் காணலாம்.

சங்க இலக்கியத்தில் நூற்றுஐம்பதுக்கு மேற்பட்ட எண்ணிக்கையுடைய மரஞ்செடி கொடிகளைப் பற்றிய செய்திகள் வருகின்றன. இவ்வளவு மரஞ் செடி, கொடிகள் பிறமொழி இலக்கியங்களில் சொல்லப்படவில்லை. முப்பதிற்கு மிகுதியாக விலங்குகள் கூறப் பட்டுள்ளன. *மான் இனத்தில் (Deer and Antilope) ஐந்து வகைகளைப்பற்றியும், குரங்கு இனத்தில் நான்கு வகைகளைப் பற்றியும். நாயின விலங்குகளில் நான்கைப்பற்றியும் புலியினத்தில் இருவகைகளைப் பற்றியும் பல செய்திகள் காணப்படுகின்றன. இவைதவிர அரிதாகக் காணப்படும் நீலகிரிக் கருங்குரங் கையும் (Nilgris Langur) மலைகளின் உச்சிக் குவடுகளில் காணப்படும் வருடையாடு களையும் (Nilgris Tahr) மலையில் வாழும் திர்வை என்றழைக்கப்படும் மலைக்கீரியையும் (Stripe-necked mangoose) கூறியிருப்பதைக் காணலாம். எலிகளில் மூவகைகளைப் பற்றி யும் அணிலில் இருவகைகளைப் பற்றியும் கூறியுள்ளனர். பறவையின வகைகளைப் பற்றியும் பலசெய்திகள் காணப்படுகின்றன. ஏறக்குறைய முப்பத்தைந்து முக்கிய பறவைகள் கூறப்பட்டுள்ளன. கழுகு இனத் தில் ஐந்து வகைபற்றிய செய்திகள் கூறப் பட்டுள்ளன. ஆந்தை இனத்தில் குரால், கூகை, குடிஞை, ஆந்தை ஆகிய நான்கு வகைகள் பிரித்துக் கூறப் பட்டுள்ளன. புறவினத்தில் மூன்று வகைகள் சொல்லப் பட்டுள்ளன. பத்துக்கு மேற்பட்ட நீர்ப் பறவைகள் பற்றியும் நாரையில் நான்கு வகை பற்றியும் நுண்ணிய செய்திகள் வருகின்றன. சில அரிய பறவைகளைப் பற்றி யும் குறிப்பாகச் செய்திகள் காணப்படு கின்றன. அன்றைய தமிழகத்துக்கு அப்பாற் பட்ட நாட்டில் கண்ட பறவைகளையும் விலங்குகளையும் கூடச் சொல்லியிருக் கின்றனர். மைசூர் மாநிலத்தில் காணப் பட்ட காட்டெருமை பற்றியும் (Wild Buffa-low), கணந்துள் என்று அழைக்கப்படும் அரிய பறவை பற்றியும் (Great Indian Bustard) செய்திகள் காணப்படுகின்றன. இவை இரண்டும் வடநாட்டில் சில பகுதி களில் காணப்படுகின்றன. தெற்கே மைசூரில் காணப்படுகின்றன. கணந்துள்

* விலங்குகள் பற்றிய செய்திகளின் விளக்கத்தை இவ்வாசிரியர் எழுதிய 'சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்' என்ற நூலில் காணலாம்.

பறவையை வடுகர் நாட்டில் கண்டதாக நற்றிணைப் பாடலில் கூறப்பட்டிருப்பது மிக அரிய, வியப்பான செய்தியாகும்.

*''பார்வை வேட்டுவன் படுவலை வெரீஇ*
*நெடுங்கால் கணந்துளம் புலம்புகொள் தெள்விளி*
*சுரஞ்செல் கோடியர் கதுமென இசைக்கும்*
*நரம்பொடு கொள்ளும் அத்தத்து ஆங்கண்*
*கடுங்குரல் பம்பைக் கதநாய் வடுகர்*
*நெடும் பெருங் குன்ற நீந்தி நம்வயின்''*
—நற்றிணை. 212

*''ஆற்றய விருந்த விருந்தோட் டருஞ்சிறை*
*நெடுங்காற் கணந்து ளாளறி வுறீஇ*
*ஆறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்*
*மலையுடைக் கான நீந்தி*
*நிலையாப் பொருட்பிணிப் பிரிந்திசி னோரே''*
—குறுந்தொகை. 350

வடுகருடைய நெடும்பெருங்குன்றம் கடந்து சென்று நெடுங்கால் கணந்துள் பறவையைக் கண்டதாகக்கூறியுள்ளதைக் கவனிக்க வேண்டும். குறுந்தொகையில் மலையுடைய கானங் கடந்து சென்ற விடத்தில் கணந்துளைக் கண்டதாகக் கூறியிருப்பதையும் நோக்க வேண்டும். ஆகவே தமிழ்நாட்டில் கண்ட பறவையன்று என்பது தெளிவு. மைசூர் மாநிலத்தில், வடுகர் வாழ்ந்த இடத்தில் கண்ட இப்பறவையின் பெயர் கன்னடத்தில் 'கணவுளு' என்று வழங்குவதைக் காணும்போது சங்க இலக்கியத்தில் இரண்டே பாடல்களில் கூறப்பட்ட கணந்துள் பறவை எது வென்று அறிந்து கொள்ளலாம். கிட்டல் (Kittel) என்ற அறிஞர் எழுதிய கன்னடமொழி அகராதியில் 'கணவுளு' என்ற பெயர் இப்பறவையின் பெயராகக் கூறப்பட்டிருப்பதையும் காணலாம். கணந்துள் என்று சங்க இலக்கியத்தில் அழைக்கப்பட்ட பறவை கன்னடத்தில் அழைக்கப்படும் 'கணவுளு' என்ற பறவையே என்பதில் ஐயமில்லை. நீண்ட கால்கள், புலம்புகொள் தெள்விளி, இருந்தோட்டு அருஞ்சிறை என்ற சொற்றொடர் விளக்கம் தெளிவாக இஃது அறிவியற்படி எந்தப்பறவை என்று தெளிவாகக் காட்டுகின்றது. இந்தப் பறவைக்கு நீண்ட கால்களும் அகலமான சிறகுகளும் உண்டு. கூட்டமாக இருபத்தைந்திலிருந்து முப்பது வரை காணப்படும். இதன் குரல் வெகு தொலைவு கேட்கும். இதன் சுவையுடைய இறைச்சிக்காக வேட்டையாடிக் கொன்றதால் இன்று இந்த இனமே அழிந்து விடும் நிலையில் உள்ளது. தமிழ் நாட்டிற்கு வெளியே காணப்பட்ட இப்பறவையைப் பற்றிக் கூறியிருப்பது வியப்பைத் தருகின்றது.

ஊர்வன, பூச்சி இனங்கள் ஆகியவை பற்றியும் சங்க இலக்கியத்தில் செய்திகள் வருகின்றன. முதலை, பல்லி, ஓந்தி, பாம்புகள் முதலியன பற்றிச் சில அரிய செய்திகளைக் காண்கிறோம். முதலையில் மூன்று வகைகளைப் பகுத்து உணர்ந்திருக்கின்றார்கள். முதலை, (The Coast Crocodile) இடங்கர் (The Common Indian Crocodile) கராம் (The gharial) ஆகிய மூன்று வகை முதலைகளை நன்கு தெரிந்திருந்தனர். இவைகளில் முதலை கடலோரத்தில் காணப்படுவது. இடங்கர் உள்நாட்டில் ஆற்றிலும் குளத்திலும் காணப்படுவது. கராம் என்ற இனம் தமிழ் நாட்டைச் சேர்ந்ததில்லை. இந்த முதலையினம் வடநாட்டில் கங்கை, பிரம்மபுத்திரா முதலிய ஆறுகளில் வாழ்வதாகும். இதை வட நாட்டில் 'கரியால்' என்றழைப்பர். இந்த வடமொழிப் பெயரே 'கராம்' என்று சங்ககாலத்தில் வழங்கினதாகத் தெரிகின்றது. இந்த இனமுதலையைச் சங்ககாலத்திலேயே தமிழகத்திற்கு கொண்டு வந்து கோட்டை அகழிகளில் வளர்த்தனரென்றும் தெரிகின்றது. இந்த இன முதலைகள் மிகவும் கொடுமை வாய்ந்தவையாகையால் அகழிகளில் விடப்பட்டிருக்கலாம். ஆனால் தற்பொழுது இந்த மூன்று முதலையினங்களையும் மக்கள் கொன்றமையால் தமிழ் நாட்டில் காண்பதே அரிதாக உள்ளது. கடற்கரையிலும், ஆற்றுமுகத்திலும் அரிதாக முதலையினத்தைப் பார்க்கலாம். கராம், இடங்கர் ஆகிய இனங்கள் முற்றிலும் தமிழ் நாட்டில் அழிக்கப் பட்டன.

சில சங்கப்பாடல்களில் மரம், விலங்கு ஆகியவற்றின் முழுவிளக்கம் கூறப்படுவதைக் காணலாம். இவைகளைப் படிக்கும் போது அறிவியலா, கவிதையா என்று ஐயம் எழலாம்.

*''நீடுவெயில் உழந்த குறியிறைக் கணைக்கால்*
*தொடையமை பல்மலர்த் தோடுபொதித் தியாத்த*
*குடையோ ரன்ன கோளமை பெருத்திற்*

*பாளை பற்றிழிந் தொழியப் புறஞ்சேர்பு*
*வாள்வடித் தன்ன வயிறுடைப் பொதிய*
*நாளுறத் தோன்றிய நயவரு வனப்பின்*
*ஆரத் தன்ன அணிகிளர் புதுப்பூ*
*வாளுறு கவரியின் வண்டுண வரிய*
*முத்தின் அன்ன அரிநிறத் தாலி*
*நகைநனி வளர்ந்த மூவாப் பசுங்காய்*
*நீரினு மினிய வாகிக் கூரெயிற்று*
*அமிழ்தம் ஊறுஞ் செவ்வாய்*
*ஒண்டொடிக் குறுமகக் கொண்டனம் செலினே''*

*—அகம். 335*

மேலே காட்டிய அகப்பாடலில் கடைசி மூன்றுவரிகள் தவிர மீதிப் பதினொரு வரிகள் கமுக மரத்தின் பாகங்களை விளக்கு வதைக் காணலாம். கமுகின் அடிமரம், கழுத்து, பாளை, அரும்பு, முதிர்ந்த பூ, காய், பழம், பழத்தின் சுவை ஆகியவையெல்லாம் வருணிக்கப்பட்டுள்ளதைக் காணலாம். சங்க நூல்களில் கமுகைப் பற்றிப் பேசும் பாடல் இஃதொன்றுதான் உள்ளது. கமுகைப் பயிரிடும் வழக்கம் சங்க காலத்தில் தோன்றியதாகத் தெளிவாகின்றது. இந்த அகப்பாடலில் சங்கப் புலவர் மதுரைத் தத்தங்கண்ணனார் கமுகமரத்தை வருணிப் பதையே முக்கிய நோக்கமாகக் கொண்டு பாடியுள்ளார் என்பது தெரிகின்றது. இஃது அறிவியல் என்பதில் ஐயமில்லை. இதே போன்றதொரு பாடல் யாப்பருங்கல விருத்தியில் மேற்கோளாகக் காட்டப் பட்டுள்ளது. இது நடையிலும் போக்கிலும் சங்கப் பாடலென்றே தோற்றுகின்றது. இருபத்திரண்டு வரிகளுடைய இப்பாடலில் பதினேழு வரிகளில் வாழைமரம் அடியி லிருந்து முடிவரை, முளையிலிருந்து கனி வரை பருவவேறுபாடுகளோடு வருணிக்கப் பட்டுள்ளதைக் காணலாம். சங்கப் புலவர் கள் மரஞ்செடி கொடிகள், விலங்குகள், பறவைகள் ஆகிய உயிர்களைக் கண்டு அவை களின் உருவம், தோற்றம், குணம், செயல்கள் ஆகிய பலசெய்திகளையும் ஆராய்ந் தறிந்தே கூறியுள்ளனர். ஆதலின் இலக் கியத்தில் அறிவியலையும் கலந்து கூறினர் என்று கூறினால் அதை மிகைக் கூற்று என்று கருதமுடியாது.

இத்தகைய அறிவியற் செய்தி விளக் கங்களை மட்டுமின்றிப் பல நுண்ணிய, அரிய [illegible]வியற் செய்திகளையும் சங்கப் புலவர்கள் கூறியுள்ளனர். காட்டில் புலியைக்கண்ட முசுக்குரங்குகள் எப்படிக் கூக்குரலிட்டு அழைக்கின்றன, புலியைக்குத்திக் கொன்ற யானை எப்படி அதன் தந்தங்களைக் கழுவு கின்றது, சிறுத்தைப்புலி எப்படிக் கொன்ற விலங்குத் தசையை மறைத்து வைக்கின்றது, கரடி ஈயற்புற்றில் எப்படி வாய் வைத்து உறிஞ்சி உண்ணுகிறது. காட்டுப் பன்றியின் அஞ்சாத செயல் திறமை ஆகிய பல அரிய இயற்கை உண்மைகளைச் சங்க நூல்கள் கூறுகின்றன. எடுத்துக் காட்டாகச் சில வற்றைக் கவனிக்கலாம். கலைமானின் கொம்பு முளைப்பதும் கிளைவிடுவதும், வளர் வதும், உதிர்ப்பதும், திரும்ப முளைப்பதும் ஆகிய செயல்களைத் தற்காலத்தில் தான் ஆராய்ந்து எழுதியுள்ளார்கள். ஆனால் இச் செய்திகளை இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட சங்க நூல்களிலேயே காண் கிறோம்.

*''கலைமான் தலையின் முதன்முதல் கவர்த்த*
*கோடலங் கவட்ட குறுங்கால் உழிஞ்சில்''*

*—அகம். 151.*

அகநானூறு 151ஆம் பாடலில் கலைமானின் தலையில் முதல் முதலாகக் கவையுடன் கொம்பு முளைப்பது கூறப்பட்டுள்ளது. பிறகு கொம்பு முதிரமுதிரப் புதிய கிளைகள் கொம் பில் தோன்றிக் கவைகவையாகக் கிளை விட்டுக் காணப்படும்.

*''பல்கவர் மருப்பின் முதுமான் போக்கி''*

*—அகம். 283*

அகப்பாடல் 283ல் 'பல்கவர்' கொண்ட முதியமான் கூறப்பட்டுள்ளது. முதல் கவர், பின்னர் முதுமானின் பல்கவர் கொம்பில் இருப்பதைக் கூறியுள்ளனர். முதிர்ந்த கொம்புகளைக் கலைமான் உதிர்த்து விடு கின்றது. இச்செய்தியையும் சங்க நூல்கள் கூறுகின்றன.

*''இறுகுபுல் மேய்ந்த அறுகோட்டு முற்றல்*
*அள்ளல் ஆடிய புள்ளி வரிக்கலை''*

*—நற்றிணை. 265*

*''கள்ளியங் காட்ட புள்ளியம் பொறிக்கலை*
*வறனுறல் அங்கோ டுதிர வலங்கடந்து*
*புலவுப்புலி துறந்த கலவுக்கழி கடுமுடை''*

*— அகம். 97*

மேலே காட்டிய நற்றிணை, அகநானூற்றுப் பாடல்களில் வறண்ட கொம்பு உதிரும் குணத்தைக் கூறியுள்ளதைக் காணலாம். உதிர்ந்த முற்றிய கொம்பை 'அறுகோட்டு முற்றல்' என்று நற்றிணை அழைக்கின்றது. வறண்ட கொம்பு உதிரவே கலைமானை எளிதில் வென்று புலி கொன்றதாக அகநானூறு கூறுகின்றது. கலை மானிற்கு அதன் கொம்புதான் புலியிடமிருந்து பாதுகாக்க உதவுகின்றது. இச்செய்திகள் விலங்கு நூலார் கூறியுள்ளவையேயாகும். (In young deer the antler is a simple spike—with the growth of the animal it throws out a branch from near its base. Stags wear their antlers after the rut and then shed them. The newly-grown antler is encased in a thick soft skin called velvet. Its softness and its dense covering mat of fine hairs give it the face and the look of velvet). கொம்புகள் உதிர்ந்ததும் புதிய கொம்புகள் முளைக்கும். அப்போது அக் கொம்புகள் மென்மையான, 'வெல்வெட்' போன்ற தோலால் மூடப்பட்டு இருக்கும். இச்செய்தியைக்கூடச் சங்கப் புலவர்கள் நுட்பமாக ஆராய்ந்து கூறியுள்ளது வியப்பைத் தருகின்றது.

> *"புள்ளி அம்பிணை உணீஇய உள்ளி*
> *அறுமருப்பு ஒழித்த தலைய தோல்பொதி*
> *மறுமருப் பிளங்கோ டதிரக் கூஉஞ்"*
>
> —*அகம்* : **291**

உதிர்ந்த கொம்பை அறுமருப்பு என்றும் திரும்ப முளைக்கும் கொம்பை மறுமருப்பு என்றும் அழைத்த நயம் பாராட்டத்தக்கது. கொம்பு உதிர்ந்து தலையில் தோன்றிய மறு கொம்பில் தோல் பொதிந்து இருப்பதைத் தெளிவாகக் கூறியதைக் காணலாம். இந்தத் தோல் பொதிந்த மென்மையான கொம்பை நற்றிணை, 19ஆம் பாடலில் புலவர் தாழையின் மென்மையான, நீண்ட ஆண் பூவிற்கு ஒப்பிட்டுக் காட்டியது எண்ணி இன்புறத்தக்கது. யானை தன் கொம்பால் புலியைக் கொன்று பின்னர்த் தன் கொம்பையும் உடலையும் கழுவுவதை அறிஞர்கள் கண்டுள்ளனர். இது காட்டுயானையின் செய்கையாகும். இதையும் சங்கப் புலவர்கள் கூறியுள்ளனர்,

> *"உழுவையோ டுழந்த உயங்குநடை யொருத்தல்*
> *நெடுவகிர் விழுப்புண் கழாஅக் கங்குல்"*
>
> —*அகம்* : **308**

> *"இரும்புலி தொலைத்த பெருங்கை வேழத்துப்*
> *புலவுநாறு புகர்நுதல் கழுவக் கங்குல்*
> *அருவி தந்த அணங்குடை நெடுங்கோட்டு"*
>
> —*அகம்* : **272**

இந்த அரிய செய்தியைச் சங்கப் புலவர்கள் பாடியிருப்பதைக் காணும்போது வியப்படையாமல் இருக்கமுடியாது.

இதுபோன்றே பறவை முதலிய பிற உயிரினங்களைப் பற்றியும் அரிய செய்திகள் வருகின்றன. குறுந்தொகைப் பாட்டில் மயிலிற்குப் 'போழ்கண்' இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

> *"கையற வந்த பையுண் மாலை*
> *பூஞ்சினை யிருந்த போழ்கண் மஞ்ஞை*
> *தாநீர் நனந்தலை புலம்பக்*
> *கூஉந் தோழி பெரும்பே தையவே"*
>
> —*குறுந்தொகை* : **391**

'போழ்கண்' என்பதற்குப் போழ்ந்தாற் போன்ற கண்களையுடைய மயில்கள் என்று உரை கூறப்பட்டுள்ளது. இந்த உரை முழுமையான விளக்கமாகத் தெரியவில்லை. போழ் என்ற சொற்குப் பிளவுபடுத்தல், ஊடுருவிச் செல்லுதல் என்ற பொருள்கள் உண்டு. மயிலின் பார்வை ஊடுருவிச் செல்லுதல்போல் இருப்பதால் 'போழ்கண்' என்று கூறப்பட்டுள்ளது. மயிலிற்குக் காட்டு விலங்குகளை ஊடுருவிப் பார்ப்பதுபோல் உற்றுப்பார்க்கும் குணம் உண்டு என்பதைப் பறவை நூலறிஞர்கள் சுட்டிக்காட்டியுள்ளனர். (Like all creatures peacocks have oddities of their own. They have the reputation of gazing with stupefication at any object that comes within their ken and when leopards crawl up to them and finally come into view, the birds stare at them as if hypnotised and so fall an easy prey to carnivores—Zafar Futehally—The Illustrated Weekly of India Oct. 27, 1968) காட்டில் வாழும் மயில் மற்ற விலங்குகளையும் பொருள்களையும் முட்டாள்தனமாக முறைத்து ஊடுருவிப் பார்க்கும் குணம் உடையது என்று அறிஞர்கள் கண்டு கூறி

யுள்ளனர். இந்தக் குணத்தால் மயில் சிறுத்தைப் புலி போன்ற விலங்குகளுக்கு எளிதில் இரையாகின்றது. 'போழ்கண் மஞ்ஞை' என்பதின் உண்மை விளக்கம் அறிவியல் செய்தி யென்பதை உணரவேண் டும். சிறிய அடை மொழிச் சொற்களில் அரிய அறிவியல் உண்மையைக் கூறியதைப் போற்ற வேண்டும்.

நாரையினப் பறவைகளுக்கு (Heron) மார்பு பக்கத்திலும், பின்பக்கத்திலும் உள்ள இறகுகளில் மிகச் சிறிய நுண்ணிய துய் போன்ற தூவிகள் காணப்படுகின்றன. அவைகளிலிருந்து ஒருவகைத் தூள்போன்ற பொருள் வெளியாகின்றது. அந்தத் தூளைக் கொண்டு இறகுகளை உலர்த்திக் கொள்ளும் வழக்கம் இப்பறவைகளுக்கு உண்டு என் பதை அறிஞர்கள் கண்டுள்ளனர். (On the sides of the breast and rump of the herons and egrets the birds of the family have concealed under the feathers, patches of peculiar, specialised feathers known as 'powder--down' which give off a powdery substance used in preening their feathers—G. M. Henry---Birds of Ceylon) இச்செய்தி சங்க நூலில் காணப்படுவது வியப்பைத் தருகின்றது.

"ஆடமை ஆக்கம் ஐதுபிசைந்து அன்ன
தோடமை தூவித் தடந்தாள் நாரை"
—நற்றிணை : 178

மூங்கிலுள்ளே உரிக்கப்படும் தோலை மெல்லி தாகப் பிசைந்து வைத்தாலொத்த தூவியை உடைய நாரை என்று கூறியிருப்பதைக் காணலாம். மூங்கிலின் உள்ளே உள்ள உரி மிக மெல்லியது. அதைப் பிசைந்தால்போல் இருந்ததாகக் கூறியது அழகிய, அரிய நுண் ணிய உவமையாகும். தடந்தாள் நாரை (Reef heron) நாரையினத்தில் சேர்ந்தது. இதற்கு இந்தத் தூவியுண்டு என்பது அறிஞர் கூறிய செய்தியாகும். இத்தகைய நுட்பமான அறிவியற் செய்திகளைக் கூட எடுத்துக் கூறிய சங்கப் புலவர்களின் அறி வாற்றலைப் போற்றிப் புகழ வேண்டும்.

சங்க இலக்கியத்தில் அறிவியற் செய்தி கள் விரிவாகவும் நுண்ணியவாகவும் கூறப் பட்டுள்ளதை மேலே விளக்கிக் கூறினோம். சங்க இலக்கியத்தில் வழங்கும் திணைப்பாகு பாடே ஓர் அறிவியல் கோட்பாடு என்று கருதலாம். ஓர் உயரிய தத்துவக்கோட்பாடு என்று கூடக் கருதலாம். தற்போது அமெரிக்காவிலும் பிறநாடுகளிலும் இயற் கைச் சூழ்நிலையை (Ecology) அழிக்கக்கூடா தென்று அதைப் பாதுகாக்கப் போராட்டங் கள் நடக்கின்றன. ஐந்திணையில் நிலம், பருவம், மரங்கள், விலங்குகள், பறவைகள், திணைவாழ் மக்கள், அவர்களின் வாழ்க்கை ஆகியவை கூறப்பட்டுள்ளன. இதே அடிப் படையில் தற்காலம் ஒரு கோட்பாட்டைச் சில அறிஞர்கள் வற்புறுத்தி வருகின்றனர். (Ecology means the relationship of plants, animals and people to their environment and the alteration that occur in the environment from time to time through changes of season, rain fall, climate and the influence of man himself. It is a science and basically even a philosophy which in the past has received too little attention in our whole system of education—Louis Bromefield — Natural History Magazine) லூயிபுரோம்பீல்டு என்ற அறிஞர் இந்தக் கொள்கையை வலியுறுத்திக் கூறியிருப்ப தைக் காணலாம். மரங்கள், விலங்குகள், மக்கள், இயற்கைச் சூழ்நிலையில் எப்படி இணைந்து வாழ்கிறார்கள் என்பதை ஆராய்ந் தறிய வேண்டும்; பருவங்கள், மழை, மனிதன் ஆகியவற்றால் எப்படி மாற்றங்கள் தோன்றுகின்றன என்பதையும் ஆராய வேண்டும் என்று இவ்வறிஞர் கூறுவதைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். சங்க காலத் தில் இவைகளை ஆராய்ந்ததினால்தான் திணைப்பாகுபாடு தோன்றிற்று என்று கருத லாம். உயிர்களின் சூழ்நிலையை (Biome) அப்படியே எடுத்துக் காட்ட வேண்டும், ஆராய வேண்டும் என்ற அறிவியற் கொள்கை இன்று முக்கியம் வாய்ந்ததாகக் கருதப்படுகின்றது. இதே போன்றதொரு கருத்தையே சங்க இலக்கியத் திணைப்பாகு பாட்டில் காண்கிறோம். ஒரு நிலத்தில் நிலைத் திணைகளும் இயங்கு திணைகளும் ஊடாடி நிகழும் செய்திகளையே திணைகள் கூறுகின்றன. மனிதன் இதை நன்கு உணர வேண்டும் என்று தற்காலத்து அறிஞர்கள் கூறுகின்றனர். (A biome is the largest terrestrial ecological unit and is characterised by intercourse of flora, fauna and abiotic substances—Man in Nature—

Marston Bates) திணை என்பது தற்கால அறிவியல் கொள்கைப்படி "Zoogeographic area" என்று கூறலாம். ஏனென்றால் தற் காலம் இந்த அறிவியல் கொள்கையில் எதை எதை முக்கியமாகக் கருதினரோ அவைகளையே திணையிலும் அக்காலத்தில் சொல்லியிருக்கின்றனர். இதே கொள்கைப் படிகாட்சிச்சாலையில்கூட மனிதனைச் சூழ்நிலை யில் காட்ட வேண்டும் என்று அறிஞர்கள் வற்புறுத்துகின்றனர். (The Ecology of an area shows outstanding physico—graphic features of an area and demonstrates the area among its rocks, soils, climate, planks and animals including man as seen in larger habitat group — The World of Natural History— J. R. Sanders) அமெரிக்காவில் உள்ள இயற்கை வரலாற்றுக் கண்காட்சிச் சாலைகள் (Natural History Museums) இக் கருத்தையே அடிப்படையாகக் கொண்டு நிறுவப்பட்டுள்ளன. இவைகளைத் திணைக் கண்காட்சி என்று நாம் கருதலாம்.

இதுவரை கூறியதிலிருந்து சங்க காலத்தில் வழங்கிய திணைக்கொள்கையே அறிவியல் அடிப்படையில் எழுந்தது என் பதை உணரலாம். தற்காலம் மனிதனின் செய்கையால் இத்திணைகள் உருமாறிச் சில அழிந்தும் விட்டன. அதனால் இக்கொள்கை யின் அடிப்படைப் பெருமையை உணர முடியவில்லை. திணைகளில் கூறப்படும் கருப் பொருட் செய்திகள் பெரும்பாலும் அறிவியற் செய்திகளாகக் காணப்படுவதில் வியப்படை கிறோம். சங்க காலத்தில் கூறிய திணைச் சூழ்நிலையைஅப்படியேகண்காட்சிச் சாலையில் காட்ட முடியும். அந்த அளவு அறிவியல் விளக்கங்கள் சங்க நூல்களில் காண்கிறோம். ஆதலின் சங்க இலக்கியத்தில் இலக்கிய நயம் ஒருபகுதி என்றால் அறிவியல் விளக்கம் மற்றொரு பகுதி என்பதை உணர்ந்தால் தான் சங்க இலக்கியத்தின் முழு உருவத் தைக் காண முடியும் என்று துணிந்து சொல்லலாம்.

— — —

## முற்கால பிற்காலத் தமிழ்ப் புலவர்

*முற்காலத்து விளங்கிய செந்தமிழ் நல்லிசைப் புலவர்கள் தமதருமைச் செந்தமிழ் மொழியைத் தம் இன்னுயிரினும் விழுமிதாக ஓம்பிப், பொய் சிறிதுங் கலவா அறவுரையே பகருந் தமது நாவால் மெய்ப்பொருள்களையே நிரப்பிய பாக்களும் நூல்களும் அதன்கண் இயற்றி, அதனை மேன்மேல் உரம்பெற வளர்த்து வந்தனர். அதனால் அஃது அஞ்ஞான்று மலைமேல் ஏற்றிய நந்தாமணி விளக்குப்போல் தனது பொங்கு பேரொளியை எங்கணும் வீசி, இவ்வுலகின்கண்ணிருந்த மாந்த ரெல்லாருடைய அறிவுக்கண்ணையும் விளங்க விளக்கிற்று. மற்றுப் பிற்காலத்தே, அஃதாவது சென்ற அறுநூறு ஆண்டுகளாகத், தோன்றிய தமிழ்ப் புலவர்களோ பெரும்பாலுந் தம் முன்னோர் சென்ற நெறியே தேர்ந்து செல்லாதவர்களாய், அவர் சென்ற மெய்ந்நெறி பிழைத்துப், பொய்ந்நெறி ஏகித் தமதருமைச் செந்தமிழ் மொழியின் தூய்மையை ஓம்பாது, அதனைப் பிறமொழிச் சொற்களொடு கலந்து மாசுபடுத்திய தல்லாமலும், அதன்கண் மெய்யல்லாதனவும் முழுப் பொய்யும் மிடைந்து பாவும் நூலும் இயற்றி அதன் மெய்வழக்கினையும் பாழ்படுத்திவிட்டனர்.*

— **மறைமலையடிகள்**

**'முற்கால பிற்காலத் தமிழ்ப் புலவோர்' பக். 8.**

———

# எல்லாம் அவன் செயல்

[திரு. என். கே. வேலன், பி. ஏ.]

*குழந்தை வேலன் என்ற இயற் பெயரையுடைய திரு. என். கே. வேலன் சேலத்தையடுத்த பாகற்பட்டியில் 1907இல் பிறந்தவர். தமிழறிஞரான திரு. பா. வே. மாணிக்க நாயக்கர் இவர்தம் தாய்மாமனாராவர். சேலம் கல்லூரியிலும் சென்னை மாநிலக் கல்லூரியிலும் பயின்றவர். காவல் துறை பணியேற்று உதவி ஆணையராக ஓய்வு பெற்ற இவர் பணியாற்றும்போதே ஓய்வு நேரத்தையெல்லாம் தமிழ்ப் பணியில் ஈடுபடுத்தியவர். பின் ஏழு ஆண்டுகள் ஆத்தூர் தாரங்கதாரா ஆலையில் பணியாற்றினார். 'செந்தமிழ்ச் செல்வி'யில் கடந்த முப்பது ஆண்டுகளாக அறிவியல் கட்டுரைகள் எழுதி வருபவர். குழந்தைகளுக்காக இனிய எளிய நடையில் நூலெழுதும் திறன் மிக்கவர். 'கடலின் கதை' 'நிலவின் கதை' 'சென்னைச் சிலைகளின் கதை' போன்ற ஐம்பதுக்கு மேற்பட்ட குழந்தைகளுக்கான நூல்களையெழுதியுள்ள இவர் அண்மையில் 'காவல் துறை'யைப் பற்றிய அரிய நூலை எழுதினார். இவர் எழுதிய 'மின்சாரத்தின் கதை' தமிழக அரசின் பரிசு பெற்றது.*



கம்பியில்லாத் தந்தியைக் கண்டுபிடித்த மார்க்கோனி என்னும் பேரறிஞர் முதன் முதலாக அனுப்பிய செய்தியில் 'எல்லாம் அவன் செயல்' என்றார். உலகப் புகழ்பெற்ற ஐன்ஸ்டீன் என்னும் அறிவியல் அறிஞர் "நமக்கு உணர்ச்சி உண்டாக்குவதும், எண்ணத்தைத் தோற்றுவிப்பதும், செயல்களைத் தூண்டுவதும் ஆண்டவனருளால் நடைபெறுகின்றன" எனக் கூறுகின்றார்.

அறிவியல் அறிஞர்கள் அரும்பாடுபட்டுக் காணமுடியாத பொருள்களைக் கண்டுபிடிக்கின்றனர். இறைவன் அடியார்களுக்காகப் பல அற்புதங்களை நிகழ்த்துவதுடன் படைப்பின் அற்புதங்களை ஒவ்வொன்றாக வெளிப்படுத்துகின்றார்.

பறவைகள் வானத்தில் அழகாகப் பறந்து செல்வதைக் கண்ட மனிதன் நாமும் ஏன் அப்படிப் பறக்கக்கூடாது என்று முயற்சி செய்தான். 'பலூன்' என்ற பையில் வாயுக்களை அடைத்து அதில் ஏறிக் காற்றில் மிதந்து சென்றான். 'இதனால் என்ன பயன்' என்று பிராங்க்ளின் என்ற அறிஞரிடம் நண்பர் சிலர் கேட்டனர். அதற்கு அவர் "இப்பொழுதுதான் குழந்தை நடை பயில்கின்றது. பொறுத்திருந்து பார்க்கலாம்" என்றார். அவ் ஆராய்ச்சியின் பயனாக வானவூர்திகளும் ராக்கெட்டுகளும் கண்டுபிடிக்கப்பட்டன.

நாற்காலி என்பது மரத்தினாலான பொருள் என்று நாம் நினைக்கிறோம். ஆராய்ச்சியாளர் அஃது அணுக்களால் ஆகியது என்பர். அதில் மின் அணுக்கள் சுழன்று ஓடுவது அவருடைய கண்ணுக்குத் தெரியும். அசைவற்றதாகத் தோன்றும் பொருள் அவருக்கு அசையும் அணுக்களாகக் காட்சியளிக்கின்றது. கூத்தப்பெருமானின் தாண்டவத்தை அவர் அணுவிற்குள் காணுகின்றார். அணுவுக்குள் அணுவாகவும் அண்டங்களுக்கு அப்பாலும் நீக்கமற நிறைந்து நிற்கும் இறைவனை,

> "அண்டங்களெல்லாம் அணுவாக
> அணுக்களெல்லாம் அண்டங்களாகப்
> பெரிதாய்ச் சிறிதாயினும்
> அண்டங்களுள்ளும் புறமும் கரியாயினனும்"

எனப் போற்றுகின்றோம்.

> "தன்னருள் வெளிக்குளே அகிலாண்ட கோடி
> யெல்லாம்
> தங்கும் படிக்கிச்சை வைத்து
> உயிர்க்கு யிராய்த் தழைத்தது"

என வாழ்த்துகின்றோம்.

> "அருக்கனில் சோதி அமைத்தோன்,
> திருத்தகு மதியில் தண்மை வைத்தோன்

திண்டிறல் தீயில் வெம்மை செய்தோன்
பொய்தீர் வானில் கலப்பு வைத்தோன்
மேதகு காலில் ஊக்கம் கண்டோன்
நிழல்திகழ் நீரில் இன்சுவை நிகழ்ந்தோன்
வெளிப்பட மண்ணில் திண்மை வைத்தோன்''

என மணிவாசகர் இறைவனைப் போற்றுகின்றார்.

இயற்கையில் தோன்றும் சக்திகளை ஆராய்ந்து அறிவதற்கு விஞ்ஞானம் உதவுகின்றது. ஒருபொருள் எப்படி வந்தது? அதனை எவ்வாறு பயன் படுத்தலாம்? என்று ஆராய்ந்து பார்க்கிறோம். ஆராய்ச்சியாளர்கள் சுற்றிலுமுள்ள பொருள்களை நன்றாய்க் கவனித்து ஆய்வுகள் செய்து சில கொள்கைகளைக் கண்டு பிடிக்கின்றனர். நாளடைவில் பழைய கொள்கைகள் மாறிப் புதிய கொள்கைகள் தோன்றுகின்றன.

''பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே''

என்பது ஆன்றோர் வாக்கு.

புதிய கண்டு பிடிப்புகளால் நமது வாழ்க்கை முறையே மாறி விடுகின்றது. நூற்றைம்பது ஆண்டுகளில் விஞ்ஞானிகள் அடைந்துள்ள வெற்றி மிகவும் வியக்கத் தக்கதாக இருக்கின்றது. தொடக்கத்தில் காற்றின் சக்தியும் நீரின் சக்தியும் மனிதனுக்கு உதவியாக இருந்தன. பிறகு சில இயந்திரங்களைக் கண்டுபிடித்து விலங்குகளின் உதவியால் அவைகள் இயங்கும்படி செய்தான். நாளடைவில் பொருள்களை ஊன்றிக் கவனித்து எப்படி, ஏன் என்று ஆராய்ந்து அறிவியல் முறையில் பல உண்மைகளைக் கண்டுபிடித்தான். இவ் ஆராய்ச்சிகளினால் பல புதிய சக்திகள் கண்டுபிடிக்கப்பட்டன. அவற்றில் ஒன்று மின்சக்தியாகும். மின் ஆற்றலின் உதவியால் பல்வேறு மின்பொறிகள் இயக்கப்படுகின்றன. உணவு, உடை, உறையுள் முதலிய வசதிகளை நமக்கு மின்சக்தி அளிக்கின்றது. மனிதன் நிலவிற்குச் சென்று அங்குள்ள மண்ணையும் கல்லையும் பூமிக்குக் கொண்டு வந்து ஆராய்ச்சி செய்வதைக் காணுகின்றோம்.

நமக்குத் தெரியாத பொருள்கள் இன்னும் எவ்வளவோ இருக்கின்றன. நியூட்டன் என்னும் அறிஞர் புவிஈர்ப்பைக் கண்டுபிடித்தார். ஒவ்வொரு பொருளிலும் இழுக்கும் ஆற்றல் இருப்பது ஆராய்ச்சியாளர்களுக்குத் தெரியும். எதனால் அப்படி இழுக்கின்றது என்பது மட்டும் அவர்களுக்குத் தெரியாது. அண்டமெங்கும் இழுக்கும் சக்தியாக மறைந்து நிற்கும் பரம்பொருள் நம்மையும் சேர்த்து இழுக்கின்றது. ஒவ்வொரு பொருளும் அதற்குச் சொந்தமான பொருளைத் தன்னிடம் இழுக்கின்றது. ஞாயிறு தனக்குச் சொந்தமான கோள்களைத் தன்னிடம் இழுத்து வைக்கின்றது.

விண்வெளிப் பயணங்களால் என்ன பயன்? இந்த ஆய்வுகளில் ஏதேனும் நன்மைகள் உண்டா? இதில் கோடிக் கணக்காகச் செலவிடும் பணத்தை வேறு எதற்காவது பயன் படுத்தலாமே? என்றெல்லாம் கூறுகின்றனர். கனவிலும் நடக்க முடியாதவை எனக் கருதப்பட்டவை எல்லாம் உண்மையில் நடப்பதை நேரில் பார்க்கிறோம். வானவெளியில் கோடிக் கணக்கான அண்டங்கள் காணப்படுகின்றன. ஒவ்வோர் அண்டமும் நமது அண்டத்தினைப் போல் அகண்டாகாரமாக இருப்பினும் அவற்றின் இடைவெளி மிகவும் குறுகியதெனக் கூறுகின்றனர். மிகப்பெரிய தொலை நோக்கிகளுக்கும் தெரியாத அண்டங்கள் இருக்கின்றன எனவும் அவைகள் விரிந்து கொண்டே போகின்றன எனவும் கூறுவர்.

''அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன''

எனத் திருவாசகம் ஓதுகின்றது.

இரண்டு ஆண்டுகளுக்கு முன் ஆங்கில நாட்டு ஆராய்ச்சியாளர்கள் வானவெளியிலிருந்து ஒருவகையான ஒலி கேட்பதாகக் கூறினர். விஞ்ஞான அறிவுடன் ஏதோ செய்தி அனுப்புவது போலிருந்தது. ஆயினும் அது செய்தித் துறையினர்க்குத் தெரியாத புதுவகையான ஒலியாக இருந்தது. கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த 'மார்டின் ரைல்' என்னும் அறிஞர் ''வேறு உலகத்தினர் நம்முடன் தொடர்புகொள்ள முயல்கின்றனர்'' எனக் கூறினர். கோடிக் கணக்கான மைல்களுக்கு அப்பாலிருந்து வருவதால் அது மிகவும் மெல்லிய ஓசையாக இருந்தது. வேறு

உலகங்களில் நம்மைப்போன்ற உயிர்கள் இருக்கலாம் என்றும், அவ் உலகங்கள் மிகத் தொலேவிலிருப்பதால் அவற்றுடன் தொடர்புகொள்ள முடியவில்லை என்றும் அறிஞர்கள் கூறினர். நமது விஞ்ஞானம் நல்ல வளர்ச்சியடைந்தால் வான உலகங் களுடன் தொடர்பு வைத்துக் கொள்ளலாம்.

விண்வெளியில் சோதனைக் கூடங்கள் அமைப்பதற்கு ஏற்பாடுகள் செய்து வரு கின்றனர். வானவெளியில் ஆய்வுகள் நடத்துபவர்கள் அடிக்கடி பூமிக்கு வந்து போகவும் ஏற்பாடுகள் செய்கின்றனர். சில நாட்கள் நிலவில் தங்கி இருந்து ஆராய்ச்சிகள் நடத்துவதற்கு வேண்டிய வசதிகளும் செய்து கொடுப்பார்கள். நிலவுப் பரப்பில் பயணம் செய்வதற்கேற்ற வண்டி களும் செய்துள்ளனர். விண்வெளி ஆராய்ச்சி நிலையம் விரைவில் உருவாகும் என எதிர்பார்க்கப்படுகின்றது.

நூற்றுக்கணக்கான ராக்கெட்டுகளையும் ஆயிரக்கணக்கான பலூன்களையும் பறக்க விட்டுச் சோதனைகள் நடத்துகின்றனர். புற அண்டங்களிலிருந்து வரும் "காஸ்மிக்" கதிர்களைப் பற்றியும் "அயனுஸ்பியர்" என் னும் விண்வெளியைப் பற்றியும் ஆய்வுகள் செய்கின்றனர். உலகமெங்கணும் ஞாயிற் றினைப்பற்றிய ஆராய்ச்சிகள் இருபத்து நான்குமணி நேரமும் நடந்து கொண்டே இருக்கின்றன. பின்வரும் கேள்விகளுக்கு இன்னும் சரியான விடைகள் கண்டுபிடிக்கப் படவில்லை :—

(1) சூரியனுக்கும் பூமிக்கும் உள்ள தொடர்பு எப்படிப்பட்டது ?

(2) காற்றில் சுழற்சி எதனுல் ஏற்படு கின்றது ?

(3) கடலுக்குள் எத்தகைய மாறு தல்கள் ஏற்படுகின்றன ?

(4) பூமியின் வெப்பம் தணிந்து வரு கின்றதா ?

(5) பூமியின் முனைகளில் பனிக்கட்டி உருகிப் பெருவெள்ளம் ஏற்படுமா ?

(6) பூமியின் நிலப்பகுதிகள் இடம் பெயர்கின்றனவா ?

(7) பூமியில் காந்த சக்தி எப்படி வந்தது ?

(8) பூமியின் மேற்பரப்பு எங்ஙனம் இறுகியது ?

(9) புற அண்டங்களிலிருந்து வரும் 'காஸ்மிக்' கதிர்களால் எத்தகைய மாறு தல்கள் ஏற்படுகின்றன ?

நமது தலைக்கு மேலிருக்கும் வெட்ட வெளி இறைவன்றன் பேராற்றலை நமக்கு விளக்கிக் கொண்டிருக்கின்றது. சூரிய மண்டிலம் என்னும் பெரிய பரப்பில் நமது உலகம் ஒரு தூசுக்குச் சமமாகும். வானப் பெருவெளியில் சூரிய மண்டிலம் ஒவ்வொன் றும் ஒரு புள்ளியாக ஒடுங்கி விடுகின்றது. நமது தலைக்குமேல் தென்படும் வானம் கோடானுகோடி அண்டங்களைத் தன்ன கத்து அடக்கிவைத் திருப்பதை எண்ணிப் பார்த்தால் நமது மனம் அகண்டாகாரத்தில் விரிந்து ஓடுகின்றது.

கடலிலிருந்து எவ்வளவு நீரை எடுத் தாலும் கடலின் நிறைவு குறைவதில்லை. எத்தனை ஆறுகள் வந்து அதனுள் புகுந்தா லும் மாறுதல் ஏற்படுவதில்லை. அஃதே போன்று இறைவன் எங்கும் நிறைந்து நின்று அருள்மழை பொழிகின்ருன்.

*"எத்தனையோ அண்டத்து*
*இருந்தவர்கள் எத்தனைபேர்*
*அத்தனைபேர் உண்டாலும்*
*அணுவும் குறையாண்டி"*

எனப் பட்டினத்தார் பாடுகின்ருர்.

அறிவியல் அறிஞர்கள் கடவுள் உணர்ச்சியுடன் இடைவிடாது ஆராய்ச்சிகள் செய்து புதிய உண்மைகளைக் கண்டு பிடிப்பார்கள். ஊக்கமுடையவர்கள் தமது ஊக்கத்தை ஒவ்வொரு சிறு செயலிலும் காட்டுவார்கள். அவர்கள் எதையும் புறக் கணிப்பதில்லை. இடையூறுகளைக் கண்டு மனம் தளர்வதில்லை. நாளைக்கென்று எதை யும் ஒத்திவைப்பதில்லை. செயலாற்றுவதில் உறுதியுடன் நின்று எண்ணியதை எண்ணிய வாறு செய்து முடிக்கின்றனர். இறைவனது அருளும் அவர்களுக்குத் துணையாக நிற் கின்றது.

*'எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்*
*திண்ணிய ராகப் பெறின்"* —குறள்

---

# இந்து சமய அறநிலையங்களின் ஆட்சிமுறை வரலாறு

[திரு. அ. உத்தண்டராமன் ஐ.ஏ.எஸ். (ஓய்வு)]

*திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த ஒட்டப்பிடாரத்தில் தோன்றியவர் இவர். 13-4-1905 இல் திருவாளர் அய்யாசாமிப் பிள்ளை என்பாருக்குத் தவப் புதல்வராகத் தோன்றிய இவர் திருநெல்வேலி இந்துக் கல்லூரியிலும் திருச்சியிலும் சென்னையிலும் பயின்று பி.ஏ பி.ல் பட்டம் பெற்று அரசுப் பணியை மேற்கொண்டார். பலமாவட்டங்களில் மாவட்ட ஆட்சித் தலைவராகச் சிறப்பாகப் பணியாற்றிய இவர் சென்னை அறநிலையத்துறை ஆணையராகப் பெரும்பணியாற்றினர். இவர்தம் ஆட்சிக்காலத்தில் பல பாடல்பெற்ற திருக்கோயில்களில் அவ்வக் கோயிலுக்குரிய நால்வர் திருப்பாடல்களை வெண் பளிங்குக் கல்லில் பொறிக்கச் செய்தார். இவர் ஆட்சிக் காலத்தில் சைவத்தைப் பரப்புதற்குத் 'திருக்கோயில்' என்ற இதழைத் தொடங்கினர். சைவமும் தமிழும் செழித்து வளர வேண்டுமென அரும்பாடுபட்டவர். அரசுப்பணியினின்று ஓய்வு பெற்றபின் ஏ. எம். எம் அறநிலையங்களை மேற்பார்க்கும் பணியில் ஈடுபட்டிருந்தார்.*



திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகப் பொன்விழா மலரில் சென்ற ஐம்பது ஆண்டுகளில் நமது ஒப்பற்ற கருவூலங்களாக விளங்கும் திருக்கோயில்கள் அறநிலையங்களின் ஆட்சிமுறை பற்றிய சட்டங்களில் ஏற்பட்டுள்ள மாறுதல்களை ஆராய்வது பொருத்தமாகவும் பயனுள்ளதாகவும் இருக்கும். இப்போதுள்ள சட்ட அமைப்பின் வரலாற்றைச் சற்று விளக்கமாக ஆராய்வதற்கு முன் நமது கோயில்களும் ஏனைய அறநிலையங்களும் எவ்வாறு பண்டைய காலத்தில் இயக்கப் பெற்றன என்பதை ஓரளவு தெரிந்து கொள்வது நன்று.

புதைபொருள் ஆராய்ச்சி மூலம் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சிவலிங்க வழிபாடு நம்நாட்டில் இருந்ததென்று தெரிகிறது. இஃது உலகறிந்த உண்மை. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு மதுரை, திருவரங்கம், சிதம்பரம், திருவேங்கடம், திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், திருத்தணி, பழமுதிர்சோலை முதலிய திருத்தலங்கள் இருந்ததைச் சங்க இலக்கியங்களிலிருந்து அறிகிறோம். அக்காலத்திலேயே பெருந் திருக்கோயில்கள் இருந்தன என்றாலும் அவை எவ்வாறு ஆட்சி செய்யப்பட்டன என்பதற்குப் போதிய சான்றுகள் கிடைக்கவில்லை. ஆனால் அரசர்கள் மிக்க தெய்வ பக்தியுடன் விளங்கினர் என்பதற்குச் சங்க இலக்கியங்களில் தக்க சான்றுகள் உள்ளன.

ஆலமர்செல்வன் கோயில்கள் மரங்களின் அடிகளிலேயே முதல் முதல் தோன்றிப் பின்னர்க் களிமண் செங்கல் மரங்கள் போன்றவைகளால் கட்டப்பெற்றன. கி. பி. ஆறும் நூற்றாண்டுக்குப் பின்னர்ப் பல்லவர் ஆட்சிக்காலத்தில் குகைக் கோயில்கள் அமைக்கப் பெற்றன. அவைகளில் சில இன்னும் திருச்சிராப்பள்ளி, சித்தன்னவாசல், மாமண்டூர், வல்லம், மகாபலிபுரம் முதலிய இடங்களில் உள்ளன. பின்பு கற்களைக்கொண்டு கற்றளிகள் கட்டப்பட்டன. காஞ்சிக் கைலாசநாதர் கோயில், மகாபலிபுரம் கடற்கரைக் கோயில் முதலியன கற்கோயில்கள். பல்லவர்களுக்குப் பின் சோழமன்னர்கள் கி. பி. ஒன்பதாம் நூற்றுண்டு முதல் பதின்மூன்றும் நூற்றுண்டு வரை ஆயிரக்கணக்கான திருக்கோயில்களைக் கட்டினர். அவ்வரசர்கள் வாழ்ந்த அரண்மனைகள் இப்போதில்லை. ஆனால் திருக்கோயில்கள் இன்றும் அவர்கள் புகழைப் பரப்பிக் கொண்டிருக்கின்றன,

திருக்கோயில்களின் ஆட்சிப்பொறுப்பு சபையாரிடம் இருந்தது. பெருந்திருக் கோயில்களைக் கவனிக்க அமிர்த கணத்தார் இருந்தனர். கோயில்களுக்கு விடப்பட்ட நிலங்கள் தேவதானம் எனப்பட்டன. கோயில்களை அடுத்து மடங்கள் இருந்தன. பழங்கோயில்களில் உள்ள கல்வெட்டுக்கள் மூலம் பூசனைகள், திருவிழாக்கள், விளக் கேற்றுதல், பழுதுபார்த்தல், திருப் பதிகங்கள் விண்ணப்பித்தல் முதலியவற்றிற் காகப் பல தானங்கள் வழங்கப் பெற்ற வரலாறு காணக்கிடக்கின்றது. சில கோயில் களுக்கு ஆட்சிக் குழுவினர் இருந்தனர். கணவாரியப் பெருமக்கள் ஸ்ரீ காரியம் செய் பவர் எனப் பலவிதப் பெயர்கள் வழங்கின. கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள கோயில் மேற்பார்வையாளர் இன்றும் ஸ்ரீ காரியம் என்றே அழைக்கப் படுகின்றனர். கோயில் கருவூலத்துக்கு ஸ்ரீ பண்டாரம் என்று பெயர். கோயில் நகைகள் முதலிய பொருள்களைக் கணக்கெடுத்து மதிப்பெழுதி யவர்கள் ஸ்ரீ பண்டாரிகள் என அழைக்கப் பட்டனர். இன்றும் நம் மாநிலத்தில் அத் தகைய அதிகாரிகள் (Verification Officers) அப்பணியைச் செய்கிறார்கள்.

பிற்காலத்தில் விசயநகர மன்னர், மராட்டிய மன்னர் ஆட்சியிலும் பல கோயில்கள் கட்டப்பெற்றும் பழுது பார்க்கப் பெற்றும் வந்தன. அம் மன்னர்களும் ஹைதர்அலி போன்ற முகம்மதிய மன்னர் களும் பல நிவந்தங்கள் ஏற்படுத்தியிருக் கின்றனர்.

கிழக்கு இந்தியக் கம்பெனியார் காலத் தில் 1817ஆம் ஆண்டு ரெகுலேஷன் படி அறநிலையங்கள் அவர்கள் மேற்பார்வையில் இருந்தன. விக்டோரியா மகாராணியார் சமயத்துறையில் அரசாங்கம் தலையிடு வதில்லை என்று அறிவிப்புச் செய்த பின்னர் ஊரார்வசமே கோயில்களின் ஆட்சிப் பொறுப்பு விடப்பட்டது. தக்க மேற்பார்வை யின்மையாலும் பூசல்களினாலும் கோயில் களின் நிலைமை சீர்குலைந்தது. கி. பி. 1842 முதல் 1863 வரை ரெவின்யூபோர்டு மேற் பார்வையில் மாவட்டக் கலெக்டர்கள் கோயில் நடைமுறைகளைக் கவனித்து வந்தனர். ஆனால் நிலைமை, சீரடையவில்லை. கி. பி. 1817ஆம் ஆண்டு ரெகுலேஷனை எடுத்து விட்டு 1863 ஆம் ஆண்டு ஒரு சட்டம் இயற்றித் தேவஸ்தானக் கமிட்டிகள் ஏற்படுத்தப்பட்டன. அப்படியும் நிலைமை சீரடையவில்லை. பின்னர்த் தக்கதொரு சட்ட மியற்ற பற்பல முயற்சிகள் செய்யப்பட் டன. ஆனால் அவை நற்பயனளிக்க வில்லை.

கி. பி. 1925 ஆம் ஆண்டு அந்நாள் சென்னை மாநில முதலமைச்சராக இருந்த பனகல் அரசரின் பெருமுயற்சியால் (Act I of 1925) இந்துமத அறநிலையப் பாது காப்புச் சட்டம் நடைமுறைக்குக் கொண்டு வரப்பட்டது. அதன்கீழ் நான்கு ஆணையர் களையும் ஒரு தலைவரையும் கொண்ட ஆட்சிக் குழு அமைக்கப் பெற்றது. அக்குழுவின் முதல் தலைவர் ஓய்வு பெற்ற உயர்நீதி மன்ற நீதிபதி சதாசிவையர். முதன்முதல் அற நிலைய ஆட்சி சம்பந்தமாக ஏற்பட்ட தனி முழுச்சட்டம் இதுவே. இந்த ஆட்சி முறைக்கு வேண்டிய செலவுத் தொகை கோயில்கள், மடங்கள், அறநிலையங்கள் முதலியவற்றின் நிகர வருமானத் தொகை யில் வருவாய்க்குத் தக்கவாறு குறிப்பிட்ட சதவிகிதத்தில் வசூலிக்கப்பட்டது. நாளடை வில் பல சீர்திருத்தங்கள் செய்யப்பெற்றன. 1925ஆம் ஆண்டு செய்யப்பட்ட சட்டத்தில் பல பிரிவுகள் செல்லுபடி யாகாதவை என்று நீதி மன்றங்களில் பல தீர்ப்புகள் வெளி வந்ததை யடுத்து அந்தச் சட்டத்தைத் தக்கமுறையில் மாற்றிப் புதிதாக 1927 ஆம் ஆண்டு (Act II Of 1927) ஒரு சட்டம் இயற்றப்பட்டது.

ஆட்சிக்குழு ஆணையர்கள் ஒவ்வொரு வரும் ஒவ்வொரு பாகத்தில் உள்ள கோயில் களின் நடைமுறைகளைக் கவனித்து வந்தனர். தலைவர் மேலாளராக இருந்த துடன் சில பெருந்திருக் கோயில்களைத் தாமே நேர் மேற்பார்வையில் வைத் திருந்தார். மாநிலத்தைப் பகுதிகளாகப் பிரித்து ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு கோயில் குழு அமைக்கப்பட்டது. அக்குழுக்கள் மூலம் ஒவ்வொரு கோயிலுக்கும் அறங் காவலர்கள் ஏற்படுத்தப்பட்டனர். 1927ஆம் ஆண்டு சட்டம் II அடிப்படைச் சட்டத்தில் கீழ்க்கண்ட சட்டங்களின் மூலம் பல திருத் தங்கள் செய்யப்பட்டன.

1928ஆம் ஆண்டுச் சட்டம் I மூலம் கோயில்குழுக்களின் உறுப்பினர்களை இரண்டு

ஆண்டுகளுக்கு அரசாங்கமே ஏற்பாடு செய்யவும் அதன்பின் தேர்தலுக்கு ஏற்பாடு செய்யவும் சட்டம் இயற்றப்பட்டது.

1929ஆம் ஆண்டுச் சட்டம் V மூலம் 44 வது பிரிவின் கீழ் தேவதாசி மான்ய நிலங்களை இனம் நிபந்தனைகளிலிருந்து விலக்கவும் பட்டாச்செய்து கொடுக்கவும் திருத்தம் செய்யப்பட்டது. 1930ஆம் ஆண்டுச் சட்டம் IVஇன் கீழ் வருமானவரையறையேதுமின்றி எல்லாக் கோயில்களும் சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு ஆட்சிசெய்யப்பட வேண்டுமென்ற திருத்தம் செய்யப்பட்டது. ஆட்சிக்குழுவினர் தங்கள் தீர்ப்புக்களில் செலவுத்தொகைக்கும் சேர்த்து நியாயம் வழங்க உரிமை கொடுக்கப்பட்டது. 1931 ஆம் ஆண்டுச்சட்டம் XI இன்கீழ்க் கோயில் குழுக்கள் தேர்ந்தெடுக்படாதவரை அந்தக் குழுக்களின் அதிகாரம் ஆட்சிக்குழுவுக்கு அளிக்கப்பட்டது. ஆட்சிக் குழுவுக்குக் கோயில்கள் மடங்கள் மற்றும் அறநிலையங்களிலிருந்து வர வேண்டிய தொகைகளை நிலவரிப்பாக்கியை வசூலிப்பது போல் கலெக்டர்கள் மூலம் வசூலிக்கும் உரிமை வழங்கப்பட்டது. 1934 ஆம் ஆண்டு XI சட்டத்தின் கீழ் 44 B என்ற புதுப்பிரிவின் மூலம் கோயில்கள் மடங்கள் மற்றும் அறநிலையங்களின் பணிகளுக்காக விடப்பட்ட மான்யங்கள் குறிப்பிட்ட பணிகள் செய்யப்படாமல் நின்று விட்டால் மீண்டும் அந்த நிலையங்களுக்கே கொடுக்கப்பட்டு அந்தப் பணிகளை மீண்டும் செய்விப்பதற்காக வேறொருவருக்கு மான்யமாகக் கொடுக்கும் உரிமை வழங்கப்பட்டது.

1935 ஆம் ஆண்டுச் சட்டம் XIIஇன் கீழ் ஆட்சிக் குழுவினர் கோயில் நிர்வாகம் சம்பந்தமாகத் திட்டங்கள் வகுக்க அதிகாரம் கொடுக்கப்பட்டது. நீதிமன்றங்கள் மூலம் ஏற்பட்ட திட்டங்கள் சிலவற்றில் இருந்த நிபந்தனைகள் நடைமுறையில் பல சிக்கல்களை உண்டாக்கியதால் நல்லமுறையில் நிர்வாகத்தைத் திருத்தி அமைக்கும் பொருட்டு நிர்வாக அதிகாரிகளை நியமிக்கும் உரிமையுடன் பிரகடனம் செய்து அக் கோயில்களைத் தனிக் கவனத்துடன் நிர்வகிக்கும் அதிகாரம் அரசாங்கத்துக்கு வழங்கப்பட்டது. பரம்பரை உரிமை கொண்டாடிய நிலையங்கள் நன்றாக நடத்தப் பெறுவிடில் பரம்பரை உரிமையாளர்களுடன் வேறு அறங்காவலர்களை நியமிக்கும் உரிமையும் நிர்வாக அதிகாரிகளை நியமிக்கும் அதிகாரமும் ஆட்சிக்குழுவுக்குக் கொடுக்கப்பட்டது. 1938ஆம் ஆண்டுச் சட்டம் XX மூலம் மாமூலாகக் கோயில்களில் அனுமதிக்கப்படாமல் இருந்த சமூகத்தினரைக் கோயில்களுக்குள் செல்ல அனுமதியளிக்கும் அதிகாரம் அறங்காவலர்களுக்கு வழங்கப்பட்டது.

1939ஆம் ஆண்டுச் சட்டம் XXII மூலம் மதுரை மீனாட்சி சுந்தரேசுரர் கோயிலிலும் மதுரை, திருநெல்வேலி, தஞ்சாவூர் மாவட்டங்களிலுள்ள வேறு சில கோயில்களிலும் அரிசனங்கள் உள்பட எல்லா இந்துக்களும் கோயில்களுக்குள் சென்று வழிபட்டதை உறுதி செய்யும் வகையில் சட்டத்தில் சீர்திருத்தம் செய்யப்பட்டது.

1944ஆம் ஆண்டுச் சட்டம் Vஇன் மூலம் ஓய்வுபெற்ற உயர்நீதி மன்ற நீதிபதி திரு. P. வெங்கடரமணராவ் அவர்கள் தலைமையில் நியமிக்கப்பட்ட குழுவின் சிபார்சுகளில் முக்கியமானவை சட்டத்தில் இடம் பெற்றன. கோயில் குழுக்கள் நீக்கப் பெற்றன. அவர்கள் செய்து வந்த காரியங்களை உதவி ஆணையர்கள் செய்தனர். அறநிலையங்களின் நிகர வருமானத்தின் மீது 3 சதவிகிதம் உச்சவரம்பு வரி ஏற்படுத்தப்பட்டது.

1946ஆம் ஆண்டுச்சட்டம் Xஇன் மூலம் வெங்கடரமணராவ் குழுவின் சிபார்சுகள் மேலும் சில ஒப்புக்கொள்ளப்பட்டன. சென்னை மாநகரத்தில் உள்ள அறநிலையங்கள் முன்பு அறநிலையப் பாதுகாப்புச் சட்டத்துக்கு உட்பட்டிருக்க வில்லை. அவைகளும் அறநிலையப் பாதுகாப்புச் சட்டத்துக்கு உட்பட்டவைகளாகச் சேர்க்கப்பட்டன. சமய சம்பந்தமான கட்டளைகள் அழிந்து போன கோயில்களைச் சேர்ந்தவைகளாக இருந்தால் அப்படிப்பட்ட கோயில்களை மீண்டும் கட்டவும் அல்லது அந்தக் கட்டளைகளைத் தக்க அறவழியில் பயன்படுத்தவும் ஆட்சிக்குழுவுக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. கோயில்கள், மடங்கள், இதர அறநிலையங்களின் கணக்குகளைத் தக்கமுறையில் தணிக்கை செய்யவும் அறங்காவலர்களின் கவனமின்மையாலோ கையாடலாலோ அறநிலையங்களுக்கு இழப்பு

ஏற்பட்டால் அந்த இழப்பை ஈடுசெய்ய அறங்காவலர்களிடமிருந்து உரிய தொகையை வசூலிக்கும் அதிகாரம் வழங்கப்பட்டது. நீதிமன்றங்களின் திட்டங்கள் மூலம் ஏற்படுத்தப்பட்ட அதிகாரிகளின் நிர்வாகம் ஆட்சிக்குழுவுக்கு மாற்றப்பட்டது. 1000 ரூபாய்க்கு மேல் வருமானமுள்ள கோயில்களின் கணக்குகளைத் தணிக்கை செய்யத் தனியாகக் கட்டணம் விதிக்கும் அதிகாரமும் வழங்கப்பட்டது.

1947ஆம் ஆண்டுச் சட்டம் Vஇன் மூலம் பழக்கவழக்கங்கள் காரணமாக மாமூலாகச் சில இனத்தினருக்கு விதிக்கப் பட்டிருந்த தடைகள் நீக்கப்பட்டன.

மேற்கண்டவாறு பல தடவைகள் திருத்தம் செய்யப்பட்ட சட்டப்பிரிவுகளை மீண்டும் ஆராய்ந்து ஆட்சிக் குழுவுக்குப் பதிலாக ஆணையர், துணை ஆணையர்கள், உதவி ஆணையர்கள் மூலம் ஆட்சித்துறையமைக்கும் நோக்கத்துடன் அறநிலையப் பாதுகாப்புத்துறை என்ற தனித்துறையொன்று அரசாங்கத் துறையாகச் சேர்க்கப் பட்டது. பழைய சட்டங்களை எல்லாம் நீக்கி விட்டுப் புதிதாக 1951ஆம் ஆண்டின் சட்டம் XIX இயற்றப்பட்டது. மாநிலத்தின் தலைநகரிலிருந்த ஆட்சிக்குழுவின் அலுவலகத்திலேயே முன்பெல்லாம் வழக்குகள் விசாரிக்கப்பட்டன. தஞ்சாவூர், கோயமுத்தூர் முதலிய இடங்களில் துணை ஆணையர்களின் அலுவலகங்கள் அமைக்கப்பெற்று அங்கேயே வழக்குகளை விசாரிக்க வழி செய்யப்பட்டதால் மக்களுக்குப் பெரிதும் உதவியாக இருந்தது.

சமயச்சார்பற்ற இதர அறநிலையங்கள் நல்ல முறையில் நடத்தப்படா விட்டாலும் அவைகளின் வருமானம் தக்க முறையில் செலவிடப்படாமல் ஒழுங்கீனமாக நடத்தப் பட்டாலும் அவைகளின் நிர்வாகத்தையும் அறநிலையப் பாதுகாப்புத் துறையினரின் மேற்பார்வையில் எடுத்துக்கொள்ள அரசாங்கத்துக்கு அதிகாரம் வழங்கப்பட்டது. கீழ்க் கண்ட பொருள்கள் குறித்து நீதிமன்றங்களுக்குச் செல்லும் உரிமை நீக்கப்பட்டு ஆட்சித் துறையினருக்கே தனி அதிகாரம் வழங்கப்பட்டது.

(1) அறங்காவலர்களை நியமித்தல், நீக்குதல்.

(2) திட்டங்களை ஏற்றுக்கொள்ளல்.

(3) கூடுதல் தொகைகளைப் பயன்படுத்துதல்.

(4) அறநிலையங்கள் சம்பந்தப்பட்ட உரிமைகள்.

(5) மடங்களின் நிர்வாக முறையை ஒழுங்குபடுத்தவும், ஒழுங்கீனங்களுக்காக மடங்களின் சொத்து நிர்வாகத்தைப் பாதுகாக்கவும் நிர்வாக அதிகாரிகள் நியமித்தல்.

அறநிலையங்களின் சொத்துக்கள் பிறர் வசமிருந்தால் அவைகளை மீட்டுக் கொடுக்க மாஜிஸ்ட்ரேட்டுகளுக்கு அதிகாரம் வழங்கப் பட்டது.

ஆண்டு வருமானம் 20,000 ரூபாய்க்கு மேற்பட்ட கோயில்கள் துணை ஆணையர்கள் மேற்பார்வையில் இருந்தன. அக் கோயில்களின் அறங்காவலர்களை நியமிக்கும் அதிகாரம் ஆணையருக்கு அளிக்கப்பட்டது. மற்றைக் கோயில்களுக்கு அறங்காவலர்கள் நியமிக்கும் அதிகாரம் அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட வட்டாரக் குழுவினருக்கு (Area Committee) அளிக்கப் பட்டது. இந்தக் குழுவிற்கு உதவி ஆணையர் தலைவராகப் பணியாற்றினர். நீதி மன்றங்கள் மூலம் ஏற்பட்ட திட்டங்களில் திருத்தங்கள் செய்யவும் அதிகாரம் நீதி மன்றங்களுக்கே இருந்ததை மாற்றித் திட்டங்கள் நிச்சயிக்கவும் திருத்தவும் துணை ஆணையர்களுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது.

'சிரூர் மட வழக்கு' என்ற வழக்கு டில்லி தேசீய உயர்நீதி மன்றத்து வரை சென்று அதன் விளைவாகப் பல சட்டப் பிரிவுகள் செல்லுபடியாகா வெனத் தீர்ப் பளிக்கப்பட்டது. அந்தத் தீர்ப்புக்கு இணங்க 1954ஆம் ஆண்டுச் சட்டம் XXVIIஉம் 1956ஆம் ஆண்டுச் சட்டம் IXஉம் இயற்றப் பெற்றன.

1951ஆம் ஆண்டிலிருந்து அறநிலையப் பாதுகாப்புத்துறை என்ற தனி அரசாங்கத் துறை அமைக்கப் பெற்றாலும் கோயில்களின் நிர்வாகப் பொறுப்பை ஏற்றிருந்த நிர்வாக அதிகாரிகள் அரசாங்க ஊழியர்களாக ஆக்கப்படவில்லை. நடைமுறையில் உயர்நீதி மன்றத் தீர்ப்புகளுக்கிணங்கப் பல திருத்

தங்கள் செய்யப்பட வேண்டிய அவசியமும் ஏற்பட்டது. எனவே பழைய சட்டங்களைத் திருத்தி ஒழுங்குபடுத்திப் புதியதாக 1959 ஆம் ஆண்டு XXIIஆவது சட்டம் நிறைவேற்றப்பட்டது. இச் சட்டமும் இச் சட்டத்தில் செய்யப்பட்டுள்ள திருத்தங்களுந்தாம் இப்போது வழக்கில் இருப்பவை.

பலமுறை திருத்தப்பட்டுள்ள இச் சட்டத்தின் சிறப்பியல்புகள் பின் வருமாறு:

(1) நிர்வாக அதிகாரிகள் அரசாங்க அலுவலர்களாக ஆக்கப்பட்டுள்ளனர்.

(2) நீதித்துறையில் நீதிபதியாக உள்ள உயர் அதிகாரி ஒருவராவது துணையாணையராகவோ ஆணையராகவோ நியமிக்கப்பட வேண்டும்.

(3) மடங்களுக்கும் பரம்பரை உரிமை பெற்ற அறங்காவலருக்கும் நீதிமன்றங்களின் தீர்ப்புகளுக்கிணங்க உரிமைகள் அளிக்கப்பட்டுள்ளன. மடங்கள் பற்றிய தனிப்பிரிவுகள் இயற்றப்பட்டு மடங்களுக்குத் திட்டங்கள் நிச்சயிக்கும் அதிகாரம் ஆணையருக்கு அளிக்கப்பட்டுள்ளது.

(4) வட்டாரக் குழுக்கள் நீக்கப்பட்டு உதவி ஆணையர்கள் இக்குழுவின் பணியைச் செய்து வருகிறார்கள்.

(5) இச்சட்டத்தின் பரிபாலனத்துக்குப் பொறுப்பு வகிக்கும் அமைச்சரைத் தலைவராகவும் அரசாங்கச் செயலாளராயும் ஆணையராயும் அரசாங்கத்தாரால் நியமிக்கப்பட்ட பன்னிருவரையும் உறுப்பினர்களாகவும் கொண்ட ஆலோசனைக் குழு ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.

(6) கோயில்கள் சம்பந்தப்பட்ட ஆக்கிரமிப்புகளை நீக்கும் அதிகாரம் துணை ஆணையர்களுக்கு வழங்கப்பட்டுள்ளது.

(7) இந்து மத அறக்கட்டளைகள் தங்கள் கூடுதல் நிதிகளிலிருந்து கொடுக்கும் உதவித் தொகைகளைக் கொண்டு பொதுநல நிதி ஒன்றை ஏற்படுத்துவதற்கு ஆணையருக்கு அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது. கூடுதல் தொகைகளிலிருந்து பொதுநலப் பணிகளுக்கு உதவி புரியும் முறைகளும் வகுக்கப் பெற்றுள்ளன.

(8) வருவாய்க்குத் தக்கவாறு கட்டண விகிதம் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. பல கோயில்களைப் பழுது பார்த்துத் திருப்பணி குடமுழுக்குச் செய்வதற்காக ஏராளமான தொகை அரசாங்க மானியமாக வழங்கப் பெற்றிருக்கிறது. கோயில்களின் உபரி நிதியிலிருந்தும் பொதுமக்கள் நன்கொடைகளைக் கொண்டும் பல நூற்றுக் கணக்கான கோயில்கள் செப்பனிடப் பெற்றும் திருப்பணிகள் குடமுழுக்குகள் நடத்தப்பட்டும் இருக்கின்றன. பாடல்பெற்ற பல சிவத் தலங்களிலும் ஆழ்வார்களால் மங்களா சாசனம் செய்யப் பெற்ற பல திருப்பதிகளிலும் தேவார திருவாசக பெரியபுராண திவ்வியப் பிரபந்தப் பாடல்களும் முருகன் தலங்களில் திருப்புகழ்ப் பாடல்களும் கற்களில் பொறித்து வைக்கப் பெற்றுள்ளன. சில கோயில்களில் கூட்டுறவு உழவுப் பண்ணைகளும் பால் பண்ணைகளும் சித்த வைத்தியசாலைகளும் தேவாரப் பாடசாலைகளும் திருமண மண்டபங்களும் பயணிகள் விடுதிகளும் கல்லூரிகளும் உயர்நிலைப் பள்ளிகளும் மாணவ விடுதிகளும் நூல் நிலையங்களும் நடத்தப்படுகின்றன. பழனியில் நாதசுர இசைப் பயிற்சிக் கல்லூரி நடத்தப்படுகிறது. பல கோயில்களுக்கு வரலாறுகள் எழுதப்பட்டும் கோயில்கள் சம்பந்தப்பட்ட பல நூல்கள் வெளியிடப்பட்டும் உள்ளன. கோயில்களிலுள்ள விலையுயர்ந்த நகைகள் மற்றும் சாமான்களை மதிப்பிடவும் தணிக்கை செய்யவும், தனியே உதவி ஆணையர்கள் நியமிக்கப் பட்டுள்ளனர். சமய சம்பந்தமான கட்டுரைகளுடன் 'திருக்கோயில்' என்னும் திங்கள் இதழ் 2-1-1958 முதல் ஆணையர் அலுவலகத்திலிருந்து வெளியிடப் பெறுகிறது.

**கன்னியாகுமரி மாவட்டமும் செங்கோட்டைப் பகுதியும்**

கன்னியாகுமரிப் பகுதி சுமார் 1,000 ஆண்டுகளுக்கு முன் பாண்டிய மன்னர் ஆட்சியில் இருந்தது. பாண்டியன் அணை பாண்டியர் கால்வாய் என்ற பெயர்கள் இதற்குச் சான்று பகர்கின்றன. 19ஆம் நூற்றுண்டில் ஆர்க்காட்டு நவாபு காலத்தில் இப்பகுதி திருவிதாங்கூர் அரசருக்குக் கொடுக்கப்பட்டது. 15-8-47இல் இந்தியா சுதந்திரம் பெற்ற பின் 1-7-49இல் திருவி

தாங்கூர்-கொச்சி மாநிலம் அமைக்கப் பெற்றது. 1-11-56இல் மொழிவாரியாகக் கேரளம், சென்னை மாநிலங்கள் அமைக்கப் பெற்றபோது கன்னியாகுமரி மாவட்டமும் செங்கோட்டைப் பகுதியும் சென்னை மாநிலத் துடன் இணைக்கப் பெற்றன. 1812 ஆம் ஆண்டு வரை ஒவ்வொரு கோயிலும் தனி நிர்வாகத்தில் இருந்தது. 1812 இல் இராணி லட்சுமிபாய் காலத்தில் கோயில் சொத்துக்களை அரசாங்கம் எடுத்துக் கொண்டு நிர்வாகத்துக்கு வேண்டிய நிதி அரசாங்கத்தாரால் வழங்கப்பட்டது. 10 நூறுயிர ரூபாயிலிருந்து படிப்படியாக 51 நூறுயிர ரூபாயாக உயர்த்தப்பட்டது. சென்னை மாநிலத்தில் சேர்க்கப்பட்ட கோயில்கள் நிர்வாகத்துக்காக ஆண்டு ஒன்றுக்கு 13½ நூறுயிர ரூபாய் சென்னை அரசாங்கம் கொடுத்து வருகிறது.

கன்னியாகுமரிப் பகுதியில் உள்ள கோயில்கள் கேரள மாநிலத்தில் இருந்த போது கேரள தேவஸ்வ சபையினரால் 1950 ஆம் ஆண்டு திருவாங்கூர் கொச்சி இந்து சமய நிலையச் சட்டம் XV இன் கீழ் நிர்வகிக்கப்பட்டன. அந்தச் சட்டத்தை யொட்டி சென்னை மாநில 1959 ஆம் ஆண்டுச் சட்டம் XXX இயற்றப்பட்டது. இச்சட்டத்தின் கீழ் கன்னியாகுமரி மாவட்டம் செங்கோட்டைப் பகுதிகளில் உள்ள 454 கோயில்கள் தேவஸ்வம் சபையின் நிர்வாகத்தில் உள்ளன. தேவஸ்வம் சபையின் தலைவரையும் ஓர் உறுப்பினரையும் அரசாங்கம் நியமனம் செய்யும். மூன்றுவது உறுப்பின ரைத் திருவாங்கூர் அரசர் நியமிப்பார். கன்னியாகுமரி உதவி ஆணையர் சபையின் செயலாளராக இருக்கிறார். 3 ஆண்டுகளுக்கு ஒருமுறை சபை திருத்தியமைக்கப்படும். தேவஸ்வம் சபையின் கீழுள்ள கோயில்கள் தவிர மற்றைக் கோயில்கள் 1959 ஆம் ஆண்டுச் சட்டம் XXII இன் படி கண் காணிக்கப்படும்.

கன்னியாகுமரி தேவஸ்வம் சபையின் கீழ் உள்ள கோயில்கள் 5 தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு கோயிலுக் கும் தகுதிக்கேற்ப மேலாளர், ஸ்ரீகாரியம் சந்திரம் என்ற நிர்வாக அதிகாரிகள் நியமிக்கப் பெற்றுள்ளனர். திருப்பணி வேலைகளைச் செய்ய மராமத்து அலுவலர் உள்ளனர். திருவாபரண ஆபீசர் ஒருவரும் தணிக்கையாளர் ஒருவரும் உள்ளனர். வேளிமலை குமாரர் கோயிலில் ஒரு யானை இருக்கிறது. தேவஸ்வம் நிதியிலிருந்து ஒரு கல்லூரி, மூன்று பாடசாலைகள், இரண்டு நூல் நிலையங்கள் நடத்தப்படுகின்றன.

---

## சேயோனும் சிவனும்

*கிழக்கே விடியற்காலையிற்றோன்றும் ஞாயிறு இளஞ்செவ்வியுடைய தாய்ச் செஞ்சுடர் விரிந்து திகழ அதன் கீழ்த் தோன்றுங் கடல் நீர் நீலமும் பசுமையுங் கலந்த நிறத்தின தாய்த் துலங்கா நிற்பக் காணப்படும் மிக அழகிய காட்சி, இறைவன் எழில் கிளர் நீலத்தோகை மயிலின்மேற் றோன்றுங் காட்சியை ஒப்பதாயிருத்தலின் அவ்விடியற்காலையிற் சிவந்து தோன்றுங் கதிரவனே சேயோனாகவும், அக்கதிரவனுக்குக் கீழ்த் தோன்றும் நீலநிறக் கடலே அவன் ஊரும் நீலமயிலாகவும் கருதி வழுத் தப்படலாயினவென்க. கதிர்சாயுஞ் சாய்ங்கால வேளையில் மேற்கே காணப்படுங் கதிரவனே, தன் செவ்வொளி தோய்ந்த முகிற்குழாங்கள் முகட்டின் நாற்புறத்துஞ் செக்கர்ச் சடையெனச் சிவந்து மிளிர, அம் முகிற் குழாங்களின் இடையே தோன்றும் வெள்ளிய பிறை அச்சடைக் கற்றைமேல் நிவந்து விளங்காநின்ற வெண்பிறை யென்னத் துலங்கா நிற்பக், கண்ணையுங் கருத்தையும் ஒருங்கே கவருங் காட்சித்தாய்த் தோன்று நிலையிற் சிவபிரான் என வைத்து நம் பண்டைத் தமிழ் முதுமக்களால் வணங்கப்படுவான் ஆயினன்.*

மறைமலையடிகள்
'தமிழர் மதம்' பக் : கசுச

---

# தமிழின் தனிப்பெருந் தன்மைகள்

[பண்டித திரு. ஞா. தேவநேயன், எம்.ஏ.]

சங்கரன் கோவிலில் 7-2-1902 இல் தோன்றிய இவர் ஆம்பூரிலும் பாளையங்கோட்டையிலும் பள்ளிக் கல்வி பயின்று, மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் பண்டிதத் தேர்விலும் வெற்றி பெற்றவர். தாமே தமிழ் பயின்ற தமிழ்ப் பெரியார் இலக்கண நிறைகடல்; தனித்தமிழ்த் தந்தை மறைத்திரு மறைமலையடிகளாரைப் பின்பற்றி, பேச்சும் மூச்சும் தனித் தமிழாகக் கொண்டவர் பள்ளியிலும் கல்லூரியிலும் பணியாற்றி இறுதியாக அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தொண்



டாற்றி ஓய்வு பெற்றவர். 'தமிழே உலகத்தின் முதல் தாய்மொழி' என்ற கருத்தை முதன் முதல் நூல்வடிவில் நாட்டிய பேரறிஞர். தனித்தமிழ் ஆட்சிபெற 'உலகத் தமிழ்க் கழகத்தை' நிலைநாட்டியவர். 'வடமொழி வரலாறு' 'தென்மொழி வரலாறு' Primary Classical Language of the World' 'திருக்குறள் மரபுரை' போன்ற அரிய ஆராய்ச்சி நூல்களை எழுதியுள்ளார். இவரைப் பின்பற்றும் அன்பர்கள் தமிழகத்திலும் மலேயாவிலும் கணக்கற்று உள்ளனர்.

மூவாயிரத்திற்கு மேற்பட்ட உலக மொழிகளுள், இன்றும் பல்வேறு வகையில் முதன்மையாக வுள்ளது, பொன்னினும் மணியினுஞ் சிறந்ததாகவும், உணவினும் மருந்தினும் இன்றியமையாததாகவும், தெய்வமும் திருமறையுமெனக் கண்ணியமாகவும் நம் முன்னோர் போற்றி வளர்த்த செந்தமிழே யென்பது, முகடேறி நின்று முரசறைந்து விளம்பத்தக்க முழுவுண்மையாகும். அதற்கேதுவான தமிழின் தனிப்பெருந் தன்மைகள் வருமாறு :-

## 1. முன்மை

இஞ்ஞாலத்தில் மிகப் பழமையான நிலப்பகுதி யென்று தமிழ் வரலாற்றால் அறியப்பட்டதும், நிலநூல், கடல்நூல், உயிர் நூல் ஆராய்ச்சியாளரால் உய்த்துணரப் பட்டதும், மாந்தன் பிறந்தகமென்று மாந்த னூலாரால் கண்டுபிடிக்கப் பட்டதும், தெற்கே இந்துமாவாரியில் மூழ்கிப்போன குமரிக்கண்டம் (Lemuria) ஆகும்.

> 'பஃறுளி யாற்றுடன் பன்மலை யடுக்கத்துக்
> குமரிக் கோடுங் கொடுங்கடல் கொள்ள"

என்று (சிலப். 11 : 19-20) ஆயிரத்தெண்ணூறாண்டுகட்கு முன்பே, முற்றத் துறந்த முழு முனிவரும் நடுநிலைக்குத் தலை சிறந்தவரும் பல்கலைப் பெரும்புலவருமாகிய இளங்கோவடிகள் கூறியிருப்பது, கடுகளவுங் கட்டுச் செய்தியன்று. அத் தொன்னிலத்தில் உலக முதல் உயர்தனிச் செம்மொழியாகத் தோன்றியதனாலேயே,

> "ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி
> ஏங்கொலிநீர் ஞாலத் திருளகற்றும்-ஆங்கவற்றுள்
> மின்னேர் தனியாழி வெங்கதிரொன் றேனையது
> தன்னே ரிலாத தமிழ்."

(தண்டியலங்கார வுரை மேற்கோள்)

என்று பண்டைச் சான்றோரால் தமிழ் சிறப்பித்துப் பாடப் பட்டது மென்க.

இனி, மறைமலையடிகள், பூரணலிங்கம் பிள்ளை, கா. சுப்பிரமணியப் பிள்ளை, துடிசை கிழார் முதலிய பேரறிஞர் குமரி நாட்டுத் தமிழ்த் தோற்றத்தைப் பற்றித் தெளிவாகக் கூறியிருப்பவும், என் அரை நூற்றாண்டு மொழியாராய்ச்சியால் அது உறுதிப் படுத்தப் பட்டிருக்கவும், அது கட்டுக்கதை யென்று கூறிவரும் வையாபுரிகளும் ஆராய்ச்சியிலிகளும்,

> " உலகத்தார் உண்டென்ப தில்லென்பான் வையத்
> தலகையா வைக்கப் படும்."

என்னும் குறட்கே (850) சிறந்த இலக்கியமாவர். மேலும், பல்கலைத் தெளிவும் நடு

நிலை பிறழா வாய்மையுங் கொண்ட தலை சிறந்த உரையாசிரியருள் ஒருவரான அடியார்க்கு நல்லார், தம் சிலப்பதிகார வேனிற் காதை யுரைத் தொடக்கத்தில், "அக் காலத்து அவர் நாட்டுத் தென்பாலி முகத் திற்கு வடவெல்லையாகிய பஃறுளி யென்னு மாற்றிற்கும் குமரி யென்னு மாற்றிற்கு மிடையே எழுநூற்றுக் காவத வாறும், இவற்றின் நீர்மலிவானென மலிந்த ஏழ்தெங்க நாடும் ஏழ் மதுரைநாடும் ஏழ்முன்பாலைநாடும் ஏழ்பின் பாலை நாடும் ஏழ்குன்றநாடும் ஏழ்குணகாரைநாடும் ஏழ்குறும்பனைநாடும் என்னும் இந்த நாற்பத் தொன்பது நாடும், குமரி கொல்லம் முதலிய பன்மலைநாடும் காடும் நதியும் பதியும் தட நீர்க் குமரி வடபெருங் கோட்டின் காறும் கடல் கொண்டொழிதலால், குமரியாகிய பௌவ மென்றார் என்றுணர்க."

என்று தெற்கே ஈராயிரங்கல் தொலைவு நீண்டிருந்த பழம் பாண்டி நாட்டைப் பல் வேறு சிறு நாடுகளாகப் பகுத்துக் கூறி யிருப்பது, பழைய ஏட்டினின்று பெயர்த் தெழுதிய மரபுவழி வரலாற்றுச் செய்தியாக வன்றி, புதுவது புனைந்ததாகவோ சேர நாட்டுப் பஃறுளியாற்றைப் பிறழவுணர்ந்த தாகவோ இருக்க முடியாதென்று கூறி விடுக்க.

## 2. மென்மை

தமிழர் மாந்தன் வரலாற்றிற் குழந்தை போல் முந்தித் தோன்றிய இனத்தவராத லால், அவர் வாயில் குழந்தைகளும் முதிய வரும் களைத்தவரும் நோயாளிகளும் கூட எளிதாய் ஒலிக்கத் தக்கனவும், பெரும்பாலும் எல்லா மொழிகட்கும் பொதுவானவுமான (உயிர் பன்னிரண்டும் மெய் பதினெட்டுமாக) முப்பது எழுத் தொலிகளே பிறந்திருந்தன. அதோடு, தனிமெய்யொலியில் தொடங்குஞ் சொற்களும், வல்லின மெய்யொலியில் இறுஞ் சொற்களும், சில மெய்யொலிகட்குப் பின் சில மெய்யொலிகள் தமித்தோ உயிர் மெய்யாகவோ இடையில் வருஞ் சொற் களும், அவர் வாயில் வந்ததில்லை. இலக் கியங் கண்டதற் கிலக்கண மியம்பல் என்னும் முறையில், அக்காலத்து வரையறுக்கப்பட்ட முதலிடை கடை யெழுத்து வரம்புகளே, இக்காலத் திலக்கண நூல்களும் ஏற்றுக் கூறுகின்றன. தமிழினின்றே திரிந்த திர விடம் உட்படப் பிறமொழிகளில் இத்தகைய வரம்பிடில்லை. அதனால்,

> "எண்பெயர் முறைபிறப் புருவம் மாத்திரை
> முதலீ றிடைநிலை போலி யென்றா
> பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே." (57)

என்னும் நன்னூல் நூற்பாவிற் குறிக்கப் பட்டுள்ள எழுத்திலக்கணம் பன்னிரண்ட னுள், "முதலீ றிடை நிலை" என்னும் மூன்றும் தமிழுக்கே சிறப்பாக வுரியனவாம். பிற மொழிகளில் எந்த எழுத்தும் எந்த இடத் திலும் வரலாம் தமிழில் அங்ஙனம் வர முடியாது.

இனி, வடமொழி வல்லின மெய்களின் நால்வகையுள், உரப்பியும் எடுத்தும் கனைத் தும் ஒலிக்கும் பின் மூன்று வகைகளேயன்றி, இயல்பானதாகக் கருதப்படும் முதல் வகை யும், தமிழ் வல்லினத்தோடு ஒவ்வாது இருமடி வலித் தொலிக்கும் கடுவல்லினமாம். காகத்தைக் குறிக்கும் 'Kaka' என்னும் வட சொல் வடிவம், தமிழில் 'காக்க' என்று ககரம் இரட்டித்து எழுதப்பட்டால்தான் ஒருமருங்கு வடமொழியை ஒத்தொலிக்க முடியும். 'மேக்கர்' (Maker) என்னும் ஆங்கிலச் சொல்லும் இத்தகையதே. இவ் வேறுபாட்டை, எழுத்தொலிகளை நுண்ணி தாகக் கண்டவர் போல் தம்மைக் காட்டிக் கொள்ளும் மேலை வண்ணனை மொழி நூலாரும் இன்னும் அறியவில்லை.

மெலியும் வலியுமாக அடுத்துவரும் ங்க, ஞ்ச, ண்ட, ந்த, ம்ப, ன்ற என்னும் இணை மெய்கள், ஆரியத்திலும் திரவிடத் திலும் போல் 'ங்க்க', 'ஞ்ச்ச', 'ண்ட்ட', 'ந்த்த', 'ம்ப்ப', 'ன்ற்ற' என்று என்றேனும் தமிழில் வலித் தொலிப்பதில்லை.

மூச்சொலி (Aspirate) தமிழில் இல்லவே யில்லை. எடுப்பொலி (Voiced Sound) மெலி யடுத்த வலிக்கே யுண்டு.

சொல்லிடையில் நிகழும் உடனிலை மெய்ம் மயக்கம், வேற்றுநிலை மெய்ம் மயக்கம் என் னும் இருவகை மெய்ச்சேர்க்கையுள், முன்ன தில் இரண்டாவது மெய் 'சுக்கு','பட்டு' என்ப வற்றிற் போல் உயிரோடு கூடியதாகவே யிருக்கும்; பின்னதில் இரண்டாவது மெய் 'காய்ப்பு', 'வாழ்க்கை' என்பவற்றிற் போல் தனிமெய்யாகவோ, 'வெட்கம்', 'பயிற்சி'

என்பவற்றிற்போல் உயிரோடு கூடிய மெய் யாகவோ இருக்கும். ஆயின், இரு தனி மெய்களே யன்றி, 'ஸாந்த்வ்', 'ஸம்ஸ்க்ருத' என்னும் வட சொற்களிலும், Camps, tempts என்னும் ஆங்கிலச் சொற்களிலும் போல், முத்தனி மெய்களும் நாற்றனி மெய்களும் தமிழில் வரவே வரா.

இங்ஙனம் தமிழ் பெரும்பாலும் மெல் லோசை மொழியாயிருப்பதனாலேயே, அது உலக முதன் மொழியாய்த் தோன்றியும் இறந்து படாமல் இன்னும் இளமை நிலையில் இருந்து வருகின்றது. அதைத் தாய்மொழி யாகக் கொண்டவரும் முயற்சி வருத்தமின்றி எளிதாகப் பேசி வருகின்றனர். காலஞ் சென்ற பா. வே. மாணிக்க நாயகர், ஒரு முறை உலகப் பெருமொழிகளுள் ஒவ்வொன் றிலும் அவ்வாயிரம் சொற்களை யெடுத்து, அவற்றிற்குச் செலவிடும் மூச்சை மூச்சுமானி கொண்டு அளந்து பார்த்ததில், சமற்கிரு தத்திற்கே மிகுந்தும் தமிழுக்கு மிகக் குறைந்தும் இருப்பதாகக் கண்டார். இவ் வுண்மையையே, மறைமலையடிகள் க்ருதம், த்ருஷ்டி, த்வரிதம், ச்ருஷ்டி, ஹ்ருதய என்னும் வட சொற்களோடு, இழுது, பார்வை, விரைவு, படைப்பு, நெஞ்சம் என்னும் தென்சொற்களை ஒப்புநோக்கி எளிதாக விளக்கிக் காட்டினர்.

ஒரு மொழிக்கு வேண்டியது சொல் வளமே யன்றி ஒலிவளமன்று. ஆரியம், சேமியம் முதலிய மொழிக் குடும்பங்கள் தோன்றாத அத்தொல் பண்டைக் காலத் திலும், எக்காலத்தும் மாந்தன் உள்ளத்தில் எழக்கூடிய கருத்துக்களை யெல்லாந் தெரி விக்கத் தக்க சொற்களையும் சொல்லுறுப்புக் களையும், நம் குமரி நாட்டு முன்னோர் படைத்து வைத்துள்ளனர். ஆதலால், ஒலி மென்மையால் தமிழுக்கு உயர்வேயன்றி இழிவில்லை யென்றும், அதைப் பேசுவார்க்கு மூச்சு வருத்தமும் பேச்சு வருத்தமு மின்மை யால் வாழ்நாள் நீடிக்கு மென்றும், அறிந்து கொள்க.

### தாய்மை

பெற்றோரைக் குறிக்கும் அம்மை அப்பன் என்னும் குமரிநாட்டுத் தமிழ்ச் சொற்கள், ஆரியம் உட்பட உலகப் பெருமொழிகள் பலவற்றில் வடிவு திரிந்து வழங்கி வரு கின்றன.

நூன், நூம் என்னும் பண்டைத்தமிழ் முன்னிலைப் பெயர்கள், வடநாட்டு இந்தியில் து, தும் என்றும், இலத்தீனில் து, வேஸ் என்றும், கிரேக்கத்தில் தூ (சூ), ஹ்மேயிஸ் என்றும், பழைய ஆங்கிலத்தில் தூ, யீ (யூ) என்றும், சமற்கிருதத்தில் த்வம், யூயம் என்றும், முறையே திரிந்து வழங்குகின்றன அல்லது வழங்கி யிருக்கின்றன.

மேலை மொழிகளிலுள்ள தென் சொல் லொத்த சொற்கட் கெல்லாம் மூலம் தமிழி லேயே இருக்கின்றன.

| எ-டு: அயற்சொல் | தமிழ்ச்சொல் | மூலம் |
|---|---|---|
| இலத்தீன் - மன் ஸ ஸ் | மனை | மன் |
| கிரேக்கம் - மாஸ்திகோஸ் (Mastigos) | மத்திகை | மொத்து |
| ஆங்கிலம் - துரு | துருவ | துள் |
| துருக்கி - கான் | கோன் | கோவன் |
| கொரொ | கரு | கள் |

சீன மொழியில் மா என்பது குதிரையை யும் தா என்பது வலிமையையும் குறிப்ப தாகச் சொல்லப்படுகின்றது.

தமிழின் சொல்வளத்தைக் குறிக்கவந்த கால்டுவெலார், அம்மொழி தனக்கே சிறப் பாக வுரிய வீடு என்னும் சொல்லை மட்டு மன்றி, இல் என்னும் தெலுங்கச் சொல்லை யும், மனை என்னும் கன்னடச் சொல்லையும், சமற்கிருதத்திற்கும் பின்னிய (Finnish) மொழிகட்கும் பொதுவான குடி என்னும் சொல்லையும், தன்னகத்துக் கொண்டுள்ள தென்று, அது திரவிடத்திற்குத் தாயும் ஆரியத்திற்கு மூலமுமாகும் என்னும் உண் மையைக் குறிப்பாகக் கூறியிருக்கின்றார். மேலும், தமிழ் உலக முதன்மொழிக்கு மிக நெருங்கிய தென்றும், ஆரியத்திற்கு முந்திய தென்றும், பல்வேறிடங்களில் வெளிப்படை யாகவும் கூறியுள்ளார். சமற்கிருதத்தில் ஐந்திலிரு பங்கு தமிழ் என்பது இன்று ஆராய்ச்சியால் தெரிய வருகின்றது.

ஆ, ஈ, ஊ என்னும் முத்தமிழ்ச் சுட் டெழுத்துக்களினின்றே, ஆரியச் சுட்டுச் சொற்களும் படர்க்கைப் பகரப் பெயர்களும் (Demonstratives and Pronouns of the third Person) தோன்றிப் பற்பலவாறு திரிந்து

வழங்குகின்றன. பல ஆரிய அடிப்படைச் சொற்களும் தமிழாயிருக்கின்றன.

எ-டு: இலத்தீன்- amo (அமர்), ser (சேர்,) do (தா). அமர்தல் - அன்பு கூர்தல்.

சுருங்கச் சொல்லின், தமிழ்ச் சொல்லே யில்லாத உலகப் பெருமொழி ஒன்றுமே யில்லை யென்பது மறக்க முடியாத உண்மை யாகும்.

## தூய்மை

தமிழ் குமரி நாட்டில் தானே தோன்றி வளர்ந்த தனி மொழியாதலாலும், அதை நுண்ணறிவு மிக்க பொது மக்களும் புல மக்களும் பண்படுத்தி வளர்த்தமையாலும், நீராவியையும் மின்னியத்தையும் துணைக் கொள்ளாத எல்லாக் கலைகளையும் அறிவியல் களையும் பண்டைத் தமிழரே கண்டறிந்து விட்டமையாலும், ஆயிரக்கணக்கான உலக வழக்குச் சொற்களும் நூல் வழக்குச் சொற்களும் இறந்துபட்ட இக்காலத்தும், எப் பொருள் பற்றியும், பழஞ்சொற் கொண்டும் புதுச்சொற் புனைந்தும், முழுத் தூய்மை யாகப் பேசத் தமிழ் ஒன்றில்தான் இயலும். இவ்வுண்மையை அறிந்தே, தமிழ் வட மொழித் துணையின்றித் தனித்து வழங்குவது மட்டுமன்றித் தழைத் தோங்கவுஞ் செய்யும் என்று கூறினர் கால்டுவெலார்.

செந்தமிழ்ச் சொல்வளத்தைக் காண, ஒரு பருக்கைப் பதமாக நிலைத்திணைச் சொற் களை நோக்கினும் போதும். குமரி நாட்டுத் தமிழ்ப் பொதுமக்கள், இலைகளை நால்வகை யாக வகுத்து, வேம்பும் வாழையும் போல மெல்லிதாயிருப்பதை இலை யென்றும், நெல்லும் புல்லும் போலத் தாளை (தண்டை) யொட்டி நீண்டு சுரசுரப்பாக விருப்பதைத் தாள் என்றும், சோளமுங் கரும்பும் போலப் பெருந்தாளாக நீண்டு தொங்குவதைத் தோகை யென்றும், தென்னையும் பனையும் போலத் திண்ணமாயிருப்பதை ஓலை யென்றும், வழங்கினர்; பூ நிலைகளை ஐவகையாகக் கண்டு, தோன்றிய நிலையில் அரும்பு என்றும், மலரத் தொடங்கிய நிலையிற் போது என்றும், மலர்ந்த நிலையில் மலர் என்றும், உதிர்ந்து விழுந்த நிலையில் வீ யென்றும், வாடிச் சிவந்த நிலையிற் செம்மல் என்றும், சொல்லினர்; காய் நிலைகளை நால்வகையாகக் கண்டு, தோன்றிய நிலையிற் பிஞ்சு என்றும், சற்றுப் பருத்த நிலையிற் பிருக்கு என்றும், முற்றும் பருத்த நிலையிற் காய் என்றும், பழுத்த நிலை யிற் பழம் (மஞ்சள் நிறமானது) அல்லது கனி (கனிவாயிருப்பது) என்றும், பெயரிட்டனர்; இனி, பிஞ்சு நிலையிலும், வாழைக்குக் கச்சல் என்றும், மாவிற்கு வடு என்றும், பலாவிற்கு மூசு என்றும், தென்னை பனைக்குக் குரும்பை என்றும், பிறவற்றிற்குப் பிறவாறும், சிறப்புப் பெயர் குறித்தனர்.

ஆங்கிலம் இலக்கக் கணக்கான சொற் களைக் கொண்டிருந்தும், ஏறத்தாழ எல்லா மொழிகளினின்றுங் கடன் கொண்டும், காயைப் பழுக்காத பழம் என்று குறிப்பதும், வெயிலையும் நிலவையுங் குறிக்கத் தனிச் சொல் இல்லாதிருப்பதும், இங்குக் கவனிக் கத்தக்கது.

தமிழின் இயல்பை யறியாத சிலர், ஆங்கிலம் போல் தமிழையுங் கருதிக் கொண்டு, ஒரு மொழி பிற மொழியினின்று கடன் கொண்டால்தான் வளர முடியு மென்றும், மொழித் தூய்மை யென்பது பொருளற்ற மொழி வெறி யென்றும், கூறுவர். காலதர், சாளரம், பலகணி என முச் சொல்லிருக்கவும் சன்னல் என்னும் போர்த்துக்கீசியச் சொல்லை வேண்டாது வழங்கியதால், அம்முச் சொல்லும் வழக் கற்றுப் போய்த் தமிழ் வறுமை யடைந்துள் ளமை காண்க. ''தமிழர்க்குள்ள பெருமை யெல்லாம் அவர் தொன்றுதொட்டுத் தூய் தாக வழங்கி வருந் தமிழ் மொழியினையே சார்ந்திருக்கின்றது.'' என்று, மறைமலை யடிகளார் கூறியிருப்பதை இனிமேலாயினுங் கருத்தாய்க் கவனிக்க.

## செம்மை

சொற்களும் சொற்றொடர்களும் வடி விலும் பொருளிலும் இலக்கண முடிபிலும், வழாநிலை, வழுநிலை, வழுவமைதிநிலை என முந்நிலைப்படும். அவற்றுள், வழுநிலை யில்லது செந்தமிழ் என்றும், அஃதுள்ளது கொடுந்தமிழ் என்றும், தமிழை இருவகை யாக வகுத்தனர் இலக்கண நூலார். மக் கட்கு ஒழுக்க வரம்பு எத்துணை இன்றியமை யாததோ, அத்துணை இன்றியமையாததே மொழிக்கு இலக்கண வரம்பும். சொற்களின் திருந்திய வடிவையும் ஓரிய லொழுங்கையும்

தமிழிற்போல் வேறெம் மொழியிலுங் காண முடியாது.

எ-டு :

| தமிழ் | தெலுங்கு |
|---|---|
| தன்மைப் பெயர்—யான், யாம் | ஏனு, மேமு |
| —நான், நாம் | நேனு, மனமு |
| முன்னிலைப் பெயர்—நீன் (நீ), நீம் | நீவு மீரு |
| படர்க்கைப் பெயர்—தான், தாம் | தானு, தாமு |

அ, இ, உ என்னும் முச்சுட்டெழுத்துக்களையும் எ, ஏ, யா என்னும் மூவினவெழுத்துக்களையும், அடியாகக் கொண்ட தமிழ் ஐம்பாற் பெயர்களின் ஒரியலொழுங்கு, மொழி நூலறிஞரின் உள்ளத்தை மிகக் கவரத் தக்கது. இது போன்ற அழகிய மெய்ப் பொருளிய லொழுங்கை வேறெம் மொழியிலேனும் மொழிக் குடும்பத்திலேனும் காண முடியாதென்று, கால்டுவெலார் வியந்து கூறியிருத்தலைக் காண்க.

புதுப்பெருக்கு நீரைக் குறிக்கும் வெள்ளம் என்னும் செந்தமிழ்ச்சொல் மலையாளத்தில் நீர்ப் பொதுவைக் குறிப்பதும், விடை சொல்லுதலைக் குறிக்கும் செப்புதல் என்னும் செந்தமிழ்ச் சொல் தெலுங்கிற் பொதுவாகச் சொல்லுதலைக் குறித்தலும், ஒன்றைச் செய்ய ஆற்றுதலை (திறமையோடிருத்தலை)க் குறிக்கும் மாட்டுதல் என்னும் செந்தமிழ்ச் சொல் கன்னடத்தில் (மாடுதல் என்னும் வடிவில்) பொதுவாகச் செய்தலைக் குறிக்கின்றமையும், கொடுந்தமிழ் நிலையாம். கூர்ந்து பார்த்தலைக் குறிக்கும் நோக்குதல் என்னுஞ் சொல், மலையாளத்திற் பொதுவாகப் பார்த்தலைக் குறித்தலும் அஃதே.

செந்தமிழெழுத்துக்கள் கொடுந்தமிழிற் பலவாறு திரியுமேனும், வலி மெலித்தல் மலையாளத்திற்கும் ரகரம் தொகல் தெலுங்கிற்கும், பகரம் மூச்சொலியாதல் கன்னடத்திற்கும், சிறப்பாம்.

எ-டு : மலையாளம்—கஞ்சி-கஞ்ஞி, நீங்கள்-நிங்ஙள், வந்து - வந்நு.

தெலுங்கு—சுருட்டு-த்சுட்ட, பருப்பு-பப்பு, மருந்து-மந்து.

கன்னடம்—பள்ளி-ஹள்ளி, பாளை-ஹாளெ, பொன்-ஹொன்னு.

வடசொற்கள் பின்வருமாறு பலவகையில் திரியும். ஆயிரம் - ஸகஸ்ர, கலுழன் - கருட (g), கோட்டம் - கோஷ்ட, கோட்டை-கோட்ட, சாயை - சாயா (c), தூணம் - ஸ்தூணு, நகரம் - நகர (g), பள்ளி - பல்லி, மயில் - மயூர, முகம் - முக (kh), வட்டம் - வ்ருத்த.

இங்ஙனம் தமிழுக்கு எதுவழுநிலையோ, அது பிற மொழிகட்கு வழாநிலையாம். தமிழுக்குச் செம்மை இன்றியமையாத பண்பாயிருத்தலினாலேயே, அது செந்தமிழ் எனப்பட்டது. ஒருவன் பொதுமக்களோடு எத்துணைக் கொச்சையாய்ப் பேசினும், ஏடெடுத்தெழுதும் போதும் மேடையேறிப் பேசும் போதும் இலக்கண நடையைக் கையாள வேண்டு மென்பதே தமிழ்மரபு. அம்மரபே, மூவாயிரம் ஆண்டாகத் தமிழைக் கெடுக்கப் பகைவர் சூழ்ச்சி செய்துவரினும், அது கெடாவாறு அதனைக் காத்து வந்திருக்கின்றது. உலக வழக்கு வேறு; கொச்சை வழக்கு வேறு. உலகம் என்பது உயர்ந்தோர் மேற்றே. ஆதலால், பிற மொழிகள் போல் தமிழையுங் கருதிக் கொண்டு, பொது மக்கள் கொச்சை நடையே உலக வழக்கென்பது தமிழுக்கு எட்டுணையும் பொருந்தாதென்க.

## மும்மை

கி. மு. பத்தாயிரம் ஆண்டுகட்கு முன் தோன்றிய தலைக்கழகக் காலத்திலிருந்தே, இசையும் நாடகமும் இயற்றமிழோடு சேர்க்கப்பட்டு, இலக்கியத் தமிழ் முத்தமிழென வழங்கி வந்திருக்கின்றது. அதனால், முதலிரு கழகத்திலும் வழங்கிய இலக்கண நூல்கள் முத்தமிழும் பற்றியன வாகவே யிருந்ததாகத் தெரிகின்றது. இங்ஙனம் வேறெம் மொழியிலுமில்லாத வழக்கிற்கு, இசையும் நடிப்பும் பேச்சொடு இயல்பாகக் கலந்திருப்பதொடு, பண்டைத் தமிழரின் இசை நாடகக் கலைத் தேர்ச்சியும் பண்டைத் தமிழிலக்கியம் முற்றும் செய்யுள் வடிவிலிருந்தமையும், கரணியமாகும்.

## இயற்கை வளர்ச்சி

தமிழில் இடுகுறிச் சொல்லே யில்லை. "எல்லாச் சொல்லும் பொருள் குறித் தனவே" என்பது தொல்காப்பிய நூற்பா (640). ஒருமை பன்மை யென்னும் பொருட் பாலுமன்றி, ஆரியத்திற்போல் இருமை

யெண்ணும் சொற்பாலும் தமிழமைப்பில் அமையவில்லை.

பனுவல்களில் ஒரு நாட்டை வருணிக்கும்போது, உள்பொருளையும் உள்நிகழ்ச்சியையுமே யன்றி, இல் பொருளையும் இல் நிகழ்ச்சியையும் ஆரிய வருகைக்கு முற்பட்ட பண்டைத் தமிழ்ப் புலவர் கூறுவதில்லை.

செய்யுளணிகளெல்லாம் இயற்கையாக அமைந்தன வன்றிச் செயற்கையாக அமைக்கப்பட்டன வல்ல.

### இலக்கண நிறைவு

மற்றெல்லா மொழியிலக்கணங்களும் எழுத்தும் சொல்லும் சொற்றொடரும் யாப்பும் அணியும் ஆகிய ஐந்தையே கூற, தமிழிலக்கணம் மட்டும் அவற்றோடு செய்யுட்கும் நூற்கும் உள்ள பொருளையுஞ் சேர்த்து அறு கூறுகளைக் கூறுகின்றது. ஆயின், சொற்றொடரும் யாப்பும் அணியும் பொருளில் அடக்கப்பட்டு, எழுத்தும் சொல்லும் பொருளும் என முப்பாலவாகவே பண்டை யியற்றமிழ் இலக்கணங்க ளெல்லாம் வழங்கி வந்திருக்கின்றன.

அகம் புறம் என்னும் இருவகைப் பாகுபாட்டுள் எல்லாப் பொருள்களும் அடக்கப்பட்டு விட்டன. புறப் பொருள் பற்றிய எழுதிணைகளுள், முதலைந்தும் அரசனுக்குச் சிறப்புக் கொடுத்தற் பொருட்டு அவனுக்குரிய போர்த் தொழிலையே பற்றிக் கூறினும், வாகை பாடாண் என்னும் இறுதியிரண்டும், மற்றெல்லா மக்கள் தொழில்களையும் சேர்த்துத் தழுவுவனவாகும். இதை யறியாதார் தமிழ்ப் பொருளிலக்கணம் குறைபாடுள்ளதெனக் குறை கூறுவர்.

> " கண்ணுதற்பெருங் கடவுளுங்
> கழகமோ டமர்ந்து
> பண்ணுறத்தெரிந் தாய்ந்தவிப்
> பசுந்தமிழ் ஏனை
> மண்ணிடைச்சில இலக்கண
> வரம்பிலா மொழிபோல்
> எண்ணிடைப்படக் கிடந்ததா
> எண்ணவும் படுமோ."

என்னும் பரஞ்சோதி முனிவர் பாடல் (திருவிளை. நாட்டுப்.) இங்குக் கருதத் தக்கது.

> " வினையின் நீங்கி விளங்கிய வறிவின்
> முனைவன் கண்டது முதனூ லாகும்."
> (தொல். 1594)

என்றவாறு, முற்றத் துறந்த முழுமுனிவரே தமிழிலக்கண முதனூல் இயற்றியவராதலின், தனித்தொலிப்பதும் தனித்தொலியாததும் தனித்தொலிப்பதொடு கூடியொலிப்பதும் ஆகிய மூவகை யொலிகளும், தனியுயிரையும் தனி மெய்யையும் (உடம்பையும் அல்லது உயிரில்லாப் பொருளையும்) உயிரோடு கூடிய மெய்யையும் முறையே ஒத்திருப்பதால், அவற்றிற்கு உயிர், மெய், உயிர்மெய் என்ற பெயர்களையே உவமையாகு பெயராக இட்டிருக்கின்றனர். அதற்கேற்ப, உயிருக்குப் புள்ளியில்லா வடிவும் மெய்க்குப் புள்ளியுள்ள வடிவும் உயிர்மெய்க்குத் தனிக்கூட்டு வடிவும் அமைத்திருக்கின்றனர். இவ்வரி வடிவமைப்பும் முறையென்னும் வரிசையமைப்பும் முதன் முதற் கொண்டெழுந்தது தமிழ் நெடுங்கணக்கே. அதைப் பின்பற்றியதே சமற்கிருத வண்ணமாலை. அதற்கும் பிந்தினவே, தெலுங்கு கன்னட மலையாளத் தென்னாட்டு நெடுங்கணக்குக்களும் வங்க குசராத்தி வடநாட்டு நெடுங்கணக்குக்களும் தமிழெழுத்து, சில தமிழ்ப் பகைவர் கூறுகிறபடி, அசோகன் கல்வெட்டுப் பிராமியெழுத்தினின்று திரிந்ததன்று.

பகுத்தறிவுள்ள மக்களையே உயர்வாகவும் மற்றெல்லா வற்றையும் தாழ்வாகவுங் கொண்டு பொதுமக்களே தமிழ் மொழியை அமைத்து விட்டமையால், இலக்கியங் கண்டதற் கிலக்கணம் இயம்பும் முறையில், உயர்திணை அஃறிணை என்ற குறியீடுகளை மட்டும் இலக்கண ஆசிரியர் இட்டிருக்கின்றனர்.

பெயர்கட்கு முதன் முதலாக எட்டு வேற்றுமை வகுத்துக் கூறியதும் தமிழிலக்கணமே. அதைப் பின்பற்றியதே சமற்கிருதம். கால்டுவெலார் கருதுகிறபடி தலைமாறாக நிகழ்ந்ததன்று.

### செய்யுட் சிறப்பு

பண்டைத் தமிழிலக்கியம், உரையும் (Commentary) உரிச்சொற்றொகுதியும் (நிகண்டும்) உட்பட, முற்றும் செய்யுள் வடிவிலேயே இருந்தது.

*" பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே*
*அங்கதம் முதுசொலோ டவ்வேழ் நிலத்தும்*
*.................... ... .....*
*யாப்பின் வழிய தென்மனார் புலவர்."* (1336)

என்று தொல்காப்பியங் கூறுதல் காண்க.

காதலும் வழுத்தும் பற்றிப் பாடுதற்குச் சிறந்த கலிப்பா போன்ற செய்யுள்வகை, வேறெம்மொழியிலும் காண்பதற்கில்லை.

அகப்பொருட் செய்யுட்களில், பண்டைத் தமிழக நிலையை அறியக் கூடியவாறு செய்தி களை யமைத்துப் பாடும் புலனெறி வழக்கம் என்னும் செய்யுண்மரபு தமிழுக்கே சிறப்பாம்.

ஒவ்வொரு தலைமுறையிலும், கருத்துப் பாடவும் செய்யுளிலேயே உரையாடவும் வல்ல பல்லாயிரக் கணக்கான புலவர் பண்டைத் தமிழகத் திருந்தனர்.

அணிச்சிறப்பு

பொருளணியில், உள்ளுறையுவமம் தமிழுக்குச் சிறப்பாக வுரியதாகும்.

சொல்லணியில், திருப்புகழ் போன்ற வண்ணங்களும், ககரப்பாட்டும் தகரப் பாட்டும் போன்ற ஓரெழுத்துப் பாட்டும், வல்லினப் பாட்டும் மெல்லினப் பாட்டும் இடையினப் பாட்டும் ஆகிய ஓரினப்பாட்டும், ஒரே செய்யுளைப் பல்வேறு செய்யுட்களாகப் பகுக்கக் கூடிய பதின் பங்கி (தசபங்கி), நூற்றுப்பங்கி (சதபங்கி) முதலியனவும், ஆழிக்கட்டு (சக்கரபந்தம்), தேர்க்கட்டு (ரதபந்தம்), எண்ணுகைப்பிணையல் (அட்ட நாக பந்தம்) முதலிய மிறைப்பாக்களும், தமிழிற்போல் வேறெம் மொழியிலும் பாட முடியாது.

நூற்சிறப்பு

ஆரிய வருகைக்கு முற்பட்ட ஆயிரக் கணக்கான தனித்தமிழ் இலங்கு நூல்க ளெல்லாம், அழிந்தும் அழிக்கப்பட்டும் போனபின்பும், தொல்காப்பியம் போன்ற இலக்கண நூலும் திருக்குறள் போன்ற அற நூலும், வேறெம் மொழியிலும் இல்லை யென்பது வெள்ளிடைமலை.

இத்தகைய விழுமிய நூலையும் வியத்தகு பண்பையுங் கொண்ட உலக முதல் உயர் தனிச் செம்மொழியை, இற்றைத் தமிழன் இனிமேலாயினும் போற்றிக் காத்து முன் னேற முயல்வானாக.

(உரிமை ஆசிரியரது)

---

## தமிழ்த்தூய்மை

*தமிழ் முன்னோர் தமது தமிழ்மொழியைப் பிறமொழிக் கலப் பின்றித் தூய்தாய் எல்லாவளனும் நிரம்ப வளர்த்து வழங்கி வந்தவாறு போல, இஞ்ஞான்றைத் தமிழருந் தமிழ் மொழியைத் தூயதாய் வளனுற வளர்த்து வருதல் வேண்டும். தன்னைப் பெற்ற தாயைக் கொல்லுந் தறுகணன் போலத், தன்னை அறிவுபெற வளர்த்துப் பெருமைப்படுத்திய தமிழைச் சீர்குலைக்கும் போலித் தமிழ்ப் புலவரைப் பின்பற்றி நடவாமல் தமிழையுள்ளன்புடன் ஓம்பித் தூய்தாய் வழங்கும் உண்மைத் தமிழாசிரி யர்களைப் பின்பற்றி நடத்தலிற் றமிழ் நன் மாணவர் அனைவருங் கருத்தா யிருத்தல் வேண்டும்.*

**மறைமலையடிகள்**
'தமிழர் மதம்' பக். உகூக

---

# முதனூலா? மொழி பெயர்ப்பா?

[உரைவேந்தர் திரு. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை]

*தென்னார்க்காடு மாவட்டத்தைச் சார்ந்த ஔவையார் குப்பத்தில் 1903இல் சுந்தரம் பிள்ளை சந்திரமதி ஆகியோருக்குத் தோன்றியவர் இவர்; திண்டிவனம் உயர்நிலைப்பள்ளியிலும் வேலூர் ஊரிசுக் கல்லூரியிலும் கல்வி கற்றார். கரந்தைத் தமிழ்ச் சங்கத்தில் தமிழவேள் த. வே. உமாமகேசுவரம்பிள்ளை அவர்கள் ஆதரவில் தமிழ் பயின்றார். கரந்தைத் தமிழ்ச் சங்கம், திருப்பதி கீழ்க்கலைக் கல்லூரி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம் முதலிய இடங்களில் பணியாற்றிய பின்*



*மதுரைத் தியாகராசர் கல்லூரியில் நீண்டகாலமாகத் தமிழ்ப் பேராசிரியராய் விளங்குகிறார். தற்பொழுது பல்கலைக்கழக மானியக் குழுவின் உதவி பெற்றுப் பணியாற்றுகிறார். ஐங்குறுநூறு. புறநானூறு, நற்றிணை பதிற்றுப் பத்து, இவற்றுக்கு விரிவுரையெழுதியமையால் 'உரைவேந்தர்' என்று சைவசித்தாந்த தத்துவத்தில் பேரறிஞராக விளங்குதலான் 'சித்தாந்த கலாநிதி' என்றும் பட்டங்கள் பெற்றுள்ளார். இவர்தம் 'சேரமன்னர் வரலாறு' சிறந்த வரலாற்று நூல்.*

நம் நாட்டவருள் ஒரு சில மொழியினர்க்குப் பழைமைக்கண் மிக்க விருப்பமும் நன்மதிப்பும் உண்டு. அதற்காகப் பல பொய்களைப் புனைந்துரைத்துப் பழைமை காட்டி மகிழ்வது அவர்கள்பால் இயல்பாக இருக்கிறது. ஊரை மூதூர் என்பதும், நூல்களை முதுநூல் என்பதும் அவர்பால் மிக்கு விளங்குகிறது.

காலத்தின் பழைமையொன்றே கொண்டு பெருமை நினைப்பதும் தருவதும் பெரும் பேதைமை. அதனால், "பண்டையோர்க்குத் தான் நுண்ணறிவு உடைமை; இந்நாளையோர் அன்னர் அல்லர்" என்று நினைக்கும் இழிந்த பண்பு அம்மக்கள் உள்ளத்தில் ஆழப் பதிந்துள்ளது. அவர்பால் பயில்பவர்க்கும் அப்பண்பே உருவாகித் தம்மையும் தம்பின் வருவாரையும் நுண்ணிய அறிவினரல்லர் எனக் கருதும் தவறு நரம்புக்கால் தோறும் ஊடுருவி நிற்கிறது. அம் மடமக்கள் பெருகியதால் நம் நாட்டில் விஞ்ஞான வளர்ச்சிக்கும் அதன் ஆக்கத்துக்கும் பெரிய தடையும் ஊறும் உண்டாயின. திங்கள் மண்டிலத்தில் மனிதன் சென்று இறங்கிச் சிலபோது தங்கி மீண்டான் என்ற நிகழ்ச்சி தமது பொய்ந்நெறிக்குக் கேடுதரும் என்ற காரணத்தால் அச்செய்தி வெறுங் கற்பனை; மனிதனாவது மதிமண்டிலம் செல்வதாவது என்று கேட்பவர் மனவலியை யழிக்கும் படு பொய் பகர்ந்து மக்களை மயக்கும் போலியறிஞர் சிலர் இந்நாளில் ஊர்தொறும் இருந்துகொண்டிருப்பது வியப்பாக இருக்கிறது. பொய்யர் கூட்டமும் அவரது பொய்யும் போய்மடியும் நாளே நாமும் நம்நாடும் அறிவு நலம் பெறும் அழகிய நன்னாளாகும்.

காலத்தால் முந்தும் நூல் பிந்தும் நூல் உண்டு. அவற்றின்கண் வேற்றுமையும் பெருமை சிறுமையும் நோக்கும் கீழ்மைப் பண்பு நம் நாட்டில் இந்த அளவில் நிற்கவில்லை. நூல்கள், தனிமுதலா வழிநூலா, சார்பு நூலா, புடை நூலா என ஆராய்வதும், அதனால் முதனூற் கருத்து எங்ஙனம் வளர்ந்து திருந்தி இந்நாளைய நிலைமை அடைந்துள்ளது என்ற உண்மை காண்பதும் இயலுகின்றன; மக்கள், காலப் போக்கில் மனம் திருந்தி அறிவு தெளிவுற்றுச் செம்மை நெறியில் சீர்மை பெறும் திறத்தை நன்கு உணரும் வகை நமக்கும் உண்டாகிறது. தொல்காப்பியர் காலத்தேயே நூல்கள் முதலும் வழியும் என வளர்ந்து விரிந்தன என்பது "உரைபடு நூல்தாம் இருவகை இயல, முதலும் வழியும் என நுதலிய நெறியின" என்ற நூற்பாவால் இனிது விளங்குகிறது. முதனூல் உயர்ந்தது, வழிநூல் தாழ்ந்தது; வழிநூல் தூயது, முதனூல் தெளிவில்லதென்று பிணங்கி வேறுபட்டு ஒதுக்கும் நிலை முன்னாளில் மக்க

ளிடையே தோன்றவில்லை; தெளிவில்லாத சிலரிடையே அச் செயல் சில காரணம் பற்றித் தோன்றியதுண்டு. அதன் விளைவாக நூல்கள் பல பேணுவாரற்று இறந்தன.

காலப் போக்கில், உணர்வும் செயலும் மிகப் பெறும் வளர்ச்சியால் மக்கள் மனப் பண்பும் வாழ்க்கைத் திறமும் பெருகி விரிகின்றன; உலகியல் வாழ்வே ஒரு பெருங் கலைக் கூடமாய் மக்கள் அறிவுக்குத் தெளிவு தந்து மாண்புறுத்துகிறது. அதனால் அறிவு விரிகிறது; கருத்து மலர்கிறது; உண்மையுணர்வு கூரிதாகிறது. மனத்திடை ஆயிரம் எண்ணங்கள் தோன்றி வாழ்வைப் பெருக்குகின்றன.

இவ்வகையில், தாம் கண்டதைப் பிறரும் கண்டு இன்புறச் செய்வது, கரும்பு தின்றற்குக் கூலி பெறுவது போல ஒருவருக்குப் பெரு மகிழ்ச்சியும் ஊக்கமும் பயக்கின்றது; அது காணும் அறிஞன் தான் அறிந்ததையும் எண்ணியதையும் கருதியதையும் நூல் வடிவில் தருகின்றான். இவ்வாற்றால் தோன்றும் நூற்பொருளும் முன்னே காணப்பட்டதொன்றை அடியாகக் கொண்டு மலர்வதும், புதிதாக ஒன்றினைக் கண்டுரைப்பதுமாக அமைகின்றது. புதிது கண்டுரைப்பது முதனூல்; அதனை அடியாகக் கொண்டு விரிந்து மலர்வது வழி நூல்.

ஒரு காலத்தே முதனூல் படைப்போர் சிலரும், வழி நூல் எழுதுவோர் பலருமாக நம்மிடையே இருந்துள்ளனர். வழி நூலார் நெறியை நுணுகிக் கண்ட தொல்காப்பியர், "வழியின் நெறியே நால்வகைத் தாகும்" "தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழி பெயர்த்து, அதர்ப்பட யாத்தலொடு அனை மரபினவே" என உரைக்கின்றார். இதனை நோக்குமிடத்து முதனூல் தமிழேயாக இருக்க வேண்டும் என்பதில்லை; வேற்று மொழியாகவும் இருக்கலாம்; வேற்று மொழி நூலை "மொழி பெயர்த்து அதர்ப்பட யாத்தல்" வேண்டு மென்று தொல்காப்பியர் உரைப்பது நன்கு தெளிவாகும். இந்நாளில் விஞ்ஞான நூல்கள் பல தமிழில் மொழி பெயர்க்கப்பட வேண்டும்; விஞ்ஞான அறிவு மக்களிடையே பரவினாலன்றி, விரைந்து முன்னேறும் ஏனை நாட்டவரிடையே பொருளாற் சமநிலையும், பண்பால் நன்மதிப்பும் பெறுதல் இல்லையாம் என்று அறிஞர் பலர் ஆர்வத்தோடு உரைப்பது பொருத்தமே யாகும்.

இக் கருத்து வெளியாய போது முதனூல் உயர்ந்தது; மொழி பெயர்த் துரைக்கும் வழிநூல் தாழ்ந்தது என்று எவரும் உரைக்கவில்லை; அறிவுடையோர் நினைக்கவும் இல்லை. முதனூலைவிட மொழி பெயர்ப்புக்கள் மிகவுயர்ந்து பலர்க்குப் பயன்பட்டதுண்டு. ஈப்ரு மொழியிலிருந்த விவிலிய நூல் ஆங்கிலத்தில் பெயர்க்கப்பட்டபின், கற்றவர் அனைவரும் அதனையே விரும்புகின்றனர். முதனூலாகிய வான்மீகி இராமாயணத்தினும் மொழி பெயர்ப்பாகிய கம்பராமாயணம் மிக்க விருப்புடன் பயிலப்படுகிறது.

மொழி பெயர்ப் பென்பது இன்னது எனப் பலர்க்குத் தெரியவில்லை. ஆங்கில நூல் ஒன்றைத் தமிழில் மொழி பெயர்ப்பதென்பது, ஆங்கிலத்தை வரிவரியாகச் சொல் சொல்லாகப் பிரித்துத் தமிழ் காண்பது அன்று; ஆங்கிலத்தில் உள்ள கருத்தைத் தொகுத்தும் விரித்தும் தொகைவிரி வகையிலும் தமிழில் எழுதுவதாகும். அது விளங்குதற்காகவே "மொழி பெயர்த்து அதர்ப்பட யாத்தல்" எனத் தொல்காப்பியர் சொல்லுகின்றார். இவ்வுண்மையறியாமல் சிலர் கம்பர் கருத்துக்களை வால்மீகத்திலும் வான்மீகியின் உரைகள் சிலவற்றைக் கம்பரிலும் காண முயன்று கையறவு படுகின்றனர். கருத்தும் பொருளும் மொழி பெயர வேண்டுமேயன்றிப் பிறமொழி எழுத்தும் சொல்லுமன்று; எழுத்தையும் சொல்லையும் கொள்வது நல்லறிவுடைய மாந்தர் செயலன்று; அவ்வாறு செய்யின் மொழி பெயர்க்கும் நற்பணி விரைவில் வெற்றி பயவாது.

தமிழில் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணம் சேக்கிழார் எழுதிய தமிழ்த் தனி முதனூல். இதன் ஆக்கத்துக்குச் சுந்தரர் அருளிய திருத்தொண்டத் தொகையும் நம்பியாண்டார் நம்பி நல்கிய திருத்தொண்டர் திருவந்தாதியும் அவர் கால வரலாற்றுச் செய்திகளும் சேக்கிழாருக்குத் துணை புரிந்தன. அரசியல் அமைச்சராய் இருந்தமையின், வேண்டிய இடங்கட்குச்

செல்லுவதும் வேண்டும் செய்திகளைத் தக்கோரைக் கேட்டுத் தெரிந்து கொள்வதும் அவருக்கு இயன்றன.

திருத்தொண்டர் அனைவரும் செந்தமிழ் நாட்டு நன்மக்கள் ; அவர் பேசியது தமிழ் ; வாழ்ந்தது தமிழகம், வாழ்வு தமிழ் வாழ்வு ; அவர்களின் வரலாறு காண்போர் வடபுலத்து இமயப் பகுதிக்கோ நடு நிற்கும் விந்தமலைச் சாரலுக்கோ செல்ல வேண்டா. அங்கு வழங்கும் வடமொழி நூல்களை ஆராய்ந்து அலமருதல் முறையன்று. இந்த உண்மையறியாமல் சிலர் திருத்தொண்டர் புராணம் வடமொழியில் உபமன்யு சிவபக்த விலாசம் என்ற நூலிலிருந்து மொழி பெயர்க்கப் பட்டது எனக் கூறுகின்றனர். அதனை வற்புறுத்தத் திருத்தொண்டர் புராணத்தையே சான்று காட்டுகின்றார்கள். இப் பெருமக்களின் உண்மை நோக்கம் யாது ?

கயிலைத் திருமலைக் கடியில் முனிவர் சூழ உபமன்யு முனிவன் இருக்கையில், சுந்தரர் ஒளிப் பிழம்பாகக் கயிலை இறைவன் திருமுன் அணைவது கண்டு, அவர்கட்குக் காட்டிப் பின் அவர்கட்குச் சுந்தரர் வரலாற்றையும் அவர் உரைத்த திருத்தொண்டர் வரலாற்றையும் உரைத்தான் என்ற செய்தியைச் சேக்கிழார் தமது திருத்தொண்டர் புராணத்தில் எடுத்து மொழிகின்றார். இதனை,

**" என்று மாமுனி வன்தொண்டர் செய்கையை**
**அன்று சொன்ன படியால் அடியவர்**
**தொன்று சீர்திருத் தொண்டத் தொகைவிரி**
**இன்றென் ஆதர வால்இங் கியம்புகேன்"**

என்று சேக்கிழார் கூறுகின்றார்.

இப் புராணக் கூற்றில், உபமன்யு முனிவர் பக்த விலாசம் என்ற நூலை வடமொழியில் உரைத்தார் என்றும், அதனை முதலாகக் கொண்டு சுந்தரரோ சேக்கிழாரோ உரைத்தார் என்று ஒரு செய்தியும் நமக்குச் சான்றாகக் கிடைக்கவில்லை. சேக்கிழார் பெரியபுராணம் எழுதத் துணை புரிந்தது வடமொழி உபமன்யு பக்த விலாசம் எனச் சிலர் உரைப்பது ஏன் ? இந்தப் பக்த விலாசம் வந்த வரலாறு யாது ?

விசய நகர வேந்தர் வரிசையுள் அச்சுதராயர் ஒருவர் ; இவர் நரசநாயக்கவுடையார் மகன் வீரப்பிரதாப அச்சுததேவ மகாராயர் என்றும், எம்மண்டலமும் கொண்டருளிய வேந்தர் என்றும் சிறப்பிக்கப் படுகின்றார். (கல். ஆண்டறிக்கை. 27/1911 ; 356/1912.) இவ்வேந்தனது ஆட்சியில் காஞ்சிபுரம் பகுதியில் போகைய தேவமகாராயர் என்பவர் பிரதானியாக விளங்கினார். அந்நாளில் சீனிவாசயச்வன் என்ற வடமொழிப் புலவன் காவியப் பெயரால் உபமன்யு சிவபக்த விலாசம், ஏகாம்பரேசஸ்தவம் என்ற நூல்களையும் வேறு இரண்டு நூல்களையும் செய்தான். காஞ்சி நகரத்து வித்வ சபை கூடி பக்த விலாசத்தை அரங்கேற்றம் செய்தனர். அந்த நாள் சகம். 1453. கர ஆண்டு கும்ப மாதம் 3 ஆம் நாள் வெள்ளிக்கிழமை. (9—2—1532); வேந்தன் அப்புலவனைப் பாராட்டிச் செய்யூரில் வீடும் நிலமும் கொடுத்துச் சிறப்பித்தான் என்று காஞ்சிபுரத்து ஏகாம்பரநாதர் கோயில் கல்வெட்டொன்று (கல். ஆண்டறிக்கை. 274/1955-6) கூறுகிறது.

இங்ஙனம், கி. பி. பதினாறும் நூற்றாண்டில் தோன்றிய பக்த விலாசத்தைக் கி. பி. 11-2 நூற்றாண்டில் தோன்றிய சேக்கிழாருக்கு முதனூலாய்த் துணை செய்தது என்பது உண்மையறிவுக்குப் பொருத்தமாகிறதா, அறிஞர்கள் காண்பார்களாக. இதுபோலவே, மெய்கண்டார் அருளிய சிவஞான போதம் என்ற நூல் ரௌரவாகமத்துப் பாச விமோசனப் படலத்து மொழி பெயர்ப் பென்று யாரோ சிலர் பொய் கூறிவிட்டனர்; அதனைச் சிவாக்கிரயோகிகள் என்பவர் மெய்யென்று நம்பிச் சங்கிரகம், விஸ்துருதம் என இரு பாடியங்களை வடமொழியில் எழுதினர் ; மாதவச் சிவஞான முனிவர் தாம் தமிழ்ச் சிவஞான போதத்துக்கு எழுதிய சிற்றுரை பேருரைகளில் அது, வடமொழி ரௌரவாகம மொழி பெயர்ப்பென்று எழுதினார். அந்நூல்களைப் படித்த சைவர் அனைவரும் உண்மையென்றே எண்ணினர். அணிமையிற் சில ஆண்டுகட்கு முன் புதுச்சேரியில் பிரெஞ்சு நாட்டு அறிஞர் கூடி ரௌரவாகமத்தைக் கண்டு ஆராய்ந்து வெளியிட்டனர். அதன் கண் பாபவிமோசனமும் இல்லை ; சிவஞான போதமும் இல்லை என்பது தெளிவாயிற்று. அதனோடு மெய்கண்டார் அருளிய சிவஞான போதம் தனித் தமிழ் முதனூல் என்பது கலக்கமறத் தெளிய விளங்குவதாயிற்று.

இங்ஙனம் உண்மைகளைக் கண்டு உரைப்பதை விடுத்துப் பொய்யும் புனைந் துரையும் தொடுத்துப் பழைமையின் உண்மை நிலை தோன்றாவாறு செய்யும் புன்செயல் நாட்டில் சிறப்பாகச் சமய இலக்கியத் துறை களில் இடம் பெற்றிருப்பது வருந்தத் தக்கது. இது போன்ற தீய செய்கைகளால் பழங்காலப் பல்லவர், சோழர், பாண்டியர், கங்கர், கடம்பர் முதலிய வேந்தர் மரபுகளின் உண்மை வரலாறு மறைந்து போயிற்று. மலைகள் குன்றுகள் ஆறுகள் நாடுகள் ஆகிய வற்றின் பழைமையியல் மாறி மறைந்திருக் கின்றன.

சங்ககாலப் பாண வேந்தர் மரபு புராண வுலகத்து மரபினோடு தொடர்புண்டு உண்மையொளி இழந்துளது; பல்லவ மல்லனால் நிறுவப் பெற்ற கடற்கரை மாமல்ல புரம், மாபலிபுரமாய்ப், பல்லவர் வரலாற் றுண்மையைப் போக்கிவிட்டது. செம்மண் பரந்த நாடு என்ற பொருளில் நிலவும் நாடு அண்ணா நாடு; அந்நாட்டு மலை அண்ணாமலை; அருணகிரி, அருணாசலம், சோணகிரி, சோணா சலம் எனப் பொய்ப் பெயர் போந்து அதனை மறைத்து விட்டன. அந்நாட்டுச் செம்மண் மலையில் தோன்றிச் செந்நிலத்தில் தவழ்ந்து செந்நீர் பெருகி வரும் சேயாறு, சண்முகநதி என்றும் புராணவிருளிற் புகுந்து கையின் பெயர் கொண்ட பாகுநதி என்றும் பொய் மாலை சூடிப் பொலிகிறது. வடார்க்காடு மாவட்டத்தில் மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி யோடிவரும் பாலியாறு வெள்ளிய மண்ணும் மணலும் பரந்த நிலப் பகுதியில் ஓடி வெண்மை நீர் பெருகிவருவது பற்றிப் பாலாறு எனப் படுவது; அதனைப் புராணச் சூழலிற் புகுத்திப் புனைந்துரையால் மறைத்து உண்மை நிலை புலனாகாத வகையில் க்ஷீரநதி எனக் குழறுகின்றார்கள்.

அவ்வக் காலங்களில் நாடாண்ட மன் னர்களும் அரசியல் தலைவர்களும் செல்வர் களும் தோன்றித் திருக்கோயில்களில் வழி பாடாற்றித் திருப்பணி செய்து சிறப்புற் றனர். அவர்களின் பெயரும் பணியும் மறையும் வகையில், இந்திரன் முதலிய தேவர்களும், சூரியன் முதலிய கிரகங்களும், இராமன், தருமன், அருச்சுனன், வீமன் முதலிய இதிகாசத் தலைவர்களும், யானை, குரங்கு, பருந்து, நாரை, கழுகு முதலிய உயிரினங்களும் திருப்பணி செய்து உய்ந்த தாகப் பொய் புனைந்துரைக்கும் தலபுரா ணங்கள் தோன்றி உண்மை வரலாற்றை மூடி மறைத்துவிட்டன.

நாட்டின் வரலாற்றுக் குறிப்புக்களாக உள்ள கல்வெட்டுக்களும், செப்பேடுகளும், பல்லாயிரக் கணக்கில் இந்தியப் பேரரசின் ஆட்சி எல்லைக்குட்பட்ட கல்வெட்டுத் துறை யின்கண் புதைபட்டுள்ளன. 1903 ஆம் ஆண்டுக்குப் பின் எடுக்கப்பட்ட கல்வெட்டுக் களை அத் துறையினர் வெளியிடவே இல்லை. இதனை ஏன் என்று கேட்பவரும் இல்லை; சுமார் 70 ஆண்டுகட்கு முன் வெளியான தொகுதிகளும் இப்போது எங்கும் கிடைப்ப தில்லை. கிடைக்கச் செய்யவேண்டுமென எண்ணும் அரசியல் அறிஞர்களும் தலைவர் களும் செல்வர்களும் இந்நாளில் நம் நாட்டில் இருப்பதாகத் தோன்றவில்லை. அரசியல் வாழ்வில் இருந்த அடிமையிருள் நீங்கி இருபத்தைந்து ஆண்டு கழிந்தனவே; வரலாற்றறிவுக் குரிய கல்வெட்டு ஆராய்ச்சிக் கமைந்தவை, சுமார் 100 ஆண்டுகளாகப் படி எடுக்கப்பட்டவற்றை வெளியிட்டு வர லாற்று அறிவுக்கு ஆதரவு செய்யும் நல்லரசு தோன்றவில்லையே என அறிஞர்கள் வருந்து கின்றனர். கல்லூரிகளில் மேனாட்டு வர லாறுகளை உயர்நிலையில் கற்றுப் பட்டம் பெற்ற அறிஞர்கள் மிகப் பலர் கல்வித் துறையிலும் கல்வெட்டுத் துறையிலும் தலைமை தாங்குகின்றார்கள்; எனினும், வரலாற்றுணர்வு பெருகிச் சிறப்பெய்துவிக்க வல்ல கல்வெட்டுக்களை மக்கள் எளிதில் பெற்று அறிவு பெறுமாறு செய்யும் பரந்த பண்புடையோர் முன்வராதிருப்பது மிகவும் வருந்தத் தக்கது; இந்நிலையை மனம் கொள்ளாது ''மாண்டார் நீராடி'' மகிழ்வது நமது அரசுக்கு மாண்பாகாது.

---

# ஒரு மரபு

[திரு. டாக்டர் மு. வரதராசனார் எம். ஏ., எம். ஓ. எல்., பி. எச். டி.]

*பேராசிரியர் டாக்டர் மு. வ. அவர்கள் 1912 இல் வடஆர்க்காடு, திருப்பத்தூரில் முனிசாமி முதலியார், அம்மாக்கண்ணு அம்மையார் ஆகியோர்க்குத் தோன்றிய அருந்தவச் செல்வர். 1935 ஆம் ஆண்டில் வித்துவான் தேர்வில் முதல்வராகத் தேறி ஆயிரம் ரூபாய் பரிசுபெற்றவர். தொடக்கத்தில் அலுவலக எழுத்தராகப் பணியாற்றிய இவர் படிப்படியாக உயர்ந்து சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியராக இன்று விளங்குகிறார். 1939 முதல் இருபது ஆண்டு*



*கட்கு மேல் சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றினார். தமக்கெனத் தனிநடை அமைத்துக் கொண்டு தமிழன்பர்கள் உள்ளமெலாம் கவர்ந்த இவர் ஐம்பதுக்குமேற்பட்ட ஆராய்ச்சி, கட்டுரை, புதின நூல்களை எழுதியுள்ளார். இவர்தம் திருக்குறள் தெளிவுரை இதுவரை எழுநூறாயிரம் படிகள் விற்பனையாகி, தமிழ் நூல் விற்பனை உலகில் ஒரு பெறற்கரிய சிறப்பைப் பெற்றுள்ளது. இவர் 'சாகித்ய அகாதெமி' யின் பரிசைப்பெற்றவர்.*

நாடக முறையில் தலைவன் தலைவி முதலானோரின் கூற்றுகளை அமைக்குமிடத்தில், புலவர் தம் உணர்ச்சிகளையோ கருத்துகளையோ பாராட்டுகளையோ நன்றியறிதலையோ நேரே புலப்படுத்துவதற்கு இடம் இல்லை. தம் நாடகத்தில் படைக்கும் கற்பனை மாந்தர் ஒருவரின் வாயிலாக, அந்தக் கற்பனை மாந்தர் கூறுவதாக, எந்தக் கருத்தையும் உணர்ச்சியையும் அமைக்கலாம். ஆனால் அவ்வாறு அமைக்கப்படும் உணர்ச்சியோ கருத்தோ அந்தக் கற்பனை மாந்தரின் வாழ்வுக்கு இயைந்ததாக இருத்தல் வேண்டும்; அவர்கள் உணரக்கூடிய உணர்ச்சியாக, அவர்கள் கருதக் கூடிய கருத்தாக இருத்தல் வேண்டும். அவர்களுக்கு எட்டாததாக, பாடிய புலவர் மட்டும் உணரக் கூடியதாகவும் கருதக் கூடியதாகவும் இருத்தல் கூடாது.

எடுத்துக் காட்டாக:—

களவொழுக்கத்தில் தலைவி வீட்டை விட்டு வெளியே செல்லாதவாறு தடுத்துக் காக்கப்படுகிறாள். இதனால் தலைவன் அவளைக் காண வந்து, காணாமல் திரும்ப நேர்கிறது. அவன் பெரிதும் வருந்திப் பெருமூச்செறிகின்றான். அந்நிலையில் அவனை நோக்கித் தோழி கூறுகிறாள்: "பாரியின் குன்றங்கள் காக்கப்படுதல் போல் உன் காதலியும் இற்செறிக்கப்பட்டுக் காக்கப்படுகிறாள்" என்கிறாள்.

> புள்ளுப்பதி சேரினும் புணர்ந்தோர்க் காணினும்
> பள்ளி யானையின் வெய்ய உயிரினை
> அழிபட வருந்திய எவ்வமொடு பெரிதழிந்து
> எனவ கேளாய் நினையினை நீநனி
> உள்ளினும் பனிக்கும் ஒள்ளிழைக் குறுமகள்
> பேரிசை உருமொடு மாரி முற்றிய
> பல்குடைக் கள்ளின் வண்மகிழ்ப் பாரி
> பலவு று குன்றம் போலப்
> பெருங்கவின் எய்திய அருங்காப் பினளே.

இவ்வாறு பாடியவர் கபிலர். அவர் அமைத்த உவமையில் அவர்தம் நண்பனும் புரவலனுமாகிய பாரியின் பறம்புமலையைக் குறிப்பிடுதல் பொருந்தும். ஆயின், இப் பாட்டில் உள்ள கூற்று, கபிலரின் கருத்தோ, உணர்ச்சியோ அன்று; கபிலர் படைத்த தோழியின் கூற்று; நாடக முறையில் அமைந்த இக் கூற்று, தோழி தலைவனுக்குக் கூறுவதாகவே கொள்ளத்தக்கது. எனவே, பாரி பற்றி அமைந்த உவமை, கபிலர்க்கு மட்டும் ஏற்புடையதாக இருத்தல் பொருந்தாது. தோழி உணர்ந்து கூறுவதாக

அமைந்தால்தான் அது பொருந்தும். அக் காலத்துப் புகழ் பெற்ற பெருவள்ள லாகிய பாரியைப் பற்றி நாட்டுமாந்தர் அனைவரும் அறிந்திருத்தல் இயற்கை. ஆகவே, தோழி தலைவனிடம் கூறியதாக அமைந்த இக்கூற்றில், தோழியும் தலைவ னும் நன்கு அறிந்த பறம்புக் குன்றுகள் காக்கப்பட்ட அருமை குறிப்பிடப்படுதல் பொருந்துவதாகும்.

கார்காலத்தில் திரும்பி வருவதாகக் கூறிப் பிரிந்து சென்ற தலைவன், இன்னும் வரவில்லை. கார் காலம் வந்து விட்டது. வானத்தில் கருமுகில்கள் திரண்டு மழை பெய்யத் தொடங்குகின்றன. இந்நிலையில் அந்த மழை முகில்களைக் கண்ட தலைவி, ''என் துன்பத்தை எவ்வாறு தாங்குவேன்? அதியமான் நெடுமான் அஞ்சி அருள் நெஞ் சத்துடன் தேர்களை இரவலர்க்குக் கொடுத் திடும் திருவோலக்கம் போல், மழை முகில்கள் வானத்தில் திரண்டு பெய்கின் றனவே'' என்கிறாள்.

''நடுங்கல் ஆனா நெஞ்சமொடு இடும்பை
யாங்ஙனம் தாங்குவேன் மற்றே ஓங்குசெலல்
கடும்பகட்டு யானை நெடுமா னஞ்சி
ஈர நெஞ்சம் ஓடிச்சேண் விளங்கத்
தேர்வீசு இருக்கை போல
மாரி இரீஇ மான்றன்றால் மழையே.''

அதியமான் நெடுமானஞ்சி ஔவையாரின் அன்புக்கும் பாராட்டுக்கும் உரிய அரசன். அவனுடைய கொடைச்சிறப்பைப் புலவர் கூறிப் புகழ்தல் பொருந்தும். அவன் நாட்டுக் குடிமக்கள் பலரும் அவனது வண்மையை அறிந்திருத்தல் இயல்பே ஆதலால், இப் பாட்டில் காணும் தலைவி, வானத்துக் கரு முகில்களின் தன்மையை அவனுடைய திரு வோலக்கத்தோடு ஒப்பிட்டுக் கூறுதல் பொருந்துவது எனலாம்.

தலைவன் பொருள் தேடும் முயற்சியை மேற்கொண்டு தன் ஊரையும் நாட்டையும் விட்டுப் பிரிகின்றான். வழியில் ஓரிடத்தில் தங்கியபோது, அவனுடைய நெஞ்சம், தலை வியின் பிரிவாற்றாமையை நினைந்து வருந்து கிறது; தலைவியை நாடித் திரும்பிச் சென்றால் வறுமையைக் கடக்க இயலாமற் போகுமே என்றும் பொருள் தேடும் முயற்சியில் முனைந்து தொடர்ந்து சென்றால் தலைவியின் பிரிவு தினைந்து வருந்தி அழிய நேருமே என்றும், மீள்வதா முனைவதா என்று துணிய முடியாமல் கலங்குகிறான். இந் நிலையில் அவன் தன் நெஞ்சை நோக்கிக் கூறுவதாக ஒரு பாட்டு உள்ளது. ''காவிரி கடலொடு கலக்கும் துறையில், அலைகள் வருவதும் மீள்வதுமாக உள்ளது போல், மீனொடு கரைக்கு வந்து மாந்தர் விட்டகன்ற மாலைகளோடு திரும்பிச் செல்லும் கடலலைகள் போல், ஒரு நிலையில்லாமல் கலங்குகிறாயே நெஞ்சமே'' என்கிறான்.

''கான யானை கவினழி குன்றம்
இறந்துபொருள் தருதலும் ஆற்றாய் சிறந்த
சில்லைங் கூந்தல் நல்லகம் பொருந்தி
ஒழியின் வறுமை அஞ்சுதி அழிதகவு
உடைமதி வாழிய நெஞ்சே........
கழைமாய் காவிக் கடல்மண்டு பெருந்துறை
இறவொடு வந்து கோதையொடு பெயரும்
பெருங்கடல் ஓதம் போல
ஒன்றின் கொள்ளாய் சென்றுதரு பொருட்கே.''

இங்கு, தலைவன் தான் கண்ட கடற்கரைக் காட்சியை நினைவில் கொண்டு, தன் நெஞ் சம் அந்த அலைகளைப்போல் ஒருநிலைப் படாமல் அலைகின்றதே என்று கூறும் உவமை பொருந்தும். இக் கருத்தை நாடக முறையில் அமைத்த புலவர் அந்தக் கடற் கரைத் துறைமுகத்தைக் காவிரிப்பூம்பட்டி னத்தைச் சார்ந்தவர். அவர் பெயர் காவிரிப் பூம்பட்டினத்துக் காரிக் கண்ணனார் என் பதைக் கருதும்போது இதன் காரணம் புலனா கின்றது. புலவர் தம் கருத்தை, தாம் படைத்த நாடகமாந்தர்க்குப் பொருந்துமாறு கூற்று அமைத்துள்ளமை காணலாம்.

இவ்வாறு புலவர் தம் உணர்ச்சியையும் தாம் படைத்த கற்பனை மாந்தர் வாயிலாகக் கூறும்போது, அளவறிந்து அமைத்தல் வேண்டும். கற்பனை மாந்தரான தலைவன் தலைவி முதலானோரின் கருத்துக்கும் உணர்ச் சிக்கும் இயையும் எல்லை அறிந்து, அந்த எல்லை கடவாமற் காத்தல் வேண்டும். அவ் வாறு அளவு அறிந்து அமைக்கத் தவறின், நாடக முறைக்கு ஏலாததாக ஆகிவிடுதலும் உண்டு.

எடுத்துக் காட்டாக:

தலைவன் அரசனுடைய ஆணையை ஏற்றுப் போர்க்களத்துக்குச் சென்று போர்

வினையில் ஈடுபட்டிருந்தான். தலைவி அவனைப் பிரிந்து சில திங்கள் தனியே இருக்க நேர்ந்தது. போர்க் கடமையில் முனைந்திருந்த காரணத்தால் தலைவன் ஒருவாறு ஆற்றியிருந்தான். பகைவர் பணிந்து திறை கொடுத்தனர். அரசனது கடமை முடிந்தது. பகைமை தீர்ந்தது. தலைவி பற்றிய நினைவு தலைவனுக்கு மிகுதியாயிற்று. ஊர்க்குத் திரும்ப வேண்டும் என்ற ஆவல் பெருகியது. தேர் பூட்டினுன் பாகன். தேர் புறப்பட்டு வரும் வழியில், தலைவன் தேர்ப் பாகனை நோக்கி, ''விரைவில் சென்று தலைவியைச் சேரும்வகையில், தேரை விரைந்து செலுத்துக'' என்கிருன். அப்போது, ''தலைவி பெறுதற்கு அரியவள், அப்படிப் பட்டவளை விரைவில் காண வேண்டும்'' என்று அறிவிக்கிருன். தலைவியின் அருமைப் பாட்டை உணர்த்துமிடத்து, குடவாயில் போன்ற அருமைப்பாடு உடையவள் என்கிருன். அந்த அளவில் குறிப்பிட்டிருப்பின், அது தலைவனுடைய கூற்று ஆவதற்குப் பொருந்தும். ஆயின், பன்னிரண்டு அடிகளில் அக்காலத்து அரசியல் நிகழ்ச்சிகள் சிலவற்றை விளக்குதலைக் காண்கிரேம்.

''வந்துவினை முடித்தனன் வேந்தனும் பகைவரும்
தந்திறை கொடுத்துத் தமரா யினரே
முரண்செறிந் திருந்த தானை இரண்டும்
ஒன்றென அறைந்தன பணையே நின்தேர்
முன்னியங்கு ஊர்தி பின்னிலை ஈயாது
ஊர்க பாக ஒருவினை கழிய
நன்னன் ஏற்றை நறும்பூண் அத்தி
துன்னருங் கடுந்திறல் கங்கன் கட்டி
பொன்னணி வல்வில் புன்றுறை என்றங்கு
அன்றவர் குழீஇய அளப்பருங் கட்டூர்ப்
பருந்துபடப் பண்ணிப் பழையன் பட்டெனக்
கண்டது நோனு னாகித் திண்டேர்க்
கணையன் அகப்படக் கழுமலம் தந்த
பிணையலங் கண்ணிப் பெரும்பூட் சென்னி
அழும்பில் அன்ன அறாஅ யாணர்ப்
பழம்பல் நெல்லின் பல்குடிப் பரவைப்
பொங்கடி படிகய மண்டிய பசுமிளைத்
தண்குட வாயில் அன்னேள்
பண்புடை ஆகத்து இன்துயில் பெறவே.''

தலைவன் தன் கடமையை முடித்த மகிழ்ச்சியும் தலைவியை விரைவில் சென்று காண வேண்டும் என்ற ஆவலும் நிறைந்த மனநிலையில், தேரை விரைவில் செலுத்தல் வேண்டும் என்ற எண்ணம் தவிர, வேறு நினைவுகளுக்கு இடந்தரல் இயலாது. வேறு நினைவு வரினும், அந் நினைவு சுருங்கிய அளவில்மட்டுமே அமைவதாகும். நன்னன் முதலான குறுநில மன்னர் பலர் பற்றியும், பழையன் கொல்லப்பட்டது பற்றியும், கணையன் அகப்பட்டது பற்றியும், கழுமலத்தை வென்று கைப்பற்றியது பற்றியும், இறுதியில் குடவாயிலின் வளம் பற்றியும் கூறவேண்டிய அளவுக்கு அப்போது தலைவனுடைய மன நிலை இடம் தரல் அரிது.

இவ்வாறு நாடகமுறையில் அமையும் கூற்றுகளில், சில இடங்கள் பற்றியும் சில புரவலர்கள் பற்றியும் விரிவான விளக்கங்களைப் புலவர்கள் அமைத்தல் அக்காலத்து மரபாக இருந்தது என்று கொள்ளல் வேண்டும். பட்டினப்பாலை என்னும் நெடும் பாட்டின் அமைப்பை ஆராய்ந்தால், இதனைப் பழங்காலப் புலவர்கள் மரபாகக் கொண்டிருந்தனர் என்பது மேலும் தெளிவாகின்றது.

பொருள் தேடும் பொருட்டுப் பிரிய எண்ணியிருந்த தலைவன், தலைவியின் பிரிவாற்ருமை நினைந்து, பிரியாமல் நின்றது பற்றிக் கூறுவது பட்டினப்பாலை. செலவழுங்கல் என்பது அதன் துறையாகும். முந்நூற்றேரடிகள் உடைய இந்நெடும் பாட்டு முழுதுமே செலவழுங்கிய (பயணத்தைக் கைவிட்ட) தலைவன் கூறிய கூற்ருக அமைந்தது. ''குன்ருத சிறப்பை உடைய காவிரிப்பூம்பட்டினத்தையே பெறக்கூடிய நல்ல வாய்ப்பே ஆயினும், என் காதலியை விட்டுப் பிரிந்து வாரேன், நெஞ்சே! பிரிந்து செல்லும் பாலை வழிகளோ திருமாவளவன் பகைவர் மேல் எறிந்த வேலைவிடக் கொடியவை; பிரியாமல் நின்று பெறத் தக்கனவாகிய காதலியின் தோள்களோ அவனுடைய செங்கோலைவிடத் தண்மை யானவை'' என்பதே தலைவனுடைய கூற்று ஆகும்.

''முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்
வாரிருங் கூந்தல் வயங்கிழை ஒழிய
வாரேன் வாழிய நெஞ்சே!......
திருமா வளவன் தெவ்வர்க்கு ஒக்கிய
வேலினும் வெய்ய கானம்அவன்
கோலினும் தண்ணிய தடமென் தோளே.''

இந்த ஆறு அடிகளே தலைவனுடைய அகப் பொருட் கூற்று அமைந்தவை. முதல் இருநூற்றுப் பதினேழு அடிகளும் திருமா வளவனுடைய காவிரிப்பூம்பட்டினத்தின் சிறப்புக்களையும், எஞ்சிய எழுபத்தெட்டு அடிகளும் அவனுடைய வீரத்தின் சிறப்புக் களையும் கூறுவன. ''என் காதலியை விட்டுப் பிரியேன்; எவ்வளவு பெரிய செல்வத்தைப் பெறுவதாக இருப்பினும் விட்டுப் பிரியேன்'' என்று பலநாள் எண்ணி ஏற்பாடு செய் திருந்த தன் பயணத்தைக் கைவிடுவதாகிய தலைவனுடைய மனநிலை உணர்ச்சி மிகுந்தது; பெருங்கொந்தளிப்புக்குப் பின் ஏற்படும் ஒருவகை அமைதி போன்ற மனநிலை அது. அந்த மனநிலையோடு சில சொற்கள் கூறவேண்டிய தலைவன், இருநூற்றுத் தொண்ணூற்றைந்து அடிகள் கொண்ட நீண்ட வருணனையில் ஈடுபடுதல் இயலாது; நாடகமுறையில் அமையும் கூற்றுக்கு ஏலாதது அது. ஆயினும், அக்காலப் புலமைமரபு இடங் கொடுத்தமையால், உருத்திரங்கண்ணனார் பாடிய இந்த அகப்பொருட்பாட்டில் திருமாவளவனுடைய பட்டினத்தையும் வீரத் தையும் சிறப்பித்தலையே கடமையாகக் கொண்டார்; பாட்டுக்கும் பட்டினப்பாலை எனப் பெயர் அமைத்தார். புரவலரைப் பாடும் புலவர், தம் நன்றியுணர்ச்சி உந்த, இவ்வாறு நீண்ட பல அடிகளால், அகப் பொருள் பாடலின் நாடக முறைக்கு இயைந்து வராத விளக்கங்களையும் மரபெனக் கொண்டு அமைத்திருத்தல் அகநானூற்றி லும் நற்றிணையிலும் பல பாட்டுக்களில் காண லாம்.

சங்க காலத்திற்குப் பிறகு இவ்வழக்கம் வரவரக் குறைந்தது எனலாம். நாடக முறையில் கற்பனை மாந்தர் கூறும் கூற்றுக்கு இயைந்து வாராமையால் இவ்வாறு நீண்ட விளக்கங்களையும் குறிப்புக்களையும் அவர்கள் வாயிலாகக் கூறுவதைப் புலவர் கை விட்டனர். நன்றியுணர்ச்சியால் தம் புரவல ரைப் புகழ்ந்து பாராட்ட விரும்பிய விடத்தும் தம் நூலுள் ஆங்காங்கே ஒரு சில பாட்டுக் களில் தம் கூற்றாகவே பாடியுள்ளனர். தம் காவ்ய மாந்தர் வாயிலாகக் கூறாமல், தம் கூற்றாகவே அப் பாராட்டுரைகளை அமைத் துள்ளமையால் அவை பொருந்துகின்றன. கம்பர் தம் பெருங்காப்பியமாகிய இராமா யணத்தில் வெண்ணெய் நல்லூர்ச் சடையப்ப வள்ளலையும், புகழேந்திப் புலவர் தம் நளவெண்பாவில் சந்திரன் சுவர்க்கியையும் புகழ்ந்து பாடியிருத்தல் காணலாம். ஒட்டக் கூத்தர் முதலானோர் தம் தம் புரவலர்மீது தனித்தனி நூல்களே பாடியுள்ளனர். ஆதலின் அவை வேறு வகையின ஆகும்.

---

## நந்தமிழிலன்றி வேறெம்மொழியிலேனு முளவோ?

மொழியின் அமைப்பையும் மக்களியற்கை உலக இயற்கை களையுந் திறம்பட விரித்துரைத்த தொல்காப்பியம் போன்ற மிகப் பழைய நூலை நமது செந்தமிழிலன்றி வேறு மொழிகளிற்காணல் இயலுமோ? அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற் பொருளையும் முற்றும் எடுத்து விளக்கும் திருக்குறள், நாலடியார் போன்ற அரும் பெரும் நூல்களை நம் செந் தமிழ் மொழியின்றி வேறெந்த மொழியும் உடையதாமோ? உலகவியற்கை பிறழாது பாடிய பத்துப்பாட்டு, கலித்தொகை முதலான பழைய தமிழ்ப் பாட்டுகளுக்கு நிகரானவை வேறெந்த மொழியிலேனும் எடுத்துக் காட்டல் இயலுமோ! சிலப்பதிகாரம், மணிமேகலை, என்னும் பெருந்தமிழ்க் காப்பியங்களோடு ஒத்தவை எமமொழியிலேனும் உளவோ!

—மறைமலையடிகள்

அறிவுரைக் கொத்து பக்கம் கூஉ

# தமிழ் இலக்கிய வரலாறும் குறைபாடுகளும்

[திரு. டாக்டர் வ. சுப. மாணிக்கம் எம். ஏ., எம். ஓ. எல்., பி. எச். டி.]

*செட்டிநாட்டில் நகரத்தார் மரபில் 1917ஆம் ஆண்டில் தோன்றியவர் இவர். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் படித்துப் புலவர் தேர்வில் முதல் வகுப்பில் முதன்மையாகத் தேறினர். அப் பல்கலைக் கழகத்திலேயே விரிவுரையாளராகப் பணியேற்றூர். அவ்வமயமே மேலும் படித்து பி.ஓ எல். எம்.ஏ., எம்.ஓ.எல்., முதலிய பட்டங்களைப் பெற்றதோடு 'சங்க இலக்கியத்தில் காதல் பண்பு' என்ற தலைப்பில் ஆராய்ந்து டாக்டர் பட்டமும்*



*பெற்றூர். பல ஆண்டுகள் காரைக்குடி அழகப்பா கலைக் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றிச் சில ஆண்டுகள் அதன் முதல்வராகவும் பொறுப் பேற்றிருந்தார். தற்பொழுது அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவராக விளங்குகின்றூர். சொற்செறிவும் பொருட் செறிவும் மிக்க நடையில் பேசவும் எழுதவும் வல்லவர். இவர்தம் நூலான 'வள்ளுவம்' திருக்குறளைப்பற்றி எழுந்துள்ள சிறந்த ஆராய்ச்சி நூலாகும்.*

தமிழ் உலகத் தொன்மொழி சிலவற்றுள் ஒன்று என்பதும், பண்டே இலக்கிய இலக்கணம் கண்டமொழி என்பதும், இன்று வரை இடையருது இலக்கிய ஒழுக்கம் உடைய மொழி என்பதும் யாவரும் இசைந்த உண்மை. மறுப்பின்றி நிறுவப்பட்ட கருத்து ஆதலின் தமிழ்மொழியின் தொன்மைக்கும் இலக்கிய முதுமைக்கும் சான்று இங்குக் காட்ட வேண்டுவதில்லை.

தமிழின் இலக்கிய வரலாறு பற்றி அறிஞர்கள் தனிக்கட்டுரைகளாகவும் நூல்களாகவும் ஏராளம் எழுதியுள்ளனர். புலவர் வகுப்புக்கும் பட்ட வகுப்புக்கும் இலக்கிய வரலாறு ஒரு பாடமாக இருத்தலின், பாட நூல் என்ற தோற்றத்தில் பல நூல்கள் வந்து கொண்டிருக்கின்றன. இலக்கியம் என்பது ஆசிரியனெடு தொடர்புடையது ஆதலின், புலவர் வரலாறுகளும் வெளி வந்துள. ஆனல் இலக்கிய வரலாற்றுச் சான்றுகளைத் தேடி ஓர்ந்து எழுதும் ஆராய்ச்சி வேகம் சில ஆண்டுகளாகத் தொய்ந்துவிட்டது. மனேன்மணீயம் சுந்தரம்பிள்ளை, பூரணலிங்கம்பிள்ளை, சீனிவாச பிள்ளை, ரா. இராகவையங்கார், மறைமலையடிகள், மு. இராகவையங்கார், கா. சு. பிள்ளை, வையாபுரிப்பிள்ளை, சிவராசபிள்ளை, கனகசபைப்பிள்ளை, இராமசந்திர தீட்சிதர், பி. டி. சீனிவாச அய்யங்கார், டாக்டர் இராச மாணிக்கனர், சாமிக்கண்ணுபிள்ளை, சதா சிவப் பண்டாரத்தார், டாக்டர் சோமசுந்தர பாரதியார், எம். சீனிவாச அய்யங்கார், சோமசுந்தரதேசிகர், தி. பொ. பழநியப்ப பிள்ளை, நீலகண்ட சாத்திரியார், மயிலை சீனி. வேங்கடசாமி, மு. அருணுசலம் முதலிய பெருமக்கள் இலக்கிய வரலாற்றுத் துறைக்கு ஆக்கம் செய்தவர்கள்.

இஞ்ஞான்று பெரும்பாலும் வரும் இலக்கிய வரலாற்று நூல்கள் முன்னேர் எழுதிய கருத்துக்களைத் தொகுத்தும் வகுத்தும் கூறிச் செல்லும் பாங்கின. இன்று மக்களிடைப் பரவாத ஒருதுறைக்கு வலுவும் இல்லை, வளர வாய்ப்பும் இல்லை. இந்நூல்களால் தமிழ் மக்களிடை இலக்கியப் பெயர்களும் ஆசிரியப் பெயர்களும் இலக்கிய விரிவுகளும் பரவியுள. ஆதலால் இவற்றைப் பரப்பு நூல்கள் என்று மதிக்கவேண்டும்.

தமிழிலக்கிய வரலாற்றில் முன்னோர் ஆராய்ந்து காணாத முடிபுகள் பல உள. தமிழிலக்கியம் மிக்க தொல்லிது. ஓர் அரை நூற்றாண்டில் அதன் வரலாற்றைச் செவ்வன் எழுதி விட இயலாது. அண்மைக் காலத்தில் இலக்கிய வெளியீடுகளும் பன்னிலைப் பதிப்புக்களும் பலர் வாங்கும் அளவில் வெளிவருகின்றன. தமிழ்க்கல்வி தொகையளவிலும் பெருகி வருகின்றது. ஆராய்ச்சி வசதிகளும் கூடுகின்றன என்றாலும் இவ்வகை ஆராய்ச்சியெல்லாம் பொது மக்கட்குப் புரியுமா? சோறு போடுமா? என்ற வினைப்புதிர் தமிழாராய்ச்சியுலகைக் கலவரப்படுத்தக் காண்கின்றோம். ஆக்கி ஊக்குவாரின்மையின் ஆராய்ச்சி தொடர்ச்சியின்றி அறுபடவும் ஆய்முனை மழுங்கவும் காண்கின்றோம். வயிறு ஒன்றையே மனித இனம் குறிக்கோளாகக் கருதியிருந்தால்இன்றைய உலக நாகரிகம் வந்திருக்க முடியாது. வயிற்றுப் பசிபோல அறிவுப் பசியும் மனப் பசியும் கொண்டவன் மனிதன். ஆராய்ச்சி அறிவுப்பசியை ஆற்றுகின்றது. தமிழின் வளர்ச்சிக்கும் பற்றுக்கும் முறையான இலக்கியவரலாறு ஒருவந்தம் வேண்டும். ஆராய்ச்சி தூர்வுபடாது தொடர்வுபட வேண்டும். இதுவரை கண்டு தெளியாத முடிபிலிகளைக் கண்டு தெளியும் வாய்க்கால் ஓட வேண்டும். எவ்வளவோ இலக்கியச் சிக்கல்கள் தமிழ் வரலாற்றில் உள. தமிழின் தொன்மையும் இலக்கியப் பன்மையுமே இவற்றுக்குக் காரணம்.

அகத்தியம் என்று ஒரு தொன்னூல் இருந்ததா? பனம்பாரனார் பாயிரம் கூறும் முந்துநூல் ஒன்றா பலவா? அவை யாவை? முச்சங்கங்கள் உண்டெனின் இறையனார் அகப்பொருளுரை சொல்லும் சங்க வரலாறு பொருந்துங் கொல்? இவை பற்றி இன்னும் ஒரு முடிபில்லை. தமிழ் மொழிக்குத் தனியெழுத்து வடிவம் இருந்ததில்லை எனவும் புறநானூற்றின் காலம் கி. மு. 1000-கி. பி. 300க்கு இடைப்பட்டது எனவும் தமிழிலக்கியத் தோற்றம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டுக்கு முந்தியில்லை எனவும் புறநானூற்றில் உள்ள முரஞ்சியூர் முடிநாகராயர், கௌதமனார், வான்மீகியார், மார்க்கண்டேயனார் பாடல்கள் தொல்காப்பியத்துக்கு முற்பட்டன எனவும் பல கருத்து நிலவுகின்றன.

தொல்காப்பியர் காலம் சங்க இலக்கியத்துக்கு முந்தியது, பிந்தியது, கி. மு. 6ஆம் நூற்றாண்டு, கி. மு. 4ஆம் நூற்றாண்டு, கி. பி. 5-ஆம் நூற்றாண்டு என்று பல சாரார் கூறுப. கலித்தொகையும் பரிபாடலும் திருமுருகாற்றுப்படையும், சங்கத்தனவல்ல, ஏழாம் எட்டாம் நூற்றாண்டின என்பர். கலித்தொகை ஐவர் பாடியதா? ஒருவர் பாடியதா? குறுந்தொகை போலப் பலர் பாடியதா? என்று வினவெழுப்புவர் டாக்டர் இராசமாணிக்கனார், 'போக்கறு பனுவற் புலந் தொகுத் தோனே' என்று பாயிரம் குறித்தலின், பலர் பாடிய நூற்பாக்களின் தொகுப்பே தொல்காப்பியம் என்ற கொள்கையரும் உண்டு.

திருக்குறள் எக்காலத்துக்கும் பொருந்தும் என்றாலும் பிறந்த காலம் ஒன்று சுட்டத்தானே வேண்டும். சங்கத்துக்கு முந்திய நூல் என, கி. பி. இரண்டாம் நூற்றாண்டென, கி. பி. ஆறாம் நூற்றாண்டெனக் கால வேறுபாடுகள் சொல்லுப. திருக்குறள் உட்படப் பதினெண்கீழ்க்கணக்கு நூல் எல்லாமே கி. பி. எட்டு ஒன்பதாம் நூற்றாண்டுக்கு உட்பட்டன என்ற கொள்கையுடையாரும் உண்டு.

சிலப்பதிகாரம், மணிமேகலைக் காப்பியங்களின் காலப்பூசல் பல. நற்றிணைப் பாட்டு ஒன்றினை (216) வைத்துப் புனைந்த புனை கதை எனவும் சிலம்பின் செய்திகள் நடந்த காலம் செங்குட்டுவன் காலமாகலாம், காப்பியம் எழுந்தது கி. பி. 825 எனவும் செங்குட்டுவனும் இளங்கோவும் உடன்பிறப்பல்லர் எனவும் மணிமேகலையும் கி. பி. 9ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தது எனவும் கருத்துரை செய்ப.

இலக்கிய வரலாற்றில் மணிவாசகரின் காலப்போரில் ஈடுபட்டவர் பலர். கி. பி 1ஆம் நூற்றாண்டு முதல் 14ஆம் நூற்றாண்டுவரை ஒவ்வொரு நூற்றாண்டிலும் இருந்தார் எனக் காலஞ் சொல்லி வருகின்றனர். மூவருக்கு முன்னவரா? பின்னவரா? என்பது இருகட்சி. சுந்தரர்க்கு மட்டும் முந்தியவர் என்பர் பண்டாரத்தார். 'பொய்யடிமை யில்லாத புலவர்' என்பது மணிவாசகரைக் குறிக்கும் என்பர் சேசையர்.

'கடல்சூழ்ந்த உலகெலாம் காக்கின்ற பெருமான் காடவர்கோன் கழற் சிங்கன்'

என்று சுந்தரர் பாடும் பல்லவன் இராச சிங்கனு (கி. பி. 685-720) மூன்றும் நந்தி வர்மனு (கி. பி. 840-865) அப்பர்க்கும் சம் பந்தர்க்கும் இருநூறுண்டு பிந்தியவர் சுந் தரர் என்பது பொருந்துமா? பெரிய புராணச் சேக்கிழார் இரண்டாங் குலோத்துங்கன் காலத்தவர் எனவும் மூன்றுங் குலோத்துங் கன் காலத்தினர் எனவும் மாறு கருத்துக்கள் உள. அவர் போற்றும் அநபாயன் எந்தச் சோழனைச் சிறப்பாகக் குறிக்கும்?

கம்பர் காலமும் பலகொள்கைக்கு உரிய தாகும். 'எண்ணிய சகாத்தம் எண்ணூற் றேழின் மேற் சடையன் வாழ்வு' என்ற செய்யுட்சான்றினை வைத்து, கி. பி. 9ஆம் நூற்றுண்டு என்ற ஒரு கோட்பாடு உளது. 'இத்தனை தெளிவாகக் காலம் குறிப்பிட் டிருக்கும்போது அதுபற்றிய ஆராய்ச்சி எதற்கு என வினவலாம். ஆனல் இச்செய் யுள் குறிக்கும் காலத்தை ஒப்புக் கொள் வதாயின் பலபல அசம்பாவிதங்களை ஒப்புக் கொள்ள நேரிடும்' என்பர் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை (தமிழ்ச்சுடர் மணிகள் பக். 129) 'எண்ணூற்றேழ்' எனப் பிரித்துப் பேரெண்ணுகிய ஆயிரம் உய்த்துணர வைக் கப்பட்டது என்று மகாவித்துவான் இராகவ ஐயங்கார் உரைப்பர். சொச்சம் விடப்படுதல் உண்டேயன்றி மொத்தம் விடப்படுவதில்லை. 'சென்னி நாள் தெரியல் வீரன் தியாக விநோதன்' என்பது மூன்றுங் குலோத்துங் கனைக் (கி. பி. 1178-1216) குறிப்பதாகக் கொண்டு கம்பர் காலம் 12ஆம் நூற்றுண்டு என்ப. சேக்கிழார், கம்பர் இவரிடை முன்ன வர் யாரோ?

இதுகாறும் தொகுத்துக் கூறியவற்ருல், தொல்காப்பியம், சங்கஇலக்கியம், திருக் குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, பெரிய புராணம், இராமாயணம், தேவாரம், திரு வாசகம் முதலான பெரிய நூல்களின் காலம் வரையறுக்கப்படவில்லை என்பது போதரும். போதரவே கி.பி. 10ஆம் நூற்றுண்டு வரை முறையான இலக்கிய வரலாறு எழுத இயலாது என்பதும், இதுவரை எழுதப் பட்டவை ஒப்ப இயலா என்பதும் விளங்கும். இவையே யன்றி இன்னும் பலவற்றுக்குக் காலக் கோளாறு உள. புறப்பொருள் வெண்பாமாலை, கல்லாடம், பெருங் கதை இவற்றின் காலங்களும், இளம் பூரணர், தெய்வச்சிலையார், பேராசிரியர், பதிற்றுப்பத்து, புறநானூறு, சிலப்பதிகாரம், அகநானூறு இவற்றின் குறிப்புரையாசிரியர் காலங்களும் தெளிவில. நக்கீரர் ஒருவரா? பலரா? 'பொய்யடிமையில்லாத புலவர்' என்ற அடிக்கு 'தரணியிற் பொய்ம்மையிலாத் தமிழ்ச் சங்கமதிற் கபிலர் பரணர் நக்கீரர் முதல் நாற்பத்தொன்பது பல்புலவோர்' என்று நம்பியாண்டார் நம்பி கூறிய விளக் கம் சரியா? பதினேராம் திருமுறையில் வரும் நக்கீரதேவநாயனர், கல்லாட தேவ நாய னர், கபிலதேவ நாயனர், பரணதேவ நாய னர் என்ற இவர்கள் சங்கச் சான்ருேர்களா? தமிழக வரலாற்றிலும் தமிழிலக்கிய வரலாற் றிலும் கி. பி. 3ஆம் நூற்றுண்டு முதல் 6ஆம் நூற்றுண்டு வரை இருண்ட காலம் என்ற ஒருகாலம் கொள்கின்ருேம். இஃது உண்மையிலே இருண்ட காலமா? ஆராய்ச் சிக் குறைவால் இருண்ட காலமா? இவை போலப் பெரியனவும் சிறியனவுமான சிக் கல்கள் தமிழிலக்கிய வரலாற்றின் ஓட்டத் தில் மறுக்கம் தருகின்றன.

முதுமைப்பட்ட ஒரு வரலாற்றில் சில சிக்கல்கள் இருக்கும் என்பதை உடன்பட லாம். நம் இலக்கிய ஆராய்ச்சியில் என்ன ஒரு வியப்பு என்ருல் பெரும் பெரும் நூல்கள் சான்றுக்கு இருந்தும் அவற்றின் காலங்களை நம்மால் கணிக்க முடியவில்லை. தொல்காப் பியம், திருக்குறள், சிலப்பதிகாரம், மணி மேகலை முதலியன எல்லாம் எவ்வளவு பெரிய நூல்கள். சிலப்பதிகாரத்தில் வர லாற்றுக் குறிப்புக்கள் எத்துணை மண்டிக் கிடக்கின்றன. தனிப்பெரு நூல்கள் கிடைத் திருந்தும் துல்லிய காலக் கணிப்புச் செய்ய இயலவில்லை எனின், சங்க இலக்கியத் தனிப்பாடல்களின் காலங்களையும் இடைக் காலச் சிறுநூல்களின் காலங்களையும் எவ் வாறு கணிக்கப் போகின்ருேம். நூலாசிரி யர்கள் தம் காலம் தோன்றுவாறு எழுதி னர்கள் அல்லது தோன்றக்கூடாது என எழுதினர்கள் என்று சொல்லலாமா? இரா மாயணம் தழுவு காப்பியம் ஆயினும் கம்பரின் காலம் காட்டும் குறிப்புக்கள் இல்லாமலில்லை. பெரியபுராணம் வரலாறு நிறைந்த இடைக் கால வாழ்க்கைக் காப்பியம். தமிழ்நாட்டு வரலாறு எழுதுவதற்குத் தமிழிலக்கியங் களும் துணை செய்கின்றன என்பது வெளிப்

படை. நூலாசிரியன் தன் காலத்தை ஒளித்து வைக்கவில்லை. எந்த எழுத்தாளனும் காலமறைவு செய்ய இயலாது. 'பாயிரம் இல்லது பனுவலன்றே' என்பது அழுத்தமான நூன்மரபு. பாயிரத்தில் ஆக்கியோன் பெயர், வழி, எல்லை, நூற் பெயர், யாப்பு, நுதலிய பொருள், கேட்போர், பயன், காலம், களம், காரணம் என்ற பதினொரு கூறுகள் இருக்கும். இவை வரலாற்றுத் தன்மை கொண்டன. உரையாசிரியர்களுக்குக் கூடப் பாயிரங்கள் இருக்கின்றன. நூலின் தொகுப்புக்கும் தொகுப்பித்தான், தொகுத்தான் முதலான குறிப்புக்கள் உள. ஆதரித்தவனை நூன் முகத்தேயன்றி நூலுள்ளும் சுட்டுவது தமிழிலக்கிய மரபு. ஆதலின் தமிழிலக்கியம் பெரிய அளவிலோ சிறிய அளவிலோ வரலாற்றுக் கூறும் தாங்கியது என்று துணியலாம்.

இலக்கிய வரலாற்று ஆராய்ச்சிக்கு மரபான சில பிரிவுகள் தடையாக உள. சங்க இலக்கியம் அடியாலும் பாவாலும் தொகைப்பெயர் கொண்டவை. குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு இவற்றை அடிக்கணக்கில் தொகைசெய்ததில் என்ன பெரும்பயன்? மாணவர்கள் முதற்கண் சிறிய அளவான குறுந்தொகை படிக்கட்டும். அதன்பின் கூடுதலான அடியுடைய பாடல்களைப் படிக்கலாம் என்று ஒரு கருத்து இருக்கலாம், அவ்வளவே. புறநானூறு, குறுந்தொகை, பத்துப்பாட்டு, பதினெண் கீழ்க்கணக்கு, ஐம்பெருங்காப்பியம், பன்னிரு திருமுறை இவ்வாறு வரும் தொகையெண்கள் நம் கால மனத்தைத் திரிக்கின்றன. புறநானூற்றுச் செய்யுள் எல்லாம் ஏறக்குறைய ஒரு காலத்தன, குறுந்தொகைப் பாடலெல்லாம் ஒரு காலத்தன, பதினெண்கீழ்க்கணக்கு நூலெல்லாம் ஒரு காலம் கொண்டன என்று காலங்கொள்ளுமாறு உள. சங்ககாலம், சங்கமருவிய காலம், இடைக்காலம், தற்காலம் என்ற பாகுபாடு தமிழின் தொன்மைக்கும் அறிவுக்கும் ஒத்ததன்று. தற்காலம் என ஒரு காலம் இருக்கமுடியுமா? ஒவ்வொரு காலமும் அக்காலத்து வாழ்வார்க்குத் தற்காலம் தான். காப்பியகாலம், சிற்றிலக்கிய காலம், உரையாசிரியர் காலம், நீதிநூற் காலம், பத்திக்காலம், தத்துவ காலம், சமணர் காலம், பௌத்தர் காலம், நாயன்மார் காலம், ஆழ்வார் காலம் என்ற பகுப்பெல்லாம் ஒருவழி ஆராய்ச்சிக்குக் கொண்ட பகுப்பாகுமேயன்றி, கால முறையில் ஓடிவரும் பகுப்பாகாது பல்லவர் காலம், சோழர் காலம், பாண்டியர் காலம், நாயக்கர் காலம், ஆங்கிலேயர் காலம், உரிமைக் காலம் என்ற பாகுபாடு இலக்கிய வரலாற்றை நாட்டுவரலாற்றுக் கண் கொண்டு பார்ப்பதாகிவிடும். ஆதலின் கால அடிப்படையில் ஆற்றொழுக்காக இயலும் ஓர் இலக்கியப் பாகுபாடு முறையான இலக்கிய வரலாற்றுக்குத் தேவை.

தமிழ் இலக்கிய வரலாறு எழுதுவார்க்கு இலக்கிய அறிவோடு வரலாற்றறிவும் அதனொடொப்ப மொழி நூலறிவும் வேண்டும். அவ்வக் காலங்களில் பரவலாகப் பயின்ற வேறு சில துறையறிவும் வேண்டும். இவற்றை எந்த அளவுக்குப் பயன்படுத்தலாம் என்ற அளவறிவும் வேண்டும். தமிழிலக்கியத்தைப் பொறுத்தவரை எல்லாக் காலத்தும் நிறைந்த இலக்கியங்கள் இருத்தலின், முதற்கண் இலக்கியச் சான்றுக்கு நன் மதிப்பு வழங்க வேண்டும். இலக்கிய வரலாற்று ஆராய்ச்சிக்கு நல்ல அகச்சான்று மொழித்தன்மை-மொழிமை-என்பது என் கருத்து. ஒப்புமையான கருத்துப்பொருள்களை வைத்து இவர் முன்னவர், இவர் தழுவிய பின்னவர் என்று காலங்கணித்தல் அறிவு முறையன்று.

"Taking into consideration the dates of these Sanskrit works, we are compelled to conclude that the earliest date to which Valluvar can be assigned is 600 A. D."

—History of Tamil Language and Literature p. 84
by Prof. S. Vaiyapuri Pillai

பேராசிரியர் வையாபுரிப் பிள்ளையவர்கள் காலத்துறை ஆராய்ச்சி பெரிதும் செய்தவர். பாணினீயம், பதஞ்சலியின் மாபாடியம், மனுநீதி, கௌடில்யம், பரதமுனிவரின் நாட்டிய சாத்திரம், வாச்சாயனரின் காம சூத்திரம் என்ற நூற்களின் கருத்துக்களோடு ஒத்த கருத்து வரவு பார்த்து, தொல்காப்பியத்தை கி. பி. 5ஆம் நூற்

ருண்டு எனவும் திருக்குறளை கி.பி. 6ஆம் நூற்றுண்டு எனவும் அறுதியிடுவர். எனினும் அவர்தம் ஆராய்ச்சி முறை ஒப்புமைக் கருத்தை வைத்து எழுந்ததாலும், அக்கருத்து முதற்கண் வடமொழிக்கு உரியது என்று வைத்துக் கொண்டதாலும் பிழையாயிற்று. அவர் முறையும் முடிவும் காலத்துறையில் பல தள்ளுபடியாயின.

"In any case it is not clear why it is assumed that certain beautiful ideas could not have gone from Tamil into Sanskrit especially when Sanskrit works of importance were written in South India".

—A History of Tamil Literature p. 49
by Dr. T. P. Meenakshisundaram.

பேராசிரியர் வையாபுரிப்பிள்ளையின் ஒப்புமை முறையைப் பேராசிரியர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் எதிர்முகமாக மறுத்தலை மேலைப்பகுதியால் அறியலாம்.

தமிழாராய்ச்சியில் முதற்கண் தமிழிலக்கியச் சான்றுகளுக்கு நன்மதிப்பு அளித்தல் வேண்டும். புறம்போதல் கூடாது என்பது என் கருத்தில்லை. சான்றின் தராதரங்களை எப்படி மதிக்க வேண்டும் என்பது என் கருத்து. தொல்காப்பியத்து வரும், 'என்ப' 'என்மனார்' என்ற பயனிலைகளுக்கு 'வடமொழி நூலாசிரியர்' என்று எழுவாய் கொண்டிருப்பதை அறிவுள்ளம் உடன்படாது.

முற்கூறியாங்கு இலக்கியத்துறை ஆராய்ச்சியில் மொழியியற் சான்றுகளுக்கும் பேரிடம் தருவோமானால், காலக்கணிப்பை இன்னும் நன்னர்ச் செய்ய முடியும். 'சகரம் முதலில் உள்ள தமிழ்ச் சொற்கள் பரிபாடல் பதிற்றுப்பத்து பத்துப்பாட்டு முதலிய பெருநூல்களில் வரக் காண்டலால் தொல்காப்பியனார் இவற்றுக்கெல்லாம் முற்பட்டவர் என்று துணியலாம்' என்று மகாவித்துவான் இராகவையங்கார் அவர்கள் ஒரு மொழியியற் சான்று காட்டுவர் (தமிழ் வரலாறு 249). இவ்வாசிரியரே மார்க்கண்டேயனாரின் புறப்பாடல் (௩௬௫) தொல்காப்பியத்துக்கு முந்தியது என்று கூறியுள்ளார். இப்புறப்பாட்டில் 'பொன்னந் திகிரி முன்சமத் துருட்டி' என்ற தொடர் வருகின்றது. சமம் என்ற சொல்லாட்சி இருத்தலின் தொல்காப்பியத்துக்குப் பிந்தியதே இப்புறச் செய்யுள் என்று நாம் தெளியவேண்டும். மொழிச்சான்றை ஓரிடத்து மேற்கொண்ட ஆசிரியர் இப்புறப்பாட்டிற் பார்க்க மறந்துவிட்டார் போலும்.

"ஏழியல் முறையது எதிர்முக வேற்றுமை
வேறெனை விளம்பான் பெயரது விகாரமென்று
ஓதிய புலவனும் உளனொரு வகையான்
இந்திரன் எட்டாம் வேற்றுமை யென்றனன்"

என்பது அகத்தியச் சூத்திரம் என்று உரையாசிரியர்கள் பலரும் எழுதியிருப்ப, நாமும் பின்பற்றி வருகின்றோம். இந்நூற்பாவில் விகாரம் என ஓர் இலக்கணக் குறியீடு வருகின்றது. தொல்காப்பியர் திரிபு என்று ஆண்ட குறியீட்டை இடைக்கால இலக்கணர் விகாரம் என ஆளுவர். இது வரலாற்று மொழியியல். இதனால் ஏழியல் என்ற நூற்பா தொல்காப்பியத்துக்கு மிகப்பின்னது என்பது தெளிவுறும்.

"செய்யுட்கள் ஓசை சிதையுங்கால் ஈரளவும்
ஐயப்பா டின்றி அணையுமாம்"

இது மாபுராண வெண்பா எனவும் தொல்காப்பியத்துக்கு முற்பட்டது எனவும் கூறுப. அணையுமாம் என்று முற்றுக்குமேல் ஆம் என்ற துணைவினை வரவு பிற்சங்க மொழிநடை. 'பணியுமாம் என்றும் பெருமை சிறுமை அணியுமாம்' (978) 'அடையாவாம் ஆயங் கொளின்' (939) 'மருந்தென வேண்டாவாம்' (942) என்ற குறள் நடை நினையத்தகும்.

பாரத காலத்தது என்று துணியப்படும் முரஞ்சியூர் முடிநாகராயரின் புறநானூற்றுப் பாடலில்,

"பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது
கொடுத்தோய்
நடுக்கின்றி நிலீஇயரோ அத்தை"

என்ற மொழிநடை உண்டு. நிலீஇயர் என்னும் வியங்கோள்வினை கொடுத்தோய் என முன்னிலை சுட்டி வந்துள்ளது. இவ்வாட்சி,

"தன்மை முன்னிலை யாயீ ரிடத்தொடு
மன்னா தாகும் வியங்கோட் கிளவி"

என்ற தொல்காப்பியத்துக்குப் பின்னதாகும். இம்மொழிச் சான்றினால் தொல்காப்பியர் பாரத காலத்தை அடுத்தவர் என்றும் முடிநாகராயருக்கு முற்பட்டவர் என்றும் தெளிவிப்பர் மகாவித்துவான் அவர்கள் (தமிழ்வரலாறு-பக். 272).

ஒருகுடிப் பிறந்தோருள் மூத்தோர் இளையோர் போல ஒருமொழி இலக்கியங் களுள் காலவரிசை வேண்டும். 'வரிசை யறிதலோ அரிதே, பெரிதும் ஈதல் எளிதே' என்று கூறுமாறு, பேரிலக்கியங்களின் பிறப்புவரிசையை அறியமாட்டாமல், மூடை நெல்லி போல இலக்கிய வரலாறு எழுது வதில் பலவுண்மைகள் புலப்படா. கால வொழுங்கு கண்டாற்றான் இலக்கிய மாற்றம், எண்ணவளர்ச்சி, சமுதாய மாற்றம், சமயநிலை, அயலகத்தொடர்பு, வரலாற்றுப்போக்கு, மொழியியல் எல்லா வற்றிற்கும் அறிவுக்கரை அமைக்க முடியும் காலக்கணிப்பு என்பது எந்நிலையாய்வுக்கும் அடிமுதல். கனகசுப்புரத்தினத்துக்குப் பிந்தி யவர் சுப்பிரமணிய பாரதியார் எனவும் சாமிநாதய்யருக்குப் பிந்தியவர் ஆறுமுக நாவலர் எனவும் பிற்காலத்தவர் இலக்கிய வரலாறு எழுதினால், அவ்வரலாறு எவ்வகை முரணாகும்? உண்மைத்திரிபாகும்? இந்த உணர்வு பழைய தமிழிலக்கிய வரலாறு தொடுக்கும்போதும் நமக்கு வேண்டும். காலத்தொன்மை சொன்னால் சிறப்பு, காலப் பின்மை சொன்னால் குறைவு என்பது பொருளில்லை. தொன்மையைத் தொன்மை யாகவும், முன்னதை முன்னதாகவும் காணா விட்டால், ஓட்டமும் உண்மையும் புதை படுகின்றன. சிந்து வெளி நாகரிகம் கி. மு. 2500 ஆண்டுக்கு முற்பட்டது என்ற தொன்மை தெரியாமல் பின்னர்த் தோன்றிய சுமேரிய ஆரிய நாகரிகங் களோடு ஒப்பிடுவது கால முரண் என்று திரு. ஆர்வின் சைடு எடுத்துக்காட்டுவர். ஆதலின் ஆராய்ச்சித் தெளிவுக்குச் செங் காலம் ஒரு தலையாக வேண்டும். தமிழிலக்கிய வரலாறு பிறழாது அமைய வேண்டும் எனின் கூடியவரை பேரிலக்கியங்கட்கும் பலவிலக் கியங்கட்கும் காலவொழுங்கும் காலமுறைப் பதிப்பும் இன்றியமையாதன.

சங்க இலக்கியத்திற்கு ஆசிரியர் பதிப் பினைச் சமாசம் 1940இல் வெளியிட்டது. இவ்வரிய பதிப்பினால் தமிழும் பரவி ஆராய்ச்சியும் பெருகுவதாயிற்று என்பதனை அறிஞருலகம் நன்றியொடு உடன்படும். அதுபோல் சங்க இலக்கியத்துக்குக் கால முறைப் பதிப்பு ஒன்று உருவாக்கும் முயற்சி நடந்து வருகின்றது. எமது இப்பதிப்பினால் ஓராசிரியன் தன் செய்யுட்களும் காலவரிசை பெறும், சங்க இலக்கியம் முழுதும் இயன்ற வரை காலவொழுங்கு பெறும். இவ்வகைப் பதிப்பு இலக்கிய வரலாறு, மொழி வரலாறு, நாட்டு வரலாறு, சமுதாய வரலாறு, சமய வரலாறு முதலான பல்துறையாராய்ச்சிக்கு அகல் வாய்ப்பு நல்கும் என எதிர்பார்க்க லாம்.

கால ஆராய்ச்சியின் இன்றியமையாமை குறித்துப் பேராசிரியர் வையாபுரிப் பிள்ளை யவர்களின் அழுத்தமான அறிவுரையை எடுத்துக்காட்டி இக்கட்டுரையை முடித்துக் கொள்வேன். 'கால ஆராய்ச்சி பயனற்றது என்று கருதுபவர்கள் இன்றும் சிலர் உள்ளார்கள். நூல் தோன்றிய காலத்தை அறிந்தாலன்றி அந்நூலில் உள்ள கருத்துக் களை நாம் அறிந்து கொள்ள முடியாது. இலக்கியச் சரிதமும் அமைக்கமுடியாது. இலக்கியச் சான்றுகளால் உணரப்படும் தேச சரித்திரமும் வரையறை எய்த மாட்டாது. தமிழ் மொழியின் சரித்திரமும் அறிதற்கு இயலாததாகும். தமிழ்நாட்டில் உலவிய கருத்துக்களின் வரலாறும் நாகரிக வரலாறும் மயக்கத்திற்கு இடமாகவே இருக் கும். ஆதலால் கால ஆராய்ச்சி மிகவும் இன்றிமையாததாகும்'.

'மேல்நாட்டு ஆசிரியர்களின் முறை யைப் பின்பற்றி நல்ல நெறியில் அமைக்கப் பட்ட தமிழிலக்கிய சரிதம் இனித்தான் எழுதப் பெற வேண்டும். இன்றுவரை வெளிவந்துள்ளவற்றில் ஒருசிலவே ஒருவாறு நம்மால் கொள்ளத் தக்கன'.

(தமிழ்ச் சுடர் மணிகள் முன்னுரை பதிப்பாண்டு 1948).

---

# திருக்கோயில்களில் தமிழ் அர்ச்சனை

[திரு. வித்துவான் பாலூர் கண்ணப்ப முதலியார் எம். ஏ.]

*செங்கற்பட்டு மாவட்டத்தைச் சார்ந்த பாலூரில் 1908 திசம்பர் 14 இல் துரைசாமி முதலியாருக்கும் மாணிக்கம்மாள் அவர்களுக்கும் தோன்றியவர் இவர். பேராசிரியர் பலரை நாடித் தமிழ் பயின்ற இவர் வித்துவான், பி. ஓ எல்., எம். ஏ. முதலிய பட்டங்களைப் பெற்ருர். சென்னை லூத்தரன் மிசன் பள்ளி, முத்தியாலுப்பேட்டை உயர் நிலைப் பள்ளி, கெல்லட் உயர்நிலைப் பள்ளிகளில் பல்லாண்டுகள் ஆசிரியப் பணியாற்றிய பின் புதுக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவ*



*ராக 16 ஆண்டுகள் பணியாற்றி ஓய்வுபெற்ருர். தற்பொழுது பல்கலைக் கழக மானியக் குழுவின் உதவியுடன் அப்பர் தேவார ஆராய்ச்சியை மேற் கொண்டுள்ளார். சிறந்த சமயச்சொற் பொழிவாளர். சேக்கிழார் பிள்ளைத் தமிழ், திருமந்திரம் போன்ற பெருநூல்களுக்கு உரையெழுதியுள்ள உரையாசிரியர். தமிழ்நூல் வரலாறு, தொண்டை நாட்டுப் பாடல் பெற்ற சிவத் தலங்கள் போன்ற அறுபதுக்கு மேற்பட்ட நூல்களை யெழுதிய நூலாசிரியராவர்.*

நம் இந்திய நாட்டு மக்களுக்கு ஒரு தவருன எண்ணம் இருந்து வருகிறது. அஃதாவது மந்திரம் என்பது ஒரு குறிப்பிட்ட மொழியில் அமைந்ததுதான் என்பது. அதுவும் அம்மந்திரம் வடமொழியில்தான் உண்டு என்பதும் ஆகும். இவ்வெண்ணம் தவருன எண்ணம். மந்திரத்தின் இலக்கணம் கூற வந்த தொல்காப்பியர்,

> "நிறைமொழி மாந்தர் ஆணையில் கிளந்த
> மறைமொழி தானே மந்திரம் என்ப"

என்றனர். இத் தொல்காப்பியம் தமிழர்களுடைய மிகமிகத் தொன்மை வாய்ந்த நூல்; கிறித்து பிறப்பதற்கு முன் பல்லாயிர ஆண்டுகட்கு முன் தோன்றிய நூல். அகத்தியர் மாணவரான தொல்காப்பியர் செய்தது தொல்காப்பியம் ஆதலின், அதன் தொன்மையினைக் கூறவும் வேண்டுமோ ?

மேலே காட்டிய நூற்பாவின் பொருள் எல்லா நற்பண்புகளும் நிறைந்து மொழிய வல்ல பெருமக்கள் ஆணையிட்டுக் கூறிய வாய்மொழிகள் யாவும் மந்திரம் ஆகும் என்பதாம். இந் நூற்பாவில் குறிப்பிட்டிருந்த மொழியிலேதான் மந்திரம் இருக்கவேண்டும் என்பது குறிப்பிடப்படாமையினை உணரவும். ஆனல், சொல்பவர் இத்தகையவராய் இருக்க வேண்டும் என்னும் குறிப்பு இருப்பதை நோக்கவும். இதனல் எம்மொழியிலேனும் மறைமொழியும் மந்திரமொழியும் இருக்கலாம் என்பது புலப்படுகிறது.

தொல்காப்பியர் பொதுப்பட மந்திரத்திற்கு இலக்கணம் கூறினுரேனும், சிறப்பாகத் தமிழ் மந்திரத்திற்கே இலக்கணம் கூறினுர் என்பதும் தெளிவாகிறது. தமிழில் மறை நூல்களும், மந்திரங்களும் உண்டு என்பதை மேலும் வெளிப்பட உரைக்க எண்ணிய தொல்காப்பியர்,

> "பாட்டுரை நூலே வாய்மொழி"

என்றும்,

> "மறைமொழி கிளந்த மந்திரத் தான"

என்றும் குறிப்பிடுதல் காண்க.

மந்திர மொழிகட்கு ஒரு தனி ஆற்றல் உண்டு. அம்மந்திர மொழிகள் ஆக்கவும் அழிக்கவும் செய்யும். இதனை "உச்சிமேற் புலவர் கொள் நச்சினுர்க்கினியர்", "நிறை

மொழி'' என்று தொடங்கும் நூற்பாவினை விளக்கி அதற்கு எடுத்துக்காட்டை இயம்ப வரும் போது,

*'' ஆரியம் நன்று தமிழ்தீ தெனஉரைத்த*
*காரியத்தால் காலக்கோட் பட்டானைச் — சீரிய*
*அந்தண் பொதியில் அகத்தியனார் ஆணையால்*
*செந்தமிழே தீர்க்க சிவா''*

என்ற தமிழ்ப் பாட்டை வாழ வைத்த மந்திர மாகவும்,

*'' முரணில் பொதியின் முதல்புத்தேள் வாழி*
*பரண கபிலரும் வாழி — அரணியல்*
*ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்கொண்*
*ஆனந்தம் சேர்க சிவா''* [டான்

என்ற தமிழ்ப்பாட்டை அழிக்கச் செய்த மந்திரமாகவும் காட்டினர். விளக்கம் கூறிய இடத்து ''இவை வாயில் திறவாப் பட்டி மண்டபத்தார் பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழவும் சாவவும் பாடிய மந்திரம்'' என்று விளக்கம் காட்டினர். ஈண்டு, தீர்க்க என்பது உயிர்பெற்று எழுக என்பதையும், ஆனந்தம் சேர்க என்பது இறக்க என்பதையும் குறித்து நிற்கின்றன.

திருஞான சம்பந்தர் பாடல்களில் ஒன்றும்,

*'' செய்ய னேதிரு வாலவாய் மேவிய*
*ஐய னேஅஞ்சல் என்றருள் செய்யெனைப்*
*பொய்ய ராம்அம ணர்கொளு வுமசுடர்*
*பைய வேசென்று பாண்டியற் காகவே''*

என்பது பாண்டியனை வெப்பு நோய் பற்று மாறு பணித்த பாடலாகும்.

*'' அரக்க னைவிர லால் அடர்த் திட்டநீர்*
*இரக்கம் ஒன்றிலீர் எம்பெரு மான்நீரே*
*சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ*
*சரக்க இக்கத வம்திறப் பிம்மினே''*

என்று பாட மூடி இருந்த கதவு திறக்கப் பட்டது.

சுந்தரர் அவிநாசி என்னும் தலத்தைக் கண்டு வணங்க வந்தபோது தம் பிள்ளையை முதலை உண்ட காரணத்தால் அழுதுகொண் டிருந்த பெற்றோர்கள் மகிழும் வண்ணம், அவர் இறைவனை நோக்கி,

*'' உரைப்பார் உரையுகந் துள்கவல்லார்*
*தங்கள் உச்சியாய்*
*அரைக்கா டரவா ஆதியும்*
*அந்தமும் ஆயினாய்*
*புரைக்காடு சோலைப் புக்கொளி*
*யூர்அவி நாசியே*
*கரைக்கால் முதலையைப் பிள்ளை*
*தரச் சொல்லுகா லனையே''*

என்று பாடுதலும் முதலை தான் உண்ட பாலனைக் கரையில் கக்கிச் சென்றது.

இங்ஙனம் பல அற்புதங்களைத் தமிழ்ப் பாடல்களைக் கொண்டே நம் முன்னோர்கள் செய்துள்ளனர். இதனால் நாம் அறிவது யாது? மந்திர சக்தி தமிழ் மொழிக்கு உண்டு என்பதும், நம் சமயாசிரியர்கள் வாக் கெல்லாம் தமிழ்மறை என்பதும் தமிழ் மொழி யில் மந்திரம் உண்டு என்பதும் புலனாதல் காண்க

தமிழ் வேதமுடைத்து; மந்திரம் உடைத்து என்று கண்டோம். இங்ஙனம் தமிழ் மந்திரங்களை உடையதாய் இருந்த தனால்தான் வழிபாடுகள் (அஃதாவது அர்ச் சனை) தமிழ் மொழியிலும் நடந்துள்ளன. இதனைத் திருஞான சம்பந்தர் தெள்ளத் தெளிய ''தம்மலர் அடி ஒன்றியடியவர் பரவத் தமிழ்ச்சொலும் வடசொலும் தாள் நிழல் சேர, அம்மலர்க் கொன்றை அணிந்த எம் அடிகள் அச்சிறுபாக்கம தாட்சி கொண் டாரே'' என்று அருளிச் செய்துள்ளார். அங்குத்''தமிழ்ச் சொலும், வடசொலும் தாள் நிழல்சேர'' என்பது தமிழாலும், வடமொழி யாலும் மந்திரங்களைச் சொல்லி மலரைத் திருவடிகளில் சூட்டிய குறிப்பை உணர்த்துவ தாகும். இதனால்தான் அப்பரும் இறை வரை ''ஆரியன் கண்டாய், தமிழன் கண் டாய்'' என்று போற்றித் துதித்தனர்.

தமிழ் மொழியின் அர்ச்சனையே இறை வனுக்கும் பிடித்தம் என்பதைச் சுந்தரர் வாழ்க்கை வரலாற்றில் இறைவர் உணர்த்து வார் ஆயினர். இவ்வுண்மையினைச் சேக் கிழார்,

*''மற்றும் நீ வன்மை பேசி*
*வன்தொண்டன் என்னும் நாமம்*
*பெற்றனை நமக்கும் அன்பில்*
*பெருகிய சிறப்பில் மிக்க*

அர்ச்சனை பாட்டே ஆகும்
ஆதலால் மண்மேல் நம்மைச்
சொற்றமிழ் பாடுகென்றார்
தூமறை பாடும் வாயார்"

என்று அறிவித்துள்ளனர்.

வடமொழியில் "ஏகதந்தாயநம" என்பதை ஒற்றைக் கொம்பனே போற்றி என்று கூறினும் விநாயகப் பெருமான் ஏற்பான் அல்லனோ? திருநாவுக்கரசரது போற்றித் திருத்தாண்டகங்களும் மணிமொழியாரது போற்றித் திருஅகவலும் தமிழால் அர்ச்சனை நடத்தலாம் என்பதையே உணர்த்துவனவாகும்.

"எல்லாம் சிவனென்ன நின்றாய் போற்றி
எரிசுடராய் நின்ற இறைவா போற்றி
கொல்லார் மழுவாள் படையாய் போற்றி
கொல்லும் கூற்றொன்றை உதைத்தாய்
[போற்றி

கல்லாதார் காட்சிக் கரியாய் போற்றி
கற்றார் இடும்பை களைவாய் போற்றி
வில்லால் வியன் அரணம் எய்தாய் போற்றி
வீரட்டம் காதல் விமலா போற்றி."

இது திருவீரட்டானத் திருத்தாண்டகம்.

திருவாதவூரர் போற்றித் திருவகவல் என்னும் ஒரு பாடலையே பாடியுள்ளனர். அப் போற்றித் திருவகவலில் ஒரு பகுதி,

"தாயே ஆகி வளர்த்தனை போற்றி
கைதர வல்ல கடவுள் போற்றி
ஆடக மதுரை அரசே போற்றி
கூடலில் இலங்கும் குருமணி போற்றி
தென்தில்லை மன்றினுள் ஆடி போற்றி
இன்றெனக் காரமுது ஆனாய் போற்றி
மூவா நான்மறை முதல்வா போற்றி
சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி"

என்பது. இது நூற்று முப்பத்து மூன்று அடிகள். போற்றி போற்றி என்று முடியும் அடிகளைக் கொண்டுள்ளது.

சிவபுராணப் பகுதியில்,

"ஈசன் அடிபோற்றி எந்தை அடிபோற்றி
தேசன் அடிபோற்றி சிவன்சே அடிபோற்றி
நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடிபோற்றி
சீரார் பெருந்துறை நம் தேவன் அடி போற்றி
ஆராத இன்பம் அருளும் மலைபோற்றி"

என்றும் பரவிப் போற்றி வணக்கம் செய்துள்ளனர். ஈண்டும் நம என்னும் பொருளுக்குரிய போற்றி என்னும் சொல் அமைத்துள்ளதைக் காண்க.

இவ்வாறான போற்றி அமைந்த தொடர்களுள் நமக்கு வேண்டியவாறு நூற்றெட்டு வரிகளையோ ஆயிரத்தெட்டு அடிகளையோ அமைத்துக் கொண்டு அர்ச்சனை புரியலாம்; போற்றி என்று அமையாமல் காண், தோன்றும், கண்டாய், தாமே, நீயே, போலும் என்று முடியும் தாண்டகங்களும் உள்ளன. அவற்றையும் அர்ச்சனைக்குப் பயன்படுத்தலாம். திருவாசகத்திலும் காண்க, வாழ்க, வெல்க என்னும் தொடர்கள் உள்ளன. அவற்றையும் எடுத்துக் கொள்ளலாம்.

"நாரணன் காண் நான்முகன் காண்
நால்வேதன் காண்"
—காண் எனமுடியும் தாண்டகம்.

"வடிவேறு திரிசூலம் தோன்றும் தோன்றும்
வளர்சடைமேல் இளமதியம் தோன்றும்
[தோன்றும்"
—தோன்றும் என்று முடியும் தாண்டகம்.

"தூண்டு சுடர் அனைய சோதிகண்டாய்
தொல்அமரர் சூளாமணிதான் கண்டாய்"
—கண்டாய் என்று முடியும் தாண்டகம்.

"அலையார் கடல்நஞ்சம் உண்டார் தாமே
அமரர்களுக்கு அருள்செய்யும் ஆதிதாமே"
—தாமே எனமுடியும் தாண்டகம்.

"ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே
உலகுக் கொருவனாய் நின்றாய் நீயே"
—நீயே என்றுமுடியும் திருத்தாண்டகம்.

"நீறணிந்த திருமேனி நிமலர் போலும்
நேமிநெடுமாற் கருளிச் செய்தார் போலும்'
—போலும் என்று முடியும் தாண்டகம்.

மேலே குறிப்பிட்ட தாண்டகங்கள் பத்துப் பத்துப் பாடல்கட்குக் குறையாமல் உள்ளன. இவற்றோடும், இறைவனைப் பற்றிக் கூறும் தொடர்களுடனும் போற்றி என்பதைச் சேர்த்தும் அர்ச்சனை புரியலாம்.

மாணிக்க வாசகர் "வாழ்க" என்றும் "வெல்க" என்றும் "காண்க" என்றும் கூறியதை :

"நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான் [தாள்வாழ்க"

என்றும்,

"வேகம் கெடுத்தாண்ட வேந்தன் அடிவெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன் பெய்கழல்கள் [வெல்க"

என்றும்,

"பரமன் காண்க பழையோன் காண்க
பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க"

என்றும் கூறிய அடிகளில் காண்க.

இவ்வாறெல்லாம் சேர்த்து இலட்சம் போற்றித் தொடர்களை அமைத்துத் தமிழில் இலட்சார்ச்சனை நடத்தலாம். இவ்வாறே ஒவ்வொரு தெய்வத்தின் மீதும் பாடப்பட்ட பாடல்களுள் அந்தந்தத் தெய்வத்தின்மீது பாடப்பட்டுள்ள தொடர்களுடன் போற்றியைச் சேர்த்து அர்ச்சனை மந்திரமாகக் கூறி வழிபடலாம். ஒவ்வோர் அடியைச் சொல்லி மலரைத் திருவடிகளில் இடுவதுதானே அர்ச்சனை ?

தமிழ் மொழியில் அர்ச்சனை நடத்த வேண்டுமெனக் கோயில் குருக்களிடம் வற்புறுத்தி வந்தால், அவர்கள் தேவைக்கு ஏற்பத் தமிழ் மொழியில் அர்ச்சனையை அப்படியே நடத்துவர். கேட்காதது வற்புறுத்தாதது பொதுமக்களுடைய குற்றமே ஆகும்.

பெரிய திருக்கோயில்களில் இறைவன் திருஉலாப் போதுங்கால் பின்னால் வடமொழி வேதபாராயணம் செய்துகொண்டு வருவதை இன்றும் காணலாம்.

அவ்வாறே தென்மொழி வேதமாகிய திருவாசகத்தில் உள்ள நான்கு பாடல்களை வேதம் போலப் பாராயணம் செய்து கொண்டு வரலாம். நிறுத்தி அமைதியாக நமச்சிவாய வாஅழ்க ; நாதன் தாள் வாழ்க ; என்று சொல்லிப் பாருங்கள். வேத ஒலிபோல இனிதாக ஒலிப்பதை உணர்வீர்கள் ஆகவே, தமிழ்மொழி வேதங்களை ஓதவும் தமிழால் அர்ச்சனை நடக்கவும் ஒவ்வொருவரும் முயற்சி எடுத்தல் வேண்டும்.

தமிழிலும் வேதாகம விதிகள் இலக வேண்டும் என்ற கருத்தில்தான் கண்ணுதல் பரமனும் திருமூலரைத் தமிழில் திருமந்திரம் பாடுமாறு செய்தனர். இதனைத் திருமூலரே,

" என்னைநன் றாகஇறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே"

என்று கூறி இருப்பதைக் காண்க.

இதுபோது கோவைப் பேரூரில் தமிழால் அர்ச்சனை நடந்து வருகிறது. அண்மையில் திருவாலவாயிலிலும், திருநெல்வேலியிலும் தமிழ் அர்ச்சனை நடத்தத் தொடங்கப்பட்டிருப்பது தமிழ் அன்பர்கட்குப் பேருவகை தருவதாகும். இத் தமிழ் அர்ச்சனையினை எல்லாத் தலங்களிலும் நடத்தக் கோயில் குருக்களும் தமிழ் அன்பர்களும் முன்வர வேண்டும் என்று பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

---

## வழிபாடு நடத்தும் வகை

*இறைவனருளை நாம் எளிதிற் பெறுமாறு செய்த அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர்—முதலான தெய்வ அருளாசிரியர்களும், பொய்கையாழ்வார், பேயாழ்வார் முதலான உண்மை அடியார்களும் அருளிச் செய்த தமிழ்ச் செம்பாடல்களே நம் நெஞ்சை நெகிழ்த்தி நம்மை இறைவன்பால் உய்க்குமன்றி, அருள்பெறாத ஏனோர் வடமொழியில் ஆக்கிய உரைகள் நம்மை இறைவன் பேரருளுக்கு உரியராக்க மாட்டா.*

மறைமலையடிகள் 'தமிழர் மதம்' பக் : உஎஅ

---

# சேக்கிழார் கண்ட செம்பொருள்

[திரு. டாக்டர் சி. பாலசுப்பிரமணியன், எம்.ஏ., பி.எச்.டி.]

*வரலாற்றுப் புகழ் படைத்த செஞ்சியில் 10-5-1935 இல் பிறந்தவர் இவர். தி. பொ. சின்னசாமிமுதலியாரும் பட்டம்மாளும் பெற்றெடுத்த அருமை மைந்தர். பச்சையப்பன் கல்லூரியில் எம். ஏ. பயின்ற இவர் சிறிது காலம் சென்னை விவேகாநந்தர் கல்லூரியிலும் பச்சையப்பன் கல்லூரியில் பத்து ஆண்டுகளும் பணியாற்றியபின் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறையில் பணியாற்றி வருகின்றார். 1963இல் எம். லிட். பட்டமும் 1970 இல் டாக்டர் பட்டமும்*



*பெற்றவர். சேரநாட்டு இலக்கியத்தைப் பற்றிய ஆய்வுக்கு இவர் டாக்டர் பட்டம் பெற்றார். 'தமிழ் இலக்கிய வரலாறு' 'உருவும் திருவும்' 'கட்டுரைவளம்' 'வாழையடி வாழை' முதலிய ஏழுநூல்களின் ஆசிரியர். இவர் 'இலக்கிய வரலாறு' பல்கலைக் கழகங்களில் பாட நூலாகத் திகழ்கிறது. இலங்கை, கல்கத்தா முதலிய பல ஊர்களுக்குச் சென்று சொற்பொழி வாற்றியுள்ளார். இறைவன்-இயற்கை இரண்டிலும் ஈடுபாடு பெரிதும் கொண்டவர்.*

என்று பிறந்தது என்று இயம்ப முடியாத இயல்பினதாய், முன்னைப் பழமைக்கும் பழமையாய்ப் பின்னைப் புதுமைக்கும் புதுமையாய்த் தமிழ்மொழி விளங்குகின்ற காரணத்தால் அம்மொழி 'கன்னித் தமிழ்' என்று வழங்கப்பெறுகின்றது. ''பாலேய் தமிழர் இசை காரர்''[1] என்பது ஆழ்வார் வாக்கு. பால் போலும் இனிமை நிறைந்த மொழி தமிழ் மொழி என்பது அப் பெரியார் கருத்தாகும். தெய்வப் புலமைச் சேக்கிழார் பெருமானே 'ஞாலமளந்த மேன்மைத் தெய்வத் தமிழ்'[2] என்பர். இதனால் தமிழ் மொழி தொன்மை துலங்கும் மொழி என்பதும், இசை இலங்கும் மொழி என்பதும், தெய்வத் தன்மை தோய்ந்த திருமொழி என்பதும் புலனாகும். 'தமிழெனும் இனிய தீஞ்சொற் றையல்'[3] என்று தமிழ்மொழியின் இனிமையைப் பாராட்டுவர் கம்ப நாடர். 'இனிமையும் நீர்மையும் தமிழெனலாகும்'[4] என்று நிகண்டு கூறும். பாரதியாரும் 'வான மளந்த தனைத்தும் அளந்திடும் வண் மொழி'[5] என்று தமிழைப் போற்றிப் பாடி மகிழ்ந்தார்.

உலகிடைத் தோன்றி எண்ணற்ற மொழிகள் வாழ்கின்றன. ஒவ்வொரு மொழிக்கும் ஒவ்வொரு தனித்த சிறப்பியல்பு உண்டு. ''ஆங்கிலம் வணிகத்தின் மொழி என்றும், இலத்தீன் சட்டத்தின் மொழி என்றும், கிரேக்கம் இசையின் மொழி என்றும், பிரெஞ்சு தூதின் மொழி என்றும், இத்தாலியன் காதலின் மொழி என்றும் கூறுவது ஒருபுடை ஒக்குமெனின் தமிழ் இலக்கியத்தின் மொழி எனக் கூறுவது இனிது பொருந்தும், பக்தியின் மொழி எனலுமாம்'' என்று கூறி அளவிலும் சுவையிலும் தமிழிலுள்ள திருப்பாடல்கள் போல் பிற இலக்கியங்களில் இல்லை என்பர் மறைத்திரு தனிநாயக அடிகளார். இக்கூற்று முற்றிலும் உண்மை என்பதனைச் சேக்கிழார் தம் திருத்தொண்டர் புராணங் கொண்டு தெளியலாம்.

திருஞான சம்பந்தர் பெருமானைக் குறிப்பிடும் சேக்கிழார் 'திருமறையும் தீந்தமிழும் சிறக்க வரும் நாயகன்' என்றும் 'வண்டமிழ் செய்தவ நிரம்ப மாதவத்தோர் செயல் வாய்ப்ப'வும், 'அசைவில் செழுந்தமிழ்

1. திருவாய்மொழி: 1, 5, 11.
2. மூர்த்தி நாயனார் புராணம்: 3.
3. கம்பராமாயணம்; பம்பை வாவிப் படலம்: 29.
4. பிங்கல நிகண்டு.
5. பாரதியார் பாடல்கள்: தமிழ்மொழி.

வழக்கே அயல் வழக்கின் துறைவெல்ல'வும் தோன்றியதாகக் குறிப்பிட்டுள்ளார். சேக்கிழார் பெருமானுக்கு எத்தோற்றமும் செயலும் இறைவனை - முழுமுதற் பொருளாம் சிவனை நினைவூட்டுவதாகவே அமையக் காணலாம்.

தலைவன் ஒருவன் பொருள்வயிற் பிரிய நினைக்கின்றான். தலைவி தன் பிரிவால் துயருற்று மெலிவாளே என்றும் கலங்குகின்றான். பிரிந்து சென்றால் தன்னால் துன்பமின்றி வினைவயப்பட முடியுமா என்றும் நினைந்து பார்க்கிறான். "இம் மெல்லிய தன்மையுடையாளைப் பிரிந்து செல்வோமாயின், இவளுடைய கண் நெய்தல் நிலத்திலே கயல் மீனாய்த் தோன்றிக் கலக்கும்; முல்லை நிலத்திலே கருவிளை மலராய்த் தோன்றி வருத்தும்; குறிஞ்சி நிலத்திலே மானாய்த் தோன்றி மருட்டும்; பாலை நிலத்திலே வேடுவரது கையிலுள்ள கொடிய பாணமாய்த் தோன்றி நமது செலவைத் தடுக்கும்; ஆதலால் இவளைப் பிரிந்து செல்லுதல் பெரிதும் அரிதாகும்" என்று குறிப்பிடுகின்றான். பாடல் வருமாறு:

*கானற் கயலாம் வயலிற் கமலமாம்*
*ஏனற் கருவிளையா மின்புறவில் — மானும்*
*கடத்துமேல் வேடர் கடுஞ்சரமா நீங்கிக்*
*கடத்துமேன் மெல்லியலாள் கண்.*[1]

காதலில் தோய்ந்த நெஞ்சத்தினன் ஆயினமையின் அத் தலைவனுக்கு எங்குச் சென்றாலும் தலைவியின் கண்கள் தோன்றிக் கலக்கமுறச் செய்கின்றன. நானிலப் பொருள்களும் அவனுக்குத் தலைவியையே நினைவூட்டுகின்றன.

'பாண்டியன் பரிசு' என்னும் காவியத்தில் பாவேந்தர் பாரதிதாசன், அன்னம் என்னும் தலைவி மாட்டுத் தலைவன் வேலன் கொண்ட காதலைக் கவினுற வடித்துள்ளார். தேனைப் போல் மொழியும், அன்றலர்ந்த செந்தாமரை மலர்போல் முகமும், கெண்டை மீனைப்போல் விழியும், விட்டதிர்ந்த மின்னைப் போல் நல்லிடையுங் கொண்டு, விண்ணிடையே பன்னூறாயிரம் மீன்கட்கு இடையில் வெண்ணிலவு போல், வானைப் போல் உயர் வாழ்வு வாழ்ந்த மங்கை அன்னம் என்று கூறி, அத்தகு அன்னத்தை நினைந்து நினைந்து நெக்குருகி நிற்கிறான் வேலன். அப்போது காதல் கைமிகப் பின்வருமாறு அரற்றுகின்றான் வேலன்:

*ஆடப்போம் புனலிலெலாம் அவளே, காற்றில்*
*அசையப்போம் பொழிலிலெலாம் அவளே, கண்ணால்*
*தேடப்போம் பொருளிலெலாம் அவளே! நேரில்*
*தின்னப்போம் சுவையிலெலாம் அவளே வண்டு*
*பாடப்போம் மலரிலெலாம் அவளே! மேற்கில்*
*படுகதிரில் அவள்வடிவே காண்பேன் என்று*
*வாடக்கண் துயிலாமல் இருந்தான் வேலன்*
*மலர்ந்திட்ட காலையிலும் அவளைக் கண்டான்.*[2]

இது 'காண்பவை யெல்லாம் அவளே போறல்' எனும் காதல் நிலையாகும்.

நீலவான் ஆடைக்குள் உடல் மறைத்து நிலாவென்று ஒளிமுகத்தைக் காட்டும் கவின் நிலவைக் காண்கின்றார் கவிஞர். வானச் சோலையிலே பூத்த தனிப்பூ வென்றும், சொக்கவெள்ளிப் பாற்குடமென்றும், அமுத ஊற்றென்றும், காலை வந்த செம்பருதிக் கடலில் மூழ்கிக் கனல் மாறிக் குளிரடைந்த ஒளிப்பிழம் பென்றும் நிலவை வருணிக்கும் கவிஞர் நிலவுத் தோற்றத்தில் ஓர் உயரிய கருத்தையும் வைத்துப் பாடுகின்றார். ஏழை மக்கள் நாடோறும் உழைத்து நலங்காணாது போகின்றனர். உழைத்த மக்களுக்கு உணவு வயிறாரக் கிடைக்கவில்லை. பசித்த மக்கள் சிறுகூழ் தேடுகின்றனர். பானையில் நிறைந்து கொதித்துக் கனத்திருந்த வெண்சோறு காணுகின்றனர். அப்போது அவர்கள் உறும் இன்பமே, நிலவைக் காணும் போது ஏற்படும் இன்பம் எனக் கூறித் தம் புரட்சிக் கருத்தை வெளியிட்டு நிற்கிறார் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள்:

*உனைக் காணும் போதிலேஎன் உள்ளத்தில்*
*ஊறி வரும் உணர்ச்சியினை எழுதுதற்கு*
*நினைத்தாலும் வார்த்தை கிடைத் திடுவதில்லை*
*நித்திய தரித்திரராய் உழைத் துழைத்துத்*

1. தண்டியலங்கார மேற்கோள் பாட்டு: உருவக தீவகம்.
2. பாண்டியன் பரிசு: 76 : 7.

*தினைத்துணையும் பயனின்றிப் பசித்த மக்கள்*
*சிறிதுகூழ் தேடுங்கால் பானை ஆரக்*
*கனத்திருந்த வெண்சோறு காணும் இன்பம்*
*கவின் நிலவே உனைக்காணும் இன்பம்*
*தானே!*[1]

இதனாற் கவிஞர் காணும் பொருள்களில் தம் கருத்தை ஏற்றிப் பாடுதல் வழக்குண்மை விளங்கும்.

சேக்கிழார் பெருமானை மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் 'பத்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவி வலவ' என்று பாராட்டிப் போந்தார். இக் கூற்றின் பொருத்தத்தினைப் பெரியபுராணங் கொண்டு நன்கு தெளியலாம்.

கயிலைமலையைக் காண்கிறார் கவிஞர் சேக்கிழார். 'புண்ணிய யந்திரண் டுள்ளது போல்வது'[2] கயிலைமலை என்கிறார்.

*அண்ணல்பா கத்தையா ளுடைய நாயகி*
*உண்ணெகிழ் கருணையின் ஒழுக்கம் போன்றது.*[3]

காவிரி என்று பாடுகின்றார். வயலில் நெற்கதிர்கள் முற்றி விளைந்து சாய்ந்திருக்கும் காட்சி சேக்கிழாருக்குச் சிவனடியார்கள் பத்திமை நெறிநின்று தலையினால் வணங்குதல் போன்ற தோற்றத்தை யளிக்கின்றதாம்.

*பக்தியின் பால ராகிப்*
*பரமனுக் காளாம் அன்பர்*
*தத்தமில் கூடி னார்கள்*
*தலையினால் வணங்கு மாபோல்*
*மொய்த்த நீள்பத்தி யின்பால்*
*முதிர்தலை வணங்கி மற்றை*
*வித்தகர் தன்மை போல*
*விளைந்தன சாலி யெல்லாம்.*[4]

தேவாசிரிய மண்டபத்தின் சிறப்பினைப் புகல வந்த சேக்கிழார் துன்பந் தீர்க்கும் சிவனடியார்கள் மேனியிற் பொலியும் திருநீறு போல் தூயதாகவும், அவர்கள் 'சிவாய நம' என்று எஞ்ஞான்றும் ஓசை யெழுப்புதலினால் ஆயிரம் பாற்கடல் போல் விளங்குவதாகவும் தேவாசிரிய மண்டபத்தைக் காண்கிறார். பாற்கடலின் வெண்மைக்கு அடியார் மேனி முழுதும் பூசிய திருநீறும், பாற்கடலில் எழும் அலை ஓசைக்குச் சிவனடியார்களின் 'சிவசிவ' ஒலியும் உவமைகளாம்.

*அரந்தை தீர்க்கும் அடியவர் மேனிமேல்*
*நிரந்த நீற்றொளி யால்நிறை தூய்மையால்*
*பரந்த அஞ்செழுத் தோசை பொலிதலால்*
*பரந்த ஆயிரம் பாற்கடல் போல்வது,*[5]

மாலையில் மேற்றிசையில் மாணிக்கச் சுடராம் கதிரவன் மறைவதும், இருள் வருவதும் உலகில் இயல்பாக நடக்கும் ஒன்றாகும். தயரதனிடம் வரம்பெற்ற கைகேயியின் கொடுமனச் செயலுக்கு இரவாகிய நங்கை நாணி ஓடியொளிந்தாள் என்பர் கம்பர்.

*சேணு லாவிய நாளெ லாமுயி*
*ரொன்று போல்வன செய்துபின்*
*ஏணு லாவிய தோளி னானிட*
*ரெய்த வொன்று மிரங்கிலா*
*வாணி லாநகை மாத ராள்செயல்*
*கண்டு மைந்தர்முன் னிற்கவும்*
*நாணி னாளென வேகி னாளெனிர்*
*கங்கு லாகிய நங்கையே.*[6]

கதிரவன் ஒளி மறைந்த பின்னர் வானம் இருண்ட செயலைச் சேக்கிழார் பெருமான், சிவபெருமானின் அஞ்செழுத்தாம் பஞ்சாக்கரத்தை உணர முடியாத அறிவிலார் நெஞ்சம் எவ்வாறு இருண்டு கிடக்குமோ அது போன்று நீண்ட வானம் இருண்டது என்று குறிப்பிட்டுள்ளார்:

*பரன், அஞ்செழுத்தும் உணரா அறிவிலோர்*
*நெஞ்சம் என்ன இருண்டது நீண்டவான்.*[7]

கங்குலாகிய நங்கை முன் கொண்ட புன்முறுவல் போன்றும், வெண்ணீற்றின் பேரொளி போன்றும் நிலா முகிழ்த்தது என்பர் சேக்கிழார்.

*நறுமலர்க் கங்குல் நங்கைமுன் கொண்டபுன்*
*முறுவ லென்ன முகிழ்த்தது வெண்நிலா.*[8]

1. பாரதிதாசன் பாடல்கள்: முதல் தொகுதி: புரட்சிக்கவி.
2. திருமலைச் சிறப்பு: 2.
3. திருநாட்டுச் சிறப்பு: 6.
4. திருநாட்டுச் சிறப்பு: 22.
5. திருக்கூட்டச் சிறப்பு: 3.
6. கம்பராமாயணம்: கைகேசி சூழ்வினைப் படலம்: 46.
7. தடுத்தாட்கொண்ட புராணம்: 159.
8. தடுத்தாட் கொண்ட புராணம்: 160

ஆற்ற அண்டமெ லாம் பரந் தண்ணல்வெண்
நீற்றின் பேரொளி போன்றது நீள்நிலா.[1]

இதுபோன்றே, கயிலை மலையைக் காணும் சேக்கிழார் பெருமான் கண்களுக்கு அம்மலை 'பொன்னின் வெண்திருநீறு புனைந்தது போன்று நீள்பனி பூசிய மால் வரை,[2] யாகக் காட்சி தரக் காணலாம். நீற்றொளியின் வெண்மை பகல்போல் துலங்குவதாகக் குறிப்பிடுகின்றார் சேக்கிழார்.

கிளர்ந்த திருநீற் றொளியிற் கெழுமிய நண்பகல்.[3]

இவற்றலெல்லாம் சேக்கிழார் பெருமான் எப்பொருளைக் காணினும் அப்பொருளைச் சிவபெருமானோடும் அல்லது அவரோடு தொடர்புடைய பொருளாகவும் காண்கின்றார் என்பது புலனாகும். இவற்றல், பக்தி நெறியிற் றலைப்பட்ட அவர்தம் மனப் பண்பு விளங்கக் காணலாம்.

## அடியார் பெருமை

சேக்கிழார் தம் நூலிற்கு இட்ட பெயர் 'திருத்தொண்டர் புராணம்' என்பதாகும். தொண்டர்தம் பெருமையினைப் பரவிப் பாடிய காரணத்தால் இவர் 'தொண்டர்சீர் பரவுவார்' என்றும் அழைக்கப்பெற்றார். இன்பதுன்பங்களை ஒன்றாக நோக்குபவர் அடியார்கள் ஆவர். "மெய்த்திருவந் துற்றாலும் வெந்துயர்வந் துற்றாலும் ஒத்திருக்கும் உள்ளத்து உரவோர்,[4] அவர். நலக் கேடுகள் அவர்கட்கு ஒன்றே; ஓடும் செம் பொனும் ஒன்றே; இறைவனை வணங்கி ஏத்துதலன்றி வீட்டுப் பேறும் வேண்டி நிற்காத ஆற்றல் மிக்கவர்கள். அடியார்கள்.

கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்.[5]

## அடியார் போற்றப்படும் முறை

இல்வாழ்வார்க்குரிய கடமைகளாகத் திருவள்ளுவர் துறந்தவர்க்கும், நல்கூர்ந்தார்க்கும், இறந்தார்க்கும் உதவுதலைக் குறிப்பிட்டுள்ளார் :

துறந்தார்க்கும் துவ்வா தவர்க்கும் இறந்தார்க்கும்
இல்வாழ்வான் என்பான் துணை.[6]

இம்முறையில் வரும் அடியார்களை இளையான்குடி மாறநாயனார் எதிர்கொண்டு அழைத்து, கைகூப்பி வணங்கி, இன்சொல் வழங்கி, வீட்டிற்கு அழைத்து வந்து திருவடிகளைத் தூய்மை செய்து, அமர ஆசனமிட்டு அருச்சித்து, நால்வகை உண்டியினை அறுவகைச் சுவைத்திறத்தில் முகமலர்ச்சியுடன் அளித்த நிலையினைச் சேக்கிழார் பின்வருமாறு பாடுவர் :

ஆர மென்பு புனைந்த வையர்த
மன்ப ரென்பதொர் தன்மையால்
நேர வந்தவர் யாவ ராயினு
நித்த மாகிய பத்திமுன்
கூர வந்தெதிர் கொண்டு கைகள்
குவித்து நின்று செவிப்புலத்
தீர மென்மது ரப்ப தம்பரி
வெய்த முன்னுரை செய்தபின்.

கொண்டு வந்து மனைப்பு குந்து
குலாவு பாதம் விளக்கியே
மண்டு காதலி னாத னத்திடை
வைத்த ருச்சனை செய்தபின்
உண்டி நாலு விதத்தி லாறு
சுவைத்தி றத்தன வொப்பிலா
அண்டர் நாயகர் தொண்ட ரிச்சையி
னமுது செய்ய வளித்துளார்.[7]

## மங்கையர் மாண்பு

சேக்கிழார் தம் பெரிய புராணத்தில் மகளிர்க்குத் தனியிடம் கொடுத்துச் சிறப்பிக்கின்றார். நம்பியாரூரரின் தாயார் இசைஞானியாரைக் குறிப்பிடும்பொழுது,

வேதியர் குலத்துள் தோன்றி
மேம்படு சடையனார்க்கு
ஏதமில் கற்பின் வாழ்க்கை
மனை இசை ஞானியார்பால்[8]

1. தடுத்தாட்கொண்ட புராணம் : 162
2. திருமலைச்சிறப்பு : 1.
3. திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் புராணம் : 6
4. நளவெண்பா : 12
5. திருக்கூட்டச்சிறப்பு : 8.
6. திருக்குறள் : '2.
7. இளையான்குடிமாற நாயனார் புராணம்:3, 4,
8. திருத்தாட்கொண்ட புராணம் : 3

என்று கற்பு நெறியொழுகிய வாழ்வின் முறையார் எனக் குறிப்பிட்டுள்ளார். திருநீலகண்டநாயனார் தம் மனைவியாரைக் குறிப்பிடும் பொழுது 'மனைவியாரும் அருந்ததிக்கற்பில்மிக்கார்'[1] என்று பாராட்டியுள்ளார். இயற்பகை நாயனார் மனைவியாரைக் குறிப்பிடும் பொழுது 'தேற்றம் மருவிய தெய்வக்கற்பின் மனைக்கிழத்தியார்'[2] என்று மொழிந்துள்ளார். மானக்கஞ்சாற நாயனார் மனைவியாரைக் குறிப்பிடும் பொழுது 'மழைக்குதவும் பெருங்கற்பின் மனைக் கிழத்தி'[3] என்று கூறுவர். திருவெண்காட்டு நங்கையினைப் பெண்மைப் பொலிவின் திறலாக வடித்துக் காட்டியுள்ளார்.

*வேதகா ரணரடியார்*
*வேண்டியமெய்ப் பணிசெய்யத்*
*தீதில்குடிப் பிறந்ததிரு*
*வெண்காட்டு நங்கையெனும்*
*காதல்மனைக் கிழத்தியார்*
*கருத்தொன்ற வரும்பெருமை*
*நீதிமனை யறம்புரியும்*
*நீர்மையினை நிலைநிற்பார்.*[4]

மேலும் திருவெண்காட்டு நங்கையினை 'பெருகுதிரு மனையறத்தின் வேராகி விளங்கு திருவெண்காட்டு நங்கை'[5] என்றும், 'அன்புமிக்க பெருங்கற்பின் அணங்கு திருவெண் காட்டம்மை,'[6] என்றும், ''அரிய கற்பின் மனைவியார்''[7] என்றும் பலபடப் புகழ்ந்துரைத்துள்ளார்.

மேலும் சிவனடியார்களின் இல்லற வாழ்வும், பத்தித் தொண்டும் செம்மையுறத் துணை நின்று, மனதாலும் வாக்காலும் செயலாலும் செம்மை சிறக்க உழைத்தவர்கள் அவர்தம் மனைக்கு விளக்காகிய வாழ்க்கைத் துணைவியரே என்பதனைச் சேக்கிழார் யாண்டும் உணர்த்தக் காணலாம்.

**அரசியல் அறம்**

சேக்கிழார் அமைச்சர் தொழிலைத் திறம்பட நடாத்தியவர். எனவே அரசியல் அறம் பிறழாத நெறி முறைகளைத் தம் காப்பியத்தின் ஊடே விளக்கியிருக்கக் காணலாம். அநபாய சோழனைக் குறிப்பிடும் பொழுது,

*மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்கெலாம்*
*கண்ணும் ஆவியு மாம்பெருங்கா வலான்*[8]

என்று மண்ணில் வாழும் உயிரினங்களுக்கு அரசன் கண்ணாகவும் உயிராகவும் ஒளிர்கின்றான் என்று போற்றியுள்ளார். மேலும் அரசன் கடமை குடிகளுக்குத் தன்னாலும், தன் பரிசனத்தாலும், கள்வராலும், பகைவராலும், ஏனைய உயிர்களாலும் வரும் ஐவகைப் பயமும் வாராமற் காத்தலாகும் என்று குறிப்பிட்டுள்ளார் :

*மாநிலங்கா வலனாவான்*
*மன்னுயிர்காக் குங்காலைத்*
*தானதனுக் கிடையூறு*
*தன்னாற்றன் பரிசனத்தால்*
*ஊனமிகு பகைத் திறத்தாற்*
*கள்வரா லுயிர்தம்மால்*
*ஆனபய மைந்துந்தீர்த்*
*தறங்காப்பா னல்லனோ?*[9]

இவற்றாலும் ''அருமந்த அரசாட்சி அரிதோமற் றெளிதோதான்''[10] என்று குறிப்பிட்டிருப்பதாலும் அரசியல் அறம் பாடிய அறவோர் சேக்கிழார் என்பதனை அறியலாம்.

**காவியச் சுவை**

பத்தி நெறியினைப்பாடவந்த சேக்கிழார் தந்த காப்பியம் காவியச்சுவை நிறைந்து மிளிர்கின்றது. இயற்கை வருணனையும், சொல்லாட்சியும், உவமை அழகும், அணி நலன்களும் ஆங்காங்கே அமைவுறப் பொருந்திக் காவியச் சுவையினைக் கூட்டுவிக்கக் காணலாம். மருத வளத்தை வருணிக்கும்போது வயல் வளம் சூழ்ந்த நாடு நம் கண் முன் நிற்கக் காணலாம்.

*சங்கங்கள் வயலெங்குஞ்*
*சாலிகழைக் கரும்பெங்கும்*

1. திருநீலகண்ட நாயனார் : 4
2. இயற்பகை நாயனார் புராணம் : 34
3. மானக்கஞ்சாற நாயனார் புராணம் : 11
4. சிறுத்தொண்ட நாயனார் புராணம் : 12
5. சிறுத்தொண்ட நாயனார் புராணம் : 17
6. சிறுத்தொண்ட நாயனார் புராணம் : 53
7. சிறுத்தொண்ட நாயனார் புராணம் : 55
8. திருநகரச் சிறப்பு : 14
9. திருநகரச் சிறப்பு : 34
10. திருநகரச் சிறப்பு : 44

*கொங்கெங்கு நிறைகமலக்*
*குளிர்வாசத் தடமெங்கும்*
*அங்கங்கே யுழவர்குழா*
*மார்க்கின்ற வொலியெங்கும்*
*எங்கெங்கு மலர்ப்படுக*
*ரிவைகழிய வெழுந்தருளி.*[1]

"வங்கினைப் பற்றிப் போகா வல்லுடும் பென்ன நீங்கான்"[2] என்று கண்ணப்ப நாயனார் புராணத்தில் இவர் கையாளும் உவமை தன்மைநவிற்சிச் சிறப்பும், வேடர்களுக்குள் நிகழும் பேச்சுத் தன்மையிலேயே அவரறி பொருளை உவமையாகக் காட்டியிருப்பதும் இவர் நுண்மாண் மதிநலத்தினை நுவலா நிற்கும். "பிள்ளைதைவரப் பெருகுபால் சொரிமுலைத் தாய் போல்"[3] என்று இவர் பிறிதோரிடத்திற் கையாளும் உவமை, எடுத்த பொருளின் சிறப்பினை ஏற்றமுற வடிக்கும் திறமும் செஞ்சொற்களை வழங்கி நிற்கும் சொல்லழகும் உணர்த்துவதாகும். சோலையை வருணிக்கும் போது,

*மொய்யளி சூழ்நிரை நீல*
*மூழுவலயங்களின் அலையச்*
*செய்யதளிர் நறுவிரலின்*
*செழுமுகையின் நகஞ்சிறப்ப*
*மெய்யொளியின் நிழற்காணும்*
*ஆடியென வெண்மதியை*
*வையமகள் கையணைத்தாற்*
*போலுயர்வ மலர்ச்சோலை*[4]

என்று வருணித்திருப்பது காவியச் சுவையின் உரைகல் எனக் கொள்ளலாம். ஒரு சொல்லையே இருமுறை பெய்து ஒரு தனியழகினைச் சொல்லில் புகுத்திக் காட்டல் சேக்கிழார் இயல்பு. சான்றாகத் திருவாரூர்ச் சிறப்பினைச் செப்ப வந்த சேக்கிழார் பெருமான்,

*சைவநெறி ஏழுலகும்*
*பாலிக்குந் தன்மையினால்*
*தெய்வநெறிச் சிவம்பெருக்குந்*
*திருவாரூர் திருவாரூர்* [5]

என்று குறிப்பிட்டுள்ளார்.

மேலும் பெரிய புராணமாகிய காவியக் கலைக் கோயிலின் சிறப்பினைக் கூறிக் கொண்டே போகலாம். கொற்றவன் குடி உமாபதி சிவாச்சாரியார்.

*கருங்கடலைக் கைநீத்துக்*
*கொளவெளிது ; முந்நீர்க்*
*கடற்கரையி னெய்ம்மணலை*
*யெண்ணியள விடலாம் ;*
*பெருங்கடன்மேல் வருந்திரையை*
*யொன்றிரண்டென் றெண்ணிப்*
*பிரித்தெழுதிக் கடையிலக்கம்*
*பிரித்துவிட லாகும் ;*
*கருங்கடலின் மீனையள*
*விடலாகும்; வானத்*
*தாரகையை யளவிடலாஞ்;*
*சங்கரன்தா டமது*
*சிரங்கொடிருத் தொண்டர்புரா*
*ணத்தையள விடநஞ்*
*சேக்கிழார்க் கெளிதலது*
*தேவர்க்கும் அரிதே.*

என்றபடி சேக்கிழார் கட்டிய காவியக் கலைக் கோயிலின் மாண்பினை முற்றவுணர்த்த இயலாது.

## பெரியபுராணச் செய்தி

சிவபிரானிடத்துப் பத்தியும் வழிபாடும், அவன் அடியவரிடத்துப் பத்தியும் வழிபாடும் ஆகிய இவையே மண்ணிற் பிறந்தார் உய்தற்கு உரிய வழிகளாக மேற்கொள்ள வேண்டுமென்று சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்திற் பலவிடங்களில் வற்புறுத்தியுள்ளார் :

*மண்ணி னிற்பிறந் தார்பெறும்*
*பயன்மதி சூடும்*
*அண்ண லாரடி யார்தமை*
*யமுதுசெய் வித்தல்*
*கண்ணி னாலவர் நல்விழாப்*
*பொலிவுகண் டார்தல்*
*உண்மை யாமெனி னுலகர்முன்*
*வருகென வுரைப்பார்.*[6]

மேலும்,

1. திருஞானசம்பந்த நாயனார் புராணம் : 626
2. கண்ணப்ப நாயனார் புராணம். 116
3. திருக்குறிப்புத் தொண்டர் புராணம் : 22
4. திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம் : 9
5. திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்: 12
6. திருஞானசம்பந்த நாயனார் புராணம் : 1087

சிந்தைசெய்வது சிவன்கழ
லல்லதொன் றில்லார்
அந்திவண்ணர்தம் மடியவர்க்
கமுதுசெய் வித்துக்
கந்தைகீளுடை கோவணங்
கருத்தறிந் துதவி
வந்தசெல்வத்தின் வளத்தினல்
வரும்பயன் கொள்வார்.[1]

என்று அமர்நீதி நாயனர் புராணத்திற் குறிப்பிட்டுள்ளபடி, சேக்கிழார் பெருமான் காட்டும் குடிமக்கள்,

அரசுகொள் கடன்களாற்றி
மிகுதிகொண் டறங்கள்பேணிப்
பரவருங்கடவுட் போற்றிக்
குரவரும் விருந்தும்பண்பின்
விரவிய கிளையுந் தாங்கி
விளங்கிய குடிகள்[2]

ஆக நாம் வையத்துள் வாழ்வாங்கு வாழ வேண்டுமென்று நமக்குப் பெரிய புராணத்தின் வழி அறிவுறுத்துகின்றார். அவ்வழி நடந்து உய்வோமாக!

---

## கடவுளை அணுகுதல்

மக்களாய்ப் பிறந்த நாம் எல்லாம் நம்முள் இடையறாத பேரன்பு பாராட்டி நடத்தல் வேண்டும். கடவுள் எல்லா உயிர்களிடத்தும் இரக்கம் உடையவரா யிருத்தலோடு அவற்றினிடத்தே பேரன்பும் வைத்திருக்கின்றார். நாமும் அதுபோலப் பேரன்பு உடையவர்கள் ஆனாற்றான் கடவுளை அணுகமுடியும். பகுத்தறிவில்லா உயிர்களிடத்து இரக்கமாகிய அன்பும், பகுத்தறிவுள்ள மக்களிடத்து எல்லையற்ற அன்பும் வைத்து நடந்தால் நாம் கடவுளின் உண்மைப் புதல்வர்கள் ஆவம். ஒருவன் தன்னுடன் பிறந்தாரினும் தன்னைப் பெரியனாக எண்ணி இறுமாந்து, அவரை இகழ்ந்து, அவர் துன்பங்களைப் பாராது ஒழுகுவனாயின் அவன் தந்தை அவனை விரும்புவாரா? அதுபோலவே, ஒரே கடவுளின் மக்களாகிய நாமும் நம்முள் அன்பின்றி நம்மையே நாம் பெரியராக எண்ணிப், பிறர் துயர் களையாது இறுமாந்து நடப்பமாயின், நம் முழுமுதற் றந்தையாகிய கடவுளும் நம்மைக் கண்டு பெரிதும் அருவருப்படைவர் என்பது உண்மையே யாம்.

—மறைமலையடிகள்
சைவசித்தாந்த ஞானபோதம் பக்கம் ௫௪

---

1. அமர்நீதி நாயனர் புராணம்: 3
2. திருநாட்டுச் சிறப்பு: 26

# செம்பொருட்டுணிவெனப்படும் சித்தாந்தம்

[சித்தாந்த பண்டிதர் திரு. ப. இராமநாத பிள்ளை]

*நெல்லைமாவட்டம், குலசேகரன் பட்டினத்தில் 1890 இல் தோன்றியவர். பள்ளியாசிரியராக வாழ்க்கையைத் தொடங்கிய இவர் சில ஆண்டுகட்குப் பின் இலங்கைக்குச் சென்று வணிகத் துறையில் ஈடுபட்டிருந்தார். 1946 இலிருந்து கழகத்தில் தலைமைப் புலவராகப் பணியாற்றிவருகின்றார்; சைவமும் தமிழும் தம் இருகண்ணெனப் போற்றும் இவர் சித்தாந்த சாத்திரத்தில் புலமை மிக்குடையவர். திருக்குறளின்பால் பேரீடுபாடு கொண்டவர். எளிய வாழ்வு*



*வாழும் இப்பெரியார் சமய, சாத்திர நூல்களுக்கு உரையெழுதுவதில் வல்லவர். திருமந்திர உரை, திருவாசக உரை, மூவர் தேவாரத் திருப்பதிகத் திரட்டுகள், பெரியபுராணப்பகுதிகளின் உரை ஆகியவை இவர்தம் உரைவன்மையை எடுத்துக் காட்டுபவை. பதினான்கு சாத்திரங்கள் முழுவதையும் பதிப்பித்தவர். 'பன்னிருதிருமுறைப் பெருந்திரட்டு' 'சிவநெறிச்செய்யுட்டிரட்டு' ஆகியவை இவர் தொகுத்த அரிய தொகுப்பு நூல்கள்,*

''தென்னா டுடைய சிவனே போற்றி
எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி''

—அ. ஈ·க க ச·டு.

## பொதுமை

இது, தனித்தமிழ்மறை முடிவின் அமிழ்தனைய பெருமந்திரம். மூவர்தமிழ் இன்பம், பொருள், அறம் எனப்படும் மூன்றுறுதிப் பொருளும் முறையுற ஓதும் முக்கட் செல்வன்றன் மிக்க வாய்மொழி யாகும். மறைமுடிபாம் 'திருவாசகம்' வீடாகும். 'திருச்சிற்றம்பலக் கோவையார்' திருவடிப் பேருகும். 'மூலர் தமிழ்' தன்னொப்பில்லாச் சிவாகமம். 'அம்மை தமிழ்' ஆகம நுணுக்கம். 'மெய்கண்டான் தமிழ்' ஆகமப் பிழிவாகும். இம் மந்திரம் ஒன்றே தனித்தமிழ் நன்னெறியாம் சித்தாந்த சைவத்தின் பொதுமைச் சிறப்பெடுத்து ஓதும் பொன்றுப் பொன்மொழி யாகும். இத்தகைய திருவருண் மொழி உலகிடைக் காணப்படும் எச்சமயத்துள்ளும் ஓதப் பெறவில்லை யென்பது உண்மையாகும்.

## அளவை நூல்

''மூவர்தமிழ் வாதவூர்த் தேவர்தமிழ்
மூலர்தமிழ்
சேவுயர்த்தோன் அம்மைதமிழ் சேவிப்போர்—
யாவர்களும்
மெய்கண்டான் செய்ததமிழ் மேவிச்
சிவனடியைக்
கைகண்டார் உள்ளத்தின் கண்.''

''நால்வர்தமிழ் கோவைதிரு மூலரம்மை
மெய்கண்டார்.
சால்சிவன்றன் எண்குணச்சார்
பாம்.''

## பாகுபாடு

''ஒன்றே முழுமுதல் இரண்டவன் இன்னருள்
மூன்றே பொருளுண்மை நான்கவன் படிமுறை
ஐந்தே தமிழ்மறை ஆறே அறிவுநிலை
ஏழே பிறப்புவகை எட்டே இறைகுணம்
ஒன்பதே அருளுரு பத்தே பதிபத்தி.''

## முப்பொருளுண்மை

''பதிபசு பாசம் எனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாசம் அநாதி

*பதியினைச் சென்றணு காப்பசு பாசம்*
*பதியணு கிற்பசு பாசம் நிலாவே.''*

—கO, கருக

சுட்டியறியப்படும் உலகம், உலகியற் பொருள்கள், உடல் ஆகியவை பாசம் எனப் படும். சுட்டியறியப் படாது ஒட்டி உய்த் துணரப்படும் பொருள் பசு. பசுவினது உண்மையினை ஐம்பூதச் சேர்க்கையாகிய உடம்பு இயங்குவது கொண்டு வழியளவை யான் உணரலாம். வழியளவை - கருத லளவை ; அனுமானப் பிரமாணம்.

இவ் வுடம்பு போன்று காணப்படும் உலகமும் ஐம்பூதச் சேர்க்கை யுடையதே. அதனுல் அவ்வுலக இயக்கத்திற்கு உடலுக் குரிய உயிர் போன்று ஓர் உயிர் இருத்தல் வேண்டும். அவ்வுயிர் உடம்பிற் காணப்படும் சிற்றுயிரின் வேருக எண்ணமும் சொல்லும் சென்று எட்டமுடியாத ஒரு பேருயிராக இருத்தல் வேண்டும். அதனையே பதியென்று பகருகின்ருேம்.

இப்பதிப் பொருள் உலகோடு இயைந்து அவ்வுலகை இயக்குவது மட்டுமன்றி உயிர்க் குயிராய் அவ்வுயிரோடும் நீக்கமின்றி இயைந்து அவ்வுயிரையும் இயக்குகின்றது. இப் பதி, பசு, பாசம் என்னும் மூன்றையும் முறையே இறை, உயிர், தளை எனவும் இறை, உறை, சிறை எனவும் வழங்குவர். இவற்றுள், உயிர் என்பது உயிர் மூச்சை யுடையது எனப்படும். அதுபோல் உறை விடத்து உறைவது என்பது உறை என் தின்றது. அஃதாவது உயிர் உடம்போடு பொருந்தியிருக்கும் போதும் எல்லா உறுப்பு களோடும் ஒரு நேரத்துக் கூடி உணர்வதற் கிடமில்லை. ஒவ்வொரு பொறியோ டியைந்தே யுணரும். உறைவிடத் துறைவி யென்பது வசித்திட வரும் வியாபி என்பதாம். இவ் வுண்மை ''அசித்தரு வியாபகம் போல்'' (சித்தியார்-சு. உ-கஎ) என்பதனுலும் ''வசிப் பெனும் வாழ்க்கை'' (சு. சரு-உ) என்பதனு லும் உணரலாம். இனிப் பாசமும் மூன்று. அவை: ஆணவம், கன்மம், மாயை என்பன. இம் முப்பொருளையும் முறையே ஊன் (பாசம்) உயிர், உணர்வு எனவும் ஓதுப.

**உயிர்கள் எண்ணில**

*''பசுப்பல கோடி பிரமன் முதலாய்ப்*
*பசுக்களைக் கட்டிய பாசமூன் றுண்டு*
*பசுத்தன்மை நீங்கியப் பாசம் அறுத்தாற்*
*பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே.''*

—கO. உ௬௯௭

நன்னெறி நல்லார் இவ் வுண்மைகளைத் திருவருள் நூல்களின் வாயிலாகத் தெளி வித்ததோடமையாது அனைவர்க்கும் விடா நினைவு கொள்ளக் காட்சியினும் காட்டுவார் போன்று திருக்கோயில் அமைப்பிலும் சிறப் புறச் சமைத்துள்ளார்கள். அது வருமாறு :

''ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்
ஆய பசுவும் அடலே றெனநிற்கும்
ஆய பலிபீட மாகுநற் பாசமாம்
ஆய அரனிலை ஆய்ந்துகொள் வார்கட்கே''

—கO. உ௬௭உ

பாசம் மூன்று

ஆணவம், கன்மம், மாயை ஆகிய மூன்றும் சிறை எனப்படும் பாசமாம்.

*''ஆணவ மாயையும் கன்மமு மாமலங்*
*காணு முளைக்குத் தவிடுமி யான்மாவு ந*
*தாணுவை யொவ்வாமல் தண்டுல மாய்நிற்கும்*
*பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்தே''*

—கO. உகருக

பதி

பிறப்பு இறப்புகட்கு உட்படுவதாகிய பெற்றியில்லாப் பெரும்பொருள் பதியென்ப. அப்பதி, தானே விளங்கும் பேரறிவும், பேரருளும், பேராற்றலும், பெரு நிறைவும், பேரின்பும், கண்ணுதலாற் பண்ணும் அருட் டொழில் ஐந்தும், முத்திறத்தால் புணரும் மூவாப் பெரும் புணர்ப்பும், முத்திறத் திரு மேனியும் எத் திறத்தும் தன்னின் நீங்காத் திருவருளில் கோடலும், அதனுல் அருளிப் பாடு நிகழ்தலும் அப்பொழுதே அத்திரு மேனி முன்னையருளாய் முற்றுதலும், பிறவும் உடையதென்ப.

அப்பாலாம் பதி பொருட் சிவம் எனப் படும். இப்பால் தூமாயைக் கண் காணப் படும் தொழின் முறையால் அது பொருவில் அருட்சிவம் எனப்படும். இந்நிலை கூட்டல், ஊட்டல், ஆட்டல் என மூவகைப்படும். அவை அருவம், அருவுருவம், உருவம் என அழைக்கப்படும். இம் மூன்றும் முறையே அம்மையப்பர் (சத்திசிவம்) அருளோன் (சதாசிவம்) ஆண்டான் (ஈசுரம், சுத்த வித்தை) எனப்படும்.

கூட்டல் (இலயம்), ஊட்டல் (போகம்), ஆட்டல் (அதிகாரம்) என்னும் மூன்றும் ஐந்து மெய் (சுத்த தத்துவம்) களின் பாகு பாடாகும். இம் முத்திறத்தால் பல்லுயிரை யும் செவ்வி வருவித்து மல நீக்கி ஆட் கொண்டு அடியிணைக் கீழ்ச்[1] சேர்த் தருளு கின்றனன். அந் நன்னெறியின்கண் வரு வித்தற் பொருட்டுக் கூட்டலருள் ௩௬, ௩௫ ஆம் மெய்களைத் தூண்டித் தொழிற்படுத்த லால் நிகழும். ஊட்டலருள் ௩௪ ஆம் மெய்யால் நிகழும். ஆட்டலருள் ௩௩, ௩௨ ஆம் மெய்களைத் தொழிற் படுத்துவதால் நிகழும். ஒருபுடை யொப்பாக ஊட்டலை இன்பம் என்றும், ஆட்டலை அறமும், பொருளு மென்றும் அமைத்துக் கொள்ள லாம். இம் மூன்றனையுமே சிவஞான சித்தி யார் ''போகி, வேகி, யோகி'' யெனப் ''போகியா யிருந்துயிர்க்கு'' (க. உ-௫0) எனத் தொடங்கும் திருப்பாட் டருளு கின்றது.

திருவுரு

சிவபெருமான் கொள்ளும் திருமேனி யனைத்தும் திருவருளின்கண் தன் விழைவால் எடுப்பதாகும். அவ் வுண்மை ''மாயைதான் மலத்தைப் பற்றி'' (க. உ-௪௧) எனவரும் சித்தியாரான் உணரலாம். நீரில் தோன்றுங் குமிழி நீரானே ஆக்கப் படுவதும் அடக்கப் படுவதும் இதற்கு ஒப்பாகும். இதுவே தடத்த நிலை. தடத்தம்-தோற்றம். சொரு பம்-தொன்மை, உண்மை. தடத்தம்-பொது; நீங்கும் நிலை-உண்மை நீங்கா நிலை.

ஒலிக்குக் காணப்படும் வரிவடிவம் போன்று திருக்குறிப்பாந் திரு ஆணைக்குத் தானே காட்டியருளும் வடிவமும் முத்திறத் தால் ஒன்பது வகைப்படும். அவை: அருவம் நான்கு, அருவுருவம் ஒன்று, உருவம் நான்கு என்பன. ''சிவஞ்சத்தி நாதம் விந்து'' (உ. ௪-௭௪) என்பதனுல் அவற்றை யுணர லாம். அவை: சிவம், சத்தி, நாதம், விந்து (அருவம் ௪) சதாசிவம் (அருவுரு வம் க) ஈசன் உருத்திரன், மால், அயன் (உருவம் ௪) என்பன.[2]

இனி இவ் வடிவங்களுள் அருவுருவ நிலைக்கு அடுத்த நிலை ''மாதிருக்கும் பாதிய'' ஞகிய தொன்மைத் திருக் கோலமாகும். அது ''தோலுந் துகிலும்'' (அ. ௩0-௩௮) எனத் தொடங்கும் தமிழ்மறை முடிபான் உணரலாம். [3]பின் எல்லையில் புகழ்சேர் தில்லைத் திருச்சிற்றம்பலத்து ஆருயிர் உய்ய ஆற்றும் அருட்டொழில் ஐந்தின் முதல்வ ஞகிய அம்மை அம்பலவாணன் அருளார் திருவுரு. இத் திருவுரு அடியிலிருந்து முடிகாறும் நற்றமிழ் மாமந்திர மாகிய நம சிவய என்பதாம். அதுபோல் வலத்திருக் கையினின்றும் வலத் திருவடி அகம்வரை ''சிவயநம'' என்பதாம். இனித் ''தோற்றந் துடியதனின்'' எனத் தொடங்கும் திருப் பாட்டு ஐந்தொழிலுண்மை காட்டுவதாகும். இனி ''ஓங்காரமே'' எனத் தொடங்குந் திருப் பாட்டுத் திருவாசியைக் குறிக்கும். இவ்வனைத் தும் உண்மை விளக்க நூலிற் காண்க. இத் திருத் தொழில் ஐந்தினையும் அம்மை கண்டு களிக்க அப்பன் நடித்தருளுகின்றனன்.[4] அவை: படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் என்பன.

இனி ஆலமர் செல்வன் திருவுரு. இஃது ஆருயிருய்ய நூலும், நுண் பொருளும் முறையே நொடித்தும் நடித்து முணர்த்தல். நூல் அறமுதல் நான்கினையும் நொடித்தல். இது மறை எனப்படும். அறிவுப் பொறி யாம். சின் முத்திரையால் நுண் பொரு ளுணர்த்தல். இது முறை (ஆகமம்) எனப் படும். இதனை நடித்தல் எனக் கூறலாம்.

'நொடித்தலறம் நுண்பொருளை நோக்கியுணர்ந் [துய்ய
நடித்தலறி வுப்பொறியாம் நாடு.''[5]

அம்மட்டு மன்றி அம்பலவாணர், அம்மையப்ப பிள்ளை முதலிய திருவுருவங்கள் போன்று திருவுலா வருவதில்லை. இத் திரு

1. இறுமாந். ௪, கூ-௩0 வடிவுடை. ௪, அ௪-௪, முருகலர் நறுமலர். ௪, ௧௧௩-உ.
2. சிவமொடு சத்தி. ௧0, அந்தாமரைப் போ-௬. ௬-௧0.
3. ஓருடம் பிருவராகி ௪, உஉ-௬.
4. செய்ஞ்ஞின்ற-௪. அ0-௪, கற்பனைகடந்த-௧உ. தில்லை-உ,
5. ஆலின்கீ-௪. உ௬-௬, சுழிந்தகங்கை-௧-௫௩௬.

மேனி ஒட்டுணர்த்தும் ஒப்பில் ஒன்ருகும். அகத்தமர்ந்து ஆட்கொள்ள லதன்பண்பு.

''ஆண்டான் பெருவிரலாள் காட்டியுயிர் ஏனைமலம்
பூண்டவிர லொட்டாம் புணர்ப்பு''

மாதிருக்கும் பாதிய னெப்பால் கடவுளின் மெய்ம்மைப் பண்பு நன்னெறியிற் போன்று எந் நெறியும் ஓதாமை யுணர்க.

''மாதிருக்கும் பாதியன்போல் மற்றெந் நெறியினி [லும்
ஓதாமை கொண்டுயர்வி் கோர்.''

## முப்புணர்ப்பு

செம்பொருட்டுணி வெனப்படும் சித்தாந்த சைவத்துள் இறைவன் மன்னுயிர் பலவற்ருேடும் இம்மை, அம்மை எனப்படும் கட்டு ஒட்டாம் இரண்டிலும் ஒன்ருய் வேருய் உடனுய் நீக்கமற நிறைந்து நின்றியக்கி நீண்ட திருவருள் புரிகின்றனன். கட்டு - பிறப்பியல்; பெத்தம், ஒட்டு-சிறப்பியல், முத்தி, இவற்றை முறையே அன்பியல், அருளியலெனவும் ஓதலாம். இவ் வுண்மை;

''பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு''

—திருக்குறள். ௩௫௮.

என்பதனுன் அறியலாம். மேலும்:

''காமஞ் சான்ற கடைக்கோட் காலை
ஏமஞ் சான்ற மக்களொடு துவன்றி
அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்
சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே''

—தொல். பொ. கற்-ருக.

என்பதனுலும் அறியலாம். இச்சிறப்பென்னுஞ் சொல் சிவபெருமானைக் குறிப்பதாகும். அது, ''சிறந்தானைத் திருநாகேச்சரத்துளானை''[1] (சு. சுசு-சு) என்பதனுல் நன்கு புலனுகும்.

இங்ஙனம் சிவபெருமான் முத்திறப் புணர்ப்பால் ஆருயிர்களை ஆட்கொண்டருளுகின்றனன். அவனை அடையுநெறி எவ்வுயிர்க்கும் அன்பு செய்தல், இறை பணியில் நிற்றல், திருமுறை மெய்கண்ட நூல்கள் ஓதுதல், திருக் கோயிலையும் சிவனடியாரையும் சிவனெனத் தேறி வழிபடுதல் என்ப.

இவை யெல்லாம் சுருங்க விளக்கும் திருப்பாட்டு வருமாறு:

''மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னுள் ளெழுபரஞ் சோதி
உள்ளவா காணவந் தருளாய்
தேறலின் தெளிவே சிவபெரு மானே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த
இன்பமே என்னுடை அன்பே''

—அ.உ கோயிற் - க.

பசு

பசுக்கள் அளவில்லன, அழிவில்லன. இயற்கைச் சுற்றமாகிய இருண் மலத்தில் அழுந்தி அறிவு விளங்காது அம்மல ஆற்றலால் மறைக்கப் பட்டிருந்தன. அம் மறைப்பை நீக்குதற் பொருட்டுச் சிவபெருமான் தன் திருக் குறிப்பாகிய கண்ணுத (சங்கற்பம்) லால் மாயாகாரிய மாகிய உடம்பினையும், தொன்மை வினையாகிய முயற்சியினையும் இடைச்சேர் (ஆகந்துகம்) மலமாக அவ்வுயிர்களுக்குப் பொருத்தி யருளினன், அவற்ருல் அவ்வுயிர்கள் வினைகளை ஈட்டவும் அவ்வினைப் பயன்களை நுகரவும் தகுதியாயின. அம் முறையால் அவ் வுயிர்கட்குப் பல பிறப்பு நேர்வவாயின.

பிறப்பற வேண்டும் பெற்றிக்கே பெருந் தண்ணளியால் பல பிறப்பைச் சலியாது கொடுத்தருளுகின்றனன் சிவன்.

''வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்''

—திருக்குறள், ௩௬௨.

என்னும் தனித்தமிழ்ப் பொதுமறையானுணரலாம்.

இவ் வுயிர்கள் நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பினுள் எண்பத்து நான்கு நூருயிரம் வேறுபாடுடையன.[2] இன்னும் மூன்றுமலமுடையன இரண்டு மலமுடையன, ஒரு மலமுடையன என முத்திறப்படும். இவற்றை முறையே சகலர், பிரளயாகலர், விஞ்ஞானகலர் எனவுங் கூறுப. இயற்கையிலும் தேவர் நிலையும் மக்கள் நிலையுமுள்ளன. ''புல்லாகிப் பூடாய்'' எனத் தொடங்கும் கூர்ப்பு முறையிலும் மக்களும்

1. பிறந்தும் இறந்தும். ௬0,

2. உரைசேரும். க. ௧௩௨-௪,

தேவருமாய் வருதலும் உண்டு. இது "கூர்ப்புங் கழிவும் உள்ளது சிறக்கும்" (தொல். சொல்-உரி-கஅ) என்னும் நூற்பாவான் உணரலாம். உயிர்கள் பாசத்தோடு கூடினமையால் பசு[1] வென்னும் பெயர் பெற்றது.

அடிமை

இவ்வுயிர் பாசப் பற்றோடிருக்கும் வரை, செருக்கு நீங்காமையின் அப்பொழுது அதன் பெயர் அஞ்சாமை எனப்படும். அவ் ஆணவச் செருக்ககல அருள்நூல்வழி யொழுகலும், ஆண்டவன், அடியார், திருக்கோயில் வழிபாடுகளும் வேண்டும்.

*"ஆக்கை யாற்பயனென்—அரன்*
*கோயில் வலம்வந்து*
*பூக்கையா லட்டிப் போற்றி[2] யென் னுதஇவ்*
*ஆக்கை யாற்பயனென்."* —௪. க-அ.

இத்திருத் தேவாரத்தால் வழிபாட்டு முறைமையினை உய்த்துணர்ந்து கொள்ளலாம். வழிபாட்டுப் படிமுறை நான்கு. அவை: "சிலம், நோன்பு, செறிவு"[3] அறிவு என்பன. (சரியை, கிரியை, யோகம், ஞானம்) இப் படிமுறை நான்கிற்கும் முறையே உருவம், அருவுருவம் (அகம்) அருவம் என ஆண்டவன் திருக்கோலங்கள் அமைந்துள்ளன. இவற்றிற்கு ஒருபுடை யொப்பாகப், பார்த்துப் படித்தல், பாராது ஒப்புவித்தல், பாட்டாய்தல், பாட்டியற்றலாகும். இவையே நன்னெறி நான்மை வழிபாடாகும். இச் சிறந்த வழிபாட்டான் அடிமை நிலை அருளானமையும். அடிமை-ஆன்மா.

கற்பினர் வழிபாடு காதல் வழிபாடாம்

வாழ்க்கைத் துணையாய் அமைந்த காதலர் (கணவன், மனைவி) கற்பின் வழுவாது வாழ்க்கை வழித் துணைவராய் வாழ்தல் வேண்டும். வாழ்க்கை சிவபெருமான் திருவடிப்பே றென்னும் சிறப்பு எய்துதல். திருமணத்து உறுதிமொழி வருமாறு :

*"தெய்வத் திருவிளக்குப் பூசைதிரு*
*நீறணிதல்*
*ஐயன் திருத் தாலி அணிவித்தல்—*
*மெய்யருளால்*
*வாழ்க்கைத்துணை யானேன் வழித்துணையாக்*
*கொண்டேன் நாம்*
*வாழ்வோம் சிறப்புறவை யத்து."*

இருவரும் சிவதீக்கை யுடையராய்ச் சிவமணியும், திருநீறும், திருவெழுத் தஞ்சும் முறையே உடை, உடல், உயிர்போற் பூண்டு வீட்டிலும் திருக்கோயிலிலும் விடாது சிவபூசை புரிதல். அங்ஙனம் புரிந்தவர் திருநீலநக்க நாயனாராவர். இஃது "அணைய வந்துபுக் கயவந்தி" (௬௨. திருநீலநக்கர்-௬) எனத் தொடங்கும் திருப் பாட்டான் உணரலாம். இவ்வழிபாடு நற்றவமாகும். அதனால் "தம்முதல் குருவுமாயத் தவத்தினில் உணர்த்த" எழுந்தருள்வன் இந் நாயனார்க்கு ஞானசம்பந்தர் ஞான குருவாய் எழுந்தருளினர்.

தொன்மை நன்மைச் செந்நெறியின் சிறப்பு இருவரும் ஒருங்கு வீடெய்துதலாம். வீடெய்துவிக்கும் தனித்தமிழ் மந்திரம் "நமசிவய' ஒருங்கு வீடெய்து முண்மை "சீர் பெருகு நீலநக்கர்" (கஉ. ஞானசம்பந்தர் - கஉ௫௦) எனத் தொடங்கும் திருப்பாட்டானுணரலாம்.[4]

*"பூத்தூவிப் போற்றிமறைமொழிந்து பூசித்தோர்[5]*
*மூத்தசிவன் தாளணைவர் முன்"*

தொன்மை மலம்

இஃது ஆணவம் எனப்படும். இது பல ஆற்றல்களைக் கொண்டுள்ளது. ஆருயிர்களோடு குற்றவியல்பாய் உடனுய்த் தோன்றியது. உயிர் என்றுள்ளதோ அன்றே மலமும் அதனோடுள்ளது. எனவே தொன்மையும் உடையது. தொன்மை-அனாதி. கேவலமாகிய புலம்பின்கண் உயிர்களின் அறிவையும் தொழிலையும் முற்றுக மறைத்து நிற்கும். சகலமாகிய புணர்வில் வினை முதலாம் தன்மையினை உண்டாக்கும். இது முனைப்புடன் ஒன்றை நுகர முயல்வது. அங்ஙனம் முயலுங்கால் ஆணவ ஆற்றலின் தன்மையாகிய அவா (மோகம்)த் தோன்றும்,

1. ஒன்றென்ற. சிவஞான போதம். உ. க-உ.
2. மானுடப் பிறவி-சித்தியார். உ. ௪-சக.
3. சிலமின்றி. அ. ௫௦-௩.
4. பூசுரர் சூ. கஉ. மங்கை. உ,
5. பொய்யாத. எ. ௩௦-௧,

அதன் வாயிலாக எழுவகைப் பண்புகள் ஏற்படும். அவா - மோகம். புணர்ப்பில் அஃது அஞ்ஞானமாகிய திரிபுணர்ச்சியை உண்டாக்கும். இவ்வாறு அம்மலத்தின் வழி நின்று அதனைத் தொழிற் படுத்துவது நடப் பாற்றலாகிய திரோதான சத்தியே.

இது கட்டியாக இருக்கும் களிமண்ணைக் கரைத் தோட்ட நீர் அதனோடு சேர்த்தல் வேண்டும். சேர்ந்த அப்போதே அது கரைந்தும் விடாது. அதனதன் அளவுக்கு வேண்டிய காலமும் பிடிக்கும். அதுதானும் இடையறாது நிகழ்ந்து கொண்டிருத்தல் வேண்டும். இடையீடுபடின் மீண்டும் அம் மண் காற்றாலும் வெப்பத்தாலும் இறுகி விடும். இதுவே பாசிபடு குட்டத்திற் கல் லினை விட்டெறிவது போன்று திருவைந் தெழுத்தை இடையறாது எண்ணுதலுக் கொப்பாகும். இதுவே மல நீக்கமருந்தும் நல ஆக்க விருந் தமிழ்தமுமாம். இம் மலத்திற்கு ஒப்பு "நெல்லிற்குமியும் நிகழ் செம்பிற் களிம்பும்" என்ப.

**கன்மம்**

இக்கன்மம் தொன்மை வினை யென்றும் தொடக்கவினை யென்றும் இருவகைப் படும். தொன்மை வினை முயற்சிக்குக் காரணமாக இருப்பது. தொடக்க வினை செய்யும் இரு வினைப் பாகுபாட்டிற்குக் காரணமாக வுள்ளது. இவ் வினை காரணமாகவே மீட்டும் மீட்டும் பிறப்பும் இறப்புமாகிய பெருந்துன்பம் பெருகும். தொன்மைவினை யுண்டென் பதனை "வினையே செய்வது" (தொல். சொல். ககஉ) எனவரும் நூற்பாவான் உணரலாம். வினை செய்யுங்கால் நன்மை தீமை எனப் பேர்பெற்று ஏறுவினை (ஆகாமியம்) யாகும். அவை தொகுக்கப் படுங்கால் அறம்பாவ மென்றாகி எஞ்சுவினை (சஞ்சிதம்) ஆகும். பின் நுகர்வின் பொருட்டு வகுக்கப் படுங்கால் ஏன்றவினை (பிராரத்தம்) என்றாகும். ஏறு வினை உருவமாய்த் தோன்றும். எஞ்சுவினை அருவமா யிருக்கும். ஏன்றவினை மிக நுண்மையாய் வந்து பொருந்தும். இவ்வினை களெல்லாம் நாம் என்னும் முனைப்புடன் ஒருவர் செய்யின் அவை அவரை வந்து பொருந்தும். அங்ஙன மின்றி அடிமை யாகிய நமக்கு அஃது இறைவன் இடும் ஏவல் என்று கொண்டு ஒருவர் செய்யின் அஃது இறை பணி என்றாகும். இதுவே இருவினை ஒப்பு.

இறைவன் உலகுடல் கரணம் எல்லாம் தந்தருளா விட்டால் நாம் ஒரு செயலை எவ்வாறு செய்வோம்? அதனால் நம்மால் செய்யப்படும் செயல்கள் அனைத்தும் அவன் ஏவியிடும் தாவில் பணியே யாம். மேலும் நூல்வழி நில்லாது செய்தல் பாவம். நூல்வழி நின்று அருள்வழி நில்லாமை புண்ணியம். இவற்றிற்குப் பிறப்புண்டு. அருள்வழி நிற் பார் பிறப்பு நீங்கிச் சிறப் பெய்துவர். சிறப்பு-சிவன் திருவடிப் பெரும் பேறு.

**மாயாகாரியம்**

மாயா எனுஞ் சொல் தூய தமிழ்ச் சொல். மாய்தல் ஆதல் என்னும் தமிழ்ச் சொல்லின் முதனிலைகள் மாய்—ஆ என்பன வாம். அவ் விரண்டின் கூட்டம் மாயா என் றாகும். மாய்தலோ டாதற் றமிழ்முதலாம் மாய் ஆ சேர்ந், தாயதுமா யாச்சொல்லறி.

இம் மாயா காரியம் இருவகைப் படும். அவை, தூமாயை, தூவா மாயை என்பன. தூமாயை மலகன்மம் விரவா தது. தூவாமாயை மலகன்மம் விரவி யது. இம்மாயா காரியங்கள் தத்துவங்கள் என்று அழைக்கப்பெறும். தத்துவம், மெய் என்பன ஒரு பொருட் கிளவி. இம் மெய்கள் தொண்ணூற்றாறு என்ப. அவ்வுண்மை:

"ஆகின்ற தொண்ணூற்றோ டாறும்
பொதுஎன்பர்
ஆகின்ற ஆறா றருஞ்சைவர்
தத்துவம்
ஆகின்ற நாலேழ் வேதாந்தி
வயிணவர்க்
காகின்ற நாலாறை யைந்துமாயா
வாதிக்கே"
—க0. உ க-ருக

என்னுந் தனித்தமிழாகமத்தால் அறி யப்படும். இங்ஙனம் நிலையால் இரண்டு பெயர் பெற்றதன்றிப் பொருளால் ஒன்றே யாம். இம் மாயைக்குக் காரணமாயுள்ள மாயை தொன்மையே யுள்ளது; ஒன்றாயுள் ளது, அறிவில்லது, இயக்க இயங்குவது. அருவா யுள்ளது, உருவாந் தன்மை யுடையது. காரியமாயை தோன்றி யொடுங் குந் தன்மைத்து. காரியமாயை "உடல், உறுப்பு, உலகம், உண் பொருள்களாகக்" காரியப்படும். இந் நான்கும் ஓரறிவு முதலாக ஆறறிவு ஈறாகச் சொல்லப்பட்ட நிலவுலகில்

வாழும் அனைத்துயிர்கட்கும், அவ்வுயிர்களுள் புண்ணியப் பேற்றினராகிய தேவர்கட்கும், பாவப் பேற்றினராகிய நரகர்க்கும் உள்ளன. தேவரும் நரகரும் நிலவுலகில் பிறந்தே வீடு பேறெய்துதல் வேண்டும். தேவருட் சிறந்தோர் புரந்தரன் அயன்மால், அரன் எனப் படுவோராவர்.

### தூமாயை

இஃது ஐந்து நிலையுடைத்து. அவை: "சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்த வித்தை என்பன. இவை சிவசத்தியின் நேர் குறிப்பால் தொழிற் படுவன. இவை ஒன்றினின்று ஒன்று தோன்றுவதாகிய திரி பெனப்படும் பரிணாமமன்று. விளக்கம் எனப் படும் விருத்தி யாகும். இங்கு ஒரு மலம் இருமலம் உடையாருறைவர். இதனை வழிப் பேறென்னும் பதமுத்தி யென்ப. இது சிவதத்துவம் எனப்படும். இங்கு வாக்குகள் நான்கும் உள்ளன.

### தூவாமாயை

இது, மாயை, காலம், நியதி, கலை, வித்தை, அராகம், ஆள் (புருடன்) என ஏழு மெய்களாகத் திரிந்தது. இதனைத் தொழிற் படுத்துவோர் அனந்த தேவர். இவர்க் குறையுள் ஈசுரதத்துவம். இவை உயிர் கட்கு அகக் கருவியாக வுள்ளன. இது வித்தியாதத்துவம் எனப்படும். இஃது ஆணவச் சார்பால் மயக்கமுஞ் செய்யும்.

### பகுதிமாயை

இஃது இருபத்து நான்கு மெய்கள் கொண்டது. அவை: பூதம் ஐந்து, தன் மாத்திரை ஐந்து, மனம் ஞானேந்திரியம் ஆறு, கன்மேந்திரியம் ஐந்து, அகங்காரம், புத்தி, குணம் மூன்று என்பன. இவை மும் மலமுடையார்க்குரிய நான்குமாம். இது சீகண்டரால் தொழிற் படுத்தப் படுவது. இவர்க்கு உறையுள் சுத்தவித்தை. இஃது ஆன்ம தத்துவம் எனப்படும். இது மும் மலத்தார்க்குரிய நான்குமாம். இவைக ளெல்லாம் மும்மலத்தார்க் குரிய நுகர்வுக்குக் கருவியும் இடமும் பொருளுமாவன. இவ் வனைத்தும் மல நீக்கத்தின் பொருட்டுத் தரப்பட்ட விளக்குப் போன்ற கருவியாகும்.

---

## பொருளுண்மைத் தேவாரம்

"அஞ்சினா லியற்றப் பட்ட
ஆக்கைபொற் றதனுள் வாழும்
அஞ்சினா லடர்க்கப் பட்டிங்
குழிதரும் ஆதனேனை
அஞ்சினா லுய்க்கும் வண்ணம்
காட்டினாய்க் கச்சம் தீர்ந்தேன்
அஞ்சினாற் பொலிந்த சென்னி
அதிகை வீரட்ட னாரே."

—ச. உசு-கு.

"முருகார் நறுமலர் இண்டை
தழுவிவண் டேமுரலும்
பெருகா றடைக் கற்றையி
னாய்பிணி மேய்ந்திருந்த
இருகாற் குரம்பை யிதுநா
னுடைய திதுபிரிந்தால்
தருவாய் எனக்குன் திருவடிக்
கீழொர் தலைமறைவே."

—ச. கக௩-௨.

"முப்பொரு ளுண்மை யுணர்ந்தார் முதல்வனற் றாள்சேர்வர்
செப்புதமிழ்ச் சித்தாந்தம் தேறு"

---

# ஆரியர் வாழ்வியலில் திராவிடப் பண்புகள்

[திரு. பேராசிரியர் பெ. திருஞானசம்பந்தன் எம்.ஏ., எல்.டி.]

*தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள சிதம்பரத்தை யடுத்த குணமங்கலத்தில் சைவ வேளாளப் பெரியாரான பெரிய பெருமாள் பிள்ளைக்கும் கலியாணி அம்மையாருக்குப் தோன்றியவர் இவர். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 1936 இல் சமக்கிருதம் பயின்று பி. ஏ. ஆனர்சு பட்டம் பெற்றார். குடந்தை அரசினர் கல்லூரியில் வடமொழிப் பேராசிரியராக வாழ்க்கையைத் தொடங்கிய இவர் 1939இல் எல். டி. பட்டம் பெற்றார். திருவையாறு தமிழ் வடமொழிக்கல்லூரியின் முதல்வராகவும் கீழ்த்திசைப் பள்ளிகளின் கண்காணிப்பாளராகவும் மாநிலக் கல்லூரி வடமொழித் துறைத் தலைவராகவும் 66 69ல் சென்னை மாநிலக் கல்லூரிக் கல்வித்துணை இயக்குநராகவும் பணியாற்றிய இவர் தற்பொழுது மீண்டும் மாநிலக்கல்லூரி வடமொழித்துறைத் தலைவராக விளங்குகிறார். பல்வேறு இதழ்களில் சைவசமயக் கட்டுரைகளை எழுதியுள்ளார். இவர்தம் வானொலிப் பேச்சுக்கள் வடமொழி இலக்கியச் சோலை' என்ற தலைப்பில் நூல்வடிவில் வெளிவந்துள்ளன.*



நமது இந்திய நாட்டில் இன்றைய மக்கள் பேசுகின்ற மொழிகளுள் ஒரு பெரும் பிரிவு ஆரியத்தைச் சார்ந்தது. மற்றொரு பெரும் பிரிவு திராவிடத்தைச் சார்ந்தது. இன்று பெரும்பாலும் வடநாட்டில் பேசப் படுகின்ற மொழிகள் ஆரியத்தின் அடிப் படையில் தோன்றியவை ஆயினும், திராவிட மொழியின் பண்புகளை ஓரளவுக்கு ஏற்றுக் கொண்டு வளர்ந்து வந்திருக்கின்றன என்பதை அம்மொழிகளை ஆய்ந்தவர்கள் உணர்வர். அதுபோல் ஆரிய மொழியும் திராவிட மொழிகளைப் பாதித்திருக்கின்றது என்பதை எவரும் உணரக்கூடும். இத்தகைய கொடுக்கல் வாங்கல், இருவேறு வகை மொழிகளைப் பேசும் மக்கள் ஓரிடத்தில் வாழ நேரிடுமானால், தவிர்க்க இயலாத ஒன்றாகி விடுகின்றது.

மொழி இயல் நன்றாக வளராத நிலையில் சென்ற நூற்றாண்டில் ஆரிய மொழியே சிறந்த மொழி எனவும், ஆகவே அது பிற மொழிகளை வளப்படுத்தி யுள்ளதே யொழியப் பிறமொழிகளின் சார்பு ஆரிய மொழியில் ஏற்பட்டிருக்க முடியாது எனவும் கருதி வந்தனர். சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த டாக்டர் குண்டர்ட் இதைக் குறிப்பிடுகிறார். 'We scarcely meet in India a Native philologist who would be willing to acknowledge the existence of Dravidian elements in Sanskrit while we meet with many who boldly take upon themselves to derive from the corruption of Sanskrit the whole of Dravidian Vocabulary.'

இன்றும் இக்கருத்து ஒரு சிலரிடையே இருந்துவருவதைக் காண்கிறோம். மேனாடுகளிலும் நம் நாட்டிலும் உள்ள மொழி இயல் அறிஞர்கள் – சென்ற நூற்றாண்டைச் சேர்ந்த டாக்டர் கால்டுவெல் முதல் இன்று வாழ்ந்துவரும் டாக்டர் பர்ரோ வரை— உண்மை நிலையைத் தக்க சான்றுகளுடன் தங்கள் நூல்களிலும் கட்டுரைகளிலும் விளக்கியிருக்கின்றனர்.

மக்கள் இனங்கள் ஒன்று சேர்ந்த போதும், மொழி இனங்கள் ஒன்று சேர்ந்த போதும் கலப்பு நிகழ்ந்திருப்பதை வரலாறுகள் உணர்த்துகின்றன. கலப்பின் தன்மை, ஆழம், பரப்பு ஆகியவை மக்கள் நாகரிக முதிர்ச்சிக்கேற்ப, மொழியின் ஆற்றலுக்கேற்ப வேறுபடக்கூடும். ஆனால்

கலப்பை அறவே தவிர்க்க முடியாது. இந்நெறியை, சமூகவியற் போக்கை உணராத சிலர் உண்மையை உணரமாட்டாதவர்கள் ஆயினர். அத்தகையோர்தாம் வடமொழிக்கும் திராவிடமொழிகளுக்குமிடையே உள்ள சில மேம்போக்கான பொது வியல்புகளைக் கண்டு திராவிட மொழிகளும் வடமொழியின் சிதைந்த பிராகிருத மொழிகள் எனக் கொண்டனர். தெலுங்கை அவ்வாறு பிராகிருதம் எனக் கருதிய தெலுங்கர் இருந்தனர். மலையாளத்தில் மிகுதியான வடசொற்கள் இருப்பதைக் கண்டு அதை வடமொழியின் சேயெனக் கருதிய பாமரரும் இருந்தனர். ஆயினும் மொழி இயல் வளர்ந்துள்ள இற்றை நாளில் இத்தகைய கருத்துக்கள் மறைந்து வருவதைக் காண்கிறோம். தொல்காப்பியர் தமிழ்ச் சொற்களின் வகைகளைக் கூறும் போது 'வடசொல்' என்ற பிரிவைக் குறிப்பிடுகிறார். இத்தகைய நேர்மையை எல்லா மொழி இலக்கண ஆசிரியர்களிடமும் காண்பது அரிது. தமிழ் மொழி வடசொல்லை ஏற்றுக் கொண்டது போல் சமஸ்கிருதமும் மொழி இயல்புக்குப் புறம்பாகத் திராவிடம் முதலான பிறமொழிச் சொற்களையும் பிற மொழி இயல்புகளையும் ஓரளவிற்கேனும் ஏற்காமல் எப்படி இருந்திருக்கக்கூடும் என்று கருதினார்கள் இன்றைய மொழி இயல் ஆய்வாளர்களும் பிறதுறை ஆராய்ச்சியாளர்களும். இந்திய மொழிகள் பலவற்றையும் ஆராய்ந்த டாக்டர் கிரையர்சன் கூறுகிறார், —"There are a number of verbal roots and words in Sanskrit which do not appear to occur in other Indo—European languages. It is probable that at least a considerable portion of such words and bases has been borrowed from the Dravidian."

1957 ஆம் ஆண்டு அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் திராவிட மொழி ஆராய்ச்சித்துறையைத் துவக்கி வைத்த மொழி இயல் வல்லுநரான டாக்டர் சுநீதி குமார் சாடர்ஜி, எப்படி வேத காலத்திலேயே ஒலி, சொற்கள், இலக்கண அமைதி ஆகிய துறைகளில் வேதம் திராவிட மொழியினால் மாற்றங்களைப் பெற்றுள்ளது என்பதைக் கூறியுள்ளார். வேத காலத்தில் வட நாட்டில் மேற்கே பலுசிஸ்தானம் முதல் கிழக்கே வங்காளம் வரை திராவிடர்கள் பரவியிருந்தனர் என்றும், அவர்களே இம்மாற்றத்திற்குக் காரணராயிருந்திருக்க வேண்டும் என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார். இக்கருத்தை இன்று ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் சமஸ்கிருதப் பேராசிரியராக இருந்துவரும் பர்ரோ என்பவரும் தம்முடைய 'சமஸ்கிருத' மொழி பற்றிய நூலில் வலியுறுத்தியிருக்கின்றார்.

சென்னைப் பல்கலைக்கழகத்து முன்னாள் வடமொழிப் பேராசிரியரான டாக்டர் வே. இராகவன் 'சமஸ்கிருத இலக்கியம் பற்றிய தம்முடைய வானொலிப் பேச்சில் கூறுவதாவது—"Sanskrit was wise enough to preserve its all India character by not only incorporating within itself regional vocabulary but also lending itself freely to influence from the speakers of the non-Indo European population of the country, Austric Munda and the Dravidian."

இவ்வாறு கூறியுள்ள அறிஞர்கள் ஆரியம் ஓரளவுக்குத் திராவிடரின் மொழி முதலான வாழ்வியலைப் பற்றிய பல துறைகளில் ஏற்படுத்தியுள்ள மாற்றங்களை மறக்கவில்லை. இவற்றை அறிந்த மக்கள் பலர். ஆனால் திராவிடர் கூட்டுறவால் ஆரியரின் வாழ்வியல் எந்த அளவுக்கு மாற்றம் அடைந்திருக்கிறது என்பதைப் பெருவாரியான மக்கள் அறிந்திருக்கவில்லை. இதைச் சுட்ட எழுந்தது தான் இக்கட்டுரை.

### மொழி

மொழி இயலை முதலில் பார்ப்போம். சம்ஸ்கிருதம் முதலான இந்தோ ஐரோப்பிய மொழிகளில் தோன்றிய இலக்கியங்களுள் மிகப்பழைமையானது ருக்குவேதம் என்பதை மேனாட்டினரே ஏற்றுக் கொண்ட கருத்து. அவ்வேத மொழியிலேயே திராவிட ஒலிகளும் சொற்களும் இடம் பெற்றுவிட்டன என்றால், ருக் வேதத்திற்குக் கீழெல்லையான காலம் என்று கருதப்படுகிற கி. மு. 1500க்கு முன்பே, அஃதாவது ஆரியர் வருகைக்கு முன்பே திராவிட மொழி பேசிய மக்கள் வட நாட்டில் இருந்தனர் என்றும், மேற்குப் பகுதியினின்றும் வந்த சிறுபான்மையினரான ஆரியர் பெரும்பான்மையினரான திராவிட மக்களின் கருத்துக்களைப் பெரும்பகுதியும்,

சொற்களைச் சிறு பகுதியும் ஏற்றுக் கொள்ள வேண்டிய நிலையில் இருந்தனர் என்றும், மேலும் மேலும் ஆரியர் நாட்டில் புகவே திராவிட மொழி பேசிய மக்களைச் சிறிது சிறிதாக நாட்டின் தென்பகுதிக்குப் போமாறு செய்தனர் என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை வெள்ளி விழா நினைவு மலரில் டாக்டர் கமீல் ஸ்வலபில் நிரம்ப வழகிய கெமிலர் பின் வருமாறு மொழிகிருர் :—

'It seems to be nowadays well established that the Dravidian speakers must have been widespread in the north of India and present as far towards the northwest as the Punjab even in the very early times of the presence of Aryan speakers there' p. 130.

பேராசிரியர் பர்ரோ 'சம்ஸ்ருத மொழி' என்ற தமது நூலின் ஒரு பகுதியில் எவ்வாறு 'ஆஸ்திரிய ஆசிய' மொழியினத்தைச் சார்ந்த மொழிகள் சிறு அளவிலும், பண்டைத் திராவிட மொழி பெரும் அளவிலும் வடமொழிச் சொல்லாக்கத்திற்குத் துணை புரிந்திருக்கின்றன என்பதை விளக்கியிருக்கிருர். ஒரு சொற் பட்டியலையும் தருகின்ருர். எடுத்துக் காட்டாக ஒரு சிலவற்றைக் காண்போம். காண்பதற்கு முன் எந்த அடிப்படையில் திராவிடச் சொற்கள் சம்ஸ்கிருதத்தில் புகுந்தன என்பதை மொழி இயலார் நிறுவுகிருர்கள் என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். ஒரு சொல் சம்ஸ்கிருதத்தில் மட்டும் இருந்து அது தோன்றிய இந்தோ ஐரோப்பிய மொழியினத்தைச் சார்ந்த கிரேக்கம், லத்தீன், ஆங்கிலம் போன்ற மொழிகளில் காணப்படாமல், தமிழ், தெலுங்கு, கன்னடம் போன்ற மொழிக் குடும்பத்தில் பல தொடர்புள்ள உருவங் களில் அது காணப்படுமானல் அத்தகைய சொல்லைச் சம்ஸ்கிருதம் திராவிட மொழியிடம் பெற்றிருக்கவேண்டும்.

'வாழை' என்ற பொருளில் 'கதளீ' என்ற வடசொல், 'தாம்பூலம்' என்ற வடசொல் இவை போன்ற இன்னும் சில 'ஆஸ்திரிய ஆசிய' மொழிகளிலும் சம்ஸ்கிருதத்தில் மட்டுமே காணப்படு கின்றன. வடமொழியோடு தொடர்புள்ள பிற ஆசிய ஐரோப்பிய மொழிகளில் காணப் படவில்லை. ஆகவே 'கதளீ', தாம்பூலம்' ஆகிய சொற்கள் 'ஆஸ்திரிய ஆசிய' மொழிகளினின்றும் சம்ஸ்கிருதம் பெற்றவை. இதுபோல் திராவிட மொழியிடம் பெற்ற சொற்களுள் ஒரு சிலவற்றைப் பாருங்கள். சம்ஸ்கிருதச் சொல்லும் அதற்கு மூலமான திராவிடச் சொற்களும் தரப்பட்டுள்ளன.

அனல (ச)—அனல் (த, ம), அனலு (க)

உலூகல (ச)—உலக்கை(த), உலக்க (ம)ஒலகே (க) ரோகலி (தெ)

கானனம் (ச)—கா, கான் (த), கா(க) காவு (ம)

கால (ச)—கார், கருமை (த) கார் (க)

சந்தனம் (ச)—சாந்து (த) சாந்து (ம) சாது (க) சாது (தெ)

பண்டித (ச)—பண்டு (=பழுத்த) (த, தெ) பண்ட் (கோண்டு)

மஹிளா (ச)—மகள், மகடு (த) மகள் (ம), மகளு (து)

இது போல் டாக்டர் சுநீதி குமார் சாட்டர்ஜி (நன்னெறி முருகன் என்று தம்மைக் கூறிக்கொள்பவர்) அணு, அரணி, கபி, கண, நீல, புஷ்ப, பூஜா, ராத்ரி, ரூப முதலிய வடசொற்கள் திராவிடத்தினின்றும் பெற்றவை என்று எடுத்துக் காட்டுகிருர்.

சம்ஸ்கிருதத்தில் உள்ள டகர வரிசை ஒலிகள் திராவிட மக்களின் கூட்டுறவால் தோன்றின என்பதை டாக்டர் படகிருஷ்ண கோஷ், டாக்டர் கால்டுவெல், வில்லியம் கிராப்ஃ போன்ற மொழி ஆய்வாளர்கள் கூறியுள்ளனர். வடநாட்டுப் பிராகிருத மொழிகளில் இவ்வொலிகள் மிகுதியாகக் காணப்படுவதற்குக் காரணம் திராவிடரின் ஒலிப்பு முறையால் ஏற்பட்ட மாற்றம் எனக் கருதப்படுகிறது. சம்ஸ்கிருதத்தில் மட்டு மல்ல, அதனையொட்டிய வட நாட்டுப் பிராகிருத மொழிகளும் திராவிட மொழியாளர் களால் மாற்றம் அடையப் பெற்றிருக் கின்றன. எடுத்துக் காட்டாக 'வீட்டிற்கு அருகில்' என்ற கருத்தை 'உபக்ருஹம்' என்ற ஒரு சொல் வடமொழியில் உணர்த்திய

போதிலும், அதனடித் தோன்றிய இந்தி மொழியில் 'கர்கே பாஸ்' என்று திராவிட சொல்லமைப்பு முறையை ஒட்டியே இரு சொற்களால் இக்கருத்து உணர்த்தப்படுகிறது.

இதுபோல் 'ஆநய' என்ற ஒரு சொல்லால் எந்தக் கருத்தைச் சம்ஸ்கிருதம் உணர்த்துகிறதோ அதையே தமிழில் 'எடுத்துக் கொண்டுவா' என்ற சொற்றொடரால் உணர்த்துகிறோம். இதையே தெலுங்கிலும் 'தீசிகோனிரா' என்று கூறுகிறோம். இம்முறையை ஒட்டி வங்காள மொழியிலும் 'லேயா ஐசா' என்ற சொற்றொடர் அமைந்திருக்கிறது.

'குதிரை-கிதிரை' போன்ற இரட்டைச் சொற்கள் தமிழ் முதலான திராவிடமொழிகளில் காணப்படுகின்றன. வடமொழியில் காணப்படாமலிருக்க அதன் வழிவந்த வங்காள மொழியில் 'கோரா-தாரா' என்றும் மராத்தியில் 'கோரா-பீரா' என்றும் காணப்படுவதை நோக்குமிடத்துத் திராவிடமொழி இயல்பு இம்மொழிகளில் படிந்துள்ளதைக் காண்கிறோம்.

சுருங்கக் கூறினுல் வடநாட்டில் பன்னூறு ஆண்டுகளுக்கு முன்பே பேசப்பட்ட பிராகிருத மொழிகளும் அவற்றினடியாக எழுந்து இன்று பயிலப்பட்டு வரும் வங்காளி, மராத்தி போன்ற வடஇந்திய மொழிகளும் திராவிடமொழியின் சார்பினுல் தமக்கே உரித்தான 'ஒட்டறியா மொழி' நிலையை (Inflexional Stage) விடுத்துத் திராவிட மொழிப் பண்பாகிய ஏட்டறி மொழி நிலையை (Agglutinative Stage) ஏற்றுக் கொண்டு வந்துள்ளதைப் பார்க்கிறோம்.

**சமயம்**

மொழியில் மட்டுமின்றி ஆரியர் வாழ்வின் பல்வேறு பகுதிகளிலும் திராவிடரின் பண்புகள் மிளிர்வதைக் காணலாம். மனித வாழ்வில் சமயம் முக்கிய இடத்தைப் பெற்றிருக்கின்றது. இன்றைய இந்து மதத்தில் காணப்படும் சமய நெறிகளில் சைவ சமயம் முக்கிய இடம் பெற்றிருப்பதைப் பார்க்கிறோம். வடக்கே நேபாளம் முதல் தெற்கே குமரி வரையில் சிவவழிபாடும் சிவன் கோவில்களும் பரந்து காணப்படுகின்றன. மொகஞ்சதரோ, ஹரப்பா நாகரிகத்தைப் பற்றி நேரில் ஆராய்ந்து தெளிந்து எழுதிய சர் ஜான் மார்ஷல் தமது நூலில் சிவனைப் பற்றிக் குறிப்பிடும்போது, அவர் யோகிகளுக்கெல்லாம் தலைவர் எனவும் ஆகவே 'மகாதபா' என்றும் 'மகாயோகி' என்றும் அழைக்கப்படுகிறார் எனவும், யோக நெறி ஆரியருக்கு முற்பட்ட மக்களால் பயிலப்பட்ட நெறி என்றும் கூறியிருக்கிறார். வேள்விகளையும் கிரியைகளையும் போற்றி வந்த ஆரியர்களிடையே யோகநெறிக்கு இடமில்லை என்பதை எளிதில் உணரக்கூடும். மொஹஞ்சதரோ நாகரிகம் திராவிடர் நாகரிகம் என அறிஞர் பெருமக்கள் பலரால் கருதப்படுவதையும், அங்கே கண்டெடுக்கப்பட்ட யோகி ஒருவரின் உருவம் பொறிக்கப்பட்ட பொருளையும், அதனருகே காணப்படும் திரிசூலம் போன்ற உருவத்தையும் அருகிலுள்ள யானை, புலி, எருமை முதலான உருவங்களையும் காணும்போது சிவன் எனவும் பசுபதி எனவும் நாடு முழுவதும் போற்றப்படும் கடவுள் அன்று திராவிடமக்களால் வழிபடப்பட்ட கடவுளே என்று துணிதற்கு இடமுண்டு. ஆரியர்களால் வழிபடப்பட்ட ருக்வேதகாலத்திய ருத்திரன் சிவனோடு ஒன்றிவிட்டதை ரா. கோ. பண்டர்கார் போன்ற அறிஞர்கள் எடுத்துரைத் திருக்கின்றனர். 'தென்னுடையசிவன் எந்நாட்டவர்க்கும் இறைவன்' என்று கூறிய மாணிக்கவாசகரின் மணிமொழி இங்குச் சிந்தித்தற்குரியது.

ஆரியர் இந்தியாவிற்கு வந்து அங்குள்ள பழங்குடி மக்களை வென்றனர் என்று வரலாறு கூறும். போரில் வெற்றி காண்பவர் தமது வாழ்வியலில் மாற்றுரால் வெல்லப்படுவதையும் வரலாறு காண்பிக்கிறது. எடுத்துக்காட்டாக அஸ்ஸிரிய மக்கள் வீரமும் உடல் வலியும் மிக்கவர்கள். பாபிலோனியர்களை வென்றனர். ஆனுல் பாபிலோனியரின் உயர்ந்த பண்பட்ட கலாசாரம் அஸ்ஸிரியரை வென்றதாக வரலாறு கூறுகிறது. அதுபோல் போரில் ஆரியர் வென்றனரேனும் திராவிட மக்களின் வாழ்வியல் நெறிமுறைகள் பல ஆரியரை ஆட்கொண்டன. S. K. டே என்ற வங்காள ஆசிரியர் கூறுகிறார்-'The Aryan element

gave the newly formed Indian culture form and unity but it was mainly Pre-Aryan Kol-Dravidian element on which the super structure of Indian culture was erected.'

அதர்வவேதத்தில் மற்ற மூன்று வேதங்களைப் போலல்லாது மந்திர தந்திரங்களும் காணப்படுகின்றன. இதில் திராவிடர் முதலான பிற பழங்குடி மக்களின் எண்ணங்களும் ஒழுகலாறுகளும் நடைமுறைக் கிரியைகளும் இடம் பெற்றிருப்பதால் வேதங்கள் மூன்றே என்று முதலில் கருதி வந்த ஆரிய மக்கள், அதர்வவேதக் கருத்துக்கள் தங்கள் வாழ்க்கையின் பகுதியான பின்னர் அதர்வ வேதத்தையும் நான்காவது வேதமாக ஒப்புக் கொண்டனர். பழங்குடிமக்கள் ஆண்டு வந்த மந்திர தந்திர முறைகளைப் புரோகிதர்களும் மேற்கொள்ளத் தொடங்கினர்.

தொடர்ந்து வரும் நல்வினை, தீவினை, மறுபிறப்பு ஆகிய கருத்துக்கள் இந்துமக்கள் எல்லோராலும் இன்று ஒப்புக் கொள்ளப் பட்டவை. வேதத்தில் அரிய இக் கருத்துக்கள் திராவிடமக்கள் அளித்தவை என்பதை வடமொழிப் பேராசிரியரான டாக்டர் குஞ்சன் ராஜா 'History of Philosophy Eastern and Western' என்ற நூலின் முதற்பகுதியில் 'Pre-Vedic Elements in Indian Thought' என்ற தலைப்பில் எழுதியிருக்கிறார். 'தன்வினை தன்னைச் சுடும்' என்ற கருத்து நெறிமுறையோடு ஒவ்வொருவரும் வாழவேண்டும் என்று வழிவகுத்துக் கொண்டது திராவிடரின் கொள்கை. ஒருவர் தாம் செய்த தீவினைக்குப் பிராயச்சித்தம் உண்டு என்று அவர்கள் கருதவில்லை. வேதத்தில் வேள்வி செய்து சொர்க்கம் புகுதல் மிகுதியாகப் பேசப்படுகின்றதே யல்லாமல் வினைப்பயனாக மீண்டும் இப் புவியில் பல்வேறு யோனிகளில் பிறப்பது பற்றிப் பேசப்படுவதில்லை.

இலிங்க வழிபாடு, உருவ வழிபாடு, சக்தி வழிபாடு ஆகியவை சிந்து வெளி நாகரிக மக்களால் மேற்கொள்ளப்பட்ட வழிபாட்டு முறைகளாகத் தோன்றுகின்றன. வேதத்தில் இவை பற்றிய விரிவான குறிப்புக்கள் இல்லை. ஆனால் இன்று இவை நாடெங்கிலும் வழக்கில் இருப்பதைக் காண்கிறோம். இதே போன்றதுதான் ஆலய வழிபாடும். ஆதலின் இவையெல்லாம் திராவிடர்களிடமிருந்து பெறப்பட்டு ஆரியர்களால் ஒரு சில மாற்றங்களுடன் ஏற்றுக் கொள்ளப் பட்டவையாகக் கொள்ளுதல் ஏற்புடையதாகும். ஏற்றுக் கொள்ளப்பட்டவை சம்ஸ்கிருத நூல்களிலும் பிராகிருத நூல்களிலும் இடம் பெற்றன. இவற்றைத்தான் சில உபநிடதங்களிலும், இதிகாசங்களிலும் புராணங்களிலும் காண்கிறோம். ஸ்ரீமத் பாகவதம் தேவி பாகவதம் போன்ற புராணங்கள் பக்தி நெறியையும் சக்தி வழிபாட்டையும் போற்றுகின்றன என்றால் இவற்றிற்கு அடிப்படை திராவிடர்களின் சமயநெறி. வரலாற்றுப் பேராசிரியரான நீலகண்ட சாஸ்திரியாரின் கூற்றைக் காண்போம். 'A long and varied process of syncretism between the Vedic religion and indigenous cults took place which resulted in the birth of rich pantheon of Puranic Gods and Goddesses together with a colourful mythology of divine and semidivine occurrences and the rise of a strong theistic trend stressing intense devotion to a personal God'.

ஆரியர்களின் வாழ்வியல் முறையில் இத்தகைய மாற்றம் வரலாற்றின் மிக முந்திய காலத்திலேயே தொடங்கிவிட்டது என்பதை A. L. Basham என்ற வரலாற்றாசிரியர் 'The Wonder that was India' என்ற தமது நூலில் குறிப்பிடுகிறார். 'Non-Aryan influence on a Religion and culture must also have been felt very early and the gradual disappearance of much of the original Indo-European heritage beneath successive layers of Non-Aryan innovations can be traced through the early religious literature of India'.

திராவிட மக்களால் ஆல் போன்ற மரங்களும், நாகம் போன்ற ஊர்வனவும், கருடன் போன்ற பறப்பனவும் வழிபடு பொருள்களாகப் போற்றப்பட்டு வந்தன. இவை இன்று கோயில் மரம் (ஸ்தல விருட்சம்), தெய்வங்களின் வாகனங்கள் என்ற முறையில் இந்து சமய வழிபாட்டின் ஒரு பகுதியாக ஆகி விட்டிருப்பதையும் பார்க்கிறோம்.

**கலை**

கலைத்துறையிலும் திராவிடர்கள் சிறந்தவற்றை இந்திய வாழ்வியலுக்கு வழங்கி

யுள்ளனர். இசையும் நாட்டியமும் திராவிடர்களால் வளர்க்கப்பட்ட சிறந்த துறைகள் என்பதைத் திராவிட மொழிகளுள் மூத்த மொழியான தமிழின் பாகுபாடே நமக்கு உணர்த்துகிறது. இயல் இசை நாடகம் என்ற முப்பிரிவை அறியாதார் யார்? சங்க இலக்கியம் பாணரையும் கூத்தரையும் குறிக்கின்றனவே. தமிழ்க் காப்பியமாகிற சிலப்பதிகாரத்தில் ஆரியக்கூத்துடன் புகழ்க் கூத்து, வெறிக்கூத்து, வேத்தியல் கூத்து, விநோதக்கூத்து முதலான பல்வகைக் கூத்துக்கள் பேசப்படுகின்றன. தமிழ் நாட்டில் தொன்று தொட்டு வந்தன அம்மானை வரி, ஊசல் வரி, குன்றக் குரவை, ஆய்ச்சியர் குரவை, வள்ளைப் பாட்டு, உழத்திப் பாட்டு என்பன போன்றவை. 'அகத்தியனாரால் செய்யப்பட்டன மூன்று தமிழிலக்கணம் என அறியப்படுதலால் இம் மூன்றாகிய இயல், இசை, கூத்து எனப் பாகுபாடு செய்தற் கேற்றவாறு தமிழ் என்னும் பிண்டப்பொருள் அவர் இலக்கணம் செய்வதற்கு முன்னே வளர்ந்து ஒரு நாகரிக நிலையில் இருந்தது என்பது நன்கறியலாகும்' என்று ரா. இராகவையங்கார் அவர்கள் தமது 'தமிழ் வரலாறு' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளதைக் காண்க.

தென்னாட்டுக் கடவுளான சிவன் ஆடல் வல்லான். பரதரும் காளிதாசரும் சிவனையே நாட்டியக் கடவுளாகப் போற்றியுள்ளனர். அவனே நடராசன் என்று சிறப்பிக்கப் பெறுகின்றவன். நாட்டியக் கலையின் தாயகம் இன்றும் தென்னகமே. தென்னாட்டுப் பெருங்கோயில்களில் நடராசப் பெருமானின் திருவுருவம் இன்றியமையாத ஒன்று. பரதரின் நாட்டிய சாத்திரத்தில் கூறப்பட்டுள்ள நாட்டிய வகைகள், முத்திரைகள், கரணங்கள் இவற்றைத் தென்னாட்டுப் பெருங்கோயில்களில்தாம் விரிந்த முறையில் காணலாம். இவற்றையெல்லாம் உணர்ந்த இந்து சேகர் என்ற வடமொழிப் பேராசிரியர் 'Sanskrit drama, its origin and decline' என்ற நூலில் நாட்டிய சாத்திர ஆசிரியரான பரதர், திராவிடப் பிரிவினருள் ஒரு வகையினரான பரத குலத்தைச் சார்ந்தவராக இருக்கக்கூடும் என்றும், நாட்டியத்தை இழிதொழிலாகக் கருதிவந்த ஆரியர்கள் இவற்றை வளர்த்திருக்க இயலாதென்றும் ஆகவே திராவிடர்கள் போற்றி வளர்த்துதவிய கலைச்செல்வமே பரத நாட்டியம் முதலாய கூத்து வகைகள் என்றும் கூறியுள்ளார். Hewitt என்ற ஆசிரியரும் 'Primitive Traditional History' என்ற தமது நூலில் திராவிடப் பிரிவினரில் ஒருவர் பரதர் என்ற கருத்தை வலியுறுத்தியிருக்கிறார். கூத்தர், பாணர், விறலியர் ஆகியவரைப் பற்றிக் குறிப்பிடும் பேராசிரியர் நீலகண்ட சாஸ்திரியும் 'சோழர்கள்' என்ற தமது நூலில் 'There were the bards and dancers among whom it may be assumed that some of the early dramatic tradition may have originated'. (p. 76) என்று குறிப்பிடுகின்றார்.

ஆகமம், இசை, நாட்டியம், சிற்பம் போன்ற நூல்கள் வடமொழியில் எழுதப் பட்டிருப்பது சிலருக்கு மயக்கம் தரலாம். இது பற்றிய ஒரு முக்கிய கருத்தை நான் தெளிவுபடுத்த விரும்புகிறேன். ஆங்கிலத்தில் எழுதப்பட்ட விஞ்ஞான உண்மைகள் அனைத்தும் ஆங்கிலேயரால் கண்டுபிடிக்கப் பட்டவை அல்ல என்பது எல்லோருக்கும் தெளிவாகத் தெரியும். அதுபோல வடமொழியில் எழுதப்பட்ட நூல்கள் அனைத்தும் ஆரியரின் கருத்துக்களைக் கூறுபவை என்று கொள்ள வேண்டியதில்லை. பல்வேறு மொழிகள் இந்திய நாட்டின் பல பகுதிகளில் அன்றும் இன்றும் பேசப்படுகின்றன. ஆயினும் அவ்வப்பகுதியில் வாழ்ந்த அறிஞர் பெருமக்களுள் சிலர் தம் கருத்தை, அல்லது தம் பகுதி மக்கள் கருத்தை வடமொழியில் எழுதினால் நாட்டின் பல பகுதிகளிலும் வாழ்கின்ற மக்கள் அறிய வழி உண்டு என்று கருதி எழுதி வந்தனர். அந்த முறையில்தான் பரதரின் நாட்டிய சாத்திரமும் சிற்ப சாத்திரமும், இசை நூல்களும் புராணங்களும், சங்கர பாஷ்யம் போன்ற நூல்களும் எழுதப்பட்டன என்று கொள்ளலாம்.

சிற்பக்கலையில் தென்னகம் சிறந்து விளங்குவதை மேனாட்டுக் கலைமேதைகள் போற்றியிருப்பதை நாம் அறிவோம். தாராபாத பட்டாசார்யர் என்ற வங்காளத்தவர் 'A Study of Vastu Vidya or canons of Indian Architecture' என்ற நூலில் வேத காலத்திற்கு முன்னரே திராவிடர்

கட்டடக்கலையில் சிறந்திருந்தனர் என்று கூறுகிருர். சிந்து வெளி நாகரிகத்தில் ஒரு சிறந்த பகுதி அங்குக் காணப்படும் நகர அமைப்பும் கட்டட அமைப்பும் என்பதையும் அவற்றைத் தோற்றுவித்தவர் திராவிடர் என்பதையும் அவற்றை ஆய்ந்தவர் கூறுகின்றனர். வேதத்தின் ஒரு பகுதியாகிற சதபத பிராமணத்தில் காந்தாரப் பகுதியில் வாழ்ந்த நக்னஜித் என்ற அரசன் கட்டடக் கலையில் வல்லவன் என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. நக்னஜித் என்பவரின் கட்டடவகை திராவிட முறையைச் சார்ந்தது என்பது வராஹமிகிரரின் கூற்று. திராவிடக் கட்டடக்கலையில் கை தேர்ந்தவன் மயன். இவனைப்பற்றிய குறிப்பு வால்மீகி இராமாயணத்தில் கிஷ்கிந்தா காண்டத்தில் காணப் படுகிறது. இவற்றுடன் தென்னுட்டு மாமல்லபுரச் சிற்பக்கலையும் இந்திய நாட்டின் வடமேற்கிலுள்ள காந்தாரப் பகுதியின் சிற்பக்கலையும் ஒத்திருக்கின்றன என்ற Fergussan என்பாரின் கூற்றையும் காண்போம்—'Among the sculptures of the Gandharam monasteries are several representing facade of buildings. They may be cells or chaitya halls, but at all events they are almost exact reproductions of the facade of this (Sahadeva's) rath' (of Mamallapuram)—'Indian and Eastern Architecture, Vol 1. p. 311.

ஆரியர்கள் இந்தியாவிற்கு வந்தபோது தீயை மையமாகக் கொண்ட வழிபாட்டைப் பின்பற்றினர். ஓவியங்களேயோ சிலைகளேயோ கோயில்களேயோ கண்டவர்கள் இல்லை. இவற்றை நோக்கும்போது இக்கலைத்துறையில் திராவிடர்களின் பங்கு குறிப்பிடத்தக்க ஒன்று என்று கருதுவதில் தவறு இருக்க முடியாது.

இதுகாறும் கூறியவாற்ருல் ஆரியர்களின் வாழ்வியலில் மொழி, சமயம், கலை ஆகிய துறைகளில் திராவிடர்களின் பண்பு எவ்வாறு பரவியுள்ளது என்பதை ஒருவாறு அறிந்தோம்.

---

## எழுதாக்கிளவி

*தமிழ் மக்கள் தாம் உரையாடுங்காற் ருேன்றும் ஓசைகளைப் பல்வகை எழுத்துக்களால் இட்டெழுதிப்பண்டே நாகரிக முதிர்ச்சியுடையராயுமிருந்தனர். ஆரியரோ தம்பாற் பிறந்த ஓசைகளை எழுத்திலிட்டுக் காட்டும் வகை அறியாமையினுல், தம் முன்னேராற் பாடப்பட்ட பாட்டுக்களை நெட்டுருப் பண்ணுதற்குக் கிடை கூட்டிப் பயின்று வந்தனர். அவ்வழக்கம் இன்றும் பலர் ஒருங்கு கூடியிருந்து வேதம் ஓதுமாற்ருல் நன்கு அறியப்படும். ?ங்ஙனம் எழுத்துக்களின்றி வெறும் ஓசை மாத்திரையாய் வேதங்கள் ?வராற் பயிலப்பட்டு வந்தமையாலன்றே அவை 'எழுதாக்கிளவி' என்று ?பயர் பெறுவனவாயின. அல்லதூஉம், வடமொழிக் கென்றே ஒரெழுத்து ?ல்லாமையினுலேதான், வடநாடுகளிலுள்ளார் மகாராட்டிரத்திற்குரிய ?தவநாகர எழுத்துக்களாலும், தென்னுடுகளிலுள்ளார் தமிழுக்குரிய ?ரந்தக்கரங்களாலும், ஆந்திர நாட்டிலுள்ளார் தெலுங்கிற்குரிய ?தெலுங்கெழுத்துக்களானும் வடநூல்களை எழுதுதலும் பதிப்பித்தலுஞ் ?செய்து போதருகின்ருர்.*

—மறைமலையடிகள்

பண்டைக்காலத் தமிழரும் ஆரியரும் பக். உசு.

# முதலும் வழியும்

[திரு. பண்டிதவித்துவான் கு. சுந்தரமூர்த்தி பி.ஏ.]



*திருச்சி மாவட்டத்திலுள்ள முசிரியையடுத்த தோளூர்ப்பட்டி என்னுஞ் சிற்றூரில் குப்புசாமி முதலியாருக்கும் நாகரத்தினம் அம்மையாருக்கும் 14-4-1930 இல் தோன்றியவர் இவர். திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் படித்து முதல் வகுப்பில் தேறினர். அக்கல்லூரியிலேயே ஆசிரியப் பணியேற்றுப் பேராசிரியராகத் தொண்டாற்றி வருகிறார். மதுரைத் தமிழ்ச் சங்கப் பண்டிதர் தேர்விலும் சைவசித்தாந்த மகா சமாசச் சைவப் புலவர் தேர்விலும் தேர்ந்தவர். அண்ணாமலைப் பல்கலைக் கழகம் நடாத்தும் சைவ சித்தாந்தத் தேர்வில் வென்று ஆயிரம் வெண்பொற் காசுகள் பரிசாகப் பெற்றவர். மதுரை ஆதீனத்தாரால் 'சித்தாந்த நன்மணி' என்ற பட்டம் வழங்கப்பெற்றவர். இவர் தொல்காப்பியம் சொல்லதிகாரத்திற்குள்ள இளம்பூரணர், நச்சினார்க்கினியர், தெய்வச் சிலையார், கல்லாடர் முதலிய பழைய உரைகளுக்கு விரிவான விளக்கவுரை யெழுதியுள்ளார். அனைத்தும் தனித்தனி நூல்களாகக் கழகவழி வெளிவந்துள்ளன.*

தமிழ் இலக்கண நூல்களுள் தலைமையும் தொன்மையும் வாய்ந்தது தொல்காப்பிய மாகும். அதற்கு முந்திய நூல் அகத்திய மென ஒன்றிருந்ததாகத் தெரியினும் அதனை முழுமையாகக் காண்டற்குரிய பேறு நமக்கின்மையின் அதைப்பற்றி ஒன்றும் கூறுதற்கியலாதிருக்கின்றது. தொல்காப்பியத்திற்குப் பின்பு தோன்றிய இலக்கண நூல்களில் எழுத்துச் சொல்லாகிய இரண்டு இலக்கணத்தையும் நன்குணர்தற்குக் கருவியாக இருப்பது நன்னூலே யாகும். கி.மு. ஐயாயிரத்தில் தோன்றிய தொல்காப்பியத்தை முதனூலாகக் கொண்டு இந்நூல் தோன்றியதாதலின் முதலும் வழியுமென்ற தலைப்பில் இவ்விரு நூல்களையும் ஒருங்கு வைத்தெண்ணல் பொருந்துவதாகும்.

நமக்கும் நன்னூலார் காலத்திற்கும் இருக்கு மிடைவெளியினும், நன்னூலாருக்கும் தொல்காப்பியருக்குமிருக்கும் இடைவெளி மிகுதியாகும். எனினும் அவ்விடைவெளிக்குள் நேர்ந்த மொழியிலக்கண மாறுதல்கள் மிகச் சிலவே யாகும். தொல்காப்பியம் பரந்தும் விரிந்தும் உள்ளது. நன்னூல் சுருங்கியும் தொகுத்துமுள்ளது.

''முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
அழியா மரபினது வழிநூ லாகும்''

என்பது வழிநூல் இலக்கணம். இவ்விலக்கண அமைப்பை முழுமையாகப் பின்பற்றி எழுந்துள்ளது நன்னூல். முதலிலக்கணத்தின் முடிபை வழிநூல் ஏற்றுச் செல்லினும், தனக்கும் முதனூலுக்குமுள்ள காலவேறுபாட்டால் ஏற்படும் சில மாறுதல்களைத் தழுவியும் நூல்செய்ய வேண்டியிருத்தலின் முதனூலினும் சில மாறுதல்களைச் செய்ய வேண்டுவது இன்றியமையாதாகின்றது. ஆதலால்தான் 'பின்னோன் வேண்டும் விகற்பங் கூறுதலை' வழிநூல் இலக்கணம் பெறுவதாயிற்று. இந்நிலையில் தொல்காப்பியத்தையும் நன்னூலையும் ஒருங்கு நோக்கின் அவ்விரண்டிற்குமுரிய ஒற்றுமை வேற்றுமைகளை நன்கறிய முடியும்.

முன்னுள்ளோர் தொகுத்துச் செய்ததனை விரித்தும் விரித்துச் செய்ததனைத் தொகுத்தும் செய்தல் நூல்செய்வார் செய்யும்[1] மரபாகும். இதனை அப்படியே அடியொட்டியவர் நன்னூலார். தொல்காப்பியம் பரந்தும் விரிந்துமுள்ள ஒரு நூல்

1. தொல் - பொருள் - அகம்-க (இளம் உரை)

என்பது முன்னும் கூறப்பட்டது. எனவே இங்ஙனம் விரிந்த நூலைத் தொகுத்துச் செய்தலில் கவனம் செலுத்தினர் நன்னூலார். அதன் வாயிலாக இயலமைப்பிலேயே அச்சுருக்கத்தைக் காணுமாறு செய்துள்ளனர். தொல்காப்பியர் எழுத்துச் சொல்லாகிய இரண்டினிலக்கணத்தைப் பதினெட்டு இயல்களில் கூறினர். நன்னூலார் அவ்விலக்கணத்தைப் பத்து இயல்களில் கூறினர்.

அவ்வியலமைப்பு வருமாறு :—

| தொல்காப்பியம் | நன்னூல் |
|---|---|
| **எழுத்து** | |
| நூன்மரபு, மொழிமரபு, பிறப்பியல் | எழுத்தியல் |
| புணரியல், தொகை மரபிற்சில இலக்கணங்கள், உயிர் மயங்கியல், குற்றியலுகரப்புணரியல் | உயிரீற்றுப்புணரியல் |
| புள்ளி மயங்கியல், தொகைமரபிற் சில இலக்கணங்கள் | மெய்யீற்றுப்புணரியல் |
| உருபியல் | உருபு புணரியல் |
| **சொல்** | |
| கிளவியாக்கம் முற்பகுதி, எச்சவியல் முற்பகுதி, பெயரியல், வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல், விளிமரபு | பெயரியல் |
| வினையியல், எச்சவியலில் முற்றிலக்கணம். | வினையியல் |
| பெயரியல், வினையியல்களிலிருந்து அறியப்படும் அவ்விரண்டின் பொது விதிகள் வேற்றுமையியல், வினையியல் களிலிருந்து அறியப்படும் அவ் விரண்டின் பொது விதிகள் கிளவியாக்கத்தில் கூறப்படும் வழுவமைதிகள், எச்சவியலில் கூறப்படும் எச்சங்கள், தொகையிலக்கணம், பொருள்கோள். | பொதுவியல். |
| இடையியல் | இடையியல் |
| உரியியல் | உரியியல் |

நன்னூலில் காணப்படும் பதவியல் ஒருமொழியிலக்கணம் கூறுவதாகும். அவ்விலக்கணம் வடமொழியிலக்கணத்தைத் தழுவிச் செய்யப்பட்டதாதலின் தொல்காப்பியத்தோடு ஒத்து எண்ணற்கில்லை. இப்பதவியலுக்கு மேற்கோள் ஆரியமென்பார் 'மொழி' என்னாது 'பதம்' என்றார் எனவரும் உரை[1] இதன் உண்மையை விளக்கும். பின்னோன் வேண்டும் விகற்பங் கூறலாக இவ்வியல் அமைந்திருக்க அமைவுண்டு எனினும் தமிழ் நூற்கிலக்கணம் செய்வார் ஓர் இயலின் பெயருக்கே வடமொழிப் பெயர் தந்து கூறுதல் அத்துணைப் பொருத்தமுடைத்தன்றாம்.

தொல்காப்பியர் செய்யுளீட்டுதற்கு இயற்சொல், திரிசொல், திசைச்சொற்களுடன் வடசொல்லும் ஒரோவழி எடுத்துக்கொள்ளலாமென்பார்,

> ''இயற்சொல் திரிசொல் திசைச்சொல்
> வடசொல்லென்(று)
> அனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே''

என்றார். அங்ஙனமாக நன்னூலார் பெயரியலில் சொல் லெத்துணைப் பாகுபடுமென்று விளக்குங்கால்,

> 'அதுவே,
> இயற்சொல் திரிசொல் இயல்பிற் பெயர்வினை
> எனஇரண் டாகும் இடையுரி யடுத்து
> நான்குமாம் திசைவட சொல்அணு காவழி'

1. நன்னூல் - பதவியல்-க (சங்கர நமச்சிவாயர் உரை)

என்று கூறுகின்றார். தமிழ் சொல்லை வகையைப் பாகுபாடு செய்யுந் தொல்காப்பியர் பெயர் வினை இடையுரி யாகிய நான்கையுமே கூறுவர். ஆனால், நன்னூலார் இரண்டாகும் நான்காகும், திசைவடசொல் சேர்ப்பின் ஆறாகும் என அடுக்கிக் கூறுதல் அத்துணைப் பொருத்த முடைத்தன்றாம். இதிலிருந்து அறிய வேண்டிய உண்மையும் ஒன்றுண்டு. தொல்காப்பியர் காலத்தில் வடசொல் ஓரளவே செல்வாக்குப் பெற்றிருந்தது. செய்யுட் செய்யுங்கால் ஒரோவழி அச் சொற்களை யேற்கவேண்டின் அதுவும் தமிழ்ப் பண்பாட்டிற்கேற்ப அதனை மாற்றி ஏற்க வேண்டு மென்றே கருதினர். ஆனால் பிற்காலத்திலோ வடமொழி செல்வாக்கு மிகுதியும் பெறுவதாயிற்று. தமிழ்ப் புலவர்களும் அதனை உயர்வாகக்கருதித் தமிழிலக்கண மெழுதுகின்ற பொழுதுகூட அதற்கும் இலக்கணமெழுதித் தமிழிலக்கணத்தோடு ஒருங்கு வைத்தெண்ணும் நிலையை உண்டாக்கிவிட்டனர். இங்ஙனம் நன்னூலார் காலத்து ஏற்பட்ட மாறுதல் இன்னும் பிற்காலத்து வளர்ச்சி பெற்று,

*''அன்றியும் தமிழ்நூற்கு அளவிலை அவற்றுள்*
*ஒன்றே யாயினும் தனித்தமிழ் உண்டோ''*

எனக் கேட்கும் நிலைக்கு மாறிவிட்டது. இதற்குக் காரணம் வடமொழி வாணர்களின் செல்வாக்கு மட்டுமன்று. தமிழர்களின் நெடுங்காலத் தூக்கமும், மொழியுணர்வும், ஒற்றுமை உணர்வும் இன்மையுமே யாகும். இதை நினையும் எந்தத் தமிழ் உள்ளமும் கண்ணீர் வடிக்காதிருக்காது. இது நிற்க,

**இனி நன்னூலார் முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துச் செய்திருக்கும் திறத்தைக் காண்போம் :--**

தொல்காப்பியத்தையும் நன்னூலையும் ஒத்துநோக்குதலை ஐந்து வகையாகப் பிரித்துக் காணலாம்.

(1) தொல்காப்பியர் விரித்துக் கூறியதை நன்னூலார் தொகுத்துக் கூறியிருக்கும் திறம்.

(2) தொல்காப்பியர் தொகுத்துக் கூறியிருப்பதை நன்னூலார் விரித்துக் கூறியிருக்கும் திறம்.

(3) தொல்காப்பியர் கூறிய கருத்துக்களில் சிலவற்றை நன்னூலார் நெகிழ விட்டிருப்பது.

(4) தொல்காப்பியர் கூறாத கருத்துக்கள் சிலவற்றை நன்னூலார் கூறியிருப்பது.

(5) தொல்காப்பியர் கூறிய கருத்துக்களை நன்னூலார் மாற்றிக் கூறியிருப்பது.

**1. தொல்காப்பியர் விரித்துக் கூறியதை நன்னூலர் தொகுத்துக் கூறியிருக்கும் திறம் :—**

**உயிர்மெய் :—**

மெய்யெழுத்துப் பதினெட்டும், பன்னிரண்டு உயிருடன் சேர்ந்து வருங்கால் அவை உயிர்மெய் எனப்படும். உயிர்மெய் என வழங்கினும் அதன் ஒலி வடிவில் மெய் முன்னும் உயிர் பின்னும் காணப்படும். அகரத்தோடு பொருந்துங்கால் மெய், தன் புள்ளியை மட்டுமே இழக்கும். ஏனைய உயிருடன் பொருந்துங்கால் வடிவு வேறுபட்டு வரும். மெய், எந்த உயிருடன் சேரினும் அந்த உயிருக்குரிய மாத்திரையையே பெறும். தனக்குரிய மாத்திரையை யிழந்து விடும். இவையே உயிர்மெய்யின் இலக்கணமாகும். இதனைத் தொல்காப்பியர் மூன்று நூற்பாக்களால் கூறுகின்றார்.

அவையாவன :—

[1] *மெய்யோ டியையினும் உயிரியல் திரியா'*

[2] *'புள்ளி யில்லா எல்லா மெய்யும்*
*உருவுரு வாகி அகரமோ டுயிர்த்தலும்*
*ஏனை உயிரோடு உருவுதிரிந் துயிர்த்தலும்*
*ஆயீ ரியல உயிர்த்த லாறே*

[3] *'மெய்யின் வழியது உயிர்தோன்றும் நிலையே'*

இம்மூன்றனுள் முதல் நூற்பாவால் உயிர்மெய்க்குரிய மாத்திரையையும் இரண்டாம் நூற்பாவால் அதன் வடிவு திரிதலையும், மூன்றாம் நூற்பாவால் அஃது

1. நூன்மரபு - கO.
2. நூன்மரபு - கஎ.
3. நூன்மரபு - கஅ.

ஒலிக்கும் முறைமையும் அறிகின்றோம். இதனை, மிகச் சுருக்கமாக நன்னூலார்,

[1]'புள்ளிவிட் டவ்வொடு முன்னுரு வாகியும்
ஏனை யுயிரோடு உருவு திரிந்தும்
உயிரள வாய்அதன் வடிவொழித்து இருவயிற்
பெயரொடும் ஒற்றுமுன் னாய்வரும் உயிர்மெய்'

என ஒரே நூற்பாவால் கூறியுள்ளார்.

**(2) தொல்காப்பியர் தொகுத்துக் கூறியிருப்பதை நன்னூலார் விரித்துக் கூறியிருக்கும் திறம்:—**

**உடம்படுமெய்:—**

உயிரீற்றின் முன் உயிர் முதல்வரின் உயிரோடுயிர்க்கும் மயக்கமின்மையின் உடம்படாத அவ்விரண்டையும் உடம்படுத்தற் பொருட்டு இடையே வரும் மெய்யை உடம்படு மெய்யென்பர். ஆசிரியர் தொல்காப்பியர்,

'எல்லா மொழிக்கும் உயிர்வரு வழியே
உடம்படு மெய்யின் உருபுகொளல் வரையார்'

எனப் பொதுப்படக் கூறினரேயன்றி இன்ன உயிரீற்றின்முன் இன்ன உயிர் வருங்கால் இன்னமெய் உடம்பாக அடுக்குமென விரித்துக் கூறிற்றிலர். இளம்பூரணர் உரையிற்கோடலால் உடம்படு மெய்யாவன யகரமும் வகரமும் எனக் கூறி இகர ஈறும், ஈகார ஈறும், ஐகாரவீறும் யகர உடம்படு மெய் கொள்வன. அல்லனவெல்லாம் வகர மெய் கொள்வன என விளக்கினர். நன்னூலார் இக்கருத்தினைத் தழுவியே,

[2]'இஈ ஐவழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏமுன் இவ் விருமையும்
உயிர்வரின் உடம்படு மெய்யென் றாகும்'

என விளங்கக் கூறினர். ஏமுன் இவ்விருமையும் வருதல் இளம்பூரணரால் கூறப்படாத கருத்தாகும்.

**(3) தொல்காப்பியர் கூறிய கருத்துக்களில் சிலவற்றை நன்னூலார் நெகிழ விட்டிருப்பது:—**

தொல்காப்பியர் புணர்ச்சி விதி கூறுங்கால் இருபத்து நான்கு மரப்பெயர்களைக் கூறியுள்ளனர். அவற்றில் நன்னூலார் பனை, புளி ஆகிய இரு மரப் பெயர் மட்டுமே கூறியுள்ளார். ஏனைய நெகிழ விட்டுள்ளார். இங்ஙனமே எண்ணுப்பெயர் கூறுங்காலும் தாமரை, வெள்ளம், ஆம்பல் ஆகிய பேரெண்களுக்கும் தொல்காப்பியர் புணர்ச்சி விதி கூறியுள்ளார். இவற்றை நன்னூலார் கூற வில்லை.

'குறுமையும் நெடுமையும் அளபிற் கோடலின்
தொடர்மொழி எல்லாம் நெட்டெழுத் தியல.'

'உரையிடத் தியலும் உடனிலை யறிதல்'

'பெயர்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்
திசைநிலைக் கிளவியின் ஆஅ குநவும்
தொன்னெறி மொழிவயின் ஆஅ குநவும்
மெய்ந்நிலை மயக்கின் ஆஅ குநவும்
மந்திரப் பொருள்வயின் ஆஅ குநவும்
அன்றி யனைத்துங் கடப்பா டிலவே'

என்பன போன்ற விதிகள் பலவும் நன்னூலில் இல்லை. இங்ஙனமே வேற்றுமை மயக்கத்தைப் பலபடியாகத் தொல்காப்பியர் கூறியிருக்க, நன்னூலார் ஓரிரு விதிகளை மட்டுமே எடுத்துக்கொண்டு ஏனையவற்றை நெகிழவிட்டுள்ளார். தொல்காப்பியர் இடையுரிகளை விரிவாகக் கூறியவாறு நன்னூலார் கூறவில்லை. உரிச் சொற்களுக்குப் பொருளுணரும் முறைமை கூறுமுகமாக அக்காலப் பயிற்று முறையை அறிவிக்கும் திட்பங்களையும் நன்னூலார் நெகிழ விட்டுள்ளார்.

**(4) தொல்காப்பியர் கூறாத கருத்துக்கள் சிலவற்றை நன்னூலார் கூறியிருப்பது:—**

நன்னூலார் பதவியலை யாத்ததற்கு மேற்கோள் ஆரியமேயன்றித் தொல்காப்பியம் அன்று என்பது முன் கூறப்பட்டது. எனினும் இவ்வியலில் கூறப்படும் இடைநிலைகளும், வினை விகுதிகளும், காலங்காட்டும் விகுதிகளும் இலக்கியங்கண்டு இயம்பப்பட்டன வாதலின் அவற்றை ஏற்றலில் இழுக்கில்லை. சொற்களைப் பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம் என ஆறுகப் பிரித்துக் காணும் முறை இவ்வியலில் விரிவாகக் கூறப்படுகிறது. இதில் கூறப்படும் இடைநிலைகள் மூன்று காலத்திற்கும் உரியவாமாற்றை நன்னூலார் விரித்துக் கூறி

1. நன்னூல் - எழுத்தியல்-௧௪.

2. நன்னூல்-உயிரீற்றுப்புணரியல்-௧௨.

யுள்ளார். தொல்காப்பியர் இதைப்பற்றிக் கூருராயினும் சேனாவரையர் சிறிது விளக்கிக் காட்டுகிருர். வினைச்சொல் கால முணர்த் துங்கால் சில நெறிப்பாடுடைய என்பது விளக்கிய 'நெறிப்படத் தோன்றி' என்ருர்.[1] நெறிப்பாடாவது அவ்வீற்றுமிசை நிற்கும் எழுத்து வேறுபாடு என்பது அவர் உரை. இங்குக் கூறப்படும் ஈற்றுமிசை எழுத்தே இடைநிலையாகும். இது காலமுணர்த்துங் கால் சில வரையறையுடையது. அவ்வரை யறையே நன்னூலில் விளக்கமாகக் கூறப் படுகிறது.

[2]'தடறவொற் றின்னே ஐம்பால் மூவிடத்
இறந்த காலந் தருந்தொழில் இடைநிலை.'

'ஆநின்று கின்று கிறுமூ விடத்தின்
ஐம்பால் நிகழ்பொழு தறைவினை இடைநிலை.'

'பவ்வ மூவிடத் தைம்பால் எதிர்பொழுது
இசைவினை இடைநிலை யாமிவை சிலஇல'

இவ்வரையறை போற்றுதற்குரிய தாகும். எனினும் இவ்வரையறை மயங்குதற் குரித்தாமெனவும் அது பற்றியே ஆசிரியர் தொல்காப்பியர் ஓதாராயினுர் என்றும் நச்சி ஞர்க்கினியர் கூறுவர்.[3]

(5) தொல்காப்பியர் கூறிய கருத்துக்களை நன்னூலார் மாற்றிக் கூறியிருப்பது:—

தொல்காப்பியர் அற்று, அக்கு, இக்கு எனச் சாரியை கூறினர். நன்னூலார் இதனை மாற்றி முறையே அற்று, அ, கு எனக் கூறினர். தொல்காப்பியர் கூறிய ஒன் சாரியையை நீக்கி, அல் சாரியை புதிதாகக் கொண்டனர். இங்ஙனம் சாரியை கூறு வதில் நேர்ந்த மாறுபாடே, பின்னர்ப் புணர்ச்சி விதி கூறுங்காலும் மாறுபட ஏது வாயின. தொல்காப்பியம் உருபியல் கக ஆம் நூற்பாவையும், நன்னூல் உருபியல் கக ஆம் நூற்பாவையும் ஒத்து நோக்குக. இங்ஙனம் வரும் இடங்கள் பல உள்ளன.

இங்ஙனம் முதலும் வழியுமாக இயங்கும் இவ்விருநூல்களின் ஒற்றுமை வேற்றுமை களை இன்னும் பல்வேறிடங்களில் கண்டு மகிழ வாய்ப்புண்டு. கண்டு மகிழ்க.

———

## தொல்காப்பியத்தின் காலம்

குமரிநாடு கடல் வாய்ப்படாது நிலவிய காலத்தில் தொல் காப்பியம் இயற்றப்பட்டதா மென்பதற்கு, அந் நூலின்கண் உள்ள குறிப் புக்கள் பலவுமே நன்கு சான்று பகர்கின்றன. நாற்புறத்துங் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நிலப்பகுதிகளாற் சூழப்பட்டு, அவற் றிடையே மிக அகன்று நீண்டு விரிந்து கிடப்பதாகிய வெறுமணல் வெளிக்கு அவர் "நடுவு நிலைத்திணை" என்று பெயர் கூறுமாற்றை உற்ருராயுங்கால் அத்தகையதொரு பெருமணல்வெளி அவர் காலத்தில் இருந்ததாகல் வேண்டு மென்பது புலனும். அந் நிலப்பகுதி இஞ்ஞான்று இந்திய மாக் கடலின் கீழ் அமிழ்ந்தி நிற்பினுந், தொல்காப்பியனுர் இருந்த ஞான்று அது பெரியதொரு நிலப்பரப்பாய்க் குமரிநாடெனப் பெயர் பெற்றிருந்த தென உணர்ந்து கொள்க.

மறைமலையடிகள்
மாணிக்கவாசகர் காலம் பக். எகூஉ.

———

1. தொல் - சொல் - வினையியல்-ச (சேனு-உரை)
2. நன்-பதவியல்-கசி, கசு, கள.
3. தொல் - சொல் - வினை - ச (நச்சினுர்க்கினியர் உரை)

# அடியும் இடியும்

[திரு. பேராசிரியர் க. பெருமாள், எம்.ஏ.]

*வடார்க்காடு மாவட்டத்திலுள்ள திருப்பத்தூரையடுத்த வெள்ளையகவுண்டனூரில் 5-2-22 இல் கவுண்டப்பக் கவுண்டருக்கும் சென்னம்மாள் அம்மையாருக்கும் தோன்றியவர் இவர். திருப்பத்தூர் நகராண்மைக் கழகப் பள்ளியிலும் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியிலும் கற்று பி. ஓ. எல். (ஆனர்சு) தேர்வில் பல்கலைக் கழக முதல் மாணவராக முதல் வகுப்பில் தேறினார். கோவை பி. எஸ் ஜி. கல்லூரியில் ஆசிரியப் பணியேற்று, பின் சென்னை மாநிலக் கல்லூரியில் துணைப்*



*பேராசிரியராக எட்டு ஆண்டுகள் பணிபுரிந்தார். அதன் பின் சென்னைக் கலைக்கல்லூரியிலும் மாநிலக் கல்லூரியிலும் தமிழ்த் துறைத் தலைவராகத் திகழ்ந்தார். தற்பொழுது வடார்க்காடு மாவட்டத்தில் செய்யாறு என வழங்கும் திருவோத்தூரில் உள்ள அரசினர் கலைக்கல்லூரியின் முதல்வராகப் பணிபுரிகின்றார். இலக்கிய மணங் கமழச் சொற்பொழி வாற்றுவதிலும் கட்டுரைகள் எழுதுவதிலும் வல்லார். முருகன் மீது மாறாத பற்றுக் கொண்டவர் ஆவர்.*

**இடம் :** அறிவகம்

**காலம் :** இரவு 8 மணி

**நிகழ்ச்சி :** பொழுதுபோக்கு

[வளவனும் செழியனும் அண்ணன் தம்பியர். வளர்மதி அவர்களுடைய தங்கை. அறவண்ணனும் செவ்வந்தியும் அவர்களுடைய பெற்றோர்கள். அவர்கள் சென்னை மாநகரத்திலிருந்து கோடை விடுமுறையைக் கழிக்கக் கானலூர் என்னும் ஒரு சிற்றூருக்குச் சென்றார்கள். அங்கு வானவனும் முகில் வண்ணனும் அவர்களுடன் வந்து கலந்து கொண்டார்கள். எல்லோரும் ஏதேதோ பேசிப் பொழுது போக்கினார்கள். முகிலன் மட்டும் ஏதோ ஆழ்ந்து எண்ணிக் கொண்டிருந்தான். அப்போது :

**வளர்மதி :** இன்று முகில்வண்ணன் மட்டும் ஒன்றும் பேசவில்லையே. அப்படி இருப்பதற்குக் காரணம் என்ன ?

**வளவன் :** அப்படியே இருப்பார். திடீரென்று மழை பொழிவதுபோல் பொழிவார். அவரை ஆழங் காண யாருக்கு இயலும் ?

**முகில்வண்ணன் :**

'முகிலுக்குப் பல பக்கம் இடி ;
மத்தளத்திற்கு இரண்டு பக்கம் அடி"

*சிரிப்பு*

எல்லோரும் முகில்வண்ணனைப் பார்த்துச் சிரிக்கும்போது,

**வளர்மதி :** எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே ?

**முகில்வண்ணன் :** விளக்கிச் சொன்னால் வேதனைப் படுவாய். வேதனைப் படவும் வெட்கப்படவும் வேண்டிய நிலையில் சில உண்மைகள் இருந்து வருகின்றன..... ..........உனக்குக் கோழி தெரியுமா ?

**வளர்மதி :** தெரியும்.

**முகில்வண்ணன் :** கோளி ?

**வளர்மதி :** தெரியாது. 'கோளி' என்பது 'போளி' என்பதுபோல ஒரு பலகாரமா ?

**வளவன் :** ஆமாம். பலகாரந்தான் உனக்கு.

எத்தனை வேண்டும்? வாயூறுகிறதா? (சிரிப்பு)

**செழியன் :** அது பலகாரமும் இல்லை! ஒரு காரமும் இல்லை! அதைப் பற்றிக் கரடியூர் கூளனிடத்தில் குட்டுப்பட்டுத் தெரிந்து கொண்டு வந்துள்ளார் முகில் வண்ணன் தெரியுமா?

**செவ்வந்தி :** கரடியூரா? ஊர்ப் பெயரே அச்சமூட்டக்கூடியதாக உள்ளதே!

**வளர்மதி :** யார் அந்தக் கூளன்?

**முகிலன் :** அவன் காளானுக்கு அப்பன்!

**வளர்மதி :** அப்பன் பெயர் கூளன்! மகன் பெயர் காளான்!

**வளவன் :** அம்மா பெயர் காக்கைமூக்கி! அவள் மகள் பெயர் பேன்தலைச்சி! பேன்தலைச்சியின் தம்பி பெயர் நரிக் கடிச்சான். அந்தக் குடும்பத்தில் அத்தனை பேர்கள்தாம். குடும்பக் கட்டுப்பாடு எப்படி?

**அறவண்ணன் :** போதும்! போதும்! குடும்பப் பெயர்கள் எல்லாம் கூளனும் காளானும் காக்கை மூக்கியும் பேன் தலைச்சியும் நரிக்கடிச்சானும் என இருப்பின் அவர்கள் வாழ்க்கை முன்னேற்றம் எப்படி அமையும்?

**செழியன் :** இந்தப் பெயர்களெல்லாம் சாத்திரம் பார்த்து வைத்த பெயர் களாம். தட்சணை கொடுத்துச் சாத் திரம் பார்த்துப் பெயர் வைத்துப் பெயர் சூட்டு விழாக் கூடக் கொண்டாடினர் களாம்.

**அறவண்ணன் :** சாத்திரங்களுக்கும் சாங்கி யங்களுக்கும் விழாக்களுக்கும் குறை வில்லை, எல்லாம் குருடனுக்குக் குருடன் வழிகாட்டிய முன்னேற்றமாகத் தான் உள்ளது. இவற்றையெல்லாம் கண்டு வருந்தி நொந்துதான்

'கண்ணிலாக் குழவிகள் போலப்—பிறர்
காட்டிய வழியில்சென்று மாட்டிக் கொள்வார்'

என்று பாரதியார் அழுதுள்ளார். ஐயோ பாவம். இவர்களையெல்லாம் சீர்திருத்தி முன்னேற்றும் பொறுப்பு யாருடையது?

**முகில்வண்ணன் :** நம்முடையதுதான்.

**வளர்மதி :** எங்கோ தொடங்கி எங்கோ போய் விட்டீரே! அந்தக் 'கோளி' என்ன ஆயிற்று? கோளியும் ஒருவர் பெயரா என்ன?

(எல்லோரும் சிரிப்பு.)

**வளர்மதி :** நீங்கள் கூறிய குடும்பப் பெயர் கள் வேடிக்கையாகவும் இருக்கின்றன; வேதனையும் தருகின்றன. அந்தக் கோளியைப் பற்றிய புதிரையும் அவிழுங் கள் பார்க்கலாம்.

**முகில்வண்ணன் :** அதனை நானே விளக்கிச் சொல்கிறேன். யாரும் சிரிக்கக் கூடாது. சிரித்தால் சொல்ல மாட்டேன். தெரியுமா?

**வளர்மதி :** யாரும் சிரிக்க மாட்டோம். நீங்கள் சொல்லுங்கள்,

**முகிலன் :** கூளன், காக்கைமூக்கி, காளான், பேன்தலைச்சி, நரிக்கடிச்சான் ஆகிய ஐவரடங்கிய அந்தக் குடும்பத்தில் காளான் ஒருவன்தான் பள்ளிக்கூடம் போகும் பாக்கியம் பெற்றவன்.

**வளர்மதி :** மற்றவர்களுக்கு?

**முகிலன் :** அந்தப் புண்ணியம் இல்லை.

**பெற்றோர்கள் :** ஐயோ பாவம்!

**முகிலன் :** கரடியூரிலுள்ளவர்கள் 'கோழி' யைக் 'கோளி' என்றும், 'பழத்தைப்' 'பளம்' என்றும், 'குழம்பை'க் 'கொளம்பு' என்றும், 'அப்புரத்தை' 'அப்பாரம்' என்றும் 'சொன்னான்' என்பதைச் 'சென்னான்' என்றும் பேசி வருகிறார்கள். அது திருந்தா மொழி.

**அறவண்ணன் :** படிக்காதவர்கள் திருந்தாத் தமிழ்தான் பேசி வருகிறார்கள். நான் கூட ஒரு காலத்தில் கோழியைக் 'கோளி' என்றுதான் சொல்லிக் கொண்டிருந்தேன். படித்து முன் னேறிய பிறகுதான் 'கோழி' என்று

திருத்தமாகப் பேசி வருகிறேன். எங்களைப் பார்த்து நீங்களும் திருத்தமாகப் பேசி வருகிறீர்கள். பெற்றோர்கள் படித்து முன்னேறித் திருத்தமாகப் பேசுவார்களாயின் பிள்ளைகளும் தாமாகவே திருத்தமாகப் பேசப் பழகிக் கொள்கிறார்கள். பிள்ளைகள் முன்னேற்றம், பெற்றோர்கள் முன்னேற்றத்தில்தான் உள்ளது. அதனால், பிள்ளைகளை முன்னேற்ற விரும்பும் பெற்றோர்கள் தம்முடைய எண்ணம், மொழி, செயல்களில் திருத்தமாக இருக்கும் கட்டாயம் ஏற்படுகிறது.

**வானவன் :** ஆம். உண்மைதான். உங்களைப் போலப் பொறுப்புணரும் பெற்றோர்கள், கற்றவர்கள் குடும்பங்களில் கூடக் குறைவாகத்தாம் உள்ளார்கள். புகை பிடித்தல், பொடிபோடல், காப்பி முதலியன குடித்தல் போன்ற கெட்ட பழக்கங்கள் யாவும் பெற்றோர்கள் மூலமாகவே பிள்ளைகளிடம் வளர்ந்து நிலைத்து விடுகின்றன. என்னுடைய பெற்றோர்கள் திருத்தமாகத் தமிழ் பேசினால் கூட அதைத் தவறாகவே நினைக்கிறார்கள். ஆங்கிலத்தில் ஒரு பிழை இருக்கக்கூடாது என்று விரும்பும் அவர்கள் தமிழில் ஆயிரம் பிழைகள் செய்வதையே தமக்குரிய சிறப்பாகவும் கருதுகிறார்கள். அவர்களிடத்தில் நாங்கள் படும்பாட்டை.......

**வளர்மதி :** உங்கள் பாட்டையெல்லாம் பாடிக் காலத்தைக் கடத்தல் வேண்டா. அந்தக் கோளியைப் பற்றிச் சொல்லி முடியுங்கள்.

**முகிலன் :** காளானுக்குத் தன்னூரில் பள்ளிக்கூடம் இல்லை. இரண்டு மைல் நடந்து போய் வேங்கையூரில் படித்து விட்டு வீடு திரும்புவான். வீடு வருவதற்குள் பள்ளிக்கூடத்தில் கற்பித்தவற்றைப் பெரும்பாலும் மறந்து விடுவான். ஒருநாள் பள்ளிக்கூடத்தில் ஆசிரியர் காளானைப் பார்த்துக் கோழிப் பாடத்தைப் படிக்கச் சொன்னார். அவன் 'கோழி' என்பதைக் 'கோளி' என்று படித்தான். அதற்காக அவனுடைய காதைப் பிடித்துத் திருகிக் கன்னத்திலும் அறைந்து, 'ஒவ்வொரு சொல்லையும் திருத்தமாக உச்சரிக்கக் கற்றுக் கொடுக்கவே காலம் எல்லாம் வீணாகிறதே' என்றும், 'வருந்திச் சொல்லிக் கொடுப்பவற்றை அவ்வப்போதே மறந்துவிடுகிறாயே' என்றும் வசை பாடிக் கொண்டே 'கோழி' என்று திருத்தமாக உச்சரிக்கக் காளானுக்குச் சொல்லிக் கொடுத்தனுப்பினார் ஆசிரியர். காளான் மாலையில் வீடு வந்து சேர்ந்தான்.

**வளர்மதி :** அப்புறம்.

**முகிலன் :** காளான் வீட்டுக்கு வந்து காடை விளக்கின் முன் அமர்ந்து கொண்டு அன்று வகுப்பில் நடந்த கோழிப் பாடத்தைப் படித்தான். பக்கத்தில் கூளனும் காக்கைமூக்கியும் ஏதோ பேசிக் கொண்டிருந்தவர்கள் காளான் படிப்பைக் கவனித்தார்கள். அவன் 'கோ' என்றும் 'ழி' என்றும் எழுத்துக் கூட்டிக் 'கோழி' என்று திருத்தமாகப் படித்தான். கூளனுக்குக் கூற்றுவனுக்குப் போலவே கோபம் வந்து விட்டது. காளான் தலையில் பலமாக ஒரு குட்டுக் குட்டிக் காதைப் பிடித்துத் திருகிக் 'கோவனா' 'ளினா' 'கோளி' என்று படி என்று கர்ச்சித்துக் கண்ணை யுருட்டினான். காளான் தலையைத் தேய்த்துக் கொண்டு தேம்பித் தேம்பி அழுதான். காக்கைமூக்கி முகத்தை வேறொரு பக்கம் திருப்பிக்கொண்டு கண்ணீர்விட்டுக் கலங்கினாள். பேன் தலைச்சியும் நரிக்கடிச்சானும் தெருவில் ஒருவரை ஒருவர் அறியாதவண்ணம் ஓடி ஒளிந்துகொண்டார்கள்.

[வளர்மதி கலங்கிய கண்ணீருடன் ஓவியம் போலாகிவிட்டாள்.]

**வளவன் :** வளர்மதி, முகிலன் பேசாமல் இருந்ததற்கு இதுதான் காரணம். கூளனிடத்தில் காளான் பட்ட பாடும் ஆசிரியரிடத்தில் காளான் பட்டபாடும் முகிலன் நெஞ்சத்தில் ஆழப் பதிந்து விட்டன. இத்தகைய வருந்தத் தக்க காட்சிகள் அவருடைய நெஞ்சத்தைப் பல பக்கங்களிலுமிருந்தும் இடித்து

வருகின்றன. முகிலுக்குப் பல பக்கம் இடி அன்றோ?

**செழியன் :** வீட்டில் 'கோழி' என்று படித்தால் குட்டும் திட்டும் கிடைக்கின்றன. பள்ளிக்கூடத்தில் 'கோளி' என்று படித்தால் அடியும் வசையும் கிடைக்கின்றன. ஒவ்வொரு சொல்லின் பொருட்டும் வீட்டிலும் பள்ளியிலும் அடிபட்டு வரும் சிறுவர் சிறுமியர்கள் நிலைக்கு அழுவதா? மகிழ்வதா? என்று முகில்வண்ணன் வருந்திக்கொண்டே வந்தான்.

**செவ்வந்தி :** ஐயோ பாவம்! தமிழகத்துச் சிறுவர்களும் சிறுமியர்களும் மத்தளம் போல் இரண்டு பக்கங்களும் அடிபட்டு வருவது வருந்தத்தக்கதாகவுள்ளது!

**அறவண்ணன் :** அடிக்கத் தெரிந்தவர்கள் அடித்தால் மத்தளமும் சிறப்புப்பெறும். மாணவர்களும் சிறப்புப் பெறுவர். அடிக்கத் தெரியாதவர்கள் அடித்தால் மத்தளமும் கிழிந்து போகும். மாணவர்களும் அழிந்து போவர். இந்தக் கருத்தை உள்ளடக்கித்தான்.

"முகிலுக்குப் பல பக்கம் இடி;
மத்தளத்துக்கு இரண்டு பக்கம் அடி"

என்று முகில்வண்ணன் பாடியிருத்தல் வேண்டும்......

**செவ்வந்தி :** ஆமாம் முகிலா! குறையும் நிறையும் கலந்துள்ள இவ்வுலகில் குறைகண்டு கலங்குவதும் நிறைகண்டு களிப்பதும் கூடாது என்று பெரியவர்கள் சொல்வார்களே? நீ மட்டும் ஏன் 'வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடினேன்' என்று வருந்திய வள்ளலார் போல எதற்கும் வருந்திவிடுகிறாய்?

**முகிலன் :** நல்லவர்கள் வருந்தாமல் வாழும் ஒரு நல்ல காலம் வரவே வராதா? நல்ல பள்ளிக்கூடங்களும் நல்ல மாணுக்கர்களும் நல்ல ஆசிரியர்களும் நல்ல மக்களும் நல்ல அரசியலாரும் தத்தம் பொறுப்புணர்ந்து கடமை செய்து முன்னேறும் ஒரு நல்லுலகம் அமையவே அமையாதா?

**அறவண்ணன் :** நல்லுலகங்களை உருவாக்குவதில் முதலிடம் பெறத்தக்க பள்ளிக்கூடங்கள், ஆசிரியர்கள், மாணுக்கர்கள், கலைஞர்கள், மக்கள், அரசியலார்கள் எப்படி எப்படி இருத்தல் வேண்டும் என்று கற்பித்துச் செஞ்சொற் கவிகள் சில செய்து கொடுத்தால் எல்லார்க்கும் பயன்படுமல்லவா? பொழுதுபோக்கிலும் பொது நலத்திற்குப் பயன்படுவனவற்றையே படைப்பதற்கு முகில்வண்ணன் வழிகாட்ட வேண்டும். முகிலல்லவோ உலகம் காப்பது?

**எல்லோரும் :** நாங்களும் அப்படியே விரும்புகிறோம்.

**முகில்வண்ணன் :** (பாடுகிறான்)

*கடமையைச் செய்யா தென்றும்*
*களித்திடப் பிறர்க்கு வாய்த்த*
*உடைமையைக் கவர்ந்து கோடல்*
*உயர்வெனக் கருதும் தீய*
*மடமையை அகற்ற வல்ல*
*மதிநலக் கடமை வீரப்*
*படையினைப் படைக்கும் நல்ல*
*பள்ளிகள் வேண்டும்! வேண்டும்!*

**எல்லோரும் :** வேண்டும்! வேண்டும்!!

(எல்லோரும் உடன்பாடுகிறார்கள்.)

**முகில்வண்ணன் :**

*கற்றிடும் போதே பொல்லாக்*
*கயமையை வளர்த்துக் கொள்ளும்*
*நற்றிறம் அற்ற வாய்ப்பை*
*நல்கிடா தென்றும் மேன்மைச்*
*சொற்றிறம் பாத வாய்மை*
*தூய்மைநற் றொழில்க ளெல்லாம்*
*கற்றிடச் செய்யும் பள்ளி*
*கணக்கில வேண்டும்! வேண்டும்!!*

**எல்லோரும் :** வேண்டும்! வேண்டும்!

**முகில்வண்ணன் :**

*நெஞ்சுளே பூக்கும் பொல்லா*
*நெறியெலாம் நீக்க வல்ல*
*செஞ்சொல்லின் கவிக ளோடு*
*செம்மைசேர் தொழில்கள் கற்று*

வஞ்சமில் அறத்து நெஞ்சால்
வறுமையை அழிக்கும் வீரச்
சிங்கங்கள் வளரும் பள்ளி
தெருவெலாம் வேண்டும்! வேண்டும்!!

எல்லோரும்: வேண்டும்! வேண்டும்!!

முகில்வண்ணன்:

கற்றவர் குடியா வண்ணம்
களவினைச் செய்யா வண்ணம்
மற்றவர் நலத்தைத் தங்கள்
நலமென மதிக்கும் வண்ணம்
நற்றவம் செய்யும் வண்ணம்
நற்கலை பலவும் நல்கி
உற்றுல களிக்கும் பள்ளி
ஊர்தொறும் வேண்டும்! வேண்டும்!!

எல்லோரும்: வேண்டும்! வேண்டும்!!

முகில்வண்ணன்:

அவரவர் நாட்டைக் காக்கும்
ஆற்றலும் அவலம் நீக்கி
அவரவர் மொழியை ஆக்கும்
ஆற்றலும் அமைதி யாக
அவரவர் அறத்தைப் போற்றும்
ஆற்றலும் ஊட்டும் கல்வி
அவரவர்க் களிக்கும் பள்ளி
அகலுல கனைத்தும் வேண்டும்!

எல்லோரும்: அகலுல கனைத்தும் வேண்டும்.

முகில்வண்ணன்:

ஒற்றுமைச் செல்வம் ஓங்க
உயர்நலக் கலைகள் யாவும்
கற்றிட வைத்து, வாழ்வில்
களிப்பெலாம் ஊட்ட வல்ல
முற்றறி வளித்து, ஞாலம்
முழுநலம் பெறுதற் கேற்ற
நற்றிறம் நல்கும் பள்ளி
நானிலத் தெங்கும் வேண்டும்!

எல்லோரும்: நானிலத் தெங்கும் வேண்டும்!

முகில்வண்ணன்:

மக்களை மக்கள் மோதும்
மடமைசேர் கொடுமை யெல்லாம்
ஒக்கவே தொலைத்துச் சாதி
மதங்களை ஓட்டி நாட்டோர்
தக்கநல் நெறியில் நின்று
தாழ்விலா தென்றும் வாழ
மிக்கசீர் நல்கும் பள்ளி
மேலுல கத்தும் வேண்டும்!

[மேலுலகம்: மேலைநாடுகள் என்றும் வானுலகு என்றும் பொருள்படும்.]

எல்லோரும்: வேண்டும்! வேண்டும்!!

அறவண்ணன்: வளவ! முகில்வண்ணன் பாட்டுக்கள் உலகத்தை முன்னேற்றும் ஆற்றல் வாய்ந்த பாட்டுக்களாக உள்ளன. நீ இப்போது நல்லாசிரியர்கள் எப்படி இருக்கவேண்டும் என்று கற்பித்துப் பாடுக.

வளவன்: (பாடுகிறான்)

மாயஐம் புலனும் வென்று
மாண்பெலாம் ஆக்க வல்ல
தூய்மையை வளர்த்து ஞானத்
தொண்டினால், உலக மெல்லாம்
வாய்மையாம் செல்வம் எய்தி
வளமுடன் வாழ்தற் கேற்ற
ஆயநற் கலைகள் கற்பித்(து)
அருள்செயும் ஆசான் வேண்டும்!

எல்லோரும்: வேண்டும்! வேண்டும்!!

வளவன்:

ஓதிய கலைகள் தம்மால்,
உள்ளத்தில் உருவ மாகும்
தீதெலாம் நீக்கி, வாழ்க்கைத்
திருவெலாம் ஆக்கி, வஞ்சச்
சூதெலாம் போக்கி, அன்புத்
தூய்மையால் இன்பம் எய்தி
வாதிலா துலகம் வாழ
வழிசொலும் ஆசான் வேண்டும்!

எல்லோரும். வேண்டும்! வேண்டும்!!

வானவன்: நான் மாணுக்கர்கள் எப்படியிருக்க வேண்டும் என்று பாடட்டுமா?

எல்லோரும்: பாடுக! பாடுக!!

வானவன்:

உலகெலாம் மகிழும் வண்ணம்
உயர்வெலாம் நல்க வல்ல
அலகிலாக் கலைகள் தம்மை
அறமுடன் கற்று, வாழ்வில்

இலகிடும் இன்பம் யாவும்
இயற்றுநல் தொழில்கள் செய்து
பலநலம் புரியும் அன்புப்
பண்புமா ணக்கர் வேண்டும்!

**எல்லோரும் :** ஆ! ஆ! இன்னும் பாடுக.

**வானவன் :**

அறிவெலாம் முற்றும் முன்னர்,
அரசியல் கட்சிக் குள்ளே
வெறியினால் சிக்கிக் கொண்டு
வேலைகள் நிறுத்தம் செய்து
பொறியெலாம் கெடுத்துக் கொள்ளும்
பொய்ந்நெறி வேண்டா தென்றும்
நெறியினால் கல்வி கற்கும்
நேர்மைமா ணக்கர் வேண்டும்!

**எல்லோரும் :** ஆம். ஆம். நேர்மை மாணக்கர் வேண்டும்! உம்மைப் போல் நேர்மை மாணக்கர் வேண்டும்.

**வானவன் :**

அன்பெலாம் பூத்து, நன்மை
அறமெலாம் காய்த்து, மேன்மைப்
பண்பெலாம் பழுத்துச் செல்வப்
பயனெலாம் செழித்து வாழ்க்கை
இன்பெலாம் விளைத்தற் கேற்ற
இயலுடன் செயல்க ளாற்றித்
துன்பெலாம் போக்க வல்ல
தூயமா ணக்கர் வேண்டும்!

விண்ணெலாம் நண்ணி வாழும்
வியன்கலை கற்று, ஞானக்
கண்ணெலாம் பெற்று, நெஞ்சக்
களையெலாம் நீக்கி, இந்த
மண்ணெலாம் பொன்னாய் மாற்றி
மகிழ்வெலாம் விளைதற் கேற்ற
புண்ணியம் செய்ய வல்ல
புதுமைமா ணக்கர் வேண்டும்!

**எல்லோரும் :** ஆம். அத்தகைய மாணக்கர்களால்தாம் நல்லுலகம் உருவாக வேண்டும். புதுமை மாணக்கர் வேண்டும்! அவர்களால் ஒரு புது உலகமே உருவாதல் வேண்டும்.

**அறவண்ணன் :** செழிய! கலைஞர்களும் அறிஞர்களும் எத்தகையவர்கள் வேண்டும் என்று நீ பாடுக.

**செழியன் :**

புவியெலாம் நெறியில் நிற்கப்
புதுப்புதுச் சுவைகள் ஊட்டும்
கவியெலாம் ஆடற் பாடற்
கலையெலாம் படைத்து மக்கட்
செவிமுதற் புலன்கள் யாவும்
செழித்திடும் வண்ணம் இன்பக்
கவினெலாம் தெரிக்க வல்ல
கலைஞர்கள் வேண்டும்! வேண்டும்!!

**எல்லோரும் :** வேண்டும்! வேண்டும்!!

**செழியன் :**

வெறிகளைப் படைக்க வல்ல
வேர்களை முளையிற் கிள்ளும்
நெறிகளைப் படைத்து நெஞ்ச
நேர்மையை வளர்க்கும் கல்வி
முறைகளை வகுத்து ஞாலம்
முழுவதும் வாழ்தற் கேற்ற
அறிவினைத் தருநல் லாற்றல்
அறிஞர்கள் வேண்டும்! வேண்டும்!!

**வளர்மதி :** அம்மா! மக்கள் எப்படி இருக்க வேண்டும் என்று நீ பாடு அம்மா!

**செவ்வந்தி :**

அன்பெலாம் ஊட்டித் தம்மை
அளித்திடும் பெற்றோர் தம்மை
இன்புறக் காத்து, நாட்டிற்(கு)
இமையென அமைந்து, காதற்
பண்பெலாம் வளர்க்கும் நெஞ்சப்
பாங்கெலாம் பெற்று வாழ்க்கைப்
புன்மையைப் போக்க வல்ல
பொறுப்புள மக்கள் வேண்டும்.

**அறவண்ணன் :** உன் மக்கள் அப்படித்தானே இருக்கிறார்கள். உனக்கு என்ன? கேட்டு வந்தவள்.

**செவ்வந்தி :** பிள்ளைகள் முன்னாலும் கேலி பேசுவதை விடமாட்டீர்களே நீங்கள்!

**அறவண்ணன் :** சரி. சரி. நமது வளர்மதி உலகத்துக்கு எத்தகைய பெண்கள் வேண்டும் என்று கற்பிக்கிறாளோ பார்ப்போம்.

**முகில்வண்ணன் :** ஆம். ஆம். பெண்களைப் பற்றி வளர்மதிதான் பாட வேண்டும் என்பது எங்கள் ஆசை.

**வளர்மதி:** எங்கள் ஆசை என்று பொய் சொல்லாமல் என் ஆசை என்று மெய் சொல்வதுதானே! ஆசையைப் பார்! சரி. பாடுகிறேன் பாருங்கள்!

[பாடுகிருள்]

*அன்பினில் ஊற வைத்த*
*அமுதினை வெல்லும் சொல்லால்*
*இன்பெலாம் ஊட்டிப் பெண்மை*
*இயல்பெலாம் காட்டிக் கற்பு*
*வன்மையால் உலகம் காத்து*
*வாய்மைசால் அறங்கள் பூத்து*
*நன்மைகள் அனைத்தும் ஆக்கும்*
*நல்லமா தர்கள் வேண்டும்!*

**எல்லோரும்:** வேண்டும். வேண்டும். நல்லுலகம் படைக்க வல்ல நல்ல மாதர்கள் வேண்டும்! வேண்டும்!!

**செழியன்:** இப்பொழுது அரசைப் பற்றிப் பாடுவார் அப்பா. அப்பா! பாடுங்கள் அப்பா! எல்லோரும் கவனியுங்கள்.

**அறவண்ணன்:**

*அறநெறி வகுத்து வல்ல*
*ஆட்சியை அமைத்துப் பொல்லா*
*மறநெறி நீக்கி, வாழ்க்கை*
*மாண்பெலாம் ஆக்கி, அன்புக்(கு)*
*உறைவிட மாகி நெஞ்சத்*
*துள்ளொளி பெருக்கி நாளும்*
*பிறர்க்குழைத் துலகம் காக்கும்*
*பெருங்குணத் தரசு வேண்டும்.*

*ஆசையால் உலகம் முற்றும்*
*ஆளுதல் வேண்டும் என்றே*
*ஈசனும் அஞ்சும் வண்ணம்*
*இரக்கமில் அரக்க ராகி*
*நாசமே விளைத்து ஞால*
*வாழ்க்கையை நசுக்கும் பொல்லாப்*
*பூசலும் போரும் செய்யாப்*
*பொறுப்பர செங்கும் வேண்டும்!*

**எல்லோரும்:** வேண்டும். வேண்டும். பொறுப்பரசு எங்கும் வேண்டும்.

**அறவண்ணன்:** இன்று பொழுதுபோக்கு மிகவும் பயனுள்ள ஒன்றுக இருந்தது. இதற்குக் காரணம் முகில்வண்ணன் தான்.

'முகிலுக்குப் பல பக்கம் இடி
மத்தளத்துக்கு இரண்டு பக்கம் அடி'

என்னும் அவனுடைய கருத்துப் பொதிந்த தொடரிலிருந்து நல்லுலகை உருவாக்கும் எத்தனை நற்கருத்துக்கள் தோன்றிவிட்டன!

**செவ்வந்தி:** ...........எல்லோரும் சாப்பிட வாருங்கள்.

---

## கல்வியே அழியாச் செல்வம்

*சில நாளில் தோன்றிச் சில நாளிருந்து சில நாளில் மறைந்து போவதாகிய இம்மக்களுடம்பிற் பிறந்தவர்களான நாம் எந்த வகையான செல்வத்தைப் பெறுதற்கு முயலல் வேண்டுமென்ருல், என்றும் அழியாததாய், நம் உடம்பு அழிந்தாலும் தான் அழியாமல் நமது உயிரோடு சேர்ந்து நம்மை எல்லாப் பிறப்புக்களிலுந் தொடர்ந்து வருவதாய் உள்ள அழிவில்லாப் பெருஞ் செல்வத்தையே அடைதற்குக் கண்ணுங் கருத்துமாய் இருக்கவேண்டும்.*

"கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
*மாடல்ல மற்றை யவை"*

—மறைமலையடிகள்
*அறிவுரைக் கொத்து*

---

# ஐந்துகால் மண்டபம்

[திரு. டாக்டர். சாலை இளந்திரையன் எம்.ஏ., எம்.லிட். பிஎச்.டி.]

நெல்லை மாவட்டத்தைச் சார்ந்த சாலைநயனார் பள்ளி என்னுமூரில் 6-9-1930இல் தோன்றியவர் இவர். இவர் தம் இயற்பெயர் மகாலிங்கம் என்பதாகும். சென்னை மாநிலக் கல்லூரியில் தமிழ் எம். ஏ பயின்றவர்; சிறந்த கவிஞர். ஆராய்ச்சிக் கட்டுரைகளும் நூல்களும் எழுதியுள்ளார். தில்லிப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறையில் பணியாற்றி வருகின்றார். தமிழ்ப் பழமொழிகள் பற்றிய ஆராய்ச்சிக்காக அண்மையில் 'டாக்டர்' பட்டம் பெற்றவர். 'அன்னை நீ



ஆடவேண்டும்' 'புரட்சிக் கவிஞர் கவிதைவளம்' 'தமிழில் சிறுகதை' 'புதிய தமிழ்க் கவிதை' 'புதுத் தமிழ் முன்னோடிகள்' முதலிய இருபதுக்கு மேற்பட்ட ஆராய்ச்சி நூல்களை எழுதியுள்ளார். சிங்கை, மலாயா நாடுகளுக்கும் இலங்கைக்கும் சென்று இலக்கியச் சொற்பொழிவுகள் ஆற்றியுள்ளார். இவர்தம் துணைவியாரான திருவாட்டி சாலினி இளந்திரையன் அவர்களும் தமிழறிஞர் ஆவார். இருவரும் இணைத்து சில அரிய ஆராய்ச்சி நூல்களை உருவாக்கியுள்ளனர்.

கடந்த சுமார் ஒருநூறு ஆண்டுகளில் தமிழ் இலக்கியம் மிகவாகத் தழைத்துக் கிளைத்துப் படர்ந்து பல புதிய கனிகளைத் தந்திருக்கிறது. அவைகளில் குறிப்பிடத்தக்க ஒன்றாகவும் தமிழில்உள்ள உரைநடைத் தனிநூல்களுள் காலத்தால் மூத்தவைகளுள் ஒன்றாகவும் தமிழ் வழங்கும் தேயங்களில் எல்லாம் மதிப்புப் பெற்றிருப்பது 'விநோத ரச மஞ்சரி' என்னும் புத்தகம். பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழர்கள் விரும்பிப் படித்த இப் புத்தகம், இன்றைக்கும் தனது பொருட் கவர்ச்சியையும் நடைக் கவர்ச்சியையும் இழக்காமல் இருந்து வருகிறது. அறிஞர் அனவரத விநாயகம் அவர்களின் கூற்றில் சொல்லுவதானால், ''பஞ்ச தந்திரம், கதா மஞ்சரி நூல்கள் இதற்கு முன்னே ஏற்பட்டிருந்தனவாயினும், இதற்குப் பெயர் அமைந்தது போலவே இந்நூல் விநோத ரசங்கள் செறிந்து தமிழ் மக்களுக்குப் பெரிதும் உவகை தருவதாயிற்று.''[1] எனவே தமிழ் உரைநடை நூல்களின் வரிசையிலும் தமிழ்க் கட்டுரை இலக்கிய வரலாற்றிலும் விநோதரச மஞ்சரிக்குச் சிறப்பானதோர் இடம் கிடைத்துள்ளது.

## விநோதரசமஞ்சரி

விநோதரசமஞ்சரியில் உள்ள கட்டுரைகள் அக்காலத்தில் (கி. பி. 1835 தொடங்கி) வெளிவந்து கொண்டிருந்த ''தினவர்த்தமானி'' என்னும் கிழமை இதழில் அவ்வப்போது வெளிவந்தன. பிறகு, (சென்னை) மாநிலக் கல்லூரியின் தென்மொழிகள் துறைப் பேராசிரியராக இருந்த பெர்சிவல் பாதிரியாரால், 1876 இல், ஒரு நூலாகத் தொகுத்து வெளியிடப்பட்டன. இதன் முறையான இரண்டாம் பதிப்பு 1891 இல் வெளிவந்தது. இதற்கு முன்பே காரைக்கால், சென்னை முதலான இடங்களிலிருந்த பலர் பல பதிப்புக்கள் அச்சிட்டு, உள்நாட்டிலும் இரங்கூன் பினங்கு முதலிய இடங்களிலும் விற்று வந்தார்கள். இச்செய்கை, இரண்டாம் (1891 ஆம் ஆண்டு) பதிப்பில் கண்டிக்கப் பட்டிருந்தாலும், அவ்வாறு அச்சிட்டு விற்கப்பட்டமையே, குறைந்த காலத்தில் இப் புத்தகத்துக்கு மிகுந்த செல்வாக்கு ஏற்பட்டு விட்டது என்னும் உண்மையையும் நமக்கு உணர்த்துகின்றது. புத்தகத்தின் இரண்டாம் பதிப்பில்

1. கலைமகள்: தொகுதி 2, (சென்னை, 1933 பக்கம்: 1203.)

வெளியீட்டாளர்கள் சுட்டிக் காட்டியிருப்பது போல், ''வாசிப்பவர்களுடைய நாவிற்கு நயமும், செவிக்கு இன்பமும், மனத்துக்கு மகிழ்ச்சியும், அறிவுக்கு வளர்ச்சியும், பொழுது போக்கிற்கு உல்லாசமுமாம்படி [1] இந்நூல் எழுதப் பட்டிருப்பதே இந்தச் செல்வாக்கிற்கு முக்கியமான காரணம்.

### அட்டாவதானம் வீராசாமி

ஆங்கில அரசாங்கத்தார் 1812 இல் சென்னைக் கல்விச்சங்கம் என்னும் ஒரு நிறுவனத்தை அமைத்து மேனாட்டு முறையிலான (வகுப்பு வரிசை முறையிலான) கல்விக்கு வழி வகுத்தனர். தமிழின் முதல் பெரிய பழமொழித் தொகுப்பை (ஆங்கில மொழி பெயர்ப்புடன் 1812இல்) வெளியிட்ட பெர்சிவல் பாதிரியாரும் மற்றவர்களும் இந்த நிறுவனத்தோடு தொடர்பு பட்டிருந்து பொதுக் கல்விக்குப் பலவழிகளிலும் தொண்டாற்றினார்கள். இந்தக் காலத்திலேதான், பள்ளி மாணவர்கட்குக் கற்பிப்பதற்குரிய தர வரிசையில் அமைந்த பாடநூல்கள் பல (மொழி பெயர்ப்புக்களாகவும் புதிய ஆக்கங்களாகவும்) வெளிவந்தன. இப்பணிகளோடும், பெர்சிவல் அய்யர் (பாதிரியார்) நடத்தி வந்த ''தினவர்த்தமானி'' என்னும் இதழோடும் தொடர்பு பட்டிருந்த தமிழாசிரியத் தமிழறிஞர்களிலே ஒருவர் அட்டாவதானம் வீராசாமிச் செட்டியார்.

'பிரசிடென்சி காலேஜ்' என்று சொல்லப்பட்ட சென்னை மாநிலக் கல்லூரியில் தலைமைத் தமிழ்ப் பண்டிதராயிருந்த வீராசாமியார் சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்துவதில் சிறந்தவராகப் பேர் பெற்றிருந்தார். இடத்துக்கேற்ற பழமொழிகளையும் ஏனைய மக்கள் வசனங்களையும் கலந்து நகைச்சுவையாகப் பேசுவதிலும் இவர் வல்லவர். அக்கால வழக்கப்படி, இவரும், அப்போது வெளிவந்த பல நூல்களுக்குச் சாற்றுக்கவிகள் வழங்கி யுள்ளார். இவர் பெற்றிருந்த ''கவிராயர்'' என்னும் பட்டம், இவர் ஒரு பாவலராகவும் மதிக்கப் பட்டார் என்பதைக் காட்டுகிறது. அகராதித் தொகுப்பு வேலையில் இவருக்கு உதவியாக இருந்த (இலங்கை, அளவெட்டியைச் சேர்ந்த) கனகசபைப் புலவர், ''நாவலர் வியக்கப் பாவலர் நாவான் நன்கலை மதி வளர்ந் தோங்கிப், பாவலர் முகஞ்செம் பதுமமாக் குவிக்கும் பான்மையோன் மாயனோடு உளத்து, மாவலர் வீராசாமி வேள்'' என்று பாராட்டியுள்ளார்.[2]

### பதினன்கு கட்டுரைகள்

பரமார்த்த குரு கதை என்னும் முதல் தனி உரைநடைத் தமிழ் நூலுக்குப் பிறகு, இவருடைய காலத்தை ஒட்டித்தான் தமிழில் உரைநடை நூல்கள் தலையெடுக்கத் தொடங்கின. ''வசனநடை கைவந்த வல்லாளர்'' என்று சிறப்பிக்கப்பட்ட ஆறுமுக நாவலர் சமயக் கதைகளையும் பால பாடங்களையும் நற்றமிழ் உரைநடையில் எழுதி வந்தார்; தமிழின் முதல் நாவலாசிரியரான வேத நாயகம் பிள்ளை தமிழ் உரைநடையைக் கதை இலக்கியத்துக்கு ஏற்ற கருவியாக உருவாக்கி வந்தார். அந்தச் சூழலில் வாழ்ந்து தமிழ்ப் பணியில் தலைநின்ற வீராசாமியார் கட்டுரைகளை மிகுதியாக எழுதினார். மேலைநாட்டில் ஓரளவு வளர்ச்சி பெற்று, இந்திய மண்ணிலும் சிறிதே மணம் பரப்பத் தொடங்கியிருந்த கட்டுரை என்னும் இலக்கிய வகை அவருடைய எழுத்துக்களின் மூலமே தமிழில் கால்கொண்டது.

இப்போது கிடைக்கும் விநோதரச மஞ்சரிப் பதிப்புக்களுக்கும் அதன் (1876) முதல் பதிப்புக்கும் சிறிது வேறுபாடு உள்ளது. முதற் பதிப்பில் இல்லாத சில கட்டுரைகள் அதன் பிற்பதிப்புக்களிலும் தற்காலப் பதிப்புக்களிலும் இடம் பெற்றுள்ளன. ஆயினும், இந் நூற்றாண்டின் தொடக்கத்தில் இப்புத்தகத்தைப் பற்றிக் கருத்துத் தெரிவித்த திருமணம் செல்வக் கேசவராயர் தெய்வங் கொள்கை, கற்புநிலைமை, கீதவாத்திய விநோதம், கற்றாய்ந் தொழுகல், பயனிலுழவு, மகாபண்டிதனைச் சிறுபிள்ளை வென்றது, காலபேத இயல்பு, நன்றி மறவாமை, கம்பர் சரித்திரத்தின் ஒரு பகுதி,

1. விநோதரசமஞ்சரி: 2 ஆம் பதிப்பு, சென்னை, (1891) நூல் வரலாறு.

2. மயிலை சீனி வேங்கடசாமி: 19 ஆம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம், சென்னை, (1962) பக்கம்: 297-98.

கம்பர் இராமாயணம் பாடி அரங்கேற்றியது, ஒட்டக்கூத்தர் ஈட்டி எழுபது பாடி அரங் கேற்றியது, ஒட்டக்கூத்தர் சோழனுக்குப் பெண் பேசியது, புகழேந்திப் புலவர் நள வெண்பாப் பாடியது, ஏகம்பவாணன் சரித் திரம் என்னும் பதினொன்கு கட்டுரைகளை மட்டுமே வீராசாமியாரின் கைவண்ணங் களாகக் கொண்டார் என்று தெரிகிறது.[1] இப் புத்தகத்தின் திருத்தமுற்ற இரண்டாம் பதிப்பில் தரப்பட்டுள்ள "நூல் வரலாறு" என்னும் குறிப்பில், "காளமேகப் புலவர் சரித்திரம் போல, ஔவையார் சரித்திரத்தை யும் யாமறிந்தவாறு தொகுத்துத் தெளிவு பெற எழுதிச் சேர்த்தும், புத்தகம் இனிது முடியுமாறு சிறுகூனன் கதை ஒன்று எழுதிக் கடையிற் கூட்டியும் பிரசுரஞ் செய்தனம்" என்று பதிப்பாளர்கள் குறிப்பிட்டுள் ளார்கள்.[2] முதற்பதிப்பில் பதினொன்காக இருந்த கட்டுரைகளின் எண்ணிக்கை, இரண்டாம் பதிப்பில் பதினெருகி இப்போ துள்ள (லிப்கோ, சென்னை, 1958) புதிய பதிப்புக்களில் இருபதாக உயர்ந்துள்ளது.

## கட்டுரை இலக்கியம்

விநோதரச மஞ்சரி சிறந்ததோர் உரை நடை நூல் என்பது பத்தொன்பதாம் நூற் ருண்டின் இறுதியிலேயே உணரப்பட்டது என்பதை முன்பே கண்டோம். தற்காலத் தமிழ்த் திறனாய்வு முன்னோடிகளுள் ஒருவ ராகிய தி. செல்வக் கேசவராயர், "படிப்ப வர்கள் இன்னும் படிக்கலாம், பின்னும் படிக் கலாம் என்று விழையுமாறு திராட்சாபாக மான வசன நடையில் அமைந்த நூல்" என்று பாராட்டியிருப்பதோடு, "இந்நூல் சந்தர்ப்பத்துக்கேற்ற பழமொழிகள் வழங்கப் பெற்று, மிக்க திரிபின்றி, பெரும்பான்மை யும் உலகவழக்கை உள்ளிட்டுத் திராட்சா பாகமாக இருத்தலால் தமிழறிந்த ஸ்திரி புமான்கள் அனைவரும் (பெண்களும் ஆண் களும்) எக்காலத்தும் படித்து மகிழத்தக்கது" என்றும் மதிப்பீடு செய்துள்ளார்.[3]

எல்லாக் கலைகளையும் போலவே கட்டுரை இலக்கியக் கலையையும் வரையறுத்து விளக்குவது கடினம். இருப்பினும், ஆங் காங்கு அறிஞர்கள் இம் முயற்சியில் ஈடு பட்டுச் சில கருத்துக்களை வெளியிட்டு வந்துள்ளார்கள். விநோதரச மஞ்சரியின் (முதற்பதிப்பில் உள்ள) பதினலு கட்டுரை களையும் மேம்போக்காகப் பார்க்கையிலேயே, அவை, பலவகையான பொருள்களின் மீது படர்ந்துள்ளமை புலப்படுகிறது. கடவு ளுண்மை பற்றிய ஆராய்ச்சி, கற்பொழுக்கம், நன்றி மறவாமை, புலவர்களின் வாழ்வில் நிகழ்ந்தனவாக வழங்கி வந்த சுவையான நிகழ்ச்சிகள், இந்த நாட்டின் பெருந் தொழி லாகிய உழவு என்பன போன்ற வெகு வேறு பொருள்களைத் தொட்டுத் துலக்கும் இப் புத்தகம், 'காலபேத இயல்பு' என்னும் தலைப்பில் பழங்காலத்துக்கும் புதிய காலத் துக்கும் உள்ள வேறுபாடுகளையும் சுவை யாகப் பரப்பிக் காட்டுகிறது. இவை தவிர, ஓர் இசை நிகழ்ச்சியைப் பற்றிய மதிப்பீட்டு வருணனையான 'கீதவாத்திய விநோதம்' என்னும் கலைக்கட்டுரையும் இதிலே இடம் பெற்றுள்ளது. "பழக்க வழக்கங்கள், நிகழ்ச்சிகள், மனிதர்கள், கலைகள், புத்த கங்கள் அல்லது பொதுவான மனித வாழ்க்கை முதலியவைகளைப் பற்றிய ஆசிரி யரின் எண்ணங்களைப் படிப்போரிடம் நேர் முகமாக எடுத்துரைப்பதே "கட்டுரை இலக் கியம்" என்னும்[4] இலக்கணத்துக்குப் பொருத்தமாக விநோதரசமஞ்சரி பல்வேறு பொருள்கள் குறித்த உரைகளின் தொகுப் பாக உள்ளது.

மேற்கண்ட இலக்கணத்தைத் தரும் காம்ப்டன் கலைக்களஞ்சியமே, "எடுத்துக் கொண்ட பொருளைப் பற்றிய பெரும்போக் கான விளக்கமாகவோ, அதன்மீதான ஒரு கருத்தாடலாகவோ, படிப்போரை ஆசிரியன் கருத்துக்கு இணங்கச் செய்யும் முயற்சி யாகவோ, உணர்ச்சியைத் தட்டி எழுப்புவ தாகவோ அல்லது வெறுமே மகிழ்ச்சி ஊட்டு

1. தி. செல்வக்கேசவராயர் : தமிழ் வியாசங்கள், (1945 பதிப்பு), பக்கம் : 77-78.
2. விநோதரசமஞ்சரி : புஷ்பரதச் செட்டியார் இரண்டாம் பதிப்பு, (1891) நூல்வரலாறு.
3. தி. செல்வக்கேசவராயர் : தமிழ்வியாசங்கள், (1945 பதிப்பு), பக்கம், 77.
4. Comptons Pictorial Encyclopaedia, Vol, II, Chicago, (1956), P. 398.

வதாகவோ அமைவதே கட்டுரை இலக்கியம்'' என்றும் கட்டுரைக்கின்றது.[1] விநோதரச மஞ்சரிக் கட்டுரைகளைப் படிக்குந்தோறும், 'அந்தக் கட்டுரைகளைப் படித்த ஒருவரா லேயே இக் கூறிய இலக்கணம் வகுக்கப் பட்டதோ?' என்னும் வியப்புணர்ச்சி உண்டாகிறது.

### கருத்து நலன்

தெய்வங் கொள்கை என்னும் கட்டுரையில் 'கடவுள் ஒருவர் இருக்கிறார்' என்னும் கருத்தை வலியுறுத்துகிறார் ஆசிரியர். கடவுள் உண்டு என்போரும் அப்படி ஒன்றும் இல்லை என்போரும் பலகாலமாகச் சொல்லி வந்துள்ள கருத்துக்கள் இக் கட்டுரையில் விரிவாக அடைவுபடுத்தப் படுகின்றன. கடவுளுண்மை போன்ற ஒரு நுண்மைக் கருத்தைப் பற்றி விரிவான, பலவான கருத்துக்களை அடுக்கிக் கொண்டே போனால் படிப்போருக்கு அலுப்பே ஏற்படும். அதைத் தவிர்க்கும் வகையில், இக் கட்டுரை, ஓர் ஆத்திகனுக்கும் ஒரு நாத்திகனுக்கும் இடையில் நிகழ்ந்த உரையாடல் போல அமைக்கப் பட்டுள்ளது. கடவுளுண்மை பற்றிய சிந்தனை மிகவும் நுண்ணோட்ட (Highly Technical) மானதாகத்தான் செல்ல முடியும் என்னும் கருத்தைப் பொய்ப்பித்து, அதன் மீதும் ஒரு பெரும் போக்கான பார்வையைச் செலுத்த முடியும் என்பதை மெய்ப்பிக்கிறது இந்தக் கட்டுரை. ''கடவுள் எங்கும் இருக்கிறார், எல்லாவற்றிலும் பரிபூரணமாக இருக்கிறார்; அவரில்லாத இடம் ஒன்றும் இல்லை'' என்று ஆத்திகன் கூறக்கேட்ட நாத்திகன், ''நீர் சொல்லுகிறபடி கடவுள் எங்கும் பரிபூரணமாயிருக்கிறது மெய்யாகுமானால், அவர் பாவிகளுக்குள்ளும் இருக்கிறார் என்பது சரியல்லவே!'' என்று கேள்வி போடுகிறான். அதற்குப் பதிலாக ஆத்திகன், பின்வருஞ் செய்திகளை அடுக்குகிறான் :

''அவரெங்கும் இருக்கிறார் என்பது சத்தியம். ஆனால், அவர் நல்லோர் இருதயத்தில் மெல்லிய பூவின் மேல் இருக்கிறது போலவும், தீயோர் மனத்தில் கடூரமாகிய முள்ளின் மேல் இருக்கிறது போலவும் இருக்கின்றார் என்பதே அதன் கருத்து. இப்படியாகக் கொள்ளாவிடின் அவரைப் பூரணரென்பது பொய்யாய் முடியும். அன்றியும், கடவுளின் அகடித கடன சக்தியை யாரறிவார்? அவர் அண்டத்தை அணுவாகவும், அணுவை அண்டமாகவும், பகலை இரவாகவும், இரவைப் பகலாகவும், ஆணைப் பெண்ணாகவும், பெண்ணை ஆணாகவும் மாற்றுவார். ஒரு சிறிய கடுகுக்குள் பெரிய மலையை அடக்குவார். புலியைப் பசுப்போலச் சாதுவாக்குவார். ஆகாயத்தை ஒரு சுண்டு விரலால் மறைப்பார். பூமி முழுவதும் அவருக்கொரு சிறு தூளி. கடல் நீரெல்லாம் அவருக்கொரு சிறு துளி. ஊழித் தீயோ, அவருக்கொரு சிறு பொறி. சண்டமாருதமோ அவருக்கொரு சிறிய சுவாசம். .......அவருக்குப் பிறப்பு இறப்பு, விருப்பு வெறுப்பு, ஒப்பு உயர்வு, இன்பம் துன்பம், பந்தம் மோட்சம் இல்லை; அவர் மகிமையைச் சொல்ல ஆர் தரம்?''[2]

'கற்றாய்ந்தொழுகல்' என்னும் கட்டுரையின் இறுதியில் தமது கட்டுரையின் நோக்கையும் போக்கையும் விவரிக்கிறா ஆசிரியர் : ''கல்வி பயிலும் சிறுவர் முதலா யினோர் அருமையின்றி எளிதாக வாசித்துச் சிறந்த கல்வியைக் கற்பதும் அதனை ஆராய வதும் கற்ற கல்விக்குத் தக்க வண்ண நடப்பதும் ஆகிய கற்றாய்ந் தொழுகலை இவ் விதமாம் என்று படமெழுதிக் காட்டாவிடி னும், இதனால், இடர்ப்படாமல் ஒருவாறு உணர்ந்து கொள்ளும் பொருட்டு, இது (அச் சிறுவர் முதலாயினோர்க்குச் சிரிப்புப் பரிகாசமுமாய்த் தோன்றியே உபாயமாக மேற் குறித்த பெரும் பயனைத் தரும்படி, சில பழமொழி முதலாகிய திருஷ்டாந்தங் களைக் கொண்டு வெளிப்படையாகவும் சுருக்க மாகவும் செய்யப்பட்டது....'' மேற்கண்ட கடவுட் கொள்கை பற்றிய உரை இந்த வித மாக, பெருங்கல்வி இல்லாதவர்களையும் மனத்திற் கொண்ட பொதுப்படையான

1. Ibid, P. 398.

5. விநோத ரச மஞ்சரி: சென்னை, (1958 பதிப்பு), பக்கம்: 14-15.

கருத்துத் தொடராகவே அமைந்திருக்கிறது.

காலபேத இயல்பு என்னும் கட்டுரை, இங்கே ஆங்கில ஆட்சி உறுதிப் படுவதற்குச் சிறிது காலத்துக்கு முந்திய நாட்டு நிலைமையை விவரிப்பதற்காகவே எழுதப் பட்டுள்ளது. எனவே, விபட்சன் என்பவன் முற்கால நிலைமைகளைப் புகழ்வது போலவும், சுபட்சன் என்பவன் தகுந்த ஆதாரங்களைத் தொகுத்துச் சுட்டிப்,பழைமையின் கொடுமைகளை விளக்குவது போலவும் இந்தக் கட்டுரை அமைந்து செல்கிறது. கட்டுரையின் எந்த ஒரு பகுதியிலும் இந்தப் போக்கின் ஒரு கூறே விரிந்து நிற்கிறது:

"விபட்சன்: இந்த ஆங்கிலேய துரைத்தனத்திலும் சாஸ்திர யுக்தமாகிய உடன்கட்டை ஏறுவது, தீக்குளிப்பது, செடிலாடுவது முதலானவைகளும், மற்றும் சில சடங்குகளும் தவிர்க்கப்பட வில்லையோ?

சுபட்சன்: கணவனிறந்த பொழுது மனைவி சக கமனம் (உடன்கட்டையேறல்) அல்லது, அக்கினிப் பிரவேசம் பண்ணுகிறது சாஸ்திரீயமாயிருந்தும், கடூரவதையாய் இருப்பது பற்றி நிறுத்தப்பட்டது. வடக்கே, பெற்ற பிள்ளைகளை இரக்கமின்றி மனந்துணிந்து தாய்மார் எடுத்துக் கங்கையில் எறிவதும், சில தேசங்களில் பிராணு பாயத்திற்கு ஏதுவாகிய செய்கை இதுவென்று நினையாமல் மனிதர்களுடைய உடம்பு பதைபதைக்க முதுகிலே இருப்புத் துறடுகொண்டு உருவக் குத்தி உயரத் தூக்கிச் செடிலாட்டுவது முதலிய வழக்கமும் தவிர்க்கப் பட்டன........ இவ் விதத்தினலேயே இந்தத் துரைத்தனத்தார் ஜீவகாருணிய முடையவர்களென்பது விளங்கவில்லையா? வெகு காலமாய் ஒழியாத வலங்கை இடங்கைக் கலகம், துஷ்டாத்துமாக்கள் கும்பு கூடியிருந்து, போகிறவர்கள் வருகிறவர்களைக் கண்ட விடத்தில் அடித்துப் பறிக்கிறது, காதை மூக்கை அறுக்கிறது, தலையை வெட்டிப் புதைக்கிறது, குடலைக் குத்திச் சரிக்கிறது, தீவட்டித் திருடர் உபத்திரவம் இவை முதலான சங்கடங்கள் அனைத்தும் நாளாவட்டத்திலே தொலைந்து போயின; தர்மம் தலை எடுத்தது; நீதி நிலைபெற்றது; சாந்தம் தழைத்து விளங்கியது; உண்மை உயர்ந்தோங்கியது; தேசாபிமானமும் செழிக்கின்றது."[1]

நாமக்கல் வெ. இராமலிங்கம் அவர்கள், இக் கட்டுரையில் சுபட்சன் என்பவன் ஆங்கில ஆட்சிக்குப் புகழ் பாடுவதை எடுத்துக்காட்டி, "விநோதரச மஞ்சரியில் இக் காலத்து வாசகர்கள் இன்புற முடியாத கட்டுரைகளும் இருக்கின்றன" என்று குறிப்பிட்டுள்ளார்.[2] ஆயினும், இந்தக் கட்டுரை சுமார் ஒரு நூறு ஆண்டுகளுக்கு முன்பு நிலவிய நாட்டு நிலையின் பின்னணியில் எழுதப் பட்டது என்பது நினைக்கத்தக்கது. "இன்று முளைத்தெழும் நக்சலைட்டுகள் போன்றவர்கள் அன்று இந்திய நாட்டின் பற்பல பாகங்களில் ஆட்சி செலுத்தி வந்தனர். இந்திய மக்கள் யாதொரு பாதுகாப்புமின்றி அச்சமும், அறியாமையும் நிறைந்தவர்களாய், சாதியாலும், சமயப் பிணக்குகளாலும் மூடப்பழக்க வழக்க நம்பிக்கைகளாலும் பிளவுண்டு, சின்னப்பட்டும் பின்னப்பட்டும் சொந்த நாட்டிலே ஒருவருக்கொருவர் அந்நியர்களாய், பகைவர்களாய், பெருமையிலாத வாழ்க்கை நடத்திவந்தனர் என்பது மிகையன்று" என்று மற்றொருவர் சித்திரித்திருப்பதும்[3] இங்கே ஒப்பு நோக்கத்தக்கது. இதே ஆசிரியர் (வீராசாமியார்) வேறு இடங்களில், அரசாங்கப் பணிகளில் ஈடுபட்டுள்ள நம்மவர்களே நம் மக்களுக்குத் தொல்லைகள் விளைத்து வருவதைக் குறிப்பிட்டு, ஆங்கிலத் துரைத்தனத்தார் இவற்றுக்கு இடம்தரக் கூடாது என்று இடித்துரைத்திருப்பதோடு, உழவர்களின் நலனில் ஆங்கில அரசாங்கம் போதிய

1. விநோதரசமஞ்சரி: சென்னை, (1958 பதிப்பு), பக்கம்: 407-408.
2. மேற்படி புத்தகம், நாமக்கல் வெ. இராமலிங்கம் பிள்ளையின் முன்னுரை.
3. 'சிவாஜி" ஆண்டு மலர், திருச்சி, (1970), பக்கம்: 457.

கவனம் செலுத்தவில்லை என்பதை நயமாகச் சுட்டிக் காட்டியிருப்பதும் நோக்கத்தக்கது.[1]

## கட்டுரை வன்மை

வாய்க்காலில் ஓடிவரும் தண்ணீர் பாத்தியிலே சென்று நிரம்புவது போல, எடுத்துக்கொண்ட கருத்து தடைமுடைகள் இன்றிப் படிப்போர் நெஞ்சில் சென்று நிரம்புமாறு எழுதுவது கட்டுரை வரைவியலின் தனிச்சிறப்பு. தங்கள் படைப்பின் மூலம் இந்தச் சாதனையை நிலைநாட்டவே, எழுத்தாளரும் கவிஞரும் எழுத்துக்கலையின் அனைத்து உத்திகளையும் கையாள்கிறார்கள். வீராசாமியாரின் கட்டுரை வன்மைக்குப் பல சான்றுகள் கூறலாமாயினும், ''கம்பர் சரித்திரத்தின் ஒரு பகுதி'' என்னும் கட்டுரையில் ஓர் இடம் இதற்கு மிகு பொருத்தமாக உள்ளது: சோழனிடம் கருத்து மாறுபாடு கொண்ட கம்பர் நாடு கடத்தப்பட்டுப் பல இன்னல்களுக்கு ஆளாகிறார். அந்த இன்னல்களின் தொடரில் ஒன்றைத் தாங்கிக் கொண்டு மேற்செல்கையில் நிகழ்ந்த நிகழ்ச்சி ஒன்று பின்வருமாறு:

''அவர் அப்பால் வெகு தூரம் போகையில் அதிகப் பசியாய் இருந்ததனால், ஒரு கோமுட்டி கடையில் போய், 'ஐயா, செட்டியாரே, பசியாயிருக்கிறது. எனக்குக் கொஞ்சம் அவல் கொடும்' என்றார். அவன் கோமுட்டியாகையால், 'பொதிக்கு அளக்கிறதற்குள்ளே சத்தத்திற்கு அளக்கச் சொல்லுகிறது போல, கடை போணியாகாததற்கு முன்னே உனக்குக் கொடுக்கச் சொல்லுகிறையோ? நல்லது ஆயிற்று. அட, இல்லை போ!' என்றான்.

அப்புறம் சில தூரம் போய்ச் செக்கான் எள்ளாடுவது கண்டு, 'அப்பா, பசிக்குக் கொஞ்சம் பிண்ணுக்குக் கொடு' என்றார். அவனும் கொடுக்கவில்லை. அதற்கப்பால் ஒரு பிராமணன் வீட்டைக் கண்டு, 'பிராணன் போகிறது. தாகத்திற்குத் தண்ணீர் தர வேண்டும்' என்றார். அவன், 'சூத்திரனுக்கு வார்த்த தீர்த்த சேஷம் பிராமணருக்கு அருகமாமோ? போ, போ!' என்று துரத்தினன். இவரென்ன செய்வார்? பசியும் தாகமும் சகிக்கக் கூடாமையால், மிகவும் இளைப்புடனே வெயிலில் அலுத்துப்போய் ஒரு மரநிழலில் சோர்ந்து படுத்திருந்தார். அங்கே ஏர் உழுகிற வேளாளன் ஒருவனுக்குப் பழையது வந்தது, அவன் சாப்பிடப் போகிற சமயத்தில் அவர் போய்க் கையேந்தினர். அவன் அந்தப் பழஞ் சோற்றை இவர் கையிலே போட்டு உண்ணச் சொல்லி, உபசரித்தான். இவர் உண்டு பசி தீர்ந்தபிறகு,

''செட்டிமக்கள் வாசல்வழிச்
செல்லோமே; செக்காரப்
பொட்டிமக்கள் வாசல்வழிப்
போகோமே — முட்டிபுகும்
பார்ப்பார் அகத்தையெட்டிப்
பாரோமே; எந்நாளும்
காப்பாரே வேளாளர் காண்''

என்று ஒரு பாடல் பாடினர்.''[2]

இதிலே எடுத்தாளப்படுகிற பாடல் கம்பர் பாடியதுதானு என்பதே உறுதியாக இல்லை. ஆனாலும் தக்கதொரு சூழ்நிலையை அமைத்து அந்தப் பின்னணியிலேயே இந்தப் பாடல் தோன்றியது என்று கட்டுரையாளர் கூறும்போது, அது பொருத்தமாகவே உள்ளது. ஆதரவின்றி வழிநடந்து பசித்துக் களைத்த ஒருவர் இப்படிச் செய்யக் கூடியவரே என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்ளுவார்கள். இந்நிகழ்ச்சி கம்பரின் பெருமைக்கும், காலங்காலமாக வறுமையிற் செம்மை உடையவனுக உழவன் சித்திரிக்கப் பட்டு வந்துள்ள மரபுக்கும் ஒத்ததாக அமைந்து, படிப்போரின் இதயத்தில் நல்ல நினைவுகளையும் நயமான உணர்ச்சியையும் எழுப்புகிறது.

பண்டைய வரலாற்றின் பகுதிகளையும் நன்றி மறவாமை, கற்றாய்ந்தொழுகல்

1. விநோதரசமஞ்சரி: சென்னை, (1958 பதிப்பு), பக்கம்: 51; 56.
2. விநோதரசமஞ்சரி: சென்னை, (1958 பதிப்பு), பக்கம்: 90-91

முதலிய நுண்பொருட்களையும் விவரித்து விளக்குகின்ற ஆசிரியர், தமது காலத்தில் நடந்த ஓர் இசைநிகழ்ச்சியைக் "கீத வாத்திய விநோதம்" என்னும் கட்டுரையில் சித்திரிப்பதைப் பார்க்கையில், கட்டுரையின் அனைத்து வகைகளிலும் இவருடைய பேறு திறமையோடு உலவியிருப்பது தெரிகிறது.

"மார்ட்டின் சீமன்சன் துரையவர்கள் வந்து கடவுள் வணக்கஞ் செய்து, தமது கையில் ஓர் வீணையை மெல்லென எடுத்தார். அந்த வீணையோ அத்தனை விசேஷமானதாகக் காணப்படவில்லை. எங்குமுள்ள மற்ற வீணைகளைப் போலக் கேவலம் சாதாரணமான தாகவேயிருந்தும், அவர் கைக்கு வல்லவனுக்கும் புல்லு மாயுதமாம், என்பதாயிருந்தது. அவர் அதன் முறுக்காணியைப் பற்றித் திரித்து, நரம்பைத் தெறித்துப் பிரமாணமாகச் சுதிகூட்டி, யாவரும், சபாஷ் என்று சிரக்கம்பம் செய்ய அற்புதமாக வாசித்தார். அதிலிருந்து தோன்றிய நாதமோ, அப்படிச் சாதாரணமாயிருக்கவில்லை. வல்லவனுடிய பம்பரம் போலச் சாதுரியமும் மாதுரியமும் செவிக்குக் குளிர்ச்சியு மாயிருந்தது. அந்த நாதம் அவ்வீணைக்கே இயல்பாயுள்ளதோ, அல்லது அதை வாசித்த மார்ட்டின் சீமன்சன் துரையின் கைவாசியோ, நமது கவர்னரவர்களுடைய சபாமண்டபக் கட்டுக்கோப்பின் வளமோ, என்னவோ தெரியாது. அந்த வீணை பேரியாழ், சகோடயாழ், மகரயாழ், செங்கோட்டியாழ் என்னும் நால்வகை யாழில் ஒன்றுதானோ! அல்லது சரஸ்வதி, சித்திரசேனன், தும்புரு, நாரதர் ஆகிய நால்வருடைய களாவதி, கச்சளா, மகதி, பிருகதி ஆகிய வீணையிலொன்றுதானோ! வேறொன்றுதானோ! அவ்வீணையின் இசையாழுக்குரிய ஏழ்வகை நரம்பிசையோ! அந் நரம்பிசைக்கு உவமையாகச் சொல்லப்பட்ட குயிலிசை முதலியனவோ! அவ்விசையின் சுவை கரும்பின் சுவையோ! கதலி, பலா, மா முதலிய கனிகளின் சுவையோ! பால், தேன், பாகு ஆகிய இவைகளின் சுவையோ! யாதென்று நிரூபிக்கிறது? ........அந்தக் கானம் இந்துக்களுக்குள் வழங்கும் குறிஞ்சி முதலிய ஐந்திணைக்குரிய ஐவகைப் பண்களிலும், பகற்பண் ஒன்பது, இராப்பண் ஒன்பது, பொதுப் பண் மூன்று ஆகிய இருபத்தொரு பண்களிலும், பயிரவி முதலாகிய முப்பத்திரண்டு ராகங்களிலும் சம்பந்தப் பட்டதாகச் சொல்வது சரியன்று; சொன்னாலும் ரசமாயிராது. பின்னை என்னவெனில் தேவகானமே இதுவென்று மதிக்கத்தக்கதாய் இருந்தது."[1]

இந்த வருணனை இசைக்கலையின் நுட்பங்களுள்ளே ஆழ்ந்து செல்லவில்லை. அவ்வாறு சென்றுவிடுவது, கட்டுரையை ஆய்வுரையாக்கிவிடும் என்பதை நன்கு உணர்ந்தே ஆசிரியர் அதனைத் தவிர்த்திருக்கிறார் என்று தெரிகிறது. நமது பண்டைய யாழ், வீணை, பண்கள் முதலியவற்றின் பெயர்களை அங்கங்கே நினைவூட்டி வருவதால், கட்டுரையின் இப் பகுதி ஓர் இசை நிகழ்ச்சியின் சரியான பாராட்டுரையாக அமைந்து சிறக்கிறது.

தம் கட்டுரைகளில், தாம் விரும்பும் எந்தச் சுவையையும் உணர்ச்சியையும் எளிதில் உண்டாக்கிவிடும் ஆற்றல் வீராசாமியாரிடம் சற்றுக் கூடுதலாகவே அமைந்துள்ளது :

"வல்லிடி வழக்கைச் சொல்லடி மாமி, என்று மாமியுடனே வாது செய்யாமல் அவளைத் தாய்போலக் கருதி, அவள் காலிலே பட்டது தன் கண்ணிலே பட்டதாகக் குடும்ப பாரத்தையெல்லாம் ஏந்திக்கொண்டு, அவளும், 'கண்மணியாகிய என் செல்வ மருமகளைப் போலத் தேடக் கிடைக்குமா!' என்று சொல்லும்படி, அந்நியோந்நியமாய் நடந்து, மாமியார் மெச்சிய மருமகள் இல்லை என்னும் பழமொழியைப் பறக்கச் செய்யவேண்டும்."[2]

1. விநோதரசமஞ்சரி : சென்னை, (1958 பதிப்பு), பக்கம் : 373.
2. மேற்படி புத்தகம், பக்கம் : 23.

இது கற்புநிலைமை என்னும் கட்டுரையில் ஒரு பகுதி.

"ஆண்டியைக் கண்டால் லிங்கன், தாதனைக் கண்டால் ரங்கன்' என்பவரைப் போல, அவரவர்களுக்கு ஏற்றபடி நடந்து, அவர்களால் தமக்கு வேண்டிய உதவிகளை வேண்டியபடிக் கெல்லாம் பெற்றுக் கொண்டு, அவர்களுக்குப் பிரதி உபகாரம் செய்ய வேண்டு மென்ற எண்ணம் சிறிதும் இன்றி, அறுந்த விரலுக்குச் சுண்ணும் பிடாமல் லோபகுணத்தையே பெரும் பான்மையாகக் கொண்டு, இடாள் தொடாள்; மனுஷா மேல் செத்த பிராணன்' என்ற பாவனையாக, விசுவாச காதகர்களாய் இராமல், யதார்த்தமாக ஒரு நன்றி செய்தார்க்கு ஆபத்து வந்த காலத்தில் பெறுதற்கரிய தமது உயிரையாவது கொடுத்து அக்கடனைக் கழிப்பதுமன்றி, அவ்வொரு நன்றியின் நிமித்தம் அவர் அநேகம் பிழைகளைச் செய்தாலும், அவைகளை எல்லாம் பாராட்டாமல் பொறுத்துக் கொள்ளவும் வேண்டும்."[1]

இது நன்றி மறவாமை என்னும் கட்டுரையின் ஒரு பகுதி. இவை, அறிவுரை என்ற வகையில் அழுத்தமாகவும், அதே சமயம் படிக்கச் சுவையாகவும் இருப்பதைக் கவனிக்க வேண்டும்.

"சொன்ன மாத்திரத்தில் வெட்டுண்டு விழுந்து கிடந்த தலைகளும் உடல்களும் காந்தமும் இரும்பும் போல ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டன. காந்தத்திற்கு இரும்பை இழுக்கும் ஆக்ருஷ்ண சக்தியும், இரும்பிற்குக் காந்தத்தில் போயொட்டும் சந்தான சக்தியும் இயல்பாக உண்டானமையால் அவையிரண்டும் ஒட்டுகிறது ஆச்சரியமன்று; அப்படிப்பட்ட சக்தியோ இவைகளுக்கில்லை. இல்லாதிருந்தும், கண்டகண்ட இடங்களிலே தாறுமாறாய் அறுபட்டுக் கிடந்த உடல்களெல்லாம் அதனதன் தலைகளைத் தேடிவர, சோழ ராஜனுடைய ஆஸ்தான மண்டபத்திற்கு முன்பாகக் குவித்துக் கிடக்கப் பட்ட தலைகளெல்லாம் தன்தன் உடல்களை நாடிச்சென்று வாணி கிருபையினால் ஒட்டிக் கொண்டமையால், மாண்டவர்களெல்லாம் உடனே அநாயாசமாக உயிர் பெற்றெழுந்து இடியிடித்தால் போல உரக்கக் கனைத்துத் தோள் கொட்டித் தொடை தட்டி மீசை முறுக்கி நகைத்து, "ஜயம் ஜயம்!" என்று ஆர்ப்பரித்தார்கள்."[2]

ஒட்டக்கூத்தர் ஈட்டி எழுபது பாடியது என்னும் கட்டுரையில் ஒரு பகுதி இது.

"........அவர்கள் (கலெக்டர்கள்) சட்டத்தின்படி கட்டளையிட, அதுவே வியாஜமாக அவர்களிடத்தில் உத்தியோகஸ்தராய் இருக்கும் சிரெஸ்ததார் சொற்படியோ, அல்லது, தாசில்தார் ஏவுதலினாலோ, தங்கள் சுயசித்தத்தினாலோ ஜில்லாதார் முதலானவர்கள் நைதாத்துச் சேவகர்களை அனுப்ப, அவர்கள் பயிரிடும் குடிகளைத் திருடர்களைப் பிடிக்கிறது போலப் பிடித்து வந்து, கையையும் காலையும் குண்டு கட்டாகக் கட்டி, கிட்டிக்கோல் பாய்ச்சி, கடுமையாய் வெயில் எறிக்கும் மத்தியான வேளையில் ஆற்று மணலில் பதைக்கப் பதைக்க உருட்டி விடுகிறதும், கழுத்துக்கும் கால் பெருவிரலுக்கும் கயிறு மாட்டி அண்ணாந்தாள் போட்டு, நெற்றியின் மேல் பெரிய கல்லெடுத்து வைத்து, வெயிலிலே நிறுத்திப் பல விதத்திலும் கஷ்டப் படுத்தி கிஸ்தி கட்டச் சொல்லுகிறதும், வாய்க்கு வழங்காத சொற்களெல்லாம் சொல்லி ஏசுகிறதும் உண்டு; அந்த உபத்திரவம் பொறுக்க மாட்டாமல் பயிரிடுகிறவர்களில் அநேகர் கையிருப்பு இல்லாமையால் ஏர்க்குண்டை முதலானவைகளையும், வீட்டுத் தட்டுமுட்டுகளையும், துணி முதலியவைகளையும் விற்றுக் கொடுத்து விட்டுக் கொஞ்ச நாளில் ஏழைகளாய் விடுவார்கள்."[3]

1. விநோதரசமஞ்சரி: சென்னை, (1858 பதிப்பு), பக்கம்: 83

2. மேற்படி புத்தகம், பக்கம்: 188.

3. மேற்படி புத்தகம், பக்கம்: 48.

இஃது, ஆசிரியர் காலத்தில் வரி வசூலிப்பு முறையில் இருந்துவந்த கொடுமைகளை விவரிக்கும் முகமாகப் ''பயனில் உழவு'' என்னும் கட்டுரையில் சித்திரிக்கப்படும் ஒரு நிகழ்ச்சி.

''கட்டுரையின் அமைப்பும், கருத்தும், நடையும், நோக்கமும் பலவாறு இருத்தலின், அதன் தன்மையை வரம்பிட்டு வகுத்தறிதல் அரிது. ஒரு வகையான கட்டுரை, விரித்து விளக்கப்படாத ஆழ்ந்த கருத்துக்களை நெருக்கமாகக் கொண்டு, சில பக்கங்களுள் அடங்குவதாய் இருக்கின்றது; மற்றொரு வகையான கட்டுரை, ஆக்கியோன் கருத்துக்களையும் பற்பல மேற்கோள்களையும் கொண்ட ஒரு கலவையாய் இருக்கின்றது; வேறொரு வகையான கட்டுரை, கருத்தாழம் இன்றி, ஆக்கியோன் நுகர்ச்சி நவிற்சியாய் அமைந்திருக்கின்றது; பிறிதொரு வகையான கட்டுரை நீண்டு, மெய்ப்பொருட் கோட்பாடுகளைப் பற்றிய கருத்துக்கள் நிரம்பியதாய் இருக்கின்றது; இன்னொரு வகையான கட்டுரை, உண்மையில் ஒரு சிறு நூலாகவே அமைந் திருக்கின்றது.''[1]

இந்தப் பொதுக் கூறுபாடுகள் ஒவ்வொன்றுக்கும் எடுத்துக் காட்டான கட்டுரைகளை விநோதரச மஞ்சரியில் காண முடிகிறது.

**கட்டுரை இயல்**

கட்டுரையின் புற அமைப்பையும் அதன் உள்ளோட்டத்துக்குத் துணையான நடை இயல்பையும் வகுத்து வரையறுப்பது எளிதன்று. கட்டுரை, ஒரு நிகழ்ச்சிச் சித்திரிப்பாக அமையலாம்; ஆனால் அது கதையாகி விடக் கூடாது. கட்டுரை, ஓர் உரையாடலாக அமையலாம்; ஆனால் அது நாடகமாகி விடக் கூடாது. கட்டுரை, ஓர் ஆசிரியரின் கோட்பாட்டை வலியுறுத்தி நிலைநாட்டுவதாக இருக்கலாம்; ஆனால் ஆய்வுரையாகி விடக் கூடாது. எதிர்மறையான இந்த வரையறை இறுக்கங்களுக்கு இடையேதான், கட்டுரை, தனக்கென்று ஒரு வடிவத் தோற்றத்தைப் பெற்று, நமக்கும் அதை மங்கலாக உணர்த்திக் கொண்டிருக்கிறது. விநோதரசமஞ்சரிக் கட்டுரைகளில் மேற்குறித்த (உரையாடல், நிகழ்ச்சிவருணனை, தான் நாட்டித் தனதுநிறுவுதல் என்னும்) பல இயல்புகளும் உள்ளன. ஆயினும் எந்தக் கட்டுரையையும் கதை என்றோ, நாடகம் என்றோ, ஆய்வுரை என்றோ சொல்ல முடியவில்லை. அவ்வளவு நுட்பமாக, எல்லை தாண்டாத வரையறுத்த வடிவுடன் ஒவ்வொரு கட்டுரையும் அமைந்துள்ளது.

களவியல் உரையிலும் பிற உரையாசிரியர்களின் நடையிலும் பழகிய தமிழாசிரிய மரபினரில் ஒருவராகிய வீராசாமியார் கட்டுரை இலக்கியத்துக்குத் தக்கதான ஓர் எளிய நடையைக் கையாள்வதில் பெரிதும் வெற்றி பெற்றிருப்பது வியப்புக்குரியதே. இவருடைய வாக்கியங்கள், பல இடங்களில், நீண்ட வாக்கியங்களாகவே உள்ளன. ஆனால், அந்த நீண்ட வாக்கியங்களிலும் ஓர் எளிமைத் தெளிவு இருப்பதை நாம் மறந்து விட முடியாது; இடத்துக்கும் எடுத்துரைக்கும் கருத்துக்கும் ஏற்ற விதமாக இவருடைய நடையின் இயல்பு வெவ்வேறு விதமாக அமைவதும் கருதத் தக்கது: உழவர்களின் இன்னல்களை உருக்கமாகவும் ஆணித்தரமாகவும் எடுத்துரைக்கும் இடத்தில், இவருடைய கருத்துக்கள் மிகச் சிறிய வாக்கியங்களாகப் பொங்கித் தொடர்கின்றன :

''உழுதொழிலைச் செய்வதற்கு வேண்டிய கருவிகள் எல்லாம் அழியாத வச்சிரத்தினாலே செய்யப்பட்டு இருக்கின்றனவா? காட்டிலுள்ள செத்த மரங்களினாலும், துருப்பிடிக்கும் இரும்பினாலும் செய்யப் பட்டவைகள்தாமே? ஆதலால், அடிக்கடி காறுகள் தேய்ந்து போம்; கலப்பைகள் முறிந்துபோம்; ஏரிலே கட்டப்படும் எருதுகள் கோமாரி, மார்படைப்பான் கண்டு திடீரென்று செத்துப்போம்; அல்லது, கிழமாய்ப் போம். வேலையாட்களுக்கு வியாதி சம்பவிக்கும். அக்காரணங்களால் உழவுக்குத் தடை யுண்டாம். அந்தச் சமயத்தில் வேறே கலப்பைகள்,

1. எம். பாலசுப்பிரமணியம்: **சொல்லும் பொருளும்**, சென்னை, (?), பக்கம்: 72.

காறுகள், எருதுகள், ஆட்கள் ஆகிய இவைகளையும் நூதனமாகச் சம்பாதிக்க வேண்டி வரும். அவைகளைக் குறித்து அதிகப் பணம் செலவாகிறதும், சொல்லக் கூடாத கஷ்டம் நேரிடுகிறதும் உண்டு. இந்தச் செலவெல்லாம் எவ்விதத்தில் கட்டி வரும்?''[1]

முரடனும் மூடனுமான மகன் ஒருவன் தன் தந்தையை இழிவு படுத்தும் ஒரு நிகழ்ச்சி 'நன்றிமறவாமை' என்னும் கட்டுரையில் வருகிறது. சுமார் இரண்டு பக்க அளவில் செல்லும் இந்த வருணனை ஒரே வாக்கியமாக அமைந்துள்ளது.[2] ஆயினும், இவர் எழுதிய காலத்திலேயே (காற்புள்ளி, அரைப்புள்ளி, வினு, வியப்புக் குறிகள் முதலான) நிறுத்தக் குறியீடுகள் பழக்கத்துக்கு வந்துவிட்டதாலும், நிகழ்ச்சியில் நகைச்சுவை ஊடாடுவதாலும், செய்தியைப் புரிந்து கொள்வதற்கு வாக்கியத்தின் நெடுமை தடையாக இல்லை. இடையிடையே பழமொழிகளும், உவமை உருவகத் தொடர்களும், கேள்விகளும், பதில்களும் அமைந்திருப்பதும் இவருடைய நீண்ட வாக்கியங்கள் ஓரளவு தெளிவுடையனவாக இருப்பதற்குக் காரணம் என்று தோன்றுகிறது. வாக்கிய அமைப்பில் உள்ள நெடுமை பழைய உரை நடையோடு அதைத் தொடர்பு படுத்தினுலும், கதை இலக்கியத்துக்கும் கட்டுரை இலக்கியத்துக்கும் தோதான ஓர் எளிமைப் புதுமையை இவருடைய கட்டுரைகளில் பரவலாகக் காணவே முடிகிறது.

### கட்டுரை முன்னேடி

சமுதாயத்தில் புதிய கருத்துக்கள் பொங்கிப் புறப்படும் போதுதான் இலக்கியத்தின் வகைமைப் பாட்டிலும் புதுமை மலர்கிறது என்பது இலக்கிய வரலாறுகளில் நிலை பெற்றுள்ள ஓர் உண்மை. தேசீய உணர்வு, சீர்திருத்த நாட்டம், நமது பழைமையை அலசி ஆய்ந்து அதன் பயன்பாட்டை மதிப்பிட்டுக் கொள்ள வேண்டும் என்னும் ஒரு புதிய பொறுப்புணர்வு என்னும் இவைகளே, தமிழிலும் பிற இந்திய மொழிகளிலும் பத்தொன்பதாம் நூற்றுண்டில் புதிய புதிய இலக்கிய வடிவங்கள் தோன்றுவதற்குக் காரணமாக இருந்தன. அந்தப் புது வெள்ளத்தின் ஒரு புதுப்பயனுகவே வீராசாமியாரின் கட்டுரை இலக்கிய முயற்சி முளைத்தது.

"வாளா பிறர் கருத்துக்களையே எடுத்துக் கூறுதல் கட்டுரையின் நோக்கம் அன்று; கட்டுரையை எழுதப் புகுந்த எழுத்தாளன், தான் ஆராய்ந்தறிந்த கருத்துக்களையும் முடிவுகளையும் நவில்வதே கட்டுரையின் நோக்கம்.''[3] இலக்கியக் கட்டுரையாயினும் பொதுக் கட்டுரையாயினும், பெரிதும் முன்னேர் வாக்குகளை மேற்கோள் காட்டியே எழுதுவதாக இருந்த மரபில், விநோதரச மஞ்சரி ஒரு புதுமையைப் பாய்ச்சியுள்ளது. புலவர்களின் வரலாறுகளாகவும் அவர்களுடைய நூல்களைப் பற்றியனவாகவும் அமையும் கட்டுரைகளில் தொடர்புடைய செய்யுட்கள் (மேற்கோள்கள் போல) இடம் பெறுவது இயல்பு. அவ்வாறு இடம் பெறுவதே அந்தக் கட்டுரைகளுக்கு ஒரு முழுமையைத் தருகிறது. மற்றுள்ள கட்டுரைகளில் இப்போக்கு கணிசமான அளவு குறைந்தே உள்ளது. மேற்கோள்களே நிறைந்து அவைகளே ஆசிரியரின் தனிக் கருத்தை மூடிய நிலையை மாற்றிய முதல்வர் வீராசாமியாரே என்பதையே (பழைமையினின்று வேறு பிரியும்) இப் புதிய போக்கு உணர்த்துகிறது.

கருத்துக்களைப் பொறுத்த அளவில் அட்டாவதானம் வீராசாமியார் பெரும் புதுமையாளர் என்று சொல்ல இயலாது; ஆனலும், அவர் சமுதாய எண்ணங்கள் உடையவர் என்பதைப் "பயனில் உழவு" என்னும் கட்டுரை தெரிவிக்கிறது; பழைமை, புதுமை என்பவற்றிடையே உள்ள தொடர்பை நோக்குவதில் அவர் ஒரு புதிய பார்வை பெற்றிருந்தார் என்பதைக் "கால பேத இயல்பு" என்னும் கட்டுரை மெய்ப்பிக்கிறது; (அறிவுக்கு ஒவ்வாத வகையில்

1. விநோதரசமஞ்சரி: சென்னை, (1958 பதிப்பு), பக்கம்: 53-54.
2. மேற்படி புத்தகம், பக்கம்: 72-73.
3. ம. பாலசுப்பிரமணியன்: சொல்லும் பொருளும், சென்னை, (?), பக்கம்: 77.

கண்ணை மூடிக்கொண்டு பழைமையைப் போற்றுவதும், புதுமையின் வளங்களைக் கண்டன நோக்குடனேயே பார்ப்பதும், இன்றைக்கும் பலரின் வழக்கமாக இருந்து வருகிறது. வீராசாமியார் இற்றைக்கு நூறு ஆண்டுகளுக்கு முன்பே பழைமைக்கும் புதுமைக்கும் இடையிலான தகுதிப் பாடுகளை உள்ளவாறு விளக்கி மதிப்பிட முயன்றிருக்கிருர் என்பது குறிப்பிடத் தக்கது.) மிகுதியான பழைமைத் தொடக்குகள் இல்லாமல் ஒரு நிகழ்ச்சியை வருணிக்கும் திறம் உடையவர் அவர் என்பதைக் "கீத வாத்திய விநோதம்'' என்னும் கட்டுரை நிலைநாட்டுகிறது.

இந்த இயல்புகளையும், பழம் போக்கினின்று பெரிதும் வேறுபட்ட ஓர் எளிய இனிய தமிழ் நடையையும் கைவரப் பெற்றிருந்ததால், படைப்பிலக்கியக் காரருக்குத் தேவையான ஆளுமை ஒன்று அவரிடம் பேரளவு முழுமை பெற்றுள்ளது. அந்த முழுமையே தமிழ்க் கட்டுரை இலக்கியத்தின் முன்னேடி என்னும் உரிமைப் பெருமையை அவருக்கு வழங்குகிறது.

முடிவுரை

''கல்லூரி மாணக்கர்கள், தமிழில் வசன நடையில் பழகி, தாங்கள் எழுத வேண்டிய வியாசங்களைச் செம்மையாக எழுதுவதற்கு ஆதரவாகத் தக்க சில தமிழ் வசன நூல்களின் பெயர்களைக் குறித்துக் கொடுக்குமாறு, வருஷந்தோறும் தமிழாசிரியர்களைக் கேட்பதுண்டு. என்னளவிலே அவர்களை நான் ஓதும்படி சொல்வதெல்லாம், முறையே பஞ்சதந்திரம், விநோதரசமஞ்சரி, ஆறுமுக நாவலருடைய பெரியபுராண வசனம், நான்காவது பால பாடம் என்பவை.'' இவ்வாறு கூறியிருப்பவர் பேராசிரியர் தி. செல்வக் கேசவராயர் அவர்கள். விநோதரசமஞ்சரி கருத்து வகையாலும் நடைவகையாலும் புதுமையும் செழுமையும் பூத்தது என்பதற்கு இக் கருத்துரையே போதிய சான்று.

நாவிற்கு நயம், செவிக்கு இன்பம், மனத்துக்கு மகிழ்ச்சி, அறிவுக்கு வளர்ச்சி, பொழுதுபோக்கிற்கு உல்லாசம் என்னும் ஐந்தையும் தருவதே எந்த இலக்கியத்துக்கும் உள்ள சிறப்பு. கட்டுரை இலக்கியம் என்னும் புதிய துறையின் மூலம் இந்த ஐந்து பேறுகளையும் படிப்போர்க்கு வழங்குவதால், விநோதரச மஞ்சரியின் சிறப்பு அந்த ஐந்து தூண்களின் மீது எழுந்து நிற்கும் ஒரு புதிய தமிழ் மண்டபமாகத் துலங்குகிறது; அதனை எழுப்பிய வீராசாமியாரின் இலக்கியப் புகழும் அவ் விதமே நின்று துலங்குகிறது.

---

## தமிழே ஓதுதற்கு எளிதாய் இளமை குன்ருததாய் இருப்பது

பழமையில் தமிழோடு ஒத்த ஆரியம் முதலான மொழிகளெல்லாம் இறந்தொழியவும், இதுமட்டும் இன்னும் இளமையோடு விளங்குவது எதனுல் என்றுல், தமிழ் அல்லாத மற்ற மொழிகளில் எல்லாம் மக்கள் இயற்கைக்கு மாருன உரத்த ஓசைகளும் பொருந்தா இலக்கண முடிபுகளுங் காணப்படுதலால் அவை வழங்குவதற்கு எளியன வாய் இல்லாமல் நாளடைவில் மாய்ந்து போகத் தமிழில் இயல்பாற் பிறக்கும் அமைந்த இனிய ஒலிகளும் மிகவும் பொருத்தமான இலக்கண முடிபுகளும் இயைந்து இஃது ஓதுதற்கு எளிதாய் இருத்தலினுற்ருன் அங்ஙனம் இஃதின்னும் இளமை குன்ருமல் நடைபெறுகின்ற தென்று உணர்ந்து கொள்க.

—மறைமலையடிகள்

அறிவுரைக் கொத்து, பக்கம் ௩௩௩

---

# தமிழ்க் கலைக்களஞ்சியம்

[திரு. பெ. தூரன், பி.ஏ., எல்.டி.]

'தூரன்' என்று சுருக்கமாக வழங்கப்பெறும் திரு. ம. ப. பெரியசாமித்தூரன் அவர்கள் 26-9-1908இல் கோவை மாவட்டம், மஞ்சக்காட்டு வலசு என்னும் சிற்றூரில் பழநிவேலப்ப கவுண்டர் அவர்களுக்கும் பாவாத்தாள் அம்மையாருக்கும் அருமைந்தராய்த் தோன்றியவர். சென்னை மாநிலக் கல்லூரியிலும் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியிலும் பயின்று பி.ஏ., எல்.டி., பட்டங்கள் பெற்றவர். சிறந்த கவிஞர். குழந்தைகளுக்காக நிரம்பக் கதைகளும் பாட்டுகளும் எழுதியுள்ளார். இவையனைத்தும் நூல் வடிவில் வெளிவந்துள்ளன. கோவை இராமகிருட்டிண வித்தியாலயத்தில் 15 ஆண்டுகள் ஆசிரியப் பணியாற்றினர், பின் 'தமிழ்க் கலைக் களஞ்சியத்தின்' தலைமைப் பதிப்பாசிரியராகப் பணியாற்றி அதன் 10 தொகுதிகளையும் குழந்தைகள் கலைக்களஞ்சியத் தொகுதிகளையும் வெளியிட்டுத் தமிழுக்குப் பெருந் தொண்டாற்றியுள்ளார். இவ்வரிய பணியைப் பராட்டி இந்திய அரசு 'பத்ம பூஷண்' என்ற பட்டத்தை வழங்கியுள்ளது.



தமிழ் இலக்கியப் பெருஞ்சோலையிலே ஒரு புதிய பாதை. பாதையென்றால் செப்பனிட்டுச் சீராக்கிவைத்துள்ள பாதை அன்று; புதிதாக அமைக்கவேண்டிய பாதை. பாதையில்லாத ஒரு பகுதியிலே அமைக்க வேண்டிய பாதை. கல்லிலும் முள்ளிலும் காடு மலைகளிலும் இடையூறுகளை எதிர்த்து வென்று உருவாக்கவேண்டிய பாதை. இப்படிப்பட்ட புதிய பாதை அமைப்பதிலே பங்கு கொள்ளுவதற்கு எனக்கு இளமை தொட்டே ஆர்வமிருந்தது.

விக்டோரியா மாணவர் விடுதியில் இருந்த என் கல்லூரித் தோழர்கள் மாலையிலே கடற்கரைக்குச் சென்று திலகர்கட்டத்திலே நடைபெறும் காரசாரமான அரசியல் சொற்பொழிவுகளைக் கேட்டுக்கொண்டிருப்பார்கள். நான் அவர்களிடமிருந்து சில நாட்களில் மெல்ல நழுவி, சென்னைப் பல்கலைக் கழக நூல்நிலையத்திற்குச் செல்வேன். அங்கு என்சைக்ளோப்பீடியா பிரிட்டானிக்கா என்ற அருமையான ஆங்கிலக் கலைக்களஞ்சியத்தை எடுத்து வைத்துக் கொண்டு அதில் மூழ்கியிருப்பேன். இப்படி ஒரு கலைக்களஞ்சியம் தமிழில் வரவேண்டும் என்று அப்பொழுதே என் உள்ளத்தில் ஆர்வம் பொங்கிக்கொண்டிருந்தது. ஆனால் நானே அப்பணியில் பெரும்பங்கு கொள்வேன் என்று அன்று கருதியதில்லை. தமிழ்க் கலைக்களஞ்சியத்தின் தலைமை ஆசிரியராக இருந்து அதை உருவாக்கும் வாய்ப்பினைத் திரு. தி. சு. அவினாசிலிங்கம் செட்டியார் அவர்கள் அன்போடு எனக்கே நல்கினார்கள்.

விரிவான முறையிலே எல்லாத்துறைகளையும் தன்னுள் அடக்கிய ஒரு கலைக்களஞ்சியத்தை உருவாக்குவதென்பது எளிதான பணியன்று. விடாமுயற்சியோடு நீண்ட காலம் உழைத்து, இன்றுள்ள குறைபாடுகள் பலவற்றைச் சமாளித்து இப்பணியை நிறைவேற்றவேண்டும். மிகுதியாகப் பொருட்செலவேற்படும். அதற்கு வேண்டிய நிதியை முதலில் திரட்டிக் கொள்ளவேண்டும். ஆயிரக்கணக்கான அறிஞர்களின் ஒத்துழைப்பும், சலியாது உழைக்கக்கூடிய ஆசிரியர்களும் வேண்டும்.

இந்தியாவிற்குச் சுதந்தரம் கிடைத்த திருநாளன்று இப்பெரிய முயற்சியைச் செய்வதற்கு அன்று கல்வி அமைச்சராகப் பொறுப்பேற்றிருந்த திரு. தி. சு. அவினாசிலிங்கம் செட்டியார் அவர்கள் உறுதிகொண்டார்.

தமது விருப்பத்தை மக்களுக்கு வெளியிட்டார். ஆர்வத்தோடு செயலிலே இறங்கினர். அவருடைய முயற்சியும் துணிவும் தமிழ் ஆர்வமும் இல்லாமற் போனல் இப்பெரிய இலக்கியப்பணி உருவாகி யிராது; வெற்றியுடன் நிறைவேறியும் இராது.

விஞ்ஞானம், விஞ்ஞானத்தின் பல வேறு துறைகள், கணிதம், வரலாறு, விலங்கியல் இவ்வாறுள்ள மிகப் பலவான துறைகளை எல்லாவற்றைப் பற்றியும், அத்துறைகளில் உள்ள பல பொருள்களைப் பற்றியும் விவரிக்கக்கூடிய கலைக்களஞ்சியம் ஒன்றைத் தமிழிலே உருவாக்க வேண்டுமானல் அதற்கு முன்னேற்பாடாக எத்தனையோ செயல்களிலே முனைந்து வெற்றிபெறுதல் இன்றியமையாதது. முதலில் வேண்டியது பொருள்.

தமிழ்மக்கள் இப்பெரிய பணிக்குத் தாராளமாகப் பொருள் வழங்கினர்கள். சென்னை அரசாங்கமும் மத்திய அரசாங்கமும் அன்புடனே மானியங்கள் வழங்கின. சென்னைப் பல்கலைக் கழகம் கலைக்களஞ்சியத்திற்குத் தேவையான அலுவலக அறைகளை அன்புடன் உதவிற்று. சென்னைப் பல்கலைக்கழகத் துணை வேந்தரான டாக்டர் ஏ. இலட்சுமணசுவாமி முதலியார் அவர்கள் தலைமையிலே அமைந்த திட்டக்குழுவொன்று ஆர்வத்தோடு கலைக்களஞ்சியத்தை உருவாக்குவதற்கு வேண்டிய பரந்த வழிகளை வகுத்து உதவியது. பதிப்பாசிரியர் குழுவும் வேறு பல துணைக்குழுக்களும் ஒவ்வொரு துறையிலும் சேர்க்கப் படவேண்டிய பொருள்களைப் பற்றியெல்லாம் சிந்தித்து முடிவு செய்தன. ஆயிரக்கணக்கான கட்டுரைகளை எழுதுவதற்கு அவ்வத்துறையிலே வல்லுநர்களான அறிஞர்களின் பட்டியும் தயாராயிற்று. இப்பட்டியிலே உலகத்திலுள்ள பல நாட்டு அறிஞர்களும் இடம்பெற்றிருந்தனர். இவர்களுக்கெல்லாம் வேண்டுகோள் விடுத்தோம். ஆர்வத்தோடு பலரும் கட்டுரைகள் எழுதி உதவ முன்வந்தனர்.

ஆனல் பெரும்பான்மையான கட்டுரைகள் ஆங்கிலத்திலேயேதான் இருந்தன. அவற்றைத் தமிழாக்கம் செய்ய வேண்டும். அதற்கு வேண்டிய கலைச்சொற்களை அமைப்பதென்பது மற்ருெரு மிகப் பெரிய வேலை. பல அறிஞர் குழுக்கள் ஓராண்டுக்கு மேலாக இப்பணியிலே ஈடுபட்டன. கலைச்சொற்களை அமைப்பதில் எத்தனையோ இடர்ப்பாடுகள் உண்டு; கருத்து வேறுபாடுகள் உண்டு. அவற்றையெல்லாம் ஒருவாறு சமாளித்துக்கொண்டு இருபத்து ஐயாயிரத்திற்கு மேற்பட்ட கலைச்சொற்களை முதன் முறையாக அமைத்தது ஓர் அரிய சாதனையென்று தயங்காமற் கூறலாம். இக்கலைச்சொற்களுக்கேற்பப் பொருள்களை யெல்லாம் அகரவரிசைப் படுத்திக் கலைக்களஞ்சியத்தை உருவாக்க வேண்டும். ஆயிரக்கணக்கான விளக்கப் படங்கள் வேண்டும். ஒவ்வொரு கட்டுரையையும் வேறு நூல்களில் அதே பொருளைப் பற்றிக் கூறியுள்ள கருத்துக்களோடு ஒப்பிட்டுப் பார்த்துச் செம்மைப்படுத்தி அச்சுக்கு ஏற்றதாகச் செய்யவேண்டும். இப்பணியை அலுவலகத்திலுள்ள ஆசிரியர் குழு சோர்வில்லாது செய்து வந்தது.

தனித்தனிப் பகுதியைக் கவனித்துக் கொள்ளப் பொறுப்பாக ஓர் ஆசிரியர் இருந்தாலும் கலைக்களஞ்சியத்தை முழுமையாக உள்ளத்திலே கற்பனை செய்து அமைத்துக் கொண்டு அந்த அமைப்பை விட்டு வழுவாமல் கட்டுரைகள் எல்லாம் அமைவதை ஒருவர் சதா விழிப்போடு பார்த்திருக்க வேண்டும். ஒவ்வொரு துறையிலும் வேலை சரியாக நடப்பதைப் பார்த்துக்கொள்வதோடு அதற்கு வேண்டிய தேவைகளையும் கவனித்து அவ்வப்போது அவற்றை நிறைவு செய்யவேண்டும். உலகத்தின் வெவ்வேறு பகுதிகளிலுள்ள பொருட்காட்சிசாலைகளிலும், கலைக்கூடங்களிலும், பலவகையான வேறு நிறுவனங்களிலுமிருந்தும் போட்டோக்கள், வண்ணப்படங்கள் முதலியவற்றைப் பெறவேண்டும். ஓவியர்கள் எழுத வேண்டிய விளக்கப்படங்களை முன்கூட்டியே செய்வதற்கு வேண்டிய வசதிகளையும், துணை நூல்களையும் ஏற்பாடு செய்யவேண்டும். நல்லமுறையிலே படங்களைத் தீட்டிச் சிறப்பாகப் பிளாக்குகள் தயாராகவேண்டும். அச்சகத்தின் வேலை ஒழுங்குபெற நடைபெறவேண்டும். இவற்றையெல்லாம் கவனிக்கும் பொறுப்பும் தலைமை ஆசிரியரையே சார்ந்ததாகும். எல்லாவற்றிற்கும் மேலாக மிக நயமாகச் செய்யவேண்டிய ஒரு

முக்கியமான பொறுப்புண்டு. ஆயிரக்கணக்கான கட்டுரைகளை எழுதுகின்ற ஆசிரியர்கள் பலரும் அவரவர்கள் துறைகளிலே மிகுந்த புலமை வாய்ந்தவர்கள்; தனிப்பட்ட சிறந்த தேர்ச்சிபெற்றவர்கள்; ஆராய்ச்சி வல்லுநர்கள்; தாம் மேற்கொண்ட துறைகளிலே தங்கள் முழுக் கவனத்தையும் செலுத்திப் பணியாற்றிக் கொண்டிருப்பவர்கள். அவர்களோடு தொடர்புகொண்டு நல்ல முறையிலே கட்டுரைகளைப் பெற வேண்டும்; கலைக்களஞ்சியத்திற்கு ஏற்றவாறு அவற்றை அமைத்துத் தருமாறு செய்யவேண்டும். அவர்களுக்குச் சிறிதேனும் மனத்தாங்கல் உண்டாகாதவாறு இப்பணியை நிறைவேற்றிக் கொள்ளுவதைப் பொறுத்தே பெரும்பாலும் எடுத்துக் கொண்ட பெருமுயற்சியின் வெற்றி இருந்தது.

நல்ல முறையிலே கலைக்களஞ்சியத்தை உருவாக்குவதில் சலியாது உழைக்க வேண்டும் என்ற உறுதி என் உள்ளத்திலே இருந்தது. அந்த உறுதியாலும் தமிழ்த் தாயின் ஆசியாலும் எடுத்துக்கொண்ட முயற்சிக்கு நல்ல வெற்றி கிடைத்தது. பல வகையான கருத்து வேறுபாடுள்ள அறிஞர்களும் என்னோடு ஒத்துழைத்து இம்முயற்சியிலே உதவிபுரிந்தது அவர்களுடைய தமிழ்ப் பற்றினையே வெளிப்படுத்துகின்றது. அவர்களுடைய கூட்டுறவு இல்லாமல் இப்பணி நிறைவேற முடியுமா? கூட்டாசிரியராக இருந்த திரு. பி. திருகூடசுந்தரம்பிள்ளையும் துணை ஆசிரியர்களான திரு. பி. எம். சோமசுந்தரம்பிள்ளை, திரு. புலவர் அரசு முதலானவர்களும் தொடக்கத்திலிருந்தே உடனிருந்து பொறுப்போடும் ஆர்வத்தோடும் பணியாற்றினார்கள்.

எல்லாவற்றிற்கும் மேலே எங்கள் தலைவர் திரு. தி. சு. அவினாசிலிங்கம் செட்டியார் அவர்கள் அடிக்கடி கூறுவதுபோல ஆண்டவனின் அருள் இருந்தது. அந்த அருள் இல்லாமல் எதுவும் நடைபெறாது. நாம் செய்கிறோம் என்று நினைப்பதே ஓரளவிற்கு அகங்காரத்தின் பொய்த் தோற்றமாகும். நாம் கருவிகள். இறைவன் அக் கருவிகளை வெவ்வேறு வகைகளில் பயன்படுத்திக் கொள்ளுகிறான். அவனுடைய சிறந்த கருவிகளாக அமைவதற்கு வேண்டிய வாய்ப்பைப் பெற்றதையே எண்ணி நாம் உள்ளம் நிறைவு பெற வேண்டும். அந்த நிறைவே எல்லா இடர்ப்பாடுகளையும் எதிர்த்து நின்று வெற்றிபெறுவதற்கு வேண்டிய வலிமையைத் தருகின்றது; ஒவ்வொருவர் வாழ்விலும் வெற்றி அளிக்கின்றது.

தமிழ் வளர்ச்சிக் கழகம் வெளியிட்ட கலைக்களஞ்சியம்தான் தமிழிலே தோன்றிய முதற் கலைக்களஞ்சியம் அன்று. முன்பே இத்துறையிலே வெவ்வேறு வகைப்பட்ட ஒருசில நல்ல முயற்சிகள் தனி மனிதர்களின் உற்சாகத்தால் மேற்கொள்ளப்பட்டன. 1902 ஆம் ஆண்டு யாழ்ப்பாணம் ஆ. முத்துத்தம்பிப் பிள்ளை அவர்கள் அபிதானகோசம் என்ற பெயரோடு ஒரு நூல் வெளியிட்டார். இது புராணம், இதிகாசம், இலக்கியம் ஆகியவற்றைப் பற்றி அகரவரிசையில் எழுந்த சிறு கலைக்களஞ்சியம் ஆகும். இதில் விஞ்ஞானம் முதலிய துறைகள் சேர்க்கப்படாமையால் இதை இலக்கியக் கலைக்களஞ்சியம் என்று கூறுவதே பொருந்தும்.

சென்னை கிறித்தவக் கல்லூரியில் தமிழ் ஆசிரியராக இருந்த ஈக்காடு இரத்தினவேலு முதலியார் அவர்கள் தமிழ் வடமொழி நூல்களில் உள்ள சிறப்புப் பெயர்களுக்கு விளக்கம் கூறும் வகையில் சிறப்புப் பெயர் அகராதி நூலை 1908ஆம் ஆண்டில் வெளியிட்டார்.

சென்னை பச்சையப்பன் கல்லூரியில் தமிழ் ஆசிரியராக இருந்த ஆ. சிங்காரவேலு முதலியார் அவர்கள் 1910 ஆம் ஆண்டில் அபிதான சிந்தாமணி என்னும் பெயரால் ஒரு பெரிய நூலை வெளியிட்டார். இதில் இலக்கியப் பொருள்களுடன் வேறு பல துறைப் பொருள்களும் ஓரளவு இடம் பெற்றுள்ளன.

1938 ஆம் ஆண்டில் டி. வி. சாம்பசிவம் பிள்ளை அவர்கள் மருத்துவம், தாவரவியல், ரசாயனம் ஆகிய துறைகளில் உள்ள முக்கியமான பொருள்கள் பற்றி விளக்கம் தரும் வகையில் நான்கு தொகுதிகளில் ஒரு களஞ்சியம் வெளியிட முயன்றார். ஆனால் இரண்டு தொகுதிகள் மட்டுமே வெளி

யாயின. இதுவும் எல்லாத் துறைகளும் அடங்கிய கலைக்களஞ்சியம் ஆகாது.

அபிதான சிந்தாமணி மிக நல்ல முயற்சி. அதில் இலக்கியத்தோடு வேறு ஒருசில விஞ்ஞானத் துறைகளில் பல பொருள்களும் இடம்பெற்றுள்ளன. ஆனால் திட்டமிட்டு எல்லாத் துறைகளையும் சேர்க்க வேண்டுமென்ற முயற்சி அதில் இல்லை. இருந்தாலும் தனி மனிதர் செய்த அந்த முயற்சி பெரிதும் போற்றுதற்குரியதாகும். தமிழ்வளர்ச்சிக் கழகந்தான் முதன் முதலில் விரிவாகத் திட்டமிட்டு, பலருடைய ஒத்துழைப்பைக் கொண்டு எல்லாத் துறைகளும் எல்லாக்கலைகளும் அடங்கியிருக்கும் படியாக ஒரு கலைக்களஞ்சியத்தை உருவாக்க முயன்றது.

கலைக்களஞ்சியத்திற்கு எங்கெங்கெல்லாம் நல்ல குறிப்புகள் அகப்படும், எங்கெங்கெல்லாம் நல்ல படங்கள் அகப்படும் என்று எந்நேரமும் விழிப்போடு பார்த்துக் கொண்டிருக்கவேண்டும். நிறையப் படிக்க வேண்டும். பிறநாடுகளில் உள்ள நிறுவனங்களோடு தொடர்பு கொள்ளவேண்டும். இவற்றிலெல்லாம் எவ்வளவு உழைக்கிறோமோ அந்த அளவுக்கு நல்ல பலன் கிடைக்கும்.

தமிழ்க் கலைக்களஞ்சியம் தொகுதியொன்று 750 பக்கங்கள் கொண்டதாகப் பத்துத்தொகுதிகளில் நிறைவேறியுள்ளது. இந்த வெற்றிக்கு, தலைவர் திரு. தி. சு. அவினாசிலிங்கம் செட்டியார் அவர்களோடு உடனிருந்து உதவிய துணைத்தலைவர் சி. சுப்பிரமணியம், பொருளாளர் திரு. வி. எஸ் தியாகராஜ முதலியார், செயலாளராக விளங்கிய கல்கி. ரா. கிருஷ்ணமூர்த்தி, பேராசிரியர் கே. சுவாமிநாதன் ஆகியவர்களை என்றும் மறக்க முடியாது. வலிமையான அடித்தளம் அமைப்பதில் என் நண்பரும் துணைச்செயலாளராக இருந்தவருமான கல்கி அவர்கள் செய்த பணி மிகப் பெரிது என்று இங்குக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

ஆனால் இந்த முயற்சியில் உள்ள குறைகளை நான் உணர்வேன். குறைகளும், பிழைகளும் முற்றிலும் இல்லாமல் இப்பணியைச் செய்திருக்க இயலாது என்னும் உண்மை இந்தப் பத்துத் தொகுதிகளையும் பரிவோடு நோக்குபவர்களுக்கு விளங்கும். ஆக்டன் என்ற ஆங்கிலப் பிரபு காலமானபோது அவருடைய வாழ்க்கையைப் பற்றி வெளியான குறிப்பு ஒன்று என் நினைவுக்கு வருகின்றது. அவர் மிகப் பெரிய படிப்பாளி. அவருடைய சொந்த நூல்நிலையத்தில் எண்பது ஆயிரம் மிகச் சிறந்த நூல்கள் இருந்தனவாம். அவற்றைப் படிப்பதில் அவர் தம் வாழ்க்கையின் பெரும்பகுதியைப் பயன்படுத்தியவர். உலகப் புகழ்பெற்றுள்ள என்சைக்ளோப்பீடியா பிரிட்டானிக்காவின் பதின்மூன்றாவது திருந்திய பதிப்பு வெளியானபோது அப்பதிப்பை மேற்போக்காகப் பார்த்தே அவர் ஐநூற்றுக்கும் அதிகமான பிழைகளைச் சுட்டிக் காட்டினாராம். அந்த என்சைக்ளோப்பீடியா ஏராளமான பொருட்செலவிலே மிகவும் கவனமாகப் பதிப்பிக்கப்படுவதாகும். அதனாலேயே உலகத்திலே அதற்கொரு தனியிடம் கிடைத்திருக்கிறது. ஆனால் அதன் பதின்மூன்றாவது பதிப்பிலும் கூடப் பிழைகள் நேரிடக்கூடுமானால் தமிழில் செய்த இப்புதிய முயற்சியின் முதற் பதிப்பைப் பற்றிச் சொல்லவேண்டுவதில்லை. புதிய பதிப்புகள் வரவர இக்கலைக்களஞ்சியமும் மேலும் செம்மை பெற்றுச் சிறப்புடன் தமிழ் அன்னைக்கு ஒரு நல்ல அணியாக விளங்கும்.

கலைக்களஞ்சியம் என்பது முற்றுப் பெற்ற நூலாக என்றும் இருக்கமுடியாது. ஆண்டுதோறும் உலகில் புதிய உண்மைகள் வெளிப்பட்டுக்கொண்டே யிருக்கும்; புதிய கருத்துகள், புதிய முயற்சிகள் எல்லாம் தோன்றும். இன்னும் சேர்க்கப்படாமல் விடப்பட்டுள்ள ஏராளமான பொருள்களும் இருக்கின்றன. அவைகளையெல்லாம் திரட்டிப் பல இணைப்புத் தொகுதிகள் வெளியிட்டால்தான் கலைக்களஞ்சியம் ஆராய்ச்சியாளர்களுக்கும், மற்றவர்களுக்கும் பெரிதும் பயன்படும்.

கலைக்களஞ்சியத்தைப்போல வேறு பல கலைக்களஞ்சியங்களும் வெவ்வேறு துறைகளில் தனிப்பட்ட சிறப்போடு உருவாக வேண்டும். திரு. தி. சு. அவினாசிலிங்கம் செட்டியார் அவர்களுடைய ஆர்வத்திற்கு அளவில்லை என்று மகிழ்ச்சியோடு மீண்டும் கூறிக் கொள்கிறேன். இப்பொழுதே

'குழந்தைகள் கலைக்களஞ்சியம்' ஒன்றைப் பத்துத் தொகுதிகளில் வெளியாக்க அவர் ஏற்பாடு செய்திருக்கிருர். இரண்டு தொகுதிகள் இதுவரை வெளிவந்துள்ளன. மற்றத் தொகுதிகளுக்கான பணி நடைபெற்று வருகின்றது.

தமிழின் ஆக்கம் குறித்துச் செய்ய வேண்டிய வேலைகள் நிறைய இருக்கின்றன. அவற்றையெல்லாம் தனி மனிதர்களும், நிறுவனங்களும் செய்து முடிக்கும்போது தான் நமது தாய்மொழி இன்னும் நல்ல சிறப்பெய்தும். இக்கால உலகுக்கு ஏற்ற வாறு புதிய அறிவியல்களெல்லாம் தமிழில் தோன்ற வேண்டும். "சென்றிடுவீர் எட்டுத் திக்கும்-கலைச்செல்வங்கள் யாவும் கொணர்ந் திங்குச் சேர்ப்பீர்" என்று பாரதியாரோடு சேர்ந்து பாடி முழங்குவோம். அத்துடன் செயலிலும் ஈடுபடுவோமாக.

கலைக்களஞ்சியங்கள் வெளிவருவது மட்டும் தமிழில் ஆக்கத்திற்குப் போதுமா? ஒவ்வொரு துறையிலும் மிகப் பல நூல்கள் வெளியாகவேண்டும். ஒவ்வொரு நூலும் ஒவ்வொரு துறையில் உள்ள பலவேறு பிரிவுகளைப் பற்றி விரிவாக அமையவேண்டும். இன்றுவரையும் கண்டுள்ள உண்மைகளையெல்லாம் கொண்டவையாக அவை விளங்க வேண்டும். பௌதிகம், வேதியியல், விலங்கியல், தாவரவியல் என்று பலவாகப் பெருகியுள்ள அறிவியல்களிலும் அவற்றின் பிரிவுகளிலும் மிகச் சிறப்பான நூல்களெல்லாம் தமிழில் வெளியாகும்போதுதான் தமிழில் இலக்கியம் மட்டுமின்றி மற்ற வளங்களும் செழித்துப் பெருகித் தமிழ்மக்களுக்கு ஏற்றமளிக்கும்.

நம்மிடையே வெவ்வேறு அறிவியல் துறைகளிலே சீரிய புலமை வாய்ந்தவர்கள் இருக்கிருர்கள். ஆங்கிலத்தின் வாயிலாகவோ மற்ற மொழிகளின் வாயிலாகவோ அவர்கள் தாம் பெற்ற அறிவைத் தமிழில் வழங்க முன்வரவேண்டும். தமது ஆராய்ச்சிகளால் கண்ட உண்மைகளையும் தமிழில் எழுதவேண்டும். இன்றைய நிலையிலே அவர்களுக்குத் தமிழ்ப் பயிற்சி சிறிது குறைவாக இருக்கலாம். ஆனுல் அவர்கள் தமிழ்ப்புலவர்களின் ஒத்துழைப்புடன் இந்த அரும் பணியைச் செய்யமுடியும். இது தமிழ்நாட்டு அறிஞர்களின் தலையாய கடமை என்று வற்புறுத்திக் கூற விரும்புகிறேன்.

"தமிழனுடைய புகழ் இன்று சற்று மங்கியிருக்கலாம்; ஆனுல் 'இன்று' என்பது நிலையானதன்று. நாளை வருவதே நிலையானது. அன்று தமிழனுடைய புகழ் ஓங்குவது திண்ணம். அப்படி ஓங்காமற் போனுல் என்பெயரை மாற்றி அழையுங்கள்" என்ற பொருள்படப் பாரதியார் உணர்ச்சியோடு கூறியதை உள்ளத்திற்கொண்டு ஆர்வத்தோடு பணி செய்வோமாக.

***"எண்ணியர் எண்ணியாங் கெய்துப எண்ணியார் திண்ணிய ராகப் பெறின்."***

---

## கலைக்களஞ்சியம் உருவாவதற்குத் தாய்மொழி பயற்சிமொழியாதல் இன்றியமையாமை

*'பிரித்தானியா கலைக்களஞ்சியம் ஆங்கிலத்தில் முதன்முதலில் வெளியிடப்பெற்றதாகும். இப்போது 14ஆம் பதிப்பு வெளிவந்துள்ளது. நிலையான பதிப்புக் குழு அதற்கெனவே இயங்கி வருகிறது. பல துறைகளைப் பற்றிய பொருள்கள் பொதுவாக இதன்கண் விளக்கப்பெற்றிருக்கின்றன. சில தனித் துறைகட்கும் கலைக்களஞ்சியங்கள் வெளிவந்திருக்கின்றன. ஒவ்வொரு துறையிலும் அவர்தம் மொழியிலே சிறந்த புலமையும், கலையறிவும் பெற்ற பேரறிஞர்கள் ஆயிரக்கணக்காக இருப்பதால் கலைக்களஞ்சியங்களைத் தொகுத்துப் பிறநாட்டினர் எளிதாக வெளியிடுகின்றனர். நம் நாட்டில் பயிற்சி மொழி ஆங்கிலமா யிருத்தலினுல் கலையறிவு பெற்றவர்கட்குத் தமிழறிவு போதிய அளவு இல்லாமையாலும் ஆங்கிலம் வேறு மொழியாதலால் அதிலும் திருந்திய புலமை பெற்றவர்களெனச் சொல்லுவதற்கில்லை யாதலாலும், தமிழில் பல பொருள்கள் பற்றிய கலைக்களஞ்சியம் வெளியிடுவது எளிதாக இல்லை.*

---

# பொன்னும் பொன்வயலும்

[பேராசிரியர் திரு. வ. பெருமாள், எம்.ஏ., பி.டி.]

*தஞ்சை மாவட்டம், கொரடாச் சேரியில் 30-9-1934இல் தோன்றியவர் இவர். தந்தையார் பெ. வடமலை; தாயார் கோவிந்தம்மாள், கொரடாச்சேரி கழகப் பள்ளியிலும் குடந்தை அரசினர் கல்லூரியிலும் பயின்று, பின் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் படித்து எம்.ஏ., பட்டம் பெற்ருர். பல பேச்சுப் போட்டிகளிலும் கட்டுரைப் போட்டிகளிலும் பரிசுகள் பெற்றுள்ளார். 'தமிழ்ப் பழமொழிகளை'ப் பற்றிப் பல்கலைக் கழக மானியக் குழுவின் ஆய்வுத்திட்டத்தின் கீழ் ஆராய்ந்துள்ளார். இலங்கை அரசினர் ஆசியக் கலைமன்ற உறுப்பினர். பல்வேறு மலர்களிலும் திங்களிதழ்களிலும் நூற்றுக்கணக்கான ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதியுள்ளார். 'தமிழ் இலக்கியச்சோலை' 'வாழ்க்கையும் விளையாட்டும்' இவை இரண்டும் இவரியற்றிய நூல்கள். கன்னட மாநிலத்திலுள்ள கோலார் தங்க வயல் முதல் நிலைக் கல்லூரியின் தமிழ்ப் பேராசிரியராக இவர் தற்பொழுது திகழ்கின்ருர்.*



உலகத்தில் பல உலோகங்கள் உண்டு. அவற்றுள் தலையாயது பொன். பொருளாதாரத் துறையிலும் மனித எண்ணத்திலும் பொன்னுக்குத் தனிமதிப்பு உண்டு. உலக நாடுகள் அனைத்தும் பொன்னை மதித்துப் போற்றுகின்றன என்பது அனைவரும் அறிந்த உண்மை. பொருளின் சின்னமாகப் பொன் விளங்குகின்றது. எனவே நம் முன்னேர் பொருளாசையைப் 'பொன்ஞசை' என்று குறிப்பிட்டனர். மண்ஞசை, பெண்ஞசை, பொன்ஞசை என்னும் மரபுத் தொடர் இவண் நினைவுகூரத் தக்கது. திருமணத்தின்போது மணமகளுக்கு அணிவிக்கின்ற மங்கலஅணி (தாலி) பொன்ஞல் ஆனது என்பது எல்லோரும் அறிந்த உண்மை. எனவே, பொன் விலையுயர்ந்த உலோகமாகத் திகழ்வதுடன் மங்கலமான உலோகமாகவும் திகழ்கின்றது. சுருங்கக் கூறுமிடத்து மனிதன் பொருளாதாரக் கண்ணேட்டத்திலும் பொன்னைப் போற்றுகின்ருன். உணர்ச்சி அடிப்படையிலும் போற்றுகின்ருன். பொன் (தங்க பஸ்பம்) மருந்தாகவும் பயன்படுகின்றது.

பண்டைத் தமிழர்கள் பொன்னை நன்கு ஆய்ந்து அதைச் சாதரூபம், கிளிச்சிறை, ஆடகம், சாம்பூநதம் என்று நான்காக வகுத்துள்ளனர் என்பதைச் சிலப்பதிகாரத்தின் வாயிலாக அறியலாம். (சிலம்பு : 14 : 201-202) இந்நால்வகைப் பொன்னிலும் சாம்பூநதம் தலையாயது என்பதைப் 'பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புநதம்' என்னும் திருவள்ளுவமாலையால் அறியலாம். பொன்னை நன்கு அறிந்து போற்றிய முதன்மையான நாடு தமிழகம் என்பதைப் பல்வேறு சான்றுகள் மெய்ப்பித்த வண்ணம் இருக்கின்றன. கண்ணும் கருத்துமாகப் போற்றத் தக்க பொருளுக்கு உவமையாகப் பொன்னைக் குறிப்பிடுவது மரபு. 'பொன்னேபோல் போற்றி' என்னும் மரபுத்தொடர் இங்கு நோக்கத் தக்கது.

> "முன்னேர் மொழிபொருளே யன்றி
> அவர் மொழியும்
> பொன்னே போல் போற்றுவம்
> என்பதற்கும்"

என்னும் நன்னூல் நூற்பாவும் இங்குச் சிந்திக்கத்தக்கது.

கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் முதலிய நவமணிக்கு இல்லாத

தனிச்சிறப்பு பொன்னுக்கு உண்டு. சான்றோர் பொருள்மொழியை முத்துமொழி என்றோ பவளமொழி என்றோ குறிப்பிடுவதில்லை. பொன்மொழி (Golden words) என்றுதான் குறிப்பிடுகிறோம். நல்ல உள்ளம் படைத்தவனை மரகதமானவன் என்றோ கோமேதகம் போன்றவன் என்றோ சொல்லுவதில்லை. தங்கமானவன் என்றுதான் குறிப்பிடுகிறோம். இம்மரபு ஆங்கிலத்திலும் (as good as gold) உண்டு. இவை யாவும் பொன்னின் மாண்பை விளக்குகின்றன.

பொன்னை அடிப்படையாகக் கொண்டு தமிழ் உலகத்தில் எழுந்த சிறப்புப்பெயர்கள் பல உண்டு. பொன்னுசாமி, பொன்னம்பலம், பொன்னையா, பொன்னப்பன், பொன்னரசன், தங்கராசன், தங்கதுரை, தங்கசாமி முதலிய ஆண்பாற் சிறப்புப் பெயர்களும்; பொன்னம்மாள், பொன்மணி, பொன்னுத்தாள், தங்கரத்தினம், தங்கம்மாள் முதலிய பெண்பாற் சிறப்புப் பெயர்களும்; தங்கம் தங்கமணி போன்ற பொதுப்பாற் சிறப்புப் பெயர்களும் தமிழர்களுக்கு இருப்பதை நாம் காணலாம்.

பொன்னுக்கும் பெண்ணுக்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு. கோவலன் கண்ணகியை நோக்கி 'மாசறு பொன்னே' என்று அன்புடன் அழைத்ததைச் சிலம்பு வாயிலாக அறியலாம். பெண்ணுக்குப் பொன்னணி பூட்டினுல் பெண்ணின் உளக் குறையும் உடல் குறையும் நீங்கி அழகு சிறக்கும். 'பெண்ணின் கோணல் பொன்னிலே நிமிரும்' என்பது பழமொழி. பெண்களுக்குப் பொன் என்றுல் உயிர். மகளிர்க்குப் பொன்மேல் உள்ள காதலை ஏட்டினுல் எழுதவோ வாயினுல் சொல்லவோ இயலாது; உள்ளத்தால் தான் உணர இயலும். அத்தகைய உணர்ச்சி மிகுந்த காதல். பொன்னை அடிப்படையாகக் கொண்டு எழுந்த மொழிகள் தமிழ்மொழியில் பொன்மொழிகளாகவும் பழமொழிகளாகவும் காட்சியளிக்கின்றன. 'பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்னும் பழமொழிக்கேற்பச் சில வற்றை மட்டும் இங்கே காணலாம்.

*பொன் அகப்பட்டால் பொன் முடியத் துணி அகப்படாதா ?*

*பொன் ஆபரணத்தைப் பார்க்கிலும் புகழ் ஆபரணமே பெரிது.*

*பொன் கத்தி என்று கழுத்தை அறுத்துக் கொள்ளலாமா ?*

*பொன் காத்த பூதம் போல.*

*பொன்னுை மனத்தைப் புண்ணுக்க லாமா ?*

*பொன் குடத்திற்குப் பொட்டு இட வேண்டுமா ?*

*பொன் வைக்கிற இடத்தில் பூவையாவது வைக்க வேண்டும்.*

*பொன் காய்த்த மரம் போல் இருக்கிருள்.*

*பொன்னின் குணம் போமா பூவின் மணம் போமா?*

*தங்கம் புடத்தில் வைத்தாலும் தன்னிறம் போகாது.*

*மின்னுவதெல்லாம் பொன்னல்ல.*

(All that glitters is not gold)

*மாமியார் உடைத்தால் மண்கலம் மருமகள் உடைத்தால் பொன்கலம்*

*பெண்ணுக்குப் பொன் இட்டுப் பார், சுவர்க்கு மண் இட்டுப் பார்.*

மேற் குறிப்பிட்ட பொன்மொழிகளாகிய பழமொழிகள் நீதி மொழிகளாகவும் விளங்குகின்றன என்பது தேற்றம்.

பொன் வேலைக்கலை மிகப் பழங்காலந் தொட்டு இருந்து வருகின்றது என்பதற்குச் சான்றுகள் பல உண்டு. பொற்கொல்லர், உருக்குத் தட்டார், பணித்தட்டார் ஆகியோர் பொற்றெழிலில் ஈடுபட்டிருந்த முப்பிரிவினர் என்பதைச் சிலப்பதிகாரம் உரைக்கின்றது. (சிலம்பு 16 : 105-110) பண்டைத் தமிழர்கள் உச்சிமுதல் உள்ளங்கால்வரை பல்வேறு பொன்னணிகள் அணிந்திருந்தனர். பொன்முடி, கழுத்துமாலை, கம்மல், தொங்குசரம், கொண்டைபில்லை, சடைபில்லை, மகரிகை, மதாணி, சுட்டி, முகசம்பல், நாகரம், சவடி, சரப்பளி, ஆரம், சுறவுக்குழை, கங்கணம், மோதிரம், சங்கிலி, தோடு, குண்டலம், கடுக்கன், கணையாழி, கொத்துச் சரம், காப்பு, கைவளை, கண்டி, கடகம், மேகலை, சிலம்பு, அரைஞாண், நாகபில்லை, முன்பில்லை, சந்திரபில்லை, பின்னல் அணி, ராக்கடி, பொன்வடம், சன்னவீரம், ஒட்டியாணம், திருகு, மூக்குத்தி, புலாக்கு, நாகவொற்று, பாசுபந்து, அட்டிகை, பதக்கம், கிள்ளட்டிகை, காரை, பூச்சிக்கூடு, தண்டட்டிகை, நாகபடம் முதலியவை பண்டைத் தமிழர் அணிந்திருந்த பொன்ன-

ணிகளில் குறிப்பிடத் தக்கவை. மட்டசுத்த வேலை, குந்தனவேலை, கட்டடவேலை, நகாசு வேலை, மின்னக்காய்ச்சு வேலை, பிடிப்போ கரை வேலை, கசை வேலை, நிறத்தகட்டு வேலை, முலாம்வேலை என்று பொற்கலை ஒன்பது பிரிவுகளைக் கொண்டது. பண்டைத் தமிழர் பொன்னால் பல்வேறு அணிகலன்கள் செய்தது போல் பல்வேறு பெரிய பொருட் களும் செய்திருக்கின்றனர். வேந்தர் அரண் மனைகளிலும் வள்ளல்கள் பெருமனைகளிலும் உள்ள உண்கலம், செம்பு, குடம், தவலை, பாக்கு வெட்டி, வெற்றிலைப்பெட்டி, தாம் பாளம், குத்துவிளக்கு, சிலை முதலியவை பொன்னாலானவை என்று தமிழ் இலக்கியம் கூறுகின்றது. இவ்வகையான பொருள்களை அடித்து உருவாக்குதல் (hammering), பதிப்புச் சித்திர வேலை (inlaying) புறணிச் சித்திரவேலை (incrusting), சரிகைச்சித்திர வேலை (filigree), புடைப்பச்சு வேலை (embossing), வார்ப்புவேலை (casting) என்று ஆறுவகையில் உருவாக்கினர்.

இந்தியாவின் பண்டைப் பொன்சுரங்க வரலாறு நமக்குத் தெளிவாகத் தெரிய வில்லை. கி. பி. முதல் நூற்றாண்டில் வாழ்ந்த உரோமாபுரி வரலாற்றாசிரியர் பிளினி 'பொன் சுரங்கத்திலும் வெள்ளிச் சுரங்கத் திலும் இந்தியர்கள் மிகப் பரவலாகப் பணி புரிகின்றார்கள்' என்று குறிப்பிட்டுள்ளார். ["In the country of the Nareae (Nairs) beyond the mountain Capitalia (Mt Abu in Rajputana) there are numerous mines of gold and silver in which the Indians work very extensively."] இத்தகைய ஒரு சில குறிப்புக்களைத் தவிரப் பண்டைப் பொன்சுரங் கத்தின் தொடர்ச்சியான வரலாறு நமக்குப் புலனாகவில்லை.

கன்னட மாநிலத்தில் உள்ளது கோலார் மாவட்டம். இம்மாவட்டம் தமிழக எல்லையை ஒட்டி அமைந்திருக்கின்றது. இம் மாவட்டத்தின் தலைநகர் கோலார். இம் மாவட்டத்தில் தான் பொன்வயல் (கோலார் தங்கவயல்) அமைந்திருக்கின்றது. கோலார் தங்கவயல் (K.G.F.) கோலார் நகர எல்லைக் குள் இருப்பதாகப் பலர் நினைத்துக் கொண் டிருக்கிறார்கள். அது தவறு. கோலார் தங்கவயல் கோலார் நகர எல்லைக்குள் இல்லை. கோலார் நகரத்திலிருந்து 18 மைல் தென் கிழக்கில் உள்ளது. அயர்லாந்து நாட்டுப் படை வீரரான மைக்கல் எப். லாவல்லே (Michael F. Lavelle) முதன் முதலாக 1871இல் இங்கு வந்து சுரங்கப் பணியில் ஈடுபட்டார். இத்துறையில் அவரே முன்னோடியாக இருந்தார் என்று சொல்ல லாம். அதன் பிறகு 1877இல் அம்முயற்சியில் ஈடுபட்டவர் மேஜர் ஜெனரல் டி லா போர் பொஸ்போர்ட் (Maj. Gen. de la Poer Beresford). அதன் பிறகு சென்னை உரிகம் கம் பெனி (Ooregum Company of Madras Ltd.) 10,000 பவுன் மூலதனத்துடன் நிறுவப் பெற்றது. இவ்வாறு தங்கச் சுரங்க நிறு வனத்தை அமைக்கப் பற்பல முயற்சிகள் அவ்வப்போது பற்பல குழுவினராலும் தனிப் பட்டோராலும் மேற்கொள்ளப்பட்டன.

இப்போதுள்ள கோலார் தங்கவயல் நிறுவனத்தை 1880ஆம் ஆண்டில் இங்கி லாந்தைச் சேர்ந்த ஜான் டைலர் (John Taylor) அமைத்தார். இவர் சுரங்கப்பொறி யியல் மரபில் வந்தவர். கோலார் தங்க வயலில் பல சுரங்கங்கள் பணியாற்றின. அவை நாளடைவில் எண்ணிக்கையில் குறைந்து விட்டன. பாலக்காடு (Palaghat), நந்திதுரிகம், உரிகம், சாம்பியன், மைசூர் (மாரிகுப்பம்) முதலிய 5 சுரங்கங்கள் பல்லாண்டுகள் செயல்பட்டன. 1931ஆம் ஆண்டில் பாலக்காட்டுச் சுரங்கம் நந்திதுரி-கத்துடன் இணைக்கப்பட்டது. 1953ஆம் ஆண்டில் உரிகம் சாம்பியன் சுரங்கத்துடன் இணைந்தது. சிக்கன நடவடிக்கையாக 1965ஆம் ஆண்டில் மாரிகுப்பத்தில் உள்ள மைசூர் சுரங்கம் சாம்பியன் சுரங்கத்துடன் இணைக்கப் பெற்றது. தற்பொழுது இரண்டு சுரங்கங்கள் செயல்படுகின்றன. இரண்டிற் கும் தனித்தனி மேலாளர் (Superintendent) உண்டு. இரு சுரங்கங்களும் (M i n e s) சேர்ந்ததுதான் தங்கவயல் (Gold Field). இரு சுரங்கங்களும் அடங்கிய தங்கவயலுக்கு நிர்வாக ஆட்சியாளர் (Managing Director) இருக்கின்றார்.

தங்கவயல் சுரங்கத் தொழிலைத் தேசிய மயமாக்க வேண்டும் என்னும் கொள்கையை மைசூர் அரசு மேற்கொண்டது. அதற்கேற்ப ஜான் டைலர் குடும்பத்தாரால் (John Taylor & Sons) நடத்தப் பெற்று வந்த தங்கவயல் நிறுவனத்தை 29-11-1956இல் மைசூர்

அரசு ஏற்றது. அதற்கு ஈடாக மைசூர் அரசு ஜான் டைலர் நிறுவனத்தார்க்கு ரூ. 1,64,00,000 கொடுத்தது. 1-12-1962இல் தங்கவயல் மைசூர் மாநில ஆட்சியிலிருந்து மத்திய அரசு ஆட்சியின்கீழ் மாறிற்று. இப்போது மத்திய அரசு நிதி அமைச்சகத்தின் ஆட்சிப் பொறுப்பில் தங்கவயல் நிறுவனம் செயல்படுகின்றது. கோலார் தங்கவயலில் 13,500 பேர் பணி புரிகின்றனர்கள். இவர்களில் ஏறக்குறைய 12,000 பேர் சுரங்கத் தொழிலாளர்கள். சுரங்கத் தொழிலாளர்களில் 95 விழுக்காடு தமிழர்களே என்பது குறிப்பிடத்தக்கது. இவர்களில் பெரும்பாலோர் வடஆர்க்காடு மாவட்டத்திலிருந்து இங்குக் குடியேறியவர்கள்.

தங்க வயலிலுள்ள சுரங்கங்கள் ஆயிரக் கணக்கான அடி ஆழம் உள்ளவை. ஆழத்தின் எல்லை 11,000 அடி (ஏறக்குறைய 2 மைல்). சுரங்கத் தொழிலாளர்கள் மிகத் துணிவுடன் தம் ஆருயிரையும் பொருட்படுத்தாமல் இவ்வளவு ஆழம் உள்ள சுரங்கத்திற்குச் சென்று தங்கத்தை வெட்டி எடுக்கின்றனர்கள். சுரங்கத்தின் உள்ளே சென்று மேலே மீண்டும் உயிருடன் வருவோம் என்னும் நம்பிக்கை அவர்களுக்கில்லை. எந்த நேரத்திலும் சுரங்கப் பாறை இடிந்து விடும். அவ்வளவு ஆபத்தான நிலை. சுரங்கத் தொழிலாளர்கள் வெளி உலகத்தை அடியோடு மறந்து மரணத்திற்கிடையே பணிபுரிகின்றனர்கள். உயிருடன் மீண்டும் வெளியே வந்தால்தான் சம்பளம் பெறலாம். அத்தகைய மரணப் போராட்டப் பணி சுரங்கத் தொழில். "கீழே போனால் பிணம். மேலே வந்தால் பணம்" என்னும் மொழி கோலார் தங்கவயலில் சுரங்கத்தொழிலாளர்களிடையே தோன்றிய அனுபவ மொழியாகும். சுரங்கத்துக்குள் சுரங்கப் பணியிடையே தோன்றிய இச்சுரங்கமொழி பழமொழியாகி வேரூன்றி விட்டது. கோலார் தங்க வயலில் பணியாற்றுகின்ற சுரங்கத் தொழிலாளர்கள்-அவர்தம் குடும்பத்தினர்-ஏன்? இந்நகரில் உள்ள தமிழர் எல்லோருக்கும் இப்பழமொழி நன்கு தெரியும். பொன் சுரங்கத்தில் பொன் எடுக்கும் தமிழர்கள் நாவில் தோன்றிய மொழி வெறும் பழமொழியாக மட்டும் நின்று விடாமல் பொன் மொழியாகவும் விளங்குகின்றது.

கோலார் தங்கவயல் என்னும் பெயர், நிறுவனத்தையும் இந்நகரத்தையும் சேர்த்தே குறிக்கும். பங்காருபேட்டை வட்டத்தைச்(தாலுக்கா) சேர்ந்த இந்நகரத்தில் இராபர்ட்சன் பேட்டை, ஆண்டர்சன் பேட்டை ஆகிய இரு உள்நகரங்கள் இருக்கின்றன. பாரத மண்வாரி இயந்திரத் தொழிற்சாலை (Bharat Earth Movers Ltd.) 1967ஆம் ஆண்டில் கோலார் தங்கவயலை ஒட்டி நிறுவப்பெற்றுள்ளது. தொழிற்சாலையும் குடியிருப்பும் சேர்ந்த அப்பகுதி பெமல் நகரமாகக் (BEML Nagar) காட்சியளிக்கின்றது.

அரசியல் அமைப்பில் கோலார் தங்க வயல் கன்னட மாநிலத்தைச் சேர்ந்திருந்தாலும் மொழிக் கண் கொண்டு நோக்குமிடத்து இது தமிழகத்தில் உள்ள நகரைப் போலவே தோன்றும். இங்குப் பல மொழியினர் வாழ்ந்தாலும் அவர்களில் பெரும்பாலோர் தமிழர்களே. விமோசனம், தமிழன், தொழிலாளி, சனதா, குறள் மலர், மயில், சனநாயகம், அதிர்ஒலி, தென்னாடு, சிறிய புட்பத்தூதன், நல்லூழியன், அண்ணா முதலிய தமிழ் ஏடுகள் (பத்திரிகை) கோலார் தங்க வயலிலிருந்து வெளியானவை. பண்டிதமணி ஜி. அப்பாதுரையார், திரு. இ. நா. அய்யாக் கண்ணுப் புலவர், குறள் மலர் ஆசிரியர் அ. இரத்தின சபாபதி, மயில் ஆசிரியர் திரு. எஸ். ஐ. அருள்தாசன் ஆகியோர் இத்நகரத்தைச் சேர்ந்த குறிப்பிடத்தக்க தமிழ் அறிஞர், எழுத்தாளர்கள். வித்துவான் பட்டம் பெற்ற 15 தமிழாசிரியர்கள் கோலார் தங்க வயலிலுள்ள பல்வேறு பள்ளிகளில் தமிழ்ப் பணியாற்றுகின்றனர். இங்குள்ள முதல் நிலைக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியர் இருவர் பணியாற்றுகின்றனர். சுருங்கக் கூறுமிடத்துக் கோலார் தங்கவயலைக் கன்னடநாட்டுத் தமிழகம் என்று சொல்லலாம்.

தமிழைப் பொன்னே போல் போற்றும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தன் பொன் விழாவைச் சிறப்பாகக் கொண்டாடிப் பொன் மலர் வெளியிடும் பொன்னான நாளில் பொன் வயலில் வாழ்கின்ற பொன்னான மக்களின் சார்பில் என் அகங்கனிந்த நல் வாழ்த்தைப் புலப்படுத்துகின்றேன்.

---

# சேக்கிழார் காட்டும் நீதிமுறை

(திரு. டாக்டர் கா. மீனாட்சிசுந்தரம், எம்.ஏ., எம்.லிட். பி.எச்டி.]

கோயமுத்தூர், வெள்ளக்கிணறு எனும் ஊரிலுள்ள ஞான மணிப்பண்ணைக் குரியவரான டாக்டர் மீனாட்சிசுந்தரனாரின் தந்தையார் தவத்திரு முருகானந்தர் என அழைக்கப்பெறும் வி. ஆர். காளியப்ப கவுண்டர், தாயார் காளியம்மையர். பிறந்தது 12·7 1925இல், கோவை யூனியன் உயர்நிலைப் பள்ளியிலும் அரசு கலைக்கல்லூரியிலும் பயின்றவர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ் பயின்று எம்.ஏ., பட்டமும், எம்.லிட்., என்னும் ஆராய்ச்சிப்பட்டமும் பெற்றார்.



மேனாட்டறிஞர்களின் தமிழ்த் தொண்டு பற்றி ஆய்ந்து 'டாக்டர்' பட்டம் பெற்றார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஏழாண்டுகள் பணியாற்றிய பின் சென்னை மாநிலக்கல்லூரி, கோவை அரசுக் கலைக் கல்லூரி களில் தமிழ்த்துறைத் தலைவராக 11 ஆண்டுகளாகத் தொண்டாற்றியுள்ளார். தற்பொழுது சேலம் கலைக் கல்லூரி முதல்வ ராகத் திகழ்கிறார். இவர்தம் பாரதி கவிதை பற்றிய ஆய்வு நூல் ஆங்கிலத்தில் வெளியாகி யுள்ளது.

உழவன் நிலத்தில் விதைகளை விதைத்துப் பயனை எதிர்பார்த்து நிற்கிறான். விதைகள் முளைக்கும் போதே, அவன் விதைக்காத களைகள் செழித்து வளர்கின்றன. களைகட்டல் அவன் கடனாகிறது. செடிகள் வளர்ந்து ஓங்கிப் பயன் தருவதற்குள் பல புழுப் பூச்சிகள் அவற்றை அழிக்க முயல்கின்றன. அதனைத் தடுக்க, உழவன் மருந்து வகைகளைப் பயன்படுத்தி, பெரு முயற்சி செய்கின்றான். களைகளோ முளைகளோ, அவன் விரும்பி வந்தன அல்ல; ஆயினும் அவற்றை நீக்க அவன் முயல வேண்டியவனாகின்றான். இவ்வாறு களையும் நோயும் தோன்றுவானேன்? தோன்றுகின்றன எனச் சொல்வதல்லால் மூலத்தை மனித மூளை இதுவரை கண்டுபிடிக்கவில்லை. ஆனால் களையையும் நோயையும், நீக்க மனிதன் முயன்று ஓரளவு வெற்றி பெற்றுள்ளான்.

உலகில் வேளாண்மையைப் போலவே மக்கள் சமுதாயமும் அமைந்துள்ளது. பல வகைக் களைகள் முளைக்கின்றன. மூலச் செடியினை வளராமல், வாழாமல் தடுக்கின்றன. மனிதர்களுள் சிலர் ஒழுங்கை விட்டுக் களைகளாக மாறுகின்றனர். அந்த மாற்றத்தை மாற்ற ஓர் ஒழுங்கு தேவைப்படுகிறது. அந்த ஒழுங்குகளைச் சட்டம் என்று பெயரிட்டு அழைக்கின்றோம்.

நீதி வழங்குவதில் மிக உயர்ந்த நிலையை அடைந்தவர்கள் ஆங்கிலேயர் என்று வரலாறு பேசுகிறது. குற்றஞ் செய்பவன் எவனாயிருந்தாலும், அவனை விளக்கங் கேட்காமல், எக்காரணங் கொண்டும் தண்டிப்பதில்லை என்ற 'மாக்னாகார்ட்டா' கொள்கை அவர்களின் அடிவேர் என எடுத்துக் காட்டப்படும். நீதிமன்றம், நீதிபதி, வழக்காடுவோர், சான்றுகள் ஆகிய பிரிவுகளிலே நீதியை அமைத்து ஆராய்வது அவர்கள் வழக்கம். ஆயின் நம் நாட்டு நீதிமுறை என்ன?

மனுநீதிச் சோழன் நீதி வழங்கிய முறை உலகறிந்த செய்தி. குற்றஞ் செய்தவன் யார் என்பதை நோக்காமல், குற்றத்தின் தன்மையை நோக்கித் தண்டனை தந்தவன் மனுமன்னன். மகன் என்ற எண்ணம் அவனை மருட்டவில்லை. அதேபோலப் பொற்கைப் பாண்டியன் குற்றத் தன்மைக்கு என்ன தண்டனையோ அத்தண்டனையைத் தானே ஏற்றுச் செயல்படுத்திய பொற்செயல் எல்லாரும் அறிந்த ஒன்று. இவை நேரடிக் குற்ற வழக்குகளாகும்.

வழக்குகள் பல மூலங்களிலிருந்து கிளம்பும். தருமநூல், தாயநூல், உலக நூல் ஆகிய அடிப்படையில் (Causes based on common law, rights) கிளம்புகின்ற வழக்குகளை ஒருவகையாகவும், ஒப்பந்த வழக்குகளை (Causes based on agreement) ஒருவகையாகவும் நீதிமன்றங்கள் பிரித்துப் பேசும். அவற்றுள் சேக்கிழார் ஓர் ஒப்பந்த வழக்கை நமக்கு எடுத்துக் காட்டி அலசுகிறார்.

ஒருவருக்கொருவர் விரும்பி மனம் ஒப்பி இசைவிலே நின்று ஓர் உடன்படிக்கை செய்து கொள்வது ஒப்பந்தம் ஆகும். இஃது உலகப் பொது மரபை ஒட்டி இருக்க வேண்டும் என்ற தேவையில்லை. எடுத்துக் காட்டாக, பொது முறையில் நூற்றுக்கு ஆறேகால் விழுக்காடு வட்டி தருதல் வேண்டும் என்ற முறையிருக்க இருவரும் விரும்பினால், இருபத்தைந்து விழுக்காடு தருவதாக ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். எனவே ஒப்பந்தங்கள் உலக வழக்கையோ, மரபையோ ஒட்டி அமைய வேண்டும் என்பதில்லை. இருவரிடையும் ''நின்ற இசைவே'' போதும். சேக்கிழார் காட்டும் இசைவு வழக்கு 'உலகில் இல்லா நெறி' எனச் சுட்டப்படுகிறது.

வழக்கு ஆராயப்படும் இடம் அந்தந்த ஊரிலேயே அமைவது சிறந்தது என்பதைச் சேக்கிழார் நூல் காட்டுகிறது. மணம் வந்த புத்தூரில் வழக்கு ஆராயப்படாமல் திருவெண்ணெய் நல்லூருக்கு மாற்றப்பட்டதில் உள்ள உள்ளீடு நோக்கத்தக்கது. கிழவடிவந் தாங்கி வந்தவன் திருவெண்ணெய் நல்லூரில் நீண்ட காலமாக வாழ்ந்து வருபவன் என்பதையும், அவனுக்குத் தனித்த வீடு உள்ளது என்பதையும், மூதறிஞர்கள் உறுதிப் படுத்துமாறு கேட்பதிலிருந்தே இம் மாற்றத்தின் இன்றியமையாமை நமக்கு விளங்கும்.

ஒப்பந்தங்கள் அசலாகவும், நகலாகவும் வழக்கில் இருந்தன. அசல் ஓலை 'மூல ஓலை' என்றும், நகல் ஓலை 'படி ஓலை' என்றும் குறிக்கப்படுகின்றது. முதிய அந்தணர் முதலில் படி ஓலையையே கொணர்ந்தார். ஆனால் அது கிழிக்கப்பட்டது. பிறகு திருவெண்ணெய் நல்லூரில் மூதறிஞர் முன் மூல ஓலை படைக்கப்பட்டது. நீதி ஆராய்ச்சிக்கு மூல ஓலைகளே நீதிச் சபையாரால் வேண்டப்பட்டன என்பது அறியப்படுகிறது. மூல ஓலையைச் சபை ஆராய்ந்தவிதம் கவனிக்கத்தக்கது. அந்த ஓலை பழையதா, புதியதா என ஆராய்ந்தனர். ஏனெனில் ஆரூரரின் தந்தையின் தந்தை எழுதித் தந்த ஓலையாக முதியவர் வழக்கில் கூறியுள்ளார். அதனால் அவையோர், ''தொன்மை நோக்கி'' முடிவு எடுத்தனர். அந்த ஓலை மாற்றப் பெறுமானால், தெரிந்து கொள்வதற்காக அவ் வோலையில் தம் கையெழுத்தை அங்கு இட்டனர். இதனை 'மேலெழுத்திட்டார்கள்' என ஆசிரியர் குறிக்கின்றார். பிறகு ஓலையில் உள்ள 'கைச்சாத்து' சுந்தரரின் பாட்டனுருடையதா? என ஆராய்ந்தனர். அதற்காக அரண் தருகாப்பில் (Safe custody) இருந்த வேறோர் ஆவணத்தைக் கொண்டுவந்து 'ஆசிலா எழுத்தை' (Genuine and admitted signature and handwriting) 'நோக்கி முதியவன் தந்த மூல ஓலையையும் உடன் ஒப்பு நோக்கி உண்மையை உணர்ந்தனர். இவ்வாறு ஓலைகளை எடுத்துவந்து தருவதற்கும், அவையின் அலுவல்களைக் கவனிப்பதற்கும் ஓர் அலுவலன் இருந்தான். அவனுக்கு அருள்பெறு கரணத்தான் (Clerk of the Court)எனப் பெயர் வழங்கப் படுகிறது.

வழக்காடும்போது அவையினரை விளித்துப் பேசுவது மரபாக இப்பொழுது உண்டு. 'Your Honour' 'My Lord' என்று இக்காலத்தில் வழங்குவது போலவே 'மூதறிவீர்' 'அனைத்துநூலுணர்ந்தீர்' என்பன போன்ற சொற்கள் அவையின்முன் வழங்கப்பட்டுள்ளன.

வழக்கு அவையினர் முன் காரண காரியங்களோடு எடுத்துச் சொல்லப்பட வேண்டும். காண்டல், கருதல், உரை என்ற மூன்று அளவைகளும் பொருந்தச் 'சார'ச் சொல்ல வேண்டும். அஃதோடன்றி அவையின்முன் நிரூபிக்க வேண்டிய முயற்சி 'முறைப்பாடு' (பிராது-complaint) செய்தவனின் வேலையாகும். அவையின் முன்பு 'ஏற்ற வேண்டும்' (burden of proof) என அவையினர் கூறுவது கருதத் தக்கது.

ஆட்சி, ஆவணம், அயலார்காட்சி என்ற மூன்று அடிப்படைகள் வழக்கிற்கு மூலமாய் இருந்தன. தொன்றுதொட்டு வருகின்ற மரபும், இதற்குமுன் இதுபோன்றதொரு

நிகழ்ச்சியில் என்ன செய்யப் பெற்றது என்பதும் ஆட்சியாகும். விதி ஒன்று மீறப் பட்டு அதன் காரணமாக வழக்குமன்றத்தில் தண்டிக்கப்பட்டோ விடுதலை செய்யப்பட்டோ இருந்தால், அந்த வழக்குமன்ற முடிவினையும் கருத்தில் கொண்டே முடிவைப் பிறகு வரும் நீதி அவைகள் எடுக்கும். சுருங்கக் கூறின், முன்னைய மரபையும், வழக்கத்தையும் ஒட்டியது ஆட்சி ஆகும். இருவர் இயைந்து ஒருவருக்கொருவர் தமக்குள்ளே சில நிபந்தனைகட்குட்பட்டு எழுதிக் கையெழுத் திட்டு ஒப்பந்தம் செய்து கொள்வதற்கு 'ஆவணம்' என்று பெயர். இது கட்டாய மாக எழுத்துவழி இருத்தல் வேண்டும். இஃது இருக்குமாயின் ஆட்சி கட்டாயம் இருக்க வேண்டும் என்பதில்லை. அயலார் காட்சி என்பது இக்காலத்தில் சாட்சி என்று சொல்வதோடு ஒக்கும். இதை 'Oral Evidence' என்று கூறுவர். ஒருவர் சொல்லக் கேட்டேன் என்பது வாய்மொழிச் சாட்சி யாகாது. (Hearsay is no evidence) எனவே நேரில் பார்த்தவர்கள் நேராகச் சொன்னால் அதனை வழக்குமன்றம் நேர்மை எனக் கருதும். ஆகவே, ஆட்சி, ஆவணம், அயலார் காட்சி என்ற மூன்று அடிப் படைகள் வழக்காராய்ச்சியில் வேர்களாக இருந்தன.

வழக்கை எடுத்து வாதாடுகின்றவனை 'மன்ருடி' என்று அழைத்தனர். படி யோலையைச் சுந்தரர் கிழித்தபின், முதியவர் 'ஓலையைக் கிழித்தமையே அவன் அடிமை எனக் காட்டும்' என்று வாதமிடுவது அக்கால வழக்காடுமுறையை உணர்த்தும். அவை யோர், சுந்தரரைப் பார்த்து, அடிமையில்லை என்பதற்குத் தான் நியாயங்கள் கூற வேண்டும் எனக் கூறியபொழுது, சுந்தரர் 'நீவிர் அறிவீர்' எனச் சொல்லுவது ஆராய்தற்கு உரியது. 'நீங்களே அறிவீர் கள்; நான் சொல்ல வேண்டுவதில்லை; வேறு வகையில் நிரூபிக்க வேண்டியதும் இல்லை' என்று சுந்தரர் நீதிமன்றத்திற்கு எடுத்துக் காட்டுவது எதிரி வழக்காடும் முறையைக் காட்டும். (A fact which the court can take judicial notice of and which does not require proof)

வழக்குக் கொண்டு வந்தவன் எதிரி யால் துன்புறுத்தப்படுவானாயின், அதனை அவை தடுத்தல் வேண்டும். சுருங்கக் கூறின், வழக்காடுபவனுக்கு அவை பாது காப்பு நல்கவேண்டும் என்பது தெளிவு. படியோலையைச் சுந்தரர் கிழித்த காரணமாக மீண்டும் போய் மூல ஓலையைக் கொண்டுவர முதிய அந்தணர் பாதுகாப்புக் கேட்பது இங்குக் குறிக்கத் தக்கது. "தீங்குற ஒட்டோம்" என்று அவையினர் உறுதி தந்தபின்பே மூல ஓலை கொண்டு வரப் பட்டது.

ஆவணம் மிகச் சுருக்கமாகவும், தெளி வாகவும் பிறழ்வுணர்ச்சி தராமல் எளிமை யாக எழுதப்பட்டது. ஆவணச் சொற்களைக் கவனிப்போமாக :

"அருமறைநாவல் ஆதிசைவன்
ஆரூரன் செய்கை;
பெருமுனி வெண்ணெய் நல்லூர்ப்
பித்தனுக்கு, யானும், என்பால்
வருமுறை மரபுளோரும், வழித்தொண்டு
செய்தற்கு ஓலை
இருமையால் எழுதி நேர்ந்தேன்;
இதற்கு இவைஎன் எழுத்து".

நீதி வழங்கும் முறை நீண்ட கால மாகவே தமிழகத்தில் தலை சிறந்து உயர்ந் திருந்தது. மேலைநாட்டு முறைக்கு எந்த விதத்திலும் குறைந்ததில்லை. தமிழ் இலக் கியங்களையும், கல்வெட்டுக்களையும் துருவி ஆராய்ந்தால், தமிழனின் நீதிமுறை மற்றைய நாடுகளின் நீதிமுறையைக் காட்டி லும் உயர்ந்தது என்று காட்டி மகிழலாம். சீரிய நெறிகள் அவ்வப்போது தனித்துறை யாய் அமைக்கப்பட்டு எழுதப்படாத தாலேயே இன்று அவற்றை எளிய நிலையில் எடுத்துக்காட்ட இயலாதவர்களாக இருக் கிறோம். இடைக்காலக் கல்வெட்டுக்கள் பல்வகைக் குற்றங்களையும் தண்டனைகளை யும் நமக்கு எடுத்துச் சொல்கின்றன. அக் காலத்து வாழ்ந்த சேக்கிழார் அங்கொன்றும், இங்கொன்றுமாக நமக்குக் காட்டியிருப்பது நம் பேறேயாகும்.

# உள்ளுறையும் இறைச்சியும்

[திரு. டாக்டர் மெ. சுந்தரம், எம். ஏ., எம்.லிட். பி.எச்டி.]

திருச்சி மாவட்டம் வேந்தன் பட்டியில், வெ. சி. பழ. மெய்யப்ப செட்டியாருக்கும் பாப்பாயி ஆச்சிக்கும் 21—11—1925இல் தோன்றியவர் இவர். சென்னை முத்தியாலுப்பேட்டை உயர் நிலைப்பள்ளியிலும் மேலைச் சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரியிலும் பயின்றவர். கல்லாடத்தைப் பற்றி ஆய்ந்து எம் லிட். பட்டமும் சங்க இலக்கியத்தில் வரலாற்றுச் சான்றுகளை ஆய்ந்து பி.எச்டி. பட்டமும் பெற்றார். கோனாப்பட்டு உயர்நிலைப்பள்ளியில் ஆசிரியப் பணி தொடங்கி



அண்ணாமலைப் பல்கலைக் கழகம், மதுரைத் தியாகராசர் கல்லூரி ஆகியவற்றில் பணி செய்த பின் தற்பொழுது சென்னை மாநிலக் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராகத் திகழ்கிறார். பல திங்கள், கிழமை இதழ்களில் ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதியுள்ளார். சிறந்த இலக்கியச் சொற்பொழிவாளரான இவர் சிங்கப்பூர், மலேயா, இலங்கை முதலிய வெளி நாடுகளிலும் சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார். பல்வேறு கல்விக் குழுக்களிலும் தமிழகப் புலவர் குழுவிலும் உறுப்பினர் ஆவர்.

ஒரு செய்யுளில் பொருள் நலத்தைச் சிறப்பித்து வரும் அணிநலக் கூறுகளில் உள்ளுறையும் இறைச்சியும் அகத்திணைக்கே உரியனவாகும். இவையிரண்டும் பாடற் பொருளைச் சிறப்பித்து வரும் பண்பில் உவமை போல்வதாகும். இவையிரண்டையும் தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் விளக்கிச் சென்றுள்ளார். இளம்பூரணரும் (நச்சினார்க்கினியரும்?) பேராசிரியரும் இவையிரண்டும் விளக்க முயன்றுள்ளனர். கரந்தைத் தமிழ்ச் சங்க வெளியீடாகிய கட்டுரைக் கோவையில் பெரும் புலவர் வே. வேங்கடராசுலு (ரெட்டியார்) அவர்கள் இறைச்சிப் பொருளை இனிதே விளக்கியுள்ளனர். இவர்களனைவரின் விளக்கங்களைக் கொண்டு உற்று நோக்குங்கால், இவையிரண்டினும் சில ஒற்றுமைகளும் சில வேற்றுமைகளும் அமைந்திருப்பதைக் காண்கிறோம். முதற்கண் உள்ளுறையின் இலக்கணத்தைத் தொல்காப்பியர் வழிநின்று ஆராய்வோம்.

உள்ளுறை: இஃது 'உள்ளுறை உவமம்' என்று அழைக்கப்படுகிறது. ஏனைய உவமைகள் 'ஏனை உவமம்' என்று சுட்டப்படுகின்றன. இவ்விரு வுவமைகளும் ஓர் அகத்திணைப் பாடலை 'இன்ன திணை' என உணர்வதற்குத் துணை செய்யும் என்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். தெய்வம் ஒழிந்த பிற கருப்பொருள்கள் அனைத்தையும் உள்ளுறைக்கு அடிப்படையாகக் கொண்டு பாடலாம் என்பது அவரது கருத்தாகும். பொதுவாக உவமை என்பது கிடந்தவாறே உணரப்படுவதாலும், ஒரு பாடலில் வரும் கருப் பொருள் செய்திகளை உவமை போல அமைத்து அவ் வுவமையின் ஒவ்வொரு கூற்றிற்கும் 'இன்ன பொருள் அமைக' என்று புலவன் உள்ளுறுத்திப் பாடுவது உள்ளுறை உவமம் ஆகும். எனவே, பொருள் (உவமேயம்) வெளிப்படையாகத் தெரியாமல் உட்பொருளாய் அமைந்திருக்கும். அது பாடியவரின் திறமையினாலும் படிப்பவரின் அறிவுக் கூர்மையினாலும் புலப்பட்டு நிற்கும்.

இவ்வுள்ளுறை உவமம் தொன்று தொட்டு வரும் மரபின்படி, படிப்பவர் துணிந்து அறியும்படியாக அமைக்கப்பட வேண்டும். வினை, பயன், உறுப்பு (வடிவம்) உரு (நிறம்), பிறப்பு ஆகியவற்றின் (5) அடிப்படையில் இவ் வுள்ளுறை உவமம் கூறப்படும். இவ் வுள்ளுறை உவமையை யார் யார் எந்த எந்த அளவிற்கு எடுத்தாளுதல் வேண்டும் என்பதையும் ஆசிரியர்

தொல்காப்பியர் வரையறைப் படுத்துகின்றார். தலைவி அவளறிந்த அளவிலும், தோழி அவள் வாழும் நிலத்து எல்லையளவும் அமைந்துள்ள கருப்பொருள்களைக் கொண்டு உள்ளுறை கூறுதற்கு உரியதாகும். தலைவன் தன் பரந்த அறிவுடைமை தோன்றப் பேசுவான். மற்றையவர்கள் அறிவிற்கும் இடம் வரைவு இல்லை. இன்பத்தை மிகு விக்கும் கூற்றிலும், துன்பத்தை மிகுவிக்கும் கூற்றிலும் உள்ளுறை உவமம் வரும். இத னமைப்பு உடனுறை பொருளாக, உவமை யாக, சுட்டாக, நகையாடுதலாக, சிறப் பித்துக் கூறுதலாகப் பாடல்களில் பொருந்தி வரும். (5 பொருள்களில் வரும் என்க.)

**(ஏ - டு) கலி 66. பாடலில் உள்ளுறை:**

மிக்க நீர்ப் பரப்பிலே நீலப் பூக்கள் மலர்ந்திருக்கின்றன. பூக்களை விலைக்கு விற்பவர் வயலிற் பறித்த பூக்களுடன் ஒரு வரிவண்டு ஊருக்குள் வந்தது. அங்கு ஓங்கி உயர்ந்த அழகிய யானையின் மிக்க மதத்தினைக் குடிக்கின்ற வண்டுகள் இப் புதிய வண்டினை வரவேற்றுப் பகற்பொழு தெல்லாம் மதநீரைக் குடிக்கச் செய்தன. காதலர்கள் தழுவிக் கொள்ளுகின்ற கங்குற் பொழுதிலே இவ்வரிவண்டு; பெண்கள் கூந்தலிற் சூடியிருக்கும் முல்லை மலரில் அவ் வண்டு தான் பிரிந்து வந்த பூம் பொய்கையை நினைக்கவே யில்லை. இத் தகைய நீர்வளம் அழகு செய்யும் நல்ல ஊருக்குத் தலைவனே என்று ஒரு தலைமகனைத் தோழி அழைப்பதை மருதக்கலிப் பாட லொன்றில் காணுகின்றோம். தலைவன் ஒருவன் பரத்தையர் சேரியில் காமம் மிக்க பரத்தையரைக் கூடிப் பின்பு பாணருடன் சேர்ந்து பகற்புணர் பரத்தையரை அடைந்து இன்பம் துய்த்து மீண்டும் இரவுப் பொழுதில் இற்பரத்தையரைச் சார்ந்து தலைவியை மறந்தான் என்பது. இதனுள் ளுறைப் பொருளென்று நச்சினார்க்கினியர் எடுத்துக் காட்டி யுள்ளார்.

*விங்குநீர் > பரத்தையர் சேரி*
*நீலப்பூ > காமம் மிக்க பரத்தை*
*பகர்வர் (விலைக்கு விற்பவர்) > பரத்தையரைத் தேரேற்றி வரும் [பாணர்.*
*வண்டு > தலைவன்*
*யானை மதம் > பகற் புணர் பரத்தையர்*
*கங்குல்முல்லை > இற் பரத்தையர்*
*பொய்கை மறத்தல் > தலைவியை மறத்தல்*

இப் பாடலில் "உள்ளுறுத்து இதனோடு ஒத்துப் பொருள் முடிகென உள்ளுறுத்து இறுவதை உள்ளுறை உவமம்" என்ற தொல்காப்பிய நூற்பாவிற் கேற்ப, ஒவ்வோர் உவமைக்கும் உரிய உட்பொருள் உய்த் துணரும் படியாக அமைக்கப் பட்டிருக்கிறது. இங்ஙனம் வருவன உள்ளுறை உவமை எனப்படும்.

உள்ளுறை என்பது ஒன்றனுக்கு ஒன்றை ஒப்பிட்டுக் காட்டத்தக்கதாக இருக்க வேண்டும். இறைச்சியோ ஒரு சார் பொருளுணர்த்துவதே இறைச்சி தானே பொருட் புறத்ததுவே எனினும் உரிப் புறத்ததுவே எனினும் ஒக்கும்; உரியும் பொருளை உணர்த்தும்.

**இறைச்சி :**

"இறைச்சி தானே உரிப்புறத் ததுவே" என்பது இறைச்சியின் இலக்கணத்தைச் சுட்டிக் காட்டும். ஓரகத்திணைப் பாடலின் உரிப் பொருளுக்குத் துணையாக அதன் புறத்தே தோன்றி நிற்கும் குறிப்புப் பொருளே இறைச்சியாகும். திரு. வே. வேங்கடராசுலு (ரெட்டியார்) அவர் களும், "சொற்பொருளுக்குப் புறத்தே தோன்றும் குறிப்புப் பொருள் (வியங்கியம்) இறைச்சி என்பதாம்" என்று விளக்கி யுள்ளார். இறைச்சி என்ற சொல்லுக்குக் 'கருப்பொருள்' என்றே நச்சினார்க்கினியர் உரை எழுதுகின்றார். தொல் - கற்பியல் நூற்பாவில், "இடைச்சுரத்து இறைச்சியும் வினையும் சுட்டி" என்று வருமிடத்தில் இறைச்சி என்ற சொல் பறவை, விலங்கு முதலிய கருப்பொருளைக் குறிப்பதற்கே வழங்கப்பட்டிருக்கிறது. இங்ஙனம் உள்ளுறை போல, இறைச்சியும் கருப் பொருளை இடமாகக் கொண்டு வருகின்ற தாயினும், இஃது உவமை வடிவமாக அமைவ தில்லை. தலைவன் தலைவியரிடையே இருக் கின்ற அன்புணர்ச்சியை வெளிப்படுத்தவே இவ்விறைச்சி என்ற குறிப்புப் பொருள் ஆளப்படுகிறது.

*"அன்புறு தகுவன இறைச்சியுள் சுட்டலும்*
*வன்புறை யாகும் வருந்திய பொழுதே"*

என்னும் இடத்திலும்,

" இடைச்சுரத்து இறைச்சியும் வினையும் சுட்டி
அன்புறு தக்க கிளத்தல் "

என்னும் இடத்திலும் இறைச்சி அன் புணர்ச்சியை வெளிப்படுத்தப் பயன்படும் என்பதைத் தொல்காப்பியர் நன்கு தெளிவுறுத்துகின்றார்.

1. " கான யானை தோல்
நயந் துண்ட
பொரிதாள் ஓமை
வளிபொரு நெடுஞ்சினை
அலங்கல் உலவை
ஏறி ஐயெனப்
புலம்புதரு குரல
புறவுப்பெடை பயிரும்
அத்தம் நண்ணிய
அங்குடிச் சீறூர்ச்
சேந்தனன் கொல்லோ
தாமே யாந்தமக்கு
ஒல்லேன் என்ற
தப்பற்குச்
செல்லா(து) அகறல்
வல்லு வோரே " (குறுந். 79)
[குடவாயிற் கீரத்தனார்]

பொருள் வயிற் பிரிந்த தலைமகனை நினைந்து தலைமகள் குறிப்பிடுங்கால், அவன் போகின்ற வழியில் "புலம்புதரு குரல புறவுப் பெடை பயிரும்" என்று குறிப்பிடுகின்றாள். எனவே, தனிமைத்துன்புடைய பெண்புறு ஓமை மரத்தின் நீண்ட சினையிலே இருந்து தன் ஆண் புறுவை நினைத்துத் தனிமைத் துன்பத்தை வெளிப்படுத்தும் குரலோடு அழைப்பதைக் காணும் தலைவன் எங்ஙனமும் விரைவில் திரும்பி விடுவான் என்பது குறிப்பு. இது கருப்பொருளை அடிப்படையாகக் கொண்டிருப்பதாலும், உயிர்களிடையே காணும் அன்புணர்ச்சியை வெளிப்படுத்துவதாலும், பிரிவுத் துன்பத்தை ஆற்றியிருப்பதற்குப் பயன் படுவதாலும், அவ்வுரிச் செய்திக்குப் புறத்தே இக் குறிப்புப் பொருள் புலப்படுமாறு அமைக்கப் பட்டிருத்தலானும் இஃது ' இறைச்சி ' எனப் படும். மேலும் இஃது உவமை போல அமைந்திலது என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

இறைச்சிக்கும் உள்ளுறைக்கும் இவை அடிப்படை வேறுபாடுகளாகும்.

2. " அடிதாங்கும் அளவின்றி
அழலன்ன வெம்மையான்
கடியவே கனங்குழாஅய்
காடென்றார் அக்காட்டுள்
துடியடிக் கயந்தலை
கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணும்
களிறெனவும் உரைத்தனரே "
— பாலைபாடிய பெருங்கடுங்கோ (கலி. 11)

இக் கலித்தாழிசையில், தலைவன் பிரிந்து சென்ற பாலைநில வழியில் "பிடியூட்டிப் பின்னுண்ணும் களிறு" போன்ற காட்சி பல காண்பானாகலின் விரைவில் திரும்பி விடுவான் என்று தலைவியைத் தோழி வற்புறுத்துவதற்கு இவ்விறைச்சிப் பொருள் பயன்படுகிறது.

3. நற்றிணைப் பாடலொன்றில் தலைவன் பிரிந்து வரும்போது தன் தேர்ப் பாகனைப் பார்த்து முல்லை நிலக் காட்சியொன்றைப் பார்க்கும்படி வேண்டுகின்றான். அங்குக் கான வாரணம் ஆகிய சேவலொன்று மண்புழு ஒன்றைக் கொத்தி எடுத்துக் கொண்டு தன் பெட்டைக் கோழியைப் 'பெருந்தகு நிலையோடு' பார்க்கின்றது. அக் காட்சியைக் காட்டியதன் பொருள், வினைமுற்றிய தானும் அதுபோலத் தலைவியை அடைந்து இன்புற வேண்டும் என்பதாகும். இங்ஙனம் வருகின்ற, அன்புணர்ச்சியை வெளிப்படுத்துகின்ற காட்சிகள் அனைத்தும் வெறும் இயற்கை வருணனைகளாய் இல்லாமல் உரிப் பொருளுக்குத் துணையாகும் குறிப்புப் பொருளைத் தரும்பொழுது இறைச்சி என்று பெயர் பெறுகின்றன. உள்ளுறை தொல்காப்பியர் குறிக்குமாப் போல ஐந்து அடிப் படையில் பிறந்து (வினைபயன் முதலா. 5), ஐந்து வகையாகப் பிரிந்து பல்வேறு வகையினவாகக் கிளைத்து விளங்குகின்றது. இறைச்சி, இடைச்சுரத்திற் காணும் கருப் பொருள்களை அடிப்படையாகக் கொண்டு அன்பின் தன்மையை வெளிப்படுத்துவதாய் அமைகிறது. தொல்காப்பிய மூலத்தையும் உரையாசிரியர் விளக்கங்களையும் அவர்கள் தந்துள்ள எடுத்துக்காட்டுக்களையும் கொண்டு ஆராயும் பொழுது அங்ஙனம் இறைச்சியை ஒரு வரையறைப்படுத்திக் கொண்டு, அல்லாதனவெல்லாம் உள்ளுறை எனக் கொள்ளுதலே பொருத்தமெனத் தோற்றுகிறது.

# சட்டத்தமிழும் நீதித்துறையும்

[திரு மா. சண்முகசுப்பிரமணியம், பி.ஏ., பி.எல்.,]



*நெல்லை மாவட்டத்தைச் சார்ந்த அம்பாசமுத்திரத்தில் மாசிலா மணியாருக்கும் கைலா சத்தம்மையாருக்கும் 28-6-1921 இல் தோன்றியவர். இவர் மதுரை அமெரிக்கன் கல்லூரியிலும் சென்னைச் சட்டக்கல்லூரியிலும் பயின்றவர். வழக்கறிஞராக வாழ்க்கையைத் தொடங்கிய இவர் ஏழுஆண்டுகள் மாவட்டத் துணை நடுவராகப் பணியாற்றிய பின் தமிழக அரசு சட்டப்பேர வைத்துறைத் துணைச் செயலராக நான்கு ஆண்டுகள் செயலாற்றி ஞர். தமிழக அரசின் ஆட்சி மொழிச் சட்டத்துறைக் குழுவின் செயலுறுப்பினராகத் திகழ்கிறார். சட்டத்துறையில் தமிழில் புதுப் புது நூல்களைப் படைத்தவர். குற்றமும் தண்டனையும், சட்ட வியல், தீங்கியல் சட்டம், குற்ற இயல், சட்டத் தமிழ், குறள் கூறும் சட்டநெறி போன்றவை அவை. சிறுவர்க்காகச் சுவைமிக்க நடையில் எழுதவல்லவர். நேரு மாமா, ஆல்பாட் சுவைட்சர், மார்ட்டின் லூதர்கிங் முதலிய சிறுவர் நூல்களை எழுதியவர். இவர்தம் மூன்று நூல்கள் இந்திய, தமிழக அரசின் பரிசுபெற்றவை.*

ஒரு நாட்டு நாகரிகத்தின் வளர்ச்சியைக் காட்டும் சிறந்த சின்னமாக விளங்குவது அதன் மொழியேயாகும். அந் நாட்டு மக்களின் சிந்தனைச் சிறப்பினை, உள்ளத்து உயர்வினை அவர்களது மொழியே எடுத்துக்காட்டுகிறது. சிந்தனை சிறகடித்துப் பறப்பதும், உள்ளத்தின் உயர்வு உரு வெடுத்து ஒளிர்வதும் சொற்களின் துணை கொண்டுதான். அறிவு மணங்கமழும் சொல் லோவியங்கள் இலக்கியங்கள் எனப் போற்றப்பெறுகின்றன.

இவ்விலக்கியங்களே நம் நாட்டின் பண்டைச் சிறப்பினை எடுத்துக்காட்டி நிற்கின்றன. பண்டைச் சிறப்பினைப் பகர்வதோடு இலக்கியங்கள் நின்றுவிடவில்லை. நாகரிக வளர்ச்சியின் அளவினைக் காட்டி அந்த அளவிலிருந்து வளர்ச்சி குன்றிவிடாமல் அதைப் பாதுகாத்து நிற்பவையும் இலக்கியங்களே. குறள் கூறும் அறமும் சிலம்பு இசைக்கும் செப்பமும் நம் முன்னோர்களின் உள்ளத்து உயர்வினைக் காட்டுவதோடு, இன்றும் நம் அறமும் செப்பமும் எந்நிலையில் இருக்க வேண்டும் என்பதை நமக்கு அவை உணர்த்துகின்றன; அந்நிலையில் இருந்து வழுவி விடாது தம்மைத் தாங்கி நிற்கின்றன. இவ்வாறு, சென்ற காலச் சிறப்பின் சின்னமாகவும் இன்றைய சிறப்பிற்கு அரணாகவும் அமைகின்றது, இலக்கியம்.

கால வெள்ளத்திலே கற்கோவில்கள் கரைந்து போகலாம்; ஆனல், சொற்கோவில்களோ சுடர் விட்டு ஒளிர்கின்றன. செயல் திறங்காட்டும் சிற்பங்கள் சிதைந்து விடலாம்; ஆனல், சிந்தனைத்திறம் காட்டும் சீரிலக்கியங்கள் சிதைவதில்லை. கல்லும் மண்ணும் கலந்த கட்டிடங்கள் மக்கி மறைகின்றன; ஆனல், சொல்லும் சுவையும் கலந்த காப்பியங்கள் மறைவதில்லை. இவ்வாறு, மக்களின் மொழிதான் வழி வழி வரும் இணைப்பாக அவர்கள் நாகரிகத்தின் உயிரோட்டமாக அமைகின்றது.

எந்த மக்கள் இனமும் தன் மொழியை மறப்பதில்லை; மறந்தால் அந்த இனம் வாழவோ வளரவோ முடியாது. எனவே தான் 'தாய் மொழி' என்று அதைப் போற்றுகிறோம். உடலை வளர்ப்பவள் தாய் என்றல், உள்ளத்தை வளர்ப்பது தாய்மொழி. பிறந்த குழந்தை முதலிலே வாயால் மடுப்பது தாய்ப்பால் என்றல், அது முதலிலே செவியால் மடுப்பது தாய்மொழி. தாயின் மடியிலே தவழ்ந்து குழந்தையின்

உடல் வளருவது போல் தாய்மொழியின் மடியிலே தவழ்ந்து அதன் உள்ளம் வளருகிறது. தாய்ப்பாலின் ஊட்டம் இல்லாத குழந்தை சவலையாகிறது, தாய்மொழியில் நாட்டம் இல்லாதவனும் சவலையாகி விடுகிருன்.

*  *  *  *

கடந்த இருநூறு ஆண்டுகளாக நாம் அரசியலில் அடிமைப்பட்டிருந்தோம்; நமது தாய் மொழியும் அடிமைப்பட்டது. நம்மை ஆண்டு வந்த அந்நியரின் மொழி ஆளும் மொழியாகவும், ஆளப்பட்டு வந்த நமது மொழி அடிமை மொழியாகவும் ஆயின. இந்த இருநூறு ஆண்டுகளில் அறிவியல் துறைகள் பல வழிகளிலும் வளர்ந்தன. வளர்ச்சியுற்ற அந்த அறிவியல் பற்றியே நூல்கள் நம் தாய் மொழியில் எழுதப்படவில்லை. ஆளும் மொழியான ஆங்கிலத்திலேயே அவை எழுதப்பட்டன, அம்மொழியிலேயே அவை கற்கப்பட்டன. அறிவியல் நூல்கள் அனைத்திற்கும் பயிற்று மொழியாக ஆங்கிலமே இருந்து வந்தது.

நம் நாடு அரசியலில் விடுதலை பெற்ற பின்னர், கல்வித்துறை வல்லுநர்கள் தாய் மொழியிலே கல்வி புகட்டுவதன் இன்றியமையாத் தேவையைக் கண்டனர். அந்நிய மொழியிலே கல்வியைப் புகட்டுவது வளரும் குழந்தைக்குத் தாய்ப்பாலுக்குப் பதிலாகப் புட்டிப் பாலைப் புகட்டுவதை ஒக்கும் என்பதை உணர்ந்தனர். மேலை நாட்டுக் கல்வி முறைகளில் எல்லாம் அந்தந்த நாட்டின் தாய்மொழியே பயிற்சி மொழியாக விளங்குகிறது. எனவே, நம் நாட்டிலும் தாய் மொழியிலேயே கல்வி பயிலுவிக்கும் முறை மேற்கொள்ளப்பட்டது. இந்த முறை முழுதுமாக நடைமுறைக்கு வருவதற்கு இன்னும் சில ஆண்டுகள் ஆகலாம்.

*  *  *  *

அந்நியர்கள் ஆண்டு வந்த நாட்களில் நாட்டின் ஆட்சித்துறை அலுவல்கள் ஆங்கிலத்திலேயே நடைபெற்று வந்தன. மக்களாட்சி முறையிலே மக்களின் மொழியே ஆட்சி மொழியாக வேண்டும் என்ற நிலை ஏற்பட்டது.

1956 ஆம் ஆண்டில் இதற்கெனத் தமிழ்நாட்டில் சட்டம் இயற்றப்பட்டது. தமிழ் மொழியே தமிழ்நாட்டில் ஆட்சி மொழியாகும் என்று அச்சட்டம் விளம்பியது. பல்வேறு ஆட்சித்துறைகளிலும் தமிழ் படிப்படியாகக் கையாளப்பட்டு வருகிறது.

ஆட்சித்துறைகளில் முக்கியமானதும் மக்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டதுமான துறை நீதித்துறையாகும். இந் நீதித்துறையைத் தமிழிலேயே நடத்துவதற்கான முன்னேற்பாடுகள் சில ஆண்டுகளாக நடைபெற்று வருகின்றன. இதற்காக, 1965ஆம் ஆண்டில் சட்டத்துறை ஆட்சி மொழி ஆணைக்குழு ஒன்று நியமிக்கப்பட்டுச் செயலாற்றி வருகிறது.

இந்தக் குழுவில் உயர்நீதிமன்ற முன்னாள் தலைமை நீதிபதி உயர். திரு. மா. அனந்தநாராயணன், ஐ. சி. ஸ். அவர்கள் தலைவராக இருந்து அரும்பணியாற்றினார்கள். இப்போது டாக்டர் மு. வரதராசனார், பன்மொழிப்புலவர் கா. அப்பாத்துரையார், உயர்திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி, எம்.ஏ., பி.எல்., உயர்திரு. சோ. இலக்குமிரதன் பாரதி, எம்.ஏ., பி.எல்., ஆகியோர் உறுப்பினர்களாகவும், உயர்திரு. கு. இராசராம், பி.எஸ்சி., பி.எல்., உதவிச் செயலாளராகவும் பணியாற்றி வருகின்றனர்.

நீதித்துறைக்கு அடிப்படையாக அமைபவை சட்டங்கள். அச்சட்டங்களைத் தமிழிலே ஆக்கினால்தான் நீதி மன்றங்கள் தமிழில் பணியாற்ற முடியும். ஒவ்வொரு சட்டத்தையும் தமிழில் எழுதுவதற்குமுன், எல்லாச் சட்டங்களுக்கும் பொதுவாக உள்ள சட்டச் சொற்களையும், சொற்றொடர்களையும் தமிழிலே ஆக்க வேண்டியது அவசியமாகும். எனவே, சட்டச் சொல்லகராதியைத் தமிழில் எழுதும் வேலை முதலாவதாக மேற்கொள்ளப்பட்டது. 1969 ஆம் ஆண்டில் 'சட்டச் சொல் அகராதி' என்ற நூல் வெளியிடப் பெற்றது. ஆங்கிலச் சட்டச்சொற்கள், சொற்றொடர்கள், அவற்றின் வரைவுரைகள், இவற்றின் தமிழாக்கம் இவைகளைக் கொண்டது அந்நூல்:

**EXHIBIT** — **சான்றுவணம்**

Any document which, in the course of a judicial proceeding, is produced and put in court to form part of the record and to give information to arrive at a decision.

*நீதிமன்றத்தின் தீர்ப்புக்குதவும் பொருட்டு முன்னிலைப்படுத்தப்படும் ஆவணம்.*

**RIGHT** — **உரிமை**

A legally protected interest.

*சட்டம் காக்கும் நலன்.*

**SURETY** — **பிணையாள்**

A surety is a person who binds himself to satisfy the obligation of another person if the latter fails to do so.

*கடப்பாடு நிறைவேற்ற வேண்டிய ஒருவர் அதைச் செய்யத் தவறினால் தாமே அதை நிறைவேற்றுவதாகத் தம்மைக் கட்டுப் படுத்திக் கொள்பவர்.*

**TESTIMONY** — **சான்றுரை**

The evidence of a witness given VIVA VOICE in a Court of Justice or other Tribunal.

*நீதிமன்றத்திலோ வேறு மன்றத்திலோ வாய் மொழியாக அளிக்கப்படும் சான்று.*

இவ்வாறு, ஒவ்வொரு சட்டச் சொல்லும், அதன் விளக்கமும் ஆங்கிலத் திலும் தமிழிலும் இந்நூலில் தரப்பட் டுள்ளன.

சட்டக் கருத்துகளைக் கூறும் இலத்தீன் மொழிச் சூத்திரங்களுக்கு ஏற்றபடி அமையும் தமிழ்ச் சூத்திரங்களும் இந்நூலில் உள்ளன. சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் ஆற்ற லும் அழகும் தமிழ்மொழியின் தனிச்சிறப் பானதால் இச் சூத்திரங்கள் இசைவுறப் பொலிவதை நாம் கண்டு களிக்கின்றோம்:

(1) Executio est finis fructus legis.
*சட்டத்தாலுறு பயனும் பலனும்*
*கிட்டும் தீர்ப்பின் நிறைவுறு நலனே.*

(2) Generalia specialibus non derogant.
*தனிவிதிக் கிசைந்தே பொதுவிதி இயங்கும்.*

(3) Generalibus specialia derogant.
*பொதுவிதி தன்னைத் தனிவிதி மிஞ்சும்.*

(4) Executio juris non habet injuriam.
*பாங்குறு சட்ட நிறைவுறுத்தம்*
*தீங்கென என்றும் ஆவதிலை.*

இந்திய மொழிகள் எதிலும் இது போன்ற 'சட்டச்சொல் அகராதி' இன்னும் வெளிவரவில்லை. சட்டங்கள் பலவற்றையும் தமிழாக்கம் செய்யும் பணியும் தொடங்கி யுள்ளது. எல்லாச் சட்டங்களுக்கும் அடிப் படையாக அமைவது 'அரசமைப்புச் சட்டம்' ஆகும். அதன் மொழியாக்க வேலை இப் பொழுது நடந்துகொண்டிருக்கிறது. இதற் குப் பின் 'குற்ற இயல் சட்டம்', 'குற்ற இயல் நடைமுறைச் சட்டம்', 'சொத்து மாற்றுச் சட்டம்' போன்ற முக்கிய சட்டங்கள் தமிழில் மொழியாக்கம் செய்யப்பட வேண்டும்.

சட்ட விதிகளையும், சட்டக் கருத்துக் களையும் கூறும் வாசகங்கள் தெளிவாக ஐயத் திற்கிடமின்றி இருத்தல் இன்றியமையாத தாகும். பல நுட்பமான கருத்துக்களைத் திட்பமாகக் கூறுவதே சட்டமொழியின் திறனாகும். எனவே, சட்டக் கருத்துக்களை ஒரு மொழியில் கூறத் தலைப்படும்பொழுது அந்த உரைநடை நுட்பமாகவும் திட்பமாக வும் தெளிவாகவும் இருத்தல் வேண்டும்.

எடுத்துக்காட்டாக, சில சொற்களை நாம் காணலாம்: 'Qualification' என்ற ஆங்கிலச் சொல்லை 'தகுதி' என்று பொது வாக நாம் தமிழில் மொழி பெயர்க்கிறோம். 'Competence' என்ற சொல்லையும் 'தகுதி

என்றே நாம் குறிக்கிறோம். இவ்விரு சொற்களும் இரு வேறு பொருள்களை உணர்த்துகின்றன. எனவே, 'Qualification' என்பதை 'தகுதிப்பாடு' என்றும், 'Competence'—என்பதைத் 'தகுதிறம்' என்றும் தமிழாக்குகிறோம்.

'Income', 'Revenue' என்ற இரு சொற்களையும் பொதுவாக 'வருமானம்' என்று நாம் குறிப்பிடுகிறோம். சட்டத்தில் கையாளப்படும்பொழுது இவ்விரு சொற்களின் பொருள்கள் வேறுபாடுடையவை. எனவே, 'Income' என்பதை 'வருமானம்' என்றும், 'Revenue' என்பதை 'வரிமானம்' என்றும் சட்டத்தில் தமிழாக்குகிறோம். இது போன்றே 'Suitable' என்ற சொல்லைப் 'பொருத்தமானது' என்று மொழிபெயர்த்து, 'Appropriate' என்பதை 'உரித்தமானது' என்று மொழியாக்கம் செய்கிறோம். 'தகுதிறம்', 'வரிமானம்', 'உரித்தம்'— இவை புதிதாக ஆக்கப்படும் சொற்கள். இவ்வாறு நூற்றுக்கணக்கான புதுச்சொற்கள் தமிழிலே ஆக்கப்படுகின்றன. இத்தகைய புதுச் சொற்களை ஆக்கவில்லையெனில் நுட்பமான பொருள் வேறுபாடுகளைக் காட்டும் வகையில் சட்ட வாசகத்தைத் தமிழில் எழுதுவது இயலாது. சட்டத்துறைக்கென அமைத்தாக்கப்படும் இச்சொற்கள் தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு வளமூட்டித் துணைபுரியும் என்பதில் ஐயமில்லை. இத்தகைய சட்டமொழி ஆக்கப்படுவதன் பயனாக, 'சட்டத்தமிழ்' என்ற ஒருவகைத் தனி உரைநடை உருவாகி வருகிறது. இந்த உரைநடையின் பயனாக, சட்டம் பயிலுவோர் மட்டுமின்றிப் பிறரும் பல சொற்களின் நுட்பத்தையும் திட்பத்தையும் அறிந்துணர்ந்து பயன் பெறுவார்கள். இது சட்டத்துறை ஆணைக்குழுவில் பணியாற்றுவோர்களது ஒருமித்த கருத்தாகும்.

இதுவரை நீதிமன்றங்களில் சான்றுரைப்போர்களின் உரை ஆங்கிலத்திலேயே எழுதப்பட்டு வந்தது. சான்றுரைப்பது தமிழில் இருந்தாலும், அது நீதிமன்ற நடுவர்களால் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு ஆங்கிலத்திலேயே பதிவு செய்யப்பட்டது. எவ்வளவு திறனாக மொழி பெயர்த்தாலும் சில வேளைகளில் பொருள் சிதைந்து விடுவது தவிர்க்க முடியாததாகும். எனவே, நீதிமன்றத்தில் சாட்சியங்களைத் தமிழிலேயே பதிவு செய்யுமாறு அரசாங்கம் உத்திரவிட்டுள்ளது. 1970ஆம் ஆண்டில் இந்த உத்திரவு பிறப்பிக்கப்பட்டு, இப்பொழுது நீதிமன்றங்களில் சாட்சியங்கள் தமிழிலேயே பதிவு செய்யப்படுகின்றன. 'டாக்டர்கள்', 'பொறி இயல் வல்லுநர்கள்' போன்றோர் கூறும் சாட்சியங்கள் ஆங்கிலத்தில் இருப்பின் அவற்றை ஆங்கிலத்திலேயே பதிவு செய்யுமாறு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. தமிழ் தெரியாதவர்கள் கூறும் சாட்சியங்களும் ஆங்கிலத்திலேயே பதிவு செய்யப்படுகின்றன.

இதற்கு அடுத்தபடியாக, முதல் நிலையில் உள்ள 'குற்ற வழக்கு நீதிமன்றங்களிலும்', 'உரிமை வழக்கு நீதிமன்றங்களிலும்' தமிழிலேயே தீர்ப்புக்களை எழுதுவதற்கான ஏற்பாடுகள் செய்யப்படும். இவ்வாறு, படிப்படியாக, எவருக்கும் இடர்ப்பாடு இல்லாதவாறு, எல்லா நீதிமன்றங்களிலும் தமிழே 'நீதிமன்ற மொழியாக' ஆவதற்கு வேண்டிய முன்னேற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

தமிழிலேயே சட்டங்கள் இயற்றப்பட வேண்டும் என்பதே அரசாங்கத்தின் குறிக்கோளாகும். சட்டங்கள் தமிழில் இயற்றப்பட்டு, எல்லா நீதிமன்ற அலுவல்களும் தமிழில் நடப்பதே மக்களாட்சி முறையும் நீதி முறையும் செப்பமுற நடக்கும் சீர்மையாகும்.

*"சட்டத்துறைத் தமிழ் வளர்த்து*
*நீதித்துறை நெறி காப்போம்"*

என்ற குறிக்கோளோடு, 'சட்டத்தமிழ்' வளர்ந்து வருகிறது.

———

# தில்லைச் சிற்றம்பலவன் கோயில்

[திரு. ஜே. எம். சோமசுந்தரம் பிள்ளை]



தமிழ்நாட்டுக் கோயில்களைப் பற்றிச் சிறந்த ஆராய்ச்சி செய்துள்ள இவர் இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள விருதுநகரில் 28-2-1892இல் தோன்றினார். பி ஏ. பி.எல். பட்டம்பெற்ற இவர் பல கோயில்களில் ஆட்சிப் பொறுப்பாளராக விளங்கினார். ஓய்வுபெற்ற பின் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் வெளியீட்டுத் துறை மேலாளராகப் பணி புரிந்தார். தற்போது ஓய்வுபெற்று அப்பல்கலைக்கழகக் குடியிருப்பில் வாழ்கிறார். கோயில் அமைப்புக் கலை பற்றி ஆராய்ந்து தஞ்சைத் திருக்கோயில்கள்' 'பழனித்தல வரலாறு' 'தஞ்சை இராசேச்சுரம்' 'சிற்பமும் கலைவாழ்வும்' 'The Great Temple at Tanjore' முதலிய நூல்களை எழுதியுள்ளார். சித்தாந்ததீபிகையில் வெளியான பழந்தமிழ் இலக்கியச் செய்யுள்களின் மொழி பெயர்ப்பைத் தொகுத்து 'Two Thousand years of Tamil Literature' The Five Tamil Idylls' என்ற நூல்களை வெளியிட்டுள்ளார். இவர் தம் எழுத்துப்பணியைத் தமிழ் எழுத்தாளர் சங்கம் 1964இல் பதக்கம் வழங்கிப் பாராட்டியது.

"கற்பனை கடந்த சோதி
கருணையே உருவ மாகி
அற்புதக் கோல நீடி
அருமறைச் சிரத்தின் மேலாஞ்
சிற்பர வியோம மாகும்
திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடஞ்செய் கின்ற
பூங்கழல் போற்றி போற்றி"

—சேக்கிழார்

எந்நாட்டவர்க்கும் இறைவனும் தென்னாடுடைய சிவன் இப்பூவுலகில் தனக்கே உரிமையாக்கித் தானுறையும் திருக்கோயிலாகத் தில்லைச் சிற்றம்பலத்தை ஆக்கிக் கொண்டான். இதனைப் "பூலோக கைலாயம்" என்று சிறப்பித்தான் ஒரு புலவன். இக் கோயில் தென் தமிழ் நாட்டின் நடுநாயகமாகி மக்களின் வாழ்க்கையில் முதலிடம் பெற்றுள்ளது. இங்கு அச்சிவனென்னும் செம்பொருளை உருவமாகவும் அருவமாகவும், ரூபாரூபமாகவும் காணலாம். ரூபம் நடராசன் என்னும் ஆடவல்லான். அரூபம் ஆகாசலிங்கம். ரூபாரூபம் சிவலிங்கம். அஃது என்றும் தத்துவமாகக் காணப்படும் இறைவனது தோற்றம். அருபம் இத்தலத்தே ஐம்பூதங்களாகக் காணப்பெறும் சிவம் கண்ணிற்குப் புலப்படாத ஆகாச சொரூபமாய் இருப்பது.

நடராசன் என்னும் ஆடவல்லான் ஒரு புராணத் தத்துவப் பொருள். பக்தர்களுக்கெளியனாய் ஒரு காலத்தில் தாருகாவனத்தில் ரிஷிகளின் கர்வத்தையடக்க நடனமாடியதை மீண்டும் பதஞ்சலி வியாக்கிரபாதர் என்ற இரு பக்தர்களுக்காக இத்தில்லையில் ஆடினான் சிவன். புராண வரலாறு இவ்வாறாக, திருநடனம் புரியும் நடராசப் பெருமானின் திருவுருவத் தத்துவத்தையும், அவரது திரு நடனத் தத்துவத்தையும், சிறிது தெரிவோம்.

இதனை மாணிக்கவாசகர் விளக்குகின்ற வாறுதான் என்னே!

"வான நாடரும் அறியொ ணாதநீ
மறையி லீறுமுன் தொடரொ ணாதநீ
ஏனை நாடருந் தெரியொ ணாதநீ
என்னை யின்னிதா யாண்டு கொண்டவா
ஊனை நாடக மாடு வித்தவா
உருகி நானுனைப் பருக வைத்தவா
ஞான நாடக மாடு வித்தவா
நைய வையகத் துடைய விச்சையே".

திருச்சதகம் 95—திருவாசகம்.

இறைவன் ஆடிய திருக்கூத்தினை ஐந்தொழில் நாடகமென்பர். இதனால் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்களும் இறைவனியற்றும் இத்திருக் கூத்திலேயே இயல்பாக நிகழ்கின்றன என்பர் பெரியோர். கூத்தப் பெருமானுடைய நான்கு திருக்கரங்களில் வலப்புறத்து மேற்கரத்தில் துடியென்னும் உடுக்கை யமைந்துள்ளது. அவ்வுடுக்கையிலிருந்து தோன்றிய நாதத்துவத்தின் வழியாக உலகங்கள் தோன்றின. ஆதலால் அவ்வுடுக்கை, படைப்புத் தொழிலைக் குறிக்கும். வலப்புறக்கரத்தில் 'அஞ்சேல்' என்ற குறிப்பில் அமைந்துள்ள அபயக்கை காத்தற்றொழிலைக் குறிக்கும். இனி இடப்புறத்துக் கைகள் இரண்டனுள் மேலேயெடுத்த கை தீயினைத் தாங்கியுள்ளது. அத்தீயானது உலகங்களெல்லாவற்றையும் அழித்தலைக் குறிக்கும். வலப்பக்கத்துத் திருவடியின் கீழ் முயலகன் என்ற முரடன் அழுத்தப் பெற்றிருப்பது, உயிர்கள் வினைப்பயன்களை அநுபவித்தற் பொருட்டு இறைவன் செய்யும் மறைப்புத் தொழிலை உணர்த்தும். தூக்கிய திருவடியாகிய இடது திருவடியினை இடது திருக்கரத்தால் காட்டி நிற்குமமைப்பு, இறைவன் எடுத்த பாதத்தால் உயிர்களுக்குப் பேரின்பத்தினை நுகர்விக்கும் அருளல் தொழிலைக் குறிப்பதாகும். இவ்வாறு நடராசப் பெருமான் செய்தருளும் திருக்கூத்து ஐந்தொழில்களையும் ஒருங்கே நிகழ்த்த வல்லது என்ற நுட்பத்தை,

'தோற்றம் துடியதனில் தோயும் திதிஅமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோதம் முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு.''

உமாபதி சிவம்—உண்மை விளக்கம்-36.

என்னும் செய்யுள் நன்கு விளக்குதல் காணலாம். இத்திருநடனம் சகல பிரபஞ்சத்தையும் ஆட்டி வைக்கும் அருட்சக்தியைக் குறிக்கும் எனவும் இங்குச் சொல்ல வேண்டுவதொன்றும். இவ்வாறாக ஆடும் திருநடன வகைகள் பல. அவற்றின் கரணங்கள் நூற்றெட்டு என்பதையும், இக்கோயிலின் நான்கு கோபுர வாயில்களிலும் எப்பாகத்திலும் சித்திரித்திருப்பதைக் காணலாகும். இறைவன் இக்கரணங்களை முதன் முதலாக ரிஷிகளிடம் தெரிவிக்க அவர்கள் தாண்டு என்ற சிற்பிக்குக் கற்பிக்கவும், அவை அவர் பெயராலேயே தாண்டவம் எனப் பெயர் பெற்றதென்பர். இப்பெரும் பொருள் கலைவல்லாரின் அரும் பொருளாகவும் மக்களின் துயரங்களை இன்பமாக்கும் ஓர் அரு மருந்தாகவும் இருப்பது கண் கூடாகும்.

### சரித்திரத் தொடர்புகளும் சமய நாயன்மார்களும்:

இனி, சரித்திர கால விவரங்களை ஆராய்வோம். இவைகளே இக்கோயிலின் வளர்ச்சிக்கு ஒரு காலக் கண்ணாடியாகவும் தோன்றும். அவற்றுள் முதல் வரலாறு, பல்லவ சிம்மவர்மன் II (கி. பி. 550—575) தென்னாடு முழுதும் திரிந்து, தில்லைச் சிவகங்கைக் குளத்தில் நீராடி, தனது வெம்மை நோய் நீங்கி, தன்மேனி பொன்வண்ணம் பெற்ற காரணமாக அணித்து நின்ற ஓர் ஆலமரத்தின் கீழிருந்த சிவலிங்கத்தை வணங்கி, அதற்கு மேற் கூரையெடுத்து, பூசைகள், வழிபாடுகள் நிரந்தரமாகச் செய்ய ஏற்பாடு செய்தான். இதனை வண்ண ஓவியமாகச் சிவகாமியம்மன் மேல் முகட்டுத்தளங்களில் அழகுறத்தீட்டி இருப்பதைக் காண்க.

ஏழாம் நூற்றாண்டு சமயாசாரியராகிய அப்பர், சம்பந்தர் காலம். அவ்விருவரால் தமிழகம் சமணத்தினின்றும் மீட்கப்பட்டு, மகேந்திர பல்லவன், கூன் பாண்டியன் ஆகியோர் முறையே சோழ, பாண்டிய மண்டலங்களில் சைவத்தை மீண்டும் நிலைநாட்டினர்.

சீர்காழியில் தோன்றி மூன்று வயதிலேயே உமையம்மையின் ஞானப்பாலை உண்டு சிவஞானம் கைவரப் பெற்ற சமயாசாரியராகிய சம்பந்தர் இறைவனைத் துதிப்பாடல்களால் பாடியும், அற்புதங்கள் பலவும் செய்தவர் மூன்று முறை தில்லைக்கூத்தனைத் தரிசித்தவர் இவர்.

அப்பர் சுவாமிகள் திருச்சிற்றம்பலத்து நட்டம் பயிலும் நாதனைக் கண்டு பாடிய பாக்கள் உள்ளத்தை உருக்கும் பாக்களாம். அவரும் காழிப் பிள்ளையாராகிய சம்பந்தரும் அம்பலத்தே ஆடுகின்ற தனிக் கூத்தனது பெருங் கூத்தைக் கண்டு எல்லையிலா இன்பம் அடைந்தபோது சைவம் உய்ந்தது. உலகம் சைவ மணம் கமழ்ந்தது.

பிறகு ஏழாம் நூற்றூண்டின் இறுதியிலும், எட்டாம் நூற்றூண்டின் முதலிலும் வாழ்ந்தருளிய சுந்தரர் திருத்தில்லையை அணுகுகின்றூர். திருவாரூரிலிருந்து திருத்தொண்டத்தொகை பாடித் தில்லைவா ழந்தணர்தம் அடியாராக "ஆளுடை நம்பிகள்" தில்லைக் கூத்தினைக் காண்கிறூர்.

இவ்வாறுக இம்மூவர் காலத்தும் சைவப் பேரரசு ஒரு தனிப் பெருஞ்சிறப்பை எய்தியிருந்தமையின் தில்லைத் தலமும், தனிப் பெருங் கருணையின் திருக்கோயிலும் மலிவளம் பெற்று, அரசப் பெருவாழ்வு பெற்றிருந்தது எனலாம்.

இனி இந்நூற்றூண்டிலேயே, நாடு வைணவ நந்திவர்ம பல்லவமல்லன் காலத்தே இத்திருக்கோயிலில் கோவிந்த ராஜப் பெருமாளுக்குத் திருச்சித்திரக்கூட சந்நிதி எழச் சைவமும் வைணமும் இனி திருக்கக் காண்கிறேம்.

இதன் பின்னர்ப் பாண்டி நாட்டிலே மணிவாசகப் பெருமான் தோன்றுகின்றூர். அவரது திருவாசகம் தேன்கமழும் அருள் வாக்குகள் பாதி தில்லைத்தாண்டவனின் பெருமையே குறிக்கிறது. இச்சந்நிதியிலே தான் இவர் பௌத்தர்களுடன் வாதாடிச் சைவத்தை நிலைநிற்கச் செய்கிறூர். திருவாசகத்தை, அந்தணர் வடிவாக வந்த பெரியாரைக் கொண்டு எழுதி, அவ்வேடுகளின் பொருள் தில்லை நடராசப் பெருமான் என்று கூறித் தாமும் அவ்வாசகங்களை எழுதிய அந்தணப் பெருமானும் மறைகின்றூர்கள். சைவம் தழைக்கிறது; இன்னுமிக்காலத்திற்கு முன்னும் பின்னுமாக இத்தலத்தே நாயன்மார்கள் தோன்றி, சைவத்தை வாழ்ந்து காட்டுகிறூர்கள். அவர்கள்தாம் 'திருநாளைப் போவார்' என்ற நந்தனூரும், தம் முதுமையை இளமையாக்கிய திருநீல கண்டரும், இன்னும் கணம்புல்லரும், கூற்றுவ நாயனூருமாவர். இவர்களது அரிய வாழ்க்கை சைவ உலகம் அறிந்ததே! இவர்களது வாழ்க்கையை 13ஆம் நூற்றூண்டில் தாராசுரம் கோயிலில் கல்லில் பொறித்துச் சித்திரமாகக் காட்டியதை இத்துடன் திகழும் புகைப்படம் மூலம் காணலாம். இனிச் சோழர்களது பெருவாழ்வு கி.பி. 850 முதல் 1250 வரை பெருகுகின்றது. சோழ அரசர்கள் விஜயாலயன் முதல் மூன்றுவது இராஜராஜன் வரை இக்கோயில் ஓங்கி மிளிர்கின்றது. ஆதித்தன் (871-907), பராந்தகன் (907-955) ஆகியவர்கள் தில்லைச் சித்சபையை எழுப்பியும், அதன் மேற்கூரையைப் பொன்னுல் வேயவும் செய்தார்கள்.

இவர்பின் வழிப்போந்த சோழர்களும் பாண்டிய மன்னர்களும், மற்றவர்களும் கோயிலின் பெரும்பகுதிகளை வகுத்து உண்டாக்கினர். இவர்கள் காலத்தேதான் இக்கோயிலின் நான்குதிருவாயிற் கோபுரங்களும் உண்டாயின. கீழ்க்கோபுரம் குலோத்துங்கன் IIஆலும், தெற்குக் கோபுரம் குலோத்துங்கன் IIIனின் மருகனுகிய சொக்கச்சீயன் கோப்பெருஞ்சிங்கனுலும், மேற்குக் கோபுரம் சடாவர்மன் சுந்தரபண்டியனுலும், வடக்குக் கோபுரம் 16ஆம் நூற்றூண்டில் விஜயநகரப் பேரரசர் கிருஷ்ணதேவராலும் எடுக்கப் பெற்றுத் திகழ்கின்றது.

இந்நான்கு கோபுரங்களும் அணிதிகழ் சிற்பங்களுக்கு உறைவிடமாய், தமிழ்நாட்டின் சிற்பக் களஞ்சியமாகத் திகழ்கின்றன. இன்னும் ஓவியத்தின் தலைசிறந்த பெரும் பகுதிகள் திருக்காமக் கோட்டத்து முன் மண்டப மேற் கட்டியிலும் காணலாகும். இவை இக்கோயிலின் பூர்வ சரித்திரத்தை விளக்கும்.

## திருக்கோயிலின் அமைப்பு

திருக்கோயில் சற்றேறக்குறைய நாற்பது ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது. இதன் பகுதிகள் 13 நூற்றூண்டுகளுக்கிடையே வெவ்வேறு அரசர்களால் கட்டப்பெற்றவை சிவகங்கைக் குளமும், மற்றச் சுற்றுத் திருக்கோயில்களும் அக்காலச் சிற்ப முறையின் மேம்பாட்டை விளக்கும்.

இக்கோயிலின் ஆதியமைப்புச் சிற்றம்பலமும் பேரம்பலமும் ஆகும். இவை மரத்தால் கட்டப்பட்டிருத்தலே இதற்குச் சான்றுகும். பல்லவர் கண்ட குகைக் கோயிலுக்கும், கற்கோயிலுக்கும் முந்தியன என்பது அவற்றின் பழைமையை அறிவிக்கும் அக்காலத்தில், இரண்டாம் பிரகாரத்திலுள்ள திருமூலட்டானேசுவரர் கோயிலும் சிறப்புற்றிருத்தல் வேண்டும். இக்கோயிலினுள் ஐந்து சபைகள் உள்ளன,



திருநெல்வேலி
நெல்லையப்பர் கோயில்



திருப்பேரூர்
சாந்தலிங்கர் கோயில்



திருமயிலைக்
கபாலீசுவரர் கோயில்



சிதம்பரம்
கோயில்



மதுரை
திருஆலவாய்

சித்சபை திருச்சிற்றம்பலமாகும். இதுவே நடராஜப் பெருமான் இடப்பாகத்தில் சிவகாமசுந்தரியோடு எழுந்தருளியிருக்கும் கருவறையாகும். இதனையே மணிவாசகனுர் "எழில் பெறும் இமயத் தியல்புடை யம்பொற் பொலிதரு புலியூர்ப் பொது" எனச் சிறப்பிக்கின்ருர். இதன் சிகரத்தில் ஒவ்வொரு பொன் ஓட்டிலும், 'சிவாயநம' என்னும் பஞ்சாட்சரத்தை எழுதி வேய்ந்திருப்பதாகத் தில்லையுலாக் கூறுகின்றது. சித்சபையில் பெருமானது வலப்புறத்தில் சிதம்பர இரகசியம் உள்ளது. அத்துடன் மந்திர சொரூபமாய்த் திருவம்பலச் சக்கரம் ஒன்றும் அமைக்கப்பட்டுள்ளது. இச்சித்சபையாகிய பொன்னம்பலத்தில், இறைவன் உருவம், அருவம், அருவுருவம் என்ற மூவகைத் தோற்றத்துடன் எழுந்தருளியிருப்பதைக் காணலாம். நடராஜத் திருமேனி உருவம்; இரகசியம் அருவம்; ஸ்படிக லிங்கத்தை அழகிய சிற்றம்பலமுடையார் எனவும், திருவம்பலமுடையார் எனவும் கூறுவர். இவர்களேயன்றி இரத்தினத் தாலாகிய இரத்தினசபாபதியும் சுவர்ணகால பைரவரும் இங்குக் காட்சியளிக்கின்றனர்.

கனகசபை என்பது மேற்கண்ட சிற்றம்பலத்திற்கு எதிரேயுள்ள எதிரம்பலமாகும். இங்குப் பெருமான் ஆண்டில் நான்கு முறை திருமஞ்சனங் கொண்டருளுகிருர். தினமும் படிக லிங்கத்திற்கு ஆறுமுறை திருமஞ்சனமும் ஆகின்றது. பக்தர்களும் நின்று இறைவனைச் சேவிக்கின்றனர்.

தேவசபை என்பது வழக்கத்தில் பேரம்பலம் எனப்படும். இங்கு உற்சவமூர்த்திகள் எழுந்தருளியுள்ளனர். அநபாயனை இரண்டாம் குலோத்துங்கன், தன் குல முன்ஞேர் சிற்றம்பலத்தைப் பொன்மயமாக்கியதனுல் தான் இப்பேரம்பலத்தை பொன்னினுல் மெழுகிப் பொன் மயமாக்கினுன் என்பதைப் பெரியபுராணம் கூறுகின்றது. இங்குத்தான் இக்கோயிலின் நிர்வாக சபையினர் கூடுகின்றனர்.

நிருத்தசபை என்பது "தேர் அம்பலமாகும்."* நடராஜப்பெருமான் திருமுன்னர்க் கொடிமரத்தின் தென்பால் உள்ளது; மிகவும் சித்திர வேலைப்பாடமைந்த ஐம்பத்தாறு தூண்களால் தாங்கப் பெற்றது; மண்டபம் யாவும் பரிகள் பூட்டிய தேர் அமைப்பைப்பெற்றது. இதன் அணிதிகழ் சிறுகோயிலினுள் ஊர்த்துவ தாண்டவ மூர்த்தி காட்சியளிக்கின்ருர். இத்தேர் மண்டபத்தின் வடமேற்கு மூலையில் ஒரு சிற்ப உருவம் மூன்ரும் குலோத்துங்கன் காலத்ததாக, திருபுவனம் கோயில் விமானத்தில் காட்சியளிப்பது போன்று தோன்றுகிறது. ஆராய்ச்சியாளர் நிர்ணயிப்பார்களாக.

இராஜ சபை என்பது ஆயிரக்கால் மண்டபம். நடராஜப் பெருமான் ஆண்டில் மார்கழி, ஆனியில் இருமுறை இங்கெழுந்தருளித் திருமஞ்சனம் கொண்டருளுகிருர். ஆருத்திரா தரினம் கொடுப்பதும் இம் மண்டபத்தில்தான். இதன் அகலம் 190 அடி. நீளம் 340 அடி மண்டபத்தூண்கள் வரிசைக்கு இருபத்துநான்காக நாற்பத்தொரு வரிசைகள் உள்ளன. நடுவில் வௌவால் நந்தி மண்டபம் அமைக்கப் பெற்றதால் ஐம்பத்தாறு தூண்கள் குறைவாதலின் மண்டபத்து வெளியிலுள்ள தூண்களையும் சேர்த்து எண்ணிக்கொள்வர். சேக்கிழார் புராணச் செய்யுளாகிய "இவ்வையிருநூறுகால் மணிமண்டபத் தெந்தையார் திருவருளையுன்னி நிருத்தனுர் தந்தசொல் முதலாவெடுத்தனர்" என்பது, ஈண்டுச் சேக்கிழார் பெரியபுராணத்தை அருளியதைக் குறிக்கின்றது. மண்டபம் அநபாயன் காலத்திலேயே எடுக்கப்பட்டிருக்க வேண்டும். மண்டபத்தின் நாற்பக்கத் தொடக்கத்திலும் அழகிய யானை உருவங்கள் கற்களிலேயே செதுக்கி அமைக்கப்பட்டுள்ளன. மண்டபத்தின் கீழ் வரிசைப் பத்திகள் முழுதிலும், நர்த்தன உருவங்கள், இசையாளர் உருவங்கள், சிவகாமி அம்மன் கோயிற் சிற்பங்கள் போன்று மிக வனப்

* The oldest thing now existing here is a little shrine in the inner most enclosure, a porch of fifty six pillars, about eight feet high and most delicately carved, ornamented with dancing figures more graceful and more elegantly executed than any others of their class as far as I know in South India. It is the Nrtta or Nrtya Sabha, the hall of dance—Fergusson.

புடன் செதுக்கப்பட்டுள்ளன. இத்தகைய பெரு மண்டபங்கள், விஜயநகர அரசர் வருகைக்கு முன்னரே, சோழ பாண்டியர் களால் தென்னுட்டுக் கொயில்களில் நிறுவப் பெற்றிருப்பது இங்குக் குறிப்பிட வேண்டிய ஒன்றாகும்.

**தனிக்கோயில்கள் :-**

திருக்காமக்கோட்டம் என்னும் சிவகாமியம்மன் கோயிலை அநபாய சோழனுகுலோத்துங்கன் II கட்டினுன் என ராஜராஜ சோழன் உலாவும், தக்கயாகப் பரணியும், குலோத்துங்க சோழன் உலாவும் கூறுகின்றன. அம்பிகையின் முன்புற மகா மண்டபம் பெருமிதத் தோற்றமுடையது. இரட்டைத் தூண்கள் அழகுற அமைந்துள்ளன. அதன்கண் தூணுடன் செதுக்கிய கல்லாலாய சங்கிலித் தொடரையும் காணலாம். திருச்சுற்று மாளிகைக் கீழ் வரிசை முழுவதும் நாட்டிய மாடுபவரும், வாத்தியக்காரர்களும் சிற்பமாகத் திகழ்கின்றனர். இவை யாவும் ஒரு பெருமிதக் காட்சியாகும். இவை உப்புசச் சிற்பங்களுக்கு (Base-relief) ஓர் அணியாய்த் திகழ்வன.

**பாண்டிய நாயகம் கோயில் :-**

இது கோயிலின் மூன்றும் பிரகாரமாகிய "ராசாக்கள் தம்பிரான் திருமாளிகைத் திரு வீதியில்", வடக்குக் கோபுரத்துக்கு அணித்தாக வடமேற்கு முலையில் உள்ளது. மாறவர்மன் சுந்தர பாண்டியனுல் (கி. பி. 1216-1251) தேர்போன்று உருளைகள் மாட்டி யானைகளைப் பூட்டி இழுக்குந் தோற்றத்தில் செய்யப்பட்ட அரியதொரு பெருமண்டபம் இது. இதன் மேற்குப் புறத்தே, உயர்ந்த மற்றெரு மேடையின் மீது ஆறுமுகப் பெருமான் மயிலின்மீது அமர்ந்து வள்ளி தேவசேனையுடன் காட்சியளிக்கின்முர். தெய்வத் திருமேனிகள் மிக வேலைப் பாடமைந்தவை ; அழகியவை.

**தில்லைக் கோவிந்தராஜர் கோயில் :**

எட்டாவது நூற்றுண்டில் காஞ்சி வைகுந்தப் பெருமாள் கோவிலை நிறுவிய இரண்டாம் நந்திவர்ம பல்லவ மல்லனுல் கி. பி. (717-782) தில்லைப் பொன்னம்பலத்தின் தென்புறம் ஒருமேடையில் இது திறுவப் பெற்றதாகும். ஆழ்வார்கள் பாடிய நூற்றெட்டுத் திருப்பதிகளில் இத்தில்லைத் திருச்சித்திரகூடம் ஒன்றாகும்.

இதனை, ஆழ்வார் திருமங்கை மன்னன், தாம் அருளிய பெரிய திருமொழியுள் 3ஆம் பத்தில், 2,3ஆம் திருமொழிகளில் போற்றியுள்ளார். மக்கள் நம் பெருமாளின் திருவருட் பேரின்பத்தை யடையும் வழியினைத் தில்லை சென்று அடைந்த மாத்திரத்தே பெறலாம் எனக் கூறுமுகத்தான், "பைம் பொன்னும் முத்தும் மணியும் கொணர்ந்து படை மன்னவன் பல்லவர் கோன் பணிந்த, செம்பொன் மணி மாடங்கள் சூழ்ந்த தில்லைத் திருச்சித்திர கூடம் சேர்மின்களே" என்கிருர். மணிவாசகப் பெருமான், பெருமானுடைய சயனத் திருக்கோலத்தைத் திருக்கோவையாரில் கூறியுள்ளமை குறிப்பிடத் தக்கதாகும்.

12 ஆம் நூற்றுண்டில் அநபாயன் என்ற இரண்டாம் குலோத்துங்க சோழன் (கி. பி. 1133-1150) சிற்றம்பலத்தைப் பெருக்கி அமைக்கும் பொருட்டுத் தில்லைக் கோவிந்தராஜப் பெருமானை அப்புறப்படுத்தியதும்,மறுபடியும்அவர்பழைமைத் தானத்தில் கி.பி. 1539இல் கிருஷ்ண தேவராயரின் தம்பி அச்சுதராயரால் தாபிக்கப்பெற்று அவருடைய வழிபாடுகள் வைகானச முறைப்படி வைணவ அர்ச்சகர்களால் செய்துவர நிபந்தங்கள் விடப்பெற்றதுமாகிய செய்திகள் பல கல்வெட்டுகளில் காணப்படுகின்றன. சமீப காலத்தில் இப்போது காணும் கோவிந்தராஜர் திருச்சந்நிதியைப் புதுப்பித்ததும் அதற்கு எதிரே நிற்கும் நாற்பது கால் மண்டபத்தை அமைத்ததும் சைவ வைணவ விவாதங்களை முழுதும் சமரசப் படுத்தியதும் செட்டிநாட்டு வள்ளல், இராஜா சர். அண்ணுமலைச் செட்டியாரும் அவர் திருமைந்தர் முத்தையா - பெருந்தகையும் ஆவர். பெருமாள் திருநாமம்-கோவிந்த ராஜர். தாயார்-கமலவல்லித்தாயார்.

சமீபத்தில் இக்கோயில் குடமுழுக்குச் செய்யப் பெற்று அழகுற அமைந்துள்ளது.

**தில்லை மூவாயிரவர் :**

தில்லைப் பெருமானுக்கு அணுக்கத் தொண்டர்களாக இருப்பவர்கள் தீக்ஷிதர்

ளாகிய மூவாயிரவர். இவர்கள் ஆதியில் கூத்தப் பெருமானுடன் இவண் வந்து குடியேறியவர்கள். சமயாசாரியர் அப்பர் இவர்களைத் "திருவுடை யந்தணர் வாழ்கின்ற தில்லைச்சிற்றம்பலவன் எனவும், சுந்தரர் திருத் தொண்டத் தொகையில் "தில்லை வாழந்தணர் தம் அடியார்க்கும் அடியேன்" எனவும், சம்பந்தர்,

"கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே
செற்றார் வாழ்தில்லைச் சிற்றம்பலம்"

எனவும், ஆழ்வார்களில் திருமங்கை மன்னன், குலசேகரரும் சிறப்பித்துப் போற்றுகின்றனர்.

இற்றைக்கு இவர்கள் முந்நூறு குடும்பத்தினராக இருந்து திருக்கோயிலின் கண்காணிப்பைமிக பக்திசிரத்தையுடன் பாதுகாத்துவருகின்றனர். 'பொதுத் தீட்சிதர்கள்' எனப்படும் இவர்களது குழுவினரால் திருக்கோயிலின் ஆட்சிமுறை திறம்படக் கவனிக்கப்படுகிறது.

இவ்வாறுகிய கோயிலைப் 'பூலோக கைலாயம்' என்பது மிகப் பொருந்தும். ஆண்டவன் தில்லைக் கூத்தனுகை எக்காலமும் இவ்வையகத்தையும் வானகத்தையும் இயக்க ஆனந்தத் தாண்டவம் செய்தருளுகிறான். இங்கு எல்லோரும் சென்று "செல்வர் வாழ் தில்லைச் சிற்றம்பலமேய செல்வன் கழலேத்தும் செல்வமாய பேரின்பத்தில்" மூழ்கித் திளைப்பாராக!

---

"வானே நிலனே கனலே மறிபுனலே
ஊனேயவ் வூனி லுயிரே யுயிர்த்துணையே
ஆனேறு மேறே யரசே யருட்கடலே
தேனே யமுதே யளியோங்கள் செல்வமே
யானே புலனு நலனு மிலனன்றே
ஆனலு மென்போல்மற் றூர்பெற்று ரம்பலத்துள்
மாநா டகங்காணும் வாழ்வு.

சிதம். செய். கோ. (உஉ)

கூற்றிருக்கு மடலாழிக் குரிசின்முத லோரிறைஞ்சக்
கொழுந்தேன் பில்கி
ஊற்றிருக்குந் தில்லைவனத் தசும்பிருக்கும் பசும்பொன்மன்றத்
தொருதா ளூன்றி

வண்டுபா டச்சுடர் மகுடமா டப்பிறைத்
துண்டமா டப்புலித் தோலுமா டப்பகி
ரண்டமா டக்குலைந் தகிலமா டக்கருங்
கொண்டலோ டுங்குழற் கோதையோ டுங்கறைக்
கண்டனு டுந்திறங் காண்மினோ காண்மினோ.

சிதம். செய். கோ. (கூஎ)

---

# பேரூர்த் திருக்கோயில் வரலாறு

[திரு. கோ. ந. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.எல்.]

*கோவை கவியரசு திரு. கு. நடேச கவுண்டரின் திருமகனுரான இவர் 19-9-1937இல் பிறந்தார். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தில் பயின்று பி.ஏ.ஆனர்சு பட்டம் பெற்ருர். பின்னர் சென்னை சட்டக் கல்லூரியில் படித்து பி.எல்., பட்டமும் பெற்றுள்ளார். தந்தையாரைப் போல இவருக்கும் தமிழில பேரீடுபாடு உண்டு. சட்டப் படிப்பு படித்ததால் சில காலம் வழக்கறிஞராகவும் ஆலைத் தொழிலாளர் நல அலுவலராகவும் பணியாற்றியிருப்பினும்*



*கூடத் தமிழ்த்துறையே இவரைப் பெரிதும் கவர்ந்துள்ளது. தற்பொழுது கோவை மாவட்டத்திலுள்ள பேரூர் தவத்திரு சாந்தலிங்க அடிகளார் தமிழ்க் கல்லூரியில் துணை முதல்வராகத் திகழ்கிருர். தொண்டைமண்டல ஆதீனத் தலைவர் சீலத்திரு. காஞ்சி ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகளை ஞான குருவாகக் கொண்டவர். ஆங்கிலத்திலும் தமிழிலும் பல கட்டுரைகள் எழுதியுள்ளார். இவை பல திங்களிதழ்களிலும் கிழமையிதழ்களிலும் வெளிவந்துள்ளன.*

*"ஆரு ரத்தா! ஐயாற்*
*றமுதே! அளப்பூர் அம்மானே!*
*காரூர் பொழில்கள் புடைசூழ்*
*புறவிற் கருகா வூரானே!*
*பேரூர் உறைவாய் பட்டிப்*
*பெருமான் பிறவா நெறியானே!*
*பாரூர் பலரும் பரவப்*
*படுவாய் பாசூர் அம்மானே!"*

—சுந்தர மூர்த்திகள் - ஊர்த்தொகை.

## கொங்குநாடு

'கொங்கு மலிகின்றதொரு கொங்கு வளநாடு' என்று திருப்பேரூர்ப் புராண மருளிய கவிராட்சச கச்சியப்ப முனிவரால் பாராட்டப் பெற்ற, பொய்யறியா வாய்மொழியால் புகழ் நிறைந்த நன்மாந்தர் வாழ்பதியாம் கொங்குநாடு சங்க காலந் தொட்டே எங்கும் புகழ் கொண்டது. முடியுடை மூவேந்தர் காலத்தும் கொங்கு நாடு தனி நாடாகத் திகழ்ந்தது என்பது புறநானூற்றுப் பாடல்களாற் போதரும். ஆயினும் பிற்காலத்தில் சேரரின் ஆளுகைக் குட்பட்டிருந்த தென்பது,

**'கேரளக் கொங்கப்பேர் பிரசங்கம் கிளர்நாடு'**

—அவிநாசிப் புராணம்.

*சேரர் கொங்கு வைகாவூர் நன்னுடதில்*
*ஆவிநன் குடிவாழ்வான தேவர்கள்-பெருமாளே'*

—திருப்புகழ்.

**'கோதை நனியாண்ட தொரு கொங்கு வளநாடு'**

—பேரூர்ப் புராணம்.

போன்ற தொடர்களால் அறியப்படுகின்றது. இன்றும் ஆடி அமாவாசை போன்ற நாட்களில் மலையாளிகள் பேரூருக்குத் திரண்டு வருகின்றனர்.

எந் நாட்டவருக்கும் இறைவனும் சிவன் தென்னுடையவனுயினும், தென்னுட்டுள்ளும் கொங்கு நாட்டின்மீது விருப்புடையன். தென்னுட்டிலுள்ள பிற நாடுகளிலெல்லாம் நானிலங்களு முண்டு. கொங்கு நாட்டில் மட்டும் நெய்தல் நீங்கிய மூன்று நிலங்களே யுண்டு. காரணம் இறைவன் மேல் அதற்குள்ள விருப்பமே. கச்சியப்பர் கூறுகின்ருர்:

*' இலவிதழி பாகனி லிழிந்த மலர்க் கைதை*
*கலவியது; காரமிழ்து கான்றது; ஒழியாத*
*புலவுடைய தென்றுகடல் போக்கிநில மூன்றிற்*
*குலவிவள மெத்தியது கொங்குவள நாடு'*

—நாட்டுப் படலம்.

[நெய்தல் நிலம் இறைவன் திருமுடியின் இழிந்த பொய் கூறிய தாழையை யுடைத்து, கரிய நஞ்சினை இறைவர்க்கு ஊட்டியது, புலால் நாற்றத்தை யுடையது என்று கருதிக் கடல்வளம் நீங்கிய மூன்று நிலவளங்களாற் சிறந்தது கொங்கு நாடு]

இக் கொங்கு நாடு தொன்று தொட்டே வடகொங்கு, தென்கொங்கு என்னும் பிரிவு களை யுடையதாக விருந்தது. சுந்தரர் காலத்து மீகொங்கு என்ற பெயரில் அவி நாசிக்கு மேற்கேயுள்ள பகுதி வழங்கி வந்தது.

### பேரூர்

மீ கொங்கு நாட்டில் ஓடும் காஞ்சியாறு சங்கப் புலவரால் பாடப் பெற்றது. இந்நதி பதிற்றுப்பத்தில் 'தீம்பூன லாயமாடும் காஞ்சியம் பெருந்துறை மணலினும் பலவே' (5 ஆம் பத்து: செய்-8) என்று கூறப்படு கின்றது. இக் காஞ்சியாற்றின் தென்கரை யில் இருக்கும் தலம் பேரூராகும். இத் தலத் துறையும் இறைவனைச் சுந்தர மூர்த் திகள் 'பேரூர் உறைவாய்! பட்டிப் பெருமான்! பிறவா நெறியானே' என்றழைக்கின்றார். இத் தலத்திற்குத் தவசித்திபுரம், வன்மீக நகரம், ஞானபுரம் முதலிய பல பெயர்கள் இருப்பினும் பேரூர், ஆன்பட்டி, பிறவா நெறி, மேலைச் சிதம்பரம் என்ற பெயர்களே சிறப்பாக வழங்கப் பெறுகின்றன.

இவற்றுள் பேரூர் என்ற பெயரே கல் வெட்டுக்களிலும் பழைய நூல்களிலும் காணப்படுகின்றது. உருவாலும் பயனாலும் வளத்தாலும் பெரிய ஊர் எனப் பொருள் படும். பேரூர் நாட்டு வெள்ளலூர் தேனீ சுரம் உடையார், பேரூர் நாட்டு வீரகேரள நல்லூர், பேரூர் நாட்டு முட்டம் என்கிற அமர புஜங்க நல்லூர் முதலிய கல்வெட்டுக் களில் காணப் பெறும் ஊர்ப் பெயர்களால், பேரூர் என்னும் இத்தலம் ஒரு காலத்தில் பெரிய தலைநகராக இருந்திருத்தல் வேண்டும். பேரூர் நாட்டுக் கோவன் புத்தூர் என்பது பேரூரை யொட்டிக் கோவன் எனும் சிற்றரசனால் அமைக்கப்பட்ட புதிய நகரமாகும். அதுவே இப்பொழுது கோயம் புத்தூர் என்று வழங்கப் பெறுகிறது.

பேரூர்க் கல்வெட்டுகள், பேரூர்ப் புராணம் ஆகியவற்றைக்கொண்டு நோக்குங் கால், ஒரு காலத்தில் பேரூர்நாடு வெள்ளி மலை, நீலிமலை எனப்படும் உமாதேவிமலை, ஐயாசாமி மலை எனப்படும் பிரமன் மலை, பெருமாள் முடி எனப்படும் விட்டுணுமலை, மருதமலை ஆகிய ஐம்மலைகளாற் சூழப்பட்டு மேற்கே போளுவாம் பட்டிக் கணவாய் முழுதும் சேர்ந்து கிழக்கே போத்தனூர்க் கண்மையிலுள்ள வெள்ளலூர் வரை பரவி யிருந்த தெனத் தெரிகின்றது.

'பெரியோர்' என்பதற்குச் சீவன் முத்தர் என்றும், பெரும் பெயர் மதுரை என்பதற்குப் பெரும்பொருளையுடைய மதுரை என்றும், பெரும் பொருள் என்றது வீடு என்றும் மதுரைக் காஞ்சிக்கு உரை எழுதிய நச்சினார்க்கினியர் கூறினர். (வரிகள் 473, 699) அக் கருத்தை யொட்டிப் பேரூர்ப் புராணம் பேரூர் என்பதற்கு மற்றொரு காரணம் கூறுகின்றது.

*''உரைத்தநாற் பயனுட் பெரும்பய னுயை*
*தொள்ளிய வீடஃ துறலால்*
*தரைத்தலைப் பேரூர் என்பர்கள் சிலர் ; எத்*
*தலத்தினுஞ் சாற்றுநாற் பயனும்*
*நிரைத்தலிற் பேரூர் என்பர்கள் பலரே ;*
*நீடிய வாதிமா நகரை*
*இரைத்தெழு கடல்போல் வளத்தினும் பேரூர்*
*என்பர்கள் பற்பலா யிரரே.''*

### பட்டி

கல்வெட்டுக்கள் இங்குறையும் இறை வரை ஆன்பட்டி யுடையார் என்றழைக் கின்றன. பட்டி என்பது மாட்டுத் தொழு வம். இப் பெயர் இத்திருக் கோயிலின் வரலாற்றோடு தொடர்புடையது.

ஒரு சமயம் பிரமன் உயிர்களைப் படைக்கும் பொருட்டுச் சிவயோகத்திருக்குங் காலைத் தன் தீய ஊழினால் நித்திரை மேயினன். அதனால் படைப்பு நின்றது. தேவர்களால் இச் செய்தியை அறிந்த திருமால் காமதேனுவை அழைத்து உலகப் படைப்பை நிகழ்த்துமாறு கூறினர். யானை மேலிடும் எழில் அம்பாரியைப் பூனைமேல் வைத்தல் ஒக்கும், தான் அப் பணியை மேற் கொளல் என்றஞ்சிய காமதேனுவை நோக்கித் திருமால் 'படைத்தற் றொழிற்கு நீ உரிமை உடையை யல்லை யாயினும்,

அன்புக் கெளியவன் அமலநாயகன், வன்பினுக்கரியவன், மழவெள்ளேற்றினனுய சிவபெருமானை, ஒருத்தலின் (யானை) அழிமதக் கலுழியும், அலர்ந்த பூம்பொழில் பொழிமதக் கலுழியும் மிக்க கழிசிறப் பிமைய வரையில் வழிபடின் எய்துவாய்' எனப் பணித் தனுப்பினுர். அங்ஙனமே ஆயிரம் தேவ வாண்டுகள் தவமியற்றியும் இறையருள் கிடைக்கப் பெருமையினுல் ஆண்டு வந்த நாரத முனியிடம் தன் கவலையைப் புகன்றது. நாரத முனிவர் காமதேனுவுக்குத் திருவைந் தெழுத்தை யுபதேசித்து, பிப்பிலாரணியம் எனும் பேரூரின் இருப்பிடத்தைக் கூறி ஆங்குச் சென்று இறைவனை வழிபடுமாறு ஏவினர். காமதேனு அங்ஙனமே காஞ்சியில் நீராடி, வாஞ்சையோடு ஆதிலிங்க மூர்த்தி மீது தன் பாலைச் சொரிந்து நீரேந்து சடைமுடி நிமலனுரை வழிபட்டு வந்தது.

ஒருநாள் காமதேனு முற்பகற் பூசையாற்றிச் சிவயோகத் திருந்தது. பிற்பகற் கதிரோன் மேற்பால் வேலையைச் சாரச் சென்ருன். சந்திரன் உதயமானுன். நிறை மதியின் நிலவைக் கண்டு களிகூர்ந்து காமதேனுவின் கன்று துள்ளிக் குதித்து விளையாடத் தொடங்கியது. நிருத்த மாட்டயர் நிருமலன் ஓர் கன்றுருவாகித் திருத்த மேவரச் செய்திடு நடனமீதோ வென இமையா நாட்டத் திமையவரும் விழிப்பய னுறுமாறு கூத்தாடிய கன்று, ஆதிலிங்க மூர்த்தியை உள்ளுறப் பொதிந்து வெளியில் நின்ற புற்றினை மிதித்தது. நீட்டியிட்ட கால் நிருமலன் சென்னியிலழுந்திப் பூட்டிப் போட்டாற் போல் எடுக்க வாராமையால், தன் கோட்டினுல் குத்தி அப் புற்றை யுடைத்தது. குளம்பு அழுந்திய காயத்திலும், கோடுபட்ட காயத்திலும் குருதி பெருக்கெடுத்தது.

பூசிக்கவந்த காமதேனு நிகழ்ந்தவற்றை யறிந்து, இறைவன் திருவடிப் பிழைத்தல் சற்றே யாயினும் செய்த பாவி மருவிய குலத்து முன்னர் வந்திறந்தோரெல்லாரும், இருக்கின்ருரும், மேல்வரும் அனைவரும் நிரயமுற்று ஊழிகள் பலவுந் துய்ப்பார், இப்பழி எப்படிக் கழியுமோ எனப் பெரிதும் வருந்தியது. இறைவன் இடபாரூடராகத் தோன்றி, "உனதிளங்கன்றறியாமையிற் கண்டதிப் பிழை, உன்பிழையன்று,

"குளப்படிச் சுவடும்வன் கோட்டி னேறும்நம்
வளப்படு முடிக்கணி மதியி னுக்கினேம்
உளப்படு முமைமுலைச் சுவடொண் கைவளைத்
திளைப்புறு தழும்பும்போன் மகிழ்சி றத்தலின்"

என்றும்,

"காம தேனுபுர மென்ன விந்நகரி
காம மல்குபெயர் கொள்ளவும்
நீம னுதரவின் வைக லாளரசி
னீடு சூழலிது பட்டியென்
நாம மேவவு நமக்கு மப்பெயர்மு
னுட்டி நாதனென வோதவும்
ஏம மாருலக முற்று மின்புற
வீண்டு வைக்குவ ராக்கினேம்"

என்றருளினுர்.

இன்றும் பட்டிப் பெருமானது திருமுடியில் கன்றின் காற்குளம்பின் சுவட்டினையும், கொம்பு குத்திய சுவட்டினையும் அனைவரும் காணலாம்.

**பிறவா நெறி**

இத்தலம் முத்தித் தலமாகும். இத்தலத்தை யடைந்தோருக்குப் பிறப்பிறப்பு வாதனைகள் இல்லை என்பதற்குச் சான்ருகப் பிறவாப் புளியும் இறவாப் பனையும் இன்றுமுள. இப்புளியம் பழத்தின் விதைகள் முளைப்பதில்லை. முளைத்தாலும் முளை விரைவில் கருகி விடுகின்றது. இத் தலத்தில் இறக்கும் உயிர்கட் கெல்லாம் இறைவன் ஐந்தெழுத்தை யுபதேசித்துத் தன்னிடமீர்த்துக் கொள்கிருன். ஆதலின் ஈண்டிறந்தார் மற்றீண்டு வாரா நெறியை அடைவர். ஆதலின் இத்தலம் 'பிறவா நெறி' எனப்பட்டது.

பேரூர்ப் புராணம், கரிகாற் சோழன் கொலைப்பழி தீர்த்த படலத்தில் கச்சியப்ப முனிவர்,

"அறமா றரிக்குங் கரிகாலன்
வரையன் றனக்கு மாதருக்கும்
பிறவா நெறிதந் தருளுதலாற்
பெருநீர்க் காஞ்சி நதிதனக்கும்

*உறவா யுயிர்கட் கருள்சுரக்கு*
*முமையாள் கொழுநன் பேரூர்க்கு*
*மறவா துரைக்கு மூவுலகும்*
*வழங்கும் பிறவா நெறிநாமம்!"*

என்று கூறினர். கொங்கு மண்டல சதகமும்,

*"முழங்குங் கடலுல கத்தாசை*
*நீத்துமுக் கண்ணரசைத்*
*தொழுங் கையுடைய தவப்பெரி*
*யோர்களுந் தொல்லைமனத்*
*தழுங்குந் துயரகற் றும்பிற*
*வாநெறி யாமிதென*
*வழங்குந் தலந்திருப் பேரூர்*
*பயில்கொங்கு மண்டலமே"* (82)

எனக் கூறுகின்றது.

## சுந்தரரின் அனுபவம்

சுந்தர மூர்த்திகள் சோணுட்டுத் தலங்களைத் தரிசித்து விட்டுக் கொங்கினிற் பொன்னித் தென்கரைக் கறையூர் திருப் பாண்டிக் கொடுமுடியை வழிபட்டு, முறுகும் ஆதரவால் காஞ்சிவாய்ப் பேரூர் குறுகினர். தம்மையாண்டவர் கோயிலுட் புக்கு நித்தனர் தில்லை மன்றுணின்ருட வீடிய கோல நேர்காட்டக் கைத்தலங் குவித்துக் கண்களானந்தக் கலுழி நீர் பொழிதரக் கண்டார்.

*"காண்டலுந் தொழுது வீழ்ந்துடனெழுந்து*
*கரையிலன் பென்பினை யுருக்கப்*
*பூண்டவைம் புலனிற் புலப்படா வின்பம்*
*புணர்ந்துமெய் யுணர்வினிற் பொங்கத்*
*தாண்டவம் புரியுந் தம்பிரா னுரைத்*
*தலைப்படக் கிடைத்தபின் சைவ*
*வாண்டகையாருக் கடுத்தவந் நிலைமை*
*விளைவையா ரளவறிந் துரைப்பார்".*
*—ஏயர்கோன் கலிக்காமர்*

தில்லைக் கூத்தப்பிரானை நம்பியாரூரர் கண்ட காலை, அவரனுபவித்த இன்பத்தைச் சேக்கிழார் பெருமான் 'ஐந்து பேரறிவுங் கண்களே கொள்ள' எனுந் திருப்பாட்டில் அளவறிந் துரைத்தார். ஆனல் இம்மேலைச் சிதம்பரத்தில் சைவவாண்டகைக் கடுத்தவந் நிலைமை விளைவை யாரள வறிந் துரைப்பார் என்ருர்.

குமரகுருபரரிடம் மாசிலாமணி தேசிகர் 'ஐந்துபேரறிவும்' என்ற திருப்பாடலின் அனுபவ உண்மையைக் காட்டுக என்ன, குமரகுருபரரின் வாக்குத் தடைப்பட்டதாம். ஆனல் அவ்வனுபவத்தை அளவிட்டுக் கூறிய சேக்கிழார், திருப்பேரூரில் நம்பியாரூரரின் அனுபவத்தை அளவிட்டுரைக்க முடியவில்லை எனில், அவ்வின்பத்தை யாரே அளவிட்டுரைக்க வியலும்!

## அழகிய திருச்சிற்றம்பலம்

ஆரூரர் பேரூரை யணைந்து இறைஞ்சிப் போய்த் தில்லையில் நீரூருஞ் சடையரை வழுத்தும் பதிகத்தில் பாரூர் பலவற்றுள்ளும் பேரூரே யிறைக்குரிய பதியாமாறு நாரூருமுளத்தினுற் சிறப்பித்துப் பாடினர். 'பேரூரர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம் பலத்தே பெற்ருமன்றே' என்றிசைக்கக் கேட்ட தில்லை வாழந்தணர்கள்,

*"எம்பிரா னமர்தில்லை*
*யித்தலம்போ லொருதலமும்*
*உம்பரார் தொழுமுலகி*
*லுயர்ந்திருப்ப திலையன்றே*
*நம்பிபே ரூர்சிறப்ப*
*நயந்தெடுத்த தென்னென்ருர்."*

வன்ருெண்டர் வினவிய அந்தணர்களை நோக்கி 'ஈண்டு நடம் புரிவதுபோ லெம்பிரான் ஆண்டும் அனவரதமும் நல்லானந்த நடம் புரியும். மேலைச் சிதம்பரமென்றழைக்கிற்கும் அத்தலத்திற் சுகவீடு தரலன்றி அறமாதிமூன்றும் உறுத்துவ தில்லை. அதன் பெருமை மாதொருபாலுடைய பிராற் கல்லாது மதிப்பரிதாம்' என்ருர்.

அதுகேட்ட தில்லைவாழந்தணர்பேரூரை யடைந்து அம்மையையும், அப்பரையும், அரசம்பலவாணரையும் வணங்கி, காலவேசுவரர் ஆலயத்திற்கு அக்கினி திக்கில் சிவலிங்கம் தாபித்து, பூசித்து வந்தனர். அது ஞான்று வெள்ளியம்பலத்து இறைவன் நடனம் வியப்புறக் காட்டினர்; கண்டோர் உள்ளிய உயிரும் உடலும் ஒன்ருக உளமழிந்த வசமாக நின்ருர். தில்லை வாழந்தணர் வழிபடு கடவுள் அழகிய திருச்சிற்றம்பல முடையாராதலின் அவர்கள் திருப்பேரூரில் தாபித்த அமல நாயகர்க்கும் அழகிய திருச்சிற்றம்பல முடையா ரெனும் பெயராயது,

''அழகிய கீழைச் சிதம்பர வரைப்பி
னந்தணர் பூசைகொண் டருள்வார்
அழகிய திருச்சிற் றம்பல முடையா
ராதலி னவர்கள்பூ சிப்ப
அழகிய மேலைச் சிதம்பர வரைப்பி
னமர்ந்தரு ளமலநா யகர்க்கும்
அழகிய திருச்சிற் றம்பல முடையா
ரெனும்பெய ராயது மாதோ.''

—பேரூர்ப்புராணம்

கல்வெட்டுக்கள்

இங்குக் காணப்படும் கல்வெட்டுக்களை ஆய்ந்த மூதறிஞர் கோவைகிழார். கோ. ம. இராமச்சந்திரன் செட்டியார் அவர்கள் பேரூர் ஆலயத்தின் அர்த்த மண்டபமும் மகா மண்டபமும் கட்டியது சோழநாட்டுச் சோழர்களே, கொங்குச்சோழர்கள் அல்லர் என்றும் மகாமண்டபத்தைக் கட்டியவன் இராசேந்திர தேவன் (1055-62) என்றும் ஆய்ந்து முடிவு செய்துள்ளார்.

ஆற்றுத்துறை கரிகாற் சோழனால் கட்டப்பட்டது. அதற்குச் சோழன் துறை என்பது பெயர்.

கி. பி. 1600க்குப் பின் மதுரை நாயக்கர்கள் கொங்கு நாட்டைப் பிடித்து அரசாண்டனர். திருமலை நாயக்கரின் (1625-1659) சகோதரரான அளகாத்திரி நாயக்கரால் இன்றுள்ள கனகசபை கட்டப்பட்டது. இக்கனகசபையின் அருமை பெருமைகளையும் சிற்ப வேலைப்பாடுகளையும் நேரிற் கண்டே அனுபவிக்க வேண்டும். அளகாத்திரி நாயக்கரின் உருவமும் ஈண்டுளது.

இக்கோயிலின் கர்ப்பக்கிரகம் கி. பி. 1633இல் மீண்டும் புதுப்பிக்கப்பட்டதென்று ஒரு கல்வெட்டுக் கூறுகின்றது (AR 559/1893)

உ கலியுக சகாற்தம் ௪௯௯
௭௱௩௰௪ க்குமெல் வாயுறை கா-
நாட்டில் களந்தைக் காணிப்பு
லுவர் பெரும்பற்றும் சந்திர குமார
க்கொப்பண மண்ணுடியார் கந்தசு
வாமிக் கவுண்டர் கட்டுவித்த
கெற்பக் கிறகம் முகிந்தது சித்தாத் •
திரி வருஷம்.

எனவே சோழமன்னர் திருப்பணிக்குப் பிறகு கர்ப்பக்கிரகம் இற்றைக்கு 337 ஆண்டுகட்கு முன் கட்டப்பட்டதெனத் தெரிகிறது.

இப்பேரூர் கி. பி. 8 அல்லது 9 நூற்றாண்டுகளில் சேரவமிசத்தார் ஆளுகையில் இருந்தது. பண்டைத் தமிழ் எழுத்தில் உள்ள கல்வெட்டொன்றில் கோக்கண்டன் ரவி, இரவி கண்டன் போன்ற அரசர் பெயர்களைக் காண்கிறோம். இதுவே இங்குள்ள கல்வெட்டுக்களிற் பழைமையானதாம்.

பின்னர்ப் பேரூர் பாண்டியர் ஆளுகையில் இருந்திருக்கின்றது. மாறன் சடையன் என்ற பாண்டியன்,

''காஞ்சிவாய்ப் பேரூர்புக்குத்
திருமாலுக் கமர்ந்துறையும்
குன்றமன்னதோர் கோயிலாக்கியும்
ஆழிமுன்னீர் அகழாக
அகல் வானத் தகடுரிஞ்சும்
பாழிநீண்மதில் பரந்தோங்கும்
பகலவனும் அகலவோடும்''

கோயில் எடுப்பித்தானென்று ஒரு சாசனம் (Museum Plates A Jatavarman 453/1906) கூறும். கர்ண பரம்பரையான செய்தி யொன்று, விஜயநகர ஆளுகையின் போது தெற்காநம்பி அரசர்களைச் சேர்ந்த சங்கரையன் மகன் மாதையன் என்னும் வீரசைவ படைத்தலைவன் ஒருவன் இக்குன்றமன்னதோர் திருமால் கோயிலை இடித்துத்தான் திருக்கோயிலின் முன்னருள்ள அழகிய திருக்குளத்தைக் கட்டினான் என்று கூறும். இங்கிருந்த இலட்சுமி நாராயணமூர்த்தி இப்பொழுது கோயிலின் ஒரு மூலையில் உள்ளது. குளத்திற்குக் கிழக்குக் கரையில் மாதையனால் கட்டப்பட்ட மாதேசுவன் கோயிலொன்று முளது.

அண்மையில் நாட்டுக் கோட்டை நகரத்தார் பல இலட்சரூபாய் செலவில் கோயிலுக்குத் திருப்பணி செய்தனர்.

அம்பலவாணரின் அருட்டிறத்தான் கவரப்பட்டு நடுநாட்டினராகிய தவத்திரு சாந்தலிங்க சுவாமிகள், கச்சியப்பமுனிவர், பின்வேலப்ப தேசிகர் போன்ற ஞானச் செல்வர்கள் ஈண்டு வாழ்ந்து பேறடைந்துள்ளனர்.

''மாமறை முனிவர் வாழ்க
மரகத வல்லி யோடும்!
பாமலி புலவர் போற்றும்
பட்டிநா யகனார் வாழ்க!
காமரு வெள்ளி மன்றிற்
கண்ணுத னடனம் வாழ்க!
கோமனு நீதி வாழ்க!
குவலயம் முழுதும் வாழ்க!''

# "திரு ஆலவாய்"

[திரு. கி. பழநியப்பன்]



மதுரைமாநகரில் 20-11-1908இல் கிருட்டிணபிள்ளை என்பார்க்கும் உமயபார்வதி அம்மையாருக்கும் தோன்றியவர் இவர். மதுரை ஐக்கிய கிறித்துவ உயர் பள்ளியிலும் திருச்சி தூயசூசையப்பர் கல்லூரியிலும் படித்தவர் தம் தந்தையார் மதுரை புது மண்டபத்தில் நடத்திய புத்தகக் கடையில் அமர்ந்து தம் தந்தையாரோடு இணைந்து தமிழ்த் தொண்டாற்றிவந்தார். இளமையிலேயே பல தமிழறிஞர்களோடு கொண்ட தொடர்பால் இவர் மதுரை, திருவள்ளுவர் கழகப்புரவலராக, மதுரைத் தமிழ்ச்சங்கச் செயலராக உயர்ந்துள்ளார். மதுரையில் பல இலக்கிய மாநாடுகளும் விழாக்களும் நடைபெறுதற்கு உறுதுணையாக இருந்துள்ளார். மதுரைத்தமிழ்ச்சங்கப் பொன்விழாச் செயலாளராகப் பணியாற்றினர். மதுரைத் திருவள்ளுவர் கழகம் தோன்றுவதற்குக் காரணராயிருந்தவர் இவரே. 'விவேகானந்த அச்சக'த்தின் உரிமையாளர். மதுரையைப் பற்றி இவர் எழுதியுள்ள 'கோயில் மாநகர்' எனும் நூல் சிறந்த படைப்பு.

"அண்ணல் ஆலவாய்
நண்ணி னன்றனை
எண்ணி யேதொழத்
திண்ணம் இன்பமே"

அங்கயற்கண் அம்மையுடன் அமர்ந்த ஆலவாய் அண்ணலின் திருக்கோயில் வரலாற்றுப் புகழ் பெற்றதாகும். அக்கோயிலின் அமைப்பு, தோற்றம், அதிற் காணும் கல்வெட்டுகள், அங்கு நடைபெறும் விழாக்கள் ஆகியவற்றை ஆய்ந்தால் தமிழ் நாட்டின் வரலாற்றை அறியலாம். அரச வழிமுறையினர் வரலாற்றுடன், தமிழ் மொழியின் தொன்மை, சிறப்பு, வளர்ச்சி; மக்களின் இல்லற முறை, பண்பாடு, தொழில், வாணிகம், கலைத்திறன் முதலிய வற்றையும் அதன் மூலம் அறிந்து கொள்ளலாம். மதுரை நகர அமைப்பும், திருக்கோயிலின் அமைப்பும் தமிழ் மக்களின் நகர அமைப்புக் கலைக்கும், சிற்பக் கலைக்கும், கட்டிடக் கலைக்கும் எடுத்துக்காட்டுகளாக விளங்குகின்றன.

திருவிளையாடற் புராணத்தில் கூறப்படும் பாண்டியர் வழிமுறைக்கு வேறு வரலாற்றுச் சான்றுகள் காண்பது அரிதெனினும் அதன் தொன்மையை யாராலும் மறுக்க இயலாது. சிவபெருமான் 64 திருவிளையாடல் நடத்திய இடம் மதுரை. அரசர்களுக்காகவும், பாமர மக்களுக்காகவும், புலவர்களுக்காகவும், விலங்குகளுக்காகவும், பறவைகளுக்காகவும், சொக்கநாதப் பெருமான் நடாத்திய திருவிளையாடல்களே மதுரைத் தலப்புராணமாக விளங்குகின்றது.

ஆதியில் மதுரை கடம்பவனமாக இருந்தது. அக்காட்டில் சிவலிங்கம் ஒன்றை முதல் முதலாகக் கண்டவன் தனஞ்சயன் என்ற ஒரு வணிகன். அத்திருமூர்த்தியை நடுவாக வைத்துக் காட்டை அழித்து அங்கு ஒரு நகரத்தை அமைத்தவன் குலசேகர பாண்டியனுவான். இவ்விருவருடைய சிலைகளைத் திருக்கோயில் பொற்றாமரைக் குளத்தின் வடகரையிலுள்ள தூண்களில் காணலாம்.

கி. பி. 640 ஆம் ஆண்டில் மதுரைக் கோயில் எவ்வாறு தோற்றமளித்தது என்பதை அதனை நேரில் கண்ட திருஞான சம்பந்தப் பெருமான் கூறுகின்றார். ஆலவாய் என்ற பெயரையுடைய திருக்கோயில் உறுதியான மதில்களால் சூழப்பெற்றதென்றும் அது பல அழகான கோபுரங்களையுடையு தென்றும் கூறுகின்றார்.

*"குலச் சிறை குலாவுங்*
*கோபுரஞ் சூழ் மணிக்கோயில்"*

என்றும்

*"கபாலிநீள் கடிம்மதில் கூடலால வாயிலாய்"*

என்றும் கூறுகின்றார்.

கபாலி மதில் என்பது இன்று முக்குறுணி விநாயகரை யொட்டி அமைந்துள்ள சுற்று மதிலாகும். திருஞானசம்பந்தர் காலத்தில் கோயிலின் அளவு அதுவே எனத் தெரிகின்றது. அன்று கோயில் 250 அடி நீளமும், 156 அடி அகலமும் உடையதாக இருந்தது. இன்று அக்கோயில் 847 அடி நீளமும், 792 அடி அகலமும் உள்ளதாகக் காட்சி அளிக்கின்றது. பாண்டிய மன்னர்களும், நாயக்க அரசர்களும், சிற்றரசர்களும், அமைச்சர்களும், தனிப்பட்ட செல்வர்களும், நாட்டுக்கோட்டை நகரத்தார்களும் அவ்வப் பொழுது ஒவ்வொரு பகுதியாகக் கட்டியதின் பயனாகக் கோயில் நாள்தோறும் வளர்ந்து இன்றுள்ள நிலையை அடைந்துள்ளது.

இடையே 13ஆம் நூற்றாண்டில் முகம் மதியர் படையெடுப்பால் கோயிலின் பெரும் பகுதி சிதைவுற்றன. பின்னர் வந்த நாயக்க மன்னர்கள் அவற்றை மறுபடியும் கட்டினர். இவ்வாறு அவ்வப்பொழுது தோன்றிய அரசியல் புயல், சமயப் புயல்களை யெல்லாம் எதிர்த்து நின்று திருக்கோயில் வளர்ச்சியடைந்து வருவது திருவருளே யாகும். 1963இல் நடைபெற்ற மாபெரும் திருப்பணியின்பொழுது புதுப்பிக்கப் பெற்ற 14 கோபுரங்களுக்கும் ஒரே நேரத்தில் குட முழுக்கும் ஆராதனையும் நடைபெற்ற காட்சி கண்கொள்ளாக் காட்சியாக இருந்ததுடன், அது வரலாறு காணாத ஒரு நிகழ்ச்சியாகவும் இருந்தது.

திருக்கோயில்களுள் மதுரைக் கோயிலுக்குப் பல தனிப் பழக்க வழக்கங்களும் சிறப்புக்களும் உண்டு. இவ்வாலயத்தில் முதலில் மீனாட்சி அம்மனுக்குத்தான் வழிபாடு நடைபெறுவது வழக்கம். அதனால் கோயிலுக்கு வருபவர்களும் அம்மன் சந்நிதி வாயில் வழியாக வருவதையே பல ஆண்டுகள் வழக்கமாகக் கொண்டு விட்டனர்,

18 அடி அகலமும், 25 அடி உயரமும் கொண்ட அம்மன் சந்நிதி வாயில், தெரு மட்டத்தில் மிக அழகாக அமைந்துள்ளது. கோயிலின் மற்ற வாயில்களில் உள்ளது போன்று இதில் பெரிய கோபுரம் எதுவு மில்லை. ஆனால் முகப்பில் விநாயகர், சுப்பிரமணியர் உருவங்களும் நடுவே திரு மீனாட்சிசுந்தரர் திருக்கலியாண உருவமும் சுதைகளாய்ச் செய்யப்பெற்று வாயிலின் மேல் அழகாக அமைக்கப் பெற்றுள்ளன. இவ்வாயில் வழியாக நுழைந்ததும் கண்களைக் கவரும் சிற்பங்களும் சித்திரங்களும் நிறைந்த ஒரு மண்டபத்தைக் காண்கின்றோம். 46 அடி நீளமும், 18 அடி அகலமும் கொண்ட இம்மண்டபத்தின் மேல்தளம் அரை வட்ட வடிவில் வளைவு முகடாக அமைந்துள்ளது. இதனை அட்ட சக்தி மண்டபம் என்றும் அட்ட லட்சுமி மண்டப மென்றும் அழைக்கின்றனர்.

அட்ட சக்தி மண்டபத்தை அடுத்து 160 அடி நீளமும், 110 அடி அகலமும் உள்ள ஒரு பெரிய மண்டபத்தைக் காணலாம். ஒரே கல்லிற் செதுக்கப் பெற்ற 22 அடி உயரமுள்ள 110 தூண்களை ஆறு வரிசைகளிற் கொண்டுள்ள இம்மண்டபம் மீனாட்சி நாயக்கர் மண்டபம் என வழங்கப் படுகிறது. ஒவ்வொரு தூணிலும் மேற் பகுதியில் யாளியின் உருவமும் கீழ்ப்பகுதியில் சிறிய சிற்ப வேலைப்பாடுகளும் காணப்படு கின்றன.

மீனாட்சி நாயக்கர் மண்டபத்தினின்றும் கோயிலுக்குள் நுழையும் வாயிலில் ஏழு நிலைகளையுடைய கோபுரம் ஒன்றிருக்கிறது. இதுவே அம்மன் சந்நிதியில் பெரிய கோபுரமாகும். இக் கோபுரத்தின் உயரம் 117 அடி ; அடித்தளம் 38 அடி அகலமும், 78 அடி நீளமும் உடையது. இதில் 730 சுதைகள் உள்ளன. இதைத் தளவாய் அரியநாத முதலியாரின் குமாரர் காளத்தி யப்ப முதலியார் கி.பி. 1569இல் கட்டினார்.

சித்திரக் கோபுரத்தை அடுத்து 25 அடி அகலமும், 60 அடி நீளமும் உள்ள ஒரு மண்டபம் உள்ளது. அதனை முதலிப்பிள்ளை மண்டபம், முதலி மண்டபம், இருட்டு மண்டபம் என்று பலவாறு அழைப்பர். இம் மண்டபத்தின் இருபுறமும் சிற்ப வேலைப்

பாடுகள் நிறைந்த அழகான சிலைகளை யுடைய தூண்கள் இருக்கின்றன. அத் தூண்களில் உள்ள சிலைகளனைத்தும் புராண வரலாறு ஒன்றைக் குறிப்பனவாகும்.

முதலிப்பிள்ளை மண்டபத்தைத் தாண்டி உள்ளே சென்றால், கண்டோர் மனத்தைக் கொள்ளைகொள்ளும் ஒரு காட்சியை அங்குக் காணலாம். 165 அடி நீளமும், 120 அடி அகலமுமுடைய நீண்ட சதுர வடிவில் நான்கு புறமும் கருங்கற்களாலான அழகான படிக்கட்டுகளையுடைய பொற்றாமரைக் குளமும் அதன் தென்மேற்கு மூலையில் வெளிப் பிரகாரத்திலுள்ள கம்பீரமான தெற்குக் கோபுரமும் காட்சியளிக்கின்றன. மதுரைக் கோயிலை வெளியிடங்களுக்கு அறிமுகப்படுத்தும் புகைப்படங்களில் பெரும் பாலானவை இக்காட்சியைக் காட்டுவன வாகவே இருக்கும்.

பொற்றாமரைக் குளத்தைச் சுற்றி நான்கு கரைகளிலும் நடைபாதை மண்ட பங்களிருக்கின்றன. வடகரையிலுள்ள மண்டபம் அம்மன் சந்நிதிக்கு நேராக அமைந்துள்ளது. இரண்டு பத்திகளை யுடைய இம்மண்டபத்திலுள்ள தூண்களில் சங்கப் புலவர்களின் உருவங்கள் செதுக்கப் பெற்றுள்ளன.

இறைவனின் அறுபத்து நான்கு திரு விளையாடல்களைச் சித்திரிக்கும் வண்ணப் படங்கள் பலகைகளில் எழுதப் பெற்றுப் பொற்றாமரையின் வடக்குக் கரை, கிழக்குக் கரை மண்டபச் சுவர்களில் பொருத்தப் பட்டுள்ளன. வடக்குப்புறச் சுவரின் மேல் பகுதியில் சுவாமி, அம்மன் கோயில்களின் இரண்டு மாதிரிச் சித்திரங்கள் வண்ணமுறத் தீட்டப் பெற்றுள்ளன.

பொற்றாமரைக் குளத்தை வலமாகச் சுற்றி அம்மன் சந்நிதிக்குப் போகும் வழியில் ஊஞ்சல் மண்டபம் இருக்கின்றது. இம்மண்டபத்தின் மேற்குப்புறத்தில் கருஞ் சலவைக் கல் தூண்களையுடைய ஊஞ்சல் மேடை இருக்கிறது. இங்கு ஒவ்வொரு வெள்ளிக்கிழமை மாலையிலும் சுவாமி, அம்பி கையின் சுவர்ண விக்கிரகங்களை ஊஞ்சலில் வைத்து வழிபடுவார்கள்.

ஊஞ்சல் மண்டபத்தையடுத்து அம்மன் சந்நிதி வாயிலுக்கு முன்னுள்ள அழகான மண்டபமே கிளிக்கூட்டு மண்டபமாகும். இதனைச் சங்கிலி மண்டபம் என்றும் கூறுவர். இங்குப் பெரிய கூண்டுகளில் கிளிகளை வளர்ப்பதால் கிளிக்கூட்டு மண்டபம் என்று இதற்குப் பெயர் ஏற்பட்டது.

கிளிக்கூட்டு மண்டபத்திலிருந்து ஒரு சிறு கோபுர வழியாக அம்மன் கோயிலுக்குச் செல்லவேண்டும். அவ்வாயிலின் மேலுள்ள கோபுரம் 40 அடி உயரமும் 3 நிலைகளும் உடையதாகும். அதன் அடித்தளம் 27 அடி நீளமும் 20 அடி அகலமுமுடையது. இதில் 46 சுதைகள் உள்ளன.

இவ்வாயிலின் வழியாக உள்ளே சென்றால் தங்கக் கவசம் இடப்பெற்ற கொடி மரத்தைக் காணலாம். அஃது இருக்குமிடம் அம்மன் கோயிலின் இரண்டாம் பிரகார மாகும். அப்பிரகாரத்தின் மேற்குக் கோடியில் கொலு மண்டபம் இருக்கின்றது. சலவைக் கற்களாலான இவ்வழகிய மண்ட பத்தில், ஆண்டுதோறும் புரட்டாசித் திங்களில் நவராத்திரி விழாவின்போது நாள்தோறும் அம்மனின் கொலுக் காட்சி நடைபெறும். இம்மண்டபத்தை வலமாகச் சுற்றி மேற்குப் பிரகாரத்திற்கு வந்தால், கோபுர வாயிலொன்று தென்படும். அது 'அம்மன் கோயில் மேற்கு ஐந்து நிலைக் கோபுரத்'தின் வாயிலாகும்.

இப்பிரகாரத்தைச் சுற்றி, முன்கூறப் பெற்ற அம்மன் சந்நிதிக் கம்பத்தடிக்கு மீண்டும் வந்து ஆறுகால் பீடத்தின் வழி யாக உள்ளே செல்லவேண்டும். இவ் ஆறு கால் பீடம், வரலாற்றுப் புகழ்பெற்றது. இம் மண்டபத்திலேயே குமரகுருபர அடிகள், தாம் பாடிய மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழைத் திருமலை நாயக்கர் முன்னிலையில் அரங்கேற்றஞ் செய்தார்.

இம்மகா மண்டபத்தின் மேற்குப் பகுதி யில் மீனாட்சி அம்மையின் அர்த்த மண்டப மும் கருவறையும் உள்ளன. மகாமண்டபத் தில் கம்பித்தடுப்புகள் வரிசையாக அமைக் கப்பெற்றுள்ளன. இங்கிருந்து கருவறையில் நின்ற திருக்கோலத்துடன் அருள்பாலிக்கும் கண்களுடன் கம்பீரமாகக் காட்சியளிக்கும் அங்கயற் கண்ணியின் அழகிய திருவுருவத் தைக் கண்டு வழிபடலாம். அம்மனைச் சுற்றி வரும் முதற்பிரகாரம் இம்மண்டபத்திலேயே

தொடங்கி இதிலேயே முடிவு பெறுகின்றது. இப்பிரகாரத்தின் தென்மேற்கில் விநாயகர் கோயிலும் வடமேற்கில் முத்துக்குமரர் கோயிலும் அமைந்துள்ளன. இவ்விரு கோயில்களும் மிகவும் பழுதடைந்திருந்தமையாலும், மேற்சுவர்கள் மண்ணுல் கட்டப் பெற்றிருந்தமையாலும், அவைகள் அனைத்தையும் இடித்துவிட்டு 1960-63 திருப்பணியில் கருங்கற்களினுல் மண்டபங்களைப் புதிதாகக் கட்டியுள்ளனர். மேலும் மகாமண்டபத்திலுள்ள பள்ளியறையும் செப்பனிடப்பெற்று உட்புறம் சலவைக்கல்லினுல் அமைக்கப் பெற்றுள்ளது. இவ்விரண்டாம் பிரகாரமுட்பட அம்மன் கோயிலின் நீளம் 225அடி, அகலம் 150 அடி ஆகும்.

அம்மன் கோயிலிலிருந்து சுவாமி கோயிலுக்குச் செல்ல வேண்டுமாளுல், கிளிக்கூட்டு மண்டபத்திற்கு வந்து அம்மண்டபத்தின் வடகோடியிலுள்ள கோபுர வாயில் வழியாகச் செல்ல வேண்டும். அக்கோபுரத்தை ''நடுக்கட்டுக்கோபுரம்'' என்று கூறுவர். இதனைத் தாண்டி உள்ளே சென்ருல் 8 அடி உயரமுள்ள முக்குறுணிப்பிள்ளையார் உருவத்தைக் காணலாம். இவ்விநாயகர், சுவாமி கோயிலின் இரண்டாம் பிரகாரத்தில் தென்புறமாக உள்ளது. இப்பிள்ளையார் சந்நிதிக்கு நேராகத் தெற்குக் கோபுர வாயில் அமைந்துள்ளது.

இவ்விரண்டாம் பிரகாரத்தின் வெளிச் சுற்றுமதில் 'சுந்தரபாண்டியன் மதில்' எனப்படும். உட்சுற்று மதில் 'கபாலி மதில்' எனப்படும். வெளிச்சுற்று மதில் 420 அடி நீளமும் 310 அடி அகலமும் உடையது; கபாலிமதில் 250 அடி நீளமும் 156 அடி அகலமும் உடையது.

மதுரைக் கோயிலில், பார்ப்போர் மனத்தைக் கொள்ளைகொள்ளும் வகையில் சிற்பங்கள் நிறைந்த இடம் 'கம்பத்தடி மண்டபம்' ஆகும். இஃது இரண்டாம் பிரகாரத்தில் சுவாமி சந்நிதியில் உள்ளது. நந்தி மண்டபம், பலிபீடம், தங்கக்கொடிக் கம்பம் ஆகியவற்றைச் சுற்றியுள்ள உயரமான எட்டுக் கருங்கல் தூண்களிலும், இறைவனின் பல்வேறுபட்ட தோற்றங்களைச் சிற்பங்களாக வடித்துள்ளனர். புகழ் பெற்ற மீனுட்சி திருமணக்கோலத்தைச் சித்திரிக்கும் சிற்பம், இங்கேதான் அமைந்துள்ளது. அதில் மணமகன் கோலத்தில் நிற்கும் சிவபெருமானின் கம்பீரமான தோற்றமும், மணமகள் கோலத்தில் நிற்கும் மீனுட்சியம்மையின் நாணமும் புன்சிரிப்பும் கொண்ட முகத்தோற்றமும், எத்தகையோர் தம்நெஞ்சையும் ஈர்க்க வல்லனவாய் அமைந்துள்ளன ! பிறதூண்களிலும் சிறந்த வேலைப்பாடமைந்த சிற்பங்கள் இருக்கின்றன.

கம்பத்தடி மண்டபத்திலிருந்து சுவாமி கோயிலுக்கு நுழையும் வாயிலில் இருபுறங்களிலும் 12 அடி உயரமுள்ள ஒரே கல்லாற் செய்யப்பெற்ற துவார பாலகர்களின் சிலைகள் $4\frac{1}{2}$ அடி பீடங்களின் மேல் வைக்கப் பெற்றுள்ளன.

ஆறுகால் பீடத்தின் வழியே உள்ளே சென்ருல் மகாமண்டபத்தைக் காணலாம். இது 'வெள்ளியம்பலம்' என்றும் வழங்கப் பெறும். கால் மாறியாடிய நடராசர் திருவுருவம் இங்கேதான் உள்ளது. அறுபத்துமூவர் உற்சவமூர்த்திகளும் இம்மண்டபத்தில் உள்ளனர். 1960-63 திருப்பணியில், வெள்ளியம்பலம், பொன்னம்பலம், இரத்தினசபை, தாமிரசபை, சித்திரசபை ஆகிய தலங்களின் வண்ணப்படங்கள் பலகைகளில் வரையப் பெற்று இம்மண்டபத்தில் வைக்கப்பெற்றுள்ளன. சுவாமிகோயில் மூலத்தானம் 'இந்திர விமானம்' என்று வழங்கப்பெறும்.

முன்கூறப்பெற்ற கம்பத்தடி மண்டபத்திற்கு நேர்கிழக்கே ஒரு கோபுர வாயில் உள்ளது. ஐந்து நிலைகளையுடைய இக் கோபுரம் 66 அடி உயரமுடையது. இதன் அடித்தளத்தின் நீளம் 42 அடி அகலம் 33 அடி. இதில் 280 சுதைகள் உள்ளன.

இக்கோபுர வாயிலில் உள்ள பேச்சியக்காள் மண்டபத்தின் வழியாக நேர்கிழக்கே சென்ருல் கம்பீரமாகத் தோற்றமளிக்கும் 46 தூண்களைக் கொண்ட ஒரு பெரிய மண்டபத்தைக் காணலாம். அதன் இருபுறங்களிலும் பலவகையான கடைகள் நிறைந்திருக்கின்றன. இம்மண்டபத்திற்கு வீரவசந்த ராயர் என்று பெயர்.

வீரவசந்தராயர் மண்டபத்தையொட்டி வடபுறம் எடுப்பான தோற்றத்துடன் மிகப்

பெரிதாகக் காட்சியளிக்கும் மண்டபமே புகழ் பெற்ற 'ஆயிரக்கால் மண்டப' மாகும். ஓர் அரிய கலைக்கூடமாக விளங்கும் இம்மண்டபத்தைக் கட்டிய பெருமைக்குரியவர் தளவாய் அரியநாத முதலியாரராவார்.

ஆயிரக்கால் மண்டபத்திலிருந்து வீர வசந்தராயர் மண்டபத்தின் வழியாகத் தெற்கு நோக்கிச் சென்றால் திறந்தவெளி முற்றத்தில் புதிதாக உருவாக்கப்பெற்ற மங்கையர்க்கரசி மண்டபம் ஒன்றைக் காணலாம்.

மங்கையர்க்கரசி மண்டபத்திற்குத் தென்புறமுள்ளதே மருது பாண்டியர்களாற் கட்டப்பெற்ற மண்டபமாகும். இதனைச் 'சேர்வைகாரர் மண்டபம்' என வழங்குகின்றனர். இடதுபுறமுள்ள தூணில் பெரிய மருதுவின் உருவச்சிலை உள்ளது. இம் மண்டபம், திருக்கலியாண மண்டபத்திற்கு எதிரில் கி. பி. 1795 இல் கட்டப்பெற்றது.

திருக்கலியாண மண்டபத்தினின்றும் அம்மன் சந்நிதிக்கு வரும் வழியில் உள்ள முத்துராமையர் மண்டபத்தையும், மீனாட்சி நாயக்கர் மண்டபத்தையும் கடந்து தெற்கே வந்தால் கற்கள் பாவப்பெற்ற முற்றத்தைக் காணலாம். அதுவே ஆடிவீதி எனப்படும். இது கோயிலுக்குள், சுவாமி அம்மன் கோயில்கள் இரண்டினையும் ஒருங்கே வலம் வருவதற்கேற்ற வகையில் அமைந்த பெரு வீதியாகும். இதைச் சுற்றியுள்ள பெரிய மதிலே கோயிலின் வெளிச்சுற்று மதிலாகும். அது 847 அடி நீளம் 792அடி அகலமுள்ள நீண்ட சதுர அமைப்புடையது. கீழ் ஆடிவீதி பெரும்பாலும் மண்டபங்களைக் கொண்டதாக அமைந்துவிட்டது. தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய மூன்று ஆடிவீதிகள் மட்டுமே திறந்த வெளியாக உள்ளன.

கீழைக் கோபுரத்திற்கு எதிரில், கீழ்ச் சித்திரை வீதிக்கும், கீழாவணிமூல வீதிக்கும் இடையில் அமைந்துள்ள மண்டபமே புகழ் பெற்ற 'புதுமண்டபம்' ஆகும். இது 333 அடி நீளமும் 105 அடி அகலமும் உடையது. 25அடி உயரமுள்ள 124 தூண்கள், நான்கு வரிசைகளாக அமைக்கப் பெற்றுள்ளன. இம்மண்டபத்தைச் சுற்றிலும், திருவிழாக் காலத்தில் தண்ணீர் தேங்குவதற்கேற்ற வாறு சிறிய அகழிகள் கட்டப்பெற்றுள்ளன. அதற்குத் 'திருவடிவாரம்' என்று பெயர். மண்டபத்தின் கிழக்கு மேற்குப் புறத்தூண்களில் கண்களைக் கவரும் சிற்பங்கள் பல காட்சியளிக்கின்றன. அவைகளில் கீழ்க் கண்டவை குறிப்பிடத்தக்கன:

(1)மீனாட்சியம்மையின் திருமணக் கோலம் (2)பத்திரகாளி (3)நடராசர் (4)கல் யானைக்குக் கரும்பளித்தது (5) ஏகபாத மூர்த்தி (6)சூரியசந்திரர் (7)மீனாட்சி மூன்று தனங்களுடன் தோற்றமளிக்கும் காட்சி (8) பன்றிக்குட்டிகட்குப் பால்கொடுத்த திருவிளையாடல் (9) புலிமுலை புல்வாய்க்கருளிய திருவிளையாடல் (10) கருங்குருவிக்குபதேசித்த திருவிளையாடல் (11) இராவணன் கைலாய மலை தூக்கிய காட்சி.

இத்தகைய சிற்பச் சிறப்புக்களையுடைய திருக்கோயிலைத் தன்னகத்தே கொண்டு விளங்கும் மதுரை கோயில்மாநகர் என்றே அழைக்கப்படுகிறது.

---

"பாயுடையார் விடுத்தபழி யழல்வழுதி
யுடல்குளிப்பப் பதிக மோதும்
சேயுடையா ரணந்திளைக்குஞ் செவியுடையார்
அளவிறந்த திசைக ளெட்டும்
தோயுடையார் பொன்னிதழித் தொடையுடையார்
விடவரவஞ் சுற்று மால
வாயுடையார் புகழ்பாடப் பெறுவேமேல்
வேண்டுவதிம் மனித யாக்கை."

(திருவிளை—திருவால-காப்பு)

---

# திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில் வரலாறு

[வித்துவான் திரு. பெ சுப்பையா]

செல்வருறை நெல்வேலியில் 1926 ஆவணி 12 இல் தோன்றியவர் இவர். திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் பயின்ற இவர் முதலில் சங்கரன்கோவில் உயர் நிலைப்பள்ளியில் ஆசிரியப் பணியேற்றார். கடந்த 20 ஆண்டுகளாகத் திருநெல்வேலியிலுள்ள நகர்மன்ற உயர்நிலைப்பள்ளியில் ஆசிரியராகப் பணியாற்றி வருகிறார். நெல்லையிலுள்ள சமரச சன்மார்க்க சங்கம், இலக்கியக் கழகம், யுனெஸ்கோ மன்றம், காந்திய போன்ற அமைப்புக்களில் ஈடுபட்டுச் சமயத்



தொண்டும் கலாச்சாரக் கழகம் தமிழ்த் தொண்டும் ஆற்றிவருகிறார். இவர்தம் கட்டுரைகள் 'அருள்ஒளி' போன்ற திங்கள் இதழ்களில் வெளியாகியுள்ளன. பல்வேறு மன்றங்களிலும் திருக்கோயில்களிலும் சமயச் சொற்பொழிவுகள், சமய இலக்கிய வகுப்புகளும் நடத்திவருகிறார். இவர் கவிதை புனைவதிலும் ஆற்றல் படைத்தவராவர். தென்னிந்திய சைவசித்தாந்தக் கழகத்தில் இயங்கும் தமிழ்ச் சங்கத்தில் புலவர் மாணவர்களைப் பயிற்றுவித்தவர்.

## 1. தோற்றம்

திருநெல்வேலி மாவட்டத்தில் எட்டு வட்டங்கள் இருக்கின்றன. அவற்றுள் தென்பாண்டி நகரென வழங்கப்பட்டது திருநெல்வேலி மாவட்டமாகும். பாண்டிய நாட்டின் மற்றொரு பகுதி வடபாண்டி நாடென வழங்கப்பட்ட மதுரை மாநகராகும். இந்நகரைப் போன்று திருநெல்வேலியும் தலைசிறந்த மாநகராகும். இந்நகரின் நடுவண் நெல்லையப்பர்-காந்திமதியம்மன் திருக்கோவில் அமைந்துள்ளது. பச்சைக்கம்பளம் விரித்தாற்போல் அழகிய நெல்வயல்கள் வேலியாகச் சூழ்த்து கவினுற விளங்கும் இந்நகரானது, பஞ்ச சபைகளில் ஒன்றாகிய தாம்பிர சபையை உடையது. பொன்விளையும் பொருனையாகிய தாம்பிரபரணியாறு தளர்நடை பயிலும் இந்நகரில் தாம்பிரசபை அமைத்திருப்பது ஆன்றோரின் ஆற்றலுக்கு இஃது ஓர் எடுத்துக்காட்டாக இலங்குகிறது என்பதை உணர முடிகிறது. பண்டைய நாளில், இந்த இடம் மூங்கிற்காடாக இருந்தது. அதன் காரணமாக வேணுவனம் என்ற பெயரில் இது வழங்கிற்றென்பர்.

வேய்வனம் அமர்ந்த சிவபெருமானுக்கு உணவு படைத்து வணங்குதற் பொருட்டு, வேதசர்மா எனும் நல்லார் தாம் யாசித்துப் பெற்ற பசும் நெல்லை உலர்த்துவாராயினர். அக்கணம் பெருமழை பெய்தது. ''எம்பெருமான் திருவுளம் இதுவோ? உலர்த்திய நெல் மழை நீரால் அடித்துச் செல்லப் படுமே! என் செய்கேன் யான்?'' என வேதசர்மா உளம் நைந்துருகுவாராயினர். அத்தருணம், எம்பெருமான் திருவருள் பாலிக்க உலர்த்திய நெல் நனையாதவாறு வேலி போல் நின்று காத்தது. இப்புதுமை கண்ட மக்கள் நெல் காய்ந்த வேணுவனத்தை நெல்வேலி என்ற பெயரால் அழைக்கலாயினர். நாளாவட்டத்தில் திரு எனும் அடைமொழி கூட்டித் திருநெல்வேலி என்ற பெயர் வழங்கலாயிற்று. பிற்காலப் பாண்டிய மன்னர்களும் சிவம்பேணும் பெரியோர் பலரும், இவ்விடத்தில் இறைவனுக்குப் பெருங்கோயில் எடுப்பாராயினர்.

## 2. திருக்கோவிலின் அமைப்பு

இக்கோவில் நாற்பெருஞ் சாலைகளின் நடுவே அமைந்துள்ளது. கோவிலைச்சுற்றிச்

சம சதுர வடிவில் உள்ள இச்சாலைகளே நான்கு தேர்த் தெருக்கள் எனப் பெயர் பெற்று விளங்குகின்றனவாகும். திருநெல் வேலி நகர் காண வருவோரை 'வருக' என்றழைப்பது போன்று இறையவன் நெல்லையப்பர் கோவில் கோபுரம் சிறிது தொலைவிலிருந்தேதோற்றமளிக்கும். அப்பன் கோபுரத்தையடுத்துக் காணப்படுவது அம்மை காந்திமதியின் திருக்கோபுரமாகும். இவ்விரு மாபெருங் கோபுரங்களையும் புராண இலக்கணப்படி அமைத்தவன் முழுதுங் கண்ட இராமபாண்டியன் என்று வரலாறு கூறும். பின் கி. பி. 7ஆம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த நின்ற சீர்நெடுமாறன் மற்றும் பெரும்பகுதிகளைக் கட்டினான் எனப்படு கிறது.

ஆதியில் இக்கோவில்கள் தனித்தனி யாக விளங்கின. இரண்டுக்கு மிடையே உள்ள இடைவெளியை கி. பி. 1647இல் வட மலையப்ப பிள்ளையென்ற சைவப் பெரியார் ஒன்றாக இணைக்கும் பணியைச் செய்தார். இடையேஉள்ள வெளியில் சங்கிலிமண்டபம் என்ற பெயரில் ஒரு மண்டபம்கட்டி இரண்டு கோவில்களை இணைத்த பெருமை அவரைச் சாரும். இம்மண்டபத்தினுள் இணைத்தபச்சை வடிவாள், காசி விசுவநாத சாத்தர், அனுமர் அர்ச்சுன பீமர்கள் முதலான வடிவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இதன் மேற்குத் திசையின் தென்பால், குமரன் கோவிலும், அமைக்கப்பட்டுளது. இக் கோவிலில் கந்த சட்டி விழா ஆறு நாட்கள் நடைபெறுவது வழக்கம். இம்மண்டப அமைப்பு வியத்தற் குரியது.

சங்கிலி மண்டபத்தின் மேல்புறம் உள்ள வெளியில் மலர் வனம் ஒன்று அமைக் கப்பட்டுள்ளது. 1756ஆம் ஆண்டில் திரு வேங்கடக் கிருட்டிண முதலியாரால் இவ் வனம் அமைக்கப்பட்டதாகும். மலர் வன நடுவில் சமசதுர வடிவில் நூறு கால்கள் அமைத்துக் கட்டப்பட்ட வசந்த மண்டபம் உளது. இம்மண்டபத்தில் சித்திரை வைகாசி மாதங்களில், இறைவனுக்கும் இறைவிக்கும் வசந்த விழாச்சிறப்புகள் நடைபெறும். சுதையால் செய்யப்பட்ட சிவபெருமானின் திருக்கோலம் அகத்தியர், மற்றும் சில முனிபுங்கவர்கள் இன்னோரது வடிவங்கள் இவ்வசந்த மண்டபத்தை அழகுறச் செய் கின்றன. சிவபிரான் சென்னி நின்று சிதறும் நீர்த்திவலைகள் கவின்பெறு காட் சியை நல்கும் இம்மண்டபத்தின்கண் சமயச் சொற்பொழிவுகளும். பேரின்பப் பாடல் அரங்குகளும் எக்காலும் நடைபெறுவது வழக்கம்.

தமிழ்நாடெங்கணும் தண்ணளி பரப்பித் தமிழ்த்தொண்டாற்றி வரும் தென்னிந்தியச் சைவ சித்தாந்த நூற்பதிப்பு நிலயம் அமை யப் பெற்றிருக்கும் கீழைத்தேர்த் தெரு வினிலே, நெல்லையப்பர் காந்திமதி இவர்கள் உறையும் இருபெருங் கோபுர வாயில்கள் அமைந்திருக்கின்றன. ஒன்று சாமி திருமுன்; மற்றொன்று அம்மன் திருமுன் எனப் பெயர் கொண்டு திருவாயில்களை நோக்கியமைந்துள்ள தெருக்களும் அப் பெயரால் வழங்கப்படுகின்றன.

## 3. சாமி கோவிலின் உள் அமைப்பு

சாமி திருமுன் அமைப்பை நடுநாயக மாகக் கொண்டு நாற்சுற்று வெளிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. 1. தெற்கு வெளிச்சுற்று 2. வடக்கு வெளிச்சுற்று. 3. கீழ வெளிச்சுற்று. 4. மேல வெளிச் சுற்று என்று வழங்கப்படுகின்றன இவ் வெளிகள்: தெற்கு வெளிச் சுற்றில் காணப் படுபவை:-இவ்விடத்தின் கீழ் ஓரம் தொடங் கிப் பேராலவட்டம், கொடி, இறைவர்க்குரிய ஊர்திகள், அழகு செய்தற்குரிய தோரணங் கள் வைக்கப்படும் சிறு அறைகள் உள்ளன. அறைகளின் முகப்பினிலே காணப்படும் தூண்களில் பிள்ளையன் காலம் வரை அர சோச்சிய நாயக்க மன்னர் பலரின் உரு வங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இவ்வுருவங் களைக் காணும்போது மதுரை நகர்க்கண் அமைவுற்ற புது மண்டபத்திலுள்ள சிற்பங் கள் மனத்திலெழும். இவ்வெளியின் தென் மேற்கில் திருப்பணி மண்டபம் உள்ளது. இங்கே ஆனித்தேர்த் திருவிழா ஆறும் ஏழாம் விழா நாட்களில் இறைவனும் இறைவியும் எழுந்தருளுவர். ஆறுமுக நயினார் கோவில் இவ்வெளியின் வடதிசை யில் அமைந்திருக்கிறது. ஒரே கல்லினால் மயில் வாகனமும் அதிலமர்ந்த திருமுருகப் பெருமானும் வள்ளி தெய்வயானையும் அமைக் கப்பட்டிருப்பது வியத்தற்குரியது. 1642இல் செந்தூர் வாழ் முருகனைப் பகைவர் தைப்

பற்ற விருப்பதைத் தடுக்க மீட்டுப்பிரதிட்டை செய்த பிள்ளையன் அவர்கள் ஆறுமுகநயினர் என்ற இக்கோவிலை அமைத்தார்.

### வடக்குச் சுற்றுவெளி அமைப்பு

இச்சுற்று வெளியின் நடுப்பகுதி வடக்குக் கோபுரத்தைக் கொண்டு விளங்குகின்றது. இறையவனின் ஆறுகாலப்புனித நீர்க் குண்டம் இதன் பாலுள்ளது. இதனருகே அமைந்த ஈசான வெளியில் யானை கட்டப் பட்டிருக்கின்றது.

### மேலச் சுற்றுவெளி அமைப்பு

இச்சுற்று வெளியின் இடைப்பகுதியில் மேலக்கோபுரம் ஒன்றுள்ளது. இதன்கண் சுதைப்பிள்ளையாரின் படிமம் ஒன்று கண்களைக் கவரும் வண்ணம் இருக்கிறது. இப் பிள்ளையாருக்கு வெள்ளிக்கிழமை தோறும் அபிடேக வழிபாடு சிறப்புற நடைபெறும்.

### கீழைச்சுற்று வெளி அமைப்பு

இவ்வெளியின் வடபால் 78 திண்ணிய நிறமுடைய தூண்களுடன் அமைந்துள்ள மண்டபம் உள்ளது. இதனைச் சோமவார மண்டபம் என்பர். இம்மண்டபத்தே அமைந்த கல்லாலாகிய உத்திரங்களும், வண்ண வளைவுகளும் மரத்தாற் செய்யப் பட்டவை போன்று கவின் பெற விளங்குகின்றன. இதிலுள்ள கோபுரம் ஒப்பனை மிக்கனவாகும். இவற்றிலமைக்கப்பட்ட கற்றூண்கள் காணத்தக்கன வாகும். புரட்டாசித் திங்களில் நவராத்திரி விழாவும், கார்த்திகைத் திங்களில் சோமவார மண்டபப்படி விழாக்களும் இம்மண்டபத்தில் மிகச் சிறப்புற நடைபெறும். இதன் மேல்பக்கம் வன்னியடிச்சாத்தனர், வயிரவர் இன்னவர் தங்கும் மண்டபங்களும், வேள்விச்சாலை மண்டபமும். காண்பதற்கினியன. நடுவில் நந்தியின் திருமுன் மண்டபத்தின் வடதிசையில், நவக்கிரக மண்டபமும் அமைந்துள்ளது. இந்நந்தியின் உருவம் மிகவும் உயரமானது. சுதையால் அழகுற அமைக்கப் பெற்றது.

நெல்லையம்பல வாயிலில் நுழைந்தவுடன் முதற்கண் பிள்ளையார், அடுத்து முருகர், சற்றே செல்லத் திருவாசி அமைந்துள்ளது. இவ்வழித் தென்றிசையில் சைவசமயக் குரவர்களுடன் சேக்கிழார் பெருமானும் சிறப்புடன் அமர்ந்திருக்கும் கோலம் விளங்கும். அதன் பின்னர்க் காணப்படுவன. பலி மேடை பின்னதாகவும் பசுவாம் விடை இடையதாகவும், பதி என்னும் சிவம் முன்னதாகவும் அமைந்திருக்கும் சைவ தத்துவம் புலனுக அமைக்கப் பட்டிருப்பது தென்படும். இந்த நந்திமண்டபம் கி. பி. 1654ல் சிவந்தியப்ப நாயக்கரால் அமைக்கப் பட்டதாகும். இதன் முன் பெரிய கொடிமரம் ஒன்றுளது. இது கி. பி. 1155ல் காளயுத்தி வைகாசித் திங்களில் பிரதிட்டை செய்யப்பட்டது. சாமி கோவில் நுழைவாயில் தொடங்கிக் காணப் படும் வீரபத்திரர் முதலான சிற்பங்கள், நம் பண்டைத் தமிழ்மக்களது சிற்பக்கலை நுணுக்கத்தினைப் பாராட்டும்படி தூண்டக் கூடியனவாகத் தோன்றுகின்றன. உள் வாயிலின் வழியில் அழகே உருவான நந்தி தேவர் காட்சியளிக்கிருர். அடுத்துச் சிறிய கொடிமரமும் சூரியதேவனும் அமைக்கப் பட்டுள்ளன. அதற்கப்பால் இருப்பது மணி மண்டபமாகும். இம்மண்டபத்தில் ஒரே கல்லினாலாகிய பெரிய தூண் ஒன்று மத்தியிலும் மண்டபச்சுற்றில், வடிவத்திலும் உயரத்திலும் வேறுபாடுகளையுடைய 48 சிறிய தூண்கள் உள்ளன. இந்நாற்பத்தெட்டுத் தூண்களும் இருபுறங்களிலுமாக அமைக்கப் பட்டுள்ளன. இவற்றிலுள்ள ஒவ்வொன்றையும், தட்டி ஒலிக்கச் செய்தால், ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு நாதம் வெளிப்படுகிறது. இதனை இசைத்தூண்கள் என்று கூறுவது பொருந்தும். இம்மாபெரும் திருப்பணியைச் செய்தவன், கி. பி. 7 ஆம் நூற்றுண்டில் பாண்டிய நாட்டை அரசோச்சிய நின்ற சீர் நெடுமாறன் ஆகும். திருஞானசம்பந்தப் பெருமான் அருள, தனது கூன்நிமிரப் பெற்றுச் சமணத்தை விடுத்துச் சைவ நன்னெறி சார்ந்த பாண்டியன் இவனேயாம்.

> "நீதிதழைத் தோங்குதிரு நெல்வேலி
> நாதர்முன்பு நிலைபெற் றேங்கச்
> சோதிமணி மண்டபத்தைத் தூயமக
> மேருவெனத் துலங்கச் செய்தே
> வேதிகைபொற் படிதூண்கள் விளங்குதிரு
> வாயிலணி விரவிச் சூழ்ந்த
> கோதில்மணிக் கோபுரமும் சேண்மதிலும்
> வெள்விடையும் குலவச் செய்தான்"

எனும் தலபுராணப்பாடலால் மேற்படி நெடுமாறனார் செய்த திருப்பணிகளை உணர முடிகின்றது.

இம்மணிமண்டபத்தின் மேற்றிசையில் மகாமண்டபம் உள்ளது. இதன்வழியே நேராகச்சென்று வேணுவன நாதரை வழிபடலாம். இவண் அமர்ந்த இறைவன், இராமக் கோனுக்கு முத்தியளித்தவராவார். இங்கு 21 மேடைகள் உள்ளன. இம்மேடைகள் முழுதுகண்ட இராமபாண்டியன் இறைவரை வழிபட்டதன் பயனாக இருபத்தொரு மேடைகளும் ஒவ்வொன்றாக வளர்ந்தன எனக் கூறப்படுகிறது. ஆதலினால் வேண்ட வளர்ந்த மகாலிங்கம் என்ற பெயர்கொண்ட இறைவர் அவ்விடம் அமர்ந்துள்ளார். இவரே நெல்லையப்பர் ஆவார்.

இதன் வடபால், நெல்லைக்கோவிந்தர் நீண்ட பூம்பள்ளிதனில் துயில் கொண்ட நிலையில் இருக்கின்றார். பின்னர் நடு மண்டபம். இதில் பிள்ளையார், சந்திரசேகரர் வீற்றிருக்கின்றனர். அடுத்து உள் சுற்று வழியில் தட்சணாமூர்த்தியும், தாருகாவன முனிவர்களுக்காக இறைவன் பிட்சாடனராக அமைந்த கோலமும், சண்டேசுரரும் காணப் படுகிறார்கள். வடக்கு வெளிச்சுற்றிலுள்ள ஒரு பள்ளத்தில் ஒரு சிவலிங்கம் உள்ளது. இப்படிமம் வேணுவனநாதன் தோன்றுதற்கு முன்னரே இருந்தது என ஆன்றோர் கூறுவர். இவ்விலிங்கத்தைத் திருமூலநாதர் என்று நெல்லைத் தலபுராணச் செய்யுள் செப்புகின்றது. இவ்விடம் தளவரிசைகளும், மிகத்தாழ்ந்திருப்பதால் இஃது ஆதியில் ஏற்பட்ட திருக்கோவில் என விளங்கும்.

பின்னர், நடேசர், துர்க்காதேவி, பால வயிரவர் முதலிய இறைவர்களை வழிபட்டுத் தென்புறம் வரின், அவண் திருக்கோவில் கொண்டிலங்கும் நெல்லையப்பர், காந்திமதி அம்மன் எழுந்தருளும் இறைவன் இறைவியாக அமர்ந்திருக்கும் கோலத்தைக் கண்டு வழிபடலாம். பின், தெற்குச்சுற்றில் வீதியில் எழுந்தருளும் சைவகுரவர், சந்தானாசாரியார், ஏழுகன்னியர், ஏழுமுனிபுங்கவர்கள், மெய்த்திருத்தொண்டர்கள் அறுபத்துமூவர் இவர்கள் சிலைபடிமங்களையும், பொல்லாப்பிள்ளையார், இராவணன் தாங்கி நிற்கும் முறையில் உயர் தவிசில் விளங்கும் திருக்கைலாய மணக் கோலக் காட்சி இவையனைத்தையும் கண்டு வழிபடலாம்.

மேற்புறச் சுற்றில் தாம்பிர சபை கல் வளைவு மண்டபச் சிறப்புடன் திகழ்கின்றது. மார்கழித் திருவாதிரைத் திருநாளில் அம்பல வாணர் நடனம் புரிந்தருளும் காட்சி நனி மிகச் சிறப்புடையதொன்றாம்.

இம்மண்டபத்தின் மேல்பக்கம் முழுதுங் கண்ட ராமக்கோன் திருவுருவம் அமைந்துளது. தாமிர சபையின் பின்னுள்ள சந்தனச் சபாபதியை வழிபட்டு வடக்குப் புறத்திலுள்ள அட்டலட்சுமி, சனி, ஆயிரமா வுருவாரிலிங்கம் கண்டு திருமுழுக் காட்டுநீர் தெளித்துப் பின்னர்த் தைல அறைக்கு வடக்கே, காரைக்கால் அம்மைக்கு அருள் புரிந்த பெரிய திருவுருவத்தில் அமையப் பெற்ற நடேசர் கோவில் புகுந்து வணங்கலாம்.

> "குனித்த புருவமும் கொவ்வைச்
> செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
> பனித்த சடையும் பவளம்போல்
> மேனியில் பால்வெண்ணீறும்
> இனித்த முடைய எடுத்தபொற்
> பாதமும் காணப்பெற்றால்
> மனித்தப் பிறவியும் வேண்டுவ
> தேஇந்த மாநிலத்தே!"

பின்னர், குபேரலிங்கம், மதிக்கடவுளை வணங்கி வெளியே வந்து, நவக்கோள்கள் மண்டபத்தைச் சூழ்ந்து குடமுழுக்குச் சிறு மண்டபத்திருந்து தெற்கு நோக்கிச் செல்லின் மேற்குமுகமாக அமைந்திருக்கும் சைலப்பர் கோவில் காணப்படும். எண்ணெய் அறையை அடுத்துக் கீழ்ப்பக்கம் அனவரத நாதர் காந்திமதியம்மை திருக்கோவில் விளங்குகிறது. இது முகமதாலி தானுதிபதி மாவஸ்கானின் துணைவி நோய் போக்கிய மேன்மையால் அமைக்கப்பட்டதாகும். அன்வர் உடீன்கான் பெயரிட்ட இறைவன் பின்னர் அனவரத நாதன் என்று பிற்காலத்தில் ஆயிற்று என்றும் கூறுவர்.

## 4. திருக்கோவில் அமைப்பு விளக்கம்

நெல்லைநகர் நடுமணியாக இலங்கும் இக்கோவில் மொத்தத்தில் 850 அடி நீளம் 756 அடி அகலம் கொண்ட எல்லையுள்

அடங்கியது எனலாம். அம்மன் கோவில், சுவாமி கோவில் என்ற சமமான இருபெரும் பிரிவைக்கொண்டது. ஒவ்வொரு கோவிலுக்கும் கீழ்ப்பக்கத்தில் விண்ணை முட்டும் கோபுரங்கள் இருக்கின்றன.

"*மாநகர்க்குக் கோபுரமும்*"

என்று நன்னூல் கூறும் அடிகள் இதற்குக் காட்டாகும்.

அம்மன் கோவில் தென்பக்கம் ஒரு வாயிலும் வடபக்கம் சங்கிலி மண்டபத் திறுதியில் ஒரு வாயிலும் இருப்பது போலச் சுவாமி கோவில் வடபுறம் ஒரு வாயிலும், மேல்புறம் ஒரு வாயிலும் இருக்கின்றன.

### 5. அம்மன் கோவிலின் அமைப்பு முறை :

இதன் வாயிலின் முன் அம்மன் அம்பலம் உள்ளது. இதனைத் திரிசிரபுரம் சிவராம காசிய பிள்ளை அவர்கள் அமைத்தனர். இதில் கணபதி, முருகர் வீற்றிருக்கின்றனர். அடுத்துக் கோபுரத்துள் செல்ல வேண்டும். அம்மன் கோபுரம் கி.பி. 1626இல் கட்டப்பட்டது. அஃதாவது சுவாமி கோவில் கோபுரம் கட்டி இருபது ஆண்டுகளுக்குப் பின்னர் இது கட்டப்பட்டது. இதனுள் புகுந்ததும் காணப்படுவது ஊஞ்சல் மண்டபமாகும். சைவசமயத் தத்துவங்களை விளக்கத் தொண்ணூற்றாறு திண்ணிய கற்றூண்களால் அழகுபெற அமைக்கப்பட்டது, இம் மண்டபம். இதன் தளவரிசைகள் சலவைக் கற்களால் ஆனவையாம். நிலைக்கண்ணாடி அறை உண்டு. ஐப்பசித் திங்களில் திருக்கல்யாணத் திருநாளில் காந்திமதியம்மை திருமணம் நிறைவேறியதும் மூன்று நாட்கள் ஊஞ்சல் திருவிழா நடைபெறுகிறது. மேலும் இவண் நான்மறைகள் ஓதலும், சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்துதலும், திருமுறைகளை இளஞ்சிறார்களுக்குக் கற்பித்துக்கொடுத்தலும், கன்னியர் பின்னல் கோலாட்டம் நிகழ்த்துதலும் நடைபெறும். கோவிலின் நூல் நிலையமும், தேவாரப் பாடசாலையும் அமைந்து சீர்த்தி பெற்றுச் சிறப்பது, சிந்தை குளிரச் செய்யும். பத்திர தீப விழா லட்ச தீப விழா போன்ற இக்காலங்களில் திருவோலக் காட்சியும் இங்குக் காணலாம். இம்மண்டபத்தை அமைத்து தவியவர், சிந்துபூந்துறை மண்டபமாகிய தைப்பூச மண்டபத்தைக் கட்டியருளிய சேரகுளம் பிறவிப் பெருமாள் பிள்ளையன் அவர்களாவார்கள்.

### 6. ஆக்கோட்டம் :

இது முன்பு கோவிலின் தென் கீழ்ப் பக்கம் அமைந்திருந்தது. இப்பொழுது அம்மன் கோவிலின் வடகிழக்கில் அமைந்துள்ளது. இதில் திரு நீராடல் செய்யப் பயன்பட ஆநிரைகள் கட்டப்பட்டுள்ளன.

### திருக்கல்யாண மண்டபம்

ஆனிரைத் தொழுவத்திற்கு மேற்புறம் இம்மண்டபம் 520 அடி நீளம், 63 அடி அகலமுடன் ஆயிரங்கால் மண்டபம் என்ற சிறப்புப் பெயருடன் திகழ்கின்றது. இதில் காந்திமதியம்மை திருமணச் சடங்கும், பங்குனி உத்திரச் செங்கோல் திருவிழாவும் நடைபெறும்.

### 7. பொற்றாமரைக்குளம்

இஃது ஊஞ்சல் மண்டபத்திற்கு வடபுறம் விளங்கும் புண்ணியப் பொய்கையாகும். முழுமுதற் பரம் பொருளாகிய சிவபெருமானே நீர்வடிவாயினன். பிரமன் பொன் மலருடன் வந்தெழுந்தனன். ஆகவே, இத்தடம் பொற்றாமரை என்ற பெயர் பெறுவதாயிற்று. இத்திருவாவியின் நான்கு பக்கங்களும் கற்படித்துறைகளும், சுற்றுக் கால் மண்டபமும் அமைந்துள்ளன. இதன் கீழ்ப்புறம் படித்துறை, மண்டபம் முதலியவை திருவாவடுதுறை ஆதீனத் தாராலும், தென்புறம் படித்துறை, மண்டபம் தருமபுரம் ஆதீனத்தாராலும், மேற்புறம், வடபுறம், மேல்பாதிப் படித்துறை மண்டபங்கள் கி. பி. 1756இல் மகமதீகபுகான் மேலாளராக விளங்கிய வேங்கட கிருஷ்ண முதலியாராலும், வடபுறம் கீழ்பாதிப் படித்துறையும் மண்டபமும் ஆயம் தானப்ப முதலியாராலும் செய்தமைக்கப்பட்டன. 20 ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த கற்பூரப் பணிவிடை சிவசூரியப் பரதேசியாரின் பெருமுயற்சியால் மேற்படி, படித்துறைகள் மாற்றிப் புதுப்பிக்கப்பட்டுள்ளன.

திருநெல்வேலி மேலைத் தேர் வீதியிலுள்ள சுந்தரத் தோழ பிள்ளை தெருவின் மேல்பக்கமுள்ள வாய்க்காலிலிருந்து மடை வைத்து அவ்வாய்க்கால்நீர் இப்பொய்கைக்குக் கொண்டுவரப்பட்டுப் பின் கல்லத்தி முடுக்கு வழியாக நகர்க்குக் கீழ்ப்புறமுள்ள தெப்பக்குளத்துக்கும் கொண்டு போகப்படுகிறது. இப்பொற்றாமரையில் மாசித் திங்கள் மகநாளில் வேளாண் குடிச்செல்வர் திருநாவுக்கரசு நாயனர் தெப்பத் திருவிழா நடைபெறும். இப்பொற்றாமரையின் மேற்புறம் அமர்ந்திருக்கும் பொற்றாமரைப் பிள்ளையார், வாணி, தக்கண மூர்த்தி, பால்வண்ண நாதர் இவர்களை வழிபட்டு அம்மன் கோவிலுக்குள் சென்றுவழிபடலாம்.

## 8. அம்மன் திருக்கோவில்

சுந்தரத் தோழ பிள்ளை அவர்களின் அறத்தின் பயனுய் நிருதி மண்டபத்திற்கு வடபக்கம் இருக்கும் கொடிமரத்தின் அருகில் திருநந்தியம் பெருமானை வணங்கிக் கோவிலுக்குட் சென்று இடப்புறமாய்த் திரும்பி மணிமண்டம் வழியாக நடுமண்டபம் புகுந்து உள்புறம் அஃதாவது இறைவி வீற்றிருக்கும் இடத்தில், சென்னியில் வயிர மணிமுடி, ராக்கடி, முதலியனவும், முகத்தில் பொட்டு, மூக்குத்தி, புல்லாக்கும், மார்பில் நவமணி வட முதலியனவும், அடியில் மணிச்சிலம்பும் அழகு துலங்க, வலக்கையுயர்த்தி, இடக்கை தாழ்த்தியும், தாமரை, கிள்ளை இவற்றுடன் ஒளி சிறந்து விளங்கும் வடிவம்மையை வணங்கலாம். அங்குத் திருநீறு, குங்குமம் பெற்றணிந்து நடுமண்டபம் வடபால் விளங்கும் பொன்மயமாய் இலங்கும் பள்ளியறையைக் கண்டு மகிழலாம். வடிவு அம்மையைச் சுற்றி வலம்வரின், கன்னி மூலையில் அமர்ந்திருக்கும் கணபதியையும் வாயுவில் விளங்கும் முருகனையும் வழிபட்டு, உமையின் திருமஞ்சனக் காப்புப் பொட்டிட்டுச் சண்டேசுரரை வணங்கிப் பின் பிரதோட விழா மண்டபத்தைக் கடந்து ஈசானத்தில் எழுந்தருளியிருக்கும் ஆறுமுகப்பெருமானையும் வழிபாடியற்றிச் சுற்றி வலம் வரலாம். ஆயிரக்கால் மண்டபத்தை யடுத்து வடபுறம் மேல்புறம் நாலுகால் மண்டபத்துடன் இணைந்த சுற்றும் முக்கால் பங்கு தளவாய் அழகப்ப முதலியாரவர்கள் செய்த அறச் செயலாகும். மேற்புறம் காற்பங்கும், வடபுறச் சுற்றும் ஒரு பத்தி மண்டபமும் மண்டபப் படியும் திருமலையப்ப பிள்ளையன் அறச்செயலாகும்.

### கருமாறிக் குளம்

இஃது அம்மன் கோவில் மேற்புறமுள்ள வெளிச் சுற்றைச் சுற்றி வரும்போது விளங்குவது. துருவாச முனிவர் இட்ட சாப மொழியால் யானையான இந்திரத்துய்மன் என்ற மன்னன் இதில் மூழ்கியதும், தன் பழைய வடிவை அடைந்தனனும். அதனல் இது கருமாறி என்றழைக்கப்பட்டது. அம்மன் கோவில் வெளி வட்டச்சுற்றில் ஆறு கால நீர்க்குண்டம் உள்ளது. இத்துணைச் சிறப்புற்று விளங்குவது நெல்லையப்பர் வடிவம்மை கோவில்.

## 9. கோவிலின் சிற்பச் சிறப்புக்கள்

இக்கோவில் முன் மண்டபங்களாகிய இரண்டு அம்பலங்களும் மரத்தினல் அழகு செய்யப்பட்டுள்ளன. இத்தகைய வேலைப்பாடுகள் பொதுவாக மரத் தேர்களில் அமையப் பெற்றிருப்பன. சிலவகைச் சித்திர வேலைப்பாடமைந்த மரச்சிற்பத் திறங்களைச் சீபலி மண்டபத்தில் தெக்கணமூர்த்தி முகப்பிலும் கண்டு மகிழலாம்.

சுவாமி கோவிலின் திருமுன் விடை (ரிஷப) மண்டபத்திற்குத் தெற்கே கற்றூண்களில் மிளிரும் இசையாளர், வீரர்கள் முதலியோர் உருவங்களின் அருமை கண்டு மகிழத் தக்கவை. பெரிய கொடி மரத்திற்கு மேற்கே கோவில் முகப்பு மண்டபத்தின் தூண்களில் வீரபத்திரர் முதலிய கற்சிலைகளும் கற்சிற்பியின் கைவண்ணத்தைக் காட்டுவனவாம்.

கோவில் மணிமண்டபத்தின் அமைப்புத் தனிச்சிறப்பானது. இதில் அமையப்பெற்ற தூண்கள் ஒரேகல்லில் செதுக்கப்பட்ட வல்ல. சிறு தூண்கள் கொண்ட கூட்டங்களால் அமைக்கப்பட்டுள்ளன. அத் தூண்களை ஒலிப்பித்தால் வெவ்வேறு இசையைப் பிறப்பிக்கும்படி செய்யப்பட்டிருப்பது எங்கும் காண வியலாத வியத்தற்குரிய சிற்ப வேலையாக அமைந்திருக்கின்றது.

ஈசான திக்கில் பொலிவுறும் பெரிய நடேசரின் செப்புச்சிலை உண்மையில் ஒருவர் ஆடுவது போன்ற அழகுடன் விளங்குகின்றது.

தெற்கு வெளிச்சுற்றில் பொல்லாப் பிள்ளையார் கோவிலின் எதிரிலுள்ள பிள்ளைத் தொண்டு கல்லாலமைத்திருப்பது செல்பவர் மெய் வலியைச் சோதிக்க விளங்குவது. மேலை வெளிச் சுற்றில் கல்லினாலமைக்கப் பட்ட நடன மண்டபமும் தாம்பிர சபையும் அதில் மரத்தில் சித்தரித்திருக்கும் சிற்பங்களும், தாம்பிர சபைக்கு வடபக்கம் நடேசர் சிலை உருவமும் அரிய வேலைப்பாடுகளுடையன.

சீபலி மண்டபச் சுற்று வெளியில் உள்ள திருப்பணி, ஆறுமுக நயினார் உருவமாகும். ஒரே கல்லில் மயில் வாகனத் துணைவியர்களோடு அமைந்துள்ளது.

சங்கிலி மண்டபம், வசந்த மண்டபம், சோமவார மண்டபம், ஊஞ்சல் மண்டபம் இவற்றின் அமைப்பு, பண்டைக்கால திராவிட நாகரிகச் சின்னங்களாகும்.

சுதையினால் இலங்கும் பெரிய நந்தி தேவர், இராமேசுரம், தஞ்சை முதலிய இடங்களை நினைப்பூட்டுவதாகும்.

கோவிலிலுள்ள கொடி வகைகள், வாகனங்கள் பழைமையானவை யாயினும் கலையுணர்ச்சியை யூட்டுவன. கல்வெட்டுக்களும் போற்றுதற்குரியவையாம்.

## 10. கோவிலில் காணும் கல்வெட்டுக்கள்

இக்கோவிலில் பல கல்வெட்டுக்கள் இருக்கின்றன. இவற்றில் மிகப் பழைமையானவை கிட்டத்தட்ட கி.பி.950இல் இருந்த வீரபாண்டியன் சாசனங்கள் ஐந்தாம்; இவை வட்டெழுத்தில் எழுதப்பட்டவை. அம்பைக் கல்வெட்டுக்கள் கூறுவதுபோல், இவற்றிலும் பாண்டியர், சோழர் தலைகளைக் கைக்கொண்டு வென்றதாகச் சொல்லப்பட்டுள்ளன.

முதலாவது இராசராசேந்திரன் (கி. பி. 1011—1044) முதலாவது குலோத்துங்க சோழன் (கி. பி. 1074—1118) இவ்விருவர் சாசனங்களினாலும் சோழர்கள் திருநெல்வேலிச் சீமையை வென்றுள்ளமை வெளியாகின்றது.

19ஆம் நூற்றாண்டில் பாண்டியர் பெருமையை நிலைநாட்டியதாகக் கூறப்படும் முதலாவது மாறவர்ம சுந்தர பாண்டியன் (கி.பி. 1216-1235) சாசனங்கள் பலவற்றில் இரண்டனுள் தாம்சோழர்களை வென்று நாட்டைப் பங்கிட்டுக் கொண்டதாகவும், முடிகொண்ட சோழபுரத்தில் முடி சூடியதாகவும் தெரிவிக்கின்றார். 2ஆவது மாறவர்ம சுந்தர பாண்டியன் (கி. பி. 1238—1251) தம் சாசனத்தில் தம் ஹொய்சாலா நண்பர் வீரசோமேஸ்வர தேவரைக் குறிக்கிறார். முதலாவது, சடா வர்ம சுந்தர பாண்டியன் கர்நாடக காலத்திய மன்னர்கள் வெற்றியைப் பற்றிக் கூறுகிறார். மற்றப் பாண்டிய மன்னர்களில் கி. பி. 1268—1308 வரை விளங்கியவன் முதலாவது மாறவர்ம குலசேகரத்தேவன் கி.பி. 1314-1321இல் விளங்கியவன் 2ஆவது மாறவர்ம குலசேகரத்தேவன் இவர்களது சாசனங்கள் பல காணப்படுகின்றன.

இத்தலம் கீழ்வேம்பு நாட்டுக்குலசேகர சதுர்வேதி மங்கலம் என்று அழைக்கப்படுவதுடன் இறைவன் திருநெல்வேலி உடையார் அல்லது உடைய நாயனார் என்றும், இறைவி திருக்காமக் கோட்டமுடைய நாச்சியார் என்றும் குறிப்பிடுவதைக் காண்பர். குலசேகர பாண்டியன் என்பவன் கேரள சோழ, ஹொய்சால மன்னர்களை முறியடித்து வென்று கொண்ட பொருளைக் கொண்டு, சுவாமி கோவில் பெரிய சுற்றுவெளி மதிலை அமைத்துள்ளார் என்பது பாண்டிய மன்னர் தம் பொருளைச் சிவத்திருப்பணியில் பயன்படுத்துவதில் பெரும் பற்றுடையவர்கள் என்பதை விளக்குவதாகும். மேலும் பூசை முறைகளுக்கு அமுதுபடி, சாத்துப்படி, மலர்கள், நத்தவனம், விளக்கு, எண்ணெய் முதலியவைகட்கு அக்காலப் பாண்டிய மன்னர்களும், வேள்களும் பிற அன்பர்களும் நிலம், பொருள் முதலியன உதவியிருப்பது சாசனப்பகுதிகளைக் காண்போர் மகிழுந் தன்மையது. சாசனங்கள் பலவற்றிலும் அந்த அந்தக் கால மன்னர்கள் தங்கள் பெருமையைப் பற்றித் தெரிவித்துக்கொள்

வதுடன் திருநெல்வேலியிலிருந்து சாசனங்களை வெளிப்படுத்தியிருப்பதும் விளங்கும். இதிலிருந்து திருநெல்வேலி எத்தகைய சிறப்புடையது என்பதை அறியலாம்.

மதுரை நாயக்க மன்னர் தம் ஆட்சிக் காலத்தும் திருநெல்வேலி நகரையே தங்கள் தென் திசையின் தலைநகராகக் கொண்டுள்ளார்கள். இதற்கு மூன்று கல் தொலைவில் கிழக்கேயுள்ள பாளையங்கோட்டையைத் தலைநகர்க் கோட்டையாக அமைத்தனர். நவாப் ஆட்சிக் காலத்தும் திருநெல்வேலி தலைநகராயிருந்தது.

## 11. நெல்லை இறைவனையும் இறைவியையும் வழிபடும் பாடல்கள்

"மருந்தவை மந்திரம் மறுமைநன்
னெறியவை மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே
சிந்தைசெய் நன்னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன்
சொரிதரத் துன்றுபைம்பூம்
செருந்தி செம்பொன் மலர் திருநெல்வேலி
யுறை செல்வர்தாமே."

'பெருந்தண் மாமலர் மிசையயனவ
னனையவர் பேணுகல்வித்
திருந்துமா மறையவர் திருநெல்வே
லியுறை செல்வர்தம்மைப்
பொருந்துநீர்த் தடமல்கு புகலியுள்
ஞானசம்பந்தன் சொன்ன
அருந்தமிழ் மாலைகள் பாடியா
டக்கெடும் அருவினையே.'

—ந. கஉ-க, கக.

"நிறைக் கொண்ட சிந்தையான்
நெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாறன்
அடியார்க்கும் அடியேன்."

— திருத்தொண்டத் தொகை.

'கார்த்தண் முகிற்கைக் கடற்காழியர்
பெருமாற் கெதிராய்
ஆர்த்த அமணர் அழிந்தது
கண்டுமற் றங்கவரைக்
கூர்த்த கழுவின் நுதிவைத்த
பஞ்சவன் என்றுரைக்கும்
வார்த்தையது பண்டுநெல்
வேலியில் வென்ற மாறனுக்கே.'

—திருத்தொண்டர் திருவந்தாதி.

"அங்குறைந்து கண்ணுதலார்
அடிசூடி அகன்றுபோய்ப்
பொங்குதமிழ்த் திருநாட்டுப்
புறம்பணைசூழ் நெல்வேலி."

—திருநாவுக்கரசு நாயனார் புராணம்.

'வாரா திருந்தால் இனி நான் உன்
வடிவேல் விழிக்கு மையெழுதேன்
மதிவாள் நுதற்குத் திலகமிடேன்
மணியால் இழைத்த பணிபுனையேன்
பேராதரத்தினொடு பழக்கம்
பேசேன் சிறிதும் முகம் பாரேன்
பிறங்கு முலைப்பால் இனி தூட்டேன்
பிரிய முடன்ஒக் கலையில் வைத்துத்
தேரார்வீதி வளங்காட்டேன்
செய்ய கனிவாய் முத்தமிடேன்
திகழும் மணித்தொட்டிலில் ஏற்றித்
திருக்கண்வளரச் சீராட்டேன்
தாரார் இமவான் தடமார்பில்
தவழுங் குழந்தாய் வருகவே!
சாலிப்பதிவாழ் காந்திமதித்
தாயே! வருக வருகவே!"

பவம கற்றும் பரனடி வாழ்கவே
சிவனை ஏத்துவோர் சிறப்புடன் வாழ்கவே
தவத்தினால் நெல்லையைச் சார்ந்தவர் வாழ்கவே
சைவசித் தாந்தக் கழகமும் வாழ்கவே!

# திருமயிலைக் கபாலீச்சுரம்

[திரு. தேவ. நடராஜன், எம்.ஏ., எப்.ஆர்.இ.எஸ்.]

சைவசித்தாந்தச் செம்மல் உயர்திரு அ. ரா. தேவராச முதலியாரவர்களுக்கும் முனிரத்தினம் அம்மையாருக்கும் 6-12-1932 இல் தோன்றிய இவர், எம்.ஏ., டிப் (மானிடவியல்) பட்டங்கள் பெற்றவர். இவர் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சிப் பயிற்சியும் பெற்றவராவர். சிறு வயதிலிருந்தே கவிதைகளும் கட்டுரைகளும் எழுதிப் புகழ் பெற்ற இவர் வரலாறு, பொருளியல், மானிடவியல், சமூகவியல், புவியியல் போன்ற பல துறைகளில் புலமை பெற்றவர். இவர்



தம் ஆய்வுக் கட்டுரைகள் கலைக் களஞ்சியத்திலும் பிற திங்கள், கிழமை நாளிதழ்களிலும் வெளியாகியுள்ளன. உலகத்தமிழ் மாநாடு, உலகப் புவியியல் மாநாடு போன்ற பலகருத்தரங்குகளில் இவர் கலந்து கொண்டுள்ளார். இந்திய அரசின் திட்டக் குழுவின் கீழ் இயங்கிய சென்னை மாநகர் பற்றிய ஆராய்ச்சித் துறையில் சிறிதுகாலம் ஆராய்ச்சியாளராகப் பணியாற்றிய இவர் தற்பொழுது தமிழக அரசு மாவட்ட விவரச் சுவடிகளின் மாநிலப் பதிப்பாசிரியராவர்.

"மட்டிட்ட புன்னையங்
கானல் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான்
கபாலீச் சரம்அமர்ந்தான்..."
—திருஞான சம்பந்தர்.

செந்தமிழ் நாட்டின் தலைநகரான சென்னை மாநகரும் அதன் அணித்தே அமைந்த ஒரு சில இடங்களும் ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக அருள் ஒளி பரப்பும் ஆலயங்களைக் கொண்டவை. வடக்கே திருவொற்றியூரும், தெற்கே திருவான்மியூரும் இம் மாநகருக்குத் தெய்வீகக் கலங்கரை விளக்குகளாக விளங்குகின்றன. வட திரு முல்லைவாயில், திருவேற்காடு, திருப்போரூர் முதலிய திருத் தலங்கள் சென்னை மாநகரினின்றும் சிறிது தொலைவிலேயே அமைந்து மாநகரின் தெய்வீக மேன்மையை மேலும் மிளிரச் செய்கின்றன. இத்தகைய தெய்வீகச் சூழலில் திகழும் சென்னை மாநகரின் சிறப்பான பகுதிகளில் ஒன்று திருமயிலை. அழகிய கடற்கரையின் அருகில் அமைந்த அப் பகுதி பொதுவாக 'மயிலாப்பூர்' என வழங்கப் படுகின்றது.

## திருமயிலையின் தொன்மையும் தனிப் பெருமையும் :

திருமயிலை பழமையும் பெருமையும் வாய்ந்தது. ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தே அது சிறந்து விளங்கி வந்திருக்கின்றதென வரலாற்றுச் சான்றுகள் விளம்புகின்றன. பழங்காலத்து மேனாட்டுப் புவியியல் பேரறிஞரான டாலமி (Ptolemy) தமது எழுத்தோவியங்களில் மயிலையைப் பற்றிக் குறித்துள்ளார். அவருடைய காலம் கி. பி. 2 ஆம் நூற்றாண்டாகும். அவர் மயிலையை "மயிலார்பன்" (Mylarphan) என்று குறிக்கின்றார். கல்வெட்டுக்களில் இவ்வூர்ப் பெயர், "மயிலார்ப்பு" (Mylarpu-9th century A. D.)[1] எனவும், "மயிலாப்பில்"[2] எனவும்

1. கல் வெட்டு எண் 182 (1912ஆம் ஆண்டு);
   கல் வெட்டு எண் 161 (1910ஆம் ஆண்டு);
2. கல் வெட்டு எண். 333 (1911ஆம் ஆண்டு);
   கல் வெட்டு எண் 355 (1911ஆம் ஆண்டு);
   கல் வெட்டு எண் 356 (1912ஆம் ஆண்டு);

**''மயிலார்ப்பில்''** (Mayilarppil-12 th century A. D.) எனவும் காணப்படுகின்றது. 'மயிலார்ப்பில்' என்றால் 'மயில் அகவும் (ஒலித்துக் கொண்டிருக்கும்) இடம்' என்று பொருள். இச், சொற்றொடரே இவ்வூர்ப் பெயரின் சரியான பழைய வடிவம் என்றும், அது நாளடைவில் 'மயிலாப்பில்' அல்லது 'மயிலாப்பு' எனத் திரிந்தது என்றும் சில ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

முதலாழ்வார்கள் கி. பி. 5 - 6 ஆம் நூற்றாண்டுகளைச் சேர்ந்தவர்கள். இவர்களுள் ஒருவரான பேயாழ்வாரின் சீடர் திருமழிசை ஆழ்வார் என்பவர். இவர் திருவல்லிக்கேணியைப் பற்றிப் பேசுங்கால் **''மாமயிலை மாவல்லிக் கேணியான்''** என்கின்றார். கி. பி. ஏழாம் நூற்றாண்டவரான திருஞான சம்பந்தரின் தேவாரத்தில் இவ்வூர் ''மயிலை'', 'மயிலாப்பு' என வழங்குகின்றது. ஞான சம்பந்தரின் சமகாலத்தவரான திருநாவுக்கரசர் மயிலையை 'மயிலாப்பில்' எனக் குறித்துள்ளார். கி. பி. 9 ஆம் நூற்றாண்டினைச் சேர்ந்த ''நந்திக் கலம்பகமும்'', 12 ஆம் நூற்றாண்டினைச் சேர்ந்த ''கலிங்கத்துப் பரணியும்'' இவ்வூரினை ''மயிலை'' என்றே குறிக்கின்றன. சுந்தரரும், திருமங்கை யாழ்வாரும் ''மயிலை'' என்றே இவ்வூரினை அழகுற அமைத்துள்ளனர். கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டவரான அருணகிரியாரும் இவ்வூரினை ''மயிலை'' என்றே அழைக்கின்றார். கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டவரான சேக்கிழார் பெருமான் மயிலையை ''திருமயிலாபுரி'' என வழங்கியுள்ளார். 'மயிலாப்பு' என்றால் 'மயிலாதல்' என்று பொருள். உமையம்மை இவ்விடத்து மயில் உருக்கொண்டு இறைவனை வழிபட்டு உய்ந்த அற்புதத்தினையே இப் பெயர் குறிக்கின்றது. 'மயிலாப்பு' என்னும் சொற்றொடருடன், பின்னாட்களில், தெளிவு நோக்கி ''ஊர்'' என்ற சொல்லும் சேர்ந்து, ''மயிலாப்பூர்'' என்று ஆயிற்று என ஒரு சில ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். அவர் தம் கருத்துப்படி இவ்வூர்ப் பெயரின் சரியான பழைய வடிவம் 'மயிலாப்பு' என்பதேயாகும்.

திருமயிலைக்குக் கபாலி நகரம், சுக்கிர புரி,[1] வேதபுரி[2] என்ற வேறு பெயர்களும் உண்டு. பண்டை நாட்களில், திருமயிலை தொண்டை நாட்டின் புலியூர்க் கோட்டத்தினைச் சேர்ந்த தாயிருந்தது.

### வள்ளுவர், பேயாழ்வார், வாயிலார் :

திருமயிலைதான் வான்முறை தந்த திருவள்ளுவப் பெருந்தகையார் தோன்றிய திருத்தலம் என்று கருதப்படுகின்றது. அப் பெருமகனாருக்கு இவ்விடத்தில் ஒரு திருக் கோயிலும் உண்டு.

முதலாழ்வார்களுள் ஒருவரான பேயாழ் வாரும், அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரான வாயிலார் நாயனாரும் தோன்றிய திருத்தலமும் இதுவே யாகும். வாயிலார் அகப் பூசையால் இறைவனை வழிபட்டு வீடு பேறு அடைந்தது திருமயிலையில்தான். அவர் ஆற்றிய அரிய வழி பாட்டின் திறன் அறிந்து போற்றுதற்குரியது. கீழ்க்கண்ட பாடல் அதனை அறிவிக்கின்றது :

*''மறவாமை யான்அமைத்த*
*மனக்கோயி லுள்ளிருத்தி*
*உறவாதி தனைஉணரும்*
*ஒளிவிளக்குச் சுடரேற்றி*
*இறவாத ஆனந்தம் எழுந்திரு*
*மஞ்சனம் ஆட்டி*
*அறவாணர்க் கன்பென்னும்*
*அமுதமைத்தர்ச் சனைசெய்தார்.''*

(திருத்தொண்டர் புராணம்.)

### மயிலைநாதர் :

இத்திருத்தலத்தில் பழங்காலத்தில் சமண சமயத்தினரான நேமிநாதர் என்னும் தீர்த்தங்கரரின் திருக்கோயில் ஒன்று இருந்ததாகக் கருதப்படுகின்றது. இத் தீர்த்தங்கரருக்கு மயிலைநாதர் என்ற மற்றொரு பெயரும் உண்டு. ஏறத்தாழ கி. பி. 14-ம் நூற்றாண்டில் வாழ்ந்த அவிரோதாழ்வார் என்ற சமண சமயப் புலவர் தமது '' திருநூற்றந்தாதி '' என்ற

1. இத் தலத்தில் சுக்கிரன் சிவபெருமானை வழிபட்டு இழந்த தன் கண்ணைப் பெற்றான்.

2. இத் தலத்தில் வேதங்கள் சிவபெருமானை வழிபட்டுத் தமக்கு அசுர பரிசத்தால் உண்டான பாவத்தைப் போக்கிக் கொண்டன.

நூலில் திருமயிலையில் இருந்த நேமிநாத தீர்த்தங்கரரின் திருக்கோயில் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.[1] இவ்வாறு, திருமயிலை பிற சமயத்தினரும் போற்றிய ஒரு திருத்தலமாக விளங்கியிருந்த பெருஞ்சிறப்பு ஈண்டுக் குறிப்பிடத்தக்கதாகும்.

**செல்வமலிகிய திருமயிலாபுரி:**

கி. பி. ஏழாம் நூற்றுண்டவரான நாவுக்கரசர் ஞானசம்பந்தர் ஆகியோரின் தேவாரத் திருப்பாக்களிலிருந்து, திருமயிலை அக்காலத்திலேயே, மாடமாளிகைகளும், மலிவிழா வீதிகளும் கொண்ட ஒரு மிகச் சிறந்த நகராக விளங்கியிருந்தது எனத் தெரிகின்றது. சேக்கிழார் பெருமானுர் திருமயிலையினைப் "பல்பெருங்குடி நீடுபரம்பரைச் செல்வமல்கிய திருமயிலாபுரி" எனப் போற்றுகின்றனர். கி. பி. எட்டாம் நூற்றுண்டினரான திருமங்கையாழ்வாரால் போற்றப்பெற்ற திருவல்லிக்கேணி, மயிலாப்பூருக்கு அணித்தேயமைந்த ஒரு திருத்தலமாகும். திருமங்கையாழ்வாரின் காலத்தில், திருவல்லிக்கேணி ஒரு சின்னஞ் சிறு சிற்றூராகவோ அல்லது புகழ்பெற்ற திருமயிலையின் ஒரு பகுதியாகவோ இருந்திருக்கவேண்டும். இக்காரணம் பற்றியே போலும் திருமங்கையாழ்வார், திருவல்லிக்கேணியைக் குறிப்பிடும்பொழுதெல்லாம் "......மயிலைத் திருவல்லிக்கேணி" என திருமயிலையை அதனுடன் சேர்த்தே குறிப்பிடுகின்றுர். இவர் காலத்திற்கு முற்பட்ட காலத்தவரான திருமழிசை ஆழ்வாரும் இவ்வாறே குறிப்பிட்டுள்ளதனை முன்பே கண்டோம்.

காஞ்சியினைத் தலைநகராகக்கொண்டு அரசோச்சிய பல்லவப்பேரரசர் தம்மை 'மயிலைகாவலன்' என்று அழைத்துப் பெருமிதம் பூண்டனர். பல்லவர்காலத்தில், மாமல்லபுரம் முக்கிய துறைமுகமாக அமைவதற்குமுன்னர், மயிலாப்பூரே பல்லவர்களின் முக்கிய துறைமுகமாக விளங்கியதெனக் கருதப்படுகின்றது. மாமல்லை தோன்றிய பின்பும், மயிலை தனது தனிச்சிறப்புக் குன்றுது, தொடர்ந்து சிறந்த துறைமுகமாக விளங்கி வந்திருக்கிறது. மயிலை பல்லவப் பேரரசில் ஒரு பகுதியின் முக்கிய நகரமாக இருந்ததென்றும், ஸ்ரீகண்ட சோழன் என்பான் மயிலையை முக்கிய நகரமாகக் கொண்ட நாட்டின் அரசனுய் இருந்தான் என்றும், அவன் "மயிலையர்கோன்" என்று புகழப்பெற்றுன் என்றும், பராந்தக வீர நாராயண பாண்டியனின் தளவாய்புரம் செப்பேடுகளைக் கொண்டு, ஆராய்ச்சியாளர் ஒருவர் அறிவித்துள்ளார்.

மயிலை பண்டை நாட்களில் பன்னுட்டினரும் கூடும் ஒரு புகழ்பெற்ற பெரிய துறைமுகமாக (International Port) விளங்கியது என்பதில் ஐயமில்லை. கி. பி. பதினொராம் நூற்றுண்டுக் கல்வெட்டு ஒன்று இதனை உறுதிப்படுத்துகின்றது. அக்கல்வெட்டு, மயிலையில் நானுதேசிகள் (பலநாட்டினைச் சேர்ந்த வணிகர்) கூடிச் சில தீர்மானங்கள் செய்தனர் எனச் சொல்லுகின்றது. கி. பி. பதின்மூன்றும் நூற்றுண்டில் இந்தியாவிற்கு வந்திருந்த புகழ்பெற்ற வெனீஸ் நாட்டு வழிப்போக்கரான மார்க்கோ போலோ (Marco Polo) மயிலாப்பூருக்கும் வந்தார். அவர் 'மயிலாப்பூர்' என்று அவ்வூர்ப் பெயரினைக் குறிப்பிடவில்லை என்றுலும், தூயதாமஸ் (St. Thomas) என்ற கிறித்துவ அடிகளாரின் [2]சமாதியிருந்த ஒரு சிறுநகர் பற்றிய வருணனையைத் தந்துள்ளார். அந்நகர் மயிலாப்பூரேயாகும். அவர் அந்நகர் மயில்களுக்குப் பெயர்பெற்றிருந்த தென்றும், தாமஸ் அடிகளார், பறவைகளை வேட்டையாடும் வேடன் ஒருவன் ஒரு மயிலின்மீது எறிந்த அம்பு குறிதவறிப் பாய்ந்ததால் இறந்தனர் என்று அக் காலத்தில் நம்பப்பட்ட கருத்தினையும் குறித்துள்ளார். கி. பி. பதினுன்காம் நூற்றுண்டின் இடைப் பகுதியில் ஜான் டீ மறிக்நோலி (John De Marignolli) என்ற வழிப்போக்கர்

1. "மறமே முனிர்த்து மயிலாபுரி நின்றுமன்னுயிர்கட்கு அறவே பொழியும் அருட் கொண்டலே......"

2. இவ்வடிகளார் கிறித்துவச் சமயத்தினைப் பரவச்செய்ய மயிலாப்பூர்ப் பகுதிக்குப் போந்த காலம் கி. பி. முதலாம் நூற்றுண்டு என்பது பொதுவாக நம்பப்படும் ஒரு செவி வழிச்செய்தியாகும். (It is "an important Christian tradition".)

மயிலாப்பூருக்கு வந்திருந்தார். அவர் மயிலையை "மைராபோலிஸ்" (Mirapolis) என்று குறிப்பிட்டுள்ளார். மயிலாப்பூரின் மயில்களைப்பற்றியும், மயிலாப்பூருக்குச் சீன நாட்டிலிருந்து கப்பல்கள் வருவது உண்டென்ற செய்தியினையும் அவர் அறிவித்துள்ளார். கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டில் விசயநகர மன்னர் தேவ ராயனின் ஆட்சியின்கீழ் இருந்த மிக முக்கியமான துறைமுகங்களுள் மயிலாப்பூரும் ஒன்றாக விளங்கியது. பின்னர் கி. பி. பதினாறும் நூற்றாண்டில் மயிலாப்பூரிலுள்ள சென்தோம் (San Thome) என்ற பகுதியில் போர்ச்சுக்கீசிய பாதிரிமார்களும் போர்ச்சுக்கீசியரும் குடியேறத் தொடங்கினர். விரைவில் சென்தோம் ஒரு மும்முரமான போர்ச்சுக்கீசியக் குடியிருப்பாக வளர்ந்தது. மயிலை சென்தோம் பகுதி, கிழக்குக் கடற்கரையிலுள்ள பலவிடங்களுடன் வாணிபம் செய்ய மிகவும் ஏதுவான இடமாக விருந்ததும், இவ்வளர்ச்சிக்கு ஒரு முக்கிய காரணமாகும். கி. பி. பதினாறும் நூற்றாண்டில் மயிலாப்பூருக்கு வந்திருந்த டூரேட் பார்போஸா (Durate Barbosa) என்பவர் மயிலாப்பூரிலிருந்தும் சென்னைக்கு அருகிலுள்ள பழவேர்க்காட்டிலிருந்தும்(Pulicat) ஏற்றுமதியான துணிகள், மலாக்கா (Malacca), பெகு (Pegu), சுமத்தரா (Sumatra), சீனு (China) முதலிய நாடுகளின் கடைகளில் காணப்பட்டன எனக் குறித்துள்ளார். அவர், மயிலைப்பூர் நகர் (City of 'Mailapora') முற்காலத்தில் 12 லீக் (league) நீளமுடையதென்றும், அது முன்பு கடற்கரையினின்றும் தொலைவில்தான் இருந்ததென்றும், பின்பு கடலரிப்பினுல் நிலம் கடலுள் மூழ்கி அந்நகரின் வெகு அருகிலேயே கடல் வந்துவிட்டதென்றும் விவரித்துள்ளார். சீசர் பிரெடரிக் (Ceasar Frederic) என்பவர் கி. பி. 1567இல் மயிலாப்பூரைப்பற்றித் தாம் எழுதிய குறிப்புக்களில், அவ்விடத்தில் மக்கள் படகுகளை (*masulla* boats) ஓட்டும் பெருந்திறனை வியந்து போற்றியுள்ளார். ஜான் நையுப் (John Neiuhef) என்பவர் கி.பி. 1662 இல் சென்தோமினைப் பற்றி எழுதுங்கால் அதனை உலகின் கிழக்குப் பகுதியிலுள்ள செல்வம் மல்கிய துறைமுகங்களில் ஒன்று ("one of the richest sea ports of the East") என வருணித்துள்ளார். இவ்வாறு, ஈராயிரம் ஆண்டுகளுக்கு மேலாகப் பல்வேறு காலங்களிலும் திருமயிலை ஒரு மிகமுக்கிய தலமாகத் திகழ்ந்திருக்கக் காண்கிறோம்.

### பேரற்புதங் கண்ட திருமயிலை:

நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தர் "அங்கம் பூம்பாவை" ஆக்கிய பேரற்புதம் நிகழ்ந்ததும் திருமயிலையில்தான். கி.பி.ஏழாம் நூற்றாண்டில், மயிலையில் சிவநேசர் என்ற வணிகர் வாழ்ந்து வந்தார். அவர் ஞானசம்பந்தரிடம் பேரன்பு பூண்டவர், தம் ஆருயிர்மகள் பூம்பாவையை அவருக்கே மணம் முடிப்பது என்று அவர் உறுதி கொண்டிருந்தார். ஆனால் அம்மகளோ அரவு தீண்டி இறந்தாள். அவள் உடலை எரித்து எடுத்த எலும்பும், சாம்பலும் நிறைந்த குடத்தை அவர் ஞானசம்பந்தர் மயிலை வந்தபோது அவரிடம் சேர்ப்பித்து வணங்கினர். சிறந்த பக்திச் செல்வரான சிவநேசரின் துயரினைத் துடைக்கத் திருவுள்ளங்கொண்ட திருஞானசம்பந்தர், குடத்தில் எலும்பும் சாம்பலுமாகக் கிடந்த பூம்பாவையினை நோக்கித் திருப்பதிகம் பாடித் திருவருளைச் சிந்தித்தார். ஒவ்வொரு திருப்பாடலிலும் பூம்பாவையின் உருவம் வளர்ந்தது. பத்தாவது திருப்பாடல் பாடி முடிந்ததும் பூம்பாவை முழுதும் உயிர் பெற்றுக் குடத்தை உடைத்துக்கொண்டு வெளியேவந்து நின்றாள். எல்லாம் வல்ல இறைவன் தன் ஞானக்குழந்தையான ஞானசம்பந்தரின் அளவிடற்கரிய பெருமையினை உலகிற்கு அறிவிக்கவே இப்பேரற்புதச் செயலை அவர்மூலம் நிகழ்த்தினுன் போலும். மண்ணினிற் பிறந்தார், பிறவியின் பயனைத் தவருது செய்யவேண்டுவன அடியார்தமை அமுது செய்வித்தலும், இறைவனின் நல்விழாப்பொலிவுகளைக் கண்டு நலம் பெறுதலுமாகும் என்பதனைத் திருஞானசம்பந்தரின் திருப்பதிகத்தின்மூலம் இப் பெருநிகழ்ச்சி உலகிற்கு உணர்த்தியது. இப் பேரற்புதம் கண்ட திருமயிலை, ஞானசம்பந்தர் நவின்ற பேருண்மைகளை உலகிற்கு என்றும் நினைவூட்டி நிற்கிறது.

### கபாலீச்சுரம்

பழமையும் பெருமையும் மிக்க திருமயிலையில் உள்ளது கபாலீச்சுரர் திருக்

கோயில். இது, தமிழ் நாட்டின் தலைசிறந்த சிவத்தலங்களுள் ஒன்று. இது, சைவ சமயாசாரியர்களான நாவுக்கரசர், ஞான சம்பந்தர், சுந்தரர் ஆகிய மூவரும் போந்து வழிபட்டதாகக் கருதப்படும் பெரும் புண்ணியத்தலம். இது திருஞான சம்பந்தர் பக்தியோங்கச் செய்யும் தேவாரத் திருப் பாக்களால் பரவிய 'பாடல் பெற்ற தலம்'. இஃது, அருணகிரியாரால் பாடப்பெற்ற சிங்காரவேலர் திருக்கோயில் கொண்டிருக்கும் திருத்தலம்.

இத்திருத்தலத்தில் இறைவன் மேற்கு நோக்கிய திருமுகத்துடன் இருப்பதும், அத் திருமூர்த்தம் நோக்கும் மேற்குத் திக்கிலேயே திருக்குளம் அமைந்து இருப்பதும், இத் திருத்தலத்தின் அரிய சிறப்பியல்புகளாகும். இத் தனிப்பெருஞ் சிறப்பினைச் சைவசமயச் செல்வர் ஒருவர் தெளிவுறக் கீழ்க்கண்டவாறு விளக்கியுள்ளார் :

"சென்னை மயிலாப்பூரில் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் கபாலீச்சுர மூர்த்தம் "சத்தியோஜாத மூர்த்தம்"; ஆதலால், அது வழிபடுவார்க்கு உடனே காட்சிதந்து அருள் வழங்குவதாகும்."

"சிவபெருமானுக்கு ஐந்து திரு முகங்கள் உண்டு. அவற்றுள் மேற்கு நோக்கிய திருமுகம் சத்தியோஜாதம்[1] எனப் படும். கபாலீச்சுர மூர்த்தம் மேற்கு நோக்கிய மூர்த்தமாகும். அந்த மூர்த்தம் நோக்கும் மேற்குப் பக்கத்திலேயே தடாகம் இருக்கிறது. இறைவனின் நெற்றியைக் குளம் என்ற சொல் குறிக்கும். அவன் நெற்றி நோக்கும் தடாகமே உண்மையில் திருக்குளமாகும். எனவே, மயிலைத் தடாகமே, உண்மையில் திருக்குளம் எனப் படும், கபாலீச்சுர மூர்த்தத்தின் நெற்றிக் கெதிரே இருத்தலால். கபாலீச்சுரரின் உள்ளத்தில் குடிகொண்டிருக்கும் அம்பிகை கற்பகாம்பாள் என்று அழைக்கப் பெறு கிறாள். விரும்பியதைத் தருவது கற்பகம். எனவே, விரும்பியதை உடனே அளிப்பவள் கற்பகாம்பாள். விரும்பியதை உடனே பெறவிழைபவர், மயிலைத் திருக்குளத்தில் நீராடிக் கற்பகாம்பாளுடன் கோயில் கொண்டிருக்கும் கபாலீச்சுரரை வழிபடல் வேண்டும்".

கபாலீச்சுரத்தில் சிங்காரவேலர் திருக் கோயில் கொண்டுள்ளது பிறிதொரு சிறப் பாகும். 'சிங்காரவேலர்', கபாலீச்சுரரை வழிபட்டு, சூரபதுமன் முதலிய அரக்கர்களை வெல்ல 'சக்திவேல்' பெற்றதால் அப்பெயர் பெற்றார். அருணகிரியார் இச் சிங்கார வேலரைப் பரவிப் பாடியுள்ளார்.

இனி 'கபாலீச்சுரம்' என்ற பெயர்க் காரணத்தைப் பார்ப்போம். 'காபாலிகம்' என்பது சைவசமய உட்பிரிவுகளுள் ஒன்று என்றும், அப் பிரிவினர் சிறப்பாக வழிபட்ட கோயில்கள் 'கபாலீச்சுரம்' என வழங்கப் பட்டன என்றும், அத்தகைய கோயில் களுள் மயிலைக் கபாலீச்சுரமும் ஒன்றாகும் என்றும் அறிஞர் கூறுவர். பிரளய காலத்தில் பரம்பொருளான சிவன் கையில் கபாலம் ஏந்தித் தனித்து நிற்பதாக ஒரு ஐதிகம். அவன் தனது எல்லையற்ற அருட் கருணையால் மீண்டும் ஆக்குந் தொழிலினை யும் மேற்கொள்ளுகின்றான். ஒடுக்குந் தொழிலினை ஆற்றும் பரம்பொருளே மீண்டும் ஆக்குந் தொழிலினையும் செய்யவல்லதாகும். ஆதலால் கபாலீச்சுரத் தத்துவம் மிக உயர்ந்த ஒன்றாகும். இஃதன்றி, கபாலீச் சுரம் பற்றிய ஒரு சுவையான புராணச் செய்தியும் உண்டு. ஒரு பொழுது, கயிலையில், பிரமனின் அகங்காரத்தினை அடக்க எண்ணிய சிவபெருமான், பிரமனது தலை களில் ஒன்றினை வெட்டிச் சேதப்படுத்தினார். பின்னர், பிரமன் மயிலைத் திருத்தலத்தில் சிவனை வழிபட்டு நலம் பெற்றான். இச் சிரச்சேத நிகழ்ச்சியினை நினைவுகூரும் வகை யில், இத்தலத்தில் சிவபெருமான் 'கபாலி' என்று திருநாமம் பெறுதல் வேண்டும் எனப் பிரமன் வேண்டினான். அவ்வாறே சிவ பெருமான் அருள, மயிலைத் திருக்கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவர் 'கபாலீச் சுரர்' எனப் பெயர் பெற்றார். கோயிலின் திருக்குளம் 'கபாலிதீர்த்தம்' என்றும் திருக் கோயில் 'கபாலீச்சுரம்' என்றும் வழங்க லாயின.

திருமயிலையில் உமையம்மை மயிலுரு வெடுத்துச் சிவவழிபாடு செய்து, சிவபெருமா

1. 'சத்தியோஜாதம்' என்றால் 'தோற்றுவித்தல்' என்று பொருள்.

னுடன் சேர்ந்ததும் ஒரு சுவையான புராண வரலாறாகும். ஒருபொழுது, கயிலையில், சிவபெருமான் அம்மையுடன், திருநீறு, திருவைந்தெழுத்து முதலியன பற்றி உரையாடிக் கொண்டிருக்கையில் அம்மையின் நினைவு இறைவனின் பேச்சில் முற்றும் பொருந்தாமல் அங்குத் தோகையை விரித்தாடிக் கொண்டிருந்த ஒரு மயில் மீது சென்றதாம். அம்மையின் தவற்றினை அறிந்த சிவனார், அம்மை மயிலுருப் பெற்றுத் தம்மை வழிபட்டு உய்க எனத் திருவுள்ளம் பற்றினார். தன் தவற்றினை உணர்ந்த அம்மையும் மயிலுருவில் மயிலாப்பூரில் புன்னை மரத்தடியில் சிவலிங்க வழிபாடு செய்து, சிவனருளால் மயிலுரு நீங்கப் பெற்றுச் சிவனாருடன் சேர்ந்தனள். இந்நிகழ்ச்சி பற்றியே அம்மை மயிலுருவில் சிவ வழிபாடு செய்த இடம் 'மயிலாப்பு', 'மயிலாப்பூர்', 'மயிலை' என வழங்கலாயிற்று. மயிலைத் திருத்தலத்திற்குத் திருவண்ணாமலை ஆதீனத்தினைச் சார்ந்த தவத்திரு அமிர்தலிங்கத் தம்பிரான் அவர்களால் இயற்றப்பட்ட தலபுராணம் உண்டு. அந்நூலில் இத்திருத்தலத்தின் அற்புதங்கள் பற்றிய பல அரிய செய்திகள் உள்ளன. இஃதன்றி, 'திருமயிலை உலா', 'திருமயிலைக் கலம்பகம்', 'கபாலீஸ்வரர் பஞ்சரத்தினம்', 'கற்பகவல்லி மாலை', 'சிங்காரவேலர் வெண்பா', 'திருமயிலை யமக அந்தாதி' முதலியவற்றினையும் இத் திருத்தலம் பெற்றுள்ளது.

### பழைய கபாலீச்சுரமும்[1] புதிய கபாலீச்சுரமும்:

பொதுவாக, மக்கள் இன்று திருமயிலையில் நடுநாயகமாக விளங்கும் கபாலீச்சுரமே, ஞானசம்பந்தரும் அருணகிரியாரும் போந்து பாடிய திருக்கோயில் என எண்ணுவர். ஆனால், தொல்பொருள் ஆராய்ச்சியிலிருந்தும் கல்வெட்டு ஆராய்ச்சியிலிருந்தும் கிடைக்கப் பெற்றுள்ள சில சான்றுகளிலிருந்து, இப்பொழுது மயிலையிலுள்ள கபாலீச்சுரம், தேவாரம் பாடப் பெற்ற காலத்திலிருந்த கபாலீச்சுரம் அன்று என்றும், அக் காலத்தில் அத்திருக்கோயில் வேறு இடத்தில் பெரும்பாலும் சென்தோம் (San Thome) கடற்கரையின் வெகு அருகில்-அமைந்திருக்க வேண்டும் என்றும் தெரிய வருகின்றன. இப்பொழுதுள்ள கபாலீச்சுரம் கி. பி. 15 ஆம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டதேயென வரலாற்று ஆராய்ச்சியாளர் எண்ணுகின்றனர். அஃது ஏறத்தாழ 300 ஆண்டுகளுக்கு முன்னர் அமைக்கப்பட்டது எனக் கொள்ளலாம் எனவும் அறிஞர் குறிக்கின்றனர்.[2] மேலும், இத்திருக்கோயில் ஏறத்தாழ 300 ஆண்டுகளுக்கு முன்னர், மயிலை நாட்டு முத்தையப்ப முதலியார் என்பவராலும் அவர் வழி வந்தோராலும் அமைக்கப்பட்டது என்றும் கோயிலுக்கு மேற்குத் திக்கிலுள்ள திருக்குளமும்[3] அவர்கள் வெட்டியதே யென்றும் விளம்பும் செய்திகளும் உண்டு.

இனி, கபாலீச்சுரம் முன்பு இருந்த பழைய இடத்தினை விட்டு இடம் பெயர்ந்து அமைந்துள்ளது எனக் கருதுவதற்கான சில முக்கிய காரணங்களைப் பார்ப்போம். தற்பொழுதுள்ள கபாலீச்சுரத்தின் கட்டடத்தினை ஊன்றிக் காண்போமேயானால், அது பல்லவர் காலத்திலோ அல்லது சோழர் காலத்திலோ கட்டப்பட்ட ஒரு பழமையான கட்டடமாகத் தெரியவில்லை. அக்கோயிலிலுள்ள தூண் வேலைப்பாடுகள் (Corbels pillar-brackets) பிற்கால விசயநகர முறையில் அமைந்து, கி. பி. 16-அல்லது 17-ஆம் நூற்றாண்டினைச் சேர்ந்தவையாய் இருக்கலாம் எனத் தெரிகின்றன. மேலும், இக்

1. இக் கோயிற் பெயரினை ஞானசம்பந்தர் 'கபாலீச்சரம்' என்றே குறிக்கின்றார்.

2. திரு சி. எம். இராமசந்திரன் செட்டியார் மயிலாப்பூர் பற்றி வரைந்துள்ள ஒரு குறிப்பினை, 1950இல் வெளிவந்த 'திருத்தொண்டர் புராணம் தொகுதி 5' என்ற நூலில் காண்க; பக்கங்கள்: 1385 - 6.

3. இத்திருக்குளத்தினை ஆண்டுக்கொருமுறை 'முஹரத்தின்' (Muharram) கடைசி நாளன்று முகமதியரும் பயன் படுத்திக் கொள்ளுகின்றனர். இவ்வாறு ஓர் இந்து சமயக் கோயிலினைச் சேர்ந்த திருக்குளத்தை முகமதியர் பயன் படுத்திக் கொள்வது வேறு எங்கும் காணக்கூடியதன்று. இது தமிழ் மக்களின் பரந்த மனப்பான்மையினையும், அவரிடையே நிலவும் சமய ஒற்றுமையினையும் வெளிப்படுத்துவதாகும். செந்தமிழ் நாட்டினர் எல்லாச் சமயக் கூட்டுறவில் என்றும் இன்பம் காண்பவரன்றோ?

கோயிலில் பழமையான முழுக் கல்வெட்டு[1] ஒன்று கூடக் காணப்படவில்லை.[2] இவற்றிலிருந்து பழைய கபாலீச்சுரத்தின் கட்டடங்கள் முற்றிலும் கைவிடப்பட்டு, அஃது இருந்த இடத்தில் இப்பொழுதுள்ள கபாலீச்சுரத்தின் கட்டடங்கள் முற்றிலும் புதியனவாக நிர்மாணிக்கப்பட்டிருக்கலாம் என்றோ, அல்லது ஏதோ தவிர்க்க முடியாத காரணங்களால் புதிய கபாலீச்சுரம் பழைய கபாலீச்சுரம் இருந்த இடத்தில் அமைக்கப்படாது, முற்றிலும் புதிய இடத்தில் தோற்றுவிக்கப் பட்டது என்றோ கருதவேண்டியுள்ளது.

மேற்கூறிய இரு கருத்துகளுள், முற்றிலும் புதிய இடத்தில்தான் புதிய கபாலீச்சுரம் தோன்றியிருக்க வேண்டும் என்னும் கருத்தினை வலியுறுத்தும் பல வரலாற்றுச் சான்றுகள் கிடைத்துள்ளன. சென்தோம் கடற்கரையின் அருகே இந்திய அரசின் தொல்பொருள் ஆய்வுத்துறையினர் பழைய கபாலீச்சுரத்தினைச் சேர்ந்தவையாய் இருக்கலாம் என்று எண்ணத்தக்க சில கட்டடப் பகுதிகளைக் கண்டெடுத்தனர். இத்துறையினர் கி. பி. 1923 இல் சென்தோம் மாதா கோயிலின் அருகில் புதைபொருள் ஆராய்ச்சி நடத்தினர். அப்பொழுது, "கூத்தாடுவார் (நடராசர்) சிலைக்கு முன்பு ஒரு விளக்கு எரிக்க நிலம் வரியிலியாக விடப்பட்டது" என்னும் செய்தியினைச் சொல்லும் கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டினைச் சேர்ந்த கல்வெட்டினைக் கொண்ட ஒரு கல் நிலத்துக்கடியிலிருந்து கிடைத்தது.[3] இவ்வகழ்வாராய்ச்சிக்கு முன்பே, "மயிலாப்பூரிலுள்ள சிவன்-பார்வதி இவர் தம் கருவறைகள் உள்ளிட்ட எல்லாக் கட்டடங்களும்" என்ற செய்தியினைக் கூறும் கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டினைச் சேர்ந்த கல்வெட்டினைக் கொண்ட ஒரு கல்லை, கி. பி. 1921இல், ஆஸ்டன் பாதிரியார் (Father Hosten) சென்தோம் மாதாகோயில் அருகில் கண்டெடுத்தார். இவையன்றி சென்தோமில் வேறு சில கல்வெட்டுக்களையும் இந்திய அரசின் கல்வெட்டுத்துறையினர் கண்டுள்ளனர். அவற்றுள் மிகவும் குறிப்பிடத்தக்க ஒன்று, "திருமயிலாப்பூரில் உள்ள திருப்பூம்பாவை" என்னும் சொற்களைக் கொண்ட கல்வெட்டாகும்.[4] இக்கல்வெட்டுக்களன்றி உடைந்த சிலை ஒன்றும், இந்து சமய வேலைப்பாடுகளைக் கொண்ட சில மெல்லிய தூண்களும் சென்தோமில் கண்டெடுக்கப்பட்டுள்ளன. சென்தோம் மாதாகோயில் அருகில் கிடைத்த அச்சிலை, தனது வாகனமான மயில்மீது சாய்ந்த நிலையில் காட்சி தரும் முருகக் கடவுளின் திரு உருவமாகும். மேற்கூறியவற்றினின்றும் சென்தோம் கடற்கரையின் வெகு அருகில் பழமையான சிவன் கோயில் ஒன்று இருந்திருக்க வேண்டும் என்பதும், அதுவே பழைய கபாலீச்சுரமாக இருத்தல் வேண்டும் என்பதும் புலனுகின்றன. அருணகிரியாரும் "கடற்கரைத் திரையருகே சூழ் மயிலைப் பதிதனில் உறைவோனே" என்று கி. பி. 15 ஆம் நூற்றுண்டில் பாடியுள்ளதும் ஈண்டுக் குறிப்பிடத்தக்கதாகும்.

கடற்கரையின் வெகு அருகிலிருந்த பழைய கபாலீச்சுரம் பின்னுள்களில் ஏற்பட்ட கடலரிப்பினுல், கைவிடப்பட்டு அழிந்திருக்க வேண்டும் என்று சில வரலாற்று அறிஞர் கருதுகின்றனர்.[5] மயிலாப்பூர்ப்பகுதி

1. இக்கோயிலில் தலை—கால் இல்லாத கல்வெட்டுப் பகுதிகள் மட்டும் ஒரு சில கற்களில் உள்ளன. இக்கற்கள் பழைய கோயிலின் கற்களாக இருக்கலாகுமா என்பது ஆராயப்படவேண்டிய ஒன்றாகும் என அறிஞர் ஒருவர் குறித்துள்ளார்.

2. இத்திருக்கோயிலுக்கு அருகிலுள்ள பழமையான திருக்கோயில்களான திருவல்லிக்கேணி, திருவொற்றியூர், திருவான்மியூர் முதலியவற்றில் எல்லாம் பழங்காலத்துக் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன என்பதும் ஈண்டு கவனிக்கத்தக்கதாகும்.

3. 'இந்தியத் தொல்பொருள் ஆய்வுத்துறையின் அறிக்கை' ('Report of the Archaeological Survey of India'), 1922-23, பக்கங்கள் 120—121; கல்வெட்டு எண் 217 (1923ஆம் ஆண்டு).

4. கல்வெட்டு எண் 218 (1923ஆம் ஆண்டு).

5. சீநிவாசாச்சாரி, சி. எஸ். (Srinivasachari, C.S.): 'சென்னை மாநகரின் வரலாறு' ('History of the City of Madras'), 1939, பக்கம் xix.

யில் உக்கிரமான கடலரிப்புப் பல்லாண்டு களுக்கு முன்பு நிகழ்ந்துள்ளது என்பது வெகுவாக நம்பப்படும் ஒரு செவிவழிச் செய்தியாகும். இக்கடலரிப்பினுலேயே மயிலையின் கடற்கரையில் இருந்த ஒரு சமண சமயக்கோயிலும் கைவிடப்பட்டு அழிந்தது என்றும் கருதப்படுகின்றது.[1]

வேறுசில அறிஞர் கி. பி. 16 ஆம் நூற்றுண்டில் போர்ச்சுக்கீசியர் சென்தோமில் குடியேறியபின், பழைய கபாலீச்சுரம் அவரால் அழிந்து பட்டிருக்கலாம் எனக் கருதுகின்றனர்.[2] இக்கருத்தினை வலியுறுத்தும் ஒரு வரலாற்று நிகழ்ச்சியும் உண்டு. கி. பி. 1558இல் போர்ச்சுக்கீசியர் மயிலாப்பூரில் இருந்த சில இந்து சமயக்கோயில்களை அழித்தனர். இதனுல் வெகுண்டெழுந்த இந்துக்கள் விசயநகர மன்னன் சதாசிவ ராயனின் சார்பில் ஆட்சி செலுத்தி வந்த இராமராயனிடம் முறையிட்டனர். அவன் சென்தோமின் மீது பெரும் படையெடுத்து வந்து அப்படைக்குத் தானே தலைமை தாங்கிப் போர்ச்சுக்கீசியரை அடக்கினுன்.[3]

மேற்கண்டவாறு, மயிலாப்பூர்க் கடற்கரையைச் சார்ந்திருந்த பழைய கபாலீச்சுரம் கடலரிப்பினுலோ அல்லது போர்ச்சுக்கீசியரின் வன்செயலாலோ அழிந்து பட்டிருக்க வேண்டும் என்று தெள்ளிதின் ஊகிக்கலாம். பழைய கபாலீச்சுரம் மறைந்த காலமும் புதிய கபாலீச்சுரம் தோன்றிய காலமும் இன்னதென உறுதியாகத் தெரியவில்லை. ஆனுல், அருணகிரியார் காலம் (கி. பி. 15ஆம் நூற்றுண்டு) வரை பழைய கபாலீச்சுரம் மயிலைக்கடற்கரையின் வெகு அருகிலேயே விளங்கிற்று எனக் கொள்ளலாம்.[4]

**இன்றுள்ள கபாலீச்சுரம் பற்றிய பிறசெய்திகள் :**

இத்திருக்கோயிலின் இறைவர் கபாலீச்சுரர் பிரதிட்டை செய்யப்பெற்ற சிவலிங்கம். இறைவி கற்பகாம்பாள் (கற்பகாம்பிகை அல்லது கற்பகவல்லி), கபாலீச்சுரரின் சந்நிதிக்கு வடபாகத்தில் தனிச் சந்நிதியில், நிற்கின்ற கோலத்தில் தெற்கு நோக்கிய திருமுகத்துடன் காட்சி தரும் திருமேனி உடையவள். இத்திருக்கோயிலின் தல விநாயகர் கூத்தாடும் விநாயகர். இங்கு, அருணகிரியாரால் பாடப்பெற்ற சிங்கார வேலர் ஒரு தனிக்கோயிலில் திருக்காட்சி தருகின்றுர். பழனியாண்டவர், சனீசுவரர், வாயிலார் நாயனுர், திருஞானசம்பந்தர், அங்கம் பூம்பாவையார் முதலியவர்க்கும் இங்கு தனிச் சந்நிதிகள் உண்டு. இக்கோயிலின் அழகிய உருவ வேலைப்பாடுகளைக் கொண்ட கோபுரம் ஏறத்தாழ 120 அடி உயரமுடையதாய் கபாலீச்சுரத்தின் சிறப்பினைக் காண்போர் அனைவருக்கும் நினைவூட்டி நிற்கின்றது.

இத்திருக்கோயிலில் பங்குனி மாதம் (மார்ச்சு-ஏப்ரல்) வளர்பிறைப் பௌர்ணமியைத் தீர்த்த நாளாகக் கொண்டு பத்து நாள்கள் திருவிழா (பிரம்மோற்சவம்) வெகு சிறப்புற நிகழும். அவ்விழாவின் எட்டாவது நாளன்று நடக்கும் 'அறுபத்து மூவர் திருவிழா', திருமயிலைக்கே சிறப்புத் தருவதாகும். அவ்விழாவினைக் காண ஏறத்தாழ ஐந்து லட்சம் மக்கள் திருமயிலையில் கூடும் திருக்காட்சி அனைவரும் கண்டு கழிபேருவகை கொள்ளத்தக்கதாகும். திருச்செங்காட்டங்குடியில் நிகழும் 'அமுது படையல் விழா,' காரைக்காலில் நிகழும் 'மாங்கனி விழா,' திருவொற்றியூரில் நிகழும் 'மகிழடி

1. டெய்லரின் (William Taylor), 'A Catalogue Raisonne of Oriental Manuscripts in Government Library' *என்ற நூலினைக் காண்க, தொகுதி 3, பக்கம் 372.*

2. *திரு, சி. எம். இராமச்சந்திரன் செட்டியார் அவர்களின் முன்னர்க்குறித்த மயிலாப்பூர் பற்றிய குறிப்பினைக் காண்க.*

3. *இராபர்ட் சுவல்* (Ropert Sewell) : *'மறக்கப்பட்ட பேரரசு'* ('The Forgotten Empire'), *1924, பக்கங்கள் 193-194.*

4. *இராமன், கே. வி.* (Raman K. V) : *'சென்னைப் பகுதியின் முற்கால வரலாறு'* (The Early History of the Madras Region'), *1959, பக்கம் 36.*

சேவை போன்றே 'அறுபத்து மூவர் விழாவும்' திருமயிலைக் கபாலீச்சுரத்தின் தனிப்பெரும் விழாவாகும்.[1]

திருமயிலைக் கபாலீச்சுரம் ஏறத்தாழ இரண்டு ஏக்கர் நிலப்பரப்பில் அமைந்துள்ளது. இத்திருக்கோயிலுக்கு ஏறத்தாழ $4\frac{1}{2}$ இலட்சம் ரூபாய் மதிப்புள்ள பழமையான நகைகளும், பல அழகிய வாகனங்களும், திருத்தேரும் உண்டு. இத்திருக்கோயில் தெய்வத்தானத்தினர், மக்களுக்கு மிகவும் பயன்படும் முறையில் ஒரு நல்ல இடத்தில் ஒரு திருமண மண்டபத்தினையும், திருமுறைகளைப் பயிற்றுவிக்கத் தேவாரப் பாடசாலையொன்றினையும் அமைத்துள்ளார்கள். அவர்கள் 'கபாலீச்சுரர் நகர்' என்ற கட்டிட விடுதிகளையும் கட்டியுள்ளனர். தமிழ்நாட்டு அரசின் இந்து அறநிலைய ஆட்சித்துறையினைச் சேர்ந்த ஓர் அலுவலரும் (நிர்வாக அதிகாரி—Executive Officer) மூன்று அறங்காவலர்களும் (Trustees) இத்திருக்கோயிலின் பணிகளை நடாத்துகின்றனர்.

"மங்குல் மதிதவழு மாடவீதி
மயிலாப்பி லுள்ளார் மருக லுள்ளார்
கொங்கிற் கொடுமுடியார் குற்ற லத்தார்
குடமூக்கி லுள்ளார்போய்க் கொள்ளம்
தங்குமிட மறியார் சால நாளார் [பூதூர்த்
தரும புரத்துள்ளார் தக்க ளூரார்
பொங்குவெண் ணீறணிந்து பூதஞ் சூழப்
புலியூர்ச் சிற்றம்பல மேயக்கார் தாமே."

—(திருநாவுக்கரசர், கோயில் சிதம்பரம், புக்கதிருத்தாண்டகம் )

"மலிவிழா வீதி மடநல்லார் மாமயிலைக்
கலிவிழாக் கண்டான் கபாலீச் சரம்அமர்ந் [தான்..."

—(திருஞானசம்பந்தர். பூம்பாவைப் பதிகம்.)

"..............................
துறைக்கொண்ட செம்பவளம்
இருளகற் றுஞ்சோதித்
தொன்மயிலை வாயிலா
னடியார்க்கு மடியேன்..."

(—சுந்தரர், திருத்தொண்டத் தொகை)

———

சொல்வி ளங்குசீர்த் தொண்டைநன் னாட்டிடை
மல்லல் நீடிய வாம்மை வளம்பதி
பல்பெ ருங்குடி நீடு பரம்பரைச்
செல்வம் மல்கு திருமயி லாபுரி

நீடு வேலைதன் பால்நிதி வைத்திடத்
தேடும் அப்பெருஞ் சேமவைப் பாமென
ஆடு பூங்கொடி மாளிகை அப்பதி
மாடு தள்ளு மரக்கலச் செப்பினுல்

தவள மாளிகைச் சாலை மருங்கிறைத்
துவள்ப தாகை நுழைந்தணை தூமதி
பவள வாய்மட வார்முகம் பார்த்தஞ்சி
உவள கஞ்சேர்ந் தொதுங்குவ தொக்குமால்

வீதி எங்கும் விழாஅணிக் காளையர்
தூதி யங்குஞ் சுரும்பணி தோகையர்
ஓதி எங்கும் ஒழியா அணிநிதி
பூதி எங்கும் புனைமணி மாடங்கள்

—பெரியபுராணம். (வாயிலார் 1, 2, 4, 5)

———

1. பண்டைக் காலத்திலேயே 'மலிவிழாவீதி மாமயிலை' விழாக்களுக்குப் பெயர்பெற்றது என்பதனை ஞானசம்பந்தரின் 'பூம்பாவைத் திருப்பதிகத்தினின்றும்' அறியலாம். அப்பதிகத்தில் மயிலையில் நடைபெற்ற திருவிழாக்கள் பலவும் குறிக்கப்பெற்றுள்ளன. அவை ஓணவிழா, விளக்கீடு, ஆதிரைநாள், தைப்பூசம், கடல்ஆட்டு, உத்திரநாள், அட்டமிநாள், பொன்தாப்பு, பெருஞ்சாந்தி என்பன.

# தமிழகக் கோயிற் கட்டிடக் கலை

[திரு. சீ. ஈ. ராமச்சந்திரன், எம்.ஏ., எம்.லிட்.]

திரு சி. பி. ஏகாம்பர முதலியாருக்கும் திருமதி விசாலாட்சி அம்மையாருக்கும் 25-11-1929 இல் இவர் தோன்றினர். சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் படித்து வரலாற்றுத்துறையில் எம். ஏ. பட்டம் பெற்றார். பத்துப்பாட்டிலுள்ள வரலாற்றுச் செய்திகளை ஆய்ந்து எம்.லிட் பட்டம் பெற்றார். பதினைந்து ஆண்டுகள் பச்சையப்பன் கல்லூரியில் துணைப்பேராசிரியராகத் திகழ்ந்த இவர் தற்பொழுது சென்னைப் பல்கலைக் கழகவரலாற்றுத் துணைப் பேராசிரியராகப்



பணியாற்றுகிறார். பல்கலைக்கழக இதழிலும் பிற திங்கள் இதழ்களிலும் வரலாற்றுத்துறை பற்றிய சிறந்த ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ளார். ஆங்கில வரலாற்றுப் பேராசிரியரான ஜி எம் டிரவெல்லியனின் 'ஆங்கிலேயரின் சமுதாய வரலாற்றைத் தமிழாக்கம்செய்துள்ளார். 'தமிழ்நூல் வெளியீட்டுக் கழகம் இதை வெளியிட்டுள்ளது. இவர் 'பத்துப்பாட்டு ஆராய்ச்சி' (Historical Studies in the Pattuppattu) சென்னைப் பல்கலைக் கழக வெளியீடாக வந்துள்ளது.

தமிழகம் கலைக்கோயில்களின் இருப்பிடமாக விளங்குவது கண்கூடு. சிறப்பாகப் பல்லவ மன்னர்களின் தலைநகராகிய காஞ்சியும் பாண்டியக் கோநகராகிய மதுரையும், சோழப்பெருநகராகிய தஞ்சையும், இந்தியக் கட்டிடக் கலையை அறிவிக்கும் காட்சிச்சாலைகளாய்க் கண்டோர்ப் பிணிக்கும் தகையவாய் அமைந்துள்ளன. இக்கோயிற் சின்னம் தமிழக அரசின் மாநிலச் சின்னமாக அமைந்திருப்பதும் பொருத்தமானதே யாகும்.

இன்று காணப்படும் கோயில்கள் கி. பி. 6 ஆம் நூற்றாண்டுக்குப்பின் தோன்றியவை யாகும். காலத்தால் முந்திய கோயில்கள் தமிழகத்தில் இருந்துள்ளன. இரட்டைக் காப்பியங்கள் அக்காலத்திலிருந்த கோயில்களைப் பற்றிப் பேசுகின்றன. மண்ணாலும், சுதையாலும் ஆக்கப்பட்டன ஆதலின் அவையனைத்தும் அழிந்துபட்டனபோலும். சோழன் கோச்செங்கணான் எண்தோள் ஈசர்க்கு எழுபதிற்கும் மேற்பட்ட கோயிலெடுத்தான் என்பதைத் திருமங்கை மன்னன் திருவாக்காலும், தேவாரப்பதிகங்களாலும்அறிகிறோம்.கி.பி. 7ஆம்நூற்றாண்டில் வாழ்ந்தவரான அப்பரடிகள் திருவாக்கினின்றும், அவர் காலத்து விளங்கிய பல்வகைக் கோயில்களைப்பற்றி அறிகின்றோம். பெருங்கோயில், கரக்கோயில், ஞாழற் கோயில், கொகுடிக்கோயில், இளங்கோயில், மணிக்கோயில், ஆலக்கோயில் என்பன அவர்தம் பாடலால் அறியப்படும் திருக்கோயில்களாகும்.

ஆயின் அழியாத கற்கோயில்கள் முதன் முதலில் பல்லவமன்னர்களால்தாம் கட்டப்பட்டன. முதலாம் மகேந்திர வர்மனின் மண்டகப்பட்டுக் கல்வெட்டொன்று அம்மன்னன் கட்டிய கோயிலைப் பெருமிதத்துடன் அறிவிக்கின்றது. செங்கல், சுண்ணாம்பு, மரம், உலோகம் இவை எதுவுமின்றியே பிரமனுக்கும், சிவனுக்கும், திருமாலுக்கும் கோயில் கட்டுவித்தான் என்பதே அக்கல்வெட்டுச் செய்தியாகும். இதனினின்றும், அவன் காலத்துக்கு முற்பட்ட கோயில்கள் மண், மரம் முதலான பொருள்களால் கட்டப்பட்டிருக்கவேண்டும் என்பது பெறப்படுகின்றது. மகேந்திர வர்மனால் ஏற்படுத்தப்பட்டவை மலைச் சாரலில் குடையப் பெற்ற மண்டபங்களே எனலாம். உருவத்தில் அவை அஜந்தாவிலும், கார்லேயிலும் காணப்படும் குகைக் கோயிலைப்போன்று இருந்தமையின், குகைக் கோயில்கள் என்று அழைக்கப்பட்டன. உண்மையில் மகேந்திரனால் கட்டப்பட்ட

கோயில் ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட அறையுடன் கூடிய மண்டபமே ஆகும்.

பல்லவக்கோயிற் கட்டிடக்கலையின் அடுத்த வளர்ச்சியை மகேந்திரனின் மகன் முதலாம் நரசிம்மவர்மன் காலத்துக் காணலாம். கடன்மல்லையில் அவன் எழுப்பிய பஞ்சபாண்டவர் தேர்கள், தனிக்கற்களைக் குடைந்து உருவாக்கப்பட்டவை ஆகும். இவ்வைந்து தேர்களும், பண்டு தொட்டுத் தமிழகத்தே நிலவிவந்த கோயிற்கட்டிடக் கலையின் பல்வேறு வளர்ச்சிகளை அறிவிப்பதற்கென்றே செதுக்கப்பட்டன போன்று ஐ வே று வகையில் அமைந்துள்ளன. அவற்றுள் துர்க்கைக்கோயிலின் விமானம் ஓலை வேயப்பெற்ற கூரைபோன்ற தோற்றமளிக்கின்றது. அர்ச்சுனர் தேரும், தர்மராஜர் தேரும் அக்காலத் தமிழகத்தே நிலவிய விமான அமைப்பினைக் காட்டும் தனித்தன்மை வாய்ந்தவையாகும்.

மாமல்லபுரத்தே அமைந்த கடற்கரைக்கோயில் அடுத்த வளர்ச்சியினை அறிவிப்பதாம். ஒருபாறையினைக் குடைந்து செதுக்கி அமைத்தற்குப் பதிலாகக் கற்களைத் தனித்தனியே செதுக்கிப் பின் இசைவோடு அடுக்கிக் கட்டிய கோயிலாக மாமல்லபுரக் கடற்கோயில் விளங்குகின்றது. மேல் நோக்கி உயர்ந்து விளங்கும் விமானமும் இக்கோயிலின்கண் காணப் படுவதொன்றும்.

அடுத்துக் காஞ்சியில் காணப்படும் கைலாசநாதர் கோயிலும், வைகுந்தப் பெருமாள் கோயிலும் பல்லவக் கோயிற் கட்டிடக் கலையின் முழுவளர்ச்சியைக் குறிப்பன எனலாம். கைலாசநாதர் கோயில், முன் மண்டபத்தையும், பலநிலைகளையுடைய விமானத்தையும் கொண்டதாய் நீண்ட சதுரவெளியில் அமைந்துள்ளது. இவை அனைத்தையும் சுற்றுச் சுவர் பாதுகாக்கின்றது. கருவறையினைச் சுற்றிலும் அதை ஒட்டியே நான்கு மூலைக்கு ஒன்றாக நான்கும் இடைவெளிகளில் ஒவ்வொன்றுமாக மொத்தம் ஏழு சிறு கோயில்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. சுருங்கக் கூறின், பல்லவக் கோயிற்கட்டிடக் கலையின் சிறப்புக் கூறுகள் அனைத்தும் ஒருங்கே அமைந்துள்ள இடம் கைலாசநாதர் கோயிலே எனலாம்.

கோயில்களின் அமைப்புமுறை, பல்லவ ஆட்சி இறுதிக் காலத்தில் ஒரு முழுமை அடைந்தது எனலாம். கோயிலின் நடு இடத்தில் இறைவரின் திருமேனி விளங்கியது. இவ்விடம் கர்ப்பக்கிரகம் (கருவறை) எனப்பட்டது. கர்ப்பக்கிரகம் கீழ்த்திசையை நோக்கி அமைக்கப்பட்டது. இதற்கு முன்பாக அமைந்த மண்டபம் மக்கள் இருந்து நோக்கி இறைவனை வணங்குதற்குரிய முறையில் அமைக்கப்பட்டிருந்தது. கர்ப்பக் கிரகமும், இம்மண்டபமும் ''அந்தராலா'' என்றழைக்கப்பட்ட சிற்றறையினால் இணைக்கப்பட்டிருந்தது. மண்டபத்தை அடுத்த வெளி இடம் அர்த்தமண்டபம் என்றழைக்கப்பட்டது. அர்த்தமண்டபத்தின் வழியாகத்தான் கோயிலின் உள்ளே நுழைய முடியும். கர்ப்பக்கிரகத்தின் மேற்புறத்தே மிகவுயரமான விமானமும், கோயிலின் மற்றைய இடங்களின் மேற்புறத்தில் சிறு விமானங்களும் விளங்கின. நான்கு பக்கமும் சுற்றுச் சுவர்களால் காக்கப்பட்ட நீண்ட சதுரமான இடத்தில் கோயில் கட்டப்பட்டது. கோயிலின் கர்ப்பக்கிரகம் கிழக்கு நோக்கியிருப்பது போலவே, நுழைவாயிலும் கீழைச்சுவரில் அமைக்கப்பட்டிருந்தது.

கி. பி. 9ஆம் நூற்றாண்டின் இறுதியில் விஜயாலயச்சோழரின் வழித்தோன்றல் முதலாம் ஆதித்யசோழர் பல்லவர்களிடமிருந்து ஆட்சியைக் கைப்பற்றினர். இக்காலச் சோழர்கள் கட்டிடக்கலையில் துறைபோயவர்களாய்த் துலங்கினர். திராவிடக் கட்டிடப்பாணி இவர்களால் வளர்ந்து சிறந்தது எனலாம். கலைவளம் கொழிக்கும் கவின் மிகு கோயில்களைப் பெருமளவில் கட்டிய பெருமை சோழ மன்னர்களையே சாரும். முதலாம் இராசராசன் கட்டிய தஞ்சைப்பெரிய கோயிலும், அவன் மகன் முதலாம் இராசேந்திரன் கட்டிய கங்கை கொண்டசோழபுரக் கோயிலும் சோழர் தம் கலையுள்ளத்தைப் புலப்படுத்தும் சிறந்த எடுத்துக்காட்டுக்கள் எனலாம்.

பல்லவர் காலத்து இருந்தது போலன்றிச் சோழர் காலத்தே விமானங்கள் மிக உயரமாகக் கட்டப்பட்டன. தஞ்சைப் பெரிய கோயிலின் விமானம் 190 அடி உயரமுடையதாய் வானளாவி நிற்கின்றது. 14 நிலைகளைக் கொண்ட அவ் விமானத்தின் உச்சியில்

அமைந்த சிகரம் 20 டன் நிறையுடைய ஒரே கல்லால் ஆனது ஆகும். இங்கு விமானம் உயரமாக இருந்தமையால் சுற்றுவாயிலோ, வெளிக் கோபுரமோ அதை விஞ்சுவதாய் அமையவில்லை. ஆயின் சிலவிடத்துப் பழைய கோயில்கள் பெரிதாகக் கட்டப் படாத நிலையில், வெளிவாயிற் கோபுரங்கள் உயர்ந்தும், சிறந்த வேலைப்பாடுகளுடனும் விளங்கின. பிற்காலச் சோழர் காலம் வரை இதே முறையில்தான் கோயில்கள் கட்டப் பட்டன. பல்லவர் காலத்தே, கர்ப்பக் கிரகத்தை ஒட்டியே சிறு ஆலயங்கள் கட்டப் பட்டன. ஆயின் சோழர்கள் அத் தகைய சிறு ஆலயங்களைக் கர்ப்பக் கிரகத் தோடு இணைக்காமல் கோயிலின் பரந்த சுற்றுச் சுவர்க்குள்ளே தனித்தனி ஆலயங் களாக அமைத்தனர். சோழர் கோயில் களில் காணப்படும் வேலைப்பாடு அருமை வாய்ந்தவை. அக் கோயிற் கட்டிடங்கள் நுண்மையான சிற்ப வேலைப்பாடுகளுடன் விளங்குவன. விடா முயற்சியுடன் மெய் வருத்தம் பாராது செய்யப்பட்ட அச் சிற்ப வேலைப்பாடுகள் கண்டார் வியத்தற் குரியவை. "சோழக் கலைஞர் அரக்கர்களைப் போலச் செயல் தொடங்கி நுண்வினைப் பொற்கொல்லர் போல் செய்து முடிக்கும் திறம் வாய்ந்தவர்" எனப் பெர்குசன் கூறுவது முற்றிலும் பொருத்தமாகும்.

இதனை அடுத்த நிலையில், விமானங் களைவிடச் சுற்றுச் சுவரில் அமைந்த வாயிற் கோபுரங்கள் சிறப்பாகக் கருதப்பட்டன. திராவிடக் கோயிற் கட்டிடக் கலையமைப்பு இந்நாள் வரை திருத்தமாக அமைக்கப்பட்டு விட்டதால், சோழர்க்குப் பின் 13 ஆம் நூற்றாண்டில் அரசாண்ட பாண்டியர்கள், அதே பாணியைக் கைக்கொண்டு பழையன புதுக்கியும், இருந்தவை திருத்தியும் வாழ்ந் தனர். இப் பாண்டியர் பழங் கோயில்களைச் சுற்றிலும் மதிற் சுவர்கள் பல எழுப்பினர். நீண்ட சதுரமாக அமைந்த மதிற் சுவரின் ஒவ்வொரு நுழைவாயிலின் மேலும் விமா னத்தையே மறைக்கக் கூடிய பெருங் கோபுரங்கள் கட்டப்பட்டன. உள்வாயிலின் கோபுரத்தைக் காட்டிலும், அதனைச் சுற்றி யுள்ள மதிற்சுவரின்கண் அமைந்த வாயிற் கோபுரங்கள் அளவில் பெரியனவாயும் உயர்ந்தும் விளங்கின. தவிரவும் பாண்டிய மன்னர்கள் ஏற்கெனவே இருந்த கோயில் களில் பல மண்டபங்களைக் கட்டியும், மதிற் சுவர்க்குள் மேலும் சிறு ஆலயங்களை அமைத்தும், கோபுரங்களைத் தோற்று வித்தும் தம் கடனாற்றினர்.

விஜயநகர மன்னர்களால் மேலும் இக் கலை வளர்ச்சி அடைந்தது. பல கோயில்களில் இறைவிக்கென்று தனிக்கோயில் அமைக்கப் பட்டது. இவர்களாட்சியில் ஏற்பட்ட மற்றொரு சிறப்பு ஆயிரங்கால் மண்டபம் கட்டப்பட்டதாகும். இறைவனும், இறைவி யும் திருமணக் கோலங் கொண்டு காட்சி கொடுத்தருளும் திருமண மண்டபங்களும் இவர்கள் காலத்தேதான் ஏற்பட்டன. கோயிற் கற்றூண்கள் பல்வேறு அமைப்புக் களைக் கொண்டு விளங்கின. குதிரைகளும், யாளி முதலான விசித்திர விலங்குகளும் தூண்களினின்றும் பாய்ந்து வெளியே வருவதேபோல் அமைக்கப்பட்டன.

விஜயநகர வீழ்ச்சிக்குப் பின் ஆட்சிக்கு வந்த மதுரை நாயக்க மன்னர்களும் சமயப் பற்று உடையவர்களாக விளங்கிய காரணத் தால் அவர்களது ஆட்சியிலும் கோயில்கள் இன்றியமையாத இடத்தைப் பெற்றன. பிற்காலப் பாண்டியர்களைப் போலவே நாயக்க மன்னர்களும் பழைய கோயில்களைப் புதுக்கியும், திருத்தியும் பணிபுரிந்தனர். இவர்கள் காலத்து, கர்ப்பக் கிரகத்தைச் சுற்றிலும் பிரகாரச் சுவர்கள் மேலும் கட்டப் பட்டன. அப் பிரகாரங்களின் நான்கு பக்கங் களிலும் வாயில்களும், அவற்றிற்கு மேல் கோபுரங்களும் அமைக்கப்பட்டன. இப் பிரகாரங்கள், புதியனவாகக் கட்டப்பட்ட ஆயிரங்கால் மண்டபங்களையும், கோயிற் குளங்களையும் இணைப்பனவாய் அமைந்தன. திருவரங்கம், சிதம்பரம், இராமேஸ்வரம், திருவண்ணாமலை ஆகிய இடங்களில் அமைந் துள்ள கோயில்கள், நாயக்கர்களது கலை வளர்ச்சியினையும், சமயப் பற்றையும் அறி விக்கும் சான்றுகளாகும்.

தமிழ் நாட்டைக் காணவரும் எவரும், நாடெங்கும் நிறைந்து விளங்கும் கோயில் களைக் காணாமல் செல்லுதல் இல்லை. வான ளாவிய கோபுரங்களும், விமானங்களும் தமிழர் தம் திறமையையும், கற்பனை வளத்தையும், கலை ஆர்வத்தினையும் அறி

விப்பன. கலைக் கருவூலமாக விளங்கும் இக் கோயில்கள், தம் செல்வத்தை யெல்லாம் கோயிற் பணிக்கே செலவிட்டுத் தொண்டு செய்த மன்னர்களையும் நமக்கு நினைவூட்டு கின்றன எனலாம்.

இக் கோயில்கள் நம் முன்னோர் ஆக்கி வைத்த சமயச் சின்னங்களாக மட்டும் விளங்கவில்லை. கோயில்கள் மக்களின் சமய-பொருளாதார - கலைவாழ்க்கையில் பெரும் பங்கு கொண்டு சேவை புரிந்ததை அறி கிறோம். இக் கோயில் மண்டபங்களில்தான் சமுதாய-சமயக் கூட்டங்கள் நடைபெற்றன; இசை, நடனம், கூத்து முதலான கலை நிகழ்ச்சிகள் இங்கு இடம் பெற்றன; நீதி வழங்கும் அவையாகவும் கோயில்கள் விளங்கின. கோயில் பரிவாரம் என்றழைக் கப்பட்ட எண்ணற்ற மக்களுக்கு வேலை யளிக்கும் தலமாகவும், துறவியர்க்கும், வழிப் போக்கர்க்கும் உணவளிக்கும் அன்ன சத்திர மாகவும் இக் கோயில்கள் பணிபுரிந்தன. இவைகளேயன்றி இன்றைய பாங்குகளைப் போல், மக்களுக்குக் கடனைப் பணம் கொடுத்தும் உதவி வந்தன.

இங்ஙனம் பல்லாற்ருனும் மக்கட்குத் தொண்டு புரிந்து, குன்றென உயர்ந்து தோன்றும் தமிழகக் கோயில்களின் கலை வளம் தமிழர் தம் அழியாப் புகழினை அறி விப்பனவாம்.

---

## அழியாத வேலைப்பாடுகள்

*பண்டைக் காலத்தில் தமிழ்நாட்டிலே செங்கற் கட்டிடங் களாக இருந்த கோயில்களின் உருவ அமைப்புக்களின் மாதிரிகளை, நரசிம்மவர்மன் கருங்கற்பாறைகளில் அமைத்து வைத்ததை நாம் பெரிதும் பாராட்டவேண்டும். அக்காலத்துச் செங்கற் கட்டிடக் கோயில்கள் நெடுங்காலம் நிலைபெருமல் பல நூற்ருண்டுகளுக்கு முன்னரே அழிந்துவிட்டன. ஆனல், அவற்றின் மாதிரிகளாக அமைந்த இந்தக் கற்பாறைக் கோயில்கள் அழியாமல் அவற்றின் பழைய உருவ அமைப்புகளை இன்றும் காட்டிக் கொண்டிருக் கின்றன.*

—மயிலை சீனி. வேங்கடசாமி
*'நரசிம்மவர்மன்' பக்: 68-69*

---

# தெய்வச் சேக்கிழார் தெளிவுறக் கூறிய திருப்பதிகப் பண்ணொன்று

[குடந்தை திரு. ப. சுந்தரேசன்]

தஞ்சை மாவட்டம் சீர்காழியில் 29-5-1914 இல் தோன்றியவர் இவர் தந்தையார் து. பஞ்சநதம் பிள்ளை. தாயார் குப்பம்மாள். தமிழ், வடமொழி தெலுங்கு மொழிகளுடன் இசை ஆசிரிய மாணவ பரம்பரையில் முறையாகத் தென்னிந்திய இசைப்பயிற்சியும் பெற்றவர் திருவையாறு அரசர் கல்லூரியிலும் அண்ணாமலைப் பல்கலைக்கழக இசைக் கல்லூரியிலும் இசையாசிரியராகப் பணியாற்றியுள்ளார். ஆதீனங்களாலும் சங்கங்களாலும் இசைத் தொண்டுக்காகப் பட்டங்கள் வழங்கப் பெற்றுப் பாராட்டப்பெற்றவர். பழந்தமிழ் இசை ஆராய்ச்சியில் பேரீடுபாடுடையவர். 'முதலேழ் திசைப் பண்கள்' 'இசைத்தமிழ்ப் பயிற்சிநூல்' போன்ற இசைநூல்களின் ஆசிரியர். பண்டைய இசைத் தமிழ்க் கருத்தை இலக்கிய இலக்கண எடுத்துக் காட்டுடன் பாடிக்காட்டுபவர். சென்னைத் தமிழிசைச் சங்கத்தின் சார்பில் ஆண்டுதோறும் நடைபெறும் பண்ணாராய்ச்சிக் கூட்டங்களில் கலந்துகொண்டு பல அரிய கருத்துக்களை எடுத்துக் கூறுபவர்.



சிவம் முயன்று அடைந்து, தெய்வக் கலை பல திருந்த ஓதித் திகழும் தமிழகத்தில், தெய்வத் தன்மை மெய்ம்மொழி வானிழல் கூறிய பொருளின் ஆகும் எனப் புகன்ற திருத்தொண்டர் புராணத்துள், நம் தெய்வச் சேக்கிழார் அருளிய,

> "கொத்தார்மலர்க் குழலாள் ஒரு
> கூறாய்அடி யவர்பால்
> மெய்த்தாயினு மினியானையவ்
> வியனாவலர் பெருமான்
> பித்தாபிறை சூடீஎனப்
> பெரிதாந்திருப் பதிகம்
> இத்தாரணி முதலாம் உல
> கெல்லாம் உ(ய்)ய வெடுத்தார்"

எனும் பாட லொன்றையும் தடுத்தாட்கொண்ட புராணத்துட் பயிலாதார் யார்? அந் நாவலர் பெருமான் பித்தா பிறை சூடி எனும் பெரிதாம் திருப்பதிகந்தான்! எவ்வாறே எடுத்தார்? எடுத்த வகைதானும் எவ்வாறே! திருவருட்டிறத்தினாலே உணர்ந்த நம் தெய்வச் சேக்கிழார் பெருமான், மிகப் பழங்காலத்திய இசைத் தமிழின் முதலமைதியினை நன்கறிந்து, அப் பாடலுக்குரிய பண்ணொன்றினையும் செவ்விதினுணர்ந்து, அடுத்த செய்யுளொன்றில் பண்ணினிலக்கணம் விளங்கப் பதிவு செய்துள்ளார். அப்பாடல் தான்,

> "முறையால்வரு மதுரத்துடன்
> மொழியிந்தள முதலில்
> குறையாநிலை மும்மைப்படி
> கூடும்கிழ மையினால்
> நிறைபாணியி னிசைகோள்புணர்
> நீடும்புகழ் வகையால்
> இறையான்மகி ழிசைபாடின
> னெல்லாம்நிக ரில்லான்"

என்ற பாடலாகும்.

பித்தா பிறை சூடி எனும் அப்பதிகத்திற்குரிய பண்ணின் பெயர் இந்தளம். அவ் விந்தளமோ, மொழியிந் தளம். அஃதும் முதலில் குறையா நிலையில் மும்மைப்படி கூடுமாம். அவ்வாறு கூடுவதற்கு அப்பண், முறையால் வரு மதுரத்துடன் வருவதேயாம். இக் கருத்துமுறை யாவும் எவ்வாறே?

மிக்க விரிவின்றிச் சுருங்க, அதன் அடிமணை மட்டும் ஈண்டறியலாம்.

முறையால் என்பது, மிக்க பழங்காலத்திய ஐம்புழைக் குழல் வழியும் வில்யாழ் என்றதொரு நரம்புக் கருவி வழியும் எழுந்த ஐந்திசை முறையால் என அறிந்துணர்தல் வேண்டும். இவற்றுள் இசைகளில் முற்றோன்றியது தாரம் என அடியார்க்கு நல்லார் கூறியாங்கு, தாரம் என்ற முதலிசை வழித் தோன்றிய முதலைந்திசையினை,

தாரம், குரல், துத்தம், உழை, இளி

எனக் கொள்ள வேண்டும்.

கைக்கிளையும், விளரியும் ஈங்கில்லை என்பதையும் அறிய வேண்டும். தார நரம்பே முதலில் தோன்றிய தென்பது பழந்தமிழிசை நூற்றுணிபு, என்பார் விபுலானந்தர். இவ் வைந்திசைகளின் ஒலியலகுகள்,

| தாரம் | குரல் | துத்தம் | உழை | இளி |
|---|---|---|---|---|
| 0 | ௪ | ௮ | ௧௩ | ௧௭ |

என திற்ப தியல்பாம்.

இதுவே முறை, பழையமுறை, மிகப் பழைய முறை, தமிழகத்திற்கே யுரிய தனித்த முறை. இதனையே 'முறையால்' எனச் சேக்கிழார், அவர் காலத்தே விளங்கிய எளிமையோடும் கூறினர். இவ்வாறு அமைவுற்ற முதலைந்திசையில் முதற்பண், ஆசான் எனவும், ஆசான் திறம் எனவும் கூறப் பெற்றுத் திருப்பதிகம் அருளிப் பாடிய அருளாளர்கள் காலத்தே காந்தாரம் என்ற பெயரோடே நன்கே திகழ்ந்தது. இதனை ஒருமைப்படி எனலாம். தாரப்பண் என்பதுமது. பாடுவது பண் தாரமே என்றருளினர் திரு ஞான சம்பந்தர்.

இப்பண், முறையால் வரு மதுரத்துடன் இசைகளமைந்த முதற் பண்ணாகும். முத லிசையான தார இசைக்கு, குறியீட்டெழுத்து கா ஆதலான் காந்தாரம் எனப் பெயரெய் தியது. முற்றோன்றிய முதற் பண்ணான காந்தாரமே, இரண்டா மிசையான குரல் முதலாக ஒலித்த காலத்து,

குரல் துத்தம் உழை இளி தாரம்

என உணரப் பெறுவதாயிற்று.

இத்தகு இரண்டாம் ஐந்திசைகளின் ஒலியலகுகள்,

| குரல் | துத்தம் | உழை | இளி | தாரம் |
|---|---|---|---|---|
| 0 | ௪ | ௯ | ௧௩ | ௧௮ |

என நிற்ப தியல்பே.

இப் பண்ணின் திருப் பெயரினைச் செவ் விய திறம் என்னும் பொருளில் செந்திறம் எனக் கூறப்பட்டது. செந்திற மென்பது செந்துருத்தி யாம். திருநாவலூராளியாம் நம்பியாரூரர், 'மீளாவடிமை' எனுந் திருப் பதிகத்தினை, இப் பண்ணிலேயே அருளிப் போந்தமை யுணரலாம். இதனை, இருமைப் படி எனலாம்.

இப் பண், முறையால் வரு மதுரத் துடன் இசைகள் முதற் பண்ணில் இருந் தாங்கு இருந்த படியே அமைவுற்ற இரண் டாம் பண். குரல் என்ற இசை, மகளிர் குர லினை யொத்து இசைத்ததால் மகரக் குறி யீட்டெழுத்தினை உடைய தாயிற்று.

முதன் முதற் பண்ணான காந்தாரந்தான் மூன்றா மிசையான துத்தம் முதலாக ஒலிக்கும் காலத்தே,

துத்தம் உழை இளி தாரம் குரல்

என உணர்வ தியல்பு.

இவ்வைந் திசைகளின் ஒலியலகுகள்,

| துத்தம் | உழை | இளி | தாரம் | குரல் |
|---|---|---|---|---|
| 0 | ௫ | ௯ | ௧௪ | ௧௮ |

என வமைவ தியல்பு.

இப் பண்ணின் அருட்பெயரே இந்தளம். இதனமைப்பினையே மும்மைப்படி எனப் பாடி யுணர்த்தினர் நம் தெய்வச் சேக்கிழார் பெருமான். மும்மை யென்பது மூன்றும் முறை என்ற பொருளில் வரும். இருமை வகை தெரிந்து, எனுந் திருக் குறட்பா ஒன்றிற்குப், பரிமேலழகர், இருமை, ஈண்டு எண்ணின் கண் வந்தது. அது தெரிமாண் டமிழ், மும்மைத் தென்னம், பொருப்பன் போல, எனக் குறித்துள்ளமை கொண்டு ஈங்கும் நாம் நன்கே உணரலாம்.

தாரமுறை, ஒருமை, குரல்முறை, இருமை, துத்தமுறை, மும்மை.

தாரமுறையில் அமைந்த இயல்பான ஒலியலகுகள், குரல் முறையினும், துத்த முறையினும் திரிபுருது முன்னர் இருந்த வாறே குறையாது நிற்றலின், 'முதலிற் குறையா நிலை' எனச் சேக்கிழார் பெருமானரால் விதந்தோதி, மும்மைப்படி நின்ற முறைமைக்கு முன்னரே அலகுநிலை உணரத் தக்கவாறு 'மொழி இந்தளம்' முதலிற் குறையா நிலை மும்மைப்படி அமைந்தது,எனக் கூறி அருள நேரிட்டது. இந் நுண் கருத்தினை ஒல்லும் வகையானெல்லாம் உணர்தல் வேண்டாவோ?

முதலேந்திசை முறைமையில் முதலில் தாரம்

பின்னர்—குரல்

இடையே, துத்தம்

அதன்பின்னர், உழை

இறுதியில், இளி.

துத்தம் மூன்றாமிசை யாதலால் பகை இசை. ஆகவே ப என்னும் எழுத்தைக் குறியீட்டெழுத்தாகக் கொண்டது. இடை நிலை என நிற்றலால், இடை நின்ற தளம் போன்று, ஆற்றிடைக் குறை போன்று, நின்ற துத்தம், துந்தம், துருத்தி என்ற பொருட் சொல்லாகி நின்று இடைநின்ற தளம், இந்தளம் எனப் பெயரெய்தியது. இசையை ஒரு மொழியெனக் கருதலும் மிகப் பழைய வழக்கே. அது பற்றியே மொழியிந் தளம் எனக் கூறப் பெற்றது. இந்தளம் என்ற தொரு சொல்லை இந்தோளம் எனப் பிற் காலத்தார் கூறினர்.

'இந்தளம் இந்தோளமே'

(தாரம்), மிகப் பழங்காலத்திய, ஆசான், ஆசான்றிறம், காந்தாரமான பண், இக் காலம் மோகனம்.

(குரல்), மிகப் பழங்காலத்திய, செந் திறம், செந்துருத்தியான பண், இக்காலம் மத்தியமாவதி.

(துத்தம்), மிகப் பழங்காலத்திய, இந் தளம் என்ற பண் இக் காலம் இந்தோளம்.

(உழை), மிகப் பழங்காலத்திய சாதாளி என்றதொரு பண் (சாதாரியன்று) இக்காலம் சுத்த சாவேரி.

(இளி), மிகப் பழங்காலத்திய, தனசி எனும் பண் இக் காலம் சுத்த தனியாசி உதய ரவிச்சந்திரிகை. (இரு பெயர்) எனப் பெயர் மாற்றம் பெற்றன.

ஆயினும் இசையொலி யலகுகள் அக் காலத்தும் இக் காலத்தும் இனி எக் காலத்தும் ஒன்றேயாம்.

இத்தகு ஐந்திசைப் பண்களாய ஐந்து பண்களே மிகப் பழைய இசைத் தமிழில் முதன்முதற் றோன்றியவை யாகும். இவற் றுள் இடைநின்ற பண்ணான துத்தப்பண் என்னும் இந்தளப் பண்ணே, தெய்வச் சேக்கிழார் தெளிவுறக் கூறிய திருப்பதிகப் பண்களில் ஒன்றாகும். குன்றை முனி குரைகழல் வாழ்க! வாழ்க!! வாழ்க!!!.

பொன்விழாக் காணும் நூற்பதிப்புக் கழகம் மேன்மேலும் சிறந்தோங்குக. பழைய பொன்போல் மிளிர்க.

---

## இசைத் திறன்

*மேதக்க எண்ணங்களை உள்ளத்தெழுப்ப, கடுஞ்சினங் கனிந் தெழும்படி தூண்ட, அன்பைப் பெருக்க மனிதரை இயக்கி ஆட் கொள்ளச் செய்ய, எதற்கும் இசையினும் அருந்திறல் வாய்ந்த மறைகலை இல்லை.*

—அடிசன்

---

# சிவயோக சித்தி

(கவியோகி சுத்தானந்த பாரதியார்)

11-5-1897இல் தோன்றிய இவர் இளமை முதலாகவே குடும்பப்பற்று அற்று விளங்கினார். இவர் சிறிது காலம் ஆசிரியப் பணியாற்றிய பின் துறவு நிலையை மேற்கொண்டார். அப்பொழுதே எல்லாப் பாடங்களையும் தமிழில் நடத்துதற் கேற்றவகையில் நூல்கள் எழுதினார். பாரதி, சுப்பிரமணிய சிவா, வ. உ. சி. போன்ற பெரும்புலவர்களிடமும், நாட்டுத் தலைவர்களிடமும்பழகும்பேறு பெற்றவர். இருபத்து மூன்று ஆண்டுகட்கு மேல் பாண்டிச்சேரியிலுள்ள



அரவிந்தர் ஆச்சிரமத்தில் பேசா விரதமிருந்துள்ளார். அவ்வமயம் அவர்படைத்த நூலே 'பாரதசக்தி மாகாவியம்.' இதுதவிர நூற்றுக் கணக்கான அரிய நூல்களை எழுதியுள்ளார். இவர் எழுதிய திருக்குறளின்பம் சிலம்புச்செல்வம் கவிக்குயில் பாரதியார், கழகவழி வெளிவந்துள்ளன. ஆங்கிலம், பிரெஞ்சு செர்மன் போன்ற பல மொழிகளிலும் எழுதவும்பேசவும் வல்லவர். இவர்தம் குறள் பெரிய புராண ஆங்கில மொழி பெயர்ப்புக்கள் பிறர் செய்தற்கரிய செயல்களாகும்.

**உலகுக்கு இரு நூல்கள் :**

அச்சகம் ஆயிரம் ஆயிரமாக நூல்களை அருளி மழை போலப் பொழிகிறது. பேழை பேழையாக நூற்கணங்கள் உலகமொழிகளில் நிரம்பி நிலவுகின்றன. இத்தனையும் படிக்க முடியாது. ஒருநூலைப் படித்தால் எல்லா நூற்கருத்துக்களும் அதில் அறியவேண்டும். அத்தகைய நூல்கள் இரண்டு: ஒன்று திருக்குறள். மற்றொன்று திருமந்திரம். இரண்டிற்கும் இணையாயிருப்பது சேக்கிழாரின் பெரியபுராணம். இங்குத் திருமந்திரத்தை ஆராய்வோம். எனது திருமந்திர விளக்கம் மூன்று பகுதிகளைத் தமிழ்மணி சுப்பையா பிள்ளை வெளியிட விரும்பியுள்ளார். அதில் சைவப் பகுதியைத் தனிச் சிறப்பு நூலாக வகுத்துள்ளேன். அதன்கண் சிவ யோகம் பற்றிய அரிய கருத்துக்களை இங்கே வழங்குகிறேன்.

**சுந்தர - மூவர்**

சுந்தர மூர்த்தி நாயனார் திருமூலரை "நம்பிரான்" என்று அழைக்கிறார். நம்பியாண்டார் மூலர் பிரான் திருவடியைத் தலைமேல் வைத்துப் போற்றுகிறார். "திருமூலரைப் படி கருமூலம் படியும்" என்றொரு புலவர் சாற்றுகிறார். சேக்கிழார் "நந்தி அருள்பெற்ற நான்மறை யோகி" என்கிறார். மூலர் வரலாற்றை அவரே குறிப்பாகப் பாடியுள்ளார். அவர் பெயர் சுந்தரநாதன் என்பர். "மந்திரம் அளித்த **சுந்தரநாதன்**." இவரது ஞானாசிரியர் நந்திதேவரே.

'**தந்திரம் என்பது** சார்வு மூவாயிரம்
சுந்தர **ஆகமச் சொல்மொழிந் தானே.**

"**நந்தி அருளாலே நாதனும் பேர் பெற்றோம்.**"

நீண்டகாலம் தவம்புரிந்து உடல்முதிர்ந்த சுந்தரநாதர் இளவலான இடையன் மூலன் உடலிற் புகுந்தது என்னே. அந்த இளவுடலைத் தாங்கித் திருமந்திரம் அளிக்கவே;

"**நந்தி அருளாலே மூலனை நாடிப்பின்
நந்தி அருளாலே சதாசிவன் ஆயினேன்
நந்தி அருளாலே மெஞ்ஞானத்துள் நண்ணினேன்
நந்தி அருளாலே நான்இருந் தேனே.**"

**சிவச் சேர்வு :**

கயிலையிலிருந்து நமது சித்தர் சிதம்பரம் வந்து, ஆவடு தண்துறையில் மூலனுட்

புகுந்து, முனிக்கோலத்துடன் தவமிருந்து மூவாயிரம் அரிய அறிவுப் பாடல்களை அருளினர். "நேரத்திரத்திற்குத் திருவாசகம் சாத்திரத்திற்குத் திருமந்திரம்" என்பார் அருட் சோதி வள்ளலார். திருமூலர் ஏரொளிச் சக்கரத்தில் குண்டலியை இணைத்து, அருந் தவ சக்தியால் ஆயிரம் இதழ்த் தாமரையில் சிவனைக் கலந்தார்.

"சேர்ந்திருந்தேன் சிவமங்கைதன் பங்கனை
சேர்ந்திருந்தேன் சிவநாமங்கள் ஓதியே"

திருமூலர் சிவனைந் தெழுத்தையே சபதபமாகக் கொண்டார். அவர் மந்திரம் "சுத்த சைவத்துக்கு உயிரதே" எனப் போற்றப்படுகிறது.

**சிவமணம் :**

திருஞான சம்பந்தர் திருவாவடுதுறைக் கோயிலிற் பாடினர்: "இங்குச் சிவத்தமிழ் மணக்கிறதே" என்று ஓரிடத்தில் அகழ்ந்து திருமந்திரத்தைக் கண்டார். ஏழாம் நூற்றுண்டில் வாழ்ந்த ஞானசம்பந்தருக்கு முன்பே திருநாவுக்கரசருக்கு முன்பே, கண்ணப்பருக்கும் மணிவாசகருக்கும் முன்பே மூன்றும் நூற்றுண்டில் திருமூலர் வாழ்ந்த தாகப் புலவர் கருதுவர். அக்காலமே சிவயோகத்தை வாழ்ந்து, சிவ தத்துவ சாதனங்களை விளக்கிப் பின்வந்த நாயன்மார் களுக்கு வெற்றியரங்கை அமைத்தார் திருமூலர்.

"என்னை நன்ருக இறைவன் படைத்தான்
தன்னை நன்ருகத் தமிழ்செய்யு மாறே"

வடமொழியில் மறைந்து கொண்டிருந்த சிவாகமத்தை மீண்டும் தமிழில் அருளவே மூலர் தோன்றினர்.

**ஆகமம் :**

"அண்ணல் அருளால் அருளும் சிவாகமம்" இப்போது தமிழுடை தாங்கித் திருமந்திரமாக விளங்குகின்றது.

"நந்தி மதிபுனை அரனடி நாள்தொறும்
சிந்தைசெய்து ஆகமம் செப்பலுற் றேனே."

யோக நுட்பங்களை உள்ளுணர்ந்துரைப்பது ஆகமமே. வடக்கே புத்தர் போதியடியில் சில நாட்கள் தியானித்து அறநெறியை உலகிற்கு அளித்தார். தெற்கே திருமூலர் நம் தமிழ் ஆவடுதுறையில் அரசடியில் அமர்ந்து அறம், பொருள், இன்பம், வீடு, சரியை, கிரியை, யோகம், ஞானம் எல்லாம் பொதுளிய திருமந்திரத்தை அளித்தார். புத்தர் எதையும் எழுதி வைக்கவில்லை. புத்தர் பெயரால் பின்னே வந்தவர் தம்ம பதம் பிடகம் முதலிய நூல்களை யாத்தனர். புத்தர் பெயர் புவியெங்கும் பொலிகிறது. அதே அரசடியில் தவம்புரிந்து மூலரே அனுபவித்து அருளிய திருமந்திரம் இப் போதுதான் தமிழருக்கு அறிமுகமாகிப் பெயரளவில் விளங்குகிறது.

**திருமந்திர வுள்ளம் :**

மூலன் உரைசெய்த மூவாயிரம் தமிழையும் வடித்துப் பார்த்தால் ஆறு வரிகள் முதன்மையாகக் காணும்.

"திரையற்ற நீர்போலச் சிந்தை தெளிவார்க்குப்
புரையற் றிருந்தான் புரிசடை யோனே"

"எண்ணுயிரம் ஆண்டு யோகம் இருப்பினும்
கண்ணுர் இறைவனைக் கண்டறிவார் இல்லை
உண்நாடி உள்ளே ஒளிபெற நோக்கினுல்
கண்ணுடி போலக் கவர்ந்திருந் தானே."

இதுவே திருமந்திரம் போற்றும் சிவ யோக ரகசியம் ஆகும். ஒளிபெற உள்ளே நோக்குதல்.

"அவனருளே கண்ணுகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவன்இறைவன் என்றெழுதிக் காட்டொணுதே"

என்கிருர் அப்பர்.

கடவுளைக் காணும் யோக நுட்பத்தைத் திருமூலர் தெளிவாக்குகிருர். வள்ளுவரும்,

"ஓர்த்துள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு"

என்கிருர். வேதமும் "அவனே சிவனே உள் பொருள், உட்பொருள் - உளங்கனிந்து உணரும் பொருள்." என்கிறது.

**சிவக்காட்சி :**

சீவனுக்கும் சிவனுக்கும் இடையே தற்போத ஆணவத்திரை மறைக்கிறது.

இதைக் குறிக்கவே நமது கோயிற் கருவறையில் திரை தொங்குகிறது. சிவன் பலி பீடத்தில் ஆசையான மாசுகளைப் பலி கொடுத்து நந்தி தேவர் போல அமைதியாக மூல சந்நிதியை நோக்கித் தியானம் செய்தல் வேண்டும். தியானத்திற்கு மனத்தை அலையாது உள்ளத்தில் அமைதியாக்க வேண்டும். அதற்குக் ''காற்றைப் பிடிக்கும் கணக்கு'' அறிய வேண்டும். காற்றைப் பிடிக்கும் கணக்கறிந்தால் கூற்றையுதைக்கும் ஆற்றல் எய்தும். தியானத்தின் பண்பை மூலர் தெளிவாக்குகிருர்.

**சீவன் சிவமயமாதல்.**

**' நாட்டம் இரண்டு நடுமூக்கில் வைத்திடில்**
**வாட்டமும் இல்லை; மனைக்கும் அழிவில்லை;**
**ஓட்டமும் இல்லை; உணர்வில்லை; தான் இல்லை**
**தேட்டமும் இல்லை சிவன் அவன் ஆமே ''**

சீவன் சிவமயமாதலே யோக சித்தியாகும். என்றும் இருக்கும் பொருள் சிவன். அதில் என்றும் இருத்தலே யோகம்.

**''என்றும் இருப்பதனில்**
**என்றும் இருப்பதுவே**
**என்றும் இருக்கும் இருப்பு''**

என்றும் இருக்கும் ஒன்று சிவமே. அந்த ஒன்றினை ஒன்றலே யோகம். மனம் ஒன்று பட்டாலே அந்த ஒருமை எய்தும்.

**''ஒன்றினை ஒன்றலே**
**யோகம்; அனைமனத்தை**
**வென்றிடின் ஒன்ருகும் விரைந்து**

இந்தத் தியானநிலையை அப்பர்,

**''உயிராவணம் இருந்து உற்றுநோக்கி''**

என்கிருர். உயிர்ப்பு வெளியே செல்லச் செல்ல மனமும் புறம் செல்லும். அஃது அடங்கிச் சுழுமுனையில் படியப்படிய மனமும் அடங்கும். மூச்சு எழும் இடத்திலேதான் மனமும் எழும். இதைச் சித்தர்கள்

**''வாசியைக் குடத்தில் வகையுற அடக்குதல்''**

என்பர்.

**வாசியோகம் :**

மூலர் வாசியோகத்தை வகுக்கிருர். வாசிவாசி என்ருல் சிவா சிவா என்ருகும். வாசி வாசி வாசி சிவா—சிவா'' வாசி அடங்கிஞல் சிவம் துலங்கும்.

**''மூலத்து வாரத்தை முக்காரம் விட்டிரு**
**மேலைத்து வாரத்தின் மேல்மனம் வைத்திரு**
**வேலொத்த கண்ணை வெளியில் விழித்திரு**
**காலத்தை வெல்லும் கணக்கிது தானே.**

மூலபந்தம் (முக்காரம் எய்தி; மூச்சை அடியிலிருந்து உள்முகமாக இழுத்து, அநாகத சக்கரத்தில் அடக்கி, கண்ணைப் பரவெளியான சிதாகாசத்தில் ஏரொளிச் சக்கரத்தில் உயர்த்தி, உச்சித் தொளையான, பிரமரந்திரத்தில் உணர்வை நாட்டி, அதே நினைவாயிருந்தால் காலத்தை வெல்லலாம். மடைவாயில் கொக்குப்போல் ஒரே குறிப்பாக அசையாது இருத்தல்வேண்டும்; அப்போது உடல் பவுரி குறையாமல் குண்டலிக் கனலேறி ஊழி காலம் இருத்தல் ஆகும்.

**''கடைவாச லைக்கட்டிக் காலை எழுப்பி**
**இடைவாசல் நோக்கி இனிதுள் இருத்தி**
**மடைவாயில் கொக்குப் போல்வந் திருப்பார்**
**உடையாமல் ஊழி இருத்தலும் ஆமே.''**

**தூங்காமல் தூங்குதல் :**

மூலபந்தனத்தால் குண்டலியை எழுப்பி, இடைவாசல் ஆன சுழுமுனையில் நாட்டி அங்கிருந்து உச்சிக்கேறும் அமுத நாடியில் ஏறிச் சிதாகாசத்திலே கலந்து சமாதி உறக்கம் கொண்டால் ஊழிக்காலம் அப்படியே இருக்கலாம். அதுவே ஆங்காரம் அற்றுத் தூங்காமல் தூங்குதல் ஆகும்.

**''நயனம் இரண்டும் நாசிமேல் வைத்திட்டு**
**உயர்விழா வாயுவை உள்ளே அடக்கித்**
**துயர்அற நாடியே தூங்கவல் லார்க்குப்**
**பயனிது காயம்; பயம்இல்லை தானே.''**

இதுவே உடல் எடுத்த பயம்; உடம்பில் உத்தமனைக் காணலாம். இக்கருத்தை அனுபவித்த அப்பர், ''காயமே கோயிலாக் கடிமனம் அடிமையாக, மன மணி இலிங்கமாக, பூசித்து நேசித்து நின்ருர் சிவமயமாவார்'' என்கிருர்; இறைவனை எப்போதும் எண்ணிஞர்க்குச் சிவக்கனல் எப்போதும் வீசும். இயலுண்மை விளங்கும்.

**''எப்போதும் எண்ணி**
**இருப்பார்க்கு இயலுண்மை**
**தப்பாது வீசும் தணல்.''**

**எப்போதும் ஈசனை எண்ணுதல் :**

துஞ்சும் போதும் சுடர் விடும் சோதி; நினைத்தார் மனம் கோயிலாய்க் கொண்டவன் - அவனை,

*'என்னுளே நிற்கும் இன்னம்பர் ஈசன்'*

என்கிறார் அப்பர். அவனை எப்போதும் எண்ணி நின்றால், அவன் அடியே தஞ்சமாக வாழ்ந்தால், இமைப்பொழுதும் நம் நெஞ்சின் நீங்காதான் தாள் பணிந்தால் அதுவே சிவயோக சித்தியாகும், சமாதிவயமாகும்.

*''பரிசறி வானவர் பண்பன் அடிஎனத்*
*துரிசற நாடியே தூவெளி கண்டேன்*
*அரியதெனக் கில்லை அட்டமா சித்தி*
*பெரிதருள் செய்து பிறப்பறுத் தானே.''*

இதையே மாணிக்கவாசகர்,

*''பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்தன்*
*பெய்கழல்கள் வெல்க !''*

என்கிறார். ''பெய்கழல்கள்'' என்பது அருட்சக்தியைப் பொழியும் திருவடிகள் ஆம்.

**எண் சித்திகள் :**

அட்டமா சித்திகளும் அடக்கத்தால் எய்தும். அட்டமாசித்திகளுக்கு மூலர் அனுபவப் பெயர்களைத் தருகிறார்.

(1) அணிமா - அணு, நுண்மை. (2) மகிமா-சகம், பருமை (3) கரிமா -நோன்மை விண்தன்மை (4) லகிமா-ககனம், மென்மை (5) பிராப்தி - பரகாயத்தேகம் விரும்பியது எய்தல் (6) பிராகாமியம் - தானுவது நிறைவுண்மை (7) வசித்துவம் - வியாப்பியம், கவர்ச்சி (8) ஈசத்துவம்-ஆளுத உண்மை, ஆட்சியுறுதல்.

**கூற்றுதைத்த கால் :**

சிவபிரான் கூற்றை உதைக்கத் தூக்கிய திருவடியை உந்துவதும் வாசியோக தத்துவமே - கால் என்பதே வாசிதான். வாசியைச் சுழுமுனையின் பால் எழுப்பி அமுத நாடியிற் படிந்து உந்தினால் கூற்றையும் வெல்லும் குறிப்பதுவாகும். தூக்கிய திருவடியே சூரிய நாடியாகும். நடராச வடிவமே சிவயோக விளக்கமாகும்.

**நடங்கொண்ட கூத்தன் :**

வாசியின் நடப்பே நடனம். அதைக் கலந்து ஒன்றிக் கூடியிருப்பதே தியானம். தியானம் முதிர முதிர மோனம் விளங்கும் மோன முதிர்ச்சியால் ஞானந் துலங்கும். ஞானம் முதிர முதிர ''நான் நான்'' என்று நெஞ்சில் ஆடும் நிமலனைக் கூடலாம்.

*'ஒடுங்கி ஒடுங்கி உணர்ந்தங்கு இருக்கில்*
*மடங்கி அடங்கும் வாயு அவனுள்*
*மடங்கி அடங்கிடு மன்னுயிர் உள்ளே*
*நடங்கொண்ட கூத்தனை நாடுகின் றேனே.''*

மாணிக்கவாசகர் தாம் பெற்ற சிவானுபூதியைப் பாடுகிறார்.

*''சித்தமலம் அறுவித்துச்*
*சிவமாக்கி எனையாண்ட*
*அத்தன் எனக்கு அருளியவாறு*
*ஆர்பெறுவார் அச்சோவே !''*

இதை மூலர் அழகாக விளக்குகிறார்.

சித்த அலையைத் தடுத்தான் - முத்தி இன்னதென்று உணர்த்தினன்-மோனமலித்தான்-ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி ஆகிய ஐந்து மலங்களையும் அறுத்தான். சிவமாக்கினன்-சிதாகாசத்தில் ஆனந்தக் கூத்து நிகழச் செய்தான். இக் கூத்திற் கலந்தவர்களே சிவ யோக முத்தராவார்.

*''சித்தம் திரிந்து, சிவமயம் ஆகிய*
*முத்தம் தெரிந்து, மோனச்சிவ முத்தர்*
*சுத்தம்பெறல் ஆக ஐந்தின் தொடக்கற்றோர்*
*சித்தம் பரத்தில் திருநடத் தோரே !''*

இந்தச் சிவமுத்திக்கு ஞானசம்பந்தர் ''காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி'' நமச்சிவாய மந்திரத்தை ஓதி நன்னெறிசேரும் வகையை இசைத்தார்.

*''காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி*
*ஓதுவார் தமை நன்னெறிக் குய்ப்பது*
*வேதம் நான்கினும் மெய்ப்பொருள் ஆவது*
*நாத நாம நமச்சி வாயவே''*

திருமூலர்,

*காதலின் அண்ணலைக் காண, இனிஅவர்*
*நாதன் இருந்த நகர் அறி வோரே.*

என்கிறார்.

சுந்தரர் மற்றுப் பற்றின்றி திருநாமமே மனதில் பாவித்து மறவாது நினைத்து வாயினால் நமச்சிவாய என்ற ஐந்தெழுத்தை உரைப்பவர்க்குப் பேரின்பம் எய்தும் என்கிறார். மூலர் இதை விளக்குகிறார் :

> "நாடும் நகரமும் நல்திருக் கோவிலும்
> தேடித் திரிந்து சிவபெருமான் என்று
> பாடுமின்; பாடிப் பணிமின்; பணிந்தபின்
> கூடிய நெஞ்சத்துக் கோயிலாக் கொள்வனே."

இதுதான் சிவயோக ரகசியம். சீவன் சிவனே என்றிருந்தால் சிவன் சீவனிற் கலந்தினிப்பான்.

**திருவடிப்பற்றும் சிவானந்தமும் :**

திருவடிப்பற்றே சிவரகசியம் ஆகும். திரு அடி என்பது குண்டலி சக்திகுதிக்கும் ஆதார நிலையம் ஆகும்.

> "மந்திரம் ஆவதும் மாமருந்து ஆவதும்
> எந்தை பிரான்தன் இணையடி தானே"

என்றார் திருமூலர். இதையே நால்வரும் உணர்த்தினர். திருவடிப் பற்றுடையாரே அடியார் ஆவார். திருவடி ஞானமே சித்தியும் முத்தியும் நல்கும்.

> 'திருவடி ஞானம் சிவமாக்கு விக்கும்
> திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே."

சிவானந்தத் தெளிவே யோக சித்தியாகும்.

> "சிவமான ஞானம் தெளிய ஒண்சித்தி
> சிவமான ஞானம் சிவானந்தம் நல்குமே."

இந்தச் சிவானந்த சித்தியும் முத்தியுமே சிவயோகப் பயனாகும்.

---

## நன்னெறியுண்மை

மூலனுரை செய்ததமிழ் மூவா யிரமறையும்
சாலமிகு தொல்தமிழர் சாத்திரமாம்—ஏலஇவை
கொண்டுதிருக் கோயில் வழிபாடும் மங்கலமும்
உண்டுசிவ நன்னெறிக்கென் றோது.

மன்னுதிரு மந்திரத்தின் மாண்புணர்வார் வையமிசை
உன்னுதமிழ் நால்வரம்மை ஐயடிகள்—இன்னுநம்
சேரர்கோன் ஆம்எழுவர் செய்ய திருமுறைகள்
ஓரவரும் நன்னெறியுண் மை.

—கழகப்புலவர் திரு. ப. இராமநாத பிள்ளை

---

# ஏன் தமிழ்?

[ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங்கம், எம்.ஏ.]

திருவள்ளூர்க் கூற்றத்தைச் சார்ந்த கீழச்சேரி எனுமூரில் 12-11-1899இல் தோன்றியவர். இவர் தந்தையார் ப. இரத்தின முதலியார் ஆவர். எம். ஏ பட்டம் பெற்ற இவர் துணைப் பதிவாளராகவும் பங்கீட்டு அதிகாரியாகவும் பல மாவட்டங்களில் ஆணையராகவும் பணி-யாற்றியுள்ளார். சிறிது காலம் தருமையாதீனக் கீழ்க்கலைக் கல்லூரியின் முதல்வராகத் திகழ்ந்தார். மதுரை மீனாட்சி ஆலயின் நலத்துறை அலுவலராகவும் பணியாற்றினர். பத்து



ஆண்டுகட்குமேல் தமிழக அரசின் ஆட்சிமொழித் தனி அலுவலராகப் பணியாற்றிய பின் ஓய்வு பெற்ருர். தமிழ் ஆட்சிமொழியாதல் வேண்டுமென்று தொடக்க காலம் முதல் அயராது உழைத்து வருதலான் இவருக்கு 'ஆட்சிமொழிக் காவலர்' என்ற சிறப்புப் பட்டம் வழங்கப்பெற்றது. நகராட்சிகள் தமிழில் நடைபெற 'நகராட்சி' என்ற நூலும் தமிழக அரசின் பல்வேறு துறைகளும் தமிழில் நடைபெற 'ஆட்சித் துறைத் தமிழ்' என்ற அரிய நூலையும் இயற்றியுள்ளார்.

தமிழ் நாட்டில், ஆட்சி தமிழில் நடப்பதற்கு எதிர்ப்பு! பாடங்களைத் தமிழில் படிப்பதற்கு எதிர்ப்பு! தமிழைத் தமிழாகப் பேசுவதற்கும் எழுதுவதற்கும் எதிர்ப்பு! இது விந்தையாகத்தா னிருக்கிறது. இங்ஙனம் எதிர்ப்பவர் தென்னகத்தின் பிறமொழியாளரல்லர்; நம் நாட்டின் பிற மாநிலத்தவரல்லர்; பிற நாட்டவருமல்லர்; காலில் முள் தைத்தால், 'அப்பாடா! அம்மாடி! ஐயையோ!' என்று, தமிழில் கதறும் சில தமிழர்களே யாவர். தங்கள் தாய்மொழி 'தமிழ்' தான் என ஒப்புக் கொள்ளுகிற இச் சிலரே, இவ்வாறு எதிர்க்கிருர்கள் என்று அறியவரும் பிறமொழியாளர் எவரும், 'இப்படியுமா!' என்று வியப்படையாமல் இரார்.

எதிர்ப்பு ஏன்? என்று இத்தமிழர்களைக் கேட்டால், தமிழில் ஆட்சி நடந்தால், புரிந்து கொள்ள முடியாது என்று சொல்வார்கள். தமிழில் பாடங்களைப் பயிற்றுவித்தால் வாழ்க்கைக்கும் அப்படிப்புப் பயன் படாது; பிற மாநிலங்களில் வேலைக்குப் போகமுடியாது; அறிவியல் நூல்களைத் தமிழில் படிப்பது இயலாது; தமிழில் சொற்கள் ஆக்குவது கடினம்: என்றெல்லாம் கூறுவார்கள். தமிழில் பேசும்போதும் எழுதும்போதும் எந்தமொழிச் சொல்லையும் கலந்து பேசுவதும் எழுதுவதுந்தான் தமிழ் மொழியினை வளர்ச்சியாக்கும். அங்ஙனம் பேசுவதும் எழுதுவதுமே எளிதில் விளங்கும் என்பார்கள்.

இவர்கள் கூறும் காரணங்களை மேற்போக்காகப் பார்க்கும்போது, உண்மை போலத் தோன்றலாம். ஆனல் அவை முழுதும் உண்மையாகா. எங்ஙனம் ஆகா என்பதை ஆராய்ந்து அறிவோம்.

இடையில் சில நூற்ருண்டுகள் ஆட்சி ஆங்கிலத்தில் நடந்து வந்தது. அதற்கு முன்பு தமிழிலேயே நடந்திருக்கிறது. பல்லவர், நாயக்கர், முகமதியர் ஆண்ட போதும் தமிழையே பெரும்பாலும் பயன் படுத்தினர். சில வடசொற்களும், அரபுச் சொற்களும் ஆட்சியில் கலந்திருக்கலாம். பழைய சேர, சோழ, பாண்டியர் காலத்தில் ஆட்சி முழுக்க முழுக்கத் தமிழிலேயே நடந்தது என்பதில் எவருக்கும் ஐயந் தோன்ருது. எனவே, இப்போது தமிழில்

ஆட்சியை நடத்துவதென்பது புதிதன்று. இடையில் இருநூறு முந்நூறு ஆண்டுகள் விட்டுப்போன நமது மொழியை இன்று மீளவும் ஆட்சிக்குப் பயன்படுத்த முற்படு கிறோம். அவ்வளவே.

இன்றைக்கு விரிந்து பரந்து இருக்கும் ஆட்சிக்குரிய சொற்களை நாம் நமது நூல் வழக்கு, உலக வழக்கிலிருந்து தெரிந் தெடுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. அவ்வகையில் கிடைக்காத சொற்களை நாம் ஆக்கிக் கொள்ள வேண்டும். இவ்வாறு தெரிந்தெடுத்தும், ஆக்கியும் பயன்படுத்தப் பெறும் சொற்கள், பழக்கக் குறைவினாலும், பழக்கமின்மையினாலும் புதியனவாயும் புரியா தனவாகவும் இருக்கத்தான் செய்யும். அயல் மொழிச் சொற்கள் ஆட்சியில் பயன்படுத்தப் பெற்ற போதும், அவை புதியனவாகவே இருந்திருக்கும். அதனால் புரியாதனவாகவும் தோன்றியிருக்கும். நாளா வட்டத்தில் அச் சொற்களில் பலவற்றை ஆங்கிலமே தெரியா தவர்களும் அவற்றின் பொருளைக் குறிப்பி னால் புரிந்து கொண்டிருப்பதை அறிவோம். அயல் சொற்களை இவ்வாறு புரிந்து கொள்ளு வதற்குப் பிடித்த அவ்வளவு காலமா, புதுத் தமிழ்ச் சொற்களைப் புரிந்து கொள்வதற்கு வேண்டியிருக்கப் போகிறது? 'ஆபீசு', 'கலெக்டர்', 'இன்ஸ்பெக்டர்', 'ஆர்டர்', 'முனிசிபாலிடி' என்பன போன்ற சொற்களை மனப்பாடஞ் செய்து புரிந்துகொண்டார்கள். 'அலுவலகம்', 'ஆட்சியர்', 'ஆய்நர்', 'ஆணை', 'நகராட்சி' என்னும் சொற்களை நினைவில் இருத்திக்கொண்டு புரிந்து கொள்வது கடினமான செயலாகுமா? மாறுதல் காலத்தில் இருப்பவர்கள் இரண்டு மொழிச் சொற்களையும் கலந்து புழங்கிக் கொண்டாலும், இனி வரும் மக்கள், நல்ல தமிழ்ச் சொற்களை இனிது பயன்படுத் தட்டுமே; இனிமேற் பிறக்கப்போகும் நம் கால் வழியினரையும் ஏன் ஆங்கிலச் சொற் களையே பயன்படுத்தும்படி வற்புறுத்த வேண்டும்? மாறுதல் காலத்தில் வாழும் நாம் பொருத்தமான நல்ல தமிழ்ச் சொற் களைத் தெரிந்தெடுத்தும் ஆக்கியும் வைப்பது நமது கடமையாகக் கொள்ள வேண்டாமா? அக்கடமையை ஆற்றுமற் போனால் நம் முடைய கால்வழியினர் நம்மைப் பழிக்க மாட்டார்களா?

தமிழில் சொற்கள் இல்லை, ஆக்கவும் இயலாது, என்னுமிடங்களில், பிறமொழிச் சொற்களை அப்படியே பயன்படுத்திக் கொண் டால் பெரும் குறை சொல்வதற்கு இராது. எளிதில் கிடைக்கக் கூடிய சொற்களைத் தேடியமைக்கச் சோம்பிக் கொண்டும், அமைத்த சொற்கள் 'புதியன', 'புரியாதன' என்று குறை கூறிக் கொண்டும் அவற்றைப் புறக்கணித்துவிட்டு, அயல் மொழிச் சொற் களையே ஆண்டுகொண்டு போகவேண்டும் என்பது நமது மொழியின் ஆற்றலுக்கும் பெருமைக்கும் இழுக்காகும் அன்றோ? பிற மொழியினர் நமது போக்கைக் கண்டு எள்ளி நகையாடமாட்டாரா?

மேலும், தமிழில் ஆட்சி நடத்துவதை நாமாக விரும்பிச் செய்ய வேண்டியது ஒரு புறமிருக்க நம்நாடு உரிமை பெற்றபின், 1950இல்இயற்றப்பெற்ற அரசியல்அமைப்புச் சட்டம் 345 ஆம் பிரிவில் அச்சட்டம் செலாவணிக்கு வந்தபின் 15 ஆண்டுக்குள் அந்தந்த மாநில மொழியை ஆட்சிமொழி யாக்கிக் கொள்ளாவிட்டால் இந்திமொழி, தானாகவே வேறு ஒரு சட்டமோ ஆணையோ இன்றி அம்மாநிலத்தின் ஆட்சிமொழியாகி விடும் என்று சொல்லியிருக்கும்போது, எந்த மாநிலந்தான் தனது பெருவாரியான மொழி யைச் சட்டப்படி ஆட்சிமொழியாக்கிக் கொள் ளாமல் இருந்துவிடும்? 1956இல், நமது மாநிலத்தின் ஆட்சிமொழி தமிழாக இருக்க வேண்டும் என்று அரசு சட்டம் செய்தது. 1958 முதல் அலுவலகங்களில் படிப்படி யாகத் தமிழைப் பயன்படுத்தி வருகிறது. சட்டம் செய்து 14 ஆண்டுகள் ஆகியும் இன்னமும் ஆட்சி முழுக்க முழுக்கத் தமிழாக மாறவில்லையே என்று வருந்துகிறவர்கள் ஒரு புறம் இருக்க,தமிழாக மாறிவிடுகிறதே என்று கவலைப்பட்டுக்கொண்டும், எதிர்ப்புக் கூறிக் கொண்டும் இருக்கும் சில தமிழரைத் தமிழர் என்று கருதவும், அயல்மொழியாரும் அரு வருப்பர்.

தமிழ் பயிற்றுமொழியாக ஆவதால், கற்கும் பொருள்களைத் தமிழர்கள் உள்ளத் துணர்வுடன் புரிந்துகொள்ள வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. அப்பொருள்கள் பற்றி மேற்கொண்டு தாமாகச் சிந்திக்கவும், புதுக் கருத்துக்களைக் காணவும், இயல்பாக அப் பொருள்கள் குறித்து மூலநூல்கள் எழுதவும்,

அவற்றில் உலகம் போற்றும் நுண்ணறிவாளர்களாகவும், நோபல் பரிசு போன்ற உலகப் பரிசுகளைப் பெறவும், அறிஞர்கள், ஆற்றல் வளர்ந்தவர்கள் ஆவார்கள். விதிவிலக்கா, விளங்கிய சர். சி. வி. இராமன், சகதீசு சந்திர போசு போன்றவர்களை மனத்தில் கொண்டு, தாய் மொழியில் அவரவர்கள் ஆராய்ந்த அறிவியற் பொருள்களைப் பயின்றதனுல்தானு, அவர்கள் பேரறிஞர்கள் ஆனுர்கள் என்று கேட்க எவரும் முன்வரார். எதிர்காலத்தில் நம் நாட்டவர் பலர் அறிவியல் உலக மேதைகளாக ஆவதற்கு அடிப்படை தாய்மொழியில் பாடப் பொருள்களைப் பயில்வதுதான்.

ஆங்கிலத்தில் பாடங்களைப் படித்துவிட்டால், பிற மாநிலங்களில் வேலை வாய்ப்புக் கிட்டிவிடும் என்று எதிர் பார்ப்பது, எதிர்காலத்தில் இயலாத செயலாகும். ஏனெனில் ஒவ்வொரு மாநிலத்திலும், அரசியலமைப்புச் சட்டப்படி அந்தந்த மாநிலத்தின் மொழி பயிற்று மொழியாகி வருகின்றது. சிறிது காலத்தில் நாட்டின் எல்லா மாநிலங்களிலும், இது முழுச் செயலாகிவிடும். நமக்குத் தெரிந்த அளவு ஆங்கிலங்கூட அயல் மாநிலத்தவர்களுக்குத் தெரியப்போவதில்லை. எனவே, நம்மை ஆங்கிலப் பாடங்களைப் படித்ததற்காக அயல் மாநிலங்களில் வேலைக்கு அமர்த்துவார்கள் என்று எதிர்நோக்குவது ஏமாற்றந்தரும் செயலாக முடியும்.

மேலும், நமது மாநிலத்தில் ஆங்கிலத்தை விட்டுவிடக் கருதவில்லை. அதற்கு மாருக ஆட்சிமொழியை இப்பொழுதுள்ளதைக் காட்டிலும் சிறப்பான முறையில் பயிற்றுவிக்க வழிவகைகள் செய்யப்பெறுகின்றன. பிற பாடங்களைத் தமிழில் படித்தாலும், ஆங்கில மொழியில் திருத்தமாய்ப் பேசவும், எழுதவும், அம்மொழியிலுள்ள நூல்களைப் படிக்கவும் அம்மொழியில் வளமை பெறுவதற்கான மாறுதல்கள் செயலுக்கு வந்து கொண்டுள்ளன. இதுவரையில் ஆங்கிலத்தில் பாடங்களைப் பயில்கின்றவர்களுக்கு ஆங்கில அறிவு திருத்தமானதாகவும், திறமையுள்ளதாகவும் இருக்கின்றது என்று சொல்வதற்கில்லை. ஆங்கில அறிவு சிறக்க ஆங்கில மொழிப் பாடத்தைத் தக்கவாறு மாற்றுவது இக் காலத்துக்குத் தேவையே யன்றி, பிற பாடங்களை ஆங்கிலத்தில் பயிற்றவேண்டுமென்பது கட்டாயம் செய்ய வேண்டுவதாகாது.

ஆங்கில அறிவு திடம் பெற்றுவிடும் போது, தமிழில் கற்றுப் பொருளை நன்கு உணர்ந்துகொண்ட பிற பாடங்களில் பெற்ற அறிவை மேலும் உளமுறுத்திக் கொள்ள அப்பாடப் பொருள் பற்றிய ஆங்கில நூல்களை எளிதில் படித்துப் புலமை மிகுவதற்கு நல்ல வாய்ப்பு உண்டாகிவிடும். தமிழில் உலகம் வரவேற்கும் அறிவியல் நூல்களையும் எழுதும் காலம், தமிழில் அறிவியலைப் படிப்பதனுல்தான் ஏற்பட முடியும்.

சிதம்பரத்தில், 1943இல் ஒருவர் ஓர் எந்திர ஏற்றத்தைப் பொம்மை யளவில் செய்து கொண்டு வந்து காட்டினுர். அவர் தமிழ் மட்டுமே சிறிது படித்தவர். அக்கருவி நுண்ணிய எந்திரப் பொறி அறிவோடு செய்யப்பெற்றிருந்தது. அதைப் பற்றிய விளக்கங்களைச்சொல்லி இயக்கிக் காட்டினுர். திரு. கசபதி நாயகர் அவர்கள் அப்போது அங்கு மாவட்ட நடுவராக இருந்தார். இருவரும் அவ் எந்திர ஏற்றத்தின் அருமையைப் பாராட்டினேம். அப்போது பொறியியல் நூல்கள் ஒன்றுகூடத் தமிழில் இல்லாமையால் அதைச் செய்தார். மேலும் அத்துறையில் அறிவு சிறக்கவும், அவர் செய்த கருவியை ஆங்கிலம் படித்த பொறிஞர்கள் ஏற்றுக்கொள்ளும்படி செய்யவும் இயலாது போயிற்று. தமிழில் பொறிக்கலைப் படிப்புச் சொல்லிக் கொடுக்கின்ற காலமாக அஃது இருந்திருப்பின், தமிழில் பயின்ற பொறிஞர்கள் அத்துறையில் அலுவல்களைப் புரிகின்றவர்களாக இருந்திருப்பின், தமிழ் மட்டுமே தெரிந்த அந்த எளிய கிராமத்தவருடைய பொறியியல் இயற்கை அறிவு வளர முடியாதுபோயிருக்காது. அவர் அத்துறையில் நூல்கள் எழுதமுடியாதுபோயிருக்காது. அவர் அறிவை நாடு பயன்படுத்திக்கொள்ள முடியாதும் போயிருக்காது. சிறிது படித்த ஆங்கிலேயர் ஒருவர் இவ்வாருன பொறியியல் இயற்கை யறிவு பெற்றிருந்தால், அவர் பின்னுல் பெரிய பொறிஞராக விளங்கியிருப்பார்.

பிற பாடங்களைக் கற்பிக்கும் மொழி ஆங்கிலமாக இருப்பதால் ஆங்கில மொழி

யறிவும் ஒரு சிறிது வளரக்கூடும். ஆனால், ஆங்கில அறிவை வளர்ப்பதற்காகவே பாடங்களை ஆங்கிலத்தில் பயிற்ற வேண்டு மென்பதில்லை. தமிழ் பயிற்று மொழியாக இருப்பது தமிழை வளர்ப்பதற்காக அன்று. பாடப் பொருள்களைப் பற்றிய அறிவைத் தெளிவாகவும் சிறப்பாகவும் பெறுவதே தமிழ் பயிற்றுமொழியாக இருப்பதன் நோக்க மாகும். அதனால் தமிழ் மொழியும் ஓரளவு வளம் பெருது போகாது.

அவ்வளத்தை ஆட்சிக்குப் பயன்படுத் திக்கொள்ளவே, தமிழைப் பயிற்று மொழி யாகக்கொண்டு தேறியவர்களை, தமிழில் ஆட்சி நடக்கும் அலுவலகங்களில் வேலைக்கு அமர்த்திக்கொள்ள அரசு முனைந்திருப்பது, ஆட்சி மொழிச் சட்டப்படி தமிழாக ஆகிவிட் டதனால், தமிழில் வளமை மிகுவதற்கான வாய்ப்புகளைப் பெற்றது கொண்டு அம் மொழியில் வளமை மிக்கவர்கள் தமிழில் ஆட்சி நடக்கும் அலுவலகங்களில் பணி புரியத் தேர்ந்தெடுப்பது சட்டப்படியான செயலே யாகும்.

அறிவியல் பாடங்களைக் கற்பிக்க, ஆங் கில அறிவியற் சொற்களுக்கு நேரான தமிழ்ச் சொற்கள் காண்பது அடியோடு இய லாத செயலாகாது. இன்றைக்கே அவ் வளவு சொற்களுக்கும் தமிழ்ச்சொல் சொல்லி விட முடியாது என்பது உண்மையே என்ரு லும், நாளாக நாளாகத் தமிழ்ச்சொற்களின் எண்ணிக்கை பெருகிவரும். ஒரு காலத்தில் எல்லாம் தமிழிலேயே இருக்கும்நிலை வராமற் போகாது. அத்துறையில், எளிதில் தமிழ் காண முடியாத அறிவியற் சொற்களையும் பிற பாடச் சொற்களையும், இப்போதுள்ள பிறமொழி ஓசையிலேயே தமிழில் எழுதியும் உச்சரித்தும் வரலாம்.

'Bearing', 'Ball bearing', 'Spring bearing', 'Flat spring bearing', 'Spinal spring bearing' 'Roller bearing', 'Bush bearing'.

இச்சொற்களுக்குத் தமிழ் காணவேண்டி யிருந்தது. பொறியறிவு படைத்த ஒருவ ரோடு அமர்ந்து சொல்லாக்க முயன்றேன். 'தாங்கி', 'உருண்டைத் தாங்கி', 'வில் தாங்கி', 'தட்டை வில் தாங்கி', 'சுருள்வில் தாங்கி', 'உருளைத் தாங்கி', 'சுரை தாங்கி' என்னும் தமிழ் ஆக்கங்களைக் கூறிவந்த போது, தமிழில் இச் சொற்களுக்கு ஈடான சொற்களைக் காணமுடியாது என்று கருதி யிருந்தவர்கள், அப்படியே ஆங்கில ஓசை யைத் தமிழில் எழுதிக்கொள்ளலாம் என்றும் சொன்னேன். இத்தமிழ் ஈடுகளைக் கேட்ட தும் வியப்பில் ஆழ்ந்தார். நமது மொழிக் குள்ள ஆற்றலைப் போற்றினர். இவ்வாறு முயன்ருல், முயன்று கொண்டே வந்தால், சில ஆண்டுகளுக்குப் பிறகு பெரும்பாலான அறிவியற் சொற்களுக்குத் தமிழ் கண்டுவிட முடியும் என்பதற்கு எடுத்துக்காட்டாகவே இதனை இங்குச் சொன்னேன்.

இனி, கடைசியாகத் தமிழில் பிற மொழிச் சொற்களைக் கலந்தால் என்ன என்று பேசுபவர்களின் பேச்சை ஆராய் வோம் :—

ஒவ்வொரு மொழிக்கும் வெவ்வேறு தனி ஓசை நயம் உண்டு. தமிழில் பிறமொழிச் சொற்களைக் கலப்பதால் தமிழ் மொழியின் இனிய ஓசை கெட்டுப் போகும். ஒவ்வொரு மொழியை அதன் ஓசை இயல்பு கெடாமல் இயக்குவதே, அம்மொழியை இனிது சுவைப் பதற்கு ஏற்றதாகும். 'கதலிப்பழம் நிவே தனம் சமர்ப்பியாமி' என்பதை 'பிளாட்டன் பழம் நிவேதனம் ஆப்பராமி' என்ருல் எப்படியிருக்கும் ?

தமிழனுக்குத் தமிழ்மொழியை நல் லெண்ணம் இயக்குவதற்கே நாக்கு, அண்ணம், பல், குரல் வளை முதலிய கருவி களை இயற்கை அளித்திருக்கிறது. தமிழன் தமிழ்ச் சொற்களை இயைந்து வரும் தமிழ் மொழியைப் பேசி வந்தால் அவன் இயற்கைக் குகந்த செயலைச் செய்பவ னகின்ருன். அவன்றன் கருவிகள் கெடா. வலிவு பெறும் தமிழை அவன் புரிந்து கொள்வது எளிது.

அம்மொழிவழி அவன் அறிவு பெற முயல்வது இயற்கைக்குப் பொருத்தமாவ தோடு அவனுக்கு அறிவும் எளிதில் கைவரக் கூடும். எத்துணையோ செயல்களில் இயற் கைக்கு மாருக நடந்தும் நாம் காலந் தள்ளிக் கொண்டு போவதுபோல், பிற மொழிகளைத் தமிழன் பயின்று அவற்றில் வெற்றி பெறக் கூடும், எனினும், பிறமொழி பயில்வது, இயற்கைக்கு மாருனதே.

தமிழில் பிறமொழியைக் கலந்து கொண்டே வந்தால், பிறமொழி நூற்று வீதம் பெருகி, மொழியின் தன்மையையே மாற்றிவரும். தென்னகத்தில் தமிழ் என்று ஒருமொழியாக இருந்தது, வடமொழிக் கலப்பால், ஆங்காங்கே வழங்கிய கொச்சைமொழி வழக்குடன் கூடித் தமிழை நான்கு ஐந்து மொழிகளாக்கிவிட்டது. இது வரலாற்றுச் செய்தி. தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளுவம் இவை முதலில் தமிழின் வட்டார மொழிகளாக இருந்தனவே. பாலை ஐந்து குவளைகளில் விட்டு, ஒன்றில் காப்பிச் சாறும், மற்றொன்றில் தேயிலைச் சாறும், இன்னொன்றில் 'ஓவல்டின்' சாறும், வேறொன்றில் சுக்கு நீரும் துளித்துளியாகச் சேர்த்துக் கொண்டே வந்தால் பாலுக்கு மாறாக, காப்பி, தேநீர், ஓவல்டின், சுக்குநீர் என்னும் பானங்கள் உண்டாகிவிடும். ஒரு குவளையே பாலாக நிற்கும். இவ்வைந்தும் ஐந்து வேறுபட்ட இலக்கணங்களை உடையதாகப் பிரித்துப் பேசப்படும். இதே கதி பண்டைத் தமிழுக்கும் ஏற்பட்டு விட்டது. இப்போது தமிழென வழங்கும் மொழியிலும் பிற மொழிகள் கலந்துகொண்டே வருமானால், சில நூற்றாண்டுகளுக்குப் பிறகு இது மேலும் நான்கு மொழிகளாகப் பிரிந்து போய்விடும் என்பது திண்ணம்.

பிறமொழிச் சொற்களைத் தமிழில் கலந்து எழுதுவது தமிழில் போதிய சொற்கள் இல்லையென்று பிறர் எண்ணும்படி செய்யவும் வடமொழியைக் கலந்து பேசியும் எழுதிக் கொண்டும் வந்து வடமொழிதான் தமிழுக்கு மூலம்; வடமொழியின்றித் தமிழ் இயங்காது, என்னும் தவறான கருத்துக்கள் பரவுவதற்கு இடந் தந்துவிட்டது. அதை மாற்ற எவ்வளவு முயன்றும் இன்னும் சிலர் அக்கருத்தை உடும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டுள்ளனர். இத் தவறான எண்ணத்தை வலுப்படுத்தலே, தேவையற்ற பல வடசொற்களைத் தமிழில் வேண்டுமென்றே சிலர் கலப்பதையும் தமிழ்ச் சொற்களுக்கும் வடமொழிப்பேர் கூறி, அவை வடசொற்களிலிருந்து வந்தன என்று எழுதி வைப்பதையும் இன்றும் காண்கிறோம். எனவே, தமிழின் தனித்தன்மையை நிலைநாட்டுவதற்கும், பிற மொழி கலக்காமல் தமிழை இயக்க வேண்டியுளது.

இவ்வாறாக, ஆட்சிகளுக்கும், பாடங்களைப் பயிலுதற்கும் ஏன் தமிழ் தேவை என்பதையும், பிற சொல் கலப்பின்றித் தமிழை எழுதுவதும், பேசுவதும் ஏன் இன்றியமையாதது என்பதையும், மேலும் சிந்திப்பதற்கு இக் கட்டுரை தூண்டுகோலாக இருக்கும்.

---

## எல்லாப் படிப்பும் தாய் மொழியிலேயே சொல்லித் தரவேண்டும்

*தென்னிந்தியத் தமிழ்ச்சங்கத்தார் 23-11-1936 இல் தமிழ் நாட்டுக்கு இந்திவேண்டுமா? என்ற துண்டறிக்கையினைப் பார்வையிட்டு மூதறிஞர் திரு. சி. இராசகோபாலாச்சாரியார் (இராஜாஜி) அவர்கள் எழுதிய 26-11-36 மறுமொழி அடியிற் கண்டவாறு.*

*"தங்கள் சுற்றுக் கடிதம் 23-11-36 தேதி கொண்டது வரப்பெற்றேன்.*

*கல்விமுறையில் தாய்பாஷையே முதல்ஸ்தானம் பெற்று எல்லாப் படிப்பும் அதைக்கொண்டே சொல்லித்தரவேண்டும். ஹிந்தி ஒரு இரண்டாம் பாஷையாகத்தான் சொல்லித்தர வேண்டும்*

*ஆங்கிலமும் கல்விகற்கும் தமிழ்மக்கள் அனைவரும் படிக்க வேண்டும். ஆனால் அது எல்லாப் படிப்புக்கும் பொதுவாயிலாக இருப்பது தவறு."*

# சங்க இலக்கியங்களில் திருக்குறள்

[க. த. திருநாவுக்கரசு, எம்.ஏ., எம்.லிட்.]

செங்கற்பட்டு மாவட்டத்தைச் சார்ந்த இவர் சென்னையில் பிறந்தார். பிறந்த நாள் 20-11-1931 சென்னை விவேகானந்தர் கல்லூரியிலும் பச்சையப்பன் கல்லூரியிலும் பயின்று தமிழ் இலக்கியத்தில் பி. ஏ. ஆனர்சு பட்டம் பெற்றவர். அத்தேர்வில் பல்கலைக் கழக முதல்வராகத் தேறிய தோடன்றி அதற்குமுன் யாரும் பெறாத அளவு அதிக மதிப்பெண் களையும் பெற்றார். அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சி செய்து எம். லிட். பட்டமும் பெற்றார். வரலாற்றுத் துறையில்



எம். ஏ பட்டமும் மொழியியல் துறையில் டிப்ளமோவும் பெற்றுள்ளார். பதினைந்து ஆண்டு கள் பல்வேறு அரசினர் கல்லூரிகளில் பணியாற்றியபின் சிறிது காலம் மணலி தமிழ்க் கல்லூரி முதல்வராகத் திகழ்ந்தார். தற்பொழுது சென்னைப் பல்கலைக் கழகத்தின் திருக்குறள் ஆராய்ச்சித் துறையில் பணியாற்றுகிறார். சிந்துவெளி தரும் ஒளி, திருக்குறள் நீதிஇலக்கியம் போன்ற பத்துக்கு மேற்பட்ட நூல்களின் ஆசிரியர். உயர்ந்த ஆங்கிலப் பாட நூல்களைத் தமிழாக்கம் செய்துள்ளார்.

தமிழ் மொழியில் இன்று கிடைக்கும் இலக்கியத்துள் தொன்மைச் சிறப்பு வாய்ந்தவை சங்க இலக்கியங்களாகும். அவை தொல்காப்பியம், திருக்குறள், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்பனவாகும். அவை காலத்தால் முற்பட்டவை மட்டுமல்ல. உணர்த்துகின்ற கருத்துக்களாலும், அக் கருத்துக்களை எடுத்தியம்பும் முறைகளாலும், மக்கள் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் வகையாலும், கவர்ச்சிமிகு கலையழகால் கற்பவர் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுவதாலும் அவை சிறப்புமிக்க செந்தமிழ் இலக்கியங்களாகும்.

அவற்றுள் தன்னிகரற்ற தனிப் பெரும் சிறப்பு வாய்ந்த இலக்கியமாய் விளங்குவது திருக்குறள். காலத்தால் கறைபடாத கவின் மிகு கருத்துக்களையும், இடத்தால் இழிவுறாத ஏற்றமிகு கருத்துக்களையும் எளிமையும் இனிமையும் நிறைந்த சிறிய சொற்களால் எடுத்துரைப்பது திருக்குறள். மனித இனம் மண்ணில் நல்லவண்ணம் வாழ்வதற்கு வழி காட்டும் வான்பொருளாய் - வாழ்வியல் இலக்கியமாய் இலங்குவது திருக்குறள்.

அவ்விழுமிய நூலின் கருத்துக்களும் தொடர்களும் எடுத்தாளப் பெறாத இலக்கியங்களே நம்மொழியில் இல்லை எனலாம். இதனை என்னுடைய வணக்கத்திற்குரிய பேராசிரியர் வெ. சு. சுப்பிரமணியாச்சாரியார்,

''உலகத்தே எறும்பு முதல் யானையீறாக உள்ள எல்லா உடலிலும் உயிர் நுழைந்திருத்தல் போலத் திருக்குறள் எல்லா நூல்களிலும் நுழைந்துள்ளது. அகரம் மற்றைய எழுத்துக்களை இயக்குவது போன்று திருக்குறள் மற்றைய நூல்களை இயக்குகின்றது. அகர ஒலி இல்லாத எழுத்துக்களில்லை. குறட் கருத்திலாத நூல்களில்லை. அகரம் தூய்மையான ஒலியை உடையது. குறளும் தூய்மையான கருத்துக்களை யுடையது. அகரம் எழுத்துக்களுள் முதன்மையானது. குறள் நூற்களுள் முதன்மையானது. குறிலினது விகாரமே நெடிலாதல் போலக் குறளினது விகாரமே விரிந்து கிடக்கும் நூற்களாயின. இவற்றை நோக்கியே அகரத்தை முதலாக உடைய செய்யுள் குறளுக்கு

முதற் குறளாக அமைந்துள்ளது. குறளாசிரியர் எவரையும் போற்றிப் புகழவில்லை. ஆனால், குறளைப் போற்றிப் புகழாத நூல்களில்லை''

என்று நவின்றுள்ளமையால் நாம் நன்குணரலாம்.

தமிழ்க்குழவி வள்ளுவர் தந்த முப்பாலை உண்டு மழலை மாறாத இளங்குழந்தையாய் - கன்னித் தமிழாய் - முழுவளர்ச்சியைப் பெற்றுத் தமிழ்கூறும் நல்லுலகத்தில் தனியரசு நடத்துவதை,

''......................முப்பாலும்
*மிஞ்சப் புகட்ட மிக வளர்த்தாய்''*
(த. தூ 25)

என்று தமிழ்விடு தூது ஆசிரியர் அறிவித்துள்ளார். திருக்குறள் தமிழ் இலக்கியங்களுக்கு ஊட்டச்சத்தை அளிக்கும் வற்றாத அறிவு ஊற்றாய் விளங்குவதையே தமிழ்விடு தூதின் ஆசிரியர் இவ்வாறு எடுத்துரைத்துள்ளார்.

தமிழ் இலக்கியப் பூங்காவில் காலந்தொறும் பூத்துக் குலுங்கும் வண்ண மலர்களாகிய இலக்கியங்களில் குறள் மணம்வீசாத நறுமலர்களே இல்லை என்று நாம் உறுதியாகக் கூறலாம். திருக்குறள் தனிச்சிறப்பு வாய்ந்ததொரு நீதி இலக்கியம். அந்நூலை அனைவரும் கற்று மனத்தே நிலையாக வைப்பதற்கு ஏற்றவகையில் இழுமென் மொழியால் விழுமிய பயப்பதாகவும், சுருங்கச் சொல்லி விளங்க வைப்பதாகவும் இயற்றப் பெற்றுள்ளமை அதற்குரிய தனிச்சிறப்பாகும். அதனால்தான் 'முன்னோர் மொழிபொருளைப் பொன்னேபோல் போற்றும்' பைந்தமிழ்ப் பாவலர்கள் தங்கள் இலக்கியப் படைப்புகளில் இயன்ற இடங்களில் எல்லாம் திருக்குறளின் சொற்களையும், தொடர்களையும், கருத்துக்களையும் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் அமைத்து அழகு செய்துள்ளனர்.

இம்முறையைச் சங்ககாலப் புலவர்களே கடைப்பிடித்துள்ளனர். அறம், பொருள், இன்பம் என்ற மூவகைப் பேறுகளை 'முப்பாலாகத் திருக்குறள் மொழிந்தபோதிலும், அதனைச் சங்ககாலச் சான்றோர்கள் 'அறம்' என்ற பெயரால் அழைத்தமை இங்குக் குறிப்பிடத் தக்கதாகும். ஆலத்தூர் கிழார் என்ற புலவர்,

''*நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்*
*செய்தி கொன்றோர்க்கு உய்தி யில்லென*
அறம் பாடிற்றே' (புறம் - 34)

என்று அறிவித்துள்ளமையால் இதனை நாம் அறிகிறோம். இவ்வாறு சிறப்பாகப் போற்றப்படும் திருக்குறளின் கருத்துக்கள் சங்க இலக்கியங்களில் இலைமறை காய்போல் இங்குமங்கும் இடம் பெற்றிருப்பதில் வியப்பில்லை. அவை அனைத்தையும் இக்கட்டுரையில் காட்ட இயலாமையால், அவற்றுள் மிகச் சிறந்தவற்றை மட்டும் இங்குச் சுட்டிக் காட்ட முயலுகிறேன்.

பண்டைத் தமிழ் இலக்கியங்கள், உணர்த்தும் பொருளை அடிப்படையாகக் கொண்டு அகப்பொருள் சார்புடைய இலக்கியம், புறப்பொருள் சார்புடைய இலக்கியம் என்று அவற்றைப் பாகுபடுத்திக் கூறுவது மரபாகும். அம் மரபிற்கு இணங்க நாம் அகப்பொருள் இலக்கியங்களுள் திருக்குறள் பெற்றுள்ள சீரையும் சிறப்பையும் முதலில் காண்போம்.

## (1) அகப்பொருள் இலக்கியங்கள்

சங்க இலக்கியங்களுள் ஐங்குறு நூறு, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, கலித்தொகை என்ற ஐந்தும் காதலர் வாழ்க்கையைச் சொல்லோவியமாகத் தீட்டிக் காட்டும் அகப்பொருள் இலக்கியங்களாகும். அவை இன்ப வாழ்க்கையின் எழிலோவியங்களாக விளங்குகின்றன. எனினும், அறத்தைப்பற்றிய அறவுரைகளும், பொருளைப் பற்றிய பொன்மொழிகளும் சிறப்புமிக்க முறையில் உவமைகளாகவும், அறிவுரைகளாகவும், நயமிகு மூதுரைகளாகவும் அவற்றுள் அழகுற அமைக்கப் பெற்றுள்ளன. இவ்வாறு அகப்பொருள் இலக்கியங்கட்குப் பொலிவூட்டும் கருத்துக்களுள் பல திருக்குறளின் கருத்துக்களாகவும், செஞ்சொல் கவியின்பம் பயக்கும் தமிழ்மறையின் சொற்களாகவும், தொடர்மொழிகளாகவும் ஒளிர்கின்றன. சங்ககாலச் சான்றோர்கள் தங்கள் பாடல்களின் மூலம் உலகிற்கு உணர்த்த விரும்பிய உண்மைகளைக், கருத்துக் களஞ்சியமாகிய திருக்குறளில் இருந்து எடுத்தாண்டுள்ளனர். குறட்பாக்களை அப்படியே தம் பாடல்களில் சிலர் பயன்படுத்தியுள்ளனர். மற்றும் சிலர் குறட்பாக்களைச்

சிறிது மாற்றியும் திரித்தும் புதுமெருகு கொடுத்துக் கையாண்டுள்ளனர்; வேறு சிலர் திருக்குறளின் விழுமிய கருத்துக்களைத் தம்முடைய அறிவாற்றலுக்கேற்ற வகையில் எளிமைப்படுத்திப் புதிய வடிவில் உவமைகளாகவும், மூதுரைகளாகவும் வழங்கியுள்ளனர்.

## (அ) ஐங்குறுநூறு

சங்க இலக்கியங்களுள் வடிவால் மிகவும் சிறிய பாக்களை உடையது ஐங்குறு நூறு. மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை என்ற ஐந்திணைகளில் ஒவ்வொன்றுக்கும் நூறு நூறு பாக்களை இந்நூல் கொண்டிருக்கிறது. இதில் உள்ள பாக்கள் மூன்று அடிச் சிறுமையும் ஐந்து அடிப் பெருமையும் உடைய குறுகிய வடிவுடையனவாகும். இந்நூலின் ஐந்து பகுதிகளை ஐந்து புலவர்கள் பாடியுள்ளனர்.

முதல் பகுதி மருதத்திணை பற்றியது. அதை ஓரம்போகியார் என்ற புலவர் பாடியுள்ளார். அவருடைய பாக்களில் குறளின் கருத்துக்கள் பல இடம் பெற்றுள்ளன. முதல் பத்துப் பாடல்களை 'வேட்கைப் பத்து' என்பர். அதில் தோழி வாயிலாகச் சேரவரசன் ஆதனுடைய நாடு நலம்பல பெற்றுச் சிறக்க வேண்டும் என்ற தம் விழைவினை அவர் எடுத்துரைக்கின்றார். அவற்றுள் காணப் பெறும் பல கருத்துக்கள், திருக்குறளின் எழுபத்துநான்காவது அதிகாரமாகிய 'நாடு' என்பதனுள் திருவள்ளுவர் தெரிவித்துள்ள கருத்துக்களாக உள்ளன.

*''பசி இல்லாகுக! பிணிசேண் நீங்குக!''*
(ஐங்குறு. 5)

*''வேந்து பகை தணிக!''* (ஐங்குறு. 6)

என்ற கருத்துக்களை,

*''உறுபசியும் ஓவாப் பிணியும் செறுபகையும்*
*சேரா தியல்வது நாடு''* (குறள் - 734)

என்ற குறட்பாவில் நாம் ஒருங்கே காணலாம்.

*''நெல் பல பொலிக! பொன் பெரிது சிறக்க!''*
(ஐங்குறு 1)

*''விளைக வயலே! வருக இரவலர்!''*
(ஐங்குறு. 2)

*''பால் பல ஊறுக! பகடு பல சிறக்க!''*
(ஐங்குறு. 3)

*''பகைவர் புல் ஆர்க! பார்ப்பார் ஓதுக!''*
(ஐங்குறு. 4)

*''அறம் நனி சிறக்க! அல்லது கெடுக!''*
(ஐங்குறு. 7)

என்பன போன்ற கருத்துக்கள்,

*''தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்*
*செல்வரும் சேர்வது நாடு''* (குறள் - 731)

என்ற குறட்பாவிற்குத் தரப்படும் விளக்கவுரையாக அமைந்துள்ளன.

இதைப் போன்றே காமத்துப்பாலில் காணப்பெறும் கருத்துக்கள் சில ஐங்குறு நூற்றில் இடம் பெற்றுள்ளன. தலைவனுடைய அழகிய மார்பினைக் காணுகின்ற மகளிர், அதனுடைய அழகில் ஈடுபட்டுத் தலைவனைத் தழுவி இன்புற விரும்புகின்றனர். இவ்வாறு 'மகளிர் பலர் கண்டு மகிழும் தலைவனுடைய மார்பைத் தழுவமாட்டேன்' என்று தலைவி கூறுகிறாள். இக்கருத்தினை,

*''பெண்ணியலார் எல்லாரும் கண்ணின்*
*பொது உண்பர்*
*நண்ணேன் பரத்தநின் மார்பு''* (குறள் - 1311)

என்று வள்ளுவர் இயம்புகிறார். பரத்தையரிடத்துச் செல்லுதலைக் கண்டிக்கும் வள்ளுவர், தாம் படைத்த தலைவனை மகளிர் பலர் விரும்புவதாகச் சித்திரிப்பதன் மூலம் அவனுடைய ஒழுகலாற்றின் தூய்மையைப் புலப்படுத்துகிறார்.

ஐங்குறு நூற்றுப் பாடல் ஒன்றில் தலைவன் பரத்தையரிடத்துச் சென்று வந்ததனால், அவனைத் தழுவமாட்டேன் என்று தலைவி அறிவிக்கிறாள்.

*''எந்நலந் தொலைவ தாயினும்*
*துன்னலம் பெருமபிறர்த் தோய்ந்த மார்பே''*
(ஐங்குறு. 63)

வள்ளுவர் இலட்சிய நோக்கில் நயமுறக் காட்டிய கருத்தை, ஓரம்போகியார் உலகியலில் நிகழ்வியல் பாங்கிற்கேற்ற வகையில் இங்கு எடுத்துரைத்துள்ளார்.

## (ஆ) குறுந்தொகை

இது நானூறு பாடல்களைக் கொண்ட அகப்பொருள் நூல். பாடல்கள் நான்கடிச்

சிற்றெல்லையும் எட்டடிப் பேரெல்லையும் உடையவை. ''நல்ல குறுந்தொகை'' என்று பெரியோர்களால் பாராட்டப் பெறும் சிறப்புடையது இந்நூல்.

மலர் மென்மையானது; அழகுடையது; நறுமணம் மிக்கது! அம்மலரினும் காமமானது மென்மைத் தன்மையுடையது என்பது வள்ளுவர் கருத்து.

''மலரினும் மெல்லிது காமம்'' (குறள்-1289)

இக்கருத்து,

''ஐதே காமம்'' (குறுந். 217)

என்று குறுந்தொகைப் பாடலில் குறிப்பிடப் படுகிறது. 'ஐதே' என்பதற்கு நுண்மையானது, மென்மையானது என்பன பொருள்களாகும்.

வள்ளுவர் 'பழைமை' என்ற அதிகாரத்தில், 'நண்பன் ஒருவன் துன்பம் தரக்கூடிய செயலைச் செய்துவிடுவானுல் அறியாமையால் மட்டும் செய்துவிட்டான் என்று நினைக்கக் கூடாது; நட்பின் உரிமை பாராட்டிச் செய்ததாகவும் உணர வேண்டும் என்ற கருத்தமைய,

''பேதைமை ஒன்ரே பெருங்கிழமை என்றுணர்க
நோதக்க நட்டார் செயின்'' (குறள்-805)

என்று குறிப்பிடுகிருர்.

இதை அறிவுடை நம்பி என்ற அரசப் புலவர், 'தலைவனுக்கு' அறியாது தீங்கு செய்து விட்டோமோ என்று தலைவி ஒருத்தி எண்ணி ஏங்கும் பொழுது,

''பேதை மையாற் பெருந்தகை கெழுமி
நோதகச் செய்ததொன் றுடையேன்
கொல்லோ'' (குறுந். 230)

என்று ஐயுறுவதாகப் பாடியுள்ளார்.

மற்றும்,

''கேடில் விழுச் செல்வம்'' (குறள்-400)

என்ற திருக்குறளின் தொடர், 'கேடில் விழுப் பொருள்' என்று குறுந்தொகை (216) யிலும் கையாளப்பட்டுள்ளதை நாம் காணுகின்ருேம்.

மேலும்,

''பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்'' (குறள்-1121)

என்ற குறளை அடியொற்றி,

''வாலெயி றூறிய வசைஇல் தீநீர்' (குறுந். 267)

என்று குறுந்தொகைப் பாடலின் அடியொன்று அமைந்து இருப்பதையும் இங்கு நாம் குறிப்பிடலாம்.

**(இ) நற்றிணை**

இந்நூல் அன்பின் ஐந்திணையினுடைய சீரையும் சிறப்பையும் செந்தமிழின் இனிய நலத்தோடு குழைத்துத் தரும் நயமிகு பாடல்கள் நானூற்றைக் கொண்டதாகும். பாண்டியன் மாறன் வழுதி இந்நூலைத் தொகுப்பித்தவனுவான். இதில் ஒன்பதடி முதல் பன்னிரண்டு அடிகள் வரையிலுள்ள பாடல்கள் உள்ளன.

இந்நூலில் திருக்குறளின் கருத்துக்கள் பல அப்படியே சொல்பிறழாமல் எடுத்தாளப் பெற்றுள்ளன.

''நீரின்று அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வானின்று அமையாது ஒழுக்கு'' (குறள்-20)

என்பது குறட்பா. 'உலகமும் உயிர்களும் நிலைத்து நிற்பதற்கு நீர் இன்றியமையாது வேண்டப்படுவது' என்ற கருத்தமைந்த 'நீரின்று அமையாது உலகு' என்றதொடரை, தலைவிக்குத் தலைவன் மிகவும் இன்றியமையாதவன் என்பதை விளக்குவதற்கு உவமையாக,

' நீரின்று அமையா உலகம் போலத்
தம்மின்று அமையா நந்நயந் தருளி''
(நற்றிணை. 1)

என்று புலவரொருவர் குறிப்பிடுகின்ருர்.

'நட்பு ஆராய்தல்' என்ற அதிகாரத்தில் அரசர் முதலியோர் எவ்வாறு ஒருவரை ஆராய்ந்து நட்புக்கொள்ள வேண்டும் என்பதைச் சொல்லுமிடத்து,

''நாடாது நட்டலின் கேடில்லை; நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு'' (குறள்-791)

என்று வள்ளுவர் அறிவிக்கிருர். இதற்குக் கபிலர்,

"......................பெரியோர்
நாடி நட்பி னல்லது
நட்டு நாடார்தம் ஒட்டியோர் திறத்தே"
(நற்றிணை - 32)

என்று சிறியதொரு விளக்கம் தந்துள்ளார்.

பழகினவரிடத்தில் கண்ணின் வழியாக அன்பைச் செலுத்துதலாகிய 'கண்ணோட்டம்' பற்றிப் பேசுகின்றபொழுது வள்ளுவர், 'எல்லாரும் விரும்பும் முறையில் நாகரிக வாழ்வு வாழ வேண்டும் என்று நினைப்பவர், தம்மால் பிறருக்குத் தீமை உண்டாகிறது என்று ஒருவர் எண்ணி நஞ்சை அளித்தாலும் அதை உண்டு அமைதியாக இருப்பர்' என்று கூறுகிறார் :

"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்" (குறள்-580)

என்பது வள்ளுவர் வாய்மொழி. இதனை,

"முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சு முண்பர் நனிநா கரிகர்" (நற்றிணை - 355)

என்று பெயர் தெரியாப் புலவர் ஒருவர் நற்றிணைப் பாடலில் எடுத்தாண்டுள்ளார்.

இவை அல்லாமல் பின்வரும் குறட்பாக்களின் கருத்துக்களும் சொற்களும் நற்றிணையில் பயன்படுத்தப் பட்டுள்ளமை அவ்வக் குறளின் கீழே நாம் காணலாம் :

"விழுப்புண் படாதநாள் எல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் நாளை எடுத்து" (குறள்-776)

"அழுந்துபடு விழுப்புண் வழும்புவாய் புலரா"
(நற்றிணை - 97)

"பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து" (குறள்-1102)

"அருந்துய ரவலந் தீர்க்கு
மருந்துபிறி தில்லையா னுற்ற நோய்க்கே"
(நற்றிணை - 140)

"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்" (குறள்-1062)

'ஐதே கம்மவிவ் வுலகுபடைத் தோனே'
(நற்றிணை - 240)

"மாலையோ வல்லை மணந்தார் உயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது" (குறள்-1221)

"உயிர்செலத் துனைதரு மாலை
செயிர்தீர் மாரியொ டொருங்குதலை வரினே"
(நற்றிணை - 364)

"ஆள்வினை யுடைமை" (குறள்-அதி. 62)

'ஆள்வினைக்கு அகறியாயின் இன்றொடு"
(நற்றிணை - 205)

(ஈ) அகநானூறு

அகப்பொருள் கருத்துக்களை அழகுற எடுத்துரைக்கும் இந்நூலிற்கு 'அகம்' என்ற பெயரையே இதன் சிறப்புக்கருதி ஆன்றோர்கள் வழங்கியுள்ளனர். இதற்கு 'நெடுந்தொகை' என்ற மற்றொரு பெயரும் வழங்கி வருகின்றது. நானூறு பாடல்களைக் கொண்ட இந்நூலில் சற்றேறக்குறைய நாற்பது பாடல்களில் திருக்குறளின் கருத்துக்களும், தொடர் மொழிகளும் எடுத்தாளப் பட்டுள்ளன.

'அறத்தாறு' என்ற தொடர் 'அறநெறி' என்ற பொருளில்,

"அறத்தாறு இதுவென வேண்டா" (குறள்-37)

என்று வள்ளுவரால் வழங்கப்பட்டுள்ளது. இதே பொருளில்,

"...................................அறத்தாறு
அன்றென மொழிந்த தொன்றுபடு கிளவி'
(அகம். 5)

என்று பாலைபாடிய பெருங்கடுங்கோ அகநானூற்றில் வழங்கியுள்ளார்.

காமத்துப்பாலில் 'புணர்ச்சி மகிழ்தல்' என்ற அதிகாரத்தில் தலைவன், "தாம் விரும்பும் காதலியின் மென்மையான தோள்களில் துயிலும் துயில்போல் தாமரைக்கண்ணனுடைய உலகம் இனிமை யுடையதாகுமோ ?" என்று வினவினை எழுப்புகின்றான்.

"தாம்வீழ்வார் மென்றோள்
துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு"
(குறள்-1103)

இக்கருத்தைப் பாலைபாடிய பெருங்கடுங்கோ,

"செய்வுறு விளங்கிழைப் பொலிந்த தோள்சேர்பு
எய்திய கனைதுயில் ஏற்றொருந் திருகி
மெய்புகு வன்ன கைகவர் முயக்கின்
மிகுதிகண் டன்றோ இலனே" (அகம். 379)

என்று தலைவன் மூலம் எடுத்துரைக்கின்றார்.

தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே உண்டாகியுள்ள நட்பு முறைகள் உடம்போடு உயிர்க்கு உள்ள தொடர்புகள் எத்தன்மை யானவையோ அத்தன்மையானவை என்ற கருத்தில் வள்ளுவர்,

"உடம்பொடு உயிரிடை என்னமற் றன்ன
மடந்தையொடு எம்மிடை நட்பு"
(குறள்-1122)

என்னும் குறட்பாவை அமைத்துள்ளார். இக் கருத்தினை நக்கீரர்,

"உயிர்கலந் தொன்றிய தொன்றுபடு நட்பின்
செயிர்தீர் நெஞ்சமொடு செறிந்தோர் போல
தையல்! நின்வயின் பிரியலம் யாமென"
(அகம். 205)

என்று விளக்கியுள்ளார்.

தலைவனோடு கூடும்போது உயிர்க்கு வாழ்வு போன்றும், பிரியும்போது உயிர்க்குச் சாவுபோன்றும் தலைவி தோன்றுகிறாள்.

"வாழ்தல் உயிர்க்கன்னள் ஆயிழை! சாதல்
அதற்கன்னள் நீங்கு மிடத்து" (குறள்-1124)

என்பது வள்ளுவர் வாய்மொழி. இக் குறட்பாவின் பொருளைத் தெளிவுறுத்தும் வகையில்,

"......................யாக்கைக்கு
உயிர் இயைந்தன்ன நட்பின் அவ்வுயிர்
வாழ்தல் அன்ன காதல்
சாதல் அன்ன பிரிவு அரியோளே" (அகம். 339)

என்ற அகநானூற்றுப் பாடலின் பகுதி அமைந்துள்ளதை நாம் காணலாம்.

"மனைவியின் நற்பண்பே இல் வாழ்க்கைக்கு மங்கலம் என்று கூறுவர். அவ் வில்வாழ்க்கைக்கு நல்ல மக்களைப் பெறுதல் அணிகலம் போன்றது" என்பது திருவள்ளுவரின் கருத்து.

"மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன்
நன்கலம் நன்மக்கட் பேறு" (குறள் 60)

இக்கருத்திற்கு இலக்கியமாக விளங்கும் ஓர் அன்னையை,

"கடவுட் கற்பொடு குடிக்கு விளக் காகிய
புதல்வற் பயந்த புகழ்மிகு சிறப்பின்
நன்ன ராட்டி" (அகம். 184)

என்று மருதனிள நாகனார் அறிமுகப் படுத்துகிறார்.

தலைவனைப் பிரிந்து உயிர் வாழ விரும்பாத தலைவி ஒருத்தி தலைவனிடம், "நீ என்னை விட்டுப் பிரிந்து செல்லவில்லை என்றால் எனக்குச் சொல் ஆனால், பிரிந்து விரைந்து வருவேன் என்ற சொல்லை, நீ திரும்பி வரும்வரையில் உயிரோடு வாழக் கூடியவர்களுக்குச் சொல்லுக" என்று அறிவிக்கிறாள்.

"செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க்கு உரை" (குறள் 1151)

என்ற குறட்பாவின் கருத்தை மருதனிள நாகனார் என்ற புலவர் பல சொற்களால் தெளிவாக விளக்கியுள்ளமை இங்குக் குறிப் பிடத் தக்கதாகும்.

"திருந்து இழை நெகிழ்ந்து பெருந்தோள் சாஅய்
அரிமதர் மழைக்கண் கலுழச் செல்வீர்!
வருவீர் ஆகுதல் உரைமின் மன்னோ—
...................................
நின்றுங்குப் பெயரும் கானம்
சென்றோர் மன்னென இருக்கிற் போர்க்கே" (அகம். 387

## (உ) கலித்தொகை

இந்நூல் 'கற்றோர் ஏத்தும் கலி' யென்று பெரியோர்களால் போற்றப் பெறும் சிறப்புடையது கலிப்பாவினால் இயற்றப் பெற்ற இந்நூல் நூற்றைம்பது செய்யுட் களைக் கொண்டிலங்குகிறது. அகப்பொருள் இலக்கியங்களுள் அகநானூற்றிலே வர லாற்றுச் செய்திகள் மிகுதியாக இடம் பெற் றிருப்பதைப் போன்று, கலித்தொகையில் அறம், பொருள், இன்பம் பற்றிய கருத்துக் களும் புராணக்கதைக் குறிப்புகளும் பேரள வில் காணப்பெறுகின்றன.

இல்லறத்தை நல்லறமாக நடத்தும் இல்லத்தரசி தெய்வத்தையும் தொழும் நினைவில்லாதவளாய்த் தன்னை மணந்த தலைவன் வழியொழுகும் பண்புடையவ ளாவாள்; அவள் மழையைப் பெய்விக்கும் ஆற்றல் உடையவளாக விளங்குகிறாள் என்பது வள்ளுவரின் நம்பிக்கை.

"தெய்வம் தொழாஅள் கொழுநன்
தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை" (குறள்-55)

இந்நம்பிக்கை சங்க காலத் தமிழ் மக்களிடத்து ஆழ வேரூன்றியிருந்ததைப் பின்வரும் கலித்தொகைப் பாடற்பகுதிகள் அறிவிக்கின்றன;

"வறனோடின் வையத்து வான்தரும் கற்பினாள்"
(கலி. பா. 16)

"அருமழை தரல்வேண்டின் தருகிற்கும் பெருமையளே"
(கலி. குறிஞ். 3)

"குறவர் மடமகளிர்
தாம்பிழையார் கேள்வர்த் தொழுதெழலாற்
றம்மையரும்
தாம்பிழையார் தாந்தொடுத்த கோல்"
(கலி. குறிஞ். 3.)

காதலன் பிரிவைத் தாங்கமாட்டாத தலைவி, தான் படுகின்ற துன்பத்தை எப்பொழுதும் நினைந்து உடல் மெலிந்து துன்புறுகிறாள். அவள் 'காமமும், 'நாணும், பிரிவு வேதனையைத் தாங்கமுடியாத என்னுடைய உடம்பினுள்ளே, உயிரையே காவடித் தண்டாகக் கொண்டு இருபக்கமும் தொங்குகின்றன" என்று கூறிப் பெருமூச்சு விடுகின்றாள்.

"காமமும் நாணும் உயிர்காவாத் தூங்கும்என்
நோனா உடம்பி னகத்து" (குறள்- 1163)

இக்கருத்தினைச் சிறிதுமாற்றி,

"நலிதரும் காமமுங் கௌவையும் என்றிவ்
வலிதின் உயிர்காவாத் தூங்கியாங் கென்னை
நலியும் விழுமம் இரண்டு" (கலி 142)

என்று நயமுற நல்லந்துவனார் எடுத்துரைக்கின்றார்.

இவற்றைப் போன்றே வேறுபல குறட்பாக்களின் கருத்துக்களும் கலித்தொகையின் பாடல்கள் பலவற்றில் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் சிறப்புமிக்க சிலவற்றைக் கீழே காணலாம்.

(1) "குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் தொழில்"
(குறள்-549)

"குடிபுறங் காத்தோம்புஞ்
செங்கோலான் வியன்றானை
விடுவழி விடுவழி சென்றாங்கவர்
தொடுவழி தொடுவழி
நீங்கின்றாற் பசப்பே" (கலி. 130)

(2) "துஞ்சுங்கால் தோண்மேல
ராகி விழிக்குங்கால்
நெஞ்சத்த ராவர் விரைந்து"
(குறள்-1218)

"தெற்றெனக் கண்ணுள்ளே
தோன்ற இமையெடுத்துப்
பற்றுவென் என்றியான்
விதிக்குங்கால் மற்றுமென்
நெஞ்சத்துள் ளோடி
யொளித்தாங்கே துஞ்சாநோய்
செய்யும் அறனி லவன்"
(கலி. 144)

(3) "ஊடற்கண் சென்றேன்மன்
தோழி அதுமறந்து
கூடற்கண் சென்றதென் நெஞ்சு"
(குறள்-1284)

"ஊடுவென் என்பேன்மன்!
அந்நிலையே அவற்காணின்
கூடுவென் என்னும்
இக்கொள்கைஇல் நெஞ்சே"
(கலி. 67)

(4) "எண்ணென்ப ஏனை
எழுத்தென்ப இவ்விரண்டும்
கண்ணென்ப வாழும் உயிர்க்கு"
(குறள் 391)

"கல்லாது முதிர்ந்தவன்
கண்ணில்லா நெஞ்சம் போல்" (கலி 130)

(5) "சமன்செய்து சீர்தூக்கும்
கோல்போ லமைந்தொருபால்
கோடாமை சான்றோர்க் கணி" (குறள் 118)

"ஆர்வுற்றார் நெஞ்சம் அழிய விடுவானோ
ஓர்வுற் றொருதிறம் ஒல்காத நேர்கோல்
அறம்புரி நெஞ்சத் தவன்" (கலி 42)

(6) "அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில்" (குறள்-428)

"எஞ்சா தெல்லா கொடுமை நுவலாது
அஞ்சுவ தஞ்சா அறனிலி யல்லன்என்
நெஞ்சம் பிணிக்கொண் டவன்" (கலி. 42)

அகப்பொருள் இலக்கியங்களுள் கலித்தொகையில் மட்டுமே காமத்துப் பாலிலுள்ள குறட்பாக்களின் கருத்துக்களும் தொடர்மொழிகளும் அல்லாமல், அறத்துப்பால், பொருட்பால் ஆகிய பகுதிகளிலுள்ள குறட்பாக்களின் கருத்துக்கள் பேரளவில் சிறப்பாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளன. சற்

றேறக்குறைய எழுபது இடங்களில் திருக்குறளின் கருத்துக்கள் கலித்தொகையில் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் கால்பகுதி கபிலரால் இயற்றப் பெற்றதாகக் கருதப் பெறும் 'குறிஞ்சிக் கலியில்' காணப்பெறுகின்றன.

## (2) புறப்பொருள் இலக்கியங்கள்

ஒருவனும் ஒருத்தியும் சேர்ந்து வாழும் வாழ்க்கையில் பெற்ற அனுபவத்தைப் புறத்தார்க்குப் புலனாகுமாறு எடுத்துரைப்பன வெல்லாம் 'புறப் பொருளெனப்' போற்றப் பெறும். அறம், பொருள் ஆகியவற்றின் பல் வேறு கூறுகளும் அதனுள் அடங்கும். எட்டுத்தொகை நூல்களுள் 'புறப்பொருள்' பற்றியன இரண்டு. ஒன்று புறநானூறு; மற்றொன்று பதிற்றுப்பத்து. இவை இரண்டும் அல்லாமல் பாட்டு வகையால் தொகுக்கப் பெற்ற 'பரிபாடல்' என்றொரு நூலும் இருக்கிறது. அத்தொகை நூலில் தெய்வங்களைப் பற்றிய பாடல்களே பெரிதும் இடம் பெற்று இருப்பதால், அதையும் நாம் புறப் பொருள் பற்றியதாகவே கொள்ளலாம்.

### (அ) புறநானூறு

பண்டைத் தமிழக வரலாற்று நிகழ்ச்சிகளின் களஞ்சியமாக விளங்குவது புறநானூறு. சங்ககாலத் தமிழகத்து அரசர்களின் வீரமும், கொடைத்திறனும் இந்நூலில் இனிது எடுத்துரைக்கப் பெற்றுள்ளன. மேலும், அக்காலத்திய மக்களுடைய வாழ்க்கை முறை, நாகரிகம், பண்பாடு, வாணிகம் போன்ற பிற செய்திகளும் கற்பவர் உள்ளத்தைக் கவரும் வகையில் இந்நூலில் பாடப் பெற்றுள்ளன. அவை அனைத்தும் தன்னுணர்ச்சிப் பாடல்களாக அமைந்துள்ளன. நானூறு பாடல்களைக் கொண்ட இந்நூலுள் திருக்குறளின் கருத்துக்களும் தொடர் மொழிகளும் பொன்னே போல் போற்றப்பட்டுள்ளன.

மனித வாழ்க்கையில் அறமே முதன்மையானது. மனிதன் அறநெறியில் நின்று பொருளை ஈட்டவேண்டும். அதை அறவழியில் செலவழித்து இன்பம் துய்க்க வேண்டும். அவ்வாறு அறநெறியில் ஒழுகுவதால் உண்டாகும் இன்பமே சிறந்தது; போற்றத்தக்கது என்பது வள்ளுவரின் கொள்கையாகும்.

*''சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூங்(கு)*
*ஆக்கம் எவனோ உயிர்க்கு''* (குறள்-31)

*''அறத்தான் வருவதே யின்பம்மற் றெல்லாம்*
*புறத்த புகழு மில''* (குறள்-39)

இவ்விரு குறட்பாக்களின் கருத்தையும் சுருக்கி இரண்டு தொடர்களில் கோவூர் கிழார்,

*''சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்*
*அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல''*
(புறம். 31)

என்று சிறப்பித்துள்ளமை இங்குக் கருதத் தக்கதாகும்.

ஒருவர் நமக்குச் செய்த உதவியை மறவாமல் நன்றியுணர்வோடு அவர்களைப் போற்றி நாம் வாழவேண்டும் என்று வள்ளுவர் அறிவுறுத்தும் குறட்பாவை அறியாதார் தமிழ் கூறும் நல்லுலகில் இல்லை எனலாம்.

*''எந்நன்றி கொன்றார்க்கும்*
*உய்வுண்டாம் உய்வில்லை*
*செய்ந்நன்றி கொன்ற மகற்கு''*
(குறள்-110

என்ற குறட்பாவின் கருத்தினை ஆலத்தூர் கிழார் என்ற புலவர் பெருமான்,

*''நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன்*
*செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென*
*அறம்பா டிற்றே ஆயிழை கணவ!''* (புறம். 34)

என்று விரித்துரைக்கின்றார்.

பிள்ளையைப் பெற்றவுடன் ஒரு தாய் அடையும் மகிழ்ச்சியைவிட, அப்பிள்ளையைச் 'சான்றோன்' என்று உலகம் போற்றுகின்ற பொழுது அவள் பெரும்மகிழ்ச்சியுறுவாள் என்று வள்ளுவர் குறிப்பிடுகின்றார்.

*'ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்*
*சான்றோன் எனக்கேட்ட தாய்''* (குறள் 69)

இதைப் புறநானூறு,

''ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே'' (புறம். 278)

என்று எடுத்துரைக்கின்றது.

குழந்தைகளின் மழலை மொழியின் சிறப்பை வள்ளுவர்,

*''குழலினிது யாழினிது என்பதம் மக்கள்*
*மழலைச்சொல் கேளா தவர்''* (குறள். 66)

என்று பாராட்டுகிருர். இக்கருத்தினை, ஔவையார்,

"யாரொடுங் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருளறி வாரா வாயினுந் தந்தையர்க்கு
அருள்வந் தனவாற் புதல்வர்தம் மழலே"
(புறம். 92)

என்று விரித்துரைத்துள்ளார்.

இதைப்போன்று,

"நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின்
நீங்கின் அதனைப் பிற" (குறள்-495)

என்ற குறட்பாவின் கருத்தை,

"போற்றுமின் மறவீர் சாற்றுதும் நும்மை
ஊர்க்குறு மாக்கள் ஆடக் கலக்கும்
தாட்படு சின்னீர்க் களிறட்டு வீழ்க்கும்
ஈர்ப்புடைக் கராஅத் தன்ன வென்வேல்
நுண்பல் கரும நினையாது
இளையனென் றிகழிற் பெறலரி தாடே"
(புறம். 104)

என்று ஔவையார் தெளிவுறுத்தியுள்ளார்.

தன்னை நாடிவருகின்ற புலவர், பாணர் முதலியோரின் வரிசையறிந்து, அரசன் அவர்களைப் போற்றிப் பரிசு அளிக்க வேண்டும் என்பதை,

"பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்" (குறள்-528)

என்று வள்ளுவர் அறிவித்துள்ளார்.

இக்கருத்தைக் கபிலர் என்ற புலவர்,

"பலரும் வருவர் பரிசில் மாக்கள்
வரிசை யறிதலோ வரிதே பெரிதும்
ஈத லெளிதே மாவண் டோன்றல்
அதுநற் கறிந்தனை யாயிற்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே"
(புறம். 121)

என்று விரிவாக விளக்கியுள்ளார்.

## (ஆ) பதிற்றுப்பத்து

புறப்பொருள்பற்றிய நூறு பாடல்களைக் கொண்டது இந்நூல். சேரவேந்தர்கள் பதின்மரைப் பத்துப் புலவர்கள் பப்பத்துப் பாடல்களால் போற்றிப் பாடியமையால் இந் நூல் பதிற்றுப்பத்து என்ற பெயர்பெற்றது. இந்நூலின் முதற்பத்தும், பத்தாம் பத்தும் கிடைக்கவில்லை. இந்நூலில் உள்ள ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் துறை, வண்ணம், தூக்கு, பெயர் என்பனவற்றை அறிவிக்கும் பழைய குறிப்புகள் உள்ளன.

வீரர்களை "வில்லேருழவர்" (குறள் 871) என்று வள்ளுவர் குறிப்பிட்டுள்ளமை நாம் யாவரும் அறிந்த செய்தியாகும். இதைப் "படையேர் உழவர்" (பதிற். 14) என்றும், "வில்லேர் உழவர்" (பதிற் 40) என்றும் பதிற்றுப் பத்தில் வழங்கப்பட்டுள்ளதை நாம் காணலாம்.

பிரிந்துசென்ற தலைவனை வழிமேல் விழி வைத்துத் 'திரும்பி வருவாஞ' என்று ஆவலோடு பல நாட்கள் தலைவி எதிர் பார்த்து, ஒளியிழந்த கண்ணேடு துன்புறுகிருள். அவன் பிரிந்து சென்ற நாட்களைக் கணக்கிடுவதற்கு நாள்தோறும் சுவரில் நகத்தினுல் கோடிட்டுக் கோடிட்டு அவளுடைய கைவிரல்களும் தேய்ந்துவிட்டன என்ற கருத்தை,

"வாளற்றுப் புற்கென்ற கண்ணும் அவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்" (குறள்-1261)

என்று வள்ளுவர் குறிப்பிடுகின்ருர்.

பதிற்றுப் பத்தும் அத்தகைய தலைவியரை,

'நெடும ணிஞ்சி நீணகர் வரைப்பி
னோவுறழ் நெடுஞ்சுவர் நாள்பல வெழுதிச்
செவ்விரல் சிவந்த வவ்வரிக் குடைச்சூல்
அணங்கெழி லரிவையர்" (பதிற்று. 68)

என்று நமக்குச் சொல்லோவியமாகத் தீட்டிக் காட்டுகிறது.

'பிரிந்து சென்ற தலைவரைக் கனவில் காண்பதனுல்தான் நான் இன்னும் உயிருடன் வாழுகின்றேன்' என்று தலைவியொருத்தி,

"நனவினுல் நல்கா தவரைக் கனவினுல்
காண்டலி னுண்டென் னுயிர்" (குறள்-1213)

என்று கூறுவதாக வள்ளுவர் ஒரு குறட்பாவை அமைத்துள்ளார். இக்குறளின் கருத்தினைப் பெருங்குன்றூர் கிழார்,

"கனவினும் பிரியா வுறையுளொடு...
மீனொடு புரையுங் கற்பின்
வாணுதல் அரிவை" (பதிற். 89)

என்று எடுத்தியம்பியுள்ளார்,

## (இ) பரிபாடல்

இசைப்பாவாகிய பரிபாட்டினுல் பாடப்பெற்ற இந்நூல் முழுவதும் கிடைக்கவில்லை. கிடைத்துள்ள இருபத்திரண்டு பாடல்களுள் திருமாலைப்பற்றி ஆறும், முருகனைப் பற்றி எட்டும், வையை ஆற்றைப்பற்றி எட்டும் பாடப்பெற்றனவாக உள்ளன. இந்நூலில் நான்கு இடங்களில் திருக்குறளின் கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன.

அரசருக்கு ஒற்றர்கள் கண்களைப் போன்று மிக இன்றியமையாது தேவைப் படுபவராவர். இதை வள்ளுவர்,

"ஒற்று முரைசான்ற நூலு மிவையிரண்டும்
தெற்றென்க மன்னவன் கண்" (குறள் 581)

என்று குறிப்பிட்டுள்ளார்.

பாண்டிய மன்னனுக்குக் கண்போன் றிருந்த அதிகாரிகளை,

"கடனறி காரியக் கண்ணுவ ரோடு" (பரி. 19: 23)

என்று பரிபாடல் சுட்டுகிறது.

நல்ல குடியில் பிறந்தவன் தன்னை நாடிவந்து 'பொருள் இல்லை; வறுமையால் வாடுகிறேம், என்று இரவலர் கூறுகின்ற பொழுது, தன்னுடைய வறுமைத்துன்பத்தை அவர்களிடத்துக் கூருது, தன்னல் இயன்ற உதவியைச் செய்வான் என்பது வள்ளுவருடைய கருத்து.

"இலனென்னும் எவ்வம் உரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள" (குறள்-223)

இதை,

"இல்லது நோக்கி இளிவரவு கூருமுன்
அல்லது வெஃகி வினைசெய்வார்" (பரி 10: 87-88)

என்று கரும்பிள்ளைப் பூதனுர் விளக்குகிருர்.

"நாணுகிய தாளினைக் கோத்த நிறையென்னும் கதவினைக் காமவேட்கையாகிய கோடரி முறிக்கின்றது. அதனுல், இனி அவை நிற்றலும் இல்லை; யான் அவற்றைப் பொறுத்தலும் இல்லை" என்று தலைவி கூறுகிருள்.

"காமக் கணிச்சி யுடைக்கும் நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு" (குறள் 1251)

மதுரை மாநகரத்து மகளிரும் இந்நிலையை அடைந்தனர் என்பதை,

"காமக் கணிச்சியாற் கையறவு வெட்டித்துச்
சேமத் திரைவீழ்த்துச் சென்றமளி சேர்குவோர்"
(பரி. 10: 34-35)

என்று பரிபாடல் கூறுகிறது. இவற்றைப் போன்று இன்னும் சில காட்டுக்களை நாம் பரிபாடலிலிருந்து காட்டலாம்.



## (3) பத்துப் பாட்டு

சங்க இலக்கியங்களுள் பத்து நீண்ட நெடும்பாட்டுக்களைக் கொண்ட தொகைநூல் 'பத்துப் பாட்டு' என்பதாகும். இதில் செம்பாதி 'ஆற்றுப்படை' என்ற துறையில் அமைந்த பாடல்களாகும். எஞ்சியவற்றுள் ஒன்று காஞ்சித்திணையில் அமைந்தது. மற்றவை முல்லை, குறிஞ்சி, பாலைத் திணைகளைக் கருப்பொருளாகக் கொண்டனவாகும். பிற்காலப் பொருள் தொடர்நிலைச் செய்யுள்களாகிய காப்பியங்களுக்கு இப்பாடல்கள் முன்னேடிகளாக அமைந்துள்ளன. இத்தொகையின் ஆருவது பாட்டாகிய 'மதுரைக் காஞ்சி'யை வீரகாப்பிய மரபில் தோன்றிய 'குறுங்காவியம்' என்று நாம் கூறலாம். 'நெடுநல்வாடை' என்ற ஏழாவது பாட்டு உலக இலக்கியச் செல்வத்தின் முதல்வரிசையை அணிசெய்யத்தக்க சிறப்பு மிக்கதாகும்.

இந்நூலினுள் இடம்பெற்றுள்ள குறட்பாக்களுள் மூன்றினை நாம் இங்குக் காணலாம்.

(1) "பொதுநோக்கான் வேந்தன்
வரிசையா நோக்கின்
அதுநோக்கி வாழ்வார் பலர்"
(குறள்-528)

"வரிசை யறிதலும் வரையாது கொடுத்தலும்
பரிசில் வாழ்க்கைப் பரிசிலர் ஏத்த"
(சிறுபாண்: 217 - 218)

(2) "ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்ல(து)
ஊதியம் இல்லை உயிர்க்கு" (குறள்-231)

"......................விழுநிதி
யீதல் உள்ளமோ டிசைவேட் குவையே"
(மதுரைக். 204-205)

(3) "வித்தும் இடல் வேண்டுங்
கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்" (குறள்-85)

"விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை
நின்னோ டுண்டலும் புரைவதென் றாங்கு"
(குறிஞ்சி. 206-207)

இவ்வாறு சங்க நூற்களில் குறட்பாக்களையும், அவற்றின் தொடர்மொழிகளையும் தம் பாக்களில் எடுத்தாண்ட புலவர் பெருமக்கள் பல்வேறு காலத்தில் பல்வேறு இடங்களில் வாழ்ந்தவராவர். அவர்களுடைய உள்ளங்களையெல்லாம் திருக்குறள் கவர்ந்திருக்கிறது என்பதற்கு மேற்கண்ட காட்டுக்களே போதிய சன்றுகளாகும். இவற்றிலிருந்து சங்ககாலத்திலேயே திருக்குறள் சிறப்புமிக்கதோர் அறநூலாகப் பெருவாழ்வு பெற்றிருந்தமை புலனுகின்றது.

# நவரத்தினங்கள்

[திரு. கே. ஆர். எஸ். மணி]

கோயமுத்தூரில் திரு கே.இராம கிருஷ்ணபிள்ளைக்கும் திருமதி ஜானகியம்மாளுக்கும் 29-7-1927 இல் தோன்றியவர் இவர். கோவை நகராண்மை உயர்நிலைப் பள்ளியிலும் பூ. சா. கோ. கலைக் கல்லூரியிலும் படித்தவர். தம் தந்தையாரின் தொழிலான தங்க வைர நகை வணிகத்திலும் பெட்ரோல் விற்பனையிலும் இவரும் ஈடுபட்டுள்ளார். கோவையிலுள்ள 'கே ஆர் அண்டு சன்ஸ்' நிலையத்தின் பங்காளர். கல்லூரியில் படிக்கும்பொழுதே மாணவர் மன்றத்தில் தலைவராகத் திகழ்ந்து



பேச்சிலும் எழுத்திலும் சிறப்புப் பெற்று விளங்கினர். 'பேரூர் சிறப்பு' 'நாடகமும் நடிப்புக்கலையும்' போன்ற கட்டுரைகள் பல வற்றை எழுதியுள்ளார். அண்மையில் ஜப்பானில் நடைபெற்ற 'எக்ஸ்போ' கண் காட்சிக்குச் சென்று வந்து 'எக்ஸ்போ 70-பசுமை நிறைந்த நினைவுகள்' என்ற தலைப்பில் சுவையான கட்டுரை எழுதியுள்ளார். கோவை இளங்குற்ற வாளிகள் நீதிபதியாகவும் பொன், வெள்ளி நகை தயாரிப்போர் சங்கத்தின் செயலராகவும் திகழ்கிருர்.

நவரத்தினங்களின் பிறப்பிடங்கள் பல. பரந்து கிடக்கும் இப்புவி எங்கும் மறைந்து கிடக்கின்றன. நீரிலும் நிலத்திலும் நிலவி முத்துக்கள், இரத்தினங்கள், என விலை மதிக்க வொண்ணுத அரும்பொருள்களாகத் திகழுகின்றன.

மேல் நாட்டினரும் மதிப்பு மிக்க இரத்தினங்களை (Precious Gems) என்றும் மற்றவற்றை உபரத்தினங்கள் (Semi Precious Stones) என்றும் சிறப்பாகக் கூறுவர்.

பொதுவாக நாம் இரத்தினங்களைக் ''கல்'' என்றே குறிப்பிடுகின்றோம். ஆனல் முத்தும் பவளமும் கல் இனத்தைச் சார்ந்தவை அன்று. நவரத்தினங்கள் என்று ஒன்பது மணிகளை மிகச் சிறப்பாகப் போற்றி வருகின்றோம். எனவே நவமணிகள் என்பன :—

1. வைரம் (Diamond)
2. முத்து (Pearl)
3. மரகதம் (Emerald)
4. மாணிக்கம் (Ruby)
5. நீலம் (Sapphire)
6. புஷ்பராகம் (Topaz)
7. வைடூரியம் (Cat's Eye)
8. கோமேதகம் (Chinnamon)
9. பவளம் (Coral)

ஒன்பது மணிகளும் ஒன்பது கிரக நாயகர்களுக்குரியவை என்று காலக் கணித நூல் கூறுகிறது. நவமணிகளை அணிவதால் நவக்கிரக வழிபாட்டின் பயனைப் பெறலாம்.

| | | |
|---|---|---|
| புதன்<br>மரகதம் | சுக்கிரன்<br>வைரம் | சந்திரன்<br>முத்து |
| குரு<br>புஷ்பராகம் | சூரியன்<br>மாணிக்கம் | செவ்வாய்<br>பவளம் |
| கேது<br>வைடூரியம் | சனி<br>நீலம் | ராகு<br>கோமேதகம் |

நவமணிகளின் குணங்களும் குற்றங்களும்

நவமணிகள் உள்ளே வெடிப்பின்றி நல்ல தெளிவான நிறம் பெற்று, கீறல்,

புள்ளி. நுரை இன்றி அழகிய வடிவங்கள் உடையவாய் உயர்ந்த ஒளியுடன் விளங்குபவை சிறந்தன. இம்மணிகளை அணிவோர்க்குச் செல்வம், வன்மை, புகழ், நீண்ட ஆயுள் ஆகிய நான்கும் மிகும்.

விந்து, சுழி, உமி போன்ற புள்ளி, ஒளி நடுக்கம், ரேகை, களங்கம், முளை போன்ற புள்ளி ஆகியவை மணிகளுக்குரிய பொதுவான குற்றங்களாகும். இவை விலக்கத் தக்கவை. இவை கேடும் துன்பமும் பயமும் உண்டாக்கி மன அமைதியைக் கெடுக்கும்.

### வைரம்

நவரத்தினங்களில் தலைசிறந்ததும், விலை உயர்ந்ததும் வைரம். அழகு, நிறம், ஒளி ஆகியவற்றைப் பொறுத்து வைரத்தின் விலை வரையறுக்கப்படும்.

**வைரத்தின் குற்றங்கள் :** காகபாதம், களங்கம் (கரும் புள்ளி), விந்து (ரத்த விந்து), ரேகை (ஈக்கால்) ஆகிய இந்த நான்கும் கொடுங் குற்றங்களாகும். இவற்றை அணிதல் கூடாது. இவற்றை அணிவதால் ஆயுளைக் கெடுத்து, அச்சத்தைக் கொடுத்துச் செல்வத்தை அழித்து ஆயுதம், விடம் முதலிய பயத்தைக் கொடுக்கும்.

**வைரத்தின் தோற்றம்:** பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் நிலப்பரப்பின் மேல் மரங்கள் அடர்ந்த காடுகள் இயற்கை மாற்றத்தால், நிலத்துள் புதையுண்டு நிலக்கரிப் பாறைகளாக மாறி மேலும் அழுத்தத்தாலும் உட்டிணத்தாலும் பல மாறுதல்களுக்கு உட்பட்டு, வெறும் கரிப்பாறைகள் நாளடைவில் வைரமணிப் பாறைகளாகின்றன.

வைரங்கள் எந்தத் திரவத்திலும், கரைவதோ தேய்வதோ அழிவதோ இல்லை. சாதாரண வெப்பத்திற்கு உருகுவதோ, உடைவதோ, நிறம் மாறுபடுவதோ இல்லை. கரி, நிலக்கரி, கிராபைட், வைரம் என்பவை கரிப் பொருளின் பலவகை நிலைகளாகும். மனிதன் அறிந்தவற்றுள் மிக்க திண்ணம் வாய்ந்தது வைரமேயாகும்.

**வைரம் விளையும் இடங்கள் :** மத்திய இந்தியாவில் பண்டில்கண்ட் பகுதியில் உள்ள ''பன்னு'' என்னும் இடத்திலும் இப்போது வைரங்கள் மிகுதியாக வெட்டி எடுக்கப்படுகின்றன. மேலும் ஐதராபாத், சப்பல்பூர், வஜ்ரகரூர் (கர்நூல் ஜில்லா), பங்கன்பள்ளி ஆகிய இடங்களில் இன்றும் வைரங்கள் பூமியின் மேற்பரப்பின் மேலே காணப்படுகின்றன. கிம்பர்லி, டிபீர்ஸ், பிரிமியர், சுரஸ்தா, தென் ஆப்பிரிக்காவிலும், தென் அமெரிக்கா, பிரேஜில் நாட்டிலும், ருஷ்யாவில் சைபீரியாவிலும் பெருமளவில் கிடைக்கின்றன. வைரத்தின் சிறப்பை முதன் முதலில் அறிந்திருந்தவர்கள் நமது பாரதநாட்டு மக்களே என்று ஜெர்மெய்யின் பாதிரியார் கூறுகிறார்.

**வைரத்தின் குணங்கள், குற்றங்கள், பரீட்சை:** வைரத்தின் குணம், குற்றம், தரம் இவைகளை நன்கு தெரிந்துகொள்ளாமல் அணிதலும் விலை மதித்தலும் கூடாது. இரத்தின லட்சண சாத்திரத்தை, நன்கு தெரிந்து கொள்ளாமல், வைரத்தை மதிப்பிடுகிறவனுக்கும், சிநேக பந்தத்தாலோ, அரச பயத்தாலோ, மட்டமான வைரத்திற்கு உயர்ந்த விலையும், சிறந்த வைரத்துக்குக் குறைந்த விலையும் கூறுகின்றவனுக்குப் பெரும்கேடுகள் ஏற்படும் என்று ''இரத்தின பரீட்சை'' என்ற நூல் விளக்குகிறது.

### முத்து

நவரத்தினங்களில் வைரத்தை அடுத்துச் சிறப்புப் பெற்றது முத்து. பண்டைக் காலத்திலேயே தமிழ்நாட்டின் பெருமையை ஏனைய நாடுகளெல்லாம் நன்குணரும்படி செய்தது முத்தே. இந்திய நாட்டுக்கு வந்து சென்ற கிரேக்கர்கள், அராபியர்கள், ரோமானியர்கள், வெனிஸ் வணிகர்கள் ஆகியோர் இந்த நாட்டு முத்துக்களைச் சிறப்பாகக் கொண்டாடினார்கள். தமிழ் நாட்டுக்கும் பிற நாட்டுக்கும் வணிகத் துறையில் தொடர்பு கொள்வதற்குக் காரணமாக இருந்தது முத்துக்களே.

**தோற்றம் :** முத்துக்களின் மூலப்பொருள் சுண்ணாம்புச் சத்து. முத்துச் சிப்பியின் உள்ளுடல் மெல்லிய தசையாலானது. கடினமான சிறு மண்துாள்களைச் சீரணிக்கச் செய்யும் சக்தி அதற்கில்லை. சிப்பிகளின் வயிற்றுக்குள் மண்துாள் புகுந்து கொண்டால் உள்ளுடலில் அதனைச் சுற்றிக் கடினமான தசை வளரும். அது காலப்போக்கில் கடின

மான பொருளாகிவிடும். முத்துச் சிப்பி ஒரு வகை உயிர். ஆகவே உள்ளே புகுந்த மண் தூளைச் சுற்றிலும் தசை வளர்ந்த போது அதுவே கெட்டியான, ஒளி மிகுந்த முத்தாகிறது.

**முத்துக்குளிக்கும் இடங்கள் :** இலங்கையில் தலைமன்னார் என்னும் இடம் பழைமையும், பெருமையும் வாய்ந்தது. இதனை அடுத்துக் கொற்கைக்கும் தூத்துக்குடிக்கும் (சூசிக் கரை) இடையே முத்துக் குளிக்கும் தொழில் நடைபெற்று வருகிறது.

பாரசீக வளைகுடாவில் கிடைக்கும் முத்துக்கள் மஞ்சள் கலந்த பழுப்பு நிறத்தவை. விலையும் குறைவு. சூலு (ZULU) கடற்கரை, ஆஸ்திரேலியக் கடற்கரை, மத்திய அமெரிக்கத் தென்பசிபிக் தீவுகள் ஆகிய இடங்களிலும் முத்துக்கள் கிடைக்கின்றன.

நமது தமிழ்நாட்டுக் கடற்கரை முத்துக்களே வெண்மையும், ஒளியும் மிக்கவை. ஆகவே தரத்தில் உயர்ந்து விலை அதிகம் பெறுகின்றன.

வெண்மை, செம்மை, மஞ்சள், கருமை நிற முத்துக்கள் சந்திரனுக்கு இன்பம் பயக்கும். மஞ்சள் செல்வத்தையும், சிவப்பு அறிவையும், வெண்மை புகழையும், நீலம் (கல்ச்சர்) துன்பத்தையும் கொடுக்கும்.

**செயற்கைமுத்துக்கள்:** மிகிமோடோ என்ற ஜப்பானியர் தாமே ஆராய்ச்சி செய்து சிறிய கண்ணாடி, மணி போன்ற பொருள்களைச் சிப்பியின் உடலில் புகுத்தி 3 அல்லது 4 வருடங்களுக்குப் பிறகு சிப்பிகளைச் சோதித்துச் செயற்கை மணியைச் சுற்றிப் படலம் படலமாக வட்ட அடுக்குகள் அமைந்த கோளங்கள் முத்தாகப் பரிணமிப்பதைக் கண்டுபிடித்தார். எனவே சிப்பியின் வயிற்றில் சுரக்கும் பசை போன்ற திரவம் நாளடைவில் முத்தாக மாறுகிறது என்று கண்டு முத்துச் சிப்பிப் பண்ணை நிறுவிப் பொருளாதார வளமும், செல்வமும் பெருக்க அடி கோலினார். நாமும் முயற்சி செய்தால் இந்தத் தொழிலில் பலவகையில் பயன் பெற்று முன்னேற முடியும் என்பது திண்ணம்.

## மரகதம்

பச்சையாக உள்ள மணிக்கு மரகதம் என்று பெயர். இதனைப் '' பச்சை '' என்றே வழங்குவதுண்டு. மற்ற மணிகளைவிட இது மிருதுவானது. சுலபத்தில் உடைந்து தெறிக்கும் தன்மையுள்ளது. எனவே வைர அணிகளின் நடுவில் மரகதம் நடுநாயகமாக அமைக்கச் சுத்தமான பசும்பொன்னில் பதித்து அழகு செய்யப்படுகிறது.

நல்ல பச்சை நிறமும், தெளிவான நீரோட்டமும் உள்ளவை விலைமதிக்க ஒண்ணாதவையாகும். சூரிய ஒளி மரகதத்தின் மீது பட்டால் ஒப்பற்ற மரகதமணியில் உண்டாகும் ஒளி அதன் பக்கங்களிலுள்ள எல்லாப் பொருள்களையும் பச்சை வண்ணத்துடன் கோலமூட்டும் தன்மையது. சாதாரணப் பச்சைக் (கண்ணாடி) கல்லில் இத்தன்மை இராது.

**மரகதத்தின் வகைகளும் நிறங்களும் :** பாசிக் கொத்தின் நிறம் உள்ளதாய், ஓட்டை, கொப்புளம், வெடிப்பு, நுரை, புகை போன்ற படலம் முதலிய தோட மற்றதாயுள்ள மரகதம் எல்லா வகையான நஞ்சுகளையும் முறிக்கும் தன்மைபெற்றது.

மயில் தோகை, நீலநிறப் பறவையின் சிறகு, சிக்கிமுக்கிக்கல், பாசிக்கொத்து, மின்மினிப் பூச்சியின் பின் சிறகு, கிளிக் குஞ்சின் செட்டை, பசும்புல், வாகைப்பூ ஆகிய எட்டுப் பொருள்களின் நிறங்கள் சிறந்த மரகத மணியின் நிறங்களாகும்.

**மரகதம் கிடைக்கும் இடங்கள் :** நம் நாட்டில் ராஜபுதனத்திலுள்ள ஜெய்ப்பூர், காசுமீரம் ஆகிய இடங்களில் நல்ல மரகதம் கிடைக்கின்றன. ஜெய்ப்பூர் பச்சைகள் வெளி நாடுகளில் நல்ல மதிப்பும் அதிக விலையும் பெறுகின்றன.

**நோய் தீர்க்கும் மரகதம் :** பண்டைக் காலத்து வைத்திய சாத்திரத்தில் மரகத மணியின் பல உயர்ந்த குணங்கள் சிறப்பிக்கப்பட்டுள்ளன. வயிற்றுக் கடுப்பைக் குணப்படுத்தியும், மகளிர் சுகப்பிரசவத்திற்கு உறுதுணையாக நின்றும், பேய்பிசாசு முதலியவற்றை அணுகவிடாத தன்மையும், மேலும் கண்நோய்களைப் போக்கிக் கண்களுக்குப் பார்

வையும், விஷத்தை முறிக்கும் தன்மையும், மேக நோயைப் போக்கும் தன்மையும் உண்டு என்று " இரத்தினதீபிகை " என்ற நூல் விளக்குகிறது.

மரகதப் பரீட்சை : மரகதக் கற்களை உரைகல்லில் தேய்த்தால் செயற்கையாயின் சிதறும் : இயற்கையாயின் தேயாது ஒளியும் குன்ருது விளங்கும். மேலும் "மரகதக் கண்ணுடி"யின் வாயிலாகச் சாதி மரக தத்தைப் பிரகாசமான ஒளியில் சோதித்துப் பார்த்தால் இயற்கையாயின் ஆரஞ்சு பழுப்பு நிறத்துடன் காணும். செயற்கையாயின் பச்சையாகவே தோன்றும். இந்தச் சோதனை முறைக்கு "(EMERALD CLASS TEST)" என்று பெயர்.

மாணிக்கம்

சிவப்பு நிறமுள்ள மணியை மாணிக்கம் என்று சொல்வதுண்டு. " கெம்பு " அல்லது "சிவப்பு" என்றும் வழங்குகிறோம். இதனை இரத்தினங்களின் அரசன் என்று வடமொழி நூல்கள் கூறுகின்றன.

குற்றமும் குணமும் : துளை, கரடு, மங்கல், விகாரம், சிதறிய ஒளி, அவல் வடிவம், இலேசு, கோணல், நசனை போன்ற தோட முள்ள மாணிக்கக் கற்களை வீட்டில் வைத் திருப்பதும் கூடாது.

அழகிய நிறம், கனம், மாசு இல்லாமல் நல்ல தெளிவான நீரோட்டம் கோணம் ஆகியவை மாணிக்கத்தின் சிறந்த குணங் களாம். இவற்றை அணிவதால் ஆயுள் நீடிக்கும். மனமயக்கம் தீரும். உடல் ஒளிபெற்று விளங்கும் என்று முன்னோர் நம்பினர். பருமன் அதிகமாக ஆக விலையும் கூடும். இத்தகைய மாணிக்கங்கள் மிக எளிதில் கிடைப்பதில்லை.

மாணிக்கம் கிடைக்குமிடங்கள் : சிங்களத் தில் உண்டாகும் சிவப்புநிற மாணிக்கம் ஒளியிலும் தரத்திலும் சிறந்து விலை மதிப் புள்ளதாகும். பர்மாவில் மாண்டலேக்கு வடக்கே மோஹாக்கிலும், ஏராளமான மாணிக்கக் கற்கள் வெட்டி எடுக்கப்படு கின்றன. இந்தியாவில் காசு மீரத்திலும் சிவப்பு மாணிக்கங்கள் சிறிய அளவில் கிடைக்கின்றன.

மாணிக்கப் பரீட்சை அல்லது சோதனை: புரு ரத்த நிறமுள்ளது சிறந்த மாணிக்கமாகும். கல்லில் தேய்த்தோ அல்லது தண்ணீரில் கொதிக்க வைத்தோ இதைப் பரிசோதித் தால் செயற்கையாயின் நிறம் குன்றும், இயற்கையாயின் நல்ல சுடர்விட்டுப் பிரகாசிக்கும் என்று வல்லுநர் கூறுவர்.

நீலம்

நீல மணிகள் இருவகைப்படும். கனமாக உயரமாக இருந்து கருமையான ஒளிவீசும் தன்மையது இந்திர நீலம் எனப்படும். சிவப்பு ஒளியை உள்ளடக்கிய நீலம் சல நீலம் எனப்படும்.

(மயில் பீலி நிறம்) கருநீல நிறம். கனம், பளபளப்பு, நீரோட்டம், மிருதுத் தன்மை, நடுவில் ஒளி வீச்சு, கோணம் முதலிய ஏழு அம்சம் பொருந்தியவை மிகவும் சிறந்தவை. முழுவதும் நீலமாக முற்ருது. ஒருபாதி அல்லது பகுதி நீல நிறம் உள்ளது, கனமற்றது, சிறிது செந்நிறம் கலந்தது, அவலைப்போன்றது, பளப்பளப் பில்லாதது என்பவை "சில நீலங்களின்" வகைகளாகும். இவற்றை " இரத்த கந்தி" நீலம் என்றும் குறிப்பிடுவதுண்டு.

நீல மணியின் குணமும் குற்றமும் : நிறம் ஏருதது, ஒளி அற்றது, சொரசொரப்பானது, வெட்டுப்பட்டது, புள்ளிகள் உள்ளது, உடைந்தது, அழுக்கு மணல் உள்ளது, பலவித நிறமுள்ளது, குறிப்பாக மஞ்சள் நிறம் கலந்து விலக்கத் தக்கனவாகும்.

நீலம் கிடைக்கும் இடங்கள் : கொழும்பில் இரத்தினபுரியிலும் ரக்வானு மட்டதாரா என்னும் இடங்களிலிருந்து கண்டு பிடித்து எடுக்கப்படுகிறது. சயாமில் உள்ள "பாட்டம் பாங்க்" என்னும் இடத்திலும் நீலமணிகள் கிடைக்கின்றன. மேல் பர்மா வில் நீல மணிகள் கிடைக்கின்றன. இவற்றைப் பர்மா நீலம் என்பர். இவை தரத்தில் உயர்ந்தவை. விலை மதிப் புள்ளவை.

புட்பராகம்

வைரத்தைப் போன்று சிறிது மஞ்சள் கலந்த வெண்மையாகச் சுற்றிலும் ஒளிவீசி மனதைக் கவரும் இயல்புடையது.

புட்பராகத்தை அணிபவர் உடலில் நோய் வருமுன் நிறம் மாறி ஒளிகுன்றி முன்பே தெரிந்துகொள்ள வாய்ப்புள்ளதென்றும், இவற்றை அணிவதால் செல்வம் வளரும், நல்ல தெளிந்த சிந்தனையும், தீயவைகளுக்கள் ஏற்படாதவாறு தடுக்கும் எனவும் முன்னோர்கள் நம்பிக்கையுடன் பூசனை புரிந்து வந்தனர் என இளங்கோ அடிகள் கூறியுள்ளார்.

புட்பராகத்தின் குணமும் குற்றமும்: தங்க நிறம் உடையதும் வட்ட வடிவமானதும், நெருப்புத் துண்டம்போல ஒளிர்வதும், கண்டோர் மனதைக் கவர்ந்தீர்ப்பதும் ஆகிய இவையாவும் நல்ல புட்பராகங்களின் குணங்களாகும். கருமஞ்சள் நிறமுள்ளது, கரடுமுரடானது, ஒளியற்றது, மந்தமானது, நாசனையுடன் இருப்பது, கஞ்சி போன்ற படலம் கொண்டது நீக்கத் தக்கனவாகும்.

புட்பராகம் கிடைக்கும் இடங்கள்: தென் அமெரிக்காவில் பிரேசில் நாட்டிலும் கிழக்கு சைபீரியாவிலும், வடக்கு நைஜீரியா, ஆஸ்திரேலியாவில் டாஸ்மேனியா, நியூ இங்கிலாந்திலும் பெருமளவில் கிடைக்கின்றன. மற்ற எல்லாவற்றிலும் பிரேசில் நாட்டு Capas Do Lane மலைச் சரிவில் கிடைக்கும் புட்பராகமே சிறந்தது. எனவே இவ்வகையை "Imperial Topaz" என்று சிறப்பாகக் கூறுவர்.

வைடூரியம்

வைடூரியம் வெண்மையான ஒளி ரேகையுடன் முற்றிய வேப்பங்கனியின் நிறம் அல்லது பழுப்பு நிறம் கொண்டு வட்டமாகவோ, நீள வட்டமாகவோ இருக்கும். மேலும், கனமும் ஒளியும் வழவழப்பான மேற்பரப்பும் கூடியதாகும்.

வைடூரியத்தின் குணமும் குற்றமும்: வைடூரியத்தில் சுழலும் வெண்மையான நூலிழை போன்று எப்பக்கம திரும்பினுலும் அப்பக்கம் ஒளி தோன்றி வீசும் இதனை, 'நூலோட்டம்' என்று கூறுவார்கள். இந்த நூலிழைக் கோடுகள் அங்குலத்திற்கு 65,000 வரை இருக்கும். இதனை உருவாக்கும்போது காப்பிக் கொட்டையின் வடிவம் போல நூலிழை நடுநாயகமாக அமைந்து ஒளி வீசுமாறு உருவாக்குகின்றனர். இந்த நூலிழைக் கோடுகள் எவ்வளவுக் கெவ்வளவு குறுகலாகவும், கூர்மையாகவும் உள்ளதோ அவ்வளவுக் கவ்வளவு சிறந்தது; விலை மதிப்பு உள்ளது; நல்ல பலனைக் கொடுக்க வல்லது.

கருமையான நீர்த்த நிறம், கலங்கிய நீர் போன்ற நிறம் பலகையாக இருத்தல் கனமின்மை, சொர சொரப்பு, தெளிவற்ற நூல் படலம் ஆகியவை வைடூரியத்தின் குற்றங்களாகக் கூறப்படுகின்றன.

வைடூரியத்தின் நிறங்கள்: மஞ்சள் கலந்த கருப்பு நிறமுள்ளது, சிவப்புக் கலந்த நீல நிறமுள்ளது, வெண்மையான சாம்பல் நிறமுள்ளது என மூன்று வகை நிறமணிகள் உண்டு.

கோமேதகம்

கோமேதகம் என்பது பசுவின் சிறுநீர் நிறத்தை ஒத்திருப்பதால் கோ-மேதகம் என்று பெயர் பெற்றது. இம்மணி மஞ்சளும் சிவப்பும் கலந்தது போன்ற நிறமுடையது. இஃது Beryl இனத்தைச் சார்ந்த தென்று பூகர்ப்ப வல்லுநர்கள் குறிப்பிடுகின்றனர்.

கோமேதகத்தின் குற்றமும் குணமும்: நல்ல தெளிவான பசுவின் சிறுநீரின் நிறம் உள்ளது, மாசு இன்றிச் சுத்தமானது பளபளக்கும் ஒளியுடையது, அழுத்தமானது, கனம் மிக்கது, மேடு பள்ளம் அற்றுச் சமனாக விளங்குவது, இவை நல்ல இலக்கணம் வாய்ந்த கோமேதகங்களாகும்.

மேலும் தேன் சொட்டுப்போன்ற நிறம் பசு நெய்யின் நிறம், தங்கம் போன்ற நிறம், சிவப்பு நிறத்துடன் கூடிக் குற்றமற்ற மனோஹரமானது அணிபவர்கள் தூய மனத்தினராகிப் பாவங்கள் நீங்கிச் சுகம் பெறுவர்.

மங்கிய நிறம், கனமற்று இலேசாக விளங்கி மேடு பள்ளமாக இருத்தல், உப்புக் கசிதல், பாசிபோல் படர்ந்திருத்தல், ஒளியற்றிருத்தல், உருக்குக் கல்போல இருத்தல் கோமேதகத்தின் குற்றங்களாகும்-இவற்றை அணிதல் கூடாது.

கோமேதகம் கிடைக்குமிடங்கள்: புவி எங்கும் பரவிக் கிடக்கும் Pegmatite என்ற பாறை இனங்களில் கூழாங்கற்களுடன்

காணப்படும். ஊரல் மலைப் பிரதேசங்களிலும் சைபீரியாவிலுள்ள Netchinsk என்ற சுரங்கப் பகுதியிலும் புட்பராகப் பாறைகளுடன் கலந்து காணப்படுகின்றன. ஸ்காட்லாந்து அயர்லாந்து, கார்ன்வால் பகுதியிலும் மிகுதியாக அகப்படுகின்றன.

## பவளம்

பவளம் சிவப்பு நிறமாகச் செடி, கொடிகளைப் பின்னிப் பிணைந்த புதர்களைப்போலக் கடலில் மண்டிக் கிடப்பவை. இவை சுண்ணும்புச் சத்தும், கரிப் பொருளும் கலந்த சேர்க்கைத் தன்மை வாய்ந்தது.

பவள மணிகளை நமக்குத் தரும் உயிரினங்கள் ஆழமில்லாத கடல் பாகத்தில் கூட்டம் கூட்டமாக வசிப்பன. பவளப் பூச்சிகள் கட்டிக்கொண்ட கூடுகளே பவளமாகக் காட்சியளிப்பவை.

**பவளங்களின் நிறங்கள் :** சிவப்பு, இளஞ் சிவப்பு, வெண்மைகலந்த சிவப்பு தூய வெண்மை, கருப்பு, நீலம் என்ற நிறங்களில் பவளங்கள் அகப்படுகின்றன. பொதுவாக நல்ல சிவந்த பவளங்கள், மதிப்பும், குணமும் சிறந்தனவாகப் போற்றப்படுகின்றன.

**பவளங்களின் குணமும் குற்றமும் :** கொவ்வைக்கனி போன்ற நிறம் பெற்று, வட்ட உருண்டையான உருவ அமைப்புடன், மேடு பள்ளமில்லாமல், சொத்தைஓட்டை முதலிய காயங்களில்லாமல் பெரிய உருவு கொண்டது மதிப்பு மிக்கனவாகும்.

உள்ளே துளையுடையதாய் இருத்தல், கல்லை உடையதாக இருத்தல், வளைவு கோணல் மணியமைப்பாக இருத்தல் குற்றமுடையவையாகும். மேலும் சாம்பல் படலம் போல நிறம், குரூரமான தோற்றம் சிதைந்தன, கனமற்றவை, வெளுப்பு நிறமாக உள்ளது அணியத் தக்கவை யன்று, என்று 'இரத்தினப் பரீட்சை' கூறுகிறது.

**நோய் தீர்க்கும் தன்மையுள்ள பவளம் :** நல்ல சிவப்புடன் விளங்கும் பவளம் தனதான்யம் அளிக்கும். பவளம் பெரும்பாலும் பெண்களே அணிவதற்குரியன. பவளமாலை தரிக்கும் மங்கையர் நன்மக்கட்பேறு பெற்றுச் சிறப்பாக வாழ்வார்கள். பவளத்திற்குப் பாம்பு, தேள், நஞ்சு முதலியவற்றை முறித்துப் போக்கும் தன்மை உண்டு என்று திருவிளையாடற் புராணம் கூறும்.

**பவளங்கள் கிடைக்கும் இடங்கள் :** ஆஸ்திரேலியாவிற்கு வடகிழக்கிலும் வடமேற்கிலும் பவளப் புற்றுக்கள் சுமார் 1200 சதுர மைல் வரை பரவிக் கிடக்கின்றன. அல்ஜீரியா, மொராக்கோ ஆகிய இடங்களில் விளையும் பவளங்கள் நல்ல சிவந்தநிறம் கொண்டவை.

விலைமிக்க பவளங்கள் மத்திய தரைக் கடல் ஓரம் பரவியுள்ள தீவுகளிலும், இத்தாலியில் நேப்பிள்ஸ் அருகிலும் கார்சிகா, சார்டீனியா கடற்கரை சமீபத்திலும் நல்லதரமான பவளங்கள் ஏராளமாகக் கிடைக்கின்றன.

**பவளங்களின் விலையும் மதிப்பும் :** பலதரப் பட்ட பவளங்களுக்கு விலையிலும் ஏற்றத் தாழ்வு உண்டு. நிறம், பரிமாணம், சுத்தம் இவற்றைப் பொறுத்து விலையும் மதிப்பும் இருக்கும். இந்தியாவிலும் மத்திய ஆசியாவிலும் பவளங்கள் நல்ல விலைக்கு மதிக்கப் படுகின்றன. கீழ் நாடுகளில் அதற்குரிய தேவை குறையாமல் விரும்பி அணியத்தக்க நாகரீக வளர்ச்சிக்கு ஏற்றபடி மதிப்புடன் கூடி விளங்குகிறது.

**இரத்தினங்களின் பொது இயல்புகள் :** இரத்தினம் என்பது கெட்டியாகவும், அரியதாகவும் மிக்க ஒளி வீசும் தன்மையதாகவும் விளங்கும் தாதுப் பொருள். இரத்தினத்தின் முக்கிய குணம் அதன் உறுதியைப் பொறுத்தது. மிக்க ஒளி வீசும் பொருட்டு மெருகுப் பட்டையிடுவதற்குத் தக்க தேய்வைத் தாங்கி உறுதியுடன் விளங்குவதே இரத்தினமாகும்.

போலிக்கற்கள் புதியனவாக இருக்கும் பொழுது மிக்க ஒளியுடையனவாக இருந்து, அணிகலன்களிற் பதித்த பின் உராய்வதாலும் இரசாயன மாறுதல்களாலும் விரைவில் ஒளிமங்கி விடுகின்றன ஆனல் நல்ல இரத்தினங்கள் ஒளி குன்றுத தன்மை, உறுதி, அரிதில் கிடைத்தல் இவைமூன்று தன்மைகளே விலை மதிப்புடையனவாகக் கருதப்படுகின்றன. முத்துக்கள் உறுதியில்லாத போதினும் அவற்றின் ஒளியால், தன்மையால் அணிகலங்களை அழகுசெய்யப் பயன் படுத்துகிறோம்.

# பெரியபுராணத்திற் சைவசித்தாந்தம்

[மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர்]

தில்லையம்பதியில் சட்டையப்ப தேசிகருக்கும் வாலம்பாள் அம்மையாருக்கும் திருமகனுய்த் தோன்றியவர். இவர், 1928 இல் வித்துவான் தேர்வில் மாநிலத்திலேயே முதல்வராகத் தேறினர். சிலகாலம் உயர்நிலைப் பள்ளிகளில் ஆசிரியராகப் பணியாற்றினர். அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தின் திருக்குறள் ஆராய்ச்சித் துறையில் பணியாற்றி வருகின்ருர். சித்தாந்த தத்துவத்தில் ஆழ்ந்த பற்றுக் கொண்டவர். இலக்கண இலக்கிய அறிவு நிரம்பப்பெற்றவர். 'திருக்குறள்



உரைவளம்', 'சங்க இலக்கியச் சொற்களஞ்சியம்' போன்ற சிறந்த நூல்களைப் பதிப்பித்துள்ளார். கணபதி, முருகன், ஆடல் வல்லான் ஆகிய மூன்று வண்ண நூல்களை எழுதியவர், நன்னூல் விருத்தியுரை, திருவாசகக் குருவருள் விளக்கவுரை, திருக்கோவையார் உண்மை விளக்க உரை போன்ற அரிய நூல்களை எழுதிய உரையாசிரியர். ஏறத்தாழ ஐம்பது நூல்களின் ஆசிரியர் இவர். நுண்மாண் நுழைபுல மிக்க ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதும் ஆற்றல் பெற்றவர்.

சைவ சித்தாந்தம் பொருளியல்பு கூறி அப்பொருளை நுகர்தற்கு உரிய வழிவகைகளைக் காட்டி, நுகர்ச்சியின் இயல்பையும் சுட்டி நுகரப்படு பொருளிடத்தே நம்மைச் சேர்த்துயரவைப்பது. அவ்வுயர்வு நூனெறியான் அறிந்து உயர்வதும், பண்டாய திருவருளும் நல்லூழும் துணை செய்ய அவற்ருன் உயர்வதும் என இருதிறப்படும்.

அவற்றுள் நூனெறி ஓரளவு ஆய்வுக்கும் துணிவுக்கும் பயன்படுமேனும், ஆய்விலே ஆயுள் முழுவதையும் கழிக்கச் செய்து மாருய துணிவுக்கும் - அஃதாவது பொருளென ஒன்றில்லை என்ற துணிவிற்கும் ஏதுவாகலாம். வழி வழிவந்த நல்லூழும் - இறையருளும் உந்த உயர்வதே என்றும் வழி தவறிப் போகச் செய்யாது. உறுதியாக உண்மைப் பொருளோடு ஒன்றச் செய்யும். இத்தகைய நிலை எல்லார்க்கும் இயையக் கூடிய எளிமையதன்று. தானக ஏறமுடியாதவன் ஏற்றுவிக்க ஏறுவது போல நூனெறி தானக அறிந்துய்யும் வாய்ப்பில்லாதவனுக்கு வழிகாட்டித் துணை செய்யும். அவ்வளவே, அவ்வழியைப் பின்பற்றி உயர வேண்டியது உரனுடையான் உள்ளமே. ஆகவே, நூல் காட்டும் நெறி அறிவு நெறியே. அறிவு நெறி தேனுய் இன்னமுதமாய்த் தித்தித்தது என்று அறிதற்கும் அறிந்து ஓரளவை யுட்படுத்திச் சொல்லுதற்குமே உரியது. செயல் நெறியோ தித்தித்த வாற்றைத் தான் நுகர்ந்து, மெய்ப்பாடுகளான் பிறருக்கும் நுகர்த்துவது, செய்வன யாவும் சிவச் செயலாகப் புரிய நிற்பது. பார்க்குமிடம் எங்கும் நீக்கமற நிற்குந் தன்மையை உணர்ந்து ஒழுகச் செய்வது. இத்தகைய செயல்முறைச் சித்தாந்தத்தைத் தம் வாழ்வில் செய்து காட்டியவர்கள் திருத்தொண்டர்களாகிய அறுபத்து மூன்று நாயன்மார்கள். அவர்கள் வரலாற்றை யுணர்த்தும் திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணம் செயல் முறைச் சித்தாந்தமாம்.

செயல்முறைச் சித்தாந்தத்தை, தொண்டர் வரலாறுகளிற் ருேய்ந்து கண்டவர் சேக்கிழார். அதனுல், திருவருளும் நல்லூழும் துணை செய்ய உயரும் நெறியிலேயே தொடங்குகிருர் தொண்டர் வரலாற்றை.

ஆலால சுந்தரர் அணுக்கத் தொண்டராக இருந்தவர். பலகாலம் தொண்டு

செய்து பழுத்த மனம் உடையவர். அவருக்கு, "மாதர்மேல் மனம் வைத்தனை தென்புவி மீது தோன்றி அம் மெல்லியலாருடன், காதல் இன்பங் கலந்து அணைவாய்" என அருள் கிடைத்தது. தீதிலாத் திருத்தொண்டத் தொகைதரத் தென்றிசைப் போந்தார்; பிறந்தார்; வளர்ந்தார்; பாட்டையே அருச்சனையாகப் பாடினார், பயில் யோகபரம்பரையின் நின்றார். வெள்ளை யானையாகிய குண்டலினிமீது ஏறித் திருக்கயிலை சென்றார். அருளாளர் அருளாற் பிறந்து அருணெறியிலே ஒழுகும்போது அவர்கட்கு உலகொழுக்காகிய வரம்புகள் ஒன்றுமில்லை. அவர்கள் அருள் வெள்ளத்தில் மிதப்பவர்கள். அவ் வெள்ளத்திற்குக் கங்கேது? கரையேது? ஆதலால், இவரை முப்போதும் திருமேனி தீண்டுவார் மரபிலே தோற்றுவித்த திருவருள், இவரால் காதலின்பம் கலக்க இருக்கின்ற இருவரையும் உலகியல் கடவாமைப் பொருட்டு இவர் தோன்றிய மரபிலேயே தோன்றச் செய்திருக்கலாமே! இவரைத் திருமணம் செய்ய இருந்த புத்தூர்ச் சடங்கவியின் மகளைக் கலவாவண்ணம் செய்திருக்க வேண்டியதில்லையே. திருவருள் இயற்றிய இந்த இரு நிகழ்ச்சிகளிலிருந்தும் அருணெறி யாகிய சித்தாந்த நெறி-செயல்முறைச் சித்தாந்தநெறி உலகியன் மரபுக்கும் ஆசார வழக்கங்களுக்கும் அப்பாற்பட்டது. சித்தாந்த நெறியில் சிந்தையை முதன் முதல் புகுத்துகின்றவர்களுக்குத்தான் சாதியும் - சடங்கும் வரம்பும் பழுத்த மனத்தடிய வர்கட்கு அவையில்லை என்ற செயல் முறையைச் சிந்திக்கச் செய்கிறதல்லவா இந் நிகழ்ச்சி. இதனை நன்கு விளக்குவது,

> "ஞாலமதில் ஞானநிட்டை யுடையோருக்கு .....
> *சீலமிலை தவமில்லை......குலமுமில்லை"*

என்னும் சித்தியார் திருவிருத்தப் பகுதி. இதனை எண்ணி எம்மனோர்கள் குலமில்லை சீலமில்லை தவமில்லை ஒன்றுமில்லை என்று எண்ணி உலகியல் நெறியிலிருந்து பிறழ்தலுங் கூடாது. ஆலால சுந்தரர் அனுபவ நிலை அருள் வழி நின்று இங்ஙனம் குலமரபு குடிமரபு கடந்து போயிற்றே என்று காய்தலும் கூடாது. ஆலால சுந்தரர் நம்மவர் என்று அவரைச் சாதியுட் படுத்தித் தாழ்த்தலு மாகாது. அவர் ஞாலமதில் ஞான நிட்டையோர் என்று போற்றுதல் வேண்டும்.

நம்பியாரூரர் புத்தூர் நங்கையை மணந்து பாசத்திற்பட இருந்தார். அப்போது இறைவன் அந்தணனாக வந்து ஓலை காட்டித் தடுத்தாட் கொண்டார். ஆலால சுந்தரர் நம்பியாரூரராகத் தோன்றியபின், பிறந்த பிறவிக் கேற்பத் தாம் திருவருளாற் போந்தேம் என்பதனையும் காட்டிய நெறியிற் காதலித்துப் பின் அவ்வினை யகன்று அரனடிக்கீழ் சார இருப்பவர் என்பதையும் மறந்தார். அங்ஙனம் மறக்கச் செய்தது பிறவியும் - அதன் காரணமாய மறைப்பாற்றலும். (மல ஆற்றல் எண்ணேம் அவர் சாமுசித்தராதலின்) (மறைப் பாற்றல் - திரோதானசத்தி) அதனால் பெற்றோர் மணம் பேசி முடிக்குந் துணையும், மணவறை ஏறு மளவும், காப்பு நாண் கட்டுமளவும் ஒத்துக் கொண்டார். தம் பிறப்பின் நோக்கை யறிந்து ஆய்ந்து தெளிய வேண்டிய அவர் மறந்தமையால் அந்தணர் தோன்றினார். ஆன்மாக்கள் என்றும் இறைவற் கடிமை. அவரருளாணை யின்றி எதனையும் தாமாக இயற்றுந் தன்மையவல்ல என்பதை யுணர்த்த எழுந்தருளினார். வழி வழி யோலையைக் காட்டினார். அப்போதும் ஆரூரர் 'ஆசிலந்தணர்கள் மற்றோரந்தணர்க் கடிமையாதல், பேச இன்றுன்னைக் கேட்டோம்; பித்தனோ மறையோய் என்று குலப் போர்வையில் மறைந்து நின்று கூறுகின்றார். இந் நிகழ்ச்சி சிவனருட் குமரன் அந்தணரிடத்தே தங்கி வளர்ந்து சிவனருளை யறியாது மயங்கி நின்றதையும், இறைவன் வேதியனாகி வந்து' என் மகன் நீ என்று அவரிற் பிரித்துப் பெருமை யொடுந் தானாக்கிப் பேணிய பெருங் கருணையைக் காட்டுவதாம்.

இங்ஙனம் தடுத்தாட் கொண்ட அந்தணர் அருட்டுறையுட் புக்கு மறைந்தார். சிவபெருமான் அம்மையுடன் விடை மேற் றோன்றி, முன்பும் நீ நமக்குத் தொண்டன்; வேட்கைகூர நம் ஏவலாலே பிறந்தனை மண்மேல்; வாழ்க்கைத் தொடக்கற வந்து நாம் தடுத்தாட் கொண்டோம். என்ற போது, நம்பியாரூரர் மன்றுளீர் செயலோ வலிய வந்து ஆட்கொண்ட தென்றார். அப்போது ஆண்டநாதர் வன்றொண்டன்

என்னும் நாமம் பெற்றனை: அருச்சனை பாட்டேயாகும் நம்மைச் சொற்றமிழ் பாடுக என்றார்.

இந் நிகழ்ச்சி, "குருவே சிவனெனக் கூறினன் நந்தி" எனத் திருமந்திரமும், 'மன்னும் அருட்குருவாகி வந்து அவரின் நீக்கி மலம் அகற்றித் தானாக்கி மலரடிக் கீழ் வைப்பன்' என்ற சித்தித் திருவாக்கும் கொண்டறியுமாறின் மிகப் பொருத்தமுடைத் தாய்ச் செயல் முறைச் சித்தாந்தமானவை காணலாம். அன்றியும் வன்றொண்டன் என்னும் நாமம் பெற்றனை என்பது சிவ தீக்கை முறையில் தானாக்கியபின் குரு தீக்கைப் பெயரளித்தலாகிய முறைமையைக் குறிப்பது. பழைய பெயர் மலநீக்கப் பெறு வதற்கு முன்னிருந்தது. அது பின்னர்ப் பொருந்தாதாகலின் புதுப்பெயர் புனைந்தார். இதனை வன்றொண்டரும் பின் வன் றொண்டன் என்பதோர் வாழ்வு தந்தாய் எனப் பாராட்டுகிறார். இங்ஙனம் எல்லா வகையானும் செயல்முறைச் சித்தாந்த மாயினமை காண்க.

மற்றொன்று தடுத்தாட் கொண்ட தம்பிரான் ஆணையின் வண்ணம் தமிழ் பாடு கின்றவர் 'மனத்துன்னை வைத்தாய் மற வாதே நினைக்கின்றேன்' என்கின்றார். இஃது உயிர்கட்கு இறைவனை நினைத்தற்குக் கூடச் சுதந்திரமில்லை. அவன் நினையுமா நினைத் தாலல்லது என்ற உண்மையை உணர்த்து கிறது.

அருளாணை பெற்ற ஆரூரர் அடியார் களோடு பல தலங்களையும் வழிபடச் செல் கின்றார். இஃது ஈசன் நேசரொடுஞ் செறிந் திட்டு, அங்கவர்தம் திருவேடம் ஆலயங்க ளெல்லாம் அரனெனவே தொழுது இறைஞ் சுகின்ற தன்மையையும், இறைவனை எங் குமாய் எல்லாமாய்க் கண்டின்புறுகின்ற தன்மையையும் தெரிவிப்பதாம்.

திருத்துறையூர்க்கு எழுந்தருளினார். அங்கு. அத்தா வேண்டிக் கொள்வேன் தவ நெறியே, என வேண்டினார்; இறைவனும் புலனொன்றும் படி தவத்தில் புரிந்த நெறி கொடுத்தருளினார். இந் நிகழ்ச்சி', தான் தேடாப் பொன்னுக்கு உரையு மில்லை மாற்று மில்லை' என்பதுபோல, திருவருள் வயத்தான் ஞானத்தைப் பெற்றாராயினும் அந்த ஞானம் ஏதோ மலைக்கல்லிற் பெய்த மழை போல வழிந்தோடி விடாமல் பள்ளம் புகுபுனல்போல் தங்க வேண்டுமானால் நெறி நிற்றலாகிய தவமும் வேண்டப் பெறுவது. அதனாலே தவநெறியை வேண்டினார். ஒரு நாளிற் குபேரனால் அவனுக்கு உளப் பண்பாடு உண்டாகுமா? அதுபோலத் தவ மாகிய படி முறையில் வராத ஞானம் பய னளியாது என்பதைத் திருவுளத் தெண்ணி யும், தஞ் சிறுமையையும் - இறைவனது முதன்மையையும் எண்ணியும் தவநெறியை வேண்டினார். அவர் புலனொன்றும் படி தவத்தில் புரிந்த நெறியைத் தந்தருளினார். உடனே இவரும் பொற்புலியூர் நிருத்தனார் திருக்கூத்துத் தொழுகைக்கு நினைவுற்றார். வழியிடையிற் கண்ட தலங்களிருக்கட்டும். தில்லை சென்றார் புலனொன்றும் படிதவத்திற் புரிந்து தொழுதார் என்பதைச் செயல் முறைச் சித்தாந்த மாகச் சேக்கிழார் பெருமான் கூறுகிறார்.

"ஐந்து பேரறிவுங் கண்களே கொள்ள........"

என்று. புலனொன்றிய அழகைக் காட்டு கின்ற செம்மை) சிந்தனைப் பயிற்சிக்கு வழி காட்டும் செயல் முறைச் சித்தாந்தமாகும்.

திருவதிகை உழவாரப் படையாளி உலக அரசு கைத் தொண்டு செய்த தல மாதலின் மிதித்தலாகாது எனக் கருதி, வீரட்டானப் பெருமானைத் திருவுளத் தெண்ணிச் சித்தவட மடத்தில் துயில் கொள்ள இறைவன் கிழ அந்தணராய்த் தமிழ்நாதன் திருமுடிமேல் அடிபடத் துயில் வார் போலாயினர். வன்றொண்டர் விழித்து வினவினர். அந்தணர் திசையறி யாவகை செய்த தென்னுடைய மூப்புக் காண்' என்னத் தமிழ்நாதன் வேறொரு திசையில் முடிவைத்துத் துயின்றார். அங்கும் அப்படி யாக வன்றொண்டர் சினந்து நீர் யார் என்றார். அந்தணர் அறிந்திலையோ என மறைந்தார்; வன்றொண்டர் இறைவனருள் என உணர்ந்து தம் மானை யறியாத சாதி யாருளரே' என்ற பதிகம் பாடினார் என்பது வரலாறு.

இஃது இறைவனே ஆசானாக வந்து ஆட் கொள்ளப் பெற்றாலும், மலமாயா கன் மங்களின் வாசனை சிறிது தாக்கும். அதனையும் அகற்றி யாட்கொள்ள இறை

வனே பழைய ஆசாளுக வந்து சாதி என்ற தருக்கையும் ஒழித்துத் தூய்மை யுறுத்துவர் என்ற மலமகற்றித் தாளுக வைக்கும் குறிப் பினை விளக்குவது.

அங்ஙனமே, ஆரூரடைந்தபோது தொண்டர்கள் எதிர்கொண் டழைக்க 'எந்தை யிருப்பதும் ஆரூர் அவரெம்மையும் ஆள்வரோ கேளீர்' என்பது, உயிர்களின் இழிந்த குணங்களேயும், இறைவனுடைய உயர்ந்த அருட்டிறத்தையும் உணர்த்துவன வாக ஆன்ம இலக்கணமும், பதியிலக்கண மும் அமைய விளங்குவன.

பிறவியுட்பட்டா ரனைவருக்கும் இன்பத் துன்பங்களை யளிப்பன அவரவர் செய்த வினைகளே என்பதனைப் பரவையார் பதியி லார் குலத்துதித்திருந்தும், அவர் மனம் மின்னேர் செஞ்சடையண்ணல் மெய்யருள் பெற்றுடையவனே என்னே என்மனந் திரித்த இவன் யாரோ' என எண்ணியது. இதனல் பரவையார் மனம் தூய வெண் பளிங்கு போல ஒருநிறமும் குணமும் இன்றி யிருந்தது என்பது, அருளாளராகிய இவரைக் கண்டதும் மனந்திரிந்தது எனவும் கூறுமாற் ருல் பண்டை வினையின் நியதியினல் பரமனடி யாரைக் கண்டதும் திரிந்தது. வினையூட்டிக் கழிக்குமுறையைக் காட்டுகிருர் சேக்கிழார். அங்ஙனமே பல்லாயிரம் மகளிரைக் கண்டும் தந்நிலையிற் ருழாத வன்ரொண்டர் மனம் சிவனருளோ என்றதிசயித்தது. பண்டை விதி கடைகூட்ட இருவருங் கண்டனர். இங்ஙனமே வரலாறு முழுமையும் நமது சைவசித்தாந்த நுகர்ச்சியாகக் காணலாமாயினும் விரிவஞ்சி இத்துடன் அமைவேம்.

அடுத்து, இவரது ஞானநுகர்ச்சி படி முறையில் வந்தது ஆகையால்) யோகநெறி நின்று ஞானவாரிதி தோய்கின்ற முறையை யும் குறிப்பிப்பேம்.

சேக்கிழார் பெருமான், வடகயிலையி லிருந்து தென்றமிழ் நாட்டிற் ருேன்றினர் என்பதிலேயே உயிர், உயிர்ப்பு பிங்கலையி லியங்கும்போது பரம்பரனடித்தொண்டிற்கே யுரியது. இடையில் இயங்கும்போது உல கியல் உலேவிற்கும் போகத்திற்கும் உரிய தென்பதைக் குறிப்பித்தார். அடுத்து ரான்னணி மணியார் யோகப் புரவிமேற் கொண்டு போந்தார்'' என்பதால் இவர்மேற் கொண்டது வாசியோகம் என்பதனைக் குறிப் பித்தார். உலகில் உலவும்வரை இடைபிங் கலைகளில் மாறி மாறி வாரசரத்திற்கேற்ப வாசியியங்குவதைப் பரவை-சங்கிலியார் திரு மணக்காட்சியால் காட்டுகின்றவர், பரவை யாரைத் தென்றிசையிலும், சங்கிலியாரை இவர் தோன்றிய ஊருக்கு வடதிசையிலும் தோன்றிவளரச்செய்கிருர். இடைநாடிக்குத் தட்சிணநாடி என்றும் ஒரு பெயருண்டு என்று யோகநூல் கூறும். ஆகவே இடை நாடியாகப் பரவையாரை யமைத்து. அதன் வழியாக உயிர்ப்பையடக்குதலாகிய யோகமே பரவையார் திருமணம் என்பதைக் குறிப்பானுணர்த்துகின்றவர்,

'... .....பரவையெனும் மெல்லியல்தன்
பொன்னுரும் முலையோங்கல்
புணர்குவடே சார்வாகப்
பன்னுளும் பயில்யோக
பரம்பரையின் விரும்பினர்.''

என்ருர்.

அங்ஙனமே சங்கிலியாரைப் பிங்கலை யாக எண்ணச்செய்து அவர்மணத்தை முடித்துவைக்கின்ற சேக்கிழார் சங்கரர்தாள் பணிதலும், புகழ்தலுமாதியாய சிவப்பணி களைச் செய்து அவர் முன் சபதஞ் செய்து கொண்டு மணந்தார். மணந்தபின் பசுபதி தன்னருளாலே பேரின்பம் இனிதமர் வாராகிச் சென்னிமதிபுனைவார் தம் திருப் பாதம் தொழுதிருந்தார் என்கின்ருர். இது பிங்கலையியக்கம் சிவத்தொண்டிற்கு ஒத்த தாய்ப் பேரின்பம் பயப்பது என்ற யோக நூற்றுணிபை யுணர்த்துகிறது.

ஒன்று சிந்தனைக்குரியது: பரவையார் மணத்தைச் சூளின்றி முடித்துவைத்த திரு வருள் சங்கிலியார் மணத்தைச் சூளுடன் முடிக்கத் திருவுளம் பற்றியதென் என்பது; பிங்கலையில் சிவப்பணியிலியங்கும் உயிர் இட நாடியில் இயங்கலாகாது என்ற சிறு தடையை விதிக்கவே என்பதாம்.

தென்றற்காற்று வந்தது; திருவாரூர் எண்ணம் என்றினி நான் காண்பேன் என் னூர் இறைவனையே என்று தூண்டியது. சூள்பிழைத்தார், ஆரூர்சென்ருர் என்று வரலாறு யோகசிந்தனையை ஒட்டியே செல்வ தாயினும், விரிவஞ்சி இறுதிக்கண்போவோம்.

நம்பியாரூரரின்பத்தில் முதல் கடிய வெய்ய இருவினையின் களைகட்டெழுந்து கதிர் பரப்பி முடிவிலாத சிவபோகம் முதிர்ந்து முறுகிவிளைந்தது. அதனால் ''வெறுத்தேன் மனைவாழ்க்கையை விட்டொழிந்தேன்'' என அஞ்சைக்களத்தப்பர் முன்னே விண்ணப்பிக்கிறார். வேண்ட முழுதுந் தருவோனாகிய இறைவன் ஆணையின் வண்ணம் வெள்ளானை வந்தது. அதில் அமர்ந்து திருவஞ்சைக்களம் சென்றார். சேரர்பெருமான் பரிமுன் செல்ல யானை பின்செல்ல 'தானெனை முன்படைத்தான்' என்னும் தமிழ் மாலையை விண்ணப்பித்துக் கொண்டே திருக்கயிலைக்கு எழுந்தருளினர். இந்நிகழ்ச்சியும், வெள்ளானையென யோகநூல்களாற் குறிக்கப் பெறும் குண்டலினி சத்தியை ஊர்தியாகக் கொண்டு வாசியோகம் வழிகாட்டத் திருக்கயிலையை உயிர் அடைந்து சிவத்திருமேனி தாங்கி ஒத்த உருப்பெறும் என்பதையுணர்த்துகிறது.

> ''மந்திர மாமுனிவர் இவ
> னாரென்ன எம்பெருமான்
> நந்தம ரூரனென்றான் நொடித்
> தான் மலையுத்தமனே.''

என்னும் இது சேருறுகாலம் திசைநின்ற தேவர்கள்.

> ''ஆரிவனென்ன அரன் நாம் இவன்என்ன
> ஏருறு தேவர்களெல்லாம் எதிர்கொள்ளக்
> காருறு கண்டனை மெய்கண்டவா.''
>
> —திருமந்திரம்

என்ற யோகசித்திக்குரிய அனுபவமாதல் காண்க.

இங்ஙனமே கண்ணப்பநாயனார் வரலாறு தத்துவங்கடந்த பொருளை அன்பு செய்து அடிஞானம் சேரப்பெற்றாரே சேர்வர். கலைஞானமாகிய பாசஞான முடையார் அந்நீர்மையறியார் என்பதனை அறிவிக்கிறது, திருநீலகண்டர் வரலாறு சிவனடி மறவாத சிந்தையும், அரனடியாரை அரனெனவே நினைந்து ஆவனசெய்தலின் சிறப்பும் உணர்த்துகிறது. இங்ஙனமே ஏனைய அனைத்தும்.

இவ்வண்ணமே ஏனைய அடியார்கள் வரலாறுகளிலும் நம் சாத்திரங்களாகிய உண்மைநூல்கள் உணர்த்தும் தத்துவ அமைதிகள் இயல்பாகவே அமைந்துள்ளன. இங்ஙனம் உணரும்போது இலக்கணம் சைவ நூல்கள்; அவற்றின் இலக்கியம் பெரிய புராணம். அறிவியற் சித்தாந்தம் சிவாகமங்களும் சாத்திரங்களும் அனுபவநூல் பெரிய புராணம் என்பதறியலாம்.

---

## தமிழ்ச் சான்றோர் மேற்கொண்ட முறை

இத் தமிழ்நாட்டிற் புதியராய்ப் புகுந்த ஆசிரியர், பௌத்தர், சமணர், மாயாவாத வேதாந்திகள், வைணவர் என்பா ரெல்லாந், தமிழ் மக்களை மருட்டுதற் பொருட்டு, அவர் வழங்குந் தமிழ் மொழியிற் றம்முடைய கோட்பாடுகளை வரைந்து வையாமல், அவர் அறியாத வடமொழியில் அவை தம்மை வரைந்து வைத்து, அவைகளை மறைபொருளாகவே பரப்பி வந்தமையால், அன்னார் செய்த ஏமாற்றத் தினின்றுந் தமிழ் மக்களை விடுவிக்கக் கருதிய பிற்காலத்துத் தமிழ்ப் பெரியார்களும், பண்டைத் தமிழ்ச் சான்றோர் கண்ட முடிந்த வுண்மைகளுக்குச் 'சைவ சித்தாந்தம்' என வட மொழியிற் சிறப்புப் பெயர் நிறுவியும், அவ்வுண்மைகளை விளக்குங்காற் பற்பல குறியீடுகளை வடசொற் கொண்டே புதிய வாய்ச் சமைத்தும், வடமொழியிலேயே 'சிவாகமங்கள்,' சிவ புராணங்கள்' இயற்றியுந், தமிழ்ச் சான்றோர் தமது மெய்யறிவாற் றெளிந்த மெய்ப் பொருள்களை இத் தமிழ் நாட்டகத்தே பரவச் செய்ய லாயினர்.

—மறைமலையடிகள்.

'சைவ சித்தாந்த ஞானபோதம்' முகவுரை.

# இருபதும் எழுபதும்

[திரு. சு. நடராசன், பி.ஏ., எல்.டி.]

*இராமநாதபுரம் மாவட்டம் நப்புக்கோட்டை நகரத்தில் அ. சுப்பையாபிள்ளை என்பாருக்கும் ஞானகுருஅம்மையாருக்கும் 5-9-1905இல் தோன்றியவர் இவர். மதுரை சேதுபதி உயர்நிலைப் பள்ளியிலும், மதுரைக்கல்லூரியிலும் பயின்று பி. ஏ பட்டம் பெற்றார். சைதை ஆசிரியர் பயிற்சிக்கல்லூரியில் படித்து எல் டி. பட்டமும் பெற்றவர். செவிட்டு ஊமைப்பள்ளித் தலைமை ஆசிரியராக இருபத்தைந்து ஆண்டுகள் மைசூரிலும் மதுரையிலும் கோவையிலும் பணியாற்றியுள்ளார். மூன்று ஆண்டுகள் கோவை நகரமன்றக் கல்வி அதிகாரியாகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றார். செங்கோட்டையா உயர்பள்ளியைத் தொடங்கியவர். தற்பொழுது தம் பொறுப்பில் ராணிகுழந்தைகள் பள்ளியையும், ஔவை செந்தமிழ்க் கல்லூரியையும் நடத்தி வருகிறார். தமிழிலும் ஆங்கிலத்திலும் திறம்படப் பேசவல்லவர். பல பாடநூல்களையும் கலிலியோ வாழ்க்கை வரலாற்று நூலையும் எழுதியுள்ளார். பொதுப்பணியில் பேரீடுபாடுடையவர்.*



**முன்னுரை :**

இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியும் நடுப்பகுதியுமாகிய 1920ஆம் ஆண்டு 1970 ஆம் ஆண்டு ஆகிய இரண்டாண்டுகளுக்கும் உட்பட்ட ஐம்பது ஆண்டுகள், அரை நூற்றாண்டுக்காலம், இந்தியப் பெருநாட்டின் வரலாற்றிலும், நம் தமிழக வரலாற்றிலும் தனிச்சிறப்புடைய காலமாகும். இக்காலத்தில் தமிழகம் பெற்றுள்ள சீரினையும், சிறப்பினையும் நோக்குவோம்.

வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட தொன்மையுடையது தமிழகமும், அதன் வரலாறும். கடல் கொண்ட குமரிக் கண்டத்தில் தோன்றி வளர்ந்து இன்றும் இளமைத் துடிப்புடனும், நறுமணத்துடனும் வாழ்ந்து வருவது தமிழ்ப்பண்பாடும், நாகரீகமும். நாகரீகத்தின் தாயகம் தமிழ்நாடு என்று கூறினால் மிகையாகாது. மக்கள் இனம் தழைத்து ஓங்கத் தமிழகம் அளித்துள்ள சிறப்பு நலன்கள் பலபல.

**தமிழகத்தின் தனித்தன்மை :**

தமிழகம் தனிச்சிறப்புள்ளது. அதன் நிலம் உலகிலேயே மிகப் பழைமையானது. பல்லூழிகாலமாக நிலவி நிற்பது. பல கடல் கோள்களையும் கண்டிருப்பது. இன்றும் கண்டு வருவது. இதன் வரலாறும் ஏற்றம் மிக்கது. இந்தியப் பெருநாட்டில் தோன்றி அழிந்த எந்தப் பேரரசும் தமிழகத்தின் தன்னாட்சியைக் கவர்ந்ததில்லை. இப்பேரரசுகள் தமிழகத்தின் நட்பையும், கலை, நாகரீகம் பண்பாடு ஆயவற்றையும் போற்றிப் புகழ்ந்தும் ஏற்றும் வந்துள்ளமையை வரலாற்று ஏடுகளில் பரக்கக் கணலாம். இந்தியாவில் தோன்றிய ஆங்கிலப் பேரரசும் தமிழ் மண்ணில் வேரூன்றி இதன் நாகரீகப் படிப்பில் ஈடுபட்டு இந்தியப் பெருநாட்டை ஆளும் பெற்றியை அடைந்த செய்தி வரலாற்றுண்மையாகும்.

**ஆரியக்கலப்பு :**

தமிழகம் தன்னாட்சியை இழக்காவிட்டாலும், ஆரிய நாகரீகக் கலப்பினைச் சென்ற இரண்டாயிரம் ஆண்டுகளுக்குமேல் பெற்று வந்துள்ளது. ஆரிய நாகரீகம், தமிழ் நாகரீகம் ஆய இரண்டும் கலந்தபோதிலும், தொன்மைச் சிறப்புள்ள தமிழ் நாகரீகம் தனது தனித்தன்மையை, மொழித் தூய்மையை இழக்கவில்லை. இன்றும் உலக

நாகரீகங்களின் வரிசையில் மேலான இடத்தைப் பெற்றுத் திகழ்கிறது.

### ஐரோப்பிய ஆசிரியர்களின் ஆராய்ச்சி:

19ஆம் நூற்றுண்டில் ஆங்கிலம் கற்ற ஐரோப்பிய அறிஞர்கள் இந்திய நாகரீகத்தையும், பண்பாட்டையும், வரலாற்றுச் சிறப்பையும் ஆராயத் தொடங்கினர். இவர்களின் நடுநிலை குன்றா ஆராய்ச்சி சிலபல உண்மைகளை உலகிற்கு எடுத்துக் காட்டியது. திரு. வின்சென்ட் சுமித் (Vincent Smith) போன்ற இந்திய வரலாற்றுப் பேராசிரியர்கள் ஓர் உண்மையைக் கண்டார்கள். இந்திய நாகரீகத்தின் அடிப்படையாக விளங்குவது தமிழ் நாகரீகம் என்றும், இந்திய வரலாற்றின் உண்மையையும் பெருமையையும் உணரவிரும்பும் ஆராய்ச்சியாளர்கள் தங்கள் ஆராய்ச்சியைக் கங்கையாற்றுக் கரையில் தொடங்காமல் காவிரியாற்றுக்கரையில் தொடங்க வேண்டும் எனவும் கூறலாயினர். இம் மேற்றிசை அறிஞர்கள் தமிழைக் கற்று இதன் பெருமையை உணர்ந்தனர். இவர்களின் ஆராய்ச்சி தமிழகத்தில் ஒரு புத்துணர்ச்சியையும், புது எழுச்சியையும் தூண்டலாயிற்று. உயர்திரு. போப் ஐயர், உயர்திரு. கால்ட்வெல் ஐயர் போன்ற மேற்றிசை அறிஞர்கள் தமிழின் உயிர்த்தன்மையை ஓர்ந்தனர். ''மெல்லத் தமிழ் இனிச்சாகும்'' என்ற நிலை மாறியது. ஆரிய ஆங்கில மோகத் துயிலில் இருந்து தமிழகம் விழிப்புற்றது.

### தமிழக வரலாற்றுக் கூறுகள் :

தமிழக வரலாற்றினை 4 பெரும் பிரிவுகளாகக் கொள்ளலாம். (1) சங்க காலத்திற்கு முற்பட்ட தனித்தமிழ்க் காலம். (2) சங்க காலம். (3) ஆரியக் கலப்பு மிகுந்த இடைக் காலம். (4) ஆரியக் கலப்பற்ற தனித் தமிழ்க்காலம். இந்நான்கு கூறுகளில் ஆரிய மாயையினின்று விடுபட்டு விழித்தெழுந்த தனித்தமிழ்த் தற்காலத்தின் சிறப்பைப் பற்றி நாம் உணர்தல் வேண்டும்.

### தனித்தமிழ் மறுமலர்ச்சி:

''தமிழன் என்றோர் இனம் உண்டு தனியே அவர்க்கு ஓர் குணம் உண்டு''. என்ற எண்ணம் வலிவு பெற மேனாட்டு ஆராய்ச்சியாளர் பெருந்துணை புரிந்தனர். எனினும் தமிழ்த்தாயின் தவப்புதல்வர்களான, பேராசிரியர் பெ. சுந்தரம் பிள்ளை, மறைமலையடிகளார், பரிதிமாற் கலைஞர் போன்றவர்கள் இவ்வியக்கத்தின் முன்னோடிகளாய் விளங்கினர். இம்மூவரில் மறைமலையடிகளார் தூயதமிழில் எழுதுவதும், பேசுவதும் தனித்தமிழ் ஆட்சியை நிறுவுவதுமான பணிகளில் தம் உடல், பொருள், ஆவி மூன்றினையும் இயங்கச் செய்தார்.

பிறப்பில் மக்கள் யாவரும் ஒரே தன்மை உடையவர். அவர்களை இனவகையாகப் பிரித்து நால்வகைச் சாதியை இங்கு நிலை நாட்டி, ஒரு சில இனம், இன்பம் துய்ப்பது என்ற நிலையை எல்லாம் மாற்றியமைக்க வேண்டும் என்ற எண்ணம் கொண்டு இந்த அரை நூற்றுண்டுக்காலத்தில் நீதிக்கட்சி என்ற அரசியல் கட்சி தோன்றியது. இக் கட்சியின் வளர்ச்சியில் சுய மரியாதை இயக்கம், திராவிடக் கழகம், திராவிட முன்னேற்றக் கழகம், என்ற அரசியல் கட்சிகள் தோன்றினமையைத் தமிழகமும், உலகமும் அறியும்.

இவ் அரசியல் கட்சிகள் தமிழ் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவியது. ஆனால் அரசியல் என்பது அடிக்கடி மாறும் தன்மையுடையது. ''வல்லான் வகுத்ததே வாய்க்கால்'' என்னும் போக்கையுடையது. எனவே தமிழ்மொழி, நாகரீகம், கலை, பண்பாடு, கலையொழுங்கு ஆயவற்றைத் தன் முழுப் பொறுப்பாகக் கொண்டு தனித்தமிழ் இயக்கம் காண மறைமலையடிகளார் விழைந்தனர்.

### திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத் தோற்றம் :

மறைமலையடிகளாரின் தனித்தமிழ்க் கொள்கை தமிழ்மக்களின் கவனத்தை ஈர்த்தது. இக்கொள்கையில் திருநெல்வேலி உயர்திரு. வ. திருவரங்கம் பிள்ளை அவர்களுக்குப் பெரும்பற்று ஏற்பட்டது. பிள்ளை அவர்கள் அதுபோழ்து இலங்கையில் வணிகத் துறையில் பணியாற்றிவந்தார்கள். மறைமலையடிகளாரை இலங்கைக்கு வரவழைத்து அந்நாட்டில் சொற்பொழிவு

செய்யத் துணைபுரிந்தார். மேலும் அவர்கள் இயற்றிய தமிழ் நூல்களைத் தமிழ் மக்கள் வாங்கிப் படிக்கவும் உற்சாகமூட்டினர். உயர்திரு. வ. திருவரங்கம் பிள்ளை அவரது இயக்கம் வெற்றிபெறப் பொருளும் திரட்டிக் கொடுத்தார்கள்.

அவர்கட்கு மறைமலையடிகளாரின் தொடர்பு தமிழினத்தின் நல்லூழால் மிகுதியாக இருவரும் நெருங்கிய நண்பராயினர். இலங்கையை விட்டுத் தம்மூருக்கு வந்த உயர்திரு. வ. திருவரங்கனர் தமிழ் வளர்ச்சிக்கும், தனித்தமிழ் இயக்கத்திற்கும் தமிழ்ச் சமய முன்னேற்றத்திற்கும் தொண்டாற்ற ஊக்கம் கொண்டனர்.

வணிகத்துறை வல்லுநரான உயர்திரு. வ. திருவரங்கம் பிள்ளை அவர்கள் கூட்டு வாணிப நிறுவனங்களின் திறனை நன்கு உணர்ந்திருந்தார்கள். (Power of Joint Stock Companies.) ஆங்கில நாட்டில் 17ஆவது நூற்றூண்டில் தோன்றிய கிழக்கிந்தியக் கூட்டு வாணிப நிறுவனம் (East India Company Limited) இந்தியப் பெருநாட்டின் ஆட்சியை ஆங்கில அரசுக்குப் பெற்றுத்தந்தது, வரலாறு கண்ட உண்மை அன்றோ! கூட்டு வாணிபத்தின் முழுத் திறனையும் உணர்ந்த பிள்ளை அவர்கள் தமிழ் வளர்ச்சிக்கு ஒரு கூட்டு வாணிக நிறுவனத்தை 1920இல் தோற்றுவித்தனர். அந்நிறுவனந்தான் தென்னிந்தியத் திருநெல்வேலிச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட். இக்கழகத்தின் வருமானத்தில் 6% நூற்றுக்கு ஆறு விழுக்காடு மட்டும் ஊதியத் தொகையாய்ப் பங்காளர்கட்குக் கொடுப்பது என்றும் எஞ்சியதைத் தமிழ் வளர்ச்சி, தமிழ் சமய முன்னேற்றம் ஆயவற்றிற்குச் செலவிடுவது என்றும், திட்டமிட்டார். இத்திட்டத்தால்தான் கழகம், தமிழுக்கும், தமிழ்நாட்டிற்கும், இதன் சமயத்திற்கும் பல அரிய சேவைகளைச் செய்து வருகிறது.

### கழகப் பணியும் வளர்ச்சியும்

கழகத் தொடக்க காலத்தில் பங்குகள் சேர்ப்பதென்பது ஓர் அரிய செயலாக இருந்தது. தமிழ் மக்களின் அன்பும், ஆதரவும் உற்சாகத்தை ஊட்டியது, எனினும் கழகத்திற்கு எதிர்ப்பும் இல்லாமல் இல்லை. எதிர்ப்புக்களை எல்லாம் பொருட்படுத்தாதும், தோல்விகளை வெற்றி வித்தாக மாற்றியும் இடையருது உழைத்து மேலான வெற்றியைக் கண்டார்கள். உயர் திரு. வ. திருவரங்கம் பிள்ளை அவர்கள் வருங்காலத்தை முன்னரே அறிந்து செயலாற்றும் தன்மை பெற்ற உழைப்பாளி, செயல் வீரர். அவரின் இளவல் இலங்கையில் மருத்துவத் துறைக் கல்வி கற்றுக் கொண்டிருந்தார். அவரைத் தமிழகத்திற்கு வரவழைத்துக் கழகப் பணியில் ஈடுபடுத்தினர்.

தந்நலமற்ற பணியில் உடன்பிறந்தார் இருவரும் ஊக்கத்துடனும், உயர் ஆற்றலுடனும், தேக்கும் மகிழ்வுடனும் பணிபுரியலாயினர்.

தமிழ் நூல்களை அச்சிடுவதும், அதனை விற்பதும் மக்களைப் படிக்கச் செய்வதும் எளிதான காரியமல்ல. எனினும் கழகம் வெளியிடும் நூல்களே யன்றி அச்சிட்டு விற்க முடியாமல் வைத்துக் கொண்டு அவதியுற்றவர் நூல்களையும் தாங்கள் வலிதில் சென்று பெற்று, விற்று அவர்கள் இழந்த பொருள்களை மீட்டுக் கொடுத்து உதவலாயினர்.

### தாமரைச் செல்வர் வ. சு.

தமது அருமை அண்ணனுக்குப் பின்னர் உயர் திரு. வ. சுப்பையாபிள்ளை அவர்கள் கழக ஆட்சிப்பொறுப்பினை ஏற்றனர். கழகப் பணி இவரது ஆட்சியில் நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளரத் தொடங்கியது. மங்கிமறையும் தமிழ் இலக்கிய நூல்களை எல்லாம் கவினுறு சிறப்பில் அச்சிட்டு மக்கள் மனத்தைக் கவர்ந்தனர். தமிழ் நூல்களுக்குச் சிறப்பான கட்டுக்கள் அமைத்து மேற்றிசை நாட்டு நூல்களுக்கு ஒப்ப உலாவச் செய்தனர். ஒரு சிறு கட்டிடத்தில் தொடங்கிய கழகம் இன்று நெல்லையில் மூன்று கட்டிடங்களிலும், சென்னையில் மூன்று கட்டிடங்களிலும் நடைபெற்று ஊதியம் பெற்று வருகிறது. மேலும் மதுரை, கோவை முதலிய நகரங்களில் கிளைகள் தொடங்கப் பெற்றுப் பணியாற்றி வருகின்றது.

### வ. சு. அவர்கள் ஆசிரியர்களைத் தூண்டி எழுதச் செய்யும் சிறப்பு

நல்லாசிரியர்கள் தாமே நல்ல நூல்களை எழுத முடியும். நூல் எழுதும் திறமை வாய்ந்த ஆசிரியர்கள் பலரைக்கண்டு பிடித்து அவரவர்களின் கருத்துக்கேற்ப ஊக்கமூட்டிப் பல நூல்களை எழுதச் செய்த திரு. வ. சு. அவர்களின் ஆற்றல் மிகமிகப் பாராட்டிற் குரியது. அறிவு தேங்கி, மங்கி, மடித்துப் போகவிடாமல் தூண்டும் பேராற்றலினால் தான் பலவகையான நூல்கள் இலக்கியங்கள் கன்னித் தமிழ் மொழியில் மட்டுமல்ல, ஆங்கிலத்திலும் எழுதப்பட்டு வெளிவரலாயின.

சமய நூல்கள், இலக்கிய நூல்கள், இலக்கண நூல்கள், அறிவியல் நூல்கள், வரலாற்று நூல்கள் என ஒவ்வொரு துறையிலும் இவரது அரியமுயற்சியால் எண்ணற்ற நூல்கள் வெளி வந்துள்ளன. பள்ளிப் புத்தகங்கள் பலவும் வெளியிடப் பெற்று ஆசிரியர் மாணவரிடையே தரமான நூல்கள் எனப் புகழ் பெற்று வருவது யாவரும் அறிந்ததே.

### வ. சு. அவர்களின் தமிழ்ப் பாதுகாப்புப் பணி

வ. சு. அவர்கள் தமிழ் மொழிக்கும், நாட்டிற்கும் ஆபத்து நேரிடும் காலங்களில் எல்லாம், துடிதுடிப்புடனும், முழுமூச்சுடனும் தமிழ்ப் பாதுகாப்புப் பணியில் இறங்கி விடுவார்கள். வீரத்துடனும், துணிச்சலுடனும், கட்டுப்பாட்டுடனும் இந்தி மொழி தமிழகத்தில் நுழைந்தபோது பலம் வாய்ந்த எதிர்ப்பினை உருவாக்கினார்கள். இதற்கெனத் தமிழ்ப் பாதுகாப்புக் கழகம் நிறுவினார். தமிழில் ஆட்சி நூல்கள் பலவற்றையும் வெளியிட்டார்கள். இந்தி பரவ வொட்டாத படி அல்லும்பகலும் உழைத்தார்கள். இவரது அயரா உழைப்பின் பயனாய் மக்களிடையே தமிழ்ப் பற்றும், அரசியலில் தமிழுணர்ச்சியும் ததும்பலாயின. தமிழ் நாட்டில் தி. மு. க. அரசுரிமை பெறுவதற்கு அடிப்படையான வேலைகளை உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழக வாயிலாகச் செய்து புகழ் பெற்றார். தி.மு.க. வின் ஒப்பற்ற தலைவர் பேரறிஞர் அண்ணா அவர்கள் இவரது அயரா உழைப்பினை உணர்ந்து இவருக்குத் தாமரைச் செல்வம், (பத்மஸ்ரீ) என்னும் இந்திய அரசாங்க விருதைப் பெற்றுக் கொடுத்தனர்.

### கழகத்தின் எதிர்காலம்

கழகத்தின் எதிர்காலம் உலகிலேயே ஒளிபெற்று விளங்கும் ஆற்றல் பெற்றுவிட்டது. தமிழ் நூல்களை ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்து அச்சிட்டு உலகமெங்கும் பரப்பும் பணியில் ஈடுபட்டுள்ளது, சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம். தமிழின் பெருமை உலகத்தமிழ் மாநாடுகளின் மூலம் உலகில் பரவத் தொடங்கியது. உலகமக்கள் தமிழ் நாகரீகத்தை அறியத் துடிதுடித்து நிற்கின்றனர். இவர்களது ஆர்வத்தை வளர்க்கக் கழகத்தின் நூல்கள் பெருந்துணை புரிகின்றன.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ் நூல்களை ஒரு சேர அச்சிட்டு அதற்கென அழகிய பேழை ஒன்றையும் அமைத்துக் காலத்திற்கேற்ப மக்களிடையே பரப்பி வருகிறது கழகம்.

உயர்திரு. இரா. கலியாணசுந்தரம்.
உயர்திரு. இரா. முத்துக்குமாரசுவாமி.

உயர்திரு. வ. திருவரங்கம் பிள்ளை அவர்கள் தம் இளவலாகிய வ. சு. அவர்களைக் கழகப் பணியில் ஈடுபடுத்தியதுபோல் வ.சு. அவர்கள் தம் அருமை மருகர்களாகிய இரா. கலியாணசுந்தரம், இரா. முத்துக் குமாரசுவாமி ஆகிய இருவரையும் கழகப் பணியில் ஈடுபடுத்தியுள்ளனர். இவ்விரு இளைஞர்களும் பல்கலைக்கழகப் பட்டதாரிகள். இவர்கள் வேறு துறைக்குச் செல்லாமல் கழகத்தைக் கட்டிக் காத்து வளர்த்து வருவது கழகத்தின் எதிர்கால ஏற்றத்திற்கு ஒரு நல்ல அறிகுறியாகும்.

### மக்களின் கடமை

கழகம் தோன்றியிராவிட்டால் இன்று தனித்தமிழ் இயக்கம் வெற்றி பெற்றிருக்க முடியாது. தனித்தமிழ் இயக்கத்தால் தமிழகம் இழந்த சிறப்பைப் பெற்று வருகிறது. 1920—1970 ஆண்டுகளுக்கு இடைப்பட்ட காலமான 50 ஆண்டுகள் தமிழகத்தின் பொற்காலமாக விளங்கி நிற்கிறது.

கழகம் உலக மக்களின் முன்னேற்றத்தில் ஆர்வம் கொண்டு உழைக்கிறது. உலகத்தில் அன்பின் அடிப்படையில் மனித சமுதாயம் இயங்குவதற்கு அரும்பணி ஆற்றி வருகிறது.

மக்கள் இதனை உணர்ந்து கழகத்திற்கு எல்லா வழி வகைகளிலும் நல்லாதரவு கொடுத்து மக்களினம் தழைக்க உதவுவது மக்களின் நீங்காக் கடமையாகும். கழகத்தின் வளர்ச்சியில் பங்கு கொண்டு உழைத்து வரும் உத்தமத் தொழிலாளர்களின் அயரா உழைப்பும், ஆர்வமும் இன்று பொன் விழாப் பொலிவுற நடக்கப் பெரிதும் துணைபுரிந்துள்ளன. இதனை மக்கள் உணர்ந்து அவர்களது வாழ்வு வளம்பெறச் செயலாற்ற வேண்டுவது இன்றியமையாக்கடமையாகும்.

இன்று பொன் விழாக் கொண்டாடும் கழகம், பல்லாண்டுகள் மேலும் பணிபுரிந்து வைர விழா, முத்து விழா போன்ற விழாக்களைச் சிறப்புடன் கொண்டாட எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக!

வாழ்க திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்!

வாழ்க செந்தமிழ்!

---

## இன்னும் பல ஏடுகள் வெளிவர வேண்டும்

*சைவசித்தாந்தக் கழகத்திலுள்ள என் நண்பர் சுப்பையா அவர்கள், மறைமலையடிகள் பெயரால் ஏற்பாடு செய்துள்ள இந்தப் படிப்பகம் மறைமலை யடிகளின் கருத்துக்களை அறிந்து தமிழர்கள் நல்ல பயன் பெறுவதற்கு, உபயோகப்படும் என்பதில் சந்தேகம் இல்லை.*

*ஒரு காலத்தில், 'தமிழில் எத்தனை புத்தகங்கள் இருக்கின்றன?' என்று சிலர் கேட்டதுண்டு; ஆனால் இன்றைக்கு ஓர் ஐயாயிரம் ரூபாய் எடுத்துக் கொண்டு சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்துக்குப் போனால் அத்தனைக்கும் தமிழ்ப் புத்தகங்கள் வாங்கிக்கொண்டு திரும்ப முடியும். அந்த அளவு தமிழில் இன்று புத்தகங்கள் வெளிவந்திருக்கின்றன.*

*சீரிய கருத்துக்களைத் தரும் வண்ண ஏடுகள் ஆங்கிலத்தில் மட்டுமே இருந்தன; ஆனால், இன்று தமிழிலும் இருக்கின்றன. அந்த ஏடுகள் இன்னும் பல வெளிவர வேண்டும்.*

—பேரறிஞர் அண்ணாதுரை

*மறைமலையடிகள் நூல்நிலையத் திறப்பு விழாவில் வெளியிட்ட கருத்து.*

---

# Saiva Siddhanta

[Dr. V. A. Devasenapathi M.A., Ph.D.]



Dr. Devasenapathi, born in Madras on 23—7—1914 to V. S. Arumugam Pillai and V. A. Kirupambal. He took his M. A. Degree in 1936 and the Doctorate in Philosophy in 1949. He has learnt German. From 1940 to 1955 he served in the Pachaiyappa's College, Madras, first as Lecturer and later on as the Professor. He joined the Madras University Philosophy Department as Reader and is now the Professor of that Department. He is a great scholar in Saiva Siddhantha Philosophy and has made an intensive study of the Six commentaries to Sivagnana Siddhiyar'. Two books on Saiva Siddhantha Philosophy written by him have been published. They are 'Saiva Siddhantha' and 'Special lectures on Saiva Siddhantha.'

'Know that Siva resides in everything that breathes and cherish love for all living things' says a popular Tamil couplet. To that Mad One whose love for all creatures, both great and small is boundless no name may be fitting and hence all names are given! He is the Lord of all creation and yet, He is dear to the Southerners (in India) as Siva. Thus Saiva Siddhanta while peculiarly the product of Tamil genius, might yet have a universal appeal in (a) recognising the Lord of all creation and (b) in insisting on love for everything that lives. It is worthwhile considering features which, not withstanding its possible universality of appeal are recognisably unique in Saiva Siddhanta.

As a definitive system, Saiva Siddhanta is of a comparatively late date. But its basic concepts are closely related not only to Tamil literature but also to Tamil language itself. Thus the classification of Tamil alphabets into *uyir* (vowels), *mei* (consonant) and uyir mei (vowel consonant with an over-all importance given to the first vowel (a) is suggestive of the Siddhanta concepts of *Pati* (the Lord of all creation) *pasu* (literally the flock, meaning the souls) and *pasa* (bonds, triple cord-*anava* the principle of egoism; *maya* basic matter out of which the bodies associated with the souls, objects of enjoyment and the worlds souls live in are made and *karma* literally action, here standing for the fruits of one's deeds). Vowels are necessary for meaningful articulation. But the first vowel has a unique place as being necessary in a subtle way, not only for the consonants but for the other vowels also. Likewise, while bodies of creatures without the life-principle or soul are dead matter, the souls themselves are sustained and nourished by the Lord. The Lord is the life of life (uyirikuyir). Thus the basic concepts of Saiva Siddhanta are closely related to the pattern of Tamil alphabets.

Like vowels, the Lord and souls are of the same class. Yet the souls cannot be the equal of the Lord. This difference is brought out by reference to the classifications of letters into the strong, soft and middling groups (vallinam, mellinam and idayinam) Though

there are six letters of the strong group, not all of them can be the initial letter of a word. Tamil literary convention rules out two of them (t and r) as unfit to be initial letters for words. Likewise though souls are different from matter, they cannot be the initial principle in the scheme of creation or the order of existence.

Tamil grammar speaks of two orders of existents-' high class, (uyar tinai) and 'not high' class (ahrinai) It is interesting to note that human beings are assigned to the ' high' class, not only in the sense that they occupy a high place in the order of evolution but also in the sense that at this level, they have an opportunity to work out to the full their evolutionary possibilities by their conduct guided by their intelligence.

Turning to Tamil literature, we find a broad classification into *aham* and *puram*, (literally 'within' and 'without') The literature extant now gives us songs about love between man and woman and songs about wars. Love between man and woman is a training for developing love for God Likewise, war may be understood as a war of a different type. Enemies within oneself-lust, greed, malice etc. - are more dangerous than external war enemies. Overcoming these internal enemies is more important than overcoming the external ones. In fact, victory in the former is a precondition for peace that is lasting. Perhaps, this is the only war to end all wars, since victory in an external war leaves bitterness in the hearts of the enemies and makes them prepare for wreaking vengeance on their conquerors. The moral and spiritual equivalents for physical war bring about peace that is abiding, peace that passeth understanding.

The 'Sivagnana Siddhiyar (13th century A.D.) says that in whatever forms or ways God is worshipped, it is Siva that accepts all worship. In other words, the Supreme God is One (whom the Saivites call Siva, and the followers of other faiths by other names). We have in the invocatory verses of the Sangam literature also the same idea. In one such invocatory verse we are told that according to differences in the physical regions, there are differences in the names for the Divinity worshipped. But despite the differences in names, the object of worship is one and the same Supreme Being. May we not extend the scope of this sentiment expressed in ancient Tamilnadu to the whole world now? *Kandazhi* of the Tolkappiyam presumably refers to the Lord in His aspect as the Absolute-That which requiring no support for Itself is the support of everything else, that which like the fragrance of a flower is invisible and yet pervasive, That which is like the soul animating a body and that which is darkness-dispelling-effulgence which is beyond the grasp of thought and words.

Love of God-not for His gifts but for His grace which we see explicitly in the lives and songs of the *Nayanmars* (Saivite devotees) is anticipated in the *Sangam* literature. The *Sangam* poets pray not for gold, wealth and (worldly) enjoyment but for love, righteousness and grace. The purpose of their prayer is not even release from bondage but deepening and increase of their worship. Thus worship is redeemed from all narrow self-seeking. Worship is for the glory of God.

Natural impulses are not to be starved but to be sublimated into worship. Thus song and dance are associated with worship. *Tamil Isai* (Tamil music) is God-centred. In addition to aesthetic enjoyment there is a transformation of one's being brought about by this divine music. The secret of such transformation is revealed by Ramalinga Swami (19th century A.D.) 'Oh Manikkavacaga who art in rapport with the Divine! When I enter into the spirit of your songs and sing there arises a sweetness—as of a mixture of honey, milk juice of ripe fruits, of my body and of my soul-It is a sweetness that does not cloy'.

Likewise dance is associated with Nataraja-atonce a symbol of aesthetic and metaphysical significance. The metaphysical significance relates to the five functions of the Lord-creation, maintenance, destruction, obscuration and bestowal of Grace. As for the aesthetic side, that enchanting smile of the Lord is an indication of the rapture of divine bliss that awaits us. Divinity has a stern side, (in its aspect as justice) but it has also a sweet side, in its aspect as mercy or love. There is the redness of fire in one of His hands, fire that burns all impurity, but above it is the smile of His rosy lips indicative of His love: thus literally and figuratively love is above law (or justice) :-the redness of fire is forbidding but the rosiness of His lips is alluring.

'Siva resides in everything that breathes. So cherish love for all loving things' Love calls for sacrifice, the readiness to suffer for others, to bear the burden of others and give them happiness. The Saivites have a pattern of such love in their blue-throated Lord,—the stain of blue on His roseate throat being a permanent mark of the poison He took to prevent it from destroying the universe. A Saivite thus may not kill another life for his own sustenance. But he must not stop with such a negative virtue as non-killing. He has to go further and in everything he does, have the blue-throated Lord as his exemplar. In brief he has to regulate his life by sacrificial love.

Thus Saivism is rooted in Tamil culture in several ways. But to the extent Tamil culture is basically human, its appeal can be universal.

---

## SAIVA SIDDHANTA PHILOSOPHY

So far as my knowledge of various religions and various systems of philosophy is concerned, I venture to say that I have not come across any religion or any system of philosophy in which this root - cause of creation, this pre-existent principle of evil has been recognized and explicitly mentioned as in the system of Saiva Siddhanta. Of course,there is a hint of it in the first chapter of the book of Genesis of the Old Testament as has been so penetratingly pointed out by Dr. F. C. S. Schiller, but it has unfortunately escaped the notice of almost all commentators on the book.

—*Maraimalai Adigal,*

Preface to " The Saiva Siddhanta
As A Philosophy of Practical Knowledge." (Page 11)

---

# An Elementary Introduction To Periyapuranam

[Navalar S. Sivakumar, M.A.,]

Born as the graceful son of Saivapperiyar Thiru S. Sachithanandam Pillai, a living saint, Thiru Sivakumaran bears the torch of Saivism which his father has been carrying till this period. Holding the Master Degree in Economics he entered the service in Binny & Co, a leading British Firm in Madras. After his retirement in his 50th year he has started a Weaving Mill with modern equipments in Salem. He is



an able orator and great scholar in Saiva Siddhantha Philosophy. He has toured all over the countries where the Tamils live, like Africa, Moretius, Indonesia-Malaysia, Singapore and Ceylon and delivered number of lectures on Saiva Religion and Periya puranam. Dharmapuram, Madurai and Kanchi Mutts have honoured him by conferring Titles on him He has presided over many religious and literary conferences.

Truth is one. Truth is great. Truth is eternal. Truth is knowledge. Truth is Love. These great truths and teachings have remained immortal from time immemorial and works expounding these ancient truths of life are called Puranas; Puran means old or ancient. Vedas tell us what to do and what not to do; these are commandments—Prabhu Samhita. Puranas convey the same commandments with illustrations, as friendly advice and as moral conclusions; these are Suhir Samhita. The same lessons of life conveyed in Epics or Kavyas in beautiful and pleasant settings, rousing not only our intellect but also our emotions, are like the counsel of a wife—Kantha Samhita. Sekkizhar's Periyapuranam is a rare and rich combination of the second and the third categories.

Sekkizhar was born in a rich agriculturist Vellala family in Kunrathur a suburb of Madras City, towards the end of 11th Century or early 12th Century. He soon acquired wide fame as a gifted scholar, poet, administrator, statesman, philosopher and above all as a great spiritual master.

Sekkizhar became the Chief Minister of the Chola Kingdom under Anabhaya Cholan-Kulothunga II (1133-1146 A.D). That period of the history of South India was within the golden age of the Cholas. In the economic prosperity of those times people were revelling in material pleasures and even poetry, literature and drama of those days were surcharged with love and romance. Sekkizhar wanted to present the people with a corrective philosophy of life in a palatable form and this gave rise to the great Periyapuranam originally named 'Tiruthondarpuranam'.

* * *

'.........மாக்கள்
சிந்தையுள் சார்ந்து நின்ற
பொங்கிய இருளை ஏனைப்
புறஇருள் போக்கு கின்ற
செங்கதி ரவன்போல் நீக்கும்
திருத்தொண்டர் புராணம் என்பாம்."
—சேக்கிழார்.

Sekkizhar had already learned much about the South Indian Saiva Saints. In his official tours, during his sparetime he visited temples and places of interest connected with Saiva Saints. He collected biographical evidence from stone inscriptions, copper-plates, sculptures, architectures and verified his tentative conclusions with the descendants of some of the Saints, with local legends, etc. Based on those historical and other evidences and based upon the original work of Saint Sundarar's Tiruthondathogai and above all inspired and guided by the divine grace of Lord Nataraja in Thiruchitrambalam, (Chidambaram) Saint Sekkizhar gave to posterity the richest treasure of his biography of the Sixty-three Saiva Saints or Nayanmars. The title he gave to his book was Tiruthondar Puranam; by its quality and greatness it became atonce popular as Periya puranam.

The sixty-three Nayanmars belonged to different castes and communities, from the "untouchable" to the orthodox "brahmin". They include bachelors, family men, sanyasin, workers, peasants, merchants, chieftains, generals, kings, women, born saints, etc. In all this diverse classification, the one underlying current of unity or the one common feature binding all the Nayanmars together is their life of selfless love of humanity and an inborn spirit of service and sacrifice; they were all aware of the end of life and of the goal of life and therefore lived a life of simplicity, piety and purity. They no doubt lived as members of society extending help and hospitality to devotees who had come out renouncing family life but individually by their own thoughts words and deeds and by their acts of Sathsya, Ahimsa and Vairakya, radiated the great truth that godhood can be achieved in this life itself.

Sekkizhar's Periyapuranam is undoubtedly a divine-inspired immortal work. This is evident not only in its literary and poetic form but also in its philosophic content and in its spiritual message. The hero of the epic is Saint Sundarar himself. Periyapuranam deals with the biography of Sundarar in Thaduthatkondapuranam, Eyarkon kalikamanayanar puranam, Kazharitrarivarnayanar puranam and in Vellanaicharukkam; by dwelling upon the biography of Sundarar at the beginning of the great work, in the middle of the book and at the end of the epic, it can be admitted that Saint Sundarar is the central hero of the epic. One of the literary requisites of an epic is, the hero must be uncomparably great among the characters in the epic; that the achievements of Sundarar are unique need no mention by me. The chapters on Thirumalai (Mount Kailas), Thirunadu, Thirunagaram and Thirukoottam (read with Tirukkurripputhondanayanar puranam) give out Sekkizhar's philosophy of life and attitude to life. The introductory chapters which are an integral part of any epic reflect the political history, cultural development and philosophical beliefs of the country of the author and in this respect Sekkizhar's introductory chapters are very useful, instructive and inspiring.

As Sekkizhar had a specific message to humanity his great work abounds in bakti, love of God and service to devotees. "Arul" is divine grace and if there is any great work in Tamil language with the largest number of words derived from "Arul", it is Periyapuranam and Periyapuranam alone. If you take the size of about 4286 stanzas in Periyapuranam as a yard stick, perhaps in no other book in the

world, be it In Hebrew or Greek or Latin or French or English or Chinese, you have such a large and meaningful usage of the word 'Arul, or grace as we find in Periya-puranam.

Saiva Siddhantha Philosophy is the golden string in which beads of the biographies of the Saiva Nayanmars are twined in order and unison. God, Soul, Bondage are the three entitles we reckon with in Saiva Siddhantha. The soul and God are eternal. God did not create souls but the souls by themselves cannot know, or do things; it has no body of its own. God is knowledge and grace. He created the world and sent the souls to this earth in different births and bodies with limited knowledge and limited freedom; the highest among His creations is the human being endowed also with sense of discretion. By process of evolution, souls are elevated to human birth. Born as a human being, with norms of behaviour and codes of conduct, good persons in good company are rewarded with divine life and evil doers are punished with sufferings even in life after death and are perhaps demoted to animal Kingdom. This continual process of births and deaths, pains and pleasures go on and on, until at last by slow dawn of knowledge and mature experience, the soul becomes an evolved soul, a great man or woman and becomes divine.

Freedom from the ago of "I" and 'Mine', gradually getting away from the tumult of sense pleasures, attaching ourselves exclusively to Him who has no attachments, are the narrow and difficult paths to Freedom, freedom from the painful cycle of births and deaths. Each soul has its own long or short history of Pilgrims, Progress. The length of the journey and the duration of the journey depend upon the individual soul's spiritual efforts and exercise. Death is the end of life; then make this life worthy of a divine life after exit from this earth. Do not waste this lifetime or add to your sins. Life has a mission; life has a goal. We are not just animals for mere procreation and recreation. We do not live to eat; we eat to live. God is our Heavenly Father. This world is our testing ground and a training school; born a man, we must die a superman.

Once this sense of detachment grows with the growth of our age or with the evolution of our soul, even if we earn tons of money, by righteous means for the good of others, we will not attach ourselves to our earnings. If there is a test to our principles in life, we will effortlessly throw ourselves in favour of upholding our principles of truth and love and not yield to pressure and become victims of circumstances. If death is inescapable and if we have to die one day, it is better to face death straight away in the event of a severe test and gain a moral victory than compromise with convenience or yield to forces of evil and injustice just to save the situation and thus live for a few more years. With this practical sense and moral courage, we develop the right attitude to life resulting in our controlling our five senses instead of the five senses taking possession of our mind and body. In this state of mental evolution and physical purity, we have the psychological equipoise to bear pains and pleasures alike and have tranquility of mind, like a sea without waves and like a candle light unruffled by wind and like the upright point of an accurate balance. This state in Saiva Siddhanta is called Iruvinai Oppu and Mala Paripagam. At this stage of the Soul, God considers it worthy of His blessings and appears before such a human as his Guru or spiritual Master in a human form full of love and compassion. Guru as the fountain of truth, love and compassion is like a merciful mother—Sathi nipatham. For still higher souls God as Guru may not appear in a human form but will dwell in their heart and guide them aright by intution.

